கடவுள் துணை.

# தனிப்பாடற்றிரட்டு

## முதற்பாகம்.

இதில்,

பலவித்வான்களாற்பாடப்பட்ட

மூலமும்,

மகாவித்வான்.

கா-இராமசாமிநாயுடவர்களால்

செய்யப்பட்ட உரையும்,

அடங்கியிருக்கின்றன.




இதன்விலை ரூபா 1½.

PRINTED AT THE

SREE PADMANABA VILASAM PRESS,

MADRAS.

1902.





# அ நு க் ர ம ணி க ை.

இம்முதற்பாகத்தி லடங்கிய பாடல்களைப் பாடிய புலவர்களின் பெயரும் பாடல்களின் தொகையும் வருமாறு :—



அ- அ௪௩.

கடவுள் துணை.

# தனிப்பாடற்றிரட்டு

## மூலமும் உரையும்.



ஸ்ரீ அகிலாண்டநாயகியார் வரப்பிரசாதியாகிய

## காளமேகப்புலவர்

## அவ்வவ்வமயங்களிற்பாடியவை.



### காப்பு.

ஏரானைக்காவிலுறையென்னானைக்கன்றளித்த
போரானைக்கன்றுதனைப் போற்றினல் - வாராத
புத்திவரும்பத்திவரும் புத்திரவுற்பத்திவரும்
சத்திவருஞ்சித்திவருந்தான்.

இ - ள். ஏர் - அழகுபொருந்திய, ஆனைக்காவில் உறை - திருவானைக்காவில் வசிக்கின்ற, ஆனைக்கு அன்று அளித்த - யானைக்கு அந்நாளில் முத்திகொடுத்தருளின, போர் - போர்த்தொழிலில்வல்ல, என் ஆனைக்கன்றுதனை - என்யானையாகிய சிவபெருமானது புதல்வனாகிய விநாயகக்கடவுளை, போற்றினல் - மூக்கரணங்களாலும் வழிபட்டால், வாராத - உண்டாதற்கரிய, புத்திவரும் - நல்லறிவுண்டாகும், பத்திவரும் - (அவ்வறிவின்பயனாகிய) ஈசுவரபத்தியுண்டாகும், புத்திர உற்பத்திவரும் - நன்மக்கட்பேறுண்டாகும், சத்திவரும் - (நினைத்த கருமங்களை முடிக்கவல்ல) பேராற்றலுண்டாகும், சித்திவரும் - (எல்லாக்காரிய) சித்தியுமுண்டாகும், எ - று.

தான் - அசை. யானைக்கு முத்திகொடுத்தது திருவானைக்காவில். இதனை அத்தலபுராணத்தில் விரிவாய்க்காணலாம். சிவபெருமானை யானையென்றதற்கும் விநாயகமூர்த்தி யானைமுகத்தோடு அவதரித்ததற்கும் உதாரணம் அடியில் வருவது. "அரம்பையர் வாழ்த்த வமளியிற் றுயில்கொண், டிரம்பயில் கதிரோனுதயஞ் செய்தபின், விண்ணோர்க்கெல்லாம் விடைகொடுத்தருளிப், பண்ணேர் மொழிமடப்பாவையை நோக்கி, ஓதநீர் வேலிகுழுஞ்சையம் பதிபுகப், போதுக

வென்று போகிய வந்நாள், இளமதியணிசடை யெந்தை தன்னருளால், வளமுடன் வழியின் மரச்சாரலிலோர், களிறும் பிடியுங் கலந்ததுகாணூ, ஒளிர்மதிச்சடையோ னுமைமுகநோக்கி, ஓர்வழியன்றி மற்றோர்திசை தன்னைப், பாராதேவா பனிமொழியாயென, வாரார்முலையாள் மற்றுமுண்டோவென, மெல்லியலுமையவள் விரும்பினள்பார்த்தே, அல்லிசேர்குழலா ளரன்முகம்பாரா, இவ்வகையாக வேண்டுமீங்கென, அவ்வகையரனு மதற்குடம்பட்டு, மதகரியுரித்தோன் மதகளிறாகவும், மதர்விழியுமைபிடி வடிவமாகவும், கூடிய கலவியிற் குவலயம் விளங்க, நீடியவானோர் நெடுவிலைபோற்றத், தங்குவெண்ணீறுந் தருமமுந்தழைப்பச், திங்கள்மும்மழையெங்கணும்பெருக, முண்டகமலர்போன் முழுதுஞ் சிவந்த, தண்டையுஞ் சதங்கையு மலம்புதாளினையும், குண்டவண்டியுந் தண்டரளமாலையும், மண்டொளிதழைத்த புண்டரநுதலும், முடிவுகண்டறியா முப்புரிநூலும், சுடர்விடுங்கனகத் தோளொருநான்கும், சோதிவண்டரளத் தொடைபுனைகழுத்தும், பூதலம் புரக்கும் பொற்கரிமுகமும், தவளக்கிம்புரி தருமருப்பிரண்டும், பவளத்தொளிவாய் பைந்துவரிதழும், இமையாமுக்கணு மிருதழைசெவியும், அமையாவிலவுமி ழவிர்சடைமுடியும், அந்திவண்ணமு மங்குசபாசமும், உந்திச்சுழிமே லுதரபந்தமுடன், ஐங்கரக்கரிமுகன் வந்தவதரித்தலும், பொங்கரவணிந்தோன் புதல்வனைநோக்கி, வானோர் மண்ணோர் வந்து வழிபட, ஆனோர் வல்வினை யாசறவகற்றித், தண்டுளவோனயன் சதமகன் முத்லோர்க், கின்றுமுதலிறையா யிருத்தியென்றருளிச், தெய்வநாயகியாந் திருந்திழையுமையுடன், மைவளர்சோலை மாநகரம்புகுந், தமையாக் கூட்டத் தநேகந் காலம், இமையாமுக்கண்ணிறையிருந்தருளினன்" இது அகத்தியமுனிவர் அருளிச்செய்தது. போர் ஆன் ஐ கன்று எனப்பிரித்து போரில்வல்ல இடபத்துக்குத்தலைவனாகிய சிவபெருமானுக்குப் புதல்வன் என்றுரைப்பினுமமையும். இவ்வாறன்றி, ஆனைக்கன்றளித்த ஆனைக்கன்றுதனை, என்பதற்கு ஆனைக்கன்றாகிய சிவபெருமான் ஈன்ற ஆனைக்கன்றாகிய விநாயகக்கடவுளை" என்றுரைப்பினுமாம். விநாயகக்கடவுளின் அவதாரத்தைப்பற்றி இன்னும் வேறுவகையாகிய கதைகளுமுண்டு.

---

# செய்யுளகராதி.



கடவுள்துணை.

# தனிப்பாடற்றிரட்டு

## மூலமும் - உரையும்.

---

### முதற்பாகம்.

## காளமேகப்புலவர் சரித்திரம்.

திருக்குடந்தையிற் பிறந்து வளர்ந்த வடமனாகிய பிராமணனொருவன் ஸ்ரீரங்கத்திற் பெருமாள்கோயிற் சுயம்பாகியாகிப் பரிசாரகம்செய்துகொண்டிருக்கையில், திருவானைக்காவிலுள்ள சம்புகேசுரர் கோயில்தாசி மோகனாங்கியென்னும் பெயருடையவள் அதிக அழகும் ஆடல்பாடல்களில் திறமையுமுடையவளாயிருந்ததனால், இவன் அவளுடைய போகவலையிற்சிக்கித் தனக்கவள் இணங்கும்பொருட்டுப் பெருமாள் பிரசாதமுதலியவைகளும் அவளுக்குக்கொண்டுபோய்க் கொடுத்து அவளோடு சம்பந்தப்பட்டிருந்தான். அப்படியிருக்குமளவில், மார்கழிமாசத்திற் சம்புகேசுரர் சந்நிதியில், மேற்படிதாசிக்குத் திருவெம்பாவைபாடும்முறைவந்தபொழுது, "உங்கையிற் பிள்ளை" என்னும் பாட்டைப் பாடுகையில், அதில் "எங்கொங்கை நின்னன்பரல்லார்தோள் சேரற்க" என்ற தொடரை அவள் வாயினாற்சொல்லித் தலைகுனிந்துகொண்டதைப்பார்த்து அவளுடனே கூடவிருந்த மற்றத்தாசிகளெல்லாம் புன்சிரிப்புச்சிரித்துத் தங்களுக்குள்ளே இவள் சிவன்கோயில் தாசியாயிருந்தும் பெருமாள்கோயில் சுயம்பாகியுடனே சம்பந்தப்படுகிறாளே, இதென்ன! "படிக்கிறது திருவாசகம் இடிக்கிறது சிவன் கோயில்" என்பதாக வாயினாற்பேசுகிறதொன்று நடக்கிறதொன்றாயிருக்கிறதேயென்று அவளைப் பரிகாசம்பண்ணினார்கள். அது அவளுக்கு மார்பில்தைத்து முதுகில் உருவினதுபோல வருத்தத்தை விளைத்ததனால், அன்றிரவு அவ்வைஷ்ணவன் வரும் தருணத்தில் தெருக்கதவைச் சார்த்தி உள்ளே வரவேண்டாமென்று தடுக்க, அவன் வாசலுக்கு வெளியே நின்றபடி என்ன நிமித்தத்தால் இன்றைக்கு என்னைத் தடைசெய்கிறாயென, மோகனாங்கி நீ விஷ்ணு அடியான் நான் சிவனை

டியாளாகையால் உன் சம்பந்தம் எனக்குத்தகாதென, அவன் "அந்தா
மரையன்னமே நின்னையானகன்றுற்றுவனோ" என்றபடி உன்னைநான்
ஒருபொழுதாயினும் விட்டுப்பிரிந்துசகிப்பேனோ! சகிக்கமாட்டேனாத
லால் உன் தலைவாசலிலேயே நான்றுகொண்டு என் பிராணனை விட்டு
விடுகிறேனென்றான். இவள் இதேதுபழிவந்துசம்பவிக்கிறதாயிருக்கிற
தேயென்று நினைத்து, நல்லது, நான் வேண்டுமென்று உனக்கு ஆவசி
கமாயிருந்தால் நீ தீட்சைபண்ணிக்கொண்டு சைவனானால் உன்னிஷ்
டப்படி நடக்கிறேனென்றுசொல்ல, அவன் காமப்பேய்கொண்டவனா
கையால் "பெண்கள்பால்வைத்தநேயம் பிழைப்பரோ சிறியோர்பெற்
றால்" என்றவிதமாய் அவளுறவைக் கைவிடமாட்டாமல், நீசொன்ன
வண்ணம் சைவசமயத்தை அனுசரிக்கிறேனென்று ஸ்ரீரங்கத்தைவி
ட்டுச் சம்புகேசுரத்திற்குவந்து, சிவதீட்சைபண்ணிக்கொண்டு, அகிலா
ண்டவல்லி கோயிற்பரிசாரகனாகி, தனக்கு அவ்விடத்தில் வரும்படிக
ளில் அவளுக்குக் கொடுத்து மீந்ததைத் தன் சீவனத்திற்கு வைத்து
அனுபவித்துக்கொண்டுவந்தான்.

அந்நாளிற் சம்புகேசுரத்தில் ஒரு சிவப்பிராமணன், தனக்கு வித்
தையிற் பூரணபாண்டித்தியம் உண்டாகவேண்டுமென்று நியமத்துட
னே திரிபுரைசக்கரம் ஸ்தாபித்து, அதில் அத்தேவதைக்குரிய மந்திர
பீஜாட்சரத்தைப் பிரணவ நமக சகிதமாய் வரைந்து உருச்செபித்து
நெடுநாளாக உபாசித்துக்கொண்டிருந்தான். ஓரிராத்திரி நடுச்சாமத்
தில், அகிலாண்டநாயகி அழகான ஒரு சிறுபெண்போல் வடிவெடுத்து,
வெள்ளை வஸ்திரம் உடுத்து, வாய்நிறையத் தாம்பூலம் தரித்துக்கொ
ண்டு, உபாசகன் கண்ணுக்கெதிரே சென்று, உன்வாயைத்திறவென்று
அந்தத் தாம்பூலத்தை அவன்வாயிலே உமிழப்போமளவில், அவன்
நிர்ப்பாக்கியனாகையால் அவளை மகாதேவியென்றறியாமல், ஆரடி எச்
சிற்றம்பலத்தை என்வாயிலே துப்பவருகிறாய், உனக்குப் பைத்தியம்
பிடித்ததோ, அப்புறம் எட்டநில்லடியென்று கடிந்துரைத்தான். அம்
மட்டில் அவளைவிட்டுத் திரும்பிவருகையில், மோகனாங்கி அன்றிராத்
திரி கோயிற் குடவரிசைக்கு வந்திருந்ததறிந்து, பரிசாரகன் அவளு
டனே நீ வீட்டுக்குப் போம்பொழுது என்னைவந்து அழை, நாமிருவ
ரும் கூடிப் போவோமென்று அங்கொரு மண்டபத்திற் படுத்திருக்க,
மோகனாங்கி குடவரிசையானபின்பு பரிசாரகனைத் தேடிக் காணாமல்
தான்மாத்திரம் வீட்டுக்குப்போய்விட்டாள். ஸ்தானிகர் முதலானவர்
களும் கோயிற் குச்சுப்போட்டுக்கொண்டு தங்கள் தங்கள் இருப்பிட

த்திற்குப் போனார்கள். பரிசாரகன் விழித்துக்கொண்டு மோகனாங்கியைக் காணாமையாலும், கோயிற்கதவு பூட்டப்பட்டிருந்ததனால் தான் வெளிப்படக் கூடாமையாலும், இருந்தஸ்தானத்தில்தானே நித்திரை பிடியாமல் எண்ணமிட்டுக்கொண்டிருந்தான். அவனை மேற்சொல்லிய தேவி பார்த்து வாயைத் திறக்கச்சொல்லித் தன்வாயிலிருந்த பாக்குத் தம்பலத்தை உமிழ்ந்து இதைத் தின்றுவிடென்ன, அவன் மோகனாங்கியென்று நினைத்து, அவளிஷ்டப்படி நடவாமற்போனால் அவளுக்குக் கோபமுண்டாம். பிறகு தன்முகத்தைப் பார்க்கமாட்டாளென்பதனாலும், தான் பூர்வஜன்மத்திற்செய்த புண்ணியத்தாலும் தடுக்காமல் உட்கொண்டான். அப்பொழுது அவனுக்கு அன்றுமுதற் காளமேகமானது அமோகமாய் மழைபொழிவதுபோலத் தமிழில் ஆசுமுதலாகச் சொல்லப்பட்ட நால்வகைக்கவிகளும் அசுவதாட்டியாய்ப் பாடும்சக்தி உண்டாகவும், அந்நாற்கவிகளிலும், ஆராயினும் ஒருவர் எந்தச்சொல்லாவது, பொருளாவது, அடியாவது, தொடையாவது எடுத்துக்கொடுத்து, இன்ன அலங்காரத்தில் இப்படி தொடங்கி இப்படிமுடிக்கவேண்டுமென்று மாத்திரத்தில், மயங்கி இடர்ப்படாமல் அப்படியே விரைந்துபாடுகின்ற ஆசுகவித்திறம் விசேஷமாகச் சித்திக்கவும், அக்காரணத்தால் காளமேகக்கவியென்னும் பெயர் லோகப்பிரசித்தமாகவாய்க்கவும் அனுக்கிரகித்து மறைந்துபோனாள்.

அவள் போன அடிப்பிலேதானே அவனுக்குக் கடல் மடைதிறந்தாற்போலக் கவிபாடத்தக்க பிரபலமான வாக்குண்டாயிற்று. அதனால் அவன் இப்பொழுது நமக்குப் பிரசன்னமானவள் அகிலாண்டவல்லிதானென்று உணர்ந்து, அந்த மகாதேவியை ஸ்தௌத்தியம்பண்ணி, முதன் முதல் திருவானைக்கா உலாவென ஒரு பிரபந்தம்பாடின பின்பு, அச்சோழநாடு, பாண்டிநாடு, சேரநாடு முதலான பலநாடுகளுக்குப்போய், அங்கங்குள்ள பிரதானமாகிய தெய்வஸ்தலங்களைத் தரிசித்து, அந்தந்த மூர்த்திகள்மேல் ஸ்துதியாகவும், நிந்தாஸ்துதியாகவும், மற்றும் அனேகவிதமாகவும் பற்பல பாடல்கள்பாடி வரும்பொழுது, சுதை, கல், மரம், உலோகமுதலானவைகள் சிற்பனால் உருப்படுத்தப்பட்டபின் அவ்வவற்றிற்குரிய இயற்பெயர் மாறி வெவ்வேறு சிறப்புப்பெயர் உண்டானாற்போல, அகிலாண்டேச்சுரி வரப்பிரசாதத்தால் முன்புள்ள பரிசாரகனென்னும் பெயர்மாறி, யாவரும் காளமேகப்புலவர் காளமேகப்புலவரென்று சொல்லும்படி மேன்மையாகிய பெயர் எத்திசையிலும் வழங்கத்தலைப்பட்டது.

இந்தப்படி காளமேகப்புலவர் நவநவமாகக் கருத்தமைத்துக் கவி பாடி ஸ்தலதரிசனஞ் செய்துவருகையில், திருமலைராயன் பட்டணத்தில் கல்வியில் மிகச் சிறந்தவர்களென்று அவ்வரசன் வியந்துகொடுத்த தண்டிகைபரிசுபெற்ற புலவர்கள் அறுபத்துநால்வரும், அவர்களுக்குத் தலைவனாகிய அதிமதுரகவியென்பவனும் தமிழில் தங்களுக்குச் சமானம் ஒருவருமில்லையென்று அகங்கரித்து, உலகத்திலுள்ள மற்றப் புலவர்களையெல்லாம் மதியாமற் பலவாறாக நிந்தித்து அவமானப்படுத்தி வருகிறார்களென்றும், அதற்குத் திருமலைராயனும் உடன்பட்டிருக்கிறானென்றும் செய்திகேட்டு, வித்வான்களாயிருப்பவர்கள் ஆராயினுமென்ன, அப்படிப்பட்டவர்களை அவமதிக்கலாமா? அவர்களை இகழ்ந்தது நம்மை இகழ்ந்ததல்லவா, பூர்வம் ஒட்டக்கூத்தனென்பவன், கற்றதுகையளவு கல்லாதுலகளவென்றெண்ணாமல், தானேவித்தையில் அதிகவல்லவனென்று மமதைகொண்டு நெஞ்சிரக்கமின்றிப் புலவர்களைச் சிரச்சேதம்பண்ணிவந்தான். அதுகண்டு அக்காலத்திற் புகழேந்திப்புலவரானவர் அவனுக்குத்தக்கபடி கர்வபிராயச்சித்தஞ் செய்வித்து அனேகரைக் கொலைக்குத் தப்புவித்து ரட்சித்துப் புண்ணியந்தேடிக் கொண்டார், அந்தப்படி இந்தக்காலத்தில் திருமலைராயன் சமஸ்தானத்திலிருக்கும் வித்வான்கள் நான் நானென்று இறுமாப்புற்று "நக்குகிறநாய் செக்கென்றும் சிவலிங்கமென்றும் அறியாததுபோல" நல்லோர் பொல்லாரென்று அறியாமலும் "அடுக்குகிற அருமை உடைக்கிற நாய்க்குத் தெரியாததுபோல" பாடிய அருமை தெரியாமலும் பிரசண்ட கவிகளையெல்லாம் பழித்துக்கொண்டிருக்கிறார்களே, இவர்களுடைய அகந்தையை நாம் போய் அவசியம் அழிக்கவேண்டுமென்று பிரதிக்கினையுடனே ஒருநாள் அவ்விடத்திற்குப்போக யத்தனப்படுகிறசமயத்தில், அவமாபோகனுங்கியென்னும் தாசி கண்டு, திருமலைராயன் பட்டணத்துத் துறைமுகத்தில் விசேஷமாய் முத்துக்குளிக்கிறதாகவும், அம்முத்து மற்றத்துறைகளிற் குளிக்கப்படுகிற முத்துகளிலும் மிகச்சிறந்ததாகவும், திருமலைராயனே அந்தவியாபாரஞ்செய்வதாகவும் சொல்லுகிறார்கள், ஆகையால் அங்கேபோய்த் திரும்பிவரும்பொழுது மறவாமல் எனக்கு மார்பிலணியுங் கச்சுக்கு முத்து வாங்கிவரவேண்டுமென்றாள். அதுகேட்டு, நல்லது, அப்படியே ஆகட்டுமென்று சொல்லி அவளிடத்திற் செலவுபெற்றுக்கொண்டு புறப்பட்டு அப்பட்டணத்துக் கடைவீதியில் வந்தார்.

இவருக்கெதிரே மேற்சொல்லிய அதிமதுரகவியென்பவன் தனக்குப் பின்னும் முன்னும் இருபக்கங்களிலும் அறுபத்துநாலு தண்டிகைப்புலவர்களும் வரிசை வரிசையாக நெருங்கிச் சூழ்ந்துவர, அவர்கள் நடுவில் நீலமலையொன்று உரல்போலப் பருத்தகால்களும், பனை

போல நீண்ட துதிக்கையும், ஆலவட்டம்போலப் பரந்த செவிகளும், பிறைபோல வளைந்த கொம்புகளும், மலைச்சிகரம்போல உன்னதமாகிய மஸ்தகமும், சாமரம்போல அசைகின்ற வாலும் முளைத்து எழுந்து நடப்பதுபோல நடக்கின்ற மதயானைமேல் நவரத்னமயமாகிய தவிசிட்டு ஏறி, துஜம் சத்திரம் சாமரமுதலிய விருதுகள் பிடிக்க, கட்டியம் கூற அதிக ஆடம்பரத்துடனே ராஜசமுகத்தை நாடிவருவது கண்டு, தாம் அப்பால் விலகிப்போகாமல் அப்புலவர்கள் ஏறிவரும் தண்டிகைக்கணைகளின் மத்தியில் வந்து நிற்க, அதுகண்டு கட்டியக்காரன் தண்டிகைக்கணைக்குட்பட்டவர்கள் எப்படிப்பட்டவர்களாயினும், அவர்கள் தங்கள் வாயினால் அதிமதுரகவியென்பவனுக்குரிய விருதைச்சொல்வது நெடுநாளையவழக்கமாயிருப்பதால் அவ்வழக்கப்படி, இவர் மார்பிலே தன்கையிலிருந்த பான்தோற்பட்டையால் தட்டி அதிமதுரகவிராய சிங்கம் பராக்கென்று சொல்லென்றான். இவர் இழவுக்கு வந்தவர்களையெல்லாம் தாலியறுக்கச்சொன்னால் அறுப்பார்களா. அதுபோலத் தெருவிலே போகிறவர்கள் வருகிறவர்களையெல்லாம் இவன் பெருமையைச் சொல்லச்சொன்னாற் சொல்வார்களா, ஆயினும் இவன் பெற்ற பெருமைதானென்ன? துடைப்பக்கட்டுக்குப் பட்டுக்குச்சுக் கட்டியதுபோல அதிமதுரகவிராயசிங்கமென்று பெயர் வைத்துக்கொண்டு விருதாகூறிவருகிறானே, இவன் பாடும் பாட்டென்ன அத்தனை மதுரமானதா? தன்னைச் சிங்கமென்று சொல்வதைப்பற்றிக் கொஞ்சமாவது இவனுக்கு மனங்கூசவில்லையே. இவன் எத்தனை வித்வான்களைச் செயித்தான். இதெல்லாம் வீண்புகழ்ச்சிதானே. இப்படிப்பட்டவன் வெட்கித் தலையிறக்கங்கொள்ளும்படி இவனைப் பரிகசிப்பதே யுக்தமென்று நினைத்துக் கட்டியங்கூறுவோனை நோக்கி, அதிமதுரம் அதிமதுரமென்று உலகமெல்லாம் அறியும்படிப் பறைசாற்றினதுபோலப் பலமுறையும் எடுத்துச்சொல்லி இவனை மதுரம்தோன்ற ஸ்துதிசெய்கின்றையே, இவனிடத்திலுள்ள புதுமை என்ன. இப்படிச் சொல்வதைப்பார்க்கிலும், காட்டிலுண்டாகிய சரக்கு, காரமில்லாத சரக்கு, தனியே பிரயோகிக்காமல் வேறுசரக்குகளுடனே கூட்டிப் பிரயோகிக்கப்படும் சரக்காகிய மலைக்குன்றிமணிவேரை உலகத்தார் தொன்றுதொட்டு அதிமதுரமென்றுவழங்குவது சகசமாதலால், நீ அதைக்குறித்துச் சொல்லென்னும் கருத்தை அமைத்து "அதிமதுரமென்றே யகிலமறியத் - துதி மதுரமாயெடுத்துச் சொல்லும்— புதுமையென்ன - காட்டுச்சரக்குலகிற்கார மில்லாச் • சரக்குக்-கூட்டுச்சரக்கதனைக் கூறு" என்றொருபாடலைச்சொல்லி ஏளனம்பண்ணினார்.

அது அதிமதுரகவியென்பவனைத் தூக்கிப்போட்டாற்போலிருந்ததனால், அவன் ஆச்சரியப்பட்டு, சிறிதாவது பயமில்லாமல் இவ்வளவு தைரியத்துடனே பகிரங்கமாக நம்மைப் பரிகசிக்கின்றானே - இவனாரென்று அறியும்படி, தான் ராஜாமுகத்திற்குப்போய்ச் சேர்ந்த மாத்திரத்திற் சேர்வைகாரனொருவனை அனுப்பி, இன்னவிடத்தில் ஒரு பிராமணனிருக்கிறான், அவனுடையபெயரென்ன, அவன் எங்கிருப்பவனென்று விசாரித்துவாவெனச் சொன்னான், சேர்வைகாரன் நேரிலே வந்து விசாரித்தபொழுது, காளமேகப்புலவர் என் பேர் ஊர் முதலானவைகளை வாய்ச்சொல்லாகச் சொன்னால் நான் சொன்னபடி நீபோய்ச் சொல்வது பிரயாசம். விவரமாய் ஏட்டில் என் கைப்பட எழுதிக்கொடுக்கிறேனென்பதாகச் சொல்லி "தூதைந்து நாழிகையி லாறுநாழிகைதனிற் சொற்சந்தமாலை சொல்லத் - தூகளிலாவந்தாதி யேழுநாழிகைதனிற் றொகைபட விரித்துரைக்கப் - பாதஞ்செய் மடல்கோவை பத்துநாழிகைதனிற் பரணியொருநாண்முழுதுமே - பாரகாவியமெலா மோரிருதினத்திலே பகரக்கொடிகட்டினேன் - சீதஞ்செயுந்திங்கண் மரபினானீடுபுகழ் செய்யதிருமலைராயன்முன் - சீறுமாறுகவே தாறுமாறுகள் சொல் திருட்டுக்கவிப்புலவரைக் - காதங்கறுத்துச் செருப்பிட்டடித்துக் கதுப்பிற்புடைத்துவெற்றிக் - கல்லணையினொடு கொடியகடிவாளமிட்டேறு கவிகாளமேகநானே" எனத் தாம் ஆசுகவி பாடுந் திறத்தைச் சிறப்பித்தும், தமது பெயரை வெளிப்படையாகச்செய்தும், திருமலைராயன் சமஸ்தானத்து வித்துவான்கள் செய்யும் அக்கிரமத்தைக் குறிப்பித்தும் அவர்களை இகழ்ந்தும் ஒரு சீட்டுக்கவி யெழுதி அதைச் சுருட்டிச் சொருகிக்கப்போட்டு, இதைக் கொண்டுபோய்க் கொடுவென்று கொடுத்தனுப்பினார்.

அதிமதுரகவிராயன் முதலானவர்கள் அதை வாங்கிவாசித்து, இதை எழுதினவன் காளமேகமென்பவனா, பாம்புக்குப் பல்லிலும், தேளுக்கு வாலிலும் ஏகதேசமாக விஷமிருக்குமென்பார்கள். இவனுக்கு உடல் முழுதும் விஷமயமாயிருக்கிறது ஆதலால் இவன் பொல்லாததுஷ்டனென்றும், அகங்காரமே கால் கை முதலிய உறுப்புகளாய் உருவெடுத்துவந்தவனென்றும், கண்டவர்கள்மேலெல்லாம் வம்பும் தும்புமாக வசைபாடுகிறவனென்றும் இவனுடைய சமாசாரம் முன்னமே நமக்குக் கேள்விதானே. அப்படியிருக்க இப்பொழுது நம்மையும் அவர்களைப்போல இலேசாக நினைத்துக்கொண்டு கொஞ்சமாவது மதிப்பில்லாமல் வாய்க்குவந்தபடி யெல்லாம் தூஷித்துச் சீட்டுக்கவி எழுதினான் பார்த்தையா! இப்படிப்பட்டவனைச் சும்மா விடப்

போமா. கொட்டினால் தேள் கொட்டாவிட்டாற் பிள்ளைப்பூச்சியல்லவா. ஆதலால் இவனைச் சிலிர்க்கச்சிலிர்க்க வலித்து மானபங்கப்படுத்தித் தக்க சிட்சைசெய்வித்தாலொழிய இவன் அடங்கமாட்டானென்று தங்கள் அரசனுடனும் ஆலோசித்து, நாலுபெயர் சேவகர்களை விடுத்து அந்தக் காளமேகமென்பவன் எங்கேயாவது ஓடியொளித்துப்போகப்போகிறான். இந்த நொடிக்குள்ளே கைப்பிடியாகப் பிடித்துவந்து ஒப்பிக்கவேண்டுமென்ன, அந்நால்வரும் போய்ப் பெரும்புலிகள்போல் அவரைச் சுற்றிக்கொண்டு நீ சும்மா வருகிறையா, உன்னைப் பிடித்துக் கட்டிக்கொண்டுபோக வேண்டுமாவென்றார்கள். புலவர், நீங்களார், என்னை எங்கே அழைக்கிறீர்களென்ன, அவர்கள் நாங்கள் திருமலைராயன் சேவகர்கள். அவரிடத்திற்குத்தான் உன்னை அழைக்கிறோமென்ன, இவர் அங்கு எதுக்காக வரச்சொல்லுகிறீர்களென்ன, சேவகர், நீ எங்கள் ராஜசமஸ்தானத்து வித்வான்களைத் தூஷித்தையே - அதற்காகத்தானென்ன, இவர் பின்னையொன்றும் செய்யவில்லையே - இதற்குத்தானா பிடிக்கிறதும் கட்டுகிறதும், என்னைத்தொடவேண்டாம் தூர நில்லுங்கள், நானே வருகிறேனென்று, கடையில் எலுமிச்சம்பழமொன்று வாங்கிக் கையில் வைத்துக்கொண்டு ராஜசமுகத்தைநோக்கி வருகிறார்.

இதற்குள் அவ்விடத்தில் அதிமதுரகவியென்பவன் அறுபத்துநாலு தண்டிகைக்காரரையும் பார்த்துக் காளமேகமென்பவன் இவ்விடத்திற்கு வந்தால் அவன் அரசனருகிற் கிட்டிச் செல்லாதபடி நீங்களெல்லாரும் நெருங்கி உட்கார்ந்து அங்காசனத்தைவிட்டெழுந்திராமலிருங்களென்று திட்டம்செய்து, பின்பு ராஜாவை நோக்கி, அந்த வம்பனைத் தாங்கள் வாவென்றழையாமலும், அவனுக்கு ஆசனம் கொடாமலும், சம்மானம் செய்யாமலுமிருக்கவேண்டுமென்று சொல்லி எச்சரிக்கையாயிருந்தான். அப்படியிருக்கையிற் புலவர்பெருமான் வந்துபார்த்து, நாம் உட்பிரவேசிக்கக் கூடாமல் இங்கே ஏதோமித்துருபேதம் நடந்திருக்கிறதென்று கிரகித்துக்கொண்டு, தாம் உட்செல்லாமல் ஆஸ்தானவாசலண்டையிலிருந்தபடியே இதற்கேற்ற உபாயமொன்று செய்யவேண்டுமென்று, ஒரு சுலோகம் சொல்லி, அரசனை ஆசீர்வதித்து, அந்த எலுமிச்சம்பழத்தை அவனுக்கெதிரே நீட்டினார். பிராமணர்கள் ஆசீர்வசனம்பண்ணி அட்சதையாவது புஷ்பமாவது மற்றேதாவது கொடுக்கவந்தால் வாங்காமலிருப்பது விதியல்லவே. அதுபற்றி அவன் தன் கையை நீட்டினான். நீட்டிய கையில் இந்த

எலுமிச்சம்பழம்போய்ச் சேரவேண்டுமே அதனால் யாவரும் விலகி வழிவிட்டார்கள், காளமேகப்புலவர் தாராளமாக அச்சபைநடுவே சென்று அதை வேந்தன் கையிற்கொடுக்க, அவன் வேண்டாமென்று சொல்லாமல் வாங்கிக்கொண்டதன்றி, அவருக்கு ஆசனம் கொடுக்கவும், உட்காருமென்று சொல்லவுமில்லை. அது தெரிந்து ஜம்புகேசுரத்தின் திசையை நோக்கி மானசிகமாக ஸ்ரீ அகிலாண்டவல்லி விமானத்தைத் தரிசித்து, சாரதையைத் தியானித்து "வெள்ளைக்கலையுடுத்து வெள்ளைப்பணிபூண்டு-வெள்ளைக்கமலத்து வீற்றிருப்பாள்—வெள்ளை-அரியாசனத்தி லரசரோடென்னைச் - சரியாசனத்து வைத்ததாய்" என்பதை உள்ளிட்ட முப்பது வெண்பாவிற் சரஸ்வதிமாலையென ஒரு பிரபந்தம் பாடினார், பாடினமாத்திரத்தில் வாணிகடாட்சத்தால் திருமலைராயனிருந்த ஆசனம் ஒரு புறத்தில் வளர்ந்து இடங்கொடுக்க, அதில் அவர் அவனுடன் சமாஸ்கந்தமாக வீற்றிருந்தார்.

இவ்விதமாக ராஜசிங்காசனம் வளர்ந்து இடங்கொடுக்க, இவர் அதன்மேலேறி உட்கார்ந்ததருணத்தில், அவர்களெல்லாம் இதென்ன மந்திரமோ, மாயமோ, அல்லது கண்கட்டுவித்தையோவென்று பிரமிப்புடனே பார்க்கையில், புலவர்பெருமான் அந்தப்புலவர்களைநோக்கி, என்னைவைத்தகண் வாங்காமல் ஊடுருவப்பார்க்கிறீர்களே, நீங்களார், தெரியச்சொல்லவேண்டுமென்று கேட்க, அவர்கள் நாங்கள் இந்தச்சமஸ்தானத்திலிருக்கும் கவிராஜர்களென்று உத்தரஞ்சொல்ல, இவர் கவிராஜரென்பதற்குக் குரக்கரசரென இடக்கராகப் பொருள்கொண்டு, குலுக்கென்று நகைத்து, அவர்களை உல்லங்கனம் பண்ணும்படி, ஓ! ஓ! புவியரசர்களாற் புகழப்படும் புலவர்களே! நீங்களாரென்று உங்களைக்கேட்டால் கவிராஜர்களென்கிறீர்களே - கவிராஜர்களாயிருந்தால், உங்கள் ஜாதிசுபாவப்படி வாலிருக்கவேண்டுமே, அதெங்கே! வாலில்லாமையால் நீங்கள் வாலில்லாத குரங்குகளென்றல்லவோ சொல்லப்படுவீர்கள், அப்படித்தானென்று ஒப்புக்கொண்டாலும், நீண்டு வளர்ந்து வலிபெற்ற நகமிருக்கவேண்டுமே, அதெங்கே? அல்லாமலும் நாலுகாலிருக்கவேண்டுமே, அவை எங்கே? காலாகக் கையைப் பாவித்துக் கொள்ளலாமென்றாலும், பீளைசார்ந்தகண்ணிருக்கவேண்டுமே, அதெங்கே? சொல்லுங்களென்னும் கருத்தினை உள்ளமைத்து "வாலெங்கே நீண்டெழுந்த வல்லுகிரெங்கே நாலு - காலெங்கே யூன்வடிந்த கண்ணெங்கே - சாலப் - புவிராயர்போற்றும் புலவீர்காணீங்கள் - கவிராயரென்றிருந்தக்கால்" என்றொரு வெண்பாப் பாடினார். இதில்

குரங்குகளென்று இழித்துரைத்தாலும், அவர்களைப்போலத் தாமும் புலவராகையால் அந்தச் சுஜாதி யபிமானம் போகாமற் புவிராயர்போற்றும் புலவீர்காளென்று சிறப்பித்தார்.

அதையவர்கள் அவ்விதமாக நினையாமல், இவன் எட்டிக் குடுமியைப்பிடித்து இறங்கிக் காலைப்பிடிக்கிறவன்போல, இந்தப் பாட்டிலே நம்மையெல்லாம் குரங்குகளென்று பிரத்தியட்சத்திலேயே நிந்தித்து, அதனோடுகூடக் கொஞ்சம் முகஸ்துதியாகப் புவிராயர்போற்றும் புலவீர்காளென்றான். முன்பு சிட்டுக்கவியிலும் தூஷித்திருக்கிறான். இவனுடைய நெஞ்சுத்துணிவுதான் என்னவென்று சிந்தித்துப் பிறகு அவரை நோக்கி, இந்தச் சமஸ்தானத்தில் வெகுகாலமாகப் பெயர்பெற்றிருக்கின்ற எங்களை இன்று வந்து முனைத்த நீ ஆரென்று கேட்கிறையே, நீயார் சொல்லென்று கேட்டார்கள். இவர் நாம் காளமேகமெனை அறியீர்களாவென்ன, அவர்கள் நீ காளமேகமா; நல்லது, காளமேகமென்பது கறுத்தமேகமாதலாற் பொழியவேண்டுமேயென்ன, இவர் பொழியத்தான்வந்ததென்ன, அவர்கள் எப்படிப் பொழியவந்ததென்ன, புலவர் சிரோமணி, கழியினிடத்திற்செல்லும் கடல்நீரானது உப்புமயமாயிருப்பதென்று அதை ஒழித்து, சாஸ்திரமாகிய கடலில் அந்த சாரமாகிய நீரை முகந்து, அருவியாறு வழிந்தோடுகின்ற தமிழ் பிறந்தபொதியமலையிற் காலூன்றி, கருமையாகிய கவிகளைப் பாடுகின்ற புலவர்கள் மனதின்கண்ணே பயஞ்செனிக்க இடித்து, அவர்கள் காதுகள் செவிடுபடக் குமுறி, கண்கூச மின்னி, கவியாகிய மழைபொழியும்படி காளமேகமானது புறப்பட்டதென்னும் கருத்தை அமைத்து "கழிபுந்திய கடலுப்பென்று நன்னூற் கடலின்மொண்டு - வழியும்பொதிய வரையினிற்கால்வைத்து வன்கவிதை - மொழியும்புலவர் மனத்தேபிடித்து முழங்கி மின்னிப் - பொழியும்படிக்குக் கவிகாளமேகம் புறப்பட்டதே" என்கிறபாடல் பாடக்கேட்டு, அதிமதுரகவியென்பவன் அதிக மாச்சரியங்கொண்டு, அவரை முன்னிட்டு, வெள்ளைக்கவி பாடித்திரிகின்ற காளமேகமே! மூச்சுவிடுவதற்கு முன்னே முந்நூறு, அல்லது நானூறு பாடல் பாடப்போகாதா? மூச்சுவிட்டாச்சுதென்றால் ஐந்நூறு பாடல்வரையிலும் ஆகாதா? இதற்கித்தனைபேச்சென்ன, சும்மா ஆடம்பரமாக உன்னுடைய கள்ளக்கவிக்கடையைப் பரப்பவேண்டாம். அந்தமட்டிலே அதைக் கட்டென்னும் கருத்து [illegible]ன்ற "மூச்சுவிடுமுன்னமே முந்நூறுநானூறும் - ஆச்சுதென்றாலை [illegible]மாகாதோ—பேச்சென்ன - வெள்ளைக்கவிகாளமேகமே யுன்

னுடைய-கள்ளக்கவிக்கடையைக் கட்டு." (ஆயிற்றென்பது - எதனை நோக்கி ஆச்சென மரூஉவாக அமைக்கப்பட்டது, வெள்ளைக்கவி-வெண்பா) என்றொரு பாடலைச்சொல்லி அவன் தன்பெருமையை வெளியிட்டுக் கவிசிரேஷ்டராகிய இவரை இழிவுசெய்தபொழுது, இவர் நீ மூச்சுவிடுகிறதற்கு முன்னே மூந்நூறு நானூறு பாடல்வரையிலும், ஆச்சென்றால் ஐந்நூறுபாடல் வரையிலும் பாடுகிறதாகச் சொன்னையே,இதோராச்சரியமா, நான் சொல்லுவதைக்கேள். வாயைத் திறவாததற்குமுன் எழுநூறு எண்ணூறு பாட்டளவிலும், ஒருமுறை வாயைத்திறந்து மூடினால் ஆயிரம்பாட்டளவிலும் ஆகாதா, பாடுகிறதற்கு ஒரு நிமித்தமுமில்லாதகாலத்திற் சும்மாவிருந்தாலிருப்பேன். ஆவசிகமுண்டாய்ப் பாட ஏற்பட்டேனானால்,யானைத்துதிக்கைபோலப் பெரிய தாரைகளாக வருஷிக்கும் மேகம் நானென்று நினை,பிள்ளாயென்னும் கருத்தையமைத்து, "இம்மென்னுமுன்னே யெழுநூறு மெண்ணூறும்-அம்மென்றாலாயிரம்பாட் டாகாதா—சும்மா-இருந்தாலிருப்பேனெழுந்தேனே யாயிற்-பெருந்தாரைமேகம் பிள்ளாய்." (இம்மெனல் - வாய் திறவாமையையும், அம்மெனல்-வாய்திறந்து மூடுகையையும் உணர்த்திய குறிப்புச்சொற்கள்) என்பதாக ஒரு கவிபாடித் தமது வல்லமையைக் குறிப்பித்தார்.

அதை அதிமதுரகவி கேட்டு, தூக்கிநிறுத்தடா பிணக்காடாய் வெட்டுகிறேனென்பவனைப்போல வொரு சாமர்த்தியமாகப் பேசுகிறானே, இவன் சொல்வது மெய்யாயிருக்குமா, அதேது. ஆராத்தாள் செத்தாலும் பொழுதுவிடிந்தால் தெரியுமென்பதுபோல, இன்னுஞ் சற்றுநேரத்திற்குள்ளே பொய் மெய்யெல்லாம் பட்டப்பகலாய்த் தெரிய வருகிறதென்று நினைத்துக் காளமேகப்புலவரை நோக்கி, கூரம்பாயினும் வீரம்பேசே லென்பதை அறியாமல், நீ இவ்வளவு வீரம்பேசுகிறையே-அரிகண்டம்பாடு, பார்ப்போமென்றான். இவர் அரிகண்டமாவது என்னவென, அவன்கழுத்திற் கத்திகட்டிக்கொண்டு எதிரி கொடுக்குஞ்சமிசைக்கு இணங்கப்பாடுவதுதான். அப்படிப்பாடுமிடத்தில் ஏதாவதுதவறினால் அந்தக் கத்தியினாலேயே வெட்டுண்ணவேண்டிவருமென்ன, அதற்கு இவர் கைகொட்டிச் சிரித்து, இதுதானா அரிகண்டமென்பது. இத்தனை சுலபமானதை ஒரு விஷயமாகத்தேடிச் சொல்லவந்தையே, இதிலென்ன அருமையிருக்கிறது. இது நிற்க. யமகண்டம் பாடுகிறதல்லவோ மகா பிரயாசம். அதைக்குறித்துப் பேசவ[illegible] கௌரவமென்றுசொல்ல, அவன் யமகண்டமென்றும் ஒன்[illegible]தா, அது எப்படிப்பட்டதென்ன, இவர் பூமியிற் பதினறடி [illegible]

ஞறடி அகலம், பதிஞறடி ஆழமாகச் சதுரத்திற்குச் சதுரம் ஒருபெரிய குழிவெட்டி, அதன்நான்குமூலையிலும் பதிஞறடிஇரும்புக் கம்பங்கள்நாட்டி,கம்பத்தின் மேல் நாலுபக்கத்திலும் இரும்பிஞல் நாலுசட்டமும், நடுவேயொரு சட்டமும்போட்டு, நடுச்சட்டத்தில் உறிகட்டி, குழிக்குள் பருத்த புளியங் கட்டைகளை நெருங்க அடுக்கி, கட்டைக்குள் நெருப்புமூட்டி, அது கனன்றெழுந்து ஜுவாலித்து எரிந்துகொண்டிருக்க, அந்நெருப்பில் ஒரு ஆளுயரமான இருப்புக் கொப்பரை வைத்து, கொப்பரைநிறைய எண்ணெய்விட்டு, அதில் அரக்கு மெழுகு குங்கிலியம் கந்தகம் சாம்பிராணிகளை நிரப்பி, அவை நன்ருய்க்காய்ந்து உருகிக் கொதித்துக்கொண்டிருக்க, நான்கு யானைகளைப் பாகர்கள் மதமேற்றிக் கொண்டுவந்து கம்பத்திற்கு ஒவ்வொன்ருக மலைகளைப்போல நிறுத்திவைத்திருக்க, பின்புறத்தில் வளையம்வைத்து வளையத்திற் சங்கிலிகோத்து நயத்த எழுவிஞற் கூர்மையாகச் சமைத்துப் பளபளவென்று மின்னும்படி சாணைபிடித்த எட்டுக்கத்திகளைக் கழுத்தில் நாலும், அரையில் நாலுமாகக் கட்டிக்கொண்டு, கத்திகளின்புறத்திலுள்ள சங்கிலிகளை மேற்படி யானைகளின் துதிக்கையிற் கொடுத்து வைத்து, தான் கொப்பரைக்கு நேராகத் தொங்குகின்ற உறிநடுவில் ஏறியிருந்து, எவரெவர் என்ன என்ன சமிசைகொடுத்தாலும் அவைகளை அரைநொடியிலேதானே தடையின்றிக்குறித்த கருத்தின்படி இசைத்துப் பாடவேண்டியது, அவ்வாறு பாடும்பொழுது எவ்வளவாவது வழுவுமாஞற் சமிசை கொடுத்தவர்கள் யானைமேலிருக்கும் பாகர்களுக்குக் கண்சைகைகாட்ட, அவர்கள் யானைகளை மஸ்தகத்தில் அங்குசத்தாற் குத்தி அதட்ட, அவைகள் தமது தும்பிக்கையிற் கொடுக்கப்பட்டிருக்கும் சங்கிலிகளை விசையாயிழுக்க, இழுத்தவுடனே புலவன் கழுத்தும் அரையும் கத்திகளாற் கண்டிக்கப்பட்டு, தலையொரு துண்டமும் அரைமுதற் காலளவும் ஒரு துண்டமுமாகி அவ்வெண்ணெய்க் கொப்பரையில் விழுந்து மாண்டுபோகிறது. இப்படிப்பட்டது தான் யமகண்டமென்ருர்.

காளமேகப்புலவர் இவ்வண்ணம் சொல்லக்கேட்ட மாத்திரத்தில் அதிமதுரகவி மனந்திடுக்குற்று, அடா அப்பா! யமகண்டமென்பது இப்படிப்பட்ட கோரமானதா, இது உள்ளபடி யமகண்டத்திற்கு ஒப்பாயிருப்பதனுலேதான் இதற்கு இப்பெயர் கொடுக்கப் பட்டதாகக் காண்கின்றது. இவ்வாறு செய்ய ஆராலேயாகும்? அசாத்தியம் அசாத்தியமென்று தனக்குள்ளே எண்ணி அதிசயித்து, பின்பு புலவர் பெருமானைப்பார்த்து, நீசொன்ன யமகண்டம் தகுதியானது தான்.

ஆயினும் சும்பாவாயினலே டம்பமாகச் சொல்வதனல் என்னபிரயோசனம். "மாடு திருப்பினவனல்லவோ அர்ச்சுனன்" அதுபோல, சொன்னபடி செய்வதல்லவோ கௌரவம். ஆகையால் நீசெய்யப்பார்ப்போமென்ருன். இவர் சபாசு ஆடவிட்டுநாடகம் பார்க்கிறதுபோல என்னைச் செய்யச்சொல்லிப் பார்க்கிறதென்ன, நீ முதல் முதல் இந்தவிஷயத்தை எடுத்துப் பேசினதனலும், வெகுநாளாக யாவருமறிய நடுத்தெருவிலே அதிமதுர கவிராயசிங்கம் பராக்கென்று விருது கூறிக்கொண்டு வருகிறபடியினலும் செய்யவேண்டிய கடமை உன்னுடையதே, அப்படியிருக்கக் குரங்கு குட்டிக் கையைத் தோய்க்கிறதுபோல என் மேலேசார்த்தி என்னைத்தூண்டிவிட்டு நீ தப்பித்துக்கொள்ளப் பார்ப்பதுசரியோ, இது விருதுகூறிவந்து செடியில் நுழைகிறதுபோலாகுமல்லவோ வென்றுர்.

அத் தருணத்தில் அதிமதுர கவியும் அறுபத்து நாலு தண்டிகைப் புலவரும் திருமலைராயன் முன்னிலையில் ஒருங்கு சேரக் கூடி, இவன் எதிரிகளை மதியாத தான்பார்க்கனு மிருக்கிறபடியினலே தந்திரமாக இவனையே அந்த யமகண்டத்தில் மாட்டி இவனுடைய கொழுப்பை அடக்கவேண்டுமென்று தங்களுக்குள் ஆலோசித்துக்கொண்டு, அப்படிச் செய்யவேண்டுமென்று ஆவசிகமில்லை. நீயே உன்னை அதிக சமர்த்தனென்று பெருமைப் படுத்தியும் எங்களை யிழித்தும் சீட்டுக் கவிபாடி யனுப்பினதனலும், நாங்கள் சுளுவாக அரிகண்டம் பாடச் சொன்னல், கிணற்றுக்குத் தப்பித் தீயிலே பாய்ந்ததுபோல, அதை விலக்கி உன்வாயினலேயே யமகண்டம் பாடுகிறதைக் குறித்துப் பேசினதனலும் நீதான் அந்தப்படிச் செய்யவேண்டுமென்ருர்கள்.

அவர்கள் அப்படிச் சொல்லக்கேட்ட புலவர் சிகாமணி யானவர், கல்வித்திறமும் கவி சாதுரியமு மில்லாத இவர்களை யமகண்டம் பாடச் சொல்லுகிறது, வீரமில்லாத பேடியைப் போருக் கழைக்கிறதுபோ லல்லாமல் வேறல்ல. அதனல் அதை நாமே செய்துகாட்டி இவர்கள் இறுமாப்பை அடக்கவேண்டுமென்று நிச்சயித்துக்கொண்டு, நீங்கள் வருத்தப்பட வேண்டாம், தலைகீழாகக் கரணம்போட்டாலும் இது உங்களால் ஆகத்தக்கதல்ல. நானே செய்கிறேன் பாருங்களென்று உடன்பட்டார், அவர் உடன்பட்ட மாத்திரத்தில் அவர்கள் இனித் தாமதிக்க லாகாதென்று யமகண்டத்தைக் குறித்து அவர் சொன்னபடி ஏவலாளர்களைக்கொண்டு ராஜாவின் சபாமண்டபத்திற்கு நேரிலே குழிவெட்டித் தழல்மூட்டி எண்ணெய்க் கொப்பரைவைத்துக் குழிக்

ஞநாற்றிசையிலும் இருப்புக் கம்பம் நாட்டிக் கம்பத்தின்மேற் சட்டம் போட்டு நடுச்சட்டத்திற் கொப்பரைக்கு மேலே உறிகட்டிப் பாகர் களால் யானைகளை மதமேற்றிக்கொண்டுவந்து கம்பத்திற் கொவ்வொன் றாக நிறுத்தும்படி செய்தார்கள். புலவர் பெருமான் கழுத்திற்கும் அரைக்கும் கத்தி கட்டிக்கொண்டு, கத்திகளின் பின்னுள்ள வளையங் களிற் கோத்திருக்கும் சங்கிலிகளை யானைகளின் கையிற் கொடுத்து விட்டுத், தாம் உறியின்மேலேறி முகமலர்ச்சியுடனே மண்டலித் திருந் து, திருமலைராயனுடைய அனுமதி பெற்றுக்கொண்டு, அதிமதுரகவி முதலானவர்களை நோக்கி, இனி நீங்கள் காலதாமசம் செய்யாமல் உங்க ளிஷ்டப்படிக் கெனக்குக் கொடுக்க வேண்டிய சமிசைகளைத் தடையின் றித் தாராளமாகக் கொடுக்கலாமென்ன, அவர்கள் இவருடைய தைரி யத்தையும் முகவிகாசத்தையும் உறியேறிப் பயமின்றிக் கம்பீரமாக வீற்றிருப்பதையுங்கண்டு, அம்மம்மா! இவனுடைய தைரியந்தான் எப் படிப்பட்டதென்று ஆச்சரியப்பட்டு, நாமிதை முற்ற முடியப் பார்க்க வேண்டுமென்று யாவரும் சமீபத்தில் வந்திருந்து, அவரவர் வெவ் வேறே ஆராய்ந்து தேடி யெடுத்துத் தங்க ளிஷ்டப்படிக் கெல்லாம் நாநாவிதமான சமிசைகள் கொடுக்க, அவைக ளெல்லாவற்றையும் அகிலாண்டநாயகி அனுக்கிரகத்தாற் பொருள் செய்யாமலும், எவ்வள வேனும் இடர்ப்படாமலும் அநாயாசமாக அவர்கள் கொண்ட கருத் துக் கிணங்கும்படி சித்திர விசித்திரமாய் நல்ல நயந்தோன்ற அத ற்குத் தக்க அலங்காரங்களுடன் அமைத்து விரைவாகப் பாடினார்.

---

அதிமதுரகவி, திருமாலவதாரம் பத்தினையும் ஒரு வெண்பாவிலடக்கிப் பாடவேண்டுமென, புலவர் பெருமான் இதற்கு ஒரு வெண்பாவும் வேண்டுமோ, நான் பாதிவெண்பாவிற் பாடுவேனென்று பாடியது.

1. மெச்சுபுகழ்வேங்கடவாவெண்பாவிற்பாதியிலென்
இச்சையிலுன்சென்மமெடுக்கவா-மச்சாகூர்
மாகோலாசிங்காவாமாராமாராமாரா
மாகோபாலாமாவாவாய்.

இ - ள். மெச்சு - (தேவர்முனிவர்முதலியயாவரும்) மெச்சுகின்ற, புகழ் - கீர்த்தியையுடைய, வேங்கடவா - திருவேங்கடமுடையானே, என் இச்சையில் - என் விருப்பப்படி, வெண்பாவின் பாதியில் - பாதிவெண்பாவில், உன் சென் மம் எடுக்க - உன் திருவவதாரம் பத்தையுமெடுத்துக் கூறுதற்கு, வா - க்ருபை செய்ய எழுந்தருள்வாய், மச்சா - மச்சாவதாரத்தைச் செய்தவனே, கூர்மா-கூர்

மாவதாரத்தைச்செய்தவனே, கோலா - வராஹாவதாரத்தைச்செய்தவனே, சிங்கா - நரசிங்கனே, வாமா - வாமநனே, ராமா - பரசுராமா, ராமா - தசரதராமா, ராமா - பலராமா, கோபாலா - க்ருஷ்ணு, மா ஆவாய் - இனிக்கற்கி அவதாரஞ்செய்யப் போகிறவனே, எ - று.

மச்சம் - மீன். கூர்மம் - ஆமை. கோலம் - பன்றி. வாமநம் - குறள். மா - குதிரை. இந்த அவதாரம் இனிச்செய்யப்போகிற தாதலால் ஆவாய் என எதிர் காலத்தாற் கூறினர்.

**அறுபத்துநான்கு தண்டிகைப்புலவர்களில் ஒருவர், இராசிகளின் பெயரும், முறையும், தொகையும் அடைமொழியில்லாமல் ஒரு வெண்பாவிலமைத்துப் பாடவேண்டுமென, முதலில் பகருங்கால் என்றும், இறுதியில் பன்னிரண்டும் வசையறுமிராசிவளம் என்றும், சேர்த்துப் பாடியது.**

2. பகருங்கான்மேடமிடபம்மிதுனங்கர்க்க
டகஞ்சிங்கங்கன்னிதுலாம்விர்ச் - சிகந்த
நுசுமகரங்கும்பமீனம்பன்னிரண்டும்
வசையறுமிராசிவளம்.

இ - ள். வெளிப்படை.

**ஒருவர், மும்மூர்த்திகளின் பெயர், அவர்கள் தின்னுங்கறி, உண்ணு முணவு, ஏந்தும் ஆயுதம், பூணும் பூஷணம், ஏறும்வாகநம், வசிக்குமிடம் இவைகளை ஒருவெண்பாவிலடக்கிப் பாடவேண்டுமெனப் பாடியது.**

3. சிறுவனளைபயறுசெந்நெற்கடுகு
மறிதிகிரிதண்டுமணிநூல் - பொறியரவம்
வெற்றேறுபுள்ளன்னம்வேதனரன்மாலுக்குக்
கற்றாழம்பூவேகறி.

இ - ள். வேதன் அரன்மாலுக்கு - பிரமன் சிவன் விஷ்ணு என்னும் மூவருக்கும், கறி - கறிகளாவன, பயறு சிறுவன் அளை - பயறு பிள்ளை வெண்ணெய் இம்மூன்றுமே, (உணவு) உணவுக ளாவன, செந்நெல் கடுகு - செந்நெல் விஷம் பூமி இம்மூன்றுமே, (ஆயுதம்) - ஆயுதங்களாவன, தண்டு மறி திகிரி - தண்டம் மான் சக்கரம் இம்மூன்றுமே, (பூஷணம்) - பூஷணங்களாவன, நூல் பொறி அரவம் மணி - உபவீதம் புள்ளிகளையுடைய பாம்பு கௌஸ்து பரத்நம் இம்மூன்றுமே, (வாகநம்) - வாகநங்களாவன, அன்னம் வெற்றேறு புள் - அன்னம் வெள்ளிய இடபம் கருடன் இம்மூன்றுமே, (இடம்) இடங்களாவன, பூ கல் தாழ் அம் - தாமரைமலர் கைலைமலை ஆழ்ந்த பாற் கடல் இம்மூன்றுமே, எ - று.

ஒருவர் ஈயோ மலைதுலுங்கப் பாடுகவெனப் பாடியது.

4. வாரணங்களெட்டுமகமேருவுங்கடலும்
தாரணியுமெல்லாஞ்சலித்தனவால் - நாரணனைப்
பண்வாயிடைச்சிபருமத்தினாலடித்த
புண்வாயிலீமொய்த்தபோது.

இ - ள். நாரணனை - (திருவாய்ப்பாடியில்கண்ணனாயவதரித்திருந்த) ஸ்ரீமந்நாராயணனை, பண்வாய் இடைச்சி - இசைபோலுஞ் சொல்லையுடைய யசோதைப்பிராட்டி, பருமத்தினால் அடித்த - பருத்தமத்தினாலடித்ததனாலுண்டாகிய, புண்வாயில் - புண்ணினிடத்து, ஈமொய்த்தபோது - ஈக்கள்மொய்க்க அருவருத்தசைந்தபோது, வாரணங்கள் எட்டும்-திக்குயானைகள் எட்டும், மகமேருவும், மகாமேருமலையும், கடலும் - ஏழ்கடலும், தாரணியும்-உலகங்களும் ஆகிய, எல்லாம் - எல்லாப்பொருள்களும், சலித்தன - அசைந்தன, எ - று.

ஆல் - அசை. எல்லாவுலகங்களும் அவற்றிலுள்ள திக்கு யானைகள் முதலியவும் இறைவனது திருவயிற்றில்வைத்தூக்காக்கப்படும் பொருள்களாதலால் அவனசைந்தபோது அவையும் அசைந்தனவென்க.

ஒருவர் குடத்திலே கங்கையடங்கும் எனப் பாடுகவெனப் பாடியது.

5. விண்ணுக்கடங்காமல்வெற்புக்கடங்காமல்
மண்ணுக்கடங்காமல்வந்தாலும் - பெண்ணை
இடத்திலேவைத்தவிறைவர்சடாம
குடத்திலேகங்கையடங்கும்.

இ - ள். கங்கை - கங்காநதியானது, விண்ணுக்கு அடங்காமல் - ஆகாயத்திலடங்காமலும், வெற்புக்கு அடங்காமல்-மலைகளிலடங்காமலும், மண்ணுக்கு அடங்காமல் - பூமியிலடங்காமலும், வந்தாலும்-பெருகிவரினும், பெண்ணை-உமாதேவியை, இடத்திலேவைத்த-இடப்பாகத்திலிருத்தின,இறைவர்-பரமசிவனது, சடாமகுடத்திலே அடங்கும் - சடையாகிய கிரீடத்தில் அடங்கும், எ - று.

ஒருவர் அடைசொல்லில்லாமல் ஒன்றுமுதல் பதினெட்டுவரையில்
ஒருவெண்பாவிலடக்கிப் பாடுகவெனப் பாடியது.

6. ஒன்றிரண்டுமூன்றுநான்கைந்தாறுஏழெட்டு
ஒன்பதுபத்துப்பதினொன்று - பன்னி
ரண்டுபதின்மூன்றுபதினான்குபதினைந்துபதி
னாறுபதினேழ்பதினெட்டு.

இ - ள். வெளிப்படை.

ஒருவர் கடலின் நடுவில் செந்தாள் எழுந்ததாகக் கற்பித்துப் பாடவேண்டுமெனப் பாடியது.

7. சுத்தபாற்கடலினடுவினிற்றாளி
தோன்றியவதிசயமாதுகேள்
மத்தகக்கரியையுரித்தவன்மீது
மதன்பொருதழிந்திடமாற்றம்
வித்தகக்கமலைசெவியுறக்கேட்டாள்
விழுந்துநொந்தயர்ந்தழுதோங்கிக்
கைத்தலமலரான்மார்புறப்புடைத்தா
ளெழுந்ததுகலைவயின்செந்தாள்.

இ - ள். சுத்தம் - பரிசுத்தமாகிய, பாற்கடலின் நடுவினில் - திருப்பாற்கடலினிடையே, தாளி தோன்றிய - செந்தாள் எழுந்த, அதிசயமதுகேள் - அதிசயத்தைக் கேட்பாய், மத்தகம் கரியை உரித்தவன்மீது - மஸ்தகத்தையுடைய யானையையுரித்தவனாகிய சிவபெருமான்மீது, மதன்பொருது - மன்மதன் போர்புரிந்து, அழிந்திடும் மாற்றம் - இறந்த செய்தியை, வித்தகம் கமலை - அறிவினையுடைய திருமகள், செவி உறக்கேட்டாள் - காதிற்பொருந்தக்கேட்டு, விழுந்து - கீழேவிழுந்து, நொந்து - மனம் நொந்து, அயர்ந்து அழுது - சோர்ந்தழுது, ஓங்கி - உயரத்தூக்கி, கைத்தலம் மலரால் - தாமரைமலர் போன்றகைகளால், மார்பு உறப்புடைத்தாள் - மார்பில் படும்படி அறைந்து கொண்டாள், (அதனால்) கலைவயின்செந்தாள் - (அந்தமார்பில் பூசப்பட்டிருந்த) கலவைச்சந்தனத்தின் செந்தாளானது, எழுந்தது - மேலெழுந்துபரந்தது, எ - று.

புத்திரசோகங் கொடிதாதலால் இவள்பேரறிவுடையளாயிருந்தும் இவ்வாறு சோகித்தாள் என்றதாயிற்று.

ஒருவர் ஆமணக்குக்கும் - யானைக்கும் சிலேடை பாடவேண்டுமெனப் பாடியது.

8. முத்திருக்குங்கொம்பசைக்குமூரித்தண்டேந்திவரும்
கொத்திருக்குநேரார்குலைசாய்க்கும் - எத்திசைக்கும்
தேமணக்குஞ்சோலைத்திருமலைராயன்வரையில்
ஆமணக்குமால்யானையாம்.

இ - ள். எத்திசைக்கும் - எந்தத்திசையிலும், தேம்மணக்கும்சோலை - மணம்வீசுகின்ற சோலைசூழ்ந்த, திருமலைராயன்வரையில் - திருமலைராயனது மலையின்கண், ஆமணக்கும் - ஆமணக்கஞ்செடியும், மால்யானை ஆம் - மதமயக்கங்கொண்ட யானையையொக்கும்.

மால்-பெரிய எனினுமாம். அடியில்வருமாறு சிலேடைப் பொருள்கொள்க.

ஆமணக்கு.

முத்து இருக்கும் - முத்தென்றுவழங்கும் விதையையுடையதாயிருக்கும், கொம்பு அசைக்கும் - கிளையசையாநிற்கும், மூரித்தண்டு ஏந்திவரும் - நெரிசலையுடைய குழலுள்ள தண்டினால் தாங்கப்பட்டுவளரும், கொத்து இருக்கும் - காய்க்கொத்துகளை யுடைத்தாயிருக்கும், நேர் ஆர் குலை சாயக்கும் - நேர்மையுள்ள குலைகளைச்சாய்க்கும்.

யானை.

முத்து இருக்கும் கொம்பு அசைக்கும்-முத்துள்ள தன்கொம்புகளை அசைக்கும், மூரித்தண்டு ஏந்திவரும் - வலிமையாகிய இருப்புலக்கையைத் துதிக்கையிலேந்திவரும், கொத்து இருக்கும் - மத்தகத்தில் பாகன் அங்குசத்தால் கொத்துங் கொத்துக்களோடு கூடியிருக்கும், நேரார்குலை சாய்க்கும் - பகைவர் கூட்டங்களைமுறிய அடிக்கும், எ - று.

யானைக்கொம்பில் முத்துண்டாவது மரபாதலால் முத்திருக்குங் கொம்பு என்றார்.

ஒருவர் வைக்கோலுக்கும்-யானைக்கும் சிலேடையாகப் பாடவேண்டுமெனப் பாடியது.

9. வாரிக்களத்தடிக்கும்வந்துபின்புகோட்டைபுகும்
போரிற்சிறந்துபொலிவாகும் - சீருற்ற
செக்கோலமேனித்திருமலைராயன்வரையில்
வைக்கோலுமால்யானையாம்.

இ - ள். சீர் உற்ற - சிறப்புமிகுந்த, செம்மைக்கோலம்மேனி - செம்மையாகிய அழகிய திருமேனியையுடைய, திருமலைராயன்வரையில் - திருமலைராயனது மலையின்கண், வைக்கோலும் மால்யானை ஆம்-வைக்கோலும் மால்யானையை நிகர்க்கும்.

செங்கோலம் - செக்கோலம் என வலித்தல்பெற்றது.

வைக்கோல்.

வாரிக்களத்து அடிக்கும் - (உழவர்களால்) வாரியெடுத்து நெற்களத்தில் அடிக்கப்படும், பின்புவந்து கோட்டைபுகும் - பிறகு அங்கு நின்றும் கொண்டு வந்து கோட்டையாகக் கட்டிச் சேர்க்கப்படும், போரில்சிறந்து பொலிவு ஆகும்-போர்களாகி மேம்பட்டுப் பொலிவையடையும்.

யானை.

களத்துவாரி அடிக்கும் - போர்க்களத்தில் (பகைவரை) வாரிநிலத்திலறை யும், பின்புவந்து கோட்டைபுகும் - (பகைவரைமுடித்த) பிறகுவந்து கோட்டை யில்பிரவேசிக்கும், போரில்சிறந்து பொலிவு ஆகும் - போரில் (வெற்றி) மிகுந் து விளங்கும், எ - று.

ஒருவர் பாம்புக்கும் - எள்ளுக்கும் சிலேடையாகப் பாடவேண்டுமெனப் பாடியது.

10. ஆடிக்குடத்தடையுமாடும்போதேயிரையும்
மூடித்திறக்கின்முகங்காட்டும் - ஓடிமண்டை
பற்றிற்பரபரெனும்பாரிற்பிண்ணாக்குமுண்டாம்.
உற்றிடுபாம்பெள்ளெனவேயோது.

பாம்பு.

இ - ள். ஆடிகுடத்து அடையும்-படமெடுத்தாடிக் குடத்திற்சேரும், ஆடு ம்போதே இரையும் - ஆடும்போதே இரைச்சலிடும், மூடிதிறக்கின் முகங்காட் டும் - பெட்டிமுதலியவற்றிலிட்டு மூடித்திறந்தால் தலையைநீட்டிக் காட்டும், ஓடிமண்டைபற்றின் பரபரெனும் - (கடித்தவுடனே அதன்விஷமானது) ஏறி மண்டையிற்பற்றினால் பரபரென்று தினவுண்டாகும், பாரில் பிண் நாக்கும் உண் டாம் - உலகில் அதற்குப்பிளவாகிய நாக்குமுண்டாயிருக்கும்.

எள்.

ஆடிகுடத்து அடையும்-செக்கிலிட்டாட்டப்பட்டு அதின்சாரமாகிய எண் ணெய்குடத்திற்சேரும், ஆடும்போதே இரையும் - செக்காடும்போதே சத்திக்கு ம், மூடிதிறக்கின் முகம்காட்டும் - குடத்திற் பெய்துமூடி (நுரையடங்கின பிறகு) திறந்துபார்த்தால் பார்த்தவர்களுடைய முகச்சாயையைத் தனக்குள்ளே காட்டும், ஓடிமண்டைபற்றின் பரபரெனும் - (அது உச்சியில் வார்க்கப் படுமா னல்) பரவியோடி மண்டையிற்பற்றின் பரபரென்று ஊரலெடுக்கும், பிண்ணா க்கும் உண்டாம் - (அதனிடத்து) பிண்ணாக்கு முண்டாகும், (ஆதலால்) உற் றிடு பாம்பு - (உவமையாற்) பொருந்துகின்ற பாம்பை, எள் எனவே ஓது-எள் ளென்றேகூறு, எ-று.

ஒற்றுமைபற்றி எள்ளையும் எண்ணெயையும் அபேதமாகக்கூறினர்.

ஒருவர் பாம்புக்கும் - எலுமிச்சம்பழத்துக்கும் சிலேடையாகப் பாடவேண்டுமெனப் பாடியது.

11. பெரியவிடமேசேரும்பித்தர்முடியேறும்
அரியுண்ணுமுப்புமேலாடும் - எரிகுணமாம்

தேம்பொழியுஞ்சோலைத்திருமலைராயன்வரையில்
பாம்புமெலுமிச்சம்பழம்.

இ - ள். தேம்பொழியும் சோலை - தேனைச் சொரிகின்ற சோலைசூழ்ந்த, திருமலைராயன்வரையில் - திருமலைராயனது வெற்பின்கண், பாம்பும் எலுமிச்சம்பழம் - பாம்பும் எலுமிச்சம்பழத்துக்கு நிகராகும்.

பாம்பு.

பெரிய விடமே சேரும் - மிகுந்த நஞ்சைப் பொருந்தியிருக்கும், பித்தர் முடி ஏறும் - சிவபெருமானது திருமுடிமீதேறப்பெறும், அரி உண்ணும்-காற்றையுட்கொள்ளும், ஊப்பும் - (அதனால்) உடம்பு ஊதும், மேல் ஆமே-மேலெழுந்தாடும், எரி குணம் ஆம் - கோபித்துச் சீறுங்குணமுளதாகும்.

எலுமிச்சம்பழம்.

பெரிய இடமேசேரும் - ராஜசமுகமுதலிய பெரிய இடங்களிற்சேரும், பித்தர்முடி ஏறும் - பித்தர்தலைமீது (பித்தசாந்தியின்பொருட்டு) சாறுபிழிந்தேற்றப்படும், அரியுண்ணும் - ஊறுகாயின்பொருட்டு அரிகருவியால் அரியப்படும், மேல் உப்பு ஆமே - அதின்பிறகு உப்பிட்டுக் குலுக்கப்படும், எரிகுணம் ஆம் - (அதின்சாறு இரணத்திற்பட்டால்) எரியுங் குணமுடையதாகும், எ-று.

ஒருவர் மலைக்கும் - சந்திரனுக்கும் சிலேடையாகப்
பாடவேண்டுமெனப் பாடியது.

12. நிலவாய்விளங்குதலானீள்வான்படிந்து
சிலபோதுலாவுதலாற்சென்று - தலைமேல்
உதித்துவரலாலுயர்மாமலையை
மதிக்குநிகராகவழுத்து.

இ - ள். உயர்மாமலையை-உயர்ந்த பெரியமலையை, மதிக்கு நிகர் ஆகவழுத்து-சந்திரனுக்கு உவமையாகக்கூறு.

மலை.

நிலம்வாய் விளங்குதலால்-பூமியினிடத்து விளங்குதலால், சிலபோது நீள் வான்படிந்து உலாவுதலால் - சிலகாலம் பெரியமேகங்கள் தன்னிடத்துவந்து படிந்துலாவப்பெறுதலால், தலைமேல்சென்று உதித்து வரலால் - சிகரங்கள் ஆகாயத்திற்செல்ல வளர்ந்துவருதலால்,

சந்திரன்.

நிலவு ஆய் விளங்குதலால் நிலாவினையுடைத்தாய்ப் பிரகாசித்தலால், சில போது நீள்வான்படிந்து உலாவுதலால் - சிலநாள் நீண்ட ஆகாயத்திற்படிந்து

சஞ்சரித்தலால், சென்று உது அலைமேல் உதித்துவரலால் - அஸ்தமித்துப் போய் மறுநாள் இந்தக் கடல்முகட்டில் உதயமாகிவருதலால், எ-று.

ஒருவர் தேங்காய்க்கும் - நாய்க்கும் சிலேடையாகப்
பாடவேண்டுமெனப் பாடியது.

13. ஓடுமிருக்குமதனுள்வாய்வெளுத்திருக்கும்
நாடுங்குலைதனக்குநாணாது-சேடியே
தீங்காயதில்லாத்திருமலைராயன்வரையில்
தேங்காயுநாயுமிணைசெப்பு.

இ - ள். சேடியே - தோழீ, தீங்கு ஆயது இல்லா - தீமையில்லாத. திருமலை ராயன்வரையில் - திருமலைராயனது மலையின்கண், தேங்காயும் நாயும் இணைசெப்பு - தேங்காயையும் நாயையும் ஒப்பாகக்கூறு.

தேங்காய்.

ஓடும் இருக்கும் - (நாயேயன்றி) ஓடும் தன்னிடத்திருக்கப்பெறும், அதன் உள்வாய் வெளுத்து இருக்கும் - அதின் உட்புறம் வெளுத்திருக்கும், நாடுங்குலைதனக்கு நாணாது - (யாவரும்) விரும்புதற்குரிய பெருங்குலை விடுதலால் வளையாது.

நாய்.

ஓடும் - (சிலநேரம்) ஓடித்திரியும், இருக்கும் - (சிலநேரம்) இருந்த இடத்திற்றானேயிருக்கும், அதன்வாய் உள்வெளுத்து இருக்கும் - அதின்வாயின் உள்ளிடம் வெளுத்திருக்கும், நாடும் - (புதியர்வரக்காணின்) உற்றுப்பார்க்கும், குலைதனக்கு நாணாது - (பார்த்தபிறகு) குரைக்குந் தொழிலில் சற்றும் பின்னிடாது, எ-று.

ஒருவர் மீனுக்கும் - பேனுக்கும் சிலேடையாகப்
பாடவேண்டுமெனப் பாடியது.

14. மன்னீரிலேபிறக்குமற்றலையிலேமேயும்
பின்னீச்சிற்குத்தும்பெருமையால் - சொன்னேன்கேள்
தேனுந்துசோலைத்திருமலைராயன்வரையில்
மீனும்பேனுஞ்சரியாமே.

இ - ள். தேன் உந்துசோலை - தேன்பாய்கின்ற சோலைசூழ்ந்த, திருமலை ராயன்வரையில் - திருமலைராயனது மலையின்கண், மீனும்பேனும் சரி ஆம் - மீனும்பேனும் ஒன்றற்கொன்று நிகராகும், சொன்னேன்கேள் - சொன்னேன் நீ கேட்பாயாக.

மீன்.

மன் நீரிலேபிறக்கும் - பெருமையுள்ள நீரினிடத்தில் உற்பத்தியாகும், அலையிலேமேயும் - அந்தநீரலைகளில் மேய்ந்துகொண்டிருக்கும், (அப்படி மேயுமிடத்தில் ஏதாயினும் அரவங்கண்டால்) பின் நீச்சின்குத்தும் - பின்நீச்சினால் குத்தியோடும்.

பேன்.

மன் ஈரிலேபிறக்கும் - மிகுதியாக ஈரினிடத்துண்டாகும், மல்தலையிலே மேயும் - வலிமையாகிய தலையோட்டின்மீது மேயும், பின் ஈச்சின்குத்தும் - பிறகுபெண்களால் ஈச்சென்றவாயின் ஒலிக்குறிப்போடு குத்தி நாசம்பண்ணப்படும், பெருமையால் - இந்தப்பெருமையினால், எ-று.

ஒருவர் ஆட்டக்குதிரைக்கும் - காவிரியாற்றுக்கும் சிலேடையாகப் பாடவேண்டுமெனப் பாடியது.

15. ஓடுஞ் சுழிசுத்த முண்டாகுந் துன்னலரைச்
சாடும் பரிவாய்த் தலைசாய்க்கும்-நாடறியத்
தேடுபுகழான் றிருமலைராயன் வரையில்
ஆடுபரி காவிரியா மே.

இ - ள். நாடு அறியத்தேடுபுகழான் - தேசமெல்லாமறியும் படித்தேடினபெரும்புகழை யுடையவனாகிய, திருமலைராயன் வரையில் - திருமலைராயனது வரையகத்தில், ஆடுபரி - ஆட்டக்குதிரை, காவிரியாறு ஆம் - காவிரியாற்றிற்கு நிகராகும், எ-று.

ஆட்டக்குதிரை.

ஓடும் - வேகமாயோடும், சுத்தம் சுழிஉண்டாகும் - சுத்தமான சுழிகளையுடைத்தாயிருக்கும், துன்னலரைசாடும் - பகைவரைமுறிய அடிக்கும், பரிவாய் தலைசாய்க்கும் - (காண்பவருக்கு) விருப்பமுண்டாகத் தலைவளைத்து நடக்கும்.

காவிரியாறு.

ஓடும் - (நீர்பெருகி) ஓடும், சுழி (உண்டாகும்) நீர்ச்சுழிகளை யுடைத்தாயிருக்கும், சுத்தம் உண்டாகும் - (தன்னிடத்தில் மூழ்கினவர்களுக்குப்) பரிசுத்தத்தையுண்டாக்குந் தன்மையையுடைத்தாயிருக்கும், துன் அலரை சாடும்-நெருங்கிய மலர்களை யலைத்தெறியும், பரிவாய்த்த அலைசாய்க்கும் - குதிரையுருவாய்ந்த அலைகளை மடக்கிவீசும், (ஆதலால்,) எ-று.

**வாய்த்தலையென்பதில் வாய்த்த என்னும் பெயரெச்சத்தகரம் தொகுத்தது.**

ஒருவர் கீரைப்பாத்திக்கும் - ஏறுகுதிரைக்கும் சிலேடையாகப் பாடவேண்டுமெனப் பாடியது.

16. கட்டியடிக்கையாற்கான்மாறிப்பாய்கையால்
வெட்டிமறிக்கின்றமேன்மையால்-முட்டப்போய்
மாறத்திரும்புகையால்வண்கீரைப்பாத்தியுடன்
ஏறப்பரியாகுமே.

இ - ள். வள் கீரைப்பாத்தியுடன் - வளமாகிய கீரைப்பாத்தியோடு, ஏறு அப்பரி ஆகும் - ஏறு தற்குரிய அந்தக் குதிரையானது சமமாகும்

கீரைப்பாத்தி.

கட்டி அடிக்கையால் - நிலத்தைக்கொத்தி மண் கட்டிகளை அடித்துடைக்கையால், கால் மாறிபாய்கையால்-ஒரு வாய்க்காலிலிருந்து மற்றொரு வாய்க்காலில் நீர் மாறிப்பாய்தலால், வெட்டி மறிக்கின்ற மேன்மையால் - சதுரஞ் சதுரமாக வெட்டித் தடுக்கப்படுகின்ற மேன்மையால், முட்டப்போய் மாறத் திரும்புகையால் - கடை மடையில் முட்டும்படி நேரேசென்று (அங்கிருந்து) மாறிவிடத் திரும்புதலால்.

ஏறுகுதிரை.

கட்டி அடிக்கையால் - கட்டிக் கொட்படிக்கப்படுதலால், கால் மாறிப்பாய்கையால் - கால்மாறிமாறி யெழுந்து பாய்ந்து செல்லுதலால், வெட்டிமறிக்கின்ற மேன்மையால் - (தன்மேலேறிய வீரன்பகைவரை) வெட்டித் திரும்புகின்ற மேன்மை யுடைத்தாதலால், முட்டப்போய் மாறத்திரும்புகையால்-போகவேண்டிய இடமுழுதும்போய் மீளத் திரும்பிவருதலால், எ-று.

கொட்படித்தல்-குதிரையைத் திருப்பும்பொழுது அது உடனே திரும்பப் பழகுதற்குக்கழுத்திற் கயிறுகட்டிச் சாட்டைகொண்டு சுற்றிச் சுற்றியடித்தல்.

ஒருவர் ஆட்டுக்கும் - குதிரைக்கும் சிலேடையாகப் பாடவேண்டுமெனப் பாடியது.

17. கொம்பிலையேதீனிதின்னுங்கொண்டதன்மேல்வெட்டுதலால்
அம்புவியினன்னடையதாதலால் - உம்பர்களும்
தேடுநற்சோலைத்திருமலைராயன்வரையில்
ஆடுங்குதிரையுநேராம்.

இ - ள். உம்பர்களும் தேடும்-தேவர்களும் தேடிவருதற்குரிய, நல்சோலை - அழகாகிய சோலைகள் சூழ்ந்த, திருமலைராயன் வரையில் - திருமலைராயனது

வெற்பகத்தில், ஆடும் குதிரையும் நேராம் - ஆடும் குதிரையும் ஒன்றுக்கொன்றுசமானமாகும்.

ஆடு.

கொம்பு இலையேதீனிதின்னும்-நுனிக்கொம்பிலுள்ள இலைகளையே இரையாகத்தின்னும், கொண்டதன்மேல் வெட்டுதலால் - (இடையனிடத்தில் பணங்கொடுத்து) வாங்கிக்கொண்டபிறகு வெட்டப்படுதலால், அம்புவியில் நல்நடையது ஆதலால்-உலகத்தில் (இடையர்களுக்கு) நல்லசெல்வமாதலால்.

உலகியல்கள் யாவும் முட்டின்றி நடத்தற்குக் கருவியாதலால் செல்வம் நடையெனப்பட்டது.

குதிரை.

கொம்பு இல்லை - (இதற்குக்) கொம்பு இல்லை, தீனிதின்னும், தீனியைத் தின்னும், அதன் மேல்கொண்டு வெட்டுதலால் - (போர்வீரன்) அதனையூர்ந்து சென்று (பகைவரை) வெட்டுதலால், அம்புவியில் நல்நடையது ஆதலால், பூமியில் அழகாகிய நடைகளையுடையதாதலால், எ - று.

ஒருவர் துப்பாக்கிக்கும் - ஓலைச்சுருளுக்கும் சிலேடையாகப் பாடவேண்டுமெனப் பாடியது.

18. ஆணிவரையுறலாலானகுறிப்பேதரலால்
தோணக்கருமருந்தைத்தோய்ந்திடலால் - நீணிலத்தில்
செப்பார்க்குதவாத்திருமலைராயன்வரையில்
துப்பாக்கியோலைச்சுருள்.

இ - ள். நீள் நிலத்தில - பெரியவுலகத்தில, செப்பார்க்கு உதவா - தன்னைப்புகழாத பகைவர்களுக்கு உபகரியாத, திருமலைராயன் வரையில்-திருமலைராயனது மலையின்கண, துப்பாக்கி ஓலைச்சுருள் - துப்பாக்கியும் ஓலைச்சுருளும் ஒன்றற்கொன்றிணையாகும்.

துப்பாக்கி.

ஆணிவரை உறலால் - இருப்புச் சலாகையைத் தன்னிடத்திற் கொண்டிருத்தலால், ஆனகுறிப்பேதரலால் - சுடுவோன்குறித்ததாகிய லக்ஷ்யத்தையே இலக்காக்குதலால், தோணகருமருந்தை தோய்ந்திடலால் - மிகுதியாகக்கரிய மருந்தைப் பொருந்துதலால்.

ஓலைச்சுருள்.

ஆணிவரை உறலால் - எழுத்தாணியைக்கொண் டெழுதப்படுதலையுடைத்தாதலால், ஆனகுறிப்பேதரலால் - தன்னிடத்தெழுதப்பட்டதாகிய குறிப்பை

ப்பிறர்க்குத் தெரிவித்தலால், தோணகருமருந்து தோய்ந்திடலால் - தன்னிட த்தெழுதப்பட்ட எழுத்து படிப்போர்க்கு நன்றாகத் தோன்றும்படிமைக் காப்புச்செய்யப் பெறுதலால், எ - று.

ஒருவர் வானவில்லுக்கும் - விஷ்ணுவுக்கும் - வெற்றிலைக்கும் சிலேடையாகப் பாடவேண்டுமெனப் பாடியது.

19. நீரிலுளதானிறம்பச்சையாற்றிருவால்
பாரிற்பகைதீர்க்கும்பான்மையால் - சாருமனுப்
பல்வினையைமாற்றுதலாற்பாரீர்பெருவான
வில்விண்டுநேர்வெற்றிலை.

இ - ள். பெருவானவில் - பெரிய வானவில்லும், விண்டு - விஷ்ணுவும், வெற்றிலை - வெற்றிலையும், நேர் - ஒன்றுக்கொன்று நிகர்த்திருப்பன, (இதனை) பாரீர் - (உலகத்தாரே) பாருங்கள்.

வானவில்.

நீரில் உளதால் - நீர்கொண்ட மேகத்திலுண்டாதலால், நிறம்பச்சையால்- பச்சைநிற முண்மையால், திருவால் - அழகாயிருப்பதால், பாரில் பகைதீர்க்கும் பான்மையால் - பூமிக்குவிரோதமாகிய கோடைப்பகையை நீக்குந்தன்மையால், சாரும் மனுபல் வினையைமாற்றுதலால் - (உலகத்தில்) பொருந்திய மனிதர்களுடைய பலதுன்பங்களையும் நீக்குதலால்.

விஷ்ணு

நீரில் உளதால் - பிரளயவெள்ளத்திலும் அழியாதிருத்தலால், நிறம் பச்சையால் - பச்சை நிறமுடைமையால், திருவால் - திருமகளை யுடைமையால், பாரில் பகைதீர்க்கும் பான்மையால் - உலகத்தில் (தேவர் முனிவருக்குப்) பகைவராகிய அரக்கரை யழிக்குந்தன்மையால், சாரும் மனுபல்வினையை மாற்றுதலால்-தன்னையடைந்த பிரஜைகளுடைய பலபாவங்களையு மொழித்தலால்.

வெற்றிலை.

நீரில் உளதால்-நீர்க்கால்களில் இருப்பதனால், நிறம்பச்சையால் - பச்சை நிறத்தால், திருவால் - மங்களகரமாதலால், பாரில்பகை தீர்க்கும்பான்மையால்- உலகத்தில் (ஒருவரோடொருவர்க்குள்ள) பகைத்தன்மையை யொழித்துச் சமாதானப்படுத்துந் தன்மையால், சாரும் மனுபல்வினையை மாற்றுதலால் - உலகிற் பொருந்திய மக்கட்டொகுதியின் தந்தரோகத்தை நீக்குதலால், எ - று.

ஒருவர் பூசுணிக்காய்க்கும் - பரமசிவனுக்கும் சிலேடையாகப் பாடவேண்டுமெனப் பாடியது.

20. அடிநந்திசேர்தலாலாகம்வெளுத்துக்
கொடியுமொருபக்கத்திற்கொண்டு - வடிவுடைய
மாசுணத்தைப்பூண்டுவளைத்தழும்புபெற்றதனால்
பூசுணிக்காயீசனெனப்போற்று.

இ - ள். பூசுணிக்காய் - பூசுணிக்காயையும், ஈசன் எனப்போற்று - பரமசிவனெனமதித்து வணங்கு.

பூசுணிக்காய்.

அடிநந்திசேர்தலால் - அடியில்காம்பு பொருந்துதலால், ஆகம்வெளுத்து கொடியும் ஒருபக்கத்திற் கொண்டுவடிவுடைய மாசுண்ணத்தைப் பூண்டுவளைத் தழும்புபெற்றதனால் - உடல்வெளுத்து ஒருபக்கத்தில் கொடியையுங்கொண்டு அழகையுடைய வெண்சுண்ணத்தை மேற்புறத்தணிந்து வளைவாகிய தழும்புகளைப் பெற்றிருத்தலால்.

பரமசிவன்.

அடிநந்திசேர்தலால் - தன்கீழேஇடபம் சேர்ந்திருத்தலால், ஆகம் வெளுத்து கொடியும் ஒருபக்கத்திற்கொண்டு வடிவுடைய மாசுணத்தைப்பூண்டு வளைத்தழும் புபெற்றதனால் - திருநீறுபூசுதலால் திருமேனிவெளுத்து ஒருபாகத்தில் பூங்கொடிபோல் வாளாகிய உமாதேவியை வைத்துக்கொண்டு அழகையுடைய சர்ப்பாபரணத்தைப்பூண்டு காமாக்ஷியம்மையாரது வளைத்தழும்பையும் பெற்றிருத்தலால், எ - று.

ஒருவர் ஒரு வெண்பாவில் ஐந்து டு வரப் பாடவேண்டுமெனப் பாடியது.

21. ஓ கா மா வீ தோ நேரொக்க டு டு டு டு டு
நாகார்குடந்தைநகர்க்கிறைவர் - வாகாய்
எடுப்பர்நடமிடுவரேறுவரன்பர்க்குக்
கொடுப்பரணிவர்குழை.

இ - ள். நாகு ஆர் குடந்தை நகர்க்கு இறைவர் - இளமரச்சோலைகள் நிறைந்ததிருக்குடந்தை நகரத்துக்குத் தலைவராகிய சிவபெருமானவர், ஓகாமாவீதோ - ஓகாமாவீதோ என்னுமிவ்வைந்தெழுத்துக்களும், டுடுடுடுடு-டுடுடுடுடு என்னுமிவ்வைந் தெழுத்துக்களையும், நேர் ஒக்க - முறையே பொருந்தலால், (உண்டாகிய ஓடுகாடு மாடுவீடு தோடு என்னும் ஐந்தனுள் ஒன்றாகிய) ஓடு - ஓட்டை,

வாகு ஆய் - அழகாக, எடுப்பர் - கைக்கொள்வர், (ஒன்றாகிய) காடு - சுடுகாட்டில், நடம்புரிவர் - நடநம்பண்ணுவர், (ஒன்றாகிய) மாடு - இடபத்தின்மேல், ஏறுவர் - ஊர்வர், (ஒன்றாகிய) வீடு முத்தியை, அன்பர்க்குகொடுப்பர் - தம்மடியார்க்குத் தந்தருளுவர், (ஒன்றாகிய) தோடு - காதணியை (குழையை), அணிவர்- காதில் தரிப்பார், எ - று.

நாகு ஆர் என்பதற்கு வயல்களில் சங்குகள்நிறைந்த எனினுமாம், குடந்தைநகர் - கும்பகோணம்.

ஒருவர் பச்சைவடம் பாகுசேலைசோமன் என்று பாடவேண்டுமெனப் பாடியது.

22. மாயன்றுயின்றதுவுமாமலராள்சொல்லதுவும்
ஏயகுருந்திற்கொண்டேறியதும் - தூயை
இடப்பாகன்சென்னியின்மேலேறியதுப்பச்சை
வடப்பாகுசேலைசோமன்.

இ - ள். மாயன் துயின்றதுவும் - திருமால் மஹாப்பிரளயத்தில் திருக்கண் வளர்ந்ததும், மாமலராள் சொல்லதுவும் - பெருமையுள்ள தாமரைமலரை யாசனமாக வுடையவளாகிய திருமகளது சொல்லும், கொண்டு ஏயகுருந்தில் ஏறியதும் - கண்ணன் கவர்ந்துகொண்டு குருந்தமரத்தில் ஏறியதும், தூயை இடப்பாகன் சென்னியின்மேல் ஏறியதும் - பரிசுத்தையாகிய உமாதேவியை யிடப்பாகத்திலிருத்திக் கொண்டவனாகிய பரமசிவனது திருமுடியின் மீதேறியதும், பச்சை வடம் பாகுசேலை சோமன் - (முறையே) பச்சைநிற முள்ள ஆலிலையும் சர்க்கரைப்பாகும் சேலையும் சந்திரனும்ஆம், எ - று.

சேலை - கோபிகைகளை நாணச் செய்யக்கவர்ந்தபுடவை.

ஒருவர் பொன்னுவரையிலை காய்பூவென்று பாடவேண்டுமெனப் பாடியது.

23. உடுத்ததுவுமேய்த்ததுவுமும்பர்கோன்றன்னால்
எடுத்ததுவும்பள்ளிக்கிசையப் - படுத்ததுவும்
அந்நாளெறிந்ததுவுமன்பினிரந்ததுவும்
பொன்னுவரையிலைகாய்பூ.

இ-ள். (திருமாலானவர்) உடுத்ததுவும் - ஆடையாயுடுத்ததும், மேய்த்ததுவும்-(க்ருஷ்ணாவதாரத்தில்) மேய்த்ததும், உம்பர்கோன்தன்னால் எடுத்ததுவும்- தேவர்கோனாகிய இந்திரன் பெய்வித்த கல்மழையைத்தடுக்கும் பொருட்டுக் குடையாயெடுத்துத் தாங்கியதும், பள்ளிக்கு இசையபடுத்ததுவும் - (மஹாப்பிரளயத்தில் தன்) சயநத்துக் கிசையக்கொண்டு படுத்ததும், அந்நாள் எறிந்தது வும் - அக்காலத்தில் (கன்றைக்குணிலாகக் கொண்டு) எறிந்ததும், அன்பின் இரந்ததுவும் - விருப்பத்தினால் மஹாபலியினிடத்தில் யாசித்ததும், பொன் ஆ

பனை இலை காய் பூ - (முறையே) பொன்னும், பசுக்களும் - (கோவத்தந) ரியும், ஆலிலையும், விளங்காயும், நிலமும், ஆம், எ-று.

ஒருவர் விநாயகர்க்தும் - முநகர்க்தும் - பரமசிவனுக்கும்சிலேடையாகப் பாடவேண்டுமெனப் பாடியது.

24. சென்னிமுகமாறுளதாற்சேர்கரமுன்னாலுகையால்
இன்னிலத்திற்கோடொன்றிருக்கையால் - மன்னுகுளக்
கண்ணுறுதலானுங்கணபதியுஞ்செவ்வேளும்
எண்ணரனுநேராவரே.

விநாயகர்.

இ - ள். சென்னிமுகம்மாறு உளதால் - தலையும் முகமும் மாறுயிருத்த லால், சேர்கரம் முன்நாலுகையால் - பொருந்திய துதிக்கையானது முற்புறத் தில் தொங்குதலால், இந்நிலத்தில் கோடு ஒன்று இருக்கையால் - இவ்வுலகத் தில் ஒற்றைக்கொம்பு உண்டாயிருத்தலால், மன்னுகுளக் கண் உறுதலால்-நிலை பெற்ற வெல்லத்திறேற் செய்தவுருவத்தில் ஆவிர்ப்பவித்தலால்.

முருகர்.

சென்னிமுகம் ஆறு உளதால் - முடியும் முகமும் ஆறுண்டாதலால், சேர் கரம் முந்நாலுகையால் - சேர்ந்த ஒளியுள்ள பன்னிரண்டுகைக ளுண்டாத லால், இந்நிலத்தில் கோடு ஒன்று இருக்கையால் - இவ்வுலகத்தில் திருச்செங் கோடுமென்னுந் தலமொன்றுணடா யிருத்தலால், மன்னுகுளக்கண் உறுதலால்- நிலைபெற்ற சரவணப்பொய்கையில் அவதரித்தலால்.

பரமசிவன்.

சென்னிமுகம் ஆறு உளதால் - சிரசில் கங்காநதி யிருத்தலால், முன்சேர் கரம் நாலுகையால் - முற்பக்கத்திற் சேர்ந்த ஒளியுள்ள நான்கு கைகளுண்டா தலால், இந்நிலத்தில் கோடு ஒன்று இருக்கையால் - இவ்வுலகத்தில் (கைலாச) மலையொன் றுண்டாயிருத்தலால், மன்னுகுளக்கண் உறுதலால் - நிலைபெற்ற நெற்றிக்கண்ணையுடைத் தாயிருத்தலால்.

இன்னிலம் இன்பதில் பொருளுக்கிணங்க நகரனகரங்களேயேற்ற பெற்றி கொள்க.

ஒருவர் தை மாசி பங்குனிமாதம் என்றுபாடவேண்டுமெனப்பாடியது.

25. பாணர்க்குச்சொல்லுவதும்பைம்புனலைமூடுவதும்
தானுவுரித்ததுவுஞ்சக்கரத்தோன் - ஊணதுவும்

எம்மானையேத்துவதுமீசனிடத்துஞ்சிரத்தும்
தைம்மாசிபங்குனிமாதம்.

இ - ள். பாணர்க்குச் சொல்லுவதும் - தையற்காரருக்குச் செய்யென்று சொல்லுவதும், தை - தையென்னுஞ்சொல்லே, பைபுனலை மூடுவதும் - பசிய நீரைமூடுவதும், மாசு - பாசிக்கொத்துகளே, தாணு உரித்ததுவும் - சிவபெருமான் உரித்ததுவும் - இபம் - யானையையே, சக்கரத்தோன் ஊணதுவும் - சக்ராயுதத்தையுடைய திருமாலுக்கு உணவாவதும், கு - பூமியே, எம்மானை எத்துவதும் - சிவபெருமானைத் துதிப்பதும், உன்னி - மனத்தில் நினைத்தே, ஈசன் இடத்தும் - சிவபெருமானது இடப்பாகத்திலிருப்பதும், மாது - உமாதேவியே. (ஈசன்) சிரத்தும்-சிவபெருமானது திருமுடியிலிருப்பதும். அம் - நீரே, எ-று,

ஒருவர் செருப்பு என்று எடுத்து விளக்குமாறு என்று முடிக்கவேண்டுமென

அவ்வாறே பாடி முடித்தது.

26. செருப்புக்குவீரர்களைச்சென்றுழக்கும்வேலன்
பொருப்புக்குநாயகனைப்புல்ல - மருப்புக்குத்
தண்டேன்பொழிந்ததிருத்தாமரைமேல்வீற்றிருக்கும்
வண்டேவிளக்குமாறே.

இ - ள். செருபுக்குச்சென்று - போர்க்களத்திற் புகுந்துபோய், வீரர்களை உழக்கும் - வீரர்களைச் சிதறக்கலக்குகின்ற, வேலோன் - வேலாயுதத்தை யுடையவனுகி, பொருப்புக்குநாயகனைப்புல்ல - குறிஞ்சிநிலத் தலைவனுமாகிய முருகவேளை நான்தழுவுதற்கு, மருபுக்கு - வாசனைபொருந்தி, தண் தேன்பொழிந்த-குளிர்ச்சியாகிய தேனைச்சொரிந்த, திருத்தாமரைமேல் வீற்றிருக்கும் - அழகிய தாமரைமலர்மீது வீற்றிருக்கின்ற, வண்டே-வண்டுகளே, ஆறுவிளக்கும்-எனக்கு (அவனிருக்கு மிடத்துச்செல்லும்,) வழியை விளங்கக்காட்டுங்கள், எ - று.

ஆறுவிளக்கும் - என்பதற்கு தழுவுதற்குரியவழி - (உபாயம்) விளங்கப்பண்ணும், எனினும், ஒழுங்காகச் சென்று என்மையலை அவனுக்கு விளங்கக்கூறும், எனினும், ஆறுகால்களால் விரைவாயோடி விளக்கும் எனினும் அமையும். இது வண்டுவிடுதூதென்று கொள்ளலாம்.

ஒருவர் பாம்புக்கும் - வாழைப்பழத்துக்கும் சிலேடையாகப்

பாடவேண்டுமெனப் பாடியது.

27. நஞ்சிருக்குந்தோலுரிக்குநாதர்முடிமேலிருக்கும்
வெஞ்சினத்திற்பற்பட்டான்மீளாது - விஞ்சுமலர்த்
தேம்பாயுஞ்சோலைத்திருமலைராயன்வரையில்
பாம்பாகும்வாழைப்பழம்.

இ - ள். விஞ்சும் மலர் தேம் பாயும் சோலை - மிகுதியாகிய பூந்தேன் பெருகிப்பாய்கின்ற சோலைகள்சூழ்ந்த, திருமலை ராயன்வரையில் - திருமலைராயனது வெற்பின்கண், பாம்பு வாழைப்பழம் ஆகும் - பாம்பானது வாழைப்பழத்தை நிகர்க்கும்.

பாம்பு.

நஞ்சு இருக்கும் - விஷத்தை யுடைத்தாயிருக்கும், தோல் உரிக்கும் - (பருவமறிந்து) சட்டையைக் கழற்றும், நாதர் முடிமேல் இருக்கும் - இறைவரது திருமுடிமீதிருக்கும், வெஞ்சினத்தில் பல்பட்டால் மீளாது - கொடிய கோபத்தில் கடித்த அதன்பல்லானது பதிந்தால் விஷமிறங்காது.

மீளாதுஎன்பதற்கு இறந்தவுயிர் திரும்பாது என்றலுமொன்று

வாழைப்பழம்.

நஞ்சு இருக்கும் - கனிந்திருக்கும், தோல் உரிக்கும் - தோலுரிக்கப்படும், நாதர்முடிமேல் இருக்கும் - இறைவரது திருமுடிமீது அபிஷேக திரவியமாகச் சமர்ப்பிக்கப்பட்டிருக்கும், வெஞ்சினத்தில் பல்பட்டால் மீளாது - பதார்த்தமாகுங் காலத்தில் பல் பட்டால்திரும்பாது, எ - று.

ஒருவர் கண்ணாடிக்கும் - அரசனுக்கும் சிலேடையாகப் பாடவேண்டுமெனப் பாடியது.

28. யாவருக்கும்ரஞ்சனைசெய்தியாவருக்குமவ்வவராய்ப்
பாவனையாய்த்தீதகலப்பார்த்தலால் - மேலும்
எதிரியைத்தன் னுள்ளாக்கியேற்றரசத்தால்
சதிருறலாலாடியரசாம்.

இ - ள். ஆடி அரசு ஆம்-கண்ணாடியானது அரசனுக்குச் சமானமாகும்.

கண்ணாடி,

யாவருக்கும் ரஞ்சனைசெய்து யாவருக்கும் அவ்வவராய் பாவனையாய்தீது அகல பார்த்தலால் - எல்லார்க்கும் களிப்பையுண்டாக்கி எல்லார்க்கும் அவரவரைப்போலப் பிரதிபலித்து முகத்திலுள்ளகளங்கம் நீங்கத்திருத்தமாகப் பார்க்கப்படுதலால், மேவும் எதிரியை தன் உள் ஆக்கி ஏற்றரசத்தால் - வந்து எதிர்ப்பட்டவனுடைய சாயையைத் தனக்குள்ளேயடக்கத் தகுதியாகியபாத ரசம்பூசப்பட்டிருத்தலால், சதிர் உறலால் - அழகைப்பெற்றிருத்தலால்.

அரசன்.

யாவருக்கும் ரஞ்சனைசெய்து யாவருக்கும் அவ்வவராய் பாவனையாய் தீது அகலபார்த்தலால் - (தன் செங்கோலின்கீழ்வாழ்வார்) எல்லோர்க்கும் சந்தோ

வத்தை யுண்டாக்கி எல்லார்க்கும் அவரவர் தகுதிக்கேற்கத் தன்னைப் பாவித்து தன் நாட்டிலுள்ள தீமைகள் நீங்க நோக்குதலால், மேவும் எதிரியை தன் உள் ஆக்கி எற்ற ரசத்தால் - தன்மேல் போருக்குவருகின்ற பகைவனை உபாயத்தால் தன்வசப்படுத்தித் தகுதியாகிய நயத்தைக் கொண்டிருத்தலால், சதிர் உறலால்- பெருமை யடைந்திருத்தலால், எ - று.

ஒருவர் சிவபெருமானைக்குறித்து, நீறவாய், நெருப்பவாய், கூறவாய், கொளுந்துவாய், நட்டமாவாய், நஞ்சாவாய், என்றுஒருவெண்பாப் பாடவேண்டுமெனப் பாடியது.

29. நீறுவாய்நெற்றிநெருப்பாவாயங்கமிரு
கூறுவாய்மேனிகொளுந்துவாய் - மாறுத
நட்டமாவாய்சோறுநஞ்சாவாய்நாயேனை
இட்டமாய்க்காப்பாயினி.

இ - ள். நெற்றி நீறு ஆவாய் - நெற்றியில் திருநீறுடையையாவாய், அங்கம் நெருப்பு ஆவாய் - திருமேனி நெருப்பு மயமாவாய், மேனி இரு கூறுஆவாய் - திருமேனி இருகூறுயிருப்பாய், கொளுந்துவாய், எரிந்து கொண்டிருப்பாய், மாறுத நட்டம் ஆவாய் - இடையறுத நடனத்தை யுடையையாவாய், நஞ்சு சோறு ஆவாய் - விஷத்தை உணவாகக் கொள்வோனுவாய், இனி - இனியாயினும், நாயேனை - நாயினேனை, இட்டமாய்க்காப்பாய் - அன்போடு காத்தருள்வாய், எ - று.

வெளிக் கிவ்வாறிருப்பினும் உள்ளிருக்கும் கருணையால் என்னைக் காக்க வேண்டும் என்பது கருத்து.

ஒருவர் யசோதைப்பிராட்டிகண்ணனை மத்தினலடித்ததைப்பற்றியிரங்கிக் கூறியதாகப் பாடுகவெனப் பாடியது.

30. வண்ணங்கரியனென்றும் வாய்வேதநாறியென்றும்
கண்ணனிவனென்றுங்கருதாமல் - மண்ணை
அடிப்பதுமத்தாலேயளந்தானையாய்ச்சி
அடிப்பதுமத்தாலேயழ.

இ - ள். மண்ணை - பூமியை, அடிபதுமத்தாலே அளந்தானை - திருவடித் தாமரையினல் அளந்தருளினவனை, இவன்-இவன், வண்ணம்கரியன் என்றும்- நிறத்தினுற்கரியோனுகிய திருமால்என்றும், வாய்வேதம்நாறி என்றும் - திருவாயில் எல்லாவேதங்களும் பரிமளிக்கப் பெற்றவனென்றும், கண்ணன் என்றும்- எல்லாரினும் பெருமையுடையோனென்றும், கருதாமல் - நினையாமல், ஆய்ச்சி- யசோதைப் பிராட்டியானவள், (கண்ணன்) அழ-அழும்படி, மத்தாலே அடிப்பது- மத்தைக்கொண்டோ அடிப்பது (இது) என்ன அறியாமை, எ-று.

பூஜித்து உஜ்ஜீவிக்கலாகாதோ என்பது கருத்து. கண்ணன் - எல்லாருக்குங் கண்ணாயிருப்பவன், அன்றிக் கண்ணிலிருப்பவன்.

ஒருவர் போவான்வருவான் புகுவான்புறப்படுவான் ஆவான் இவான் அவராளம் என்று பாடுகவெனப் பாடியது.

31. செற்றலரைவென்றதிருமலைராயன்கரத்தில்
வெற்றிபுரியும்வாளேவீரவாள்-மற்றையவாள்
போவான்வருவான்புகுவான்புறப்படுவான்
ஆவானிவானவனாம்.

இ - ள். செற்றலரைவென்ற - பகைவரைவென்ற, திருமலைராயன் கரத்தில் - திருமலைராயன்கையிலுள்ள, வெற்றிபுரியும்வாளே - வெற்றியைக்கொடுக்கிறவாளே, வீரவாள் - வீரவாளாகும் - மற்றையவாள் - மற்றையவாட்கள், போவான் வருவான் புகுவான் புறப்படுவான் ஆவான் இவான் அவான்—, ஆம் - ஆகும், எ - று.

திருமலைராயன் கையிலுள்ள வீரவாளேவாளாகும், மற்றையர்கையிலுள்ள வாட்களெல்லாம் போவான் வருவான் முதலியவாகப் பரிகசித்தற்குரியனவேயாமென்பது கருத்து.

ஒருவர் சிவன், முருகன், விநாயகன், திருமால், சிவனடியார், இவர்களுக்குத் தனித்தனியே ஆறுதலையுண்டென்று சொன்னயம் வைத்துப் பாடுகவெனப் பாடியது.

32. சங்கரற்குமாறுதலைசண்முகற்குமாறுதலை
ஐங்கரற்குமாறுதலையானதே - சங்கைப்
பிடித்தோர்க்குமாறுதலைபித்தாநின்பாதம்
படித்தோர்க்குமாறுதலைபார்.

இ - ள். சங்கரற்கும் ஆறுதலை - சிவபெருமானுக்கும் கங்காநதி சிரசில் உண்டு, சண்முகற்கும் ஆறுதலை - முருகக்கடவுளுக்கும் ஆறுசிரங்கள் உண்டு, ஐங்கரற்கு மாறுதலை - ஐந்துகைகளையுடையவராகிய விநாயகருக்கு மாறுபட்ட யானைததலையுண்டு, சங்கைப்பிடித்தோர்க்கும் ஆறுதலை - சங்கத்தைக் கையிற் பற்றியிருப்பவராகிய திருமாலுக்கும் பிரளயவெள்ளம் உறைவிடமாகும், பித்தா- பித்தனே (பரமசிவனே), நின்பாதம்படித்தோர்க்கும் ஆறு தலை - உன் திருவடியைத் துதித்தோர்க்கும் மனோதுக்கங்கள் தணிதலுண்டு, பார் - நோக்கு, எ-று.

திருமால் பிரளயவெள்ளத்தில் ஆலிலைமேல் பள்ளிகொள்பவராதலால் சங்கைப்பிடித்தோர்க்கு மாறுதலை என்றார். ஆறு - நதி, அது இங்கு பிரளயவெள்ளத்துக்காயிற்று. தலை - இடம்.

திருக்காளத்தி நாதர்மீது பாடியது.

33. முக்கண்ணனென்றரனைமுன்னோர்மொழிந்திடுவர்
அக்கண்ணற்குள்ளதரைக்கண்ணே - மிக்க
உமையாள்கண்ணென்றரைமற்றூன்வேடன்கண்ணொன்
றமையுமிதனாலென்றறி.

இ - ள். முக்கண்ணன் என்று-மூன்று கண்களை யுடையனென்று, அரனை-சிவபெருமானை, முன்னோர் மொழிந்திடுவர் - முன்னோர் சொல்லுவர், அக்கு அண்ணற்கு உள்ளது அரைக்கண்ணே - அக்குமாலையையணிந்த பெரியோனுக்கு உள்ளது அரைக்கண்ணேயாம், (எப்படியெனின்) மிக்க உமையாள்கண் ஒன்றரை - மேலாகிய உமையவளுடையகண் ஒன்றரையாம், மற்று - பின்னும், ஊன்வேடன் கண் ஒன்று - ஊன் வடிகின்ற வேடனது கண் ஒன்றாம், இதனால் அமையும் என்று அறி - இந்த விருத்தாந்தத்தால் இந்தக்கட்சி அமைவுபெறும் என்றுணர்வாயாக, எ - று.

அர்த்தநாரீச்சுரனுக்குக்கால் ஒன்றரைக்கண் உமாதேவிக்குரியதாதலாலும், ஒருகண் கண்ணப்பநாயனார் அப்பினதாதலாலும் இவ்வாறு கூறப்பட்டது.

காஞ்சீபுரத்தில் ஏகாம்பரநாதனைக் கனவிற்கண்டு அசதியாடிய ஒரு பெண்ணின் கூற்றாகப்பாடியது. (அசதி - பரிகாசம்.)

34. நேற்றிராவந்தொருவனித்திரையிற்கைப்பிடித்தான்
வேற்றூரானென்றுவிடாயென்றேன் - ஆற்றியே
கஞ்சிகுடியென்றான்களித்தின்றுபோவென்றேன்
வஞ்சியரேசென்றான்மறைந்து.

இ - ள். வஞ்சியரே - பூங்கொடிபோன்ற தோழிகளே, ஒருவன் நேற்று இராவந்து - ஒருவன் நேற்றிரவில்வந்து, (என்) நித்திரையில் கைபிடித்தான் - நித்திரையிற் கையைப்பிடித்தான், வேறு ஊரான் என்று - (அவன்) அயலூரானென்று நினைத்து, விடாய் என்றேன் - (என்கையை) விடாய் என்றேன், (விடாய் என்றதை அவன் எனக்கு விடாயுண்டாயிருப்பதாக நினைத்து) ஆற்றி கஞ்சிகுடி என்றான்-வெப்பம்தணித்துக் கஞ்சிகுடியென்றான், (அதனால் இவன் கச்சித்திருப்பதியையுடைய ஏகாம்பரநாதன் என்றுதெளிந்து) இன்று களித்து போ என்றேன் - இன்று என்னைக்கலந்து சுகித்திருந்து நாளைபோவென்றேன், மறைந்துசென்றான் - (உடனே) மறைந்துபோனான், எ - று.

கஞ்சிகுடி, களித்தின்று, என்பவற்றிற்கு முறையே கஞ்சியைக்குடிப்பாய் என்றும், களியைத்தின்று என்றும் வேறுமொருபொருள் தோன்றுமாறுகாண்க.

ஒருவர் முகுந்தனுக்கும் - முறத்துக்கும் சிலேடையாய்ப்
பாடவேண்டுமெனப் பாடியது.

35. வல்லரியாயுற்றிடலான்மாதர்கையிற்பற்றிடலால்
சொல்லரியமாப்புடைக்கத்தோன்றுதலால்-வல்லோர்
அகந்தனிலேவாழ்தலாலன்றுலகளந்த
முகுந்தனுமேயாகும்முறம்.

இ - ள். அன்று - (த்ரிவிக்கிரமனான) அக்காலத்தில், உலகு அளந்த - உலகத்தைத்தனது திருவடியாலளந்த, முகுந்தனும் - திருமாலும், முறம்ஆகும்- முறத்துக்கு நிகராவன்.

முகுந்தன்.

வல் அரி ஆய் உற்றிடலால் - வலிய நரசிங்கமாய்த் தோன்றுதலால், மாதர் கையின் பற்றுதலால் - ஆய்ச்சியர் கையாற் பற்றப்படுதலால், சொல் அரிய மா புடைக்க தோன்றுதலால் - (வலியின் நிலைமை யிவ்வளவென்று) சொல்லுதற் கரிய (குவலயாபீடம் என்னும்) யானையை அழிக்கக் கண்ணனாய் அவதரித்த லால், வல்லோர் அகந்தனிலே வாழ்தலால் - (தன்னை நினைய) வல்லாரது மனத்தின்கண்ணே உறைதலால்.

மாதர்கையிற்பற்றினது - உரலிற் கட்டுதல், குரவைக்கூத்தாடுதல் முதலிய வற்றிற்கு. குரவைக்கூத்து - கைகோத்தாடல்.

முறம்.

வல் அரி ஆய் உற்றிடலால் - விரைவில் அரிசியைக் கல்முதலியவையில் லாமல் ஆராயுந்தொழிலைப் பொருந்துதலால், மாதர்கையில் பற்றுதலால் - பெண்கள் கையிலேந்துதலால், சொல் அரியமாபுடைக்கத் தோன்றுதலால் - (அள வு) சொல்லுதற்கரிய மாவைப் புடைத்தெடுத்தற்குக் கருவியா யுண்டாயிருத்த லால், வல்லோர் அகந்தனிலே வாழ்தலால்-இல்வாழ்க்கையில் வல்லோரது வீடு களிலிருத்தலால், எ - று.

ஒருவர் ஆட்டுக்கும் - கதவுக்கும் சிலேடையாய்ப்
பாடவேண்டுமெனப் பாடியது.

36. செய்யுட்கிடைமறிக்குஞ்சேர்பலகையிட்டுமுட்டும்
ஐயமறமேற்றாளடர்க்குமே - துய்யநிலை
தேடும்புகழ்சேர்திருமலைராயன்வரையில்
ஆடுங்கதவுநிகராம்.

இ - ள். புகழ்சேர் - கீர்த்திபொருந்திய, திருமலை ராயன்வரையில் - திருமலைராயனது மலையகத்தில், ஆடும் கதவும் நிகர்ஆம் - ஆடும் கதவும் ஒன்றற் கொன்று சமானமாகும்.

ஆடு.

செய் உள்கிடைமறிக்கும் - வயலில் (எருவின்பொருட்டு) கிடைமறிக்கப் படும், சேர் பலகையிட்டு முட்டும் - பொருந்திய பலகைகளைக் கொம்பினாற்குத் திமுட்டும், ஐயம் அறமேல்தாள் அடர்க்கும் - சந்தேகமற மிகுதியாகிய ஊக்கத் தோடு போர்புரியும், துய்யஇலைதேடும் - பரிசுத்தமான இருக்கையைத்தேடும்.

கதவு.

செய் உள் இடைமறிக்கும் - வீட்டுக்கிடையே யிடப்பட்டு வருவோரைத் தடுக்கும், சேர்பலகையிட்டு முட்டும் - ஒன்றற் கொன்று பொருத்தமான பல கைகளைக்கொண்டு மூட்டிச்செய்யப்படும், ஐயம் அறமேல் தாள் அடர்க்கும் - (யாரேனும் நுழைவார் என்கிற) சந்தேகம் நீங்கத்தான் மூடப்பட் டிருப்பதன் றித் தன்மீது தாளிடப்பட்டிருக்கும், துய்யஇலைதேடும் - அழகாகிய வாசற்காலை விரும்பும், எ - று.

செய் உள் - செய்யப்பட்ட உள்ளிடம் (அதாவது வீடு). மூட்டும் என்பது, முட்டும்எனக் குறுக்கலாயிற்று.

ஒருவர் சிதம்பரதேவ என்றது ஒரு வெண்பாவில் நான்குதரம் வரப் பாடுகவெனப் பாடியது.

37. அரகரதிருச்சிற்றம்பலவாணவர்
தரரூபமகேசசிதம் - பரதே
வசிதம்பரதேவசிதம்பரதே
வசிதம்பரதேவனே.

இ - ள். அரஅர - ஹரஹர, திருச்சிற்றம்பலவாண - திருச்சிற்றம்பலத் தில் வாழ்வோனே, அந்தரரூப - ஆகாய வுருவத்தை யுடையவனே, மகேச - மஹேச்சுரனே, சிதம்பரதேவ - சிதாகாயத்திலுள்ள தேவனே, சிதம்பர தேவ சிதம்பரதேவ சிதம்பரதேவனே, எ - று.

அரன் - சங்கரிப்பவன். திருச்சிற்றம்பலம் - அழகிய சிற்சபை, இதுசித்தம் பலத்தின் மரூஉ. வாழ்நா என்பதுவாணஎன மரூஉவாயிற்று. மகேசன் பெரு ஞ்செல்வத்தை யுடையவன்.

ஒருவர்-ஒரு அழகாகிய பெண்ணைப்பார்த்து வியந்து ராமாராமா, கோவிந்தா, வேங்கடவா, நாராயணு என்று ஒருவிடன் பாடியதாகப் பாடுக வெனப் பாடியது.

38. இந்தோதிலகநுதல்ராமராமாவனசக்
கொந்தோகளபமுலைகோவிந்தா - சந்தமுறும்

வேலோவிணைவிழிகள்வேங்கடவாநல்லவயி
றாலோகாணாராயணா.

இ - ள். ராமராமா—, (இந்தமாதுக்கு) திலகம் நுதல் இந்தோ - பொட்டணிந்த நெற்றி அஷ்டமீசந்திரனோ, கோவிந்தா—, கள்பமுலை வனசம் கொந்தோ-கலவைச்சந்தநமணிந்த தனங்கள் தாமரையரும்புகளோ, வேங்கடவா—, இணை விழிகள் சந்தம் உறும்வேலோ - இருவிழிகளும் அழகுமிகுந்த வேல்களோ, நாராயணா—, நல்லவயிறு ஆலோ - அழகிய வயிறு ஆலிலையோ, எ-று.

காண் - அசை. இந்து-சந்திரன், இங்குநெற்றிக் குவமை யாயினமையால் அஷ்டமீ சந்திரனெனப் பொருள் கூறப்பட்டது.

ஒருவர் கின்னரிவாசிக்குங் கிளியெனப் பாடுகவெனப் பாடியது.

39. ஆடல்புரிந்தானென்றுமந்நாளிலேமூவர்
பாடலுகந்தானென்றும்பான்மையினால் - கூடலிலே
நன்னரிவாசிக்கு நடைபயிற்றினானென்றும்
கின்னரிவாசிக்குங்கிளி.

இ - ள். கிளி - கிளியானது, ஆடல் புரிந்தான் என்றும் - திருவிளையாடல்களைச் செய்தவனேயென்றும், அந்நாளிலே மூவர்பாடல் உகந்தான் என்றும் - அக்காலத்தில் மூவர்பாடலை யுகந்தருளி னவனேயென்றும், பான்மையினால் கூடலிலே நல்நரிவாசிக்கு நடைபயிற்றினான் என்றும் - (அன்பர்க் கெளியனாகும்) குணத்தினால் திருவாலவாயில் நல்லநரிகளாகிய குதிரைகளுக்கு நடைகற்பித்தவனே யென்றும் (புகழ்ந்துபாடி), கின்னரி வாசிக்கும் - கின்னரியை வாசித்துக் கொண்டிருக்கும், எ - று.

ஆடல் - மதுரையிற்செய்த அறுபத்து நான்கு திருவிளையாடல்கள். மூவர்பாடல் - அப்பர், சுந்தரர், திருஞானசம்பந்தர் என்னும் மூவரும் பாடிய தேவாரம். கூடல் - மதுரைநகர். நன்னரிவாசிக்கு நடைபயிற்றினது திருவிளையாடற் புராணம் நரிபரியாக்கிய படலத்தினால்அறிக. கின்னரி - ஓர்வகைவீணை.

கச்சிக்காவலன் என்பவரோருவர் செங்கழுநீர் கிழங்கென்று பாடவேண்டுமெனப் பாடியது.

40. வாதமணரேறியதுமாயன்றுயின்றதுவும்
ஆதிதடுத்தாட்கொண்டவவ்வுருவும் - சீதரனார்
தாள்கொண்டளந்ததுவுந்தண்கச்சிக்காவலா
கேள்செங்கழுநீர்க்கிழங்கு.

இ - ள். தண்கச்சிக்காவலாகேள் - சாந்தகுணத்தையுடைய கச்சிக்காவலனே நீ கேட்பாயாக, வாது அமணர் ஏறியதும் - (திருஞானசம்பந்த சுவாமிகளோடு) வாதுசெய்த சமணர்கள் தோற்றுஏறியதும், மாயன் துயின்றதுவும்-திரு

இ - ள். வெளிப்படை.

ஒருவர் கும்பகோணத்தின் சின்னங்களை ஒரு வெண்பாவி லமைத்துப் பாடுகவெனப் பாடியது.

46. திருக்குடந்தையாதிகும்பேசர்செங்கா
மரைக்குளங்கங்கைமகங்கா - விரிக்கரையின்
ஓரங்கீழ்க்கோட்டங்காரோணமங்கைநாயகியார்
சாரங்கபாணிதலம்

இ - ள். வெளிப்படை.

ஒருவர் திருவண்ணாமலையில், உண்ணாமுலையம்மையார் கோயில் ஸ்தானிகனாகியசம்பந்தாண்டான் என்பவன் அம்பட்டனிடத்தில் தன்தலைமுழுக்க மொண்டிதமாகச் சௌளம் பண்ணிக்கொள்ளும் சமயத்தில் இவர் அவ்விடம்போனார். அப்பொழுது அவன் இவரைக்கண்டு மரியாதைசெய்யாமல், வித்தியா கர்வத்தினால், இந்தஸ்தலத்தின் பெயரும், என்பெயரும், நான் சௌளம்செய்து கொள்வதும்ஒருவெண்பாவில்அமைத்து, மன்னென்று எடுத்து, மலுக்கு என்று முடிக்க வேண்டுமென்றுசொல்ல, இவர் அவனை ஒரு பொருளாகமதியாமல், இவனைப்பரிஹசிப்பதே தகுதியென்றுநினைத்து, அவன் கேட்ட கேள்வியின்படியேயன்றி அவன் சௌளம்பண்ணுவித்துக் கொள்வதற்குக் காரணமும் கற்பித்து வினாவிடையாகப் பாடின விருத்தாந்தத்தை ஒரு வெண்பாவி லமைத்துப் பாடுகவெனப் பாடியது.

47. மன்னுதிருவண்ணாமலைச்சம்பந்தாண்டாற்குப்
பன்னுதலைச்சவரம்பண்ணுவதேன் - மின்னின்
இளைத்தவிடைமாதரிவன்குடுமிபற்றி
வளைத்திழுத்துக்குட்டாமலுக்கு.

இ - ள். மன்னு திருவண்ணாமலை - நிலைபெற்ற திருவண்ணாமலையிலுள்ள, சம்பந்தாண்டாற்கு - சம்பந்தாண்டான் என்பவனுக்கு, பன்னு தலைச்சவரம் பண்ணுவது ஏன் - சொல்லப்பட்ட தலைச்சவரம் பண்ணுவது யாதுக்கு.

(இது வினா.)

மின்னின் இளைத்த இடை-மின்னற்கொடியினும் மெலிந்த (நுட்பமாகிய) இடையையுடைய, மாதர்-பெண்கள், இவன்குடுமிபற்றி - இவன் குடுமியைப் பிடித்து, வளைத்து இழுத்துக்குட்டாமலுக்கு - வளைத்திழுத்துக் குட்டாதிருத்தற்பொருட்டு, எ - று.

(இது விடை)

குடுமி பற்றிவளைத் திழுத்துக் குட்டுதல் ஊடற்காலத்தில்.

ஒருவர் சோ கா மா ஏ வா தா என்று பாடுகவெனப் பாடியது.

48. சோ கா மா ஏ வா தா சொல்லின்மனைக்கூட்டியுமை
பாகார்ந்ததில்லைப்பரமேசர் - வாகாய்த்
தரித்தாரெரித்தார்தறித்தாருதைத்தார்
உரித்தார்கணைபடைத்தாரூர்க்கு

இ - ள். உமை பாகு ஆர்ந்த தில்லைப் பரமேசர் - உமாதேவியை இடப்பாகத்திற் பொருந்தியிருக்கிற தில்லைப் பரமசிவனவர், சோகாமா ஏவாதாசொல்லில் - சோ, கா, மா, ஏ, வா, தா, என்னுஞ் சொற்களினிறுதியில், மன்னைக்கூட்டி - மன் என்பதனைச் சேர்த்து, (இந்தச் சொற்பொருள்களைமுறையே) வாகு ஆய்த்தரித்தார் - அழகாகத்தரித்தார், எரித்தார் - தகித்தார், தறித்தார் - கொன்றார், உதைத்தார் - காலாலுதைத்தார், உரித்தார் - தோலுரித்தார், ஊர்க்குகணை படைத்தார் - முப்புரங்களை யழித்தற் பொருட்டு அம்பாகக்கொண்டார், எ-று

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சோமன், | காமன், | மாமன், | ஏமன், | வாமன், | தாமன், |
| சந்திரன், | மன்மதன், | தக்கன், | யமன், | வாமநன் | திருமால், |

ஒருவர் கொட்டைப்பாக்கு என்று தொடங்கிக் களிப்பாக்கு என்றுமுடிக்க வேண்டுமென அவ்வாறேபாடியது.

49. கொட்டைப்பாக்குமொருகண்கூடையைப்பாக்கும்மடியில்
பிட்டைப்பாக்குப்பாகம்பெண்பாக்கும் - முட்டநெஞ்சே
ஆரணனுநாரணனுமாதிமறையுந்தேடும்
காரணனைக்கண்டுகளிப்பாக்கு.

இ - ள். நெஞ்சே - மனமே, கொட்டைப்பாக்கும் - மண்வெட்டியை நோக்குவோனும், ஒருகண் கூடையைப்பாக்கும் - ஒருகண்ணினால் கூடையைநோக்கு வோனும், மடியில் பிட்டைப்பாக்கும் - தன் மடியிலுள்ள பிட்டினைநோக்குவோனும், பாகம் பெண்பாக்கும் - தன் இடப்பாகத்திலுள்ள உமாதேவியை நோக்குவோனும், முட்ட - முழுதும், ஆரணனும் நாரணனும் ஆதிமறையும் தேடும் - பிரமனாலும் விஷ்ணுவினாலும் பழமையாகிய வேதங்களாலும் தேடப்படுவோனுமாகிய, காரணனை-சர்வகாரணனாகிய பரமசிவனை, கண்டு-தரிசித்து, களிப்பு ஆக்கு - மகிழ்தலைச்செய், எ - று.

களிப்பாக்கு - களிக்க என வினையெச்சமாக்கி, பாக்கும் என்னும் வினைமுற்றுக்க ளோடியைப்பினும் பொருந்தும். களிக்க என்றது மதுரையில் வையையாற்றங்கரையில் செம்மனச் செல்வியிட்ட பிட்டின்பொருட்டு மண்சுமக்கவந்த காலத்தில் அங்கிருந்தார்களிக்க என்றபடி. பாக்கும் - பார்க்கும் என்பதன் மரூஉ.

ஒருவர் கரியென்று தொடங்கி உமியென்று முடிக்கவேண்டுமென அவ்வாறே பாடி முடித்தது.

50. கரியதனையேயுரித்தகையாவளையேந்
தரியயற்குமெட்டாதவையா - பரிவாக
அண்டரெல்லாங்கூடியமுதங்கடைந்தபொழு
துண்டநஞ்சையிங்கேயுமி.

இ - ள். கரியதனையே உரித்தகையா - யானையை யுரித்தகையனே, வளையேந்து அரி அயற்கும் எட்டாத ஐயா-சங்கத்தை யேந்தினதிருமாலுக்கும் பிரமனுக்கும் எட்டாத ஐயனே, அண்டர் எல்லாம் - தேவர் எல்லாரும், பரிவாகக்கூடி-விருப்பமாகக்கூடி, அமுதம் கடைந்த பொழுது - திருப்பாற்கடலில் அமுதத்தின் பொருட்டுக்கடைந்த காலத்தில், உண்ட நஞ்சை-உண்டவிஷத்தை, இங்கே உமி - இவ்விடத்தில் உமிழ்ந்துவிடு, எ - று.

ஐயா என்பதற்கு அழகனே யென்றும், தெய்வத்தன்மை யுள்ளவனேயென்றும் உரைக்கலாம், ஐ-அழகு.

ஒருவர் இவர் அத்தைமகள் சமைத்தகறிவகைகளில் உப்பு அதிகரித்திருந்ததைக் குறித்துப் பாடியதாய்ப் பாடுகவெனப் பாடியது.

51. கரிக்காய்பொரித்தாள்கன்னிக்காயைத்தீத்தாள்
பரிக்காயைப்பச்சடியாப்பண்ணினாள் - உருக்கமுள்ள
அப்பைக்காய்நெய்துவட்டலாக்கினாளத்தைமகள்
உப்புக்காண்சீசீயுமி.

இ - ள். அத்தைமகள் - அத்தைமகளானவள், கரிக்காய் பொரித்தாள் - கரிக்காயைப் பொரித்தாள், கன்னிக் காயைத்தீத்தாள் - கன்னிக்காயை வறுத்தாள், பரிக்காயை பச்சடியாப் பண்ணினாள் - பரிக்காயைப் பச்சடியாகச் செய்தாள், உருக்கம் உள்ள அப்பைக்காய் நெய்துவட்டல் ஆக்கினாள் - (எனக்கு) பிரீதியான அப்பைக்காயை நெய்துவட்டல் ஆக்கினாள், (ஆயினும்) உப்பு-உப்பு மிகுதியாயிற்று, (ஆதலால்) சீசீ உமி - சீசீ உமிழ்ந்துவிடு, எ - று.

கரி - யானை, இதற்குப் பரியாயம் அத்தி ஆதலால் கரிக்காய் என்றது அத்திக்காயை.

கன்னி - தெய்வப்பெண், இவளுக்குப்பரியாயம் அரம்பை - அரம்பை-வாழை ஆதலால், கன்னிக்காய் என்றது வாழைக்காயை.

பரி - குதிரை, இதற்குப்பரியாயம் மா ஆதலால், பரிக்காய் என்றது மாங்காயை.

பை - படம், இதுபடத்தை யுடைய பாம்புக்காயினமையால் சினையாகு பெயர். பாம்பில் கத்தரி என்பது ஓர் வகைப்பாம்பு ஆதலால் அப்பைக்காய் என்றது அந்தக் கத்தரிக்காயை.

ஒருவர் சீத்துப்பூத்தென்று ஒரு வெண்பாவி லமைத்துப்

பாடுகவெனப் பாடியது.

ருஉ. *அப்பூருஞ்செஞ்சடைமேலம்புலியைப்பார்த்துப்பார்த்*
*தெப்போதுஞ்சீத்துப்பூத்தென்னவே - முப்போதும்*
*வாலங்காட்டாநிற்றும் வாயங்காவா நிற்கும்*
*ஆலங்காட்டான்பூணரா.*

இ - ள். ஆலங்காட்டான்-திருவாலங்காட்டில் வாழ்பவனாகிய பரமசிவன், பூண் - (ஆபரணமாகத்) தரித்த, அரா - பாம்பானது, அப்புஊரும் - கங்கை தங்கிய, செஞ்சடைமேல் - செஞ்சடையிலுள்ள, அம்புலியை-சந்திரனை, பார்த்து பார்த்து - நோக்கி நோக்கி, எப்போதும் - எப்பொழுதும், சீத்துப் பூத்து என்ன - சீத்துப்பூத்தென்று, முப்போதும்-முக்காலத்திலும், அங்குவால் ஆட்டாநிற்கும் - அவ்விடத்துத் தன்வாலையசையாநிற்கும், வாய் அங்காவா நிற்கும்- வாயைத் திறவாநிற்கும், எ - று.

ஒருவர் என்னையிடுக்கடி, பாயைச்சுருட்டடி, ஏகடியம்பலத்தே என்று

பாடுகவெனப் பாடியது.

ருங. *தடக்கடலிற்பள்ளிகொள்வோமிதனைநற்சங்கரனார்*
*அடற்புலிக்குட்டிக்களித்தனராமதுகேட்டுநெஞ்சில்*
*நடுக்கம்வந்துற்றதுகைகாலெழாநளினத்தியென்னை*
*இடுக்கடிபாயைச் சுருட்டடியேகடியம்பலத்தே.*

இ - ள். தடக்கடலில் விசாலமாகிய இந்தக்கடலில், பள்ளிகொள்வோம்-(இதுவரையில்) உறங்காநின்றோம், (இப்போது) இதனை-இந்தக்கடலை, நல்சங்கரனார் - நன்மையுள்ள சிவபெருமானானவர், அடல் புலிக்குட்டிக்கு-வலியுள்ள புலிக்குட்டிக்கு, அளித்தனராம் - கொடுத்தனராம், அதுகேட்டு - அந்தச் செய்தியைக்கேட்டு, நெஞ்சில் நடுக்கம் வந்து உற்றது - மனத்தில் நடுக்கம் வந்தடைந்தது, கைகால் எழா - கை கால்கள் எழாவாயின, (ஆதலால்) நளினத்தி - கமலாஸனையாகிய திருமகளே, என்னை இடுக்கடி - என்னைக்கக்கத்தில் இடுக்கிக்கொள்ளடி, பாயைச் சுருட்டடி - பாம்பணையைச் சுருட்டிக்கொள்ளடி, அம்பலத்து ஏகடி - அம்பலத்திற் செல்லடி, எ - று.

புலி-கௌதமர், புலிக்குட்டி - உபமந்யர்.

**ஒருவர் பன்றிக்குமார்பிலே கொம்புமுளைத்தது என்று பாடுகவெனப் பாடியது.**

54. *தெருமுட்டப்பாளைசிதறவளர்பூகத்*
*தருமுட்டச்செவ்வாளைதாவும் - திருமுட்டத்*
*தூரிலேகண்டேனொருபுதுமைபன்றிக்கு*
*மாரிலேகொம்பானவாறு.*

**இ - ள்.** தெருமுட்ட - தெருக்கள் முழுதும், பாளைசிதற - பாளைகள் சிதறும்படி, வளர் - வளர்ந்த, பூகத்தருமுட்ட - கமுகமரங்கள்தோறும், செவ்வாளைதாவும் - செவ்வாளைமீன்கள் குதிக்கின்ற, திருமுட்டத்தூரிலே - திருமுட்டத்தூரில், ஒரு புதுமைகண்டேன் - ஒரு அற்புதத்தைக்கண்டேன், (என்னையெனின்) பன்றிக்கு மாரிலேகொம்பு ஆனஆறு - பன்றிக்குமார்பில் கொம்புண்டாயிருக்கும் விதமேயாம், எ - று.

பன்றி - பூவராஹஸ்வாமி யென்னுந் திருமால். கொம்பு - அவரது திருமார்பிலுள்ள பூங்கொம்புபோல் பவளாகிய திருமகள்.

**ஒருவர் குரங்கென்று தொடங்கி இடமென்றுமுடிக்க வேண்டுமென அவ்வாறேபாடியது.**

55. *குரங்கனலில்வீழ்ந்துவெறிகொண்டுதேள்கொட்டக்*
*கரஞ்செறியப்பாம்பலவன்கவ்வ - விரைந்துபேய்*
*பற்றவேகள்ளுண்டுபச்சைமிளகைக்கடித்தால்*
*எத்தனைபார்சேட்டைக்கிடம்.*

**இ - ள்.** குரங்கு - ஒரு குரங்கானது, அனலில் வீழ்ந்து - நெருப்பில்விழுந்து, வெறிகொண்டு - பித்துப்பிடித்து, தேள்கொட்ட - தேள் கொட்டவும், பாம்பு கரம் செறிய - பாம்புகையிற் சுற்றிக்கொள்ளவும், அலவன்கவ்வ - நண்டு கவ்விக்கொள்ளவும், விரைந்துபேய்பற்ற - விரைவாகப் பேய்பிடிக்கவும், கள் உண்டு - கள்ளைக்குடித்து, பச்சைமிளகைக்கடித்தால் - பச்சைமிளகையும் கடிக்குமாயின், சேட்டைக்கு இடம் எத்தனைபார் - (அதனது) சேஷ்டைகளுக்கு இடமாவன எத்தனை நீயேபார், எ - று.

**கும்பகோணத்தில் ஒருசமாராதனையில் காளமேகம் உண்ணும்போது, இவருக்கெதிரிலிருந் துண்ணும் ஒரு சோழியப்பிராமணன் குடுமி அவிழ்ந்து இலையில்விழுந்தது அவன் அதையெடுத்து உதறினன், எச்சிற் சோறு காளமேகம் இலையில்விழுந்தது அதைக்குறித்துக் கோபித்துப் பாடியது.**

56. *சுருக்கவிழ்ந்தமுன்குடுமிச்சோழியாசோற்றுப்*
*பொருக்குலர்ந்தவாயாபுலையா - திருக்குடந்தைக்*

கோட்டானேநாயேகுரங்கேயுனையொருத்தி
போட்டாளேவேலையற்றுப்போய்.

இ - ள். சுருக்கு அவிழ்ந்த - முடிச்சவிழ்ந்த, முன்குடுமிசோழியா - முன்குடுமியையுடைய சோழியனே, சோற்றுப்பொருக்கு உலர்ந்தவாயா - சோற்றுப்பருக்கை யுலர்ந்தொட்டியிருக்கிற வாயையுடையவனே, புலையா-நீசனே, திருக்குடந்தைக்கோட்டானே - திருக்குடந்தையிலுள்ள கோட்டானே, நாயே - சுநகமே, குரங்கே - வாநரமே, ஒருத்தி - ஒருமாது, வேலை அற்றுப்போய்-வேலையற்றவளாகி, உன்னை போட்டாளே - உன்னையும் ஒருபிள்ளையாக ஈன்றாளே (என்னபாவம்) எ - று.

போட்டாள் என்றது பன்றி நாய்முதலியவை குட்டி போடுதல்போல உன்னையும் போட்டாள் என்றிழித்துக் கூறியவாறு, கோட்டான் - ஓர்பறவை.

காஞ்சீபுரம்வரதராஜர் கருடோற்சவத்தைச்சேவித்துநிந்தாஸ்துதியாகப்பாடியது.

57. பெருமாளுநல்லபெருமாளவர்தம்
திருநாளுநல்லதிருநாள் - பெருமாள்
இருந்திடத்திற் சும்மாவிராமையினாலையோ
பருந்தெடுத்துப்போகிறதைப்பார்.

இ - ள். பெருமாளும் நல்லபெருமாள் - பெருமாளும் நல்ல பெருமாளே, அவர்தம் திருநாளும் நல்லதிருநாள், அவரது திருநாளும் நல்லதிருநாளே (ஆயினும்) பெருமாள் - பெருமாளானவர், இருந்த இடத்தில் சும்மா இராமையினால் - தாமிருந்த இடத்திற்றானே சும்மா இராமையால், ஐயோ - அந்தோ, (அவரை) பருந்து எடுத்துப் போகிறதைப்பார் - பருந்தெடுத்துக்கொண்டு போவதைப்பார், எ - று.

பருந்து - ஓர்பறவை. அது பெருமாளை எடுத்துப்போகிறது என்றமையால் கருடனை யுணர்த்திற்று.

தில்லைச்சபாநாயகர் உற்சவத்தைத்தரிசித்து நிந்தாஸ்துதியாகப் பாடியது.

58. நச்சரவம்பூண்டதில்லைநாதரேதேவரீர்
பிச்சையெடுத்துண்ணப்புறப்பட்டும் - உச்சிதமாம்
காளமேன்குஞ்சரமேன்கார்க்கடல்போற்றான்முழங்கும்
மேளமேன்ராஜாங்கமேன்.

இ - ள். நச்சு அரவம் பூண்ட - விஷத்தையுடைய பாம்பை ஆபரணமாயணிந்த, தில்லை நாதரே - தில்லைநாயகரே, தேவரீர் பிச்சையெடுத்து உண்ணப் புறப்பட்டும் - தேவரீர் பிட்சையேற்றுண்ண வெளிப்பட்டும், (உமக்கு) உச்சிதம் ஆம்காளம் ஏன்-மேன்மையாகிய திருச்சின்னம் யாதுக்கு, குஞ்சரம் ஏன் - யானை

யாதுக்கு, கார்கடல் போலே முழங்கும் மேளம் ஏன் - கார்காலத்திற் கடல் முழக்கம்போல முழங்குகின்ற மேளம்யாதுக்கு, ராஜாங்கம் ஏன்-(மற்றுமுள்ள) ராஜசின்னங்கள் யாதுக்கு, எ - று.

**நாகபட்டணம் காத்தான் வருணகுலாதித்தன் சத்திரத்தில் காளமேகப்புலவர் சாப்பிட்டபோது பாடியநிந்தையும், காத்தான் வேண்டுகோளுக்கிரங்கி அதையே துதியாகவும் பாடியது.**

கத்துகடல்சூழ்நாகைக்காத்தான்றன்சத்திரத்தில்
அத்தமிக்கும்போதிலரிசிவரும் - குத்தி
உலையிலிடவூரடங்குமோரகப்பையன்னம்
இலையிலிடவெள்ளியெழும்.

**இ - ள்.** கத்து கடல்சூழ் - முழங்குகின்ற கடல்சூழ்ந்த, நாகை - திருநாகையிலுள்ள, காத்தான் தன்சத்திரத்தில் - காத்தான் சத்திரத்தில், அத்தமிக்கும்போதில் அரிசிவரும் - சூரியன் அஸ்தமிக்குஞ் சமயத்தில் அரிசிவருகின்றது, குத்தி உலையில் இட ஊர் அடங்கும் - குத்தி உலையிற் போடுங்காலத்தில் ஊர் அரவமடங்கிப்போம், ஓர் அகப்பை அன்னம் இலையில் இட வெள்ளி எழும்- ஒரு அகப்பை அன்னத்தை இலையிற் பரிமாறும்போது சுக்ரோதயமுண்டாகும், எ - று.

நாகை - நாகபட்டணம்.

**மதுரைமீனாக்ஷியம்மை அன்னவாகனத்திலேறிவருவதைச் சேவித்து நிந்தாஸ்துதியாகப் பாடியது.**

60. மாயனார்போற்றுமதுராபுரிச்சொக்க
நாயனார்பித்தேறினாரென்றே - நேயமாம்
கன்னன்மொழியங்கயற்கட்காரிகையாளையையோ
அன்னமிறங்காமலிருந்தாள்.

**இ - ள்.** மாயனார்போற்றும் - திருமாலானவர் வணங்குகின்ற, மதுராபுரி சொக்கநாயனார் பித்தேறினார் என்றே - மதுராபுரிச் சொக்கநாதக்கடவுள் பித்தேறப் பெற்றாரென்று நிச்சயித்தே, நேயம் ஆம் - (அவரிடத்து) அன்புள்ள, கன்னல்மொழி - கருப்பஞ்சாறுபோலும் இனிய மொழியையுடைய, அங்கயற் கண்காரிகையாள் - அங்கயற் கண்ணம்மையானவள், ஐயையோ - அந்தோ அந்தோ, அன்னம் இறங்காமல் இருந்தாள்-உணவிறங்காமல் இருக்கின்றாள், எ-று.

(அன்னவாகநம்) அன்னம்-சோறு ஓர்பறவை.

[illegible] வெக்கக்குறிப்பு. அங்கயற்கட்காரிகை மீனாக்ஷியம்மை.

### காஞ்சீபுரம் வரதராஜரது யானைவாகந உற்சவத்தைச் சிறப்பித்துப் பாடியது.

61. கட்டொருமாவெண்காணிமீதேயிருந்தகலை
பட்டொருமாநான்மாவிற்பாய்ந்ததே - சிட்டர்தொழும்
தேவாதிதேவன் திருவத்தியூர்வரதன்
மாவேறிவீதிவரக்கண்டு.

**இ - ள்.** சிட்டர் தொழும் - பேரறிவினையுடையோர் வணங்குகின்ற, தேவாதிதேவன் - தேவர்களுள் முதன்மையாகிய தேவனும், திருவத்தியூர்வரதன்- ஸ்ரீஹஸ்திகிரியை இடமாகவுடையவனுமாகிய வரதராஜன், மா ஏறி - குதிரைமீதேறி, வீதிவரக்கண்டு - திருவீதியிலெழுந்தருளக்கண்டு, (மையல்மிகுந்து உடம்புமெலிதலால்) எட்டு ஒருமா எண்காணிமீதே இருந்தகலை - அரையிலிருந்த ஆடையானது, பட்டு - அவிழ்ந்து, ஒருமாநால் மாவில்பாய்ந்தது - காலில் விழுந்தது, எ - று.

கலைப்பட்டு-பட்டாடை யெனினுமாம். எட்டு ஒருமாவும் எட்டுக்காணியும் சேர்ந்தால் பத்துமா ஆகும், இது அரையெனப்படும். அரை - இடை. ஒருமாவும் நால்மாவும்சேர்ந்தால் ஐந்துமா ஆகும், இது கால் எனப்படும். கால் - பாதம் அரையிற்கட்டியிருந்த ஆடை நழுவிக் காலில்விழுந்தது என்பதுகருத்து. இது பவனிகண்டழுங்கல் என்னுந்துறை.

### காஞ்சீபுரம் விநாயகர் உற்சவத்தைத் தரிசித்து நிந்தாஸ்துதியாகச் சிறப்பித்துப் பாடியது.

62. மூப்பான்மழுவும்முராரிதிருச்சக்கரமும்
பார்ப்பான்கதையும்பறிபோச்சோ - மாப்பார்
வலிமிகுத்தமும்மதத்துவாரணத்தையையோ
எலியிழுத்துப்போகின்றதென்.

**இ - ள்.** மாபார் - பெரிய பூமியின்கண், வலிமிகுத்த - வலிமைமிகுத்த, மும்மதத்துவாரணத்தை - மும்மதத்தையுடைய யானையை, ஐயோ - அந்தோ, எலி இழுத்துப்போகின்றது - எலியானது இழுத்துக்கொண்டு போகாநின்றது, என் - (இதற்குக்காரணம்) யாது, மூப்பான்மழுவும் - பெரியோனாகிய பரமசிவனது மழுவாயுதமும், முராரிதிருச்சக்கரமும் - திருமாலினது சக்ராயுதமும், பார்ப்பான்கதையும் - வேதியனாகிய பிரமனது தண்டாயுதமும், பறிபோச்சோ- களவுபோயினவோ, (அறியோம்) எ - று.

முராரி - முராசுரனைக் கொன்றவன். பறிபோகா திருந்தால் எலியிழுத்துப் போகாதென்பது கருத்து. மதத்துவாரணம் - விநாயகமூர்த்தி. எலி - மூஷிகம். (பெருச்சாளி.)

கச்சித்திருப்பதியில் ஏகாம்பரநாதரைத் தரிசித்து கிரமாலங்காரமாக முக்கால் முதல் கீழரைவரையுமுள்ள எண்கள் வரும்படி பாடியசிலேடை வெண்பா.

63. முக்காலுக்கேகாமுன்முன்னரையில்வீழாமுன்
அக்காலரைக்கால்கண்டஞ்சாமுன் - விக்கி
இருமாமுன்மாகாணிக்கேகாமுன்கச்சி
ஒருமாவின்கீழரையின்றோது.

இ - ள். (என்வாக்கே) முக்காலுக்கு ஏகாமுன் - மூன்று காலகளைக்கொண்டு நடவாமுன்னமே, முன் நரையில் வீழாமுன் - இனிவரக் கடவதாகிய நரையுளதாவதன்முன்னமே, கால் அக்காலரைக்கண்டு அஞ்சாமுன் - உயிரானது அந்தக்கால தூதரைக்கண்டு அஞ்சாமுன்னமே, விக்கி இருமாமுன் - விக்கலெழுந்து இருமாததற்கு முன்னமே, மாகாணிக்கு ஏகாமுன் - பெரிய இடமாகிய மயானத்திற்குச் செல்லாததற்கு முன்னமே, கச்சி - திருக்கச்சியிலுள்ள, ஒருமாவின்கீழரை - ஒருமாமரத்தின் கீழ் எழுந்தருளியிருக்கின்ற ஏகாம்பரநாதரை - இன்று ஓது - (இளமைப்பருவமுள்ள) இப்பொழுதே துதிசெய், எ - று.

இயற்கையாயுள்ள இரண்டுகால்களோடு ஊன்று கோலையுஞ்சேர்த்து முக்கால் என்றார். கால் - காற்று. அது உயிருக்காயிற்று. முடிமன்ன ரெல்லாரும் போய் அடங்குமிடமாதலால் மயானம் மாகாணியெனப்பட்டது. காணி - இடம்.

திருச்செங்காட்டில் உத்தராபதீசுரரைத் தரிசித்து நிந்தாஸ்துதியாகப் பாடியது.

64. காலனையுங்காமனையுங்காட்டுசிறுத்தொண்டர்தரு
பாலனையுங்கொன்றபழிபோமோ - சீலமுடன்
நாட்டிலேவீற்றிருந்தநாதரேநீர்திருச்செங்
காட்டிலேவீற்றிருந்தக்கால்.

இ - ள். சீலமுடன் - ஒழுக்கத்துடன், நாட்டிலேவீற்றிருந்த நாதரே - (முன்பு) நாட்டில்வீற்றிருந்த இறைவரே, நீர் திருச்செங்காட்டிலே வீற்றிருந்தக்கால்-நீர் (இப்போது இந்தத்) திருச்செங்காட்டில் வீற்றிருந்தால், காலனையும் காமனையும் - (முன்பு) யமனையும் மன்மதனையும், காட்டு - உம்மால் சுட்டப்பட்ட, சிறுத்தொண்டர் தருபாலனையும் - சிறுத்தொண்ட நாயனார்பெற்ற சிறுவனையும், கொன்ற - கொலைசெய்ததனாலுண்டாகிய, பழிபோமோ - பழியானது (உம்மைவிட்டு) நீங்குமோ, எ - று.

சிறுத்தொண்டர் தருபாலன் சீராளன்.

### பூனைக்கியாறுகால் முதலியவாகச் சொற் சாதுரியமாகப் பாடியது.

65. பூனைக்கியாறுகால்புள்ளினத்துக்கொன்பதுகால்
ஆனைக்குகால்பதினேழானதே - மானேகேள்
முண்டகத்தின்மீதுமுழுநீலம்பூத்ததுண்டு
கண்டதுண்டுகேட்டதில்லைக்காண்.

(இ - ள்.) பூனைக்கு இயாறுகால் - பூனைக்கு ஆறுகால்களும், புள் இனத்துக்கு ஒன்பதுகால் - பறவைக்கூட்டத்துக்கு ஒன்பதுகால்களும், ஆனைக்குப்பதினேழ்கால் - யானைக்குப் பதினேழ்கால்களும், ஆனது - ஆனதை, மானே கேள் - பெண்மானே கேட்பாயாக, முண்டகத்தின்மீது - தாமரைமலரின்மீது, முழுநீலம்பூத்தது உண்டு - முழுநீலமலர்கள் பூத்ததுண்டு, கண்டது உண்டு - பார்த்ததுண்டு, கேட்டது இல்லை - கேட்டதில்லை, எ - று.

பூனைக்கியாறுகால் என்பதைப் பூனைக்கி ஆறுகால் எனப்பிரித்து, வண்டுக்கு ஆறுகால்களுளவென்றும், ஒன்பதுகால்கொண்டது இரண்டேகால் ஆதலால், புள்ளினத்துக்குக் கால்களிரண்டேயென்றும், பதினேழு கால்கொண்டது நாலேகால் ஆதலால், யானைக்குக் கால்கள் நான்கேயென்றும் பொருளுரைத்துக்கொள்க. முண்டகம் - தாமரைமுகம், முழுநீலம் - கண்.

### ஓர் தலத்தில் உற்சவ காலத்தில் மிகவும் ஆடம்பரமாகப் பவனி வருகிற முருகக்கடவுளைத் தரிசித்து நிந்தாஸ்துதியாகப் பாடியது.

66. அப்பனிரந்துண்ணியாத்தாண்மலைநீலி
ஒப்பரியமாமனுறிதிருடி - சப்பைக்கால்
அண்ணன்பெருவயிறனாறுமுகத்தானுக்கிங்
கெண்ணும்பெருமையிவை.

இ - ள். அப்பன் இரந்து உண்ணி - தந்தையாகிய பரமசிவன் இரந்துண்டுவாழ்பவன், ஆத்தாள் மலைநீலி - தாயாகிய உமாதேவி மலையிற்பிறந்த நீலி ஒப்பு அரியமாமன் உறிதிருடி - உவமையில்லாத அம்மானாகிய திருமால்உறியில் வெண்ணெய்திருடுவோன், சப்பைக்கால் அண்ணன் பெருவயிறன் - சப்பைக் கால்களையுடைய தமையனாகிய விநாயகமூர்த்தி பெருவயிற்றை யுடையோன், (இது லோகப்பிரசித்தமாயிருக்க) ஆறுமுகத்தானுக்கு - ஆறுமுகங்களையுடைய முருகக்கடவுளுக்கு, இங்கு இவை - இவ்விடத்து நடப்பதாகிய இவை எண்ணும்பெருமை - மதித்தற்குரிய ஆடம்பரங்கள், எ - று.

இரந்துண்ணி - பிக்ஷாடநன், நீலி - நீலநிறமுள்ளவள், உறிதிருடி - கிருஷ்ணன்.

மதுரையில் கூத்தாள் என்னுந் தாசியையும், அவள்தமக்கையையும், தாயையும், பாட்டியையும், சிறப்பித்துப்பாடியது.

67 கூத்தாள்விழிகணெடுங்கூர்வேலாங்கூத்தாள்தன்
மூத்தாள்விழிகண்முழுநீலம்-மூத்தாள்தன்
ஆத்தாள்விழிகளரவிந்தமாத்தாள்தன்
ஆத்தாள்விழிகளிரண்டம்பு.

இ - ள். கூத்தாள் விழிகள் நெடுகூர்வேல் ஆம்-கூத்தாளுடைய கண்கள் நெடுமையாகிய கூர்வேல்களாம், கூத்தாள் தன் மூத்தாள்விழிகள் முழுநீலம் - கூத்தாளுக்கு மூத்தாளாகிய இவள் கண்கள் முழுநீலமலர்களாம், மூத்தாள் தன் ஆத்தாள்விழிகள் அரவிந்தம் - மூத்தாளுக்கு ஆத்தாளாகிய இவள் கண்கள் தாமரைமலர்களாம், ஆத்தாள் தன் ஆத்தாள்விழிகள் இரண்டு அம்பு-ஆத்தாளுக்கு ஆத்தாளுடையகண்கள் இரண்டம்புகளாம், எ - று.

ஒரு குழந்தை காளமேகனைக்கண்டு பயந்து அழுதுகொண்டு போய்த் தன் தாயினிடத்திற்சொல்ல, அவள் உன்னைக்கொடுப்பேனே என்று ஏசுதலால், சினங்கொண்டு அக்குழந்தை இறக்கும்படி வசையாகவும், அவள்கணவன் வேண்டுகோளுக்கிரங்கி அக்குழந்தை பிழைக்கும்படி வசைமீட்சியாகவும் பாடியது.

68 என்னைக்கொடுத்தாலிரக்கமுனக்குண்டாமோ
வன்னக்கமலமுகவல்லியே-துன்னுமதக்
காட்டானைக்கோட்டுமுலைக் காரிகையேநீபயந்த
கோட்டானைத்தானேகொடு.

இ - ள். வன்னக் கமலமுகவல்லியே - அழகாகிய தாமரை மலர்போன்ற முகத்தையுடையபெண்ணே, துன்னும் மதக்காட்டு ஆனைக்கோட்டு முலைக்காரிகையே - மிகுந்த மதத்தையுடைய காட்டானைக் கொம்புபோன்ற தனங்களையுடையமாதே, என்னைக்கொடுத்தால் உனக்கு இரக்கம்உண்டாமோ - என்னைக்கொடுத்தால் உனக்கு இரக்கம் உண்டாகுமோ, நீபயந்த கோட்டானைத்தானேகொடு - நீபெற்ற கோட்டானைத்தானே கொடுத்துவிடு, எ - று.

கோட்டான் - கூகை, இது குழந்தையின் விகாரவுருவத்தைக் குறித்தது. கொடுஎன்பது வசையில் இழந்துவிடு எனவும், வசைமீட்சியில் எழுப்பிக்கொடு எனவும் பொருள்படும்.

ஒருரில் சர்க்கார் உத்தியோகஸ்தனாகிய விகடராமன் என்னும் பிராமணன், ஒருமெலிந்த குதிரைமீதேறிச் செல்லும்போது அது நடவாததுகண்டு, தனக்குக் கீழ்ப்பட்டிருந்த வேலைக்காரர் இருவர் பின்னேயிருந்துதள்ளவும் மூன்றுபேர் முன்னே நின்று கடிவாளத்தைப்பற்றி யிழுக்கவும் உத்தரவு செய்தான். அப்படியே அவர்கள் செய்து கொண்டுபோகக் கண்டு பாடியது.

முன்னேகடிவாளமூன்றுபேர்தொட்டிழுக்கப்
பின்னேயிருந்திரண்டுபேர்தள்ள - எந்நேரம்
வேதப்போம்வாயான்விகடராமன்குதிரை
மாதப்போங்காதவழி.

இ - ள். எந்நேரம் வேதம்போம்வாயான்-எப்போதும் வேதம் பயிலுகின்ற வாயையுடையவனாகிய, விகடராமன் குதிரை - விகடராமையனது குதிரையானது, மூன்றுபேர் முன்னே கடிவாளம் தொட்டு இழுக்க - மூன்றுபேர் முற்புறத்தில்நின்று கடிவாளத்தைத் தொட்டுவலிக்க, இரண்டுபேர் பின்னேயிருந்து தள்ள - இரண்டுபேர் பிற்புறத்தில் நின்றுதள்ள, மாதப் காதவழிபோம் - மாதமொன்றுக்குக் காதவழிசெல்லும், எ - று.

ஆழூரில் வேங்கடமுதலியாருடைய குதிரைகளைப் புகழ்ந்து பாடியது.

70. ஆறும்பதினாறுமாமூரில்வேங்கட்டன்
ஏறும்பரிமாவேயேற்றமா - வேறுமா
வெந்தமாசும்மாவெறுமாகளிகிளற
வந்தமாசந்தமாமா.

இ - ள். ஆழூரில் வேங்கட்டன் ஏறும் - ஆழூரில் வாழ்கின்ற வேங்கட்டன் ஏறுகின்ற, ஆறும்பதினாறும பரிமாவே ஏற்றமா - இருபத்திரண்டு பரிமாவே பெருமையுளமாவாகும், வேறுமா-அதற்கு வேறாகிய மாவெல்லாம், வெந்தமா-வெந்தமாவும், சும்மா-சும்மாவும், வெறுமா - வெறுமாவும், களிகிளற வந்தமா-களிகிளறவந்தமாவும், சந்தமாமா - சந்தமாமாவுமேயாம், எ - று.

ஏற்றமா என்பதில் மா குதிரை. வெந்தமாமுதலியன இகழ்ச்சிக்குறிப்பு.

திருவாரூர் தியாகராயப்பெருமானது திருநடனத்தைத்தரிசித்து நிந்தாஸ்துதியாகப் பாடியது.

71. ஆடாரோபின்னையவரன்பரொராம்பார்த்திருக்க
நீடாரூர்வீதியிலேநின்றுதான் - தோடாரும்

மெய்க்கேபரிமளங்கள்வீசுந்தியாகேசர்
கைக்கேபணமிருந்தக்கால்.

இ - ள். தோடு ஆரும்மெய்க்கு பரிமளங்கள்வீசும்-பூவிதழ்களினேட்டின் பரிமளம் திருமேனியில் கமழப்பெற்ற, தியாகேசர் - தியாகேசரானவர், கைக்குபணம் இருந்தக்கால் - தம்கையிற் பணமிருந்தால், பின்னை அவர் - பிறகு அவர், நீடு ஆரூர்வீதியிலேநின்று - திருவாரூரில் நீண்டதெருவில்நின்று, அன்பர் எல்லாம்பார்த்திருக்க - அன்பர் எல்லாரும் பார்த்திருக்க, ஆடாரோ - கூத்தாடாரோ, எ - று.

பணம் - கையிற் கங்கணமாகத்தரித்த பாம்பின்படம். காசு என்பதும் ஒரு பொருள். இதில் விலையுயர்ந்த மாணிக்கமிருத்தலால் இவர்க்கு இறுமாப்பை யுண்டாக்கிக் கூத்தாடச் செய்ததென்பது கருத்து.

மாயூரத்தில் சிவபெருமானைத் தரிசித்து நிந்தாஸ்
துதியாகப் பாடியது.

72. வள்ளலெனும்பெரியமாயூரநாதருக்கு
வெள்ளிமலைபொன்மலையுமேயிருக்கத் - தெள்ளுமையாள்
அஞ்சலஞ்சலென்றுதினமண்டையிலேதானிருக்க
நஞ்சுதனையேனருந்தினார்.

இ - ள். வள்ளல் எனும் - வள்ளலென்று சொல்லப்பட்ட, பெரியமாயூரநாதருக்கு - பெரியமாயூரத்திறைவருக்கு, வெள்ளிமலை பொன்மலையும் இருக்க - வெள்ளிமலையாகிய கைலாயமும் பொன்மலையாகியமேருவும் தமது சுவாதீநத்திலிருக்கவும், தெள் உமையாள் - தெளிந்த அறிவினையுடைய உமாதேவியானவள், தினம் - நாள்தோறும், அஞ்சல் அஞ்சல் என்று அண்டையிலே இருக்க - அஞ்சாதே அஞ்சாதேயென்று அருகிலிருக்கவும், (இவர்) நஞ்சுதனை ஏன் அருந்தினார் - விஷத்தை என்ன காரணம்பற்றிஉண்டார், எ - று.

இது வினவா யிருப்பினும் இதில்விடையு மடங்கி யிருக்கின்றது, யாதெனின், அஞ்சி முறையிட்ட தேவர்களைப் பாதுகாப்பது காரணமாக உண்டாரென்பது.

மதுரையில் மீனாக்ஷியம்மையைத் தரிசித்து நிந்தாஸ்
துதியாகப் பாடியது.

73. நல்லதொருபுதுமைநாட்டிற்கண்டேனதனைச்
சொல்லவாசொல்லவாசொல்லவா - தொல்லை
மதுரைவிக்கினேச்சுரனைமாதுமையாள்பெற்றாள்
குதிரைவிற்கவந்தவனைக்கூடி.

இ - ள். நாட்டில் - இவ்வுலகத்தில், நான் நல்லதொரு புதுமைகண்டேன் - நான் நன்மையாகிய ஒரு அற்புதத்தைக்கண்டேன், அதனை சொல்லவா சொல்லவா சொல்லவா - அதைச் சொல்லட்டுமா சொல்லட்டுமா சொல்லட்டுமா, (என்னெனின்) மாது உமையாள் - உமாதேவியானவள், தொல்லை மதுரை - பழமையாகியமதுரையில், குதிரைவிற்க வந்தவனைக்கூடி-குதிரைவிற்க வந்தவனைப்புணர்ந்து, விக்கினேச்சுரனைப்பெற்றாள் - விநாயக மூர்த்தியைப் பெற்றாள், எ - று.

குதிரைவிற்கவந்தவன் - சொக்கநாதன், குதிரைவிற்க வந்தவன்என்றது மாணிக்க வாசகர்க்காக நரிபரியாக்கிய கதையைக்குறிக்கும்.

கீரைவிற்கும்பெண்ணொருத்தியின் இடைச்சிறுமையும்முலைப்பெருமையும் நோக்கியிரங்கிப் பாடியது.

74. வெள்ளையானே றும்விமலரடிபணியும்
பிள்ளையான்வாழும்பெருந்தெருவில் - வள்ளை
இலைக்கறிவிற்பாண்மருங்குலிற்றுவிடுமென்று
முலைக்கறிவிப்பாரில்லையோமுன்.

இ - ள். வெள்ளை ஆன் ஏறும் - வெள்ளிய இடபத்தின்மேலேறுகின்ற, விமலர் அடிபணியும் - நிர்மலராகிற சிவபெருமானது திருவடியை வணங்குகின்ற, பிள்ளையான்வாழும் பெருந்தெருவில் - பிள்ளையான் என்பவன் வாழ்கின்ற பெரியவீதியில், வள்ளை இலைக்கறிவிற்பாள் மருங்குல்-வள்ளைக் கீரையை விற்பவளது இடையானது, இற்றுவிடும் என்று - ஒடிந்துபோமென்று, முன் - முன்போய், முலைக்கு அறிவிப்பார் இல்லையே - தனங்களுக்கு உணர்த்துவோரில்லையோ, எ - று.

பிள்ளையான் - ஒரு சீமான்.

திருவண்ணாமலையில் சோணாசலேசுரரைத்தரிசிக்கையில் பாடியது.

75. சட்டியிலேபாதியந்தச்சட்டுவத்திலேபாதி
இட்டகலத்திற்பாதியிட்டிருக்கத் - திட்டமுடன்
ஆடிவந்தசோணேசரன்றழைத்தபோதுபிள்ளை
ஓடிவந்ததெவ்வாறுரை.

இ - ள். சட்டியிலேபாதி - (கறிசமைத்த) சட்டியிற்பாதி கறியும், அந்தச் சட்டுவத்திலேபாதி - அதனைமொண்ட அகப்பையிற்பாதி கறியும், இட்டகலத்தில்பாதி - படைத்த இலைக்கலத்தில் பாதிகறியுமாக, இட்டுஇருக்க - வைத்திருக்க, திட்டமுடன் ஆடிவந்த சோணேசர் - வேதியவேடமாக நடனஞ்செய்து வந்த சோணகிரிநாதர், அன்று அழைத்தபோது - அக்காலத்தில் அழைத்தபொழுது, பிள்ளை - (சிறுத்தொண்டனது) பிள்ளை, ஓடிவந்தது எவ்வாறு - (புறத்தேயிருந்து) ஓடிவந்தது எப்படி, உரை - நீ சொல்லாய், எ - று.

பிள்ளையென்றது சிராமனை. சோணம்-சிவப்பு, அசலம் - மலை, சோணாசலம் - சிவப்புமலை-நெருப்புமலையாதலால், இவ்வாறு கூறப்பட்டது. அருணாசலம் என்பதும் இப்பொருளையுடையதே. அருணம் - சிவப்பு.

**மதுரையில் சொக்கநாதரைத் தரிசித்து நிந்தாஸ் துதியாகப் பாடியது.**

76. கண்டீரோபெண்காள்கடம்பவனத்தீசனார்
பெண்டீர்தமைச்சுமந்தபித்தனார் - எண்டிசைக்கும்
மிக்கானதங்கைக்குமேலேநெருப்பையிட்டார்
அக்காளையேறினாராம்.

இ - ள். பெண்காள் கண்டீரோ-பெண்களே நீங்கள் கண்டீர்களோ, கடம்பவனத்து ஈசனார் - கடம்பவனத்தீசர், பெண்டீர் தமைச்சுமந்த பித்தனார் - பெண்களைச்சுமந்த பித்தர், (இவர்) எண்டிசைக்கும் மிக்கான தங்கைக்குமேலே நெருப்பையிட்டார் (ஆம்) - அஷ்டதிக்குகளிலும் மேலாகிய தங்கையின்மேலே நெருப்பையிட்டாராம், அக்காளை ஏறினார் ஆம்-அக்காள்மீதேறினாராம், எ-று.

தங்கைக்கு மேலே நெருப்பையிட்டார், அக்காளையேறினார் என்பன விகடம். தங்கைக்குமேலே நெருப்பையிட்டார், அக்காளையேறினார் என்பவற்றிற்கு முறையே தமதுகையில் மழுவேந்தினார் என்றும், அந்தக் காளையின்மீது ஏறினார் என்றும் வேறுமொருபொருள் தோன்றுமாறு காண்க.

**தில்லையில் சிவகாம வல்லியைத் தரிசித்துப் பாடிய நிந்தாஸ்துதி.**

77. மாட்டுக்கோன்றங்கைமதுரைவிட்டுத்தில்லைநகர்
ஆட்டுக்கோனுக்குப்பெண்டாயினாள் - கேட்டிலையோ
குட்டிமறிக்கவொருகோட்டானையும்பெற்றாள்
கட்டுமணிச்சிற்றிடைச்சிகாண்.

இ - ள். கட்டுமணி சிற்றிடைச்சி - மணிமேகலையைக்கட்டிய சிற்றிடையையுடையவளாகிய, மாட்டுக்கோன்தங்கை - மாட்டு இடையன் தங்கையானவள், மதுரைவிட்டு - வடமதுரையைவிட்டு, தில்லைநகர் - தில்லைநகரிலுள்ள, ஆட்டுக்கோனுக்குப் பெண்டு ஆயினாள் - ஆட்டிடையனுக்கு மனைவி யாயினாள், (அன்றியும்) குட்டிமறிக்க - ஆட்டுக்குட்டிகளை மறித்துக்கொண்டு வரும்பொருட்டு, ஒரு கோட்டானையும் பெற்றாள்-ஒரு சிறுவனையும் பெற்றாள், கேட்டிலையோ - (என்செவியே இதனை நீ) கேட்டாயில்லையோ, எ - று.

மாட்டுக்கோன் தங்கை - க்ருஷ்ணனுக்குந் தங்கையாகிய உமாதேவி. ஆட்டுக்கோன் - நடனஞ்செய்வதில் முதல்வனாகிய நடேசன். குட்டிமறிக்க - கண்டோரெல்லாரும் தலையில்நேராகக் குட்டிக்கொண்டு, பிறகு கையைமறித்துக்கொள்ள. ஒரு கோட்டு ஆனை - ஒற்றைக்கொம்புள்ள யானைமுகக்கடவுள். கோட்டான்-சிறுவன்.

## தில்லை நடேசரைத் தரிசித்துப் பாடிய நிந்தாஸ்துதி.

78. நாட்டுக்குளாட்டுக்குநாலுகாலையாநின்
ஆட்டுக்கிரண்டுகாலானாலும் - நாட்டமுள்ள
சீர்மேவுதில்லைச்சிவனேயிவ்வாட்டைவிட்டுப்
போமோசொல்லாயப்புலி.

இ - ள். நாட்டம்உள்ள - யாவரும் நாடுந்தன்மையுள்ள, சீர்மேவு-சிறப்புப் பொருந்திய, தில்லைச்சிவனே-தில்லைச்சிவபிரானே, நாட்டுக்குள்-உலகிலுள்ள, ஆட்டுக்கு - ஆட்டிக்கு, நாலுகால் - நாலுகால்களுண்டு, ஐ ஆம்நின் ஆட்டுக்கு-அழகாகிய உன் ஆட்டுக்கு மாத்திரம், இரண்டுகால் - இரண்டு கால்களேயுள்ளன, ஆனாலும் - ஆயினும், அப்புலி - (இந்த ஆட்டின்மீது நெடுங்காலமாக விருப்பம்வைத்திருந்த) அந்தப் புலியானது, இ ஆட்டை விட்டுப்போமோ - இந்த ஆட்டைவிட்டுப்போகுமோ, சொல்லாய்-சொல்வாய், எ - று.

ஐயா என்பதனை ஐயனேயென விளியாக்கினுமமையும், நின் ஆட்டுக்கு - உனது நடனத்துக்கு. இவ்வாட்டை-இந்தநடனத்தை. புலி-வியாக்கிரபாதர்.

## தில்லையில் பரமசிவனது பிக்ஷாடந உற்சவத்தைத் தரிசித்துப் பாடிய நிந்தாஸ்துதி.

79. தாண்டியொருத்திதலையின்மேலேறாளோ
பூண்டசெருப்பாலொருவன்போடானோ - மீண்டொருவன்
வையானோவின்முறியமாட்டானோதென்புலியூர்
ஐயாநீயேழையானால்.

இ - ள். தென்புலியூர் ஐயா - தென்புலியூரையனே, நீ ஏழைஆனால் - நீ இப்படி ஏழையாயிருந்தால், ஒருத்திதாண்டி தலையின்மேல் ஏறாளோ - பெண்ணொருத்தி குதித்துத் தலைமேல்ஏறாளோ, ஒருவன்பூண்ட செருப்பால் போடானோ - ஒருவன்தான்தரித்த செருப்பினால் அடியானோ, மீண்டு ஒருவன்வையானோ - மறுபடி ஒருவன் ஏசானோ; (ஒருவன்) வில்முறிய மாட்டானோ-ஒருவன் தன்கைவில்லானது முறியும்படி புடைக்கானோ, எ - று.

தலையின்மேல் ஏறினவள் - கங்கை. செருப்பால் போட்டவன் - கண்ணப்பன். வைதவன்-சுந்தரமூர்த்திநாயனார். வில்முறியமாட்டினவன் - அருச்சுநன், ஏழை - அன்பர்க் கெளியவன்.

## தில்லை நடேசரைத் தரிசித்து நிந்தாஸ்துதியாகப் பாடியது.

80. கொங்குலவுந்தென்றில்லைக்கோவிந்தக்கோனிருக்கக்
கங்குல்பகலண்டர்பலர்காத்திருக்கச் - செங்கையிலே
ஓடெடுத்தவம்பலவாவோங்குதில்லையுட்புகுந்தே
ஆடெடுத்ததெந்தவுபாயம்.

இ - ள். செங்கையிலே ஓடு எடுத்த அம்பலவா - திருக்கையில் பலிபாத்திரமேந்திய அம்பலவாணு, கொங்கு உலவும் தென்தில்லை கோவிந்தக்கோன் இருக்க-மலர்மணம்வீசுகின்ற தென்றில்லைக் கோவிந்தனாகிய இடையர்தலைவன் இருக்கவும், கங்குல்பகல் அண்டர் பலர்காத்திருக்க - இராப்பகல்களாக பல இடையர்கள் காத்திருக்கவும், ஓங்குதில்லை யுள்புகுந்து - உயர்ந்த தில்லைவனத்தில் நுழைந்து, ஆடுஎடுத்தது - நீ ஆட்டைக்களவுசெய்தது, எந்த உபாயம்-எந்தவுபாயத்தினால், எ - று.

தில்லைக் கோவிந்தக்கோன் - தில்லைக் கோவிந்த ராஜப்பெருமாள். அண்டர் - தேவர். ஆடு எடுத்தது - நடனஞ்செய்யத் திருவடியைத் தூக்கினது, தில்லை - ஓர்மரம்.

திருவொற்றியூர் தியாகராயரைத் தரிசித்து நிந்தாஸ்துதியாகப் பாடியது.

81. ஆடுந்தியாகரேயாட்டமேன்றானுமக்கு
வீடுஞ்சமுசாரமேலிட்டுக் - கூடிச்
செருக்கிவிளையாடச்சிறுவரிரண்டாச்சே
இருக்குமூரொற்றியாச்சே.

இ - ள். ஆடும்தியாகரே - நடனஞ்செய்கிற தியாகேசரே, உமக்குவீடும் சமுசாரம்மேலிட்டு - உமக்குவீடும் சமுசாரமும் அதிகரித்து, கூடிசெருக்கிவிளையாட - சேர்ந்து செருக்கிவிளையாடுதற்கு, இரண்டுசிறுவர் ஆச்சே-இரண்டு சிறுவராச்சுதே, இருக்கும் ஊர் ஒற்றி ஆச்சே - நீர் இருக்கு மூரும் ஒற்றியாச்சுதே, (இப்படியிருக்க) ஆட்டம் ஏன் - (உமக்கு) நடனம் யாதுக்கு, எ - று.

சமுசார மதிகரித்து ஊரையும் ஒற்றிவைத்திருக்கும் ஏழையாகிய வுமக்கு இந்த ஆட்டம்யாதுக்கு என்பது கருத்து.

மாம் பிஞ்சுகளை நோக்கிப் பாடியது.

82. திங்களுநுதலார்திருமனம்போலேகீறிப்
பொங்குகடலுப்பைப்புகட்டியே - எங்களிட
ஆச்சாளுக்கூறுகாயாகாமலாருக்காக்
காய்ச்சாய்வடுகமாங்காய்.

இ - ள். வடுகமாங்காய் - மாவடுவே, திங்கள்நுதலார் - அஷ்டமீசந்திரன் போன்ற நெற்றியையுடைய மாதரது, திருமனம்போலே கீறி - அழகிய மனம் போலப் பிளவுபட்டு, பொங்குகடல் உப்பைப்புகட்டி - பொங்குகின்ற கடலிலுண்டாகிய உப்பையூட்டப்பெற்று, எங்களிட ஆச்சாளுக்கு - எம்முடையஆச்சாளுக்கு, ஊறுகாய் ஆகாமல் - ஊறுகாய்க் குதவாமல், ஆருக்கா காய்ச்சாய் - வேறு யார்பொருட்டுக் காய்த்தனை, எ - று.

மாதர்மனம் வஞ்சகமுள்ளது என்றற்கு திங்களுநுதலார் திருமனம் போலே கீறி என்றார். ஆச்சாள் - ஆத்தாள் என்பதின்திரிபு.

### தென்றற்காற்று வீசாமலிருக்கும்போது பாடியது.

83, அம்பேந்து கையானவன்பதியி லைம்மாவைக்
கொம்பேந்தி தந்தைபணி கொண்டதோ - அன்பா
அரிந்தமகவை யமுதுக்கழையென்
றிருந்தவன்றன் செங்காட்டிலே.

இ - ள். அன்பா - அன்பாக, அரிந்த - அறுத்துச்சமைத்த, மகவை - சிறுவனை, அமுதுக்கு அழையென்று - (என்னோடிருந்து) உண்ணுதற்கு அழைப்பாயென்று (சிறுத்தொண்டனுக்குச்சொல்லி) இருந்தவன் தன்செங்காட்டிலே- (அச்சிறுவன்வருமளவும் உண்ணமல்) இருந்தபெருமானது திருச்செங்காட்டில், அம்பு ஏந்துகையான் - கடலை (ஆசமநம்செய்ய) ஏந்திய கையை யுடையவனாகிய, அவன்பதியில்-அந்த அகத்தியனது இடமாகிய பொதியமலையிற் பிறந்த, ஐம்மாவை-ஐந்துமாவை, கொம்புஏந்தி தந்தைபணி கொண்டதோ-கொம்பேந்தியின் தந்தையாகிய சிவபெருமானது பாம்பு உட்கொண்டுவிட்டதோ, எ - று.

அம்பு-நீர். அது இங்குக்கடலுக்காயிற்று. ஐம்மா-கால், (காற்று) அது இவ்விடத்தில் தென்றற் காற்றைக்குறித்தது. கொம்பேந்தி-விநாயகர்.

### ஆலைப்பதிப்பெற்றான் என்னும் வணிகன்மேற் பாடியது.

84. முற்றாதகாஞ்சியினு முல்லையினும்பாலையினும்
கற்றான்பின் சென்றகருணைமால் - பெற்றான்றன்
ஆலைப்பதித்தாரளகத்திற்கயனார்
வேலைப்பதித்தார்விழி.

இ - ள். முற்றாத காஞ்சியினும் - அழிவுபெறாத கச்சிநகரத்தினும், முல்லையினும் - முல்லைநிலத்திலும், பாலையினும் - பாலைநிலத்திலும், கற்றான் பின் சென்ற - (முறையே) செந்நாப்புலவர் கன்றையுடைய பசுக்கள் விசுவாமித்திரன் இவர்களின் பின்னேநடந்த, கருணைமால்-கருணையுள்ள திருமாலின் அமிசமாகிய, பெற்றான்தன் - பெற்றான் என்பவனது, ஆலைப்பதி - ஆலைப்பதியிலுள்ள, தார் அளகத்திற்கு - பூமாலையையணிந்த கூந்தலையுடையாளுக்கு, அயனார் - பிரமனார், வேலை - வேலாயுதத்தை, விழிபதித்தார் - கண்களாக்கி (முகத்திற்) பதித்துவைத்தார், எ - று.

பலசரக்குக் கடைவைத்துக்கொண்டு சீவனஞ்செய்யும் ஆலைப் பதிப்பெற்றான் என்னும் ஓர் ஏழைவணிகன் ஓர்நாள் காளமேகப் புலவரைநோக்கித் தன்மீது பாட்டுப்பாடும்படி பணிவாய்க்கேட்க, அப்புலவர் மன்னர் முதலியோரைப் பாடும் யாம் உன்னையும் ஒரு பொருளாகவைத்துப் பாடுவமோ என்று சொல்லிப் போயினர். அவர் அவ்வாறு சொல்லியும் அவ்வேழைவணிகன் எவ்வகையாலாயினும் இப்புலவரால் பாட்டுப் பெறவேண்டுமென்கிற விருப்பமுடையவனாய், அவ்வாலைப்பதியில் அவர் அபிமானித்திருந்த கமலாக்ஷியென்னும் தாசியைக்கண்டு தன் எண்ணத்தை முற்றுவிக்க வேண்டுமென்று கெஞ்சினன். அத்தாசி இவன்

மன்றாட்டுக்கிரங்கி அவ்வாறே முற்றுவிப்பதாக வாக்களித்து, காளமேகப்புலவர் இரவில் நேரஞ்சென்று வரும் ஓர்தினத்தை அறிந்து அன்றிரவில் அவ்வணிகனைக் கடைமூடாதிருக்கக் கற்பித்துத் தான்தேகம் அசௌக்கியம் உள்ளவள் போல் பாசாங்குசெய்து முக்காடிட்டுப் படுத்துக்கொண்டிருந்தனள். காளமேகப்புலவர்வந்து முக்காடிட்டுப் படுத்திருக்கும் தாசியைக்கிட்டி, வாட்டமுற்றிருக்கக் காரணம் என்னென்று வினவப்போகையில், அவள் நாள் முழுதும் உமது கருத்துக்கிசைந்த இடம்சென்று உல்லாசமாய்க் காலங்கழித்துத் திரியும் உமக்கு இப்பேதைத் தாசியின் சுகதுக்கங்கள் எதுக்குப்போம் போமென்று கடிந்துகூற, புலவர் பெருமான் தாசியைநோக்கி, நீ வேண்டியவற்றை வேண்டியவாறு செய்யக்காத்திருக்கும் என்னை இவ்வாறுகூறுதல் தகுதியன்றென்று அவள்பிணக்குத் தீரும்பொருட்டு இதமானமொழிகள் பலகூறினர். அப்போது அத்தாசி பொறுக்கமுடியாத என்னோய்தீர்ந்து சுகமடைகிறதற்கு இன்னின்ன மருந்துகள் வாங்கித்தருகவெனச் சிலமருந்தின் வகைகூற, இவற்றை இதோ நானே போய்க் கொண்டுவருவேனென்று கடைக்குச் சென்றபோது நெடுநேரமாய்விட்டபடியால் கடைகள் மூடப்பட்டிருந்தன. இவ்வணிகன் ஒருவனும் கடைவைத்திருந்தனன், அவனைக்கண்டு தமக்குவேண்டிய மருந்துகேட்க, அவன் நான் கடைகட்டப்போகின்றேன், இப்போது எடுத்துக் கொடுக்கமாட்டேன், மன்னரைப்பாடும் நீர் அம்மன்னரையே தேடிப்போம் என்றனன். அப்போது புலவர் அவ்வணிகன்மேல் இச்செய்யுளையும், வருஞ்செய்யுளையும்பாடி மருந்து வாங்கிக் கொண்டுபோய்த் தாசி கமலாக்ஷிக்குக் கொடுத்தனர் என்பது கர்ண பரம்பரையான கதை.

திருமால் காஞ்சியில் செந்நாப்புலவர் பின்சென்ற செய்திவருமாறு: செந்நாப்புலவருடைய சிஷரரகிய கணிகண்ணனைக் காஞ்சி மண்டலத்தரசன் தம்மீது பாட்டுப்பாடாமையாகிய காரணம்பற்றித் தமது ராச்சியம் விட்டுப்போகச் சொல்ல, அவர் அதை தமதாசானாகிய செந்நாப்புலவருக்கு அறிவித்துவேற்றுத் தேயம் செல்ல இருக்கையில், செந்நாப்புலவர் பெருமான் சந்நிதியில் இதனை விண்ணப்பஞ்செய்து நீரும் வாருமென்றழைக்க, இவ்விருவருடன் பெருமானும் தமது சேஷசயனத்தைச் சுருட்டிக்கொண்டு சென்றனர் என்பது. இதற்குச் செய்யுள்:—

“கணிகண்ணன்போகின்றான்காமருபூங்கச்சி
மணிவண்ணா நீயிருத்தல்வேண்டா - துணிவொன்றிச்
செந்நாப்புலவனிதோசெல்கின்றேனீயுநின்றன்
பைந்நாகப்பாய்சுருட்டிக்கொள்.”

“மன்னனைப்பாடாமற்போகின்றேனீயும்
வாவரியேயென்றழைத்தபுலவன்பின்னே
பன்னகப்பாம்பணைசுருட்டிக்கொண்டேயேகிப்
படுத்துக்கொள்ளென்றமட்டிற்படுத்துக்கொண்டாய்
சொன்னவண்ணம்செய்தபெருமானாமென்று
சுரர்துதிக்கக்கச்சியினி லிருக்கின்றாயால்.”

முல்லையில் கன்றுகளையுடைய பசுவின் பின்சென்றது கிருஷ்ணவதாரத்தில். பாலையில் விசுவாமித்திரன் பின்சென்றது இராமாவதாரத்தில் தாடகை சம்மாரத்தின் பொருட்டு.

**இதுவும் அவ்வணிகன்மேற்பாடியது. இது பாலனைப்பழித்தல் என்னுந்துறை.**

85. கஞ்சமுகையுங்களிற்றனையின்கொம்பும்
அஞ்சுமுலைநாலுமுலையானதுவும் - மிஞ்சுபுகழ்
பெற்றான்றன்மாலைபிறர்க்களித்ததுங்குதலை
கற்றான்பிறந்தபின்புகாண்.

இ - ள். கஞ்சமுகையும் - தாமரையரும்பும், களிறு ஆனையின் கொம்பும் - களிற்றுயானையின் தந்தமும், அஞ்சும்முலை - (கண்டு) அஞ்சும்படியான தனங்கள், நாலும்முலை ஆனதுவும் - தொங்குகின்ற தனங்களானதுவும், மிஞ்சுபுகழ் - மிகுந்தபுகழையுடைய, பெற்றான் - பெற்றான்என்பவன், தன்மாலை பிறர்க்கு அளித்ததும் - தன்மாலையைப் பிறருக்குக் கொடுத்ததும், குதலைகற்றான் பிறந்தபின்பு காண் - மழலைச்சொல்லைக் கற்றவனாகிய இந்தப்பாலன் பிறந்தபின்பே, எ - று.

அஞ்சு முலைநாலுமுலையானதுவும் எனச் சொன்னயங் காண்க.

**ஸ்ரீரங்கத்து வைஷ்ணவ பிராமணர்கள் விநாயகருக்கு நாமமிட்டு இவர் விஷ்ணுவே பாமென்று நாமம்போட்டுக் கொண்டிருக்கிறார் பாரும் என்று இகழ்ந்து சொன்னதற்குப் பாடியது.**

86. தந்தைபிறந்திறவாத்தன்மையினுற்றன்மாமன்
வந்துபிறந்திறக்கும்வண்மையினால் - முந்தொருநாள்
வீணைக்குவேளெரித்தான்மகன்மாமன்
காணிக்குவந்திருந்தான்காண்.

இ - ள். தந்தை - (தன்) தகப்பனுனபரமசிவன், பிறந்து இறவாதன்மையினுல் - ஜனித்துமரிக்காத தன்மையினுலும், தன்மாமன் - தன்மாமனுகிய திருமால், வந்துபிறந்து இறக்கும்வண்மையினுல் - (உலகில்) வந்துபிறந்திறக்கின்ற வளப்பத்தாலும், முந்து ஒருநாள் - பூர்வம்ஒருகாலத்தில், வீண்-வீணே, இக்குவேளை எரித்தான்-கருப்புவில்லையுடைய மன்மதனை யெரித்தவனுகிய சிவபெருமானுக்கு, மகன் - (மூத்த) பிள்ளையாகிய விநாயகன், மாமன்காணிக்கு வந்து இருந்தான் - மாமனுடைய காணியின்பொருட்டுவந்து (இவ்விடத்தில்) தங்கியிருக்கிறான், எ - று.

**தூ து.**

87. தாதிதூதோதீதுதத்தைதூதோதாது
தூதிதூதொத்திதத்தூதததே - தாதொத்த

தாத்திதத்தாதேதாதித்துத்தேத்தொத்தீது
தித்தித்ததோதித்திதி.

இ - ள். தாதி - தோழியினுடைய, தூதோ - தூதோ, தீது - குற்றமுள்ளது, தத்தை-கிளி, தூது ஓதாது-தூதுசொல்லாது, தூதி - தூதியே, தூது-உன்தூதானது, ஒத்து - (என்மனதுடன்) பொருந்தி, இதம் - நன்மையான, தூதத்தே - தூதாகும், (ஆதலால்) தாதுஒத்த - பொன்னை நிகர்த்த, துத்தி - தேமல், தத்தாதே-படராதவண்ணம், துதித்து - (அவரை) தோத்திரித்து, ஒத்து-(அவருடன்) ஒத்து, தேத்து - (அவர்மனதைத்) தேற்று, இது - இந்தச்செய்தி, தித்தித்தது-(என்மனதுக்கு) இனித்தது, ஓதி - (இதை அவருடன்) சொல்லி, திதி - (என்னைக்) காப்பாற்று, எ - று.

தாதியும் கிளியும் என்தூதுக் கிசைவாயிராமையால், தூதியே நீ தலைவரிடம் சென்று அவர் மனம் இரங்கும்படி செய்யவேண்டும் என்பதாம்.

வெறிவிலக்கல்.

88. முந்நான்கிலொன்றுடையான் முந்நான்கிலொன்றெடுத்து
முந்நான்கிலொன்றின்மேன் மோதினான் - முந்நான்கில்
ஒன்றரிந்தாலாகுமோ வொண்மடமயிலே
அன்றணைந்தான் வாராவிட்டால்.

இ - ள். ஒண்மடமயிலே-ஒ இளமைபொருந்திய மயிற்சாயலுள்ள பெண்ணே, அன்றுஅணைந்தான் வாராவிட்டால் - அன்றுகலந்து பிரிந்ததலைவன்வராதிருந்தால், முந்நான்கில் ஒன்று உடையான் - பன்னிரண்டில் ஒன்றையுடையவன், முந்நான்கில்ஒன்றுஎடுத்து - பன்னிரணடில் ஒன்றையெடுத்து, முந்நான்கில் ஒன்றின்மேல்மோதினான் - பன்னிரண்டில் ஒன்றின்மீதுமோதினான், (இதற்கு) முந்நான்கில் ஒன்றுஅரிந்தால் ஆகுமோ-பன்னிரண்டில் ஒன்றினை அறுத்தால் பரிஹாரமாகுமோ, எ - று.

முந்நான்கு என்னும் நான்கனுள் முதலாவது இராசிபன்னிரண்டில் ஒன்றாகியமீனம், இரண்டாவது இராசிபன்னிரண்டில் ஒன்றாகிய தநுசு, மூன்றாவது இராசிபன்னிரண்டில் ஒன்றாகியகன்னி, நான்காவது இராசி பன்னிரண்டில் ஒன்றாகிய மேஷம். மேஷம் - ஆடு. மன்மதன் வில்லைவளைத்து மலர்க்கணையெய்யக்காமவெறிகொண்ட இக்கன்னிக்கு ஆட்டைக் கொலைசெய்து அவ்வெறியை நீக்க நினைத்தலால் பயனின்றென்பது கருத்து.

சிவபெருமான் திருவாரூரில் பரவையாரிடம் சுந்தரருக்காகத்
தூதுசென்றதைச் சிறப்பித்துப் பாடியது.

89. ஆரூரிலேயயனுந்திருமாலும்
காணரடிமுடிமுன்காண்பதற்கு - மேனாள்

இரவுதிருவாரூரிலெந்தைபிரான்சென்ற
பரவைதிருவாயிற்படி.

இ - ள்: அயனுந்திருமாலும் - பிரமனும் விஷ்ணுவும், காண் ஆர் - வாசனைபொருந்திய, அடிமுடி - அடிமுடிகளை, முன்காண்பதற்கு - முற்காலத்தில் காண்பதற்கு, மேல்நாள்இரவு-முன்னொளிரவில், திருவாரூர்-திருவாரூரின்கண், எந்தைபிரான்சென்ற - எமதுதந்தையாகிய சிவபெருமான் நடந்துபோன, பரவைதிருவாயிற்படி-பரவையென்பவர்வீட்டுத் திருவாசற்படியாக, ஆனார் இல்லையே - ஆனார்களில்லையே.

சிவபெருமான் அடியார்க் கெளியனாயும், மற்றையர்க்கு அரியனாயு மிருக்கின்றனர் என்பது கருத்து.

வைத்தீச்சுரரைந் நாசிந்நு அவர்மீதுபாடிய நிந்தாஸ்துதி.

90. வாதக்காலாந்தமக்கு மைத்துனர்க்குநீரிழிவாம்
போதப்பெருவயிறாம்புத்திரனுக் - கோதக்கேள்
வந்தவினை தீர்க்கவகையறியார்வேளூரர்
எந்தவினை தீர்ப்பாரிவர்.

இ - ள். தமக்கு வாதக்கால் ஆம் - (சிவபெருமானாகிய) தமக்கு வாதக்காலாம், மைத்துனர்க்கு நீரிழிவுஆம்-மைத்துனராகிய திருமாலுக்கு நீரிழிவுண்டு, புத்திரனுக்கு போதபெருவயிறு ஆம் - புதல்வனாகிய விநாயகருக்கு மிகவும்பெருவயிறுண்டு, ஓதக்கேள்-சொல்லக்கேள், வந்தவினைதீர்க்க வகைஅறியார் - (தமக்கு) வந்தநோய்களை நீக்கிக் கொள்ளவகையறியார், வேளூரார் இவர் - (இப்படியிருக்கிற) புள்ளிருக்கு வேளூரராகிய இவ் வயித்தீச்சுரர், எந்தவினை தீர்ப்பார் - (தம்மிடத்தில் வந்தடைந்தோர்க்கு) எந்தவினைகளைஒழிப்பார்.

வாதக்கால் கொண்டவர்கள் சிரம பரிகாரத்தின்பொருட்டு காலைத்தூக்குவராதலால் நடனம் பண்ணும்பொருட்டு ஒருகாலைத் தூக்கிக்கொண்டிருக்கும் சிவபெருமானுக்கு வாதக்காலென்றும், நீரிழிவுநோய் கொண்டவர் குளிர்ச்சியை விரும்புவாராகையால் நீரில்படுத்திருக்கும் திருமாலுக்கு நீரிழிவு என்றும் கற்பித்தார்.

ஸ்ரீரங்கத்து வைஷ்ணவரும் திருவானைக்காத் துருக்களும் சமயத்
துவேஷத்தால் சண்டைசெய்ய, அவர்களைச் சமாதானப்
படுத்தப் பாடியது.

91, சீரங்கத்தாருந்திருவானைக்காவாரும்
போரங்கமாகப்பொருவதேன் - ஓரங்கள்
வேண்டாமிதென்னவிவரந்தெரியாதோ
ஆண்டானுந்தாதனுமானால்.

**இ - ள்.** சீரங்கத்தாரும் - ஸ்ரீரங்கத்திலுள்ள வைணவரும், திருவானைக் காவாரும் - திருவானைக் காவிலுள்ளசைவரும், அங்கம் ஆகபோர் பொருவது ஏன் - (உரிய) ஆதாரங்களோடு சண்டைசெய்தற்குக் காரணம்யாது, (இவர்கள் தெய்வங்கள்) ஆண்டானும் தாதனும்ஆனால் - சேஷியும் சேஷபூதனும் ஆயின், ஒரங்கள் வேண்டாம்-பக்ஷபாதச் சொற்கள் வேண்டாம், இதென்ன-இதுஎன்ன ஆச்சரியம், விவரம்தெரியாதோ - விவரந்தெரியமாட்டாதா, எ - று.

அங்கம் - ஆறுசாஸ்திரங்களெனினுமாம், சேஷி-பரமாத்மா, சேஷபூதன்-ஜீவாத்மா, ஆண்டான் தாதன் என்கிற சொற்களினாலேயே சிவபெருமான்இறைவனென்றும், திருமால் அடிமை என்றும் விளங்குகின்றபடியால் பரத்துவ நிர்ணயத்துக்குச் சாஸ்திரஆதாரங்கள் தேடவேண்டியதில்லை என்பது கருத்து.

**கன்னபுரம் சவரி நாராயணப்பெருமாள் திருநக்ஷத்திரத்தைக் குறித்துப் பாடியது.**

92. உத்திரத்துக்கோர்நாளுரோகணிக்குப்பத்தாநாள்
சித்திரைக்குநேரேசிறந்தநாள் - எத்திசையுங்
காராரும்பூஞ்சோலைக்கன்னபுரம்வாழ்சவரி
நாராயணன்பிறந்தநாள்.

**இ - ள்.** எத்திசையும் - எந்தத்திக்கிலும், கார்ஆரும் - மேகமண்டலத்தை யளாவிய, பூஞ்சோலை - பூஞ்சோலைகள்சூழ்ந்த, கன்னபுரம்வாழ்-கன்னபுரத்தில்வசிக்கின்ற, சவரிநாராயணன் பிறந்தநாள் - சவரிநாராயணன் ஜநிமித்தநாள், உத்திரத்துக்கு ஓர்நாள் - உத்திரத்துக்குஅடுத்த ஒன்றாவதுநாள், உரோகணிக்கு பத்தாம்நாள் - உரோகணிக்குப் பத்தாவதுநாள், சித்திரைக்குநேரே சிறந்தநாள் - சித்திரைக்குநேராய் மேலானநாள், எ - று.

நாள் - நக்ஷத்திரம், உத்திரத்துக்கு அடுத்ததும், உரோகணிக்குப் பத்தாவதும், சித்திரைக்கு முற்பட்டதுமாகிய நட்சத்திரம் அஸ்தம் என்றறிக. சவரிநாராயணன் பிறந்தநாள் அஸ்தம் என்பது கருத்து.

**சிவபெருமானை நஞ்சுணியெனப் பாடியது.**

93. சிரித்துப்புரமெரித்தான்சிந்துரத்தைப்பற்றி
உரித்துதிரம்பாயவுடுத்தான் - வருத்தமுடன்
வாடுமடியாருடனேவானவருந்தானவரும்
ஓடுபயந்தீர்த்தநஞ்சுணி.

**இ - ள்.** வருத்தமுடன் - துன்பத்தோடு, வாடும் அடியாருடனே - வாட்டமடைந்த அடியவர்களுடன், வானவரும் தானவரும் - தேவரும் அசுரரும், ஓடு பயம் - ஓடுதற்கேதுவாகிய பயத்தை, தீர்த்த - நீக்கின, நஞ்சுஉண்ணி - விஷத்தையுண்டோனாகிய சிவபெருமான், சிரித்துபுரம் எரித்தான்-நகைத்து முப்புர

ங்களைநீக்கினான், சிந்துரத்தைப்பற்றி - யானையைப்பிடித்து, உரித்து-அதின்தோலையுரித்து, உதிரம்பாய - ரத்தம்பெருகும்படி, உடுத்தான் - போர்த்துக்கொண்டான், எ - று.

சிந்துரம் என்றது கயமுகாசுரனை.

திருவாலங்குடியில் தக்ஷிணாமூர்த்தியைத் தரிசிக்கும்போது பாடியது.

94. ஆலங்குடியானை யாலாலமுண்டானை
ஆலங்குடியானென்றார்சொன்னார் - ஆலங்
குடியானேயாயிற்குவலயத்தோரெல்லாம்
மடியாரோமண்மீதிலே.

இ - ள். ஆல் அம் குடியானை - கல்லால மரநிழலை அழகிய உறைவிடமாகக்கொண்டவனை, ஆலாலம் உண்டானை - ஆலாலவிஷத்தை யுட்கொண்டவனை, ஆலங்குடியான்என்று ஆர்சொன்னார் - விஷத்தைக்குடிக்க மாட்டானென்று யார்சொன்னார், ஆலங்குடியானே ஆயின் - (அந்த) விஷத்தை அவன் குடியானாயின், குவலயத்தோர் எல்லாம்-பூமண்டலத்திலுள்ளார் எல்லாம், மண்மீதிலே மடியாரோ - மண்ணின்மீது மாண்டுவிழ மாட்டார்களா, எ - று.

ஆல் அம்குடியான் என்றது சநகாதியர்க்கு அருள்செய்யும்பொருட்டுக் கல்லாலினிழலிலெழுந்தருளிய தக்ஷிணாமூர்த்தியை. ஆலாலமுண்டது-திருப்பாற்கடலைக் கடைந்தகாலத்தில் அதிலுண்டாகிய நஞ்சைக்கண்டு அஞ்சியோடிய தேவர் முதலியோர்பயந் தீர்த்தற்பொருட்டு, ஆலங்குடியான் என்பது திருவாலங்குடியிலுள்ளான் என்னும்பொருள் படுதல்காண்க.

கங்கைகொண்ட சோளேச்சுரத்துச் சிவபெருமானைத்தரிசித்து அவரைச் சிறப்பித்துப் பாடியது.

95. காவலனெங்கள்கனவைப்பாஞ்சோளேசன்
மாவலிகங்கைமணிவாரி - ஆவனலென்
றப்புளங்கைதோய்க்கவதில்வாரியமுத்தைக்
கொப்புளமென்றூதுங்குரங்கு.

இ - ள். காவலன் - அடைந்தாரைக் காக்குந்தொழில்வல்லவன், எங்கள் கனவைப்பு ஆம் சோளேசன் - எங்களுக்குப்பெரிய நிக்ஷேபமாகிய கங்கைகொண்ட சோளேச்சரத்தான். (அவனது) மாவலிகங்கை மணி - மிகுந்த வலியுடன் பிரவகிக்கும் கங்கையின் மாணிக்கங்களை, குரங்குவாரி - (சில) குரங்குகள் அள்ளி, ஆ அனல்என்று - ஆ நெருப்பென்று, அப்புள் - நீரினுள்ளே, அங்கை தோய்க்க - அங்கையைத்தோய்க்க, குரங்கு - சிலகுரங்குகள், அதில் வாரிய முத்தை - அதில் அள்ளியமுத்துக்களை, கொப்புளம்என்றூதும் - கொப்புளமென்று வாயினால் ஊதும், எ - று.

சோழநாட்டிலுள்ள இத்திருப்பதியி லெழுந்தருளிய சிவபெருமானுக்கு கங்கைகொண்ட சோளேச்சரத்தானென்று திருநாமமாகையால், அத்திருப்பதியிலுள்ள ஆறு "மாவலிகங்கை" எனப்பட்டது. கங்கைகொண்ட சோளேச்சரத்தான் என்பது சிவபெருமான் திருநாமம் என்பதற்குச் செய்யுள்:—

அன்னமாய்விசும்புபறந்தயன்றேட வங்ஙனேபெரியநீசிறிய
வென்னையாள்விரும்பியென்மனம்புகுந்த வெளிமையையென்றுநான்மறவேன்
முன்னமாலறியாவொருவனுமிருவர் முக்கணுநாற்பெருந்தடந்தோட்
கன்னலேதேனேயமுதமேகங்கை கொண்டசோளேச்சரத்தானே.

தில்லைமூவாயிரவரில் சிலர், நடேசர் கையிலேந்தியமான் அவர் திருமுகத்துக்கு நேராகத் தன்முகத்தையும், முன்னங்கால் களையும் மேலேதூக்கி நிற்பதற்குக் காரணங் கற்பித்துப் பாடவேண்டுமெனப் பாடியது.

96. பொன்னஞ்சடையறுகம் புல்லுக்கும் பூம்புனற்கும்
தன்னெஞ்சுவகையுறத்தாவுமே - அன்னங்கள்
செய்க்கமலத்துற்றுலவுந்தில்லைநடராசன்
கைக்கமலத்துற்றமான் கன்று.

இ - ள். அன்னங்கள் - அன்னப்பறவைகள், செய்கமலத்து-வயல்களிலுள்ள தாமரைமலர்களின்மீது, உற்றுஉலவும் - பொருந்தியுலாவுகின்ற, தில்லை-திருத்தில்லையிலெழுந்தருளிய, நடராஜன் - நடராஜனது, கைக்கமலத்து-கையாகிய தாமரைமலரிலிருக்கிற, மான்கன்று - மான்கன்றானது, பொன் அம்சடை - பொன்போலும் அழகிய சடையிலணிந்திருக்கிற, அறுகம்புல்லுக்கும், அறுகம்புல்லின் பொருட்டும், பூபுனற்கும்-அழகிய நீரின்பொருட்டும், தன்னெஞ்சு உவகை உறதாவும் - தன்மனத்தில் களிப்புமிகும்படி தாவாநிற்கும், எ-று.

அறுகம்புல் - அன்பர்சாத்தினது. புனல்-கங்கைநீர்.

இஞ்சி குடியிலிருக்கும் தாசியாகிய கலைச்சியென்பவள் இவரை மதியாதிருந்ததனால் கோபங்கொண்டு அவள்மீது பாடிய வசை.

97. ஏய்ந்ததனங்களிரண்டுமிருபாகற்காய்
வாய்ந்தவிடைசெக்குலக்கைமாத்திரமே - தேய்ந்தகுழல்
முக்கலச்சிக்கும்பிடிக்குமூதேவியாள்கமலைக்
குக்கலிச்சிக்குங்கலைச்சிக்கு.

இ - ள். தேய்ந்தகுழல் முக்கலச் சிக்கும்பிடிக்கும் மூதேவியாள்-குறுகின கூந்தலில் முக்கலச்சிக்குபிடித்த மூதேவியும், கமலை குக்கல் இச்சிக்கும் கலைச்சிக்கு - கமலை நகரிலுள்ள நாய் விரும்புகின்ற கலைச்சியென்னும் பெயருள்ள

வளுமாகிய இவளுக்கு, ஏய்ந்த தனங்கள் இரண்டும் - பொருந்திய தனங்களிரண்டும், இருபாகற்காய் - இரண்டு பாகற்காய்களை நிகர்ப்பன, வாய்ந்த இடை - பொருந்திய இடையானது, செக்கு உலக்கைமாத்திரமே - செக்குலக்கையின் அளவுள்ளதேயாம், எ - று.

மூங்கலச்சிக்கு - மிகுந்த சிக்கு.

௯௮ கலைச்சியின்தாயார் வேண்டுகோளுக் கிரங்கிப்பாடிய புகழ்ச்சி.

98. நஞ்சுகுடிகொண்டகணைநாலுந்தெரிந்தாமதன்
இஞ்சிகுடிதன்னிலும்வந்தெய்வானோ - விஞ்சு
முலைச்சிகரத்தாலழுத்திமுத்தமிட்டுச்சற்றே
கலைச்சிகரத்தாலணைத்தக்கால்.

இ - ள். கலைச்சி - கலைச்சியென்பவள், விஞ்சும் - (நாளுக்குநாள்) விருத்தியடைகின்ற, முலைச்சிகரத்தால் அழுத்தி - தன்முலை முகட்டாலழுத்தி, முத்தமிட்டு - முத்தங்கொடுத்து, சற்றே - சிறிதுபொழுது, கரத்தால் அணைத்தக்கால் - கையால் அணைத்துக் கொள்ளுவளாளுல், மதன் - மன்மதனானவன், நஞ்சுகுடிகொண்ட - விஷமானது குடிகொண்டிருக்கிற, கணைநாலும் தெரிந்து - நான்குபாணங்களையும் தெரிந்தெடுத்துக்கொண்டு, இஞ்சிகுடி தன்னிலும்வந்து - இஞ்சிகுடியென்னும் இவ்வூரிலும்வந்து, எய்வானோ - என்மீது பிரயோகிப்பானோ, எ - று.

கணைநாலும் என்றது தாமரைமலர், மாமலர், அசோகமலர், முல்லைமலர் என்பவற்றை. நீலமலர் கொல்லுமியல்புள்ளதாதலால் அதனையொழித்து இந்நான்கையே கூறினர். தாமரைமலர் முதலியவைகட்கு முறையே வினைப்பூட்டுதலும், பசலைபோர்த்தலும், உணவையொழித்தலும், கிடக்கச்செய்தலும் குணங்களாம்.

வைத்தீசுரன்கோயிலில் சுவாமி தரிசநம் செய்யும்போது பாடிய நிந்தாஸ்துதி.

99. தீத்தானுன்கண்ணிலே தீத்தானுன் கையிலே
தீத்தானுமுன் புன்சிரிப்பிலே - தீத்தானுன்
மெய்யெலாம் புள்ளிருக்குவேளூரா வுன்னையெந்தத்
தையலாளெப்படிச்சேர்ந்தாள்.

இ - ள். புள்ளிருக்குவேளூரா - புள்ளிருக்குவேளூரி லெழுந்தருளியிருக்கும் சிவபெருமானே, உன்கண்ணிலே தீ - உன் கண்ணிலிருப்பது (மன்மதனையெரித்த) நெருப்பு, உன்கையிலே தீ-உன்கையிலிருப்பது (தாருகாவனத் திருடிகள் உன்னைக்கொல்ல ஏவின) நெருப்பு, உன்புன்சிரிப்பிலே தீ-உன்புன்சிரிப்பிலிருப்பது (முப்புரத்தையெரித்த) நெருப்பு, (அன்றியும்) உன் மெய்யெல்லாம் தீ - உன் திருமேனிமுழுதும் நெருப்புருவமா யிருக்கின்றது, (இப்படியி

ருக்க) உன்னை - நின்னை, இந்தத்தையலாள் - இந்தத் தையற்சீரையுடுத்தவள், எப்படிசேர்ந்தாள் - (சீரையும் தானும்வேவாமல்) எவ்வாறு கூடினாள், (இவளுக்கு அக்கினிஸ்தம்பநவித்தை தெரியுமோ), எ - று.

தையலாள்-தையனாயகியம்மை. இது இத்தலத்தி லெழுந்தருளியிருக்கும் பிராட்டியார் திருநாமம்.

### திருக்கருவை நல்லூரில் களாமரத்தின்கீழே யெழுந்தருளியிருக்கும் பால்வண்ணநாதரைத் தரிசித்து அவர்மீது பாடிய மொழிமாற்று.

100. வெண்ணெய்திருடியுண்டவேணியரனிருக்கக்
கண்ணன்மேல்வைத்தகளவேது - பெண்ணைத்
தலையிற்சுமந்தான்மால்சர்ப்பத்திலேறி
அலையிற்றுயின்றானரன்.

இ - ள். வெண்ணெய் திருடியுண்ட கண்ணன் இருக்க - திருவாய்ப்பாடியில் வெண்ணெய்யைத் திருடிப்புசித்த க்ருஷ்ணனிருக்க, (அவன்மீது களவை வையாமல்) வேணிஅரனார்மேல் களவுவைத்தது ஏது - சடாபாரத்தையுடைய சிவபெருமான்மீது களவைவைத்ததற்குக் காரணம்யாது. அரன்பெண்ணைத் தலையில்சுமந்தான் - சிவபெருமான் (கங்கையென்னும்) பெண்ணைச் சிரசிற்றாங்கினான், மால்சர்ப்பத்தில் ஏறி அலையில்துயின்றான் - திருமால் ஆதிசேஷன் மீதேறித் திருப்பாற்கடலில் கண்வளர்ந்தான், எ - று.

களவு - திருட்டுத்தனம், களாமரம். இவற்றை முறையே மாலுக்கும் அரனுக்குங்கொள்க.

### தண்டங்கூரிலுள்ளவர்கள் பண்டநிறைகுறையவிற்றதைக் கண்டு அவர்கள்மீது வசையாகப் பாடியது.

101. தண்டங்கூர்மாசனங்காள்சற்குணர்நீரென்றிருந்தேன்
பண்டங்குறையவிற்றபாவிகாள் - பெண்டுகளைத்
தேடியுண்ணவிட்டீர்தெருக்கள்தெருக்கடோறும்
ஆடிமுதலானிவரைக்கும்.

இ - ள். தண்டங்கூர் - தண்டங்கூரிலுள்ள, மாசனங்காள்-மிகுதியாகிய ஜனங்களே, நீர் சற்குணர் என்று இருந்தேன்-நீங்கள் நற்குணமுள்ளவர்களென்று இருந்தேன், பண்டம்குறையவிற்ற பாவிகாள்-பண்டத்தைக்குறைய நிறுத்துவிற்றபாவிகளே, ஆடிமுதல் ஆனிவரைக்கும் - ஆடிமாசமுதல் ஆனிமாசம் வரைக்கும், தெருக்கள் தெருக்கள்தொறும் - எல்லாத்தெருக்களிலும், பெண்டுகளை - உங்கள் மனைவியரை, தேடி உண்ணவிட்டீர் - சம்பாதித்து உண்ணும் படிவிட்டீர்கள், எ - று.

இப்படிப் பாடினவுடன், தெருக்கள்தோறும் பண்டம் விற்றுக்கொண்டிருந்த பெண்கள் ஒருவருஷகாலம் அந்தத் தெருக்களிற்றானே இங்குமங்குமாய் அலைந்துகொண்டிருந்தார்கள் என்பர்.

கம்பரைப் பரிகசித்துப் பாடியது.

102. நாராயணனை நராயணனென்றே கம்பன்
ஓராமற் சொன்ன வுறுதியால் - நேராக
வாரென்றால் வர் என்பேன் வாளென்றால் வள் என்பேன்
நாரென்றால் நர் என்பேன் நான்.

இ - ள். கம்பன் - கம்பனெனவன், ஓராமல் - ஆராயாமல், நாராயணனை நராயணன் என்று சொன்ன உறுதியால் - நாராயணனை நராயணனென்று சொன்ன உறுதியைக்கொண்டு, நான் - நானும், நேராக-செவ்வையாக, வார் என்றால்வர் என்பேன் - வாரென்றால்வர் என்பேன், வாள் என்றால்வள் என்பேன் - வாளென்றால்வள் என்பேன், நார் என்றால் நர் என்பேன் - நாரென்றால்நர் என்பேன், எ - று.

கம்பர் குறுக்கல் விகாரம் என்னும் இலக்கணம்பற்றி நாராயணனை நராயணன் என்று பாடிய செய்யுள் வருமாறு:-

ஆதியரியோ நமநராயணர் திருக்கதையறிந்தனு தினம்பரவுவோர்
நீதியனுபோகநெறி நின்றுநெடுநாளநினிறந்துசெகதண்டமுழுதுக்
காதிபர்களாயரசுசெய்துளவினைத்ததுகிடைத்தருள்பொறுத்துமுடிவில்
சோதிவடிவாயழிவில்முத்திபெறுவாரெனவுரைத்தசுருதித்தொகைகளே.

நாகபட்டணம் தேவடியாளொருத்தி பாடிக்கொண்டிருப்பதைக்
கேட்டுத் தன்செவிக் கினிமையாயிராமையால்
அவளைப் பரிகசித்துப் பாடியது.

103. வாழ்த்ததிருநாகைவாகானதேவடியாள்
பாழ்த்தகுரலெடுத்துப்பாடினாள் - நேற்றுக்
கழுதைகெட்டவண்ணான் கண்டேன்கண்டேனென்று
பழுதையெடுத்தோடிவந்தான்பார்.

இ - ள். வாழ்த்த திருநாகைவாகு ஆன தேவடியாள் - யாவராலும் வாழ்த்துதல்பெற்ற திருநாகையிலிருக்கும் அழகாகிய தேவடியாள், பாழ்த்தகுரல் எடுத்துப்பாடினாள், தன்பாழான குரலையெடுத்துப் பாடினாள், (அக்குரலைக் கேட்டவுடன்) நேற்று கழுதைகெட்ட வண்ணான் - நேற்றுத் தன்கழுதையையிழந்த வண்ணான், கண்டேன் கண்டேன் என்று - (நேற்றுக் காணாமற்போன என்கழுதையை) கண்டேன் கண்டேனென்று, பழுதையெடுத்து ஓடிவந்தான் - (கட்டுதற்கு) கயிற்றையெடுத் தோடிவந்தான், பார் - பார், எ - று.

அவள் குரலுக்கும் கழுதையின் குரலுக்கும் பேதமில்லையென்பது கருத்து

### திருத்துருத்தியில் சுவாமியைத் தரிசித்தபொழுது பாடியது.

104. காலையிலும்வேலைகடையக்கயிறாகும்
மாலையிலும்பூமுடித்துவாழுமே - சோலைசெறி
செய்யிலாரம்பயிலுஞ்செந்துருத்திமாநகர்வாழ்
பொய்யிலார்மெய்யிலிடும்பூண்.

**இ - ள்.** சோலைசெறி - சோலைகள்நெருங்கிய, செய்யில் ஆரம்பயிலும் - வயல்களில் முத்துக்கள் மிகுந்திருக்கிற, செந்துருத்தி மாநகர்வாழ் - செவ்விய திருத்துருத்தியென்னும் பெரிய நகரத்தில் உறைகின்ற, பொய்யிலார் - அழிவில்லாதவராகிய சிவபெருமானவர், மெய்யில் இடும்பூண் - திருமேனியிலணிந்த ஆபரணமானது, காலையிலும் - காற்றைப்புசிக்கும், வேலைகடையக் கயிறாகும் - திருப்பாற்கடலைக் கடைதற்குக் கடைகயிறாகும், மாலையிலும் - திருமால் சர்வசம்ஹாரகாலத்தில் உண்ணுகின்ற, பூ - பூமியை, முடித்து வாழும் - சிரசிமேலேற்றிவாழும், எ - று.

பூண் சர்ப்பமாதலால் இவ்வாறு கூறினர். காலையிலும் மாலையிலும் பூமுடித்துவாழும் எனச் சொன்னயங்காண்க.

### வைத்தீச்சுரன்கோயிலில் சுவாமியைத்தரிசித்து அவ்விடத்து மருந்தாகக் கொடுக்கப்படுகிற மண்ணைக்குறித்துப் பாடியது.

105. மண்டலத்திநாளும்வயித்தியராய்த்தாமிருந்து
கண்டவினைதீர்க்கின்றார்கண்டீரோ - தொண்டர்
விருந்தைப்பார்த்துண்டருளும்வேளூரெந்நாதர்
மருந்தைப்பார்த்தாற்சுத்தமண்.

**இ - ள்.** மண்டலத்தில் - உலகத்தில், நாளும் - நாள்தோறும், தாம்வயித்தியராய் இருந்து - தாம் வயித்தியராயிருந்துகொண்டு, கண்டவினைதீர்க்கின்றார் - உயிர்களுக்கு உண்டாகிய வினைகளையெல்லாம் போக்குகின்றார், கண்டீரோ - (உலகத்தீர்களே) பார்த்தீர்களோ, தொண்டர்விருந்தை - அன்பரிடும்விருந்தை, பார்த்து உண்டருளும் - பார்த்துத் திருவமுது செய்தருளுகிற, வேளூர் எம்நாதர் - புள்ளிருக்குவேளூரி லெழுந்தருளியிருக்கிற எம்மிறைவரது, மருந்தைப்பார்த்தால் - மருந்தைநோக்கினால், சுத்தமண் - வெறுமண்ணேயாம், எ - று.

வைத்தீச்சுரன்கோயில் சுவாமிதரிசனம் செய்யப்போவோர் தமக்குள்ளதேகப்பிணி நீங்கும்பொருட்டு அத்தலத்துமண்ணை மருந்தாகஉட்கொள்ளும் சாம்பிரதாயம் இன்றும்உள்ளது. இதனை அடியில்வரும் செய்யுளாலுமுணர்க:—

விரிந்தபுகழ் புள்ளிருக்கு வேளூர்வைத்தியனார்
பரிந்துவினை தீர்க்கவல்ல பண்டிதர்காணம்மானை

பரிந்துவினை தீர்க்கவல்ல பண்டிதரேயாமாயின்
மருந்துவிலை கைக்கூலி வாங்காரோவம்மானை.
வாயிலே மண்போட்டு வாங்குவர்காணம்மானை.

### பாண்டிநாட்டுச் சிவஸ்தலங்கள்.

106. கூடல்புனைவாயில்குற்றாலமாப்பனூர்
ஏடகநெல்வேலியிராமேசம் - ஆடானை
தென்பரங்குன்றஞ்சுழியல்சென்றிருப்புத்தூர்காசி
வன்கொடுங்குன்றம்பூவணம்.

கூடல்-மதுரை. மற்றவை வெளிப்படை.

### ஒருவனைநோக்கி, நல்லோருக்குதவி முதலியவற்றைச் செய்யென்று பாடியது.

107. பண்புளருக்கோர்பறவைபாவத்திற்கோரிலக்கம்
நண்பிலரைக்கண்டக்கால்நாற்காலி - திண்புவியை
ஆள்வார்மதுரையழகியசொக்கர்க்கரவம்
நீள்வாகனநன்னிலம்.

இ - ள். பண்பு உளருக்கு ஓர் பறவை-நற்குண முடையார்க்கு ஒருபறவை, பாவத்திற்கு ஓர் இலக்கம்-பாவத்துக்கு ஒரு எண், நண்பு இலரைக் கண்டாக்கால் நாற்காலி நட்புக்குண மில்லாதவரைக் கண்டால் நாற்காலி, திண்புவியை யாள்வார் - வலியமைந்த நிலவுலகத்தை யாள்பவராகிய, மதுரை அழகிய சொக்கர்க்கு - மதுரையி லெழுந்தருளியிருக்கும் அழகாகிய சொக்கநாதசுவாமிக்கு, அரவம் நீள்வாகநம் நல்நிலம் - பாம்பு, பெரியவாகநம், நல்லநிலம், எ - று.

ஓர்பறவை - ஈ. ஓர் இலக்கம்-அஞ்சு. நாற்காலி - நான்குகால்களை யுடையதாகிய விலங்கு, அரவம் வாகநம் நிலம் - பணி, விடை, செய். இவற்றை முறையே பண்புளர் முதலியோர்க்குப் பின்னே சேர்த்து, பண்புளருக்குக்கொடு, பாவத்துக்குப்பயப்படு, நண்பிலரைக்கண்டக்கால் விலங்கு, (விலகு) சொக்கநாதர்க்கு பணிவிடைசெய், எனவுரைக்க. விடை-இடபம். கண்டக்கால் நாற்காலி என்பதை, காணிலிருநாற்காலி எனப்பாடமோதி, காணில் பரிகரி (நீக்கு) எனவுரைத்தலுமுண்டு. பரி - குதிரை, கரி-யானை, இருநாற்காலி - இரண்டு நாற்காற் பிராணிகள்.

### அழகர்தமது பாஞ்சசந்யத்தை முழக்காவிடின் பாண்டவரைவரும் தோற்பர் என்று பாடியது.

108. சதுரங்கர்சங்கத்தழகர்செங்கைச்சங்கை
அதரமிசைவைத்திலரேயாயின் - முதலை

வருங்குளத்தின்முண்டகக்கைவைப்பரன்றேயன்று
பொருங்களத்தினூற்றுவர்முன்போய்.

இ - ள். சதுர் - சதுரப்பாட்டையுடைய, அரங்கர் - திருவரங்கர், சங்கத்து அழகர் - சங்கத்துக்குத் தலைவராயிருந்த அழகர், (அவர்) செங்கைசங்கை-செவந்த தமதுகையிலுள்ள பாஞ்சசந்யம் என்னும் சங்கை, அதரம்மிசை - தமது திருவதரத்தின்மீது, வைத்திலரே ஆயின் - வைத்து முழக்கிலராயின், அன்று - அக்காலத்தில், முதல் ஐவரும் - முதன்மைபெற்ற ஐவரும், பொரும் களத்தில் - யுத்தகளத்தில், நூற்றுவர் முன்போய் - (துரியோதநாதியராகிய) நூறுபேருக்கெதிரே சென்று, குளத்தில் - (தம்) நெற்றியில் (தலையில்), முண்டகம் கைவைப்பர் அன்றே - தாமரைமலர்போன்ற (தமது) கையைவைத்துக் கொண்டழுவாரல்லவா, எ - று.

சங்கை அதரமிசைவைத்ததாவது, பாரதயுத்தத்தில் அருச்சுனனுக்குச் சாரதியாயிருந்து பாண்டவர்க்கு வெற்றியுண்டாகவும் துரியோதநாதியர் மனங்கலங்கவும் தமது பாஞ்சசந்யமென்னும் சங்கைவாயில்வைத் தூதியது.

கொண்டத்தூர் தண்டைக்காலம்மை சமைத்த பூசுணிக்காய்க்
கறியைவியந்து பாடியது.

109. கண்டக்காற்கிட்டுங்கயிலாயங்கைக்கொண்டுட்
கொண்டக்கால்போட்சங்கொடுக்குமே - கொண்டத்தூர்
தண்டைச்காலம்மைசமைத்துவைத்தபூசுணிக்காய்
அண்டர்க்காமீசருக்குமாம்.

இ - ள். கொண்டத்தூர் - கொண்டத்தூரில் வாழ்கின்ற, தண்டைக்காலம்மை சமைத்துவைத்த-தண்டைக்காலம்மையென்பவள் பாகஞ்செய்துவைத்த, பூசுணிக்காய்-பூசுணிக்காய்கறியை, கண்டக்கால் - கண்டால், கயிலாயம் இட்டும் - கைலாசவின்பங்கிடைக்கும், கைக்கொண்டு - கையிலெடுத்து, உட்கொண்டக்கால் - உண்டால், மோக்ஷங்கொடுக்கும் - முத்தியின்பத்தைத்தரும், (மேலும்) அண்டர்க்கு ஆம்-தேவர்களுக் குரியதாகும், ஈசருக்கும் ஆம்-சிவபெருமானுக்கும் உரியதாகும், எ - று.

வெறிவிலக்கல்.

110. போலநிறமாவார்க்குப்பூணாரமாவாரை
ஏலவதைசெய்தாலியல்பாமோ - சாலப்
பழிக்கஞ்சுந்தென்மதுரைப்பாவையிருநான்கு
விழிக்கஞ்சன்சோமனலைவேந்து.

இ - ள். இருநான்கு விழிகஞ்சன்போல-எட்டுக்கண்களையுடைய பிரமன் போலவும், சோமன்போல - சந்திரன்போலவும், அலைவேந்துபோல - கடற்கர.

சனாகிய வருணன்போலவும், நிறம் ஆவார்க்கு - (முறையே) செம்மை வெண்மைகருமை என்னும் நிறவேற்றுமையுடைய இப்பெண்ணரசியார்பொருட்டு, பூணாரம் ஆவாரை-ஆட்டை, ஏலவதைசெய்தால்-பொருந்தக் கொலைசெய்தால், இயல்புஆமோ - (அது) நல்லியற்கையாகுமோ, (ஆகாதுஅன்றியும்) தென்மதுரைப்பாவை - தென்மதுரையிலுள்ள பாவைபோலும் உருவுடைய எமதுபெண்ணும், சாலபழிக்கு அஞ்சும் - மிகவும் பழிக்குஅஞ்சுவாள்.

ஆட்டுமாமிசத்தைச் சிறுகஅரிந்து உலர்த்துவோர் கயிற்றில்கோத்து ஆரம்போலத் தோரணங்கட்டுதலால் ஆட்டைப் பூணாரமென்றார். நிறமாவாரை எனப்பாடமோதி, செம்மை வெண்மை கருமை நிறங்களையுடைய ஆடுகளையெனப்பொருள் கூறுவாருமுளர்.

மருதீசர்மீது நாமதகநத்தைக்குறித்துப் பாடியது.

111. கண்ணனிடுங்கறிபுங்காட்டுசிறுத்தொண்டரன்பிற்
பண்ணுசிறுவன்கறிப்பற்றாதோ - தண்ணோடு
மட்டியையுஞ்சோலைமருதீசரேபன்றிக்
குட்டியையேன்றீத்தீர்குறித்து.

இ - ள். கண்ணன் இடுங்கறியும் - கண்ணனிட்டகறியும், காட்டு - குறிக்கப்பட்ட, சிறுத்தொண்டர் சிறுத்தொண்டநாயனார், அன்பின் - அன்போடு, பண்ணு - சமைத்துவைத்த, சிறுவன் கறியும் - சிறுவனாகிய சீராளன் கறியும், பற்றாதோ - போதாதோ, தண் - குளிர்ச்சியாகிய, ஓடும் - பெருகியோடுகின்ற, மட்டு இயையும் - தேன்பொருந்திய, சோலை-சோலைசூழ்ந்த, மருதீசரே-திருவிடைமருதூரீசரே, பன்றிக்குட்டியை - பன்றியின் குட்டியை, குறித்து - நினைத்து, ஏன்தீத்தீர் - ஏன் தீயச்செய்தீர்.

வராகவுருக்கொண்டதனால் பன்றியென்றது திருமாலை. குட்டியென்றது அவர் புதல்வனாகிய மன்மதனை. கண்ணன்-கண்ணப்பன்.

கடைமொழிமாற்று.

112. மாடுதின்பான்பார்ப்பான்மறையோதுவான்குயவன்
கூடிமிகமண்பிசைவான்கொல்லனே - தேடி
இரும்படிப்பான்றன்செக்கானெண்ணெய்விற்பான்வண்ணான்
பரும்புடைவைதப்பும்பறை.

இ - ள். பறைமாடுதின்பான் - பறையன்மாடுதின்பான், பார்ப்பான்மறை ஓதுவான் - பார்ப்பான் வேதமோதுவான், குயவன் கூடிமிக மண்பிசைவான் - குசவன்சேர்ந்து மிகுதியாக மண்ணைப்பிசைவான், கொல்லன்தேடி இரும்பு அடிப்பான்—, செக்கான் எண்ணெய்விற்பான்—, வண்ணான் பரும்புடைவை தப்பும் - வண்ணான் பெரியசீலையைத்தப்புவான், எ - று.

இதுவுமது.

113. ஆயனுக்குக்கண்மூன் றாமாதிசிவனுக்கிருகண்
மாயனுக்குச்செங்கையிலேமான்மழுவாம் - நேயமுடன்
சங்கரற்குச்சங்காழிதான்மாலுக்காலமாம்
மங்கையிடத்தாற்காகுமண்.

இ - ள். ஆதிசிவனுக்கு கண் மூன்று ஆம்—, மாயனுக்கு இருகண் ஆம்— சங்கரற்கு செங்கையிலே மான் மழு ஆம் —, மாலுக்கு (செங்கையிலே) சங்கு ஆழிஆம் - திருமாலுக்குச்செவந்த கையில் சங்கசக்கரங்களாம், மங்கை இடத்தரற்கு ஆலம் ஆம்-உமாதேவியை யிடப்பாகத்திலுடைய சிவபிரானுக்கு(உணவு) விடமாம், ஆயனுக்கு மண் ஆம் - திருமாலுக்கு (உணவு) மண்ணாகும், எ - று.

இதுவுமது.

114. கொன்றைமலர்தரித்தான்கோபாலன்கோலெடுத்து
நின்றுகுழலூதினனீள்சடையோன் - பொன்றிகழும்
அக்கணிந்தான்மாயனரவணையிற்கண்வளர்ந்தான்
சிக்கலிலேவாழுஞ்சிவன்.

இ - ள். சிக்கலிலேவாழும் சிவன்கொன்றை மலர்தரித்தான்—, கோபாலன்—, கோல்எடுத்து நின்று குழல் ஊதினன்-மாட்டாங்கோலைக் கைக்கொண்டுநின்று வேய்ங்குழலையூதினன், நீள்சடையோன்-நீண்டசடையை யுடைய சிவபெருமான், பொன்திகழும் அக்குஅணிந்தான் - அழகுவிளங்குகின்ற அக்கு மாலையை யணிந்தான், மாயன் அரவு அணையில் கண்வளர்ந்தான் - திருமால் சர்ப்பசயநத்தில் நித்திரைசெய்தான், எ - று.

சிக்கல் - ஒருசிவஸ்தலம்.

திருச்செங்காட்டிலிருக்கும் சிவபெருமானை நிந்தாஸ்துதியாகப் பாடியது.

115. கண்ணபுரங்கோயிற்கதவடைத்துத்தாழ்போட்டார்
மண்ணையுண்டார்வெண்ணெயுண்டமாயனார் - எண்ணும்
சிரக்கப்பரையேந்திச்செங்காட்டிலீசர்
இரக்கப்புறப்பட்டாரென்று.

இ - ள். செங்காட்டில் ஈசர் - திருச்செங்காட்டி லெழுந்தருளி யிருக்குஞ் சிவபெருமானனவர், எண்ணும் - யாவரும் மதித்தற்குரிய, சிரம்கப்பரை ஏந்தி, தலையோடாகிய பாத்திரத்தையேந்தி, இரக்க புறப்பட்டார் என்று - இரக்கவெளிப்பட்டாரென்று, கண்ணபுரம்கோயில்-கண்ணபுரக்கோயிலின், கதவுஅடைத்து-கதவைமூடி, தாழ்போட்டார்-தாழிட்டார், வெண்ணெய் உண்டமாயனார்- வெண்ணையுண்ட திருமாலானவர், மண்ணைஉண்டார்-மண்ணையுண்டனர், எ-று.

கண்ணபுரக்கோயில் இவர்போனபொழுது மூடப்பட்டிருந்ததனாலும் திருமால்பூமியை உலகமுடிவுக்காலத்தில் உண்டருளுவனுதலாலும் இவ்வாறு கற்பித்துக்கூறினர். திருமால் மண்ணையுண்பதற்குக் காரணம் தன் மைத்துனனாகிய சிவபெருமான் கப்பரையேந்திப் பிச்சைக்குப் புறப்பட்டது.

திருவாரூர்த்தியாகராயர் திருநடநத்தைக்குறித்து நிந்தாஸ்துதியாகப் பாடியது.



116. திருந்தாடரவணியுந்தென்கமலையீசர்
இருந்தாடாதென்செய்திடுவார் - பொருந்த
ஒருகாலேயல்லவேயொண்டொடிக்காவன்
றிருகாலுஞ்சந்துபோனல்.

இ - ள். திருந்து - திருத்தமாகிய, ஆடு அரவு அணியும் - படமெடுத்தாடுமியல்புள்ள பாம்பைத்தரித்த, தென்கமலைஈசர் - தென்கமலை நகரிலெழுந்தருளிய சிவபெருமானுனவர், பொருந்த ஒருகாலே அல்லவே - பொருந்த ஒருதரமேயலலவே, ஒள்தொடிக்கு ஆ - ஒட்பமாகிய வளையலை யணிந்தவளாகிய பரவையின்பொருட்டு, அன்று - அந்நாள், இருகாலும் சந்துபோனல் - இரண்டுதரமும் தூதுபோனல், இருந்து ஆடாது என்செய்திடுவார் - இருந்து ஆடாமல் என்செய்வார், எ - று.

சந்துபோதல் - உண்டை விலகலுமாலும். திருநடநத்தைத் தூதுபோய் உண்டைவிலகிய பதனுலுண்டாகிய நோய் பொறுக்காமல் ஆடினதாகக் கற்பனை செய்யப்பட்டது. இருகாலும் என்பது இரண்டு கால்களாலும் என்றும் பொருள்படும்.

ஆமூர்முதலியார் என்கிற பிரபுவைப் புகழ்ந்து பாடியது.

117. உள்ளங்கால்வெள்ளெலும்புதோன்றவொருகோடி
வெள்ளங்காலந்திரிந்துவிட்டோமே - உள்ளபடி
ஆமூர்முதலியமரர்கோனிங்கிருக்கப்
போமூரறியாமற்போய்.

இ - ள். உள்ளபடி - உண்மையாக, ஆமூர்முதலி - ஆமூர் முதலியாரென்கிற, அமரர்கோன் இங்கு இருக்க - தேவேந்திரன் இவ்விடத்திருக்க, போம் ஊர் அறியாமல் போய் - போகவேண்டிய ஊர் இன்னதென் றறியாமற்சென்று, உள்ளங்கால் வெள் எலும்புதோன்ற - உள்ளங்காலிலுள்ள வெள்ளெலும்பு வெளிகாணும்படி, ஒருகோடி வெள்ளங்காலந் திரிந்துவிட்டோம் - வெகுகாலம் [திரி]ந்துவிட்டோம், எ - று.

ஆறுசாதிவரப்பாடுமெனச் சிலர்வேண்டப் பாடியது.

118. கம்மாளனங்கிக்கணக்கனெனவேதுதித்தார்
செம்மான்சதுரைத்திருவரசை - அம்மாகேள்

வாணியனும்பொன்னேரிவாழும்வெள்ளாளனுமே
சேணியனுமன்றேதெரிந்து.

இ - ள். அம்மாகேள் - அம்மாகேட்பாயாக, வாணியனும் - சரசுவதியை (மனைவியாக) உடையவனாகிய பிரமனும், பொன் ஏரி - இலக்குமியாகிய அழகியை மனைவியாகவுடையவனாய், வாழும் - வாழ்கின்ற, வெள் ஆளனும் - வெண்மையாகிய பாற்கடலை யுடையவனாகிய திருமாலும், சேணியனும் - சுவர்க்கலோகத்தை யுடையவனாகிய இந்திரனும், தெரிந்து - அறிந்து, செம்மான் சதுரை திருஅரசை - செவந்த மானைத்தாங்கிய சதுரகிரிக்கு வேந்தனாகிய சிவபெருமானை, கம்மாளன்-கபாலத்தையுடையவன், அங்கிக் கண்ணக்கன்-நெருப்புக் கண்ணையுடையவன், எனதுதித்தார்-என்று தோத்திரம் பண்ணினார்கள். எ-று.

செம்மான் - சக்கிலியன்.

திருவாரூர்த் தியாகராயருக்குத் திருமால் வாகனமானாரெனப் பாடியது.

119. பாரளக்குந்தூதுசெல்லும்பையரவின்மேனடிக்கும்
சீரகலிசாபத்தைத்தீர்க்குமே - ஊரருகில்
சண்டச்சகடுதைக்குந்தையலாய்கார்நீல
கண்டத்தாரூரான்கழல்.

இ - ள். தையலாய் - பெண்ணே, கார்நீலகண்டத்தார் - மிகக்கரிய கண்டத்தையுடைய சிவபெருமானானவர், ஊர் - ஏறிநடாத்திய, ஆன் - (திருமாலாகிய) இடபத்தின், கழல்-அடி, பார் அளக்கும் - பூமியையளக்கும், தூதுசெல்லும் - தூதுபோகும், பை அரவின்மேல் நடிக்கும் - படத்தையுடைய (காளிங்கன் என்னும்) பாம்பின்மீது நடனம்பண்ணும், சீர் அகலிசாபத்தை தீர்க்கும்- சிறப்பையுடைய அகலியையின் சாபத்தை நீக்கும், ஊர்அருகில்-ஊரருகிலுள்ள, சண்டம் - வேகமாக வோடுமியல்புள்ள, சகடு - வண்டியை, உதைக்கும் - உதைக்கும், எ - று.

பாரளந்தது திரிவிக்கிரமாவதாரத்தில். தூதுசென்றதும், அரவின்மேல் நடித்ததும், சகடுதைத்ததும் கிருஷ்ணாவதாரத்தில், அகலிகை சாபந்தீர்த்தது ராமாவதாரத்தில், நீலகண்டத்து ஆரூரான்கழல் எனப்பிரித்து, நீலகண்டத்தையுடைய திருவாரூரானது வாகனமாகிய திருமால் என்று பொருளுரைத்தலும் பொருந்தும். கழல் - திருவடி, அது இங்கு சிவபெருமானுடைய திருவடிநிலையாகிய திருமாலுக் காயிற்று.

திருவீழிச் சிவபெருமானுக்குத் திருமால் விடையானாரெனப் பாடியது.

120. காலாற்படியளக்குங்கண்ணிடந்துபூசிக்கும்
சேலாங்கமடமாஞ்சிங்கமாம் - பாலாகும்
ஆழியப்பிலேதுயிலுமைவர்க்குத்தூதாகும்
வீழியப்பரேறும்விடை.

இ - ள். வீழியப்பர் ஏறும்விடை - வீழியப்பர் ஏறிநடத்துகிற (திருமாலாகிய) இடபம், காலால் படிஅளக்கும் - அடியினால் பூமியையளக்கும், கண் இடந்துபூசிக்கும - கண்ணைத் தோண்டி (மலராகக்கொண்டு) அர்ச்சிக்கும், சேல் ஆம் - மச்சாவதாரமெடுக்கும், கமடம் ஆம் - கூர்மாவதார மெடுக்கும், சிங்கம் ஆம் - நரசிங்காவதாரமெடுக்கும், பால் ஆழியாகும் அப்பிலேதுயிலும் - பாற்கடலாகிய நீரிலேதூங்கும், ஐவர்க்குதூதாகும் - பஞ்சபாண்டவர்க்குத் தூதாகிச்செல்லும், எ - று.

கண்ணிடந்து பூசித்ததாவது - திருமால் நாள்தோறும் நியமமாய் ஆயிரந் தாமரை மலர்களைக்கொண்டருச்சித்து வருங்காலத்தில், இவரது பத்தியைச் சோதிக்கக்கருதின சிவபெருமான் ஒருமலரை மறைக்க, இவர் அக்குறையை நிரப்பத் தம்கண்ணைத்தோண்டி அருச்சித்தது. திருமால் படியளந்தது மாவலியின் வலியடக்க, மச்சாவதார மெடுத்தது சோமுகா சுரனைக் கொல்லுதற்கு, கமடமாகியது திருப்பாற்கடல் கடைகையில் மத்தாகிய மந்தரமலையைத் தாங்க. நரசிங்க மாகியது இரணிய கசிபனைக்கொன்று பிரகலாதனனைக் காத்தற்பொருட்டு. கமடம் - ஆமை.

மதுரைச் சொக்கநாதரைப் புகழ்ந்து பாடியது.

121. கடம்பவனச்சொக்கருக்குக்கண்ணன்றான்வேறோ
இடம்பெரியகண்ணொன்றையீந்தான் - உடம்பதனிற்
சொம்பாதியானான் சுமக்கவெருதானான்
அம்பானான்றேவியுமானான்.

இ - ள். கடம்பவனச் சொக்கருக்கு - மதுரைச்சொக்கநாதருக்கு, கண்ணன்தான் வேறோ - திருமால்தான் வேறுவனோ (ஆகான், ஏனெனின்), இடம் பெரியகண் ஒன்றை ஈந்தான் - பெரியதாகிய இடக்கண்ணொன்றைத் தந்தான், உடம்பதனில் சொம்பாதி யானான் - உடம்பில் சரிப்பாதியானான், சுமக்கஎருது ஆனான் - சுமக்க இடபமானான், அம்பு ஆனான்-பாணமானான், தேவியுமானான்-மனைவியுமானான், (ஆதலால்), எ - று.

பாதியானது - இறுதிக்காலத்தில் திருமேனியின் ஓர்பக்கத்தில் சேர்ந்திருந்தது. சுமக்க எருதானதும் அம்பானதும் திரிபுர சங்காரகாலத்தில், தேவியானது மோஹினியவதாரத்தில்.

திருக்கன்னபுரத்திலிருக்கும் திருமாலை நிந்தாஸ்துதியாகப் பாடியது.

122. கன்னபுரமாலேகடவுளிலுநீயதிகம்
உன்னிலுமோயானதிகமொன்றுகேள் - முன்னமே
உன்பிறப்போபத்தாமுயர்சிவனுக்கொன்றுமில்லை
என்பிறப்பெண்ணத்தொலையாதே.

இ - ள். கன்னபுரமாலே - திருக்கன்னபுரத்தி லெழுந்தருளிய திருமாலே, கடவுளிலும் - சிவபெருமானிலும், நீ அதிகம் - நீ உயர்ந்தவன், உன்னிலும் யான் அதிகம் - உன்னிலும் நான் உயர்ந்தவன், ஒன்றுகேள் - (நான் சொல்லுவதாகிய) ஒரு செய்தியைக்கேளாய், உயர்சிவனுக்கு ஒன்றும் இல்லை-உயர்ந்த சிவபெருமானுக்கு ஒருபிறப்புமில்லை, முன்னமே-முன்னே, உன் பிறப் போபத்து ஆம் - உன் பிறப்போபத்தாகும், என்பிறப்பு எண்ணத்தொலையாது- என்பிறப்பு அளவிடமுடியாது (ஆதலால்), எ - று.

ஒன்றுமில்லாதவனினும் பத்துள்ளவன் அதிகன், அவனினும் மிகப்பலவுள்ளவன் அதிகன், ஆதலால் இவ்வாறுகூறினார். இதில் சிவனுக்கு ஒன்றுமில்லையென் றிகழ்ந்ததுபோலக் கூறினும் பிறவியற்றவரெனப் புகழ்ந்ததாயிற்றெனக் கொள்க.

அமராவதி குருக்களிட்ட விருந்துண்டு அவனைப்புகழ்ந்து பாடியது.

123. ஆனைகுதிரை தரும்அன்னைதனைக்கொன்றகறி
சேனைமன்னரைக்காய்துன்றீயவரை - பூநெயுடன்
கூட்டியமுதிட்டான்குருக்களமராபதியான்
வீட்டிலுண்டுவந்தேன்விருந்து.

இ - ள். குருக்கள் அமராபதியான்-அமராபதிகுருக்கள் என்பவன், ஆனை கறி - ஆனைக்கறியும், குதிரைகறி - குதிரைக்கறியும், தரும் அன்னைதனைக் கொன்றகறி - பெற்றதாயைக்கொன்ற கறியும், சேனைமன் - கூட்டமாகப்பொருந்திய, நரைக்காய் - வெண்மையாய்க் காய்க்கிற, துன் - நெருங்கிய, தீ - மதுரமாகிய, அவரை (கறி) - அவரைக்காய்க்கறியும், பூநெய்யுடன்கூட்டி-பொலிவைத்தருகிற நெய்யுடன்கலந்து, அமுதுஇட்டான் - அமுது படைத்தான், வீட்டில் - (அவனது) வீட்டில், விருந்து உண்டுவந்தேன் - விருந்துண்டுவந்தேன், எ - று.

விருந்துண்டு உவந்தேன் எனப்பிரித்து, விருந்துண்டு களித்தேன் எனினும் பொருந்தும். ஆனைக்கு அத்தியென்னும் பெயருண்டாதலால் ஆனைக்கறி என்றது அத்திக்காய்க்கறியை என்றும், குதிரைக்குமா என்னும் பெயருண்டாதலால் குதிரைக்கறிஎன்றது மாங்காய்க்கறியைஎன்றும், குலைசாய்த்தவுடனே தனக்குத் தாயாயிருந்த மரத்தை யழித்தலால் அன்னைதனைக்கொன்ற கறி என்றது வாழைக்காய்க்கறியை என்றும் கொள்க. பூநெய் - தேன் என்பாருமுளர், அது ஒருவாற்றானும் பொருந்தாது.

திருவாரூரில் ஒருகாலவிசேஷத்தில் கோயிலுக்குப் போனபொழுது குருக்கள்மார் தியாகருக்கு வச்சிரப்பதக்கம் சமர்ப்பித்துக் கொண்டிருந்தார்கள், அதனால் சுவாமிதரிசநம் செய்வதற்குச் சற்றுநேரம் தாமதமானதைப்பற்றிக் கோவங்கொண்டு,

அந்த வச்சிரப்பதக்கம் அறவும் அக்தருக்கள் பிரார்த்
தனையின்படி மறுபடியும் பொருந்திப்போகவும்
பாடிய வசையும் வசைமீட்சியும்.

124. அன்னவயல்சூழ்ந்திருக்குமாரூரானெஞ்சத்தில்
இன்னம்வயிரமிருக்குமே - முன்னமொரு
தொண்டன்மகனைக்கொன்றுஞ்சோழன்மகனைக்கொன்றும்
சண்டன்மகனைக்கொன்றுந்தான்.

இ-ள். முன்னம் - முன்னே, ஒருதொண்டன் மகனைக்கொன்றும் - ஒப்பற்ற சிறுத்தொண்டனது புதல்வனாகிய சீராளனைக்கொன்றும், சோழன் மகனைக்கொன்றும் - மனுநீதிகண்ட சோழனது புதல்வனாகிய வீதிவிடங்கனைக் கொன்றும், சண்டன் மகனைக்கொன்றும் - சூரியன் மகனாகிய யமனைக்கொன்றும், அன்னம் - அன்னப்பறவைகள் வாழ்கின்ற, வயல்சூழ்ந்து இருக்கும் - வயல்கள் சூழ்ந்திருக்கின்ற, ஆரூரான் நெஞ்சத்தில் - திருவாரூரை யுடையவனாகிய சிவபெருமானது மனத்தில், இன்னம்வயிரம் இருக்குமே - இன்னம் வயிர மிருக்குமே, எ - று.

இருக்குமேயென்பதில் ஏகாரத்தை எதிர்மறையாக்கிவசைக்கும், அசையாக்கி வசைமீட்சிக்கும் கொள்க.

திருமலைராயனும் அதிமதுரகவியும் அறுபத்துநாலு தண்டிகைப்புலவர்
களும் கேட்டவினாக்களுக்குக் காளமேகப்புலவர் யமகண்டத்திலிருந்து
தக்க விடைகூறியதைக் குறித்து மகிழ்ந்து சம்மாநியாமல், பொறா
மையால் அவரை உபேக்ஷித்திருந்ததைப் பற்றி அவர்
சினங்கொண்டு திருமலைராயன் பட்டணத்தில்
மண்மாரிபெய்யப் பாடியவை.

125. கோளரிருக்குமூர்கோள்கரவுகற்றவூர்
காளைகளாய்நின்றுகதறுமூர் - நாளையே
விண்மாரியற்றுவெளுத்துமிகக்கறுத்து
மண்மாரிபெய்கவிந்தவான்.

இ - ள். கோளர் இருக்கும் ஊர்-கோள்சொல்வோர் வாழும் ஊர், கோள் கரவு கற்ற ஊர் - கோளையும் வஞ்சகத்தையும் கற்றிருக்கிற ஊர், காளைகள் ஆய் நின்று கதறும் ஊர் - இளைஞராய் நின்று கதறுகின்ற ஊர், (இது ஆதலால் இதில்) இந்தவான் - இந்தமேகம், நாளையே - நாளைக்கே, விண்மாரி அற்று-ஆகாயத்தினின்றும் மழைபொழிதலையொழிந்து, வெளுத்து - வெளுப்படைந்து, மிகக்கறுத்து - மிகவுங் கறுத்து, மண்மாரிபெய்க - மண்மழையைப் பொழியக் கடவது, எ-று.

126. செய்யாதசெய்ததிருமலேராயன்வரையில
அய்யாவரனேயரைநொடியில் - வெய்யதழல்
கண்மாரியான்மதனேக்கட்டழித்தாற்போற்றீயோர்
மண்மாரியாலழியவாட்டு.

இ - ள். செய்யாத-செய்யவொண்ணுத தீச்செயல்களே, செய்த, பண்ணின, திருமலேராயன்வரையில் - திருமலேராயன்மலேயில், அய்யா - என் தந்தையே, அரனே - பரமசிவனே, அரைநொடியில் - அரைநொடிப்பொழுதில், வெய்யதழல் கண்மாரியால் - வெப்பமாகிய நெற்றிக்கண் ணெருப்புமழையால், மதனேக்கட்டழித்தாற்போல - மன்மதனேவலிகெட எரித்தாற்போல, தீயோர்- இந்நகரத்திலுள்ள தீயோரை, மண்மாரியால் - மண்மாரி பெய்தலால், அழிய - அழிந்துபோக, வாட்டு-வருத்தாய், எ - று.

வறும்புனங்கண்டு தலேவனிரங்கல்.

127. கம்பத்தானேக்கடையிற்கட்டிஞன்கால்சாய
அம்பைத்தாவித்தான்காலானதே - வம்புசெறி
பூவைகாள்கிள்ளேகாள்பூங்குயில்காளன்றில்காள்
பாவையாளாண்டபதி.

இ - ள். வம்புசெறி - புதுமைமிகுந்த, பூவைகாள் - நாகணவாய்ப்பறவைகளே, கிள்ளேகாள் - கிளிகளே, பூகுயில்காள் - அழகாகிய குயில்களே, அன்றில்காள் - அன்றில்களே, பாவையாள் - பாவைபோலு முருவமுள்ள தலேவி, ஆண்ட - ஆண்டு கொண்டிருந்த, பதி - இடமானது, கம்பத்தானே-பத்துத்தலேகளேயுடைய ராவணனே, கடையில்கட்டிஞன் - தன்வாயிலிற் கட்டிவைத்தவருகியவாலி, கால்சாய - வேரோடற்றுவிழ, அம்பைத்தாவித்தான் - அம்பையேவினவனுகிய ஸ்ரீராமனது, கால்ஆனது - திருவடியாயிற்று, எ - று.

அம்பைத்தாவித்தான் கால் - அரிதாள். இது அரிந்ததாள் எனவிரியும். தாவித்தான் தாபித்தான் என்பதன்திரிபு, அன்றித் தாவுவித்தான் எனினும் பொருந்தும். வறும்புனங்கண்டு தலேவனிரங்கலாவது - தலேமகள் காத்திருந்த திணேத்தாள்கள் அரியப்பட்டும், தலேமகள் இற்செறிக்கப்பட்டும் இருந்ததைக் கண்ட தலேமகன்வருந்தி, அங்குள்ள பூவைமுதலியவற்ருேடு கூறியிரங்கியது. இற்செறித்தல் - வீட்டிற்சேர்த்தல்.

ஒரு கலியாணத்தில் சேஷையிட்டபோது அந்தத்தம்பதிகளேச் சிவனும் விஷ்ணுவும் காக்கவேன்று ஆசீர்வதித்தது - சிலேடை.

128. சாரங்கபாணியரஞ்சக்கரத்தர்கஞ்சனேமுன்
ஓரங்கங்கொய்தவுகிர்வாளர் - பாரெங்கும்
ஏத்திடுமையாகரினிதாயிவரும்மைக்
காத்திடுவரெப்போதுங்காண்.

சிவன்.

இ - ள். சாரங்கபாணியர் - மானைத்தாங்கிய கையையுடையவரும், அஞ்சு அக்கரத்தர் - பஞ்சாக்ஷரத்தையுடையவரும், கஞ்சனை - பிரமனை, முன் - முற்காலத்தில், ஓர் அங்கம்கொய்த - ஒப்பற்ற அவயவமாகிய தலையைக்கிள்ளிய, உகிர்வாளர் - நகமாகிய வாளையுடையவரும், பார் எங்கும் - உலகமெங்கும், ஏத்திடு - துதிக்கின்ற, உமை ஆகர் - உமாதேவியைத் திருமேனியி லுடையவரும் ஆகிய, இவர் - இந்தச் சிவபெருமானவர்.

விஷ்ணு.

சாரங்கபாணியர் - சாரங்கமென்னும் வில்லைக் கையிலேந்தினவரும், அம் சக்கரத்தர் - அழகாகிய சக்கரத்தையுடையவரும், கஞ்சனை - கம்ஸனை, முன்-முன்னாளில், ஓர் அங்கம்கொய்த - ஒப்பற்ற உடலைநாசப்படுத்திய, உகிர்வாளர்-நகமாகிய வாளாயுதத்தை யுடையவரும், பார் எங்கும்-உலகமெங்கும், ஏத்திடு-துதிக்கின்ற, மை ஆகர் - கரிய திருமேனியையுடையவரும் ஆகிய, இவர்-இந்த விஷ்ணுவானவர்.

உம்மை - உங்களை, எப்போதும்-எக்காலத்திலும், இனிதாய் காத்திடுவர்-இனிதாக ரக்ஷித்தருளுவர் எ - று.

திருப்பனந்தாள் பட்டர்மேல் பாடியது.

129. விண்ணீரும்வற்றிப்புவிநீரும்வற்றிவிரும்புமழைத்
தண்ணீரும்வற்றிப்புலவோர்தவிக்கின்றகாலத்திலே
உண்ணீருண்ணீரென்றுபசாரஞ்சொல்லியுபசரித்துத்
தண்ணீருஞ்சோறுந்தருவான்றிருப்பனந்தாட்பட்டனே.

இ - ள். விண் நீரும்வற்றி - விண்ணுலகத்திலுள்ள நீரும்சுவறி, புவிநீரும்வற்றி - மண்ணுலகத்திலுள்ள நீரும்சுவறி, விரும்பும் மழைத்தண்ணீரும்வற்றி - (யாவரும்) விரும்புகின்ற மேகத்திலுள்ள குளிர்ச்சியாகிய நீரும்வற்றி, புலவோர் தவிக்கின்றகாலத்தில் - வித்துவான்கள் தவிக்கின்றகாலத்தில், உண்ணீர் உண்ணீரென்று - உண்ணுங்கள் உண்ணுங்களென்று, உபசாரம்சொல்லி-உபசார வார்த்தைகளைச்சொல்லி, உபசரித்து - உபசாரஞ்செய்து, தண்ணீரும் சோறும்தருவான் - தண்ணீரையும் சோற்றையும் உதவுவான், (அவன் யாவனெனின்) திருப்பனந்தாள் - திருப்பனந்தாள் என்னும் ஊரிலிருக்கிற, பட்டன்-பட்டன் என்பவன், எ - று.

மதுரை மீனாக்ஷியம்மையைத் தரிசித்துப் பாடியது - சிலேடை.

130. விள்ளப்புதுமையொன்றுண்டாலவாயினின்மேவுதென்னன்
பிள்ளைக்கொருகுலைமுன்றேகுரும்பைபிடித்ததிலே
கொள்ளிக்கணன்றிட்டியாலோர்குரும்பைகுறைந்தமிர்தம்
உள்ளிற்பொதிந்தவிரண்டிளநீர்கச்சுறைந்ததுவே.

இ - ள். விள்ள - நான் எடுத்துச்சொல்வதற்கு, புதுமை ஒன்று உண்டு - புதுமையாகிய செய்தி ஒன்றுளது, (அது யாதெனின்) ஆலவாயினில் மேவு - திருவால வாயில்பொருந்திய, தென்னன் பிள்ளைக்கு - தென்னம் பிள்ளையில், ஒருகுலை - ஒருகுலையுண்டு, (அதில்) மூன்றே குரும்பை பிடித்ததில் - மூன்று குரும்பைகளேபிடித்ததில், ஓர்குரும்பை - ஒருகுரும்பையானது, கொள்ளிக்கண்ணன் - கொள்ளிக்கண்ணனது, திட்டியால் - பார்வையால், குறைந்து - குறைவுபட்டு, உள்ளில் - உள்ளிடத்தில், அமிர்தம்பொதிந்த - நீர்நிறைந்த, இரண்டு இளநீர்-இரண்டிளநீர்கள், கச்சுஉறைந்தன - கைத்துத்தோய்ந்தன, எ-று, இதைத் தென்னம்பிள்ளைக்கும்.

ஆலவாயினில் மேவு - திருவாலவாயினில் பொருந்தியிருக்கிற, தென்னன் பிள்ளைக்கு-பாண்டியன்மகளுக்கு, ஒருகுலை மூன்றே குரும்பைபிடித்து-ஒருமார்பில் மூன்று குரும்பைபோன்ற தனங்களுண்டாகி, அதில்-அதில்,ஓர்குரும்பை-ஒருகுரும்பையானது, கொள்ளிக்கண்ணன் திட்டியால்குறைந்து - நெருப்புக் கண்ணனாகிய சொக்கநாதனது பார்வையால் கருகி, அமிர்தம் உள்ளில்பொதிந்த - அமுதமானது உள்ளிடத்திற் பொருந்திய, இரண்டு இளநீர் - இரண்டிளநீர்களை நிகர்த்ததனங்கள், கச்சு உறைந்தன-கச்சின் கண்ணேதங்கின, எ - று, இதை மீநாக்ஷியம்மைக்கும் கொள்க.

## தில்லைக்கோவிந்தராஜர் கால்மாட்டிலிருந்து சபாநாதர் நடநஞ் செய்வதைப் பாருமென்று வைணவர் அவமதித்துச் சொன்னபோது பாடியது.

131. ஆட்டுக்கிசைந்தவரம்பலவாணரவர்க்கெதிரே
நீட்டிற்றுமால்வடபாலினிற்காலெனநீநினையேல்
சூட்டுற்றமுப்புரஞ்செற்றவர்தம்மைச்சுமந்தலுத்த
மாட்டுக்கென்னேயிடங்காணீட்டல்சொல்லவழக்கில்லையே.

இ - ள். ஆட்டுக்கு இசைந்தவர் - நடனஞ்செய்தற் கிசைந்தவராகிய, அம்பலவாணர் அவர்க்கு எதிரே - அம்பலவாணராகிய அவர்க்கெதிரில், மால்-திருமாலானவன், வடபாலினில் - வடபாரிசத்தில், கால்நீட்டிற்று என நீ நினையேல் - கால்நீட்டினதாக நீ நினைக்கவேண்டாம், சூடு - (நெற்றிக்கண்ணினது) நெருப்பினால், உற்றமுப்புரம் - பொருந்திய திரிபுரங்களையும், செற்றவர் தம்மை - அழித்தவரை, சுமந்துஅலுத்த - சுமந்திளைத்த, மாட்டுக்கு - இடபத்துக்கு, கால்நீட்ட இடம்ஏன்-கால்நீட்ட இடம்யாதுக்கு,சொல்ல வழக்கு இல்லை- (இதனைச்) சொல்வது வழக்கன்று, எ - று.

இடபமாய்த்தாங்கின திருமாலுக்குக் கால்நீட்டல் சொல்வது பொருந்தாதென்பது கருத்து.

### திருவொற்றியூர்த் தியாகராயரைத் தரிசித்து நிந்தாஸ் துதியாகப் பாடியது.

332. பாரூரறியப்பலிக்குழன்றீர்பற்றிப்பார்க்குமிடத்
தோரூருமில்லையிருக்கவென்றாலுமுள்ளூருமொற்றி
பேரூரறியத்தியாகரென்றேபெரும்பேரும்பெற்றீர்
ஆரூரிலேயிருப்பீரினிப்போய்விடுமம்பலத்தே.

இ - ள். பார் ஊர் அறிய - உலகத்திலுள்ள ஊர்களெல்லாம் அறியும்படி, பலிக்கு உழன்றீர் - பிச்சையின்பொருட்டு உழன்றீர், பற்றி பார்க்குமிடத்து - உற்று நோக்குமிடத்தில், இருக்கஎன்றாலும் - இருத்தற்காயினும், ஓர் ஊரும் இல்லை - ஒரு ஊராயினுமில்லை, உள் ஊரும் ஒற்றி-உள்ள ஊரும் ஒற்றி, பேர்-உமதுபெயரை, ஊர் அறிய - ஊரெல்லா மறியும்படி, தியாகர்என்று பெரும் பேரும்பெற்றீர் - தியாகர் என்று பெரிய பேரையும்படைத்தீர், ஆரூரிலே இருப்பீர் - இனி யாவருடைய ஊரிலே யிருக்கப்போகிறீர், இனி அம்பலத்தே போய்விடும் - இனி அம்பலத்துக்குப் போய்விடும், எ - று.

ஆரூர்-திருவாரூர் என்று மொருபொருள். அம்பலம்-பொது இடம், பொன்னம்பலம்.

### ஒருநாள் சிவபெருமான் புறப்பாடடைக்கண்டு நிந்தாஸ் துதியாகப் பாடியது. இதில் ஒன்பது சாதிவந்தமைகாண்க.

133. வாணியன்பாடிடவண்ணான் சுமக்கவடுகன்செட்டி
சேணியன்போற்றக்கடற்பள்ளிமுன்றொழத்தீங்கரும்பைக்
கோணியன்வாழ்த்தக்கருமான் றுகிறனைக்கொண்டணிந்த
வேணியனானவன்றட்டான்புறப்பட்டவேடிக்கையே.

இ - ள். வாணியன்பாடிட-சரசுவதியையுடையவனாகிய பிரமன் பாடவும், வண்ணான் சுமக்க - வனமாகிய இடபம் (நந்தி) சுமக்கவும், வடுகன் செட்டி சேணியன்போற்ற - வைரவனும் முருகனும் இந்திரனும்தொழவும், கடல் பள்ளி முன்தொழ - திருப்பாற்கடலில் பள்ளிகொள்வோனாகிய திருமால்முன்னின்று வணங்கவும், தீகரும்பை கோணியன்வாழ்த்த - மதுரமாகிய கரும்பை வில்லாக வளைத்தவனாகிய மன்மதன் துதிக்கவும், கருமான் துகில்தனைக்கொண்டு அணிந்த வேணியனானவன் தட்டான் - யானையின்தோலை யுரித்துத்தரித்த சடாபாரத்தையுடையவனாகிய சிவபெருமான்என்கிற (முக்கரணங்களுக்கும்) எட்டாதவன், புறப்பட்ட வேடிக்கை ஏ - புறப்பட்ட வேடிக்கைஎன்ன வியப்பு, எ-று.

### திருவரங்கரை மணியாகச் சிலேடித்துப் பாடியது.

134. பாங்குபெறுந்திருவைந்நூற்றிரட்டிப்பணவிடையில்
தூங்குமதிலொருமாவேற்றமுண்டுசுரர்முனிவர்
ஆங்கவர்செப்பிற்கடங்காதுலகமனைத்தும்பெறும்
ஓங்குமரங்கத்திருப்பெட்டகத்துளொருமணியே.

இ - ள். ஓங்கும் - உயர்ந்த, அரங்கம் - திருவரங்கமாகிய, திருப்பெட்டகத்துள் - அழகாகிய பெட்டியிலிருக்கின்ற, ஒருமணி - ஒப்பற்ற ரத்நமானது, பாங்குபெறும் - அழகுபெற்றிருக்கும், திரு ஐந்நூற்று இரட்டிபண விடையில் தூங்கும் - அழகாகிய ஆயிரம் பணவெடையென்னும் நிறைபெற்றிருக்கும், அதில் ஒருமா ஏற்றம் உண்டு-அதில் ஒருமா அதிகமுண்டு, சுரர் முனிவர் அவர் செப்பிற்கு அடங்காது - தேவர் முனிவராகிய அவர்களுடைய செப்பினுள்ளடங்காது, உலகம் அனைத்தும்பெறும் - உலகங்களெல்லாவற்றையும் (விலைமதிக்கப்) பெறும், எ-று.

திருவரங்கனைக் குறிக்கும்போது, ஒருமணி-ஒப்பற்ற நீலமணியை நிகர்த்த ரங்கநாதன், அழகைக்கொண்டிருக்கிற (ஆதிசேடனது) அழகியஆயிரம் பணமகுடங்களினிடையே பள்ளிகொள்வான், அப்படி பள்ளிகொள்வதிலும் ஒப்பற்ற திருமகளும் (திருமார்பில்) ஏறியிருத்தல் உண்டு, தேவர் முனிவர் என்னும் அவர்களுடைய சொல்லுக்கு அடங்கான், எல்லாவுலகங்களையும் படைத்தருளுவன்எனப் பொருள்கொள்க.

தில்லைக்கோவிந்தராஜர்கோயிலிலிருந்தும் நம்பியார் விஷ்ணுவே பரம் என்றதற்குப் பாடியது.

135. சத்தாதி யைந்தையுந் தாங்காத தெய்வந் தனிமறையும்
கத்தாவெனுந்தெய்வ மம்பலத்தேகண்டுங்கண்களிரு
பத்தானவன் மைந்தன்பொய்த்தேவியைக்கொல்லப்பார்த்தழுத
பித்தானவன்றனையோதெய்வமாகப்பிதற்றுவதே.

இ - ள். சத்தாதிஐந்தையும் தாங்காததெய்வம் - சப்தாதிவிஷயங்களைந்தினையும் கொண்டிராத தெய்வமும், தனிமறையும் கத்தா எனும் தெய்வம் - ஒப்பற்ற வேதங்களும் கடவுளேயென்று துதிக்கின்ற தெய்வமும்ஆகிய சிவபெருமானை, அம்பலத்தேகண்டும் - பொன்னம்பலத்திற் கண்டிருந்தும், கண்கள் இருபது ஆனவன் மைந்தன் - இருபதுகண்களை யுடையவனாகிய ராவணன் புதல்வனாகிய இந்திரசித்து, பொய்த்தேவியைக் கொல்லப்பார்த்து அழுத - பொய்த்தேவியாகிய (மாயாசீதையைக்) கொல்லநோக்கியழுத, பித்தானவன் தனையோ-பித்தனாகிய திருமாலையோ, தெய்வமாக பிதற்றுவது - (நீங்கள்) தெய்வமாகக் கொண்டு பிதற்றுதல் செய்வது, எ - று.

திருவரங்கர் சந்நிதிக்கு முருகர்வர அவரது மயில் வாகனத்தைக்கண்டு அத்திருவரங்கரது அணையாகிய பாம்பு அஞ்சியதாகப் பாடியது.

136. திரண்டிமையோர்தொழுந்தென்னரங்கேசர்முன்செங்கைகளா
றிரண்டுடையோனுமெதிர்சென்றதாலெதிர்ந்தார்தமைக்கண்
டருண்டெழுமைவர்க்குத்தேரூர்பவன்கொளணைவெருண்டு
புரண்டொருபுற்றைக்கடந்தொருபுற்றிற்புகுந்ததுவே.

இ - ள். இமையோர் திரண்டு தொழும் - தேவர்கள் கூடிவணங்குகின்ற, தென் அரங்கேசர் முன் - தென்னரங்க நாதனுக்கெதிரில், ஆறிரண்டு செங்கைகள் உடையோனும் - பன்னிரண்டு திருக்கைகளை யுடையவனாகிய முருகனும், எதிர்சென்றதால் - எதிரேபோனதனால் (இவனது மயிலைக்கண்டு), எதிர்ந்தார்தமைக்கண்டு - எதிர்ந்தவர்களாகிய சூரியோதநாதியரை நோக்கி, அருண்டு எழும் ஐவர்க்கு - அஞ்சியெழுந்த பஞ்சவர் பொருட்டு, தேர் ஊர்ந்தவன் கொள் அணை - (அருச்சுநனுக்கு) தேர்செலுத்தினவனாகிய திருமால்கொண்ட அணையாகிய பாம்பு, வெருண்டு புரண்டு - அஞ்சிப்புரண்டு, ஒரு புற்றைக்கடந்து-ஒருபுற்றைத்தாண்டி, ஒருபுற்றில் புகுந்தது-ஒருபுற்றில் நுழைந்தது, எ-று.

### கச்சியில் காமாக்ஷியம்மையைத் தரிசிக்கையில் பாடியது.

137. மாக்கைக்கிரங்குங்குருகும்வளர்சக்ரவாகப்புள்ளும்
தாக்கச்சரபங்குழைந்ததெவ்வாறுசகதலத்தை
ஆக்கிப்பெருக்கித்திருவறச்சாலையிலன்னமிட்டுக்
காக்கைக்கொருகொக்கின்கீழேயிருக்குங்கருங்குயிலே.

இ - ள். சகதலத்தை ஆக்கி-உலகங்களைப்படைத்து, பெருக்கி-வளர்த்து, திரு அறச் சாலையில்-அழகாகிய தருமசாலையில், அன்னம் இட்டு காக்கைக்கு - அமுதுபடைத்துக் காத்தற்பொருட்டு, ஒரு கொக்கின் கீழே இருக்கும் - ஒரு மாமரத்தின்கீழ் எழுந்தருளியிருக்கின்ற, கருகுயிலே-கருங்குயில்போன்றவளே, மா கைக்கு இரங்கும் குருகும் - மாந்தளிர்போன்ற உன்கையில் அணியப்பட்டொலிக்கின்ற வளையலும், வளர் சக்ரவாகப் புள்ளும் - வளராநின்ற சக்ரவாகப்பறவையை நேர்த்த தனங்களும், தாக்க - படுதலால், சரபம்-சரபரூபியாகிய சிவபெருமான்,குழைந்தது எவ்வாறு-குழைந்துபோயின தெப்படி, எ-று.

ஒருபெண்ணாகிய உனக்குச் சிவபெருமான் எப்படிக் குழைந்தார் என்றும் குயிலாகிய உனக்குச்சரபம் எப்படிக்குழைந்தது என்றும் இருவகையாகப் பொருள் கொள்க. காமாக்ஷியம்மை கம்பாநதியில் மணல் இலிங்கஞ்செய்து பூசித்திருக்கும்போது வெள்ளம் வரக்கண்டு இலிங்கத்தைத் தழுவிக் கொண்டதனால் முலைத்தழும்பும் வளைத்தழும்பும் பட்டுச் சிவலிங்கமழிந்தது என்பது கதை. "திருவறச்சாலையி லன்னமிட்டுக் காக்கைக்கு" என்றது முப்பத்திரண்டு தருமத்தையும் ஈராழிநெல்லைக்கொண்டு செய்வதைக் குறித்தது. குருகு, சக்ரவாகம், சரபம், காக்கை, கொக்கு, குயில், எனப் பறவைப்பெயர்கள் சொன்னயந்தோற வந்தன. சிவபெருமான் சரபரூபங்கொண்டது இரணிய சம்மாரஞ்செய்த நரசிங்கத்தைச் செயித்தற்பொருட்டு.

### திருவாரூர்த் தியாகராயரைத் தரிசிக்கையில் பாடியது.

138. தென்றைக்குஞ்சோலைக்கமலைப்பிரான்செஞ்சடாடவிதான்
என்றைக்குமென்னிலெலியொக்குமந்தவெளியிலிட்ட

பொன்னொக்குங்கொன்றைகரியொக்கும்வண்டுநற் பொற்பணிசெய்
மின்னொக்குங்கங்கைகிழக்கொல்லனொக்குமவ்வெண்பிறையே.

இ - ள். தென் ஒக்கும் சோலை - அழகுபொருந்திய சோலைகள் சூழ்ந்த, கமலைபிரான்-கமலாலயத்துக் கிறைவனாகிய தியாகராயப் பெருமானது, செம் சடா அடவி - செவந்த சடைக்காடானது, என் எக்கும் என்னில் - எதனை நி கர்க்குமென்றால், எரி ஒக்கும்-நெருப்பை நிகர்க்கும், கொன்றை-(அந்தச்சடை யிலணிந்த) கொன்றை மலர்கள், அந்த எரியில் இட்ட - அந்தநெருப்பின்மேல் வைத்த, பொன் ஒக்கும்-பொன்னை நிகர்க்கும், வண்டு - (அந்த மலர்களின்மீது மொய்க்கின்ற) வண்டுகள், கரி ஒக்கும் - கரியை நிகர்க்கும், கங்கை - அங்குள்ள கங்கையானவள், நல்பொன் பணிசெய் மின்னொக்கும் - நல்ல பொன்னாபரணங் களைச் செய்கின்ற (ஒரு) மாதை நிகர்ப்பள், அ வெள்பிறை - அந்த வெள்ளிய பிறையானது, கிழக்கொல்லன் ஒக்கும்-கிழக்கம்மாளனை நிகர்க்கும், எ-று.

பிறை வளைந்திருத்தலால் கிழக்கொல்லனுக் குவமையாயிற்று.

ஓரூரில் சிவபெருமானது இடபவாகந சேவையைத்தரிசித்துப் பாடியது.

139. கரியொன்றுபொன்மிகும்பையேறக்கற்றவர்சூழ்ந்துதொழ
எரியொன்றுசெல்வன்றுலாத்தினிலேறவிருண்டமஞ்சு
சொரிகின்றநாகமின்சோற்றினிலேறித்தொடர்ந்துவர
நரியொன்றுசொந்தக்கனலேறிவந்ததுநங்களத்தே.

இ - ள். கரி ஒன்று - ஒருயானை (கணபதி), பொன் மிகும்பை ஏற - பெருச்சாளியின் மீதேறிவரவும், கற்றவர் சூழ்ந்துதொழ - (கற்கவேண்டிய வீட்டு நூல்களைக்) கற்றவர்சூழ்ந்து வணங்கும்படி, எரி ஒன்று செல்வன் - நெருப்புப் பொறியிற்றோன்றிய முருகக்கடவுள், துலாத்தினில் ஏற - (துலாஸ்நாந கட்ட மாகிய மாயூரத்தின்மீது (மயிலின்மீது) ஏறிவரவும், இருண்ட மஞ்சு சொரிகி ன்ற நாகமின் - கறுத்தமேகங்கள் (மழையைப்) பொழிதற்கிடமாகிய (இமய) ம லையிற்பிறந்த மின்கொடிபோல் பவளாகிய உமாதேவி, சோற்றினில் ஏறி தொா டர்ந்துவர - அன்னவாகநத்திலேறித் தொடர்ந்துவரவும், நரி ஒன்று - சம்பு ஒ ன்று (பரமசிவன் ஒருவன்), சொந்தக்கனல் ஏறி - நந்தியில் ஏறி (நந்தியின் மீ தேறி, நம்களத்தேவந்தது - நம்மிடத்தே வந்தனன், எ-று.

நந்தி என்பதில் தி குறுக்கல். சாளி - பொன்னிட்டு வைக்கும்பை. பொ ன்மிகும்பை என்றதனால் பெருச்சாளியெனப் பொருளுரைக்கப்பட்டது. துலா ஸ்நாநம் - ஐப்பசிமாசம் காவேரிநதியில் மூழ்குதல்.

சிவபரமாகவும் விஷ்ணுபரமாகவும் சிலேடித்துப் பாடியது.
இது சந்திரோபாலம்பநம் என்னுந்துறை.

140. இருந்தாரைகேள்வனையோங்குமராவையெழுபுனலைத்
திருந்தாரைவங்கியைமுன்முடித்தோன்செய்யவேளைப்பண்டு

திருந்தாதைநாயகன்சுந்தரன்றூதன்சமரிலன்று
பொருந்தார்புரத்திட்டதீப்போன்மதியம்புறப்பட்டதே.

சிவபரம்.

இ - ள். இருதாரைகேள்வனை - பெரிய நக்ஷத்திரங்களுக்கு நாயகனாகிய சந்திரனையும், ஓங்கும் அராவை - உயர்ந்தபாம்புகளையும், எழுபுனலை-(ஆகாயத்தினின்றும் பெருகி) எழுந்த கங்கையையும், திருந்துஆரை - திருத்தமாகிய ஆத்திமாலையையும், வன்னியை-வன்னியிலையையும், முன்முடித்தோன் - முன்னாளில் முடித்தவனும், செய்யவேளைப் பண்டு தரும்தாதை - முருகக்கடவுளை முன்னீன்ற தந்தையும், நாயகன் - (எல்லார்க்கும்) இறைவனும், சுந்தரன் தூதன் - சுந்தரற்குத் தூதுசென்றவனும் ஆகிய சிவபெருமான், அன்று-அந்நாளில் நிகழ்ந்த, சமரில் - போரில், பொருந்தார் புரத்து - பகைவருடைய முப்புரத்தில், இட்டதீபோல் - மூட்டிவிட்ட நெருப்பைப்போல, மதியம் புறப்பட்டது - சந்திரன் புறப்பட்டது, எ - று.

விஷ்ணு பரமாகும்போது - தாரைகேள்வன் - வாலியெனவும், திருந்தார்-பகைவர் எனவும், வன்னி - ஓரரக்கன் எனவும், வேள் - மன்மதன் எனவும், சுந்தரன் தூதன் - அழகனாகிய ஸ்ரீராமனுக்குத் தூதனாகிய அநுமான் எனவும் புரம் - இலங்காபுரம் எனவும் கொள்க.

ஆற்றூரிலிருந்த சோமியென்னுந் தாசியின் அழகைக்கண்டு வியந்து பாடியது.

141. ஆராயுமுத்தமிழாற்றூரிற்சோமியழகுகண்டு
நாராயணனெடுமாலாகினானந்தநான்முகனும்
ஓராயிரமடலூர்ந்தான்வின்மாரனுருவழிந்தான்
பேரானவானவர்கோனுங்கண்ணாயிரம்பெற்றனனே.

இ - ள். ஆராயும் - (தமிழ்நாட்டாராலே) ஆராயப்படுகின்ற, முத்தமிழ்-முத்தமிழ் வழங்குமிடமாகிய, ஆற்றூரில்-ஆற்றூரிலுள்ள, சோமி அழகுகண்டு-சோமியின் அழகைப்பார்த்து, நாராயணன் - ஸ்ரீமஹாவிஷ்ணுவானவன், நெடுமால் ஆகினான் - பெரிய காமமயக்கமுடையனானான், அந்த நான்முகனும்-அந்தப்பிரமனும், ஓர் ஆயிரம்மடல் ஊர்ந்தான் - ஒப்பற்ற ஆயிரம்மடன் மாக்களையேறினான், வில்மாரன் உருவழிந்தான் - (கரும்பு) வில்லையுடைய மன்மதன் உருவமிழந்தான், பேர் ஆனவானவர் கோனும் - பெருமை யுடையவனாகிய தேவேந்திரனும், கண் ஆயிரம் பெற்றனன்-ஆயிரம் கண்களைப்படைத்தான், எ-று.

ஆயிரம் மடல் - தாமரைமலரென்றும் வேறொரு பொருள்கொள்க. மடலூர்தலாவது - தலைமகன்தான் விரும்பிய நாயகியைப் பெறுவிடில் அவளைப்பெறும்பொருட்டுப் பனைமடலாற் செய்யப்பட்ட குதிரைமீதேறித் தெருக்களிற் செல்லுதல்.

திருவலஞ்சுழியில் விநாயகரைத் தரிசிக்கையில் பாடியது.

142. பறவாததும்பிகருகாதவெங்கரிபண்புரண்டே
இறுகாததந்தியுருகாதமாதங்கமிந்துநுதல்
நிறவாதசிந்துரம்பூசாக்களபநெடுஞ்சுனையில்
பிறவாதவாம்பல்வலஞ்சுழிக்கேவரப்பெற்றனனே

இ - ள். பறவாததும்பி - பறக்காதவண்டும், கருகாதவெம் கரி-கறுக்காத வெப்பமாகிய கரியும், பண்புரண்டு இறுகாததந்தி - பண்கள் புரளப்பெற்று இறுகாததந்தியும், உருகாதமாதங்கம் - உருகாத அழகியதங்கமும், இந்துநுதல் நிறவாதசிந்துரம் - அஷ்டமீசந்திரன்போன்ற (மாதரது) நெற்றியிலணியப்பட்டு ஒளிசெய்யாத சிந்துரமும், பூசாக்களபம் - பூசாதகலவைச்சந்தநமும், நெடுசுனையில்பிறவாத ஆம்பல் - நீண்டசுனைகளில் உண்டாகாத அல்லியும், வலஞ்சுழிக்கே வரப்பெற்றனன்-திருவலஞ்சுழியில் கிடைக்கப்பெறறேன், எ-று.

தும்பி, கரி, தந்தி, மாதங்கம், சிந்துரம், களபம், ஆம்பல் இவையாவும் யானைக்குப் பரியாயப்பெயர்கள்.

திருத்தில்லையிலிருக்கும் கற்பகவிநாயகரைத் தரிசித்து நிந்தாஸ்துதியாகப் பாடியது.

143. கம்பமதகடகளிற்றான்றில்லைவாழும்
கணபதிதன்பெருவயிற்றைக்கண்டுவாடி
உம்பரெலாம்விழித்திருந்தாரயில்வேற்செங்கை
உடையவறுமுகவனுங்கண்ணீராறானான்
பம்புசுடர்க்கண்ணனுமேநஞ்சுண்டான்மால்
பயமடைந்தானுமையுமுடல்பாதியானாள்
அம்புவியைப்படைத்திடுவதயனேயென்
றயனுமன்னமிறங்காமலிலைன்றானே.

இ - ள். கம்பமதகடம் களிற்றான் - கட்டுந்தறியிற் கட்டப்படுகிற மதம்பாய்கின்ற சுவடுள்ள யானை முகத்தை யுடையவனாகி, தில்லைவாழும் - தில்லையில் வாழ்கின்ற, கணபதியின் பெருவயிற்றைக் கண்டு - விநாயகக்கடவுளது பெருவயிற்றைநோக்கி, உம்பர் எல்லாம் - தேவரெல்லாரும், வாடி-வாட்டமடைந்து, விழித்து இருந்தார் - (உறங்காமல்) விழித்துக்கொண்டிருந்தார்கள், அயில்வேல் - கூர்மையாகிய வேலாயுதத்தை, செ கைஉடைய - செவந்தகையின் கண்ணேயுடையனை, அறுமுகவனும் - ஆறுமுகங்களையுடையவனாகிய முருகக்கடவுளும், கண்ணீர் ஆறுஆனான் - கண்ணீர் ஆறாகப்பெருக அழுதான், பம்புசுடர்க்கண்ணனும் - பரவிய நெருப்புக்கண்ணனாகிய சிவபெருமானும், நஞ்சுஉண்டான் - (இறக்கக்கருதி) விஷத்தையுண்டான், மால்பயம் அடைந்தான் - திருமால் அச்சத்தையடைந்தான், உமையும் - உமாதேவியும், உடல்பாதி ஆனாள்-பாதியுடம்பாய் மெலிந்தாள், அயனும் - பிரமனும், அம்புவியைப் படைத்திடு

வது - உலகத்தைச் சிருஷ்டிப்பது, அவமதேளன்று - வீணேயென்று, அன்னம் இறங்காமல் - சோறு மிறங்கப் பெறாமல், அலேகின்றான் - திரிகின்றான். எ - று.

விழித்திருந்தார், கண்ணீராறுனன், பயமடைந்தான், உடல பாதியாளுள், அன்னமிறங்காமலலேகின்றான் என்பவற்றிற்கு முறையே இமையாதிருந்தார், கண்கள் பன்னிரண்டை யுடையனுனன், பாற்கடலேயடைந்தான், சிவபெருமான் திருமேனியிற் பாகம்பெற்றாள், அன்னவாகனத்தினின்று மிறங்காமல் திரிகிறான் என வேறுமொருபொருள் தோன்றுதல்காண்க.

**கயிற்றுற்றிலுள்ள பெருமாளைத் தூக்கும்படி இவரைவருந்திச் சுமந்தியபோது பாடியது.**

144. பாளைமணங்கமழுகின்றகயிற்றுற்றுப்பெருமாளேபழிகாராகேள்
வேளேயென்றாலிவ்வேளைபதினறுநாழிகைக்குமேலாயிற்றென்
தோளேமுறித்ததுமன்றிநமபியானையுங்கூடச்சுமக்கச்செய்தாய்
நாளேயினியார்சுமப்பாரெந்நாளுமுன்கோயினசந்தானே.

இ - ள். பாளை மணங்கமழுகின்ற - தெங்கு கமுகு என்பவற்றின் பாளைகள் மணம்வீசுகின்ற, கயிற்றுற்றுப் பெருமாளே - கயிற்றுற்றிலுள்ள பெருமாளே, பழிகாரா - பழிகாரனே, கேள் - கேட்பாயாக, வேளேயென்றால் - காலமோவென்றால், இவ்வேளை - இந்தக்காலம், பதினறு நாழிகைக்குமேல் ஆயிற்று - பதினறுநாழிகைப் பொழுதுக்கு மேற்பட்டது, என்தோளை முறித்ததும் அன்றி - என்தோள்களை முறித்ததுமல்லாமல, நம்பியானையுங்கூட சுமக்கச்செயதாய் - நம்பியானையும் சுமக்கும்படிபண்ணினய், இனி நாளையார்சுமப்பார்-இனி நாளையதினம் யார் உன்னைச்சுமப்பவர், எந்நாளும் உன்கோயில் நாசம்தான்-எக்காலமும் உன்கோயில் நாசத்தையேயடைந்திருக்கும்,எ-று.

**திருமலேராயன் கீர்த்தியைக்குறித்துப் புகழ்ந்து பாடியது.**

145. வீமனெனவலிமிகுந்ததிருமலேராயன்சீர்த்திவெள்ளம்பொங்கத்
தாமரையினயனேடிச்சத்தியலோகப்புகுந்தான்சங்கபாணி
பூமிதொட்டுவானமட்டும்வளர்ந்துநின்றான்சிவன்கயிலேப்பொருப்பி
லேறிச்,சோமனையுந்தலேக்கணிந்துவடவரைத்தண்டாலாழஞ்சோதி
த்தானே.

இ - ள். வீமன் எனவலிமிகுந்த - வீமன்போல வலிமிகுந்த, திருமலேராயன் - திருமலேராயனது, சீர்த்தி வெள்ளம்பொங்க - கீர்த்தியாகிய பிரவாகம் பொங்கியெழவே, தாமரையின் அயன்ஓடி-தாமரை மலரிலிருக்கிற பிரமனேடி, சத்தியலோகம்புகுந்தான் - சததியலோகத்தில் நுழைந்தான், சங்கபாணி-சங்கத்தைக் கையிலுடையவனுகிய திருமால், பூமிதொட்டு வானமட்டும் வளர்ந்து நின்றான் - பூமிதொடங்கி ஆகாயமளவும் உயர்ந்துநின்றான், சிவன் - சிவபெரு

மான், கயிலைப்பொருப்பில் ஏறி - கைலாயமலைமேலேறி, சோமனையும் தலைக்கு அணிந்து - அரையாடையையும் தலையிற்றரித்து, வடவரைத்தண்டால் - வடமேருமலையாகிய மூங்கிற்றண்டினல், ஆழம்சோதித்தான் - ஆழத்தைச் சோதனைசெய்தான், எ - று.

சோமன் - சந்திரன்.

திருத்துருத்தி யென்னும் தலத்தில் சிவபெருமானைத் தரிசிக்கச் சென்றபோது அவ்விடத்திலுள்ள தருக்கள்மார், புங்கங்கோம் பங்கிங்கோன்பது, புளியங்கோம் பங்கிங்கோன்பது, வெட்டிநறுக்கிய வேள்வேலங்கோம் பங்கிங்கோன்பது என்னுமிவற்றை ஒரு வெண்பாவி லடக்கிப் பாடவேண்டுமென்ன, எங்கள் மடத்துக் கெரிகரும்பு கொள்வது என்பதை முதலிற்சேர்த்து வெண்பாவாய் அமைத்துக் காட்டியது. எரிகரும்பு - விறகு.

146. எங்கண்மடத்துக்கெரிகரும்புவெட்டுதற்குப்
புங்கங்கொம்பங்கிங்கொன்பதுபுளி - யங்கொம்பங்
கிங்கொன்பதுவெட்டிநறுக்கியவெள்வே
லங்கொம்பங்கிங்கொன்பது.

இ - ள். வெளிப்படை.

எழுத்தாணியென்றெடுத்து சூரிக்கத்தியென்று முடிக்கவேண்டுமெனச் சிலர்கேட்க அவ்வாறே பாடியது.

147. எழுத்தாணிதுபெண்ணிதனைமுனிகாதில்
வழுத்தாரணக்குகனைவாதுக் - கழைத்ததுவும்
மாரன்கைவின்மான்முன்காத்ததுவுநன்றுகுந்
தீரமுள்ளசூரிக்கத்தி.

இ - ள். இது ஆண் எழுத்து - இது ஆணெழுத்தாம், இது பெண் எழுத்து - இது பெண்ணெழுத்தாம் (என்று), இதனை - இந்தவிவரத்தை, முனி காதில் - அகத்தியமுனிவரது செவியில், வழுத்து - உபதேசித்தருளிய, ஆரணம் குகனை - வேதப் பிரதிபாத்தியனை முருகக்கடவுளை, வாதுக்கு அழைத்ததுவும் - போருக்கழைத்ததுவும், நன்று ஆகும் தீரம் உள்ளசூர் - சிறப்பாகிய தீரகுணமுள்ளசூரன், மாரன் கை வில் இக்கு - மன்மதனது கை வில்லாயிருப்பதுவும் கரும்பாகும், மால்முன்காத்ததுவும் அத்தி - திருமால் முற்காலத்தில் காத்ததுவும் யானையாகும், எ - று.

சூரிக்கத்தி என்பதனைசூர் இக்கு அத்தி எனப்பிரித்துக்கொள்க. அத்தி என்றது கஜேந்திரனை. ஆணெழுத்து - குற்றெழுத்து, பெண்ணெழுத்து-நெட்டெழுத்து. இவற்றை யுணர்த்தினுன் என்றதனல் இலக்கணவரம்பை ஆதியந்தமாகக் கற்பித்தானென்றதாயிற்று.

பதினறுபேறு இவையென்பது.

148. துதிவாணிவீரம்விசயஞ்சந்தானந்துணிவுதனம்
அதிதானியஞ்சவுபாக்கியம்போகமறிவழகு
புதிதாம்பெருமையறங்குலநோயின்மைபூண்வயது
பதினறுபேறுந்தருவாய்மதுரைப்பராபரனே.

இ - ள். துதி - புகழ், வாணி - கல்வி, வீரம் - வீரத்தன்மை, விசயம் - வெற்றி, சந்தானம் - பிள்ளைகள், துணிவு - துணிதல், தனம்-பொன், அதிதானியம் - மிகுதியாகிய தானியம், சவுபாக்கியம் - சிறந்த பாக்கியம், போகம் - (மாதரநு) அநுபவம், அறிவு - ஞானம், அழகு - சௌந்தரியம், புதிது ஆம்பெருமை - நாசகமாகிய பெருமை, அறம் - தருமம், குலம் - உயர்குலம், நோயின்மை - ஆரோக்கியம், பூண் - ஆபரணம், வயது - ஆயுள்என்னும், பதினறுபேறும் தருவாய் - பதினறுபேற்றையும் தந்தருளவாய், மதுரை பராபரனே - மதுரையிலெழுந்தருளியிருக்கின்ற பராபரனே.

ஸ்ரீரங்கத்துவைணவர், திருமால் உலகத்தையுண்டருளினபோது
சிவன் எங்கேயிருந்தார் என்றதற்கு விடையாகச்சொல்லியது.

149. அருந்தினனண்டமெலாமன்றுமாலீசன்
இருந்தபடியேதென்றியம்பின் - பொருந்திப்
பருங்கவளயானைகொளப்பாகனதன்மீதே
இருந்தபடியீசனிருந்தான்.

இ - ள். அன்று - அக்காலத்தில், மால் - திருமாலானவன், அண்டம் எல்லாம் அருந்தினன் - உலகங்களையெல்லாம் உண்டான், (அப்பொழுது) ஈசன் இருந்தபடி ஏது-சிவனிருந்த விதம் யாது, என்று இயம்பின் - என்றுகேட்பின், யானை - யானையானது, பருகவளம்கொள்ள - பெரியகவளத்தை யுட்கொள்ள, பாகன் - (அதைச்செலுத்தும்) பாகன், அதன்மீதே பொருந்தி இருந்தபடி - அதின் மீதிற்றனே பொருந்தி யிருந்தாற்போல, ஈசன் இருந்தான் - சிவபெருமானிருந்தான், எ - று.

யானை கவளங்கொள்ளும்போது பாகன் அதின் பிடர்மீதிருந்தாற்போல, திருமால் உலகத்தை யுண்ணும்போது சிவபெருமான் அவன்மீது தங்கியிருந்தாரென்பது கருத்து.

ககரவருக்கத்தில் ஒருபாடல் பாடுகவெனச் சிலர்கேட்கப் பாடியது.

150. காக்கைக்காகாகூகைகூகைக்காகாகாக்கை
கோக்குக்கூகாக்கைக்குக்கொக்கொக்க - கைக்கைக்குக்
காக்கைக்குக்கைக்கைக்காகா.

இ - ள். கூகை காக்கைக்கு ஆகா - கூகை (பகற்காலத்தில்) காக்கைக்கு எதிர்நிற்றல்கூடாது, காக்கை கூகைக்கு ஆகா - காக்கை (இராக்காலத்தில்) கூகைக்கு எதிர்நிற்றல்கூடாது, காக்குஐக்கு - கற்பக தருச்சோலைக் கிறைவனாகிய இந்திரனுக்கும், கைக்கைக்கு ஆகா - (காலமல்லாக் காலத்தில்) பகைவரை கொல்லுதற்கிசையாது, (ஆதலால்) கோக்கு - அரசனுக்கு, கூ - பூமியை, காக்கைக்கு - ரக்ஷிக்கவும், கைக்கைக்கு - பகைவரைக்களையவும், கொக்கு ஒக்க - காலம்வாய்க்குமளவும் கொக்கைநிகர்த்து அடங்கியிருக்கக்கடவன், எ-று.

**வல்லினத்தில் ஒருபாடல் பாடுகவெனச் சிலர்கேட்கப் பாடியது.**

151. தடித்துத்தடித்துத்துடுப்பெடுத்தகோடல்
தொடுத்ததொடைகடுக்கைபொன்போற்-பொடித்துத்
தொடைபடைத்ததோடுடித்ததோகைகூத்தாடக்
கடிபடைத்துக்காட்டிற்றுக்காடு.

இ - ள். தடித்து துடித்து - மின்னல் மின்னினதனால், கோடல் துடுப்பு எடுத்த - காந்தள் துடுப்புகளையேந்தின (அரும்பின), கடுக்கை-கொன்றைகள், பொன்போல்பொடித்து தொடைதொடுத்த - பொன்போலரும்பி மாலையாகத் தூக்கப்பட்டன, தொடிபடைத்த தோள் துடித்த - வளையலையணிந்த தோள்கள் துடியாநின்றன, (ஆதலால்) காடு - காடானது, தோகைகூத்து ஆட - மயில்களாடமாட, கடிபடைத்து காட்டிற்று - மணப்பந்தலின் தன்மையைப்பெற்றுக் காட்டிற்று, எ - று.

காந்தள் துடுப்பெடுத்ததை மணப்பந்தலிலுள்ள தீபத்திற்கும், கொன்றை பொன்போ லரும்பித்தொடை தொடுத்ததைப் பந்தலின் நாற்புறத்தும் தொங்குகின்ற பூமாலைக்கும், மயில் நடனமாடுதலை பந்தலிற்கணிகை மாதர் நடனம் பண்ணுதற்கும், தோள்துடித்தலை மூங்கிலின் அசைதலுக்கும் உவமையாகக் கொள்க.

**மெல்லினத்தில் ஒருபாடல் பாடுகவெனச் சிலர்கேட்கப் பாடியது.**

**துறை - தாயிரங்கல்.**

152. மானமேநண்ணுமனமென்மனமென்னும்
மானமான்மன்னுநனிநாணு-மீனமா
மானுமினன்மின்னிமுன்முன்னேநண்ணினும்
மானுமணிமேனிமான்.

இ - ள். ஈனம் ஆம் - இழிவாகிய, ஆனு - நீங்காத, மின்னல்மின்னி-மின்னலானது மின்னி, முன்முன்னே நண்ணினும் - எதிரெதிரேவரினும், மானு-ஒப்பாகாத, மணி - அழகாகிய, மேனி - வடிவையுடைய, மான் - (என்) பெண்மான், என்மனம் - என்நெஞ்சமானது, மானமே நண்ணுமனம் என்னும் -

மானஞ்சிறிதும் பொருந்தாத நெஞ்சமாயிருக்கிறதென்பாள், நனிநாணும்-மிகவும் வெள்குவாள், (ஆதலால்), மானம் மான்மன்ற-பெரிய யானைகளையுடைய அரசனே, (இவளைக் காக்கவேண்டும்) எ - று.

**இடையினத்தில் ஒருபாடல் பாடுகவெனச் சிலர்கேட்கப் பாடியது.**

153. விரவலராய்வாழ்வாரைவெல்லலொழிவாய்
இரவுலவாவேலையொலியே-வரவொழிவாய்
ஆயர்வாயேயரிவையாருயிரையீராவோ
ஆயர்வாய்வேயோவழல்.

இ - ள். இரவு உலவாவேலை ஒலியே - இராக்காலத்திலும் அடங்காதகடலோசையே, விரவலர் ஆய்வாழ்வாரை வெல்லல் ஒழியாய்-தனியாய் வாழ்வோரை வருத்துதலை நீங்குவாய், வரவு ஒழியாய் - உன் வருகையைத் தவிர்வாய், அரிவை - (இந்தப்) பெண்ணினது, ஆர் உயிரை - அரியவுயிரை, ஆயர்வாயே ஈராவோ - தாய்மார்களுடைய (பழிதூற்றுகிற) வாய்களே பிளக்காவோ, ஆயர் வாய் வேயோ - இடையர் வாயில்வைத்தூதுகின்ற வேய்ங்குழலோ, அழல் - நெருப்புப்போலச் சுடாநின்றது, எ - று.

கடலோசையே, தாய்மார் பழிதூற்றலும், வேய்ங்குழலோசையும் இவளுயிரை வருத்தலையாதோ, நீயும் வருத்த வேண்டுமோ என்பது கருத்து.

**சிவபெருமான் நஞ்சுண்டதைச் சிறப்பித்துப் பாடியது.**

154. கடுக்கைமுடியானேகாலைமுடித்தாற்போல்
கடுக்கைமுடியானுயிற்காணார் - கடுக்கை
உரலடிமீதுற்றானும்பர்களுமுற்றும்
உரலடிமீதுற்றானுமூர்.

இ - ள். கடுக்கை முடியான் - கொன்றை மாலையையணிந்த பரமசிவன், முன் - முற்காலத்தில், காலைமுடித்தாற்போல்-யமனைக்கொன்றதுபோல, கடு-நஞ்சை, கை-தன்கையில், முடியான் ஆயின் - அடக்கானாயின், கடு கை - வேகத்தையும் துதிக்கையையுமுடைய, உரலடிமீது உற்றானும் - (வெள்ளை) யானைமீதேறின இந்திரனும், உம்பர்களும் - தேவர்களும், மற்றும் - மேலும், அடி தன்காலானது, உரல்மீது உற்றானும்-உரலின்மீது பொருந்தப்பெற்றவனாகிய கிருஷ்ணனும் (திருமாலும்), ஊர்காணார் - (தத்தம்) உலகத்தைக்காணாதிருப்பவர், எ - று.

காலனை என்பது கால் என ஈறுதொகுத்து நின்றது.

**கடைமொழிமாற்று.**

155. கடம்பற்கெண்டோளயற்குக்கண்பதினைந்தம்மநாலு
கடம்பற்கோரால்வாய்கையைந்தே - கடம்பற்கோ

டானைமுகற்காயிரங்கண் ணுகண்டலற்கிலம்பா
டானைமுகற்காறிரண்டுகை.

இ - ள். ஆறிரண்டுகை கடம்பற்கு-கடப்பமாலையைத்தரித்த முருகக்கடவுளுக்கு பன்னிரண்டு கைகளுண்டு, எண்தோள் அயற்கு - பிரமனுக்கு எட்டுத்தோள்களுண்டு, கடம்பற்கு கண்பதினைந்தாம் - கடப்பமாலையைத்தரித்த சிவனுக்குப் பதினைந்துகண்களுண்டு, கடம் - மதத்தையும், பல்கோடு - பல்லாகிய கொம்பையும், ஆனைமுகற்கு - யானை முகத்தையுமுடைய விநாயகர்க்கு, நால்வாய்-தொங்குகின்றவாயும், கைஐந்து-ஐந்துகைகளும் உண்டு, ஆகண்டலற்கு ஆயிரம்கண் - இந்திரனுக்கு ஆயிரங்கண்களுண்டு, ஆன் - இடபவாகநத்தையுடைய, ஐமுகற்கு - ஐந்துமுகங்களையுடைய சிவனுக்கு, இலம்பாடு - தரித்திரமுண்டு, எ - று.

சிவனுக்கு முகமைந்தாதலால் முகமொன்றுக்கு மூன்றுகண் விழுக்காடு ஐந்துமுகங்களுக்கும் பதினைந்து கண்களாயின. இலம்பாடு என்றது பலியேற்றலைக்குறித்தது. ஆல்-அசை.

நடேசர்மீதுபாடியநிந்தாஸ்துதி.

156. வில்லாலடிக்கச் செருப்பாலுதைக்க வெகுண்டொருவன்
கல்லா லெறியப் பிரம்பாலடிக்கவிக் காசினியில்
அல்லார் பொழிற்றில்லை யாம்பலவாணற்கொ ரன்னைபிதா
இல்லாத தாழ்வல்ல வோவிங்ஙனேயெளி தானதுவே.

இ - ள். இக்காசினியில் - இந்தப்பூமியில், அல் ஆர்பொழில்தில்லை அம்பலவாணற்கு - இருண்டசோலைசூழ்ந்த சிதம்பரத்தின் கண் உள்ள பொன்னம்பலத்தில் வாழ்பவனாகிய நடேசப் பெருமானுக்கு, ஓர் அன்னைபிதா இல்லாத தாழ்வு அல்லவோ - ஓர்தாயும் தகப்பனும் இல்லாத குறைவினால் அல்லவா, ஒருவன்வெகுண்டு - ஒருவன்கோபித்து, வில்லால்அடிக்க - வில்லால் அடிக்கவும், செருப்பாலுதைக்க - செருப்பாலுதைக்கவும், கல்லால்எறிய - கல்லால்வீசவும், பிரம்பால்அடிக்க - பிரம்பாலடிக்கவும், இங்ஙனே எளிதானது - இவ்வாறு எளிதாய் முடிந்தது, எ - று.

வில்லால் அடித்தவன் - அர்ச்சுனன், இவன் பாசுபதாஸ்திரம்பெறச் சிவபெருமானைநோக்கித் தவஞ்செய்கையில் துரியோதனனுடைய ஏவுதலால் அத்தவத்தைஅழிக்கப் பன்றியின் உருவங்கொண்டுவந்த மூகாசுரனைக்கொன்று அர்ச்சுனனைக்காக்கச் சிவபெருமான் வேடரூபந்தரித்து, அப்பன்றியைத் துரத்திக்கொண்டுபோய் அர்ச்சுனனோடு விளையாட்டாகப் போர்புரிகையில், அர்ச்சுனன் சிவபெருமான்விட்ட கணையால் தன்வில்லின் நாணற்றபோது வெகுண்டு சிவபெருமானை வில்லால் அடித்தனன். செருப்பாலுதைத்தவர்-கண்ணப்பநாயனார். கல்லாலெறிந்தவர் சாக்கியநாயனார். பிரம்பாலடித்தவன் பாண்டியன்.

முருகவேள் குறத்தியை மணந்தானென்று சிவன் முதலானோர் வருந்தி நஞ்சுண்டல் முதலானவற்றைச் செய்தார்களெனக் கற்பித்துப் பாடியது.

157. மருகிருக்கும் வேளூரின் வயித்திமகன் குறமகளை
  மணந்தானென்றே
உருகியரனஞ்சுண்டா னுமையவளுந் தவம்புரிந்தா
  ளுயர்மான்மேனி
கருகிமண்டின்றான் கமலன்முக நாலானன்
  கடவுளோர்கள்
இருவிழியு மிமையாம லிரவுபக லுறங்காம
  லிருக்கின்றாரே.

இ - ள். மருகுஇருக்கும் - மகரவாழைகள் சூழ்ந்திருக்கின்ற, வேளூரின் - வேளூரிலிருக்கிற, வயித்திமகன் - வயித்திமகனானவன், குறமகளை மணந்தான் என்று - குறப்பெண்ணை மணஞ்செய்து கொண்டானென்று, அரன்உருகி நஞ்சுஉண்டான் - சிவபெருமான் மனங்கரைந்து விஷத்தைப் பருகினான், உமையவளும் தவம்புரிந்தாள் - உமாதேவியும் தவத்தைச்செய்தாள் - உயர்மால் - உயர்ந்த திருமாலானவன், மேனிமிகக்கருகி - உருவம்மிகக்கறுத்து, மண்தின்றான் - மண்ணையுண்டான், கமலன் - பிரமன், முகம்நால்ஆனன் - முகமிறங்குதலையுடையவனானான், கடவுளோர்கள் - தேவர்கள், இருவிழியும் இமையாமல் இரவுபகல் உறங்காமல் இருக்கின்றார் - இருகண்ணும் இமைக்காமலும் இராப்பகல்கள் உறங்காமலும் இருக்கின்றார்கள், எ - று.

அரன் முதலியோர் நஞ்சுண்டல்முதலிய தொழில்களைச் செய்தற்குக்காரணம் வேறாயிருக்க முருகன் குறப்பெண்ணை மணந்தமை காரணமாகக் கற்பித்துரைத்தனர். வயித்திமகன் - வயித்தீச்சுரன் மகனாகிய முருகக்கடவுள், நாலுதல் - தொங்குதல்.

ஸ்ரீரங்கத்தில் ஒருத்திவீட்டில் சாப்பிட்ட சாப்பாட்டை நிந்தித்துப் பாடியது.

158. நீச்சாற் பெருக்கிடு காவேரியாற்றை நிலைநிறுத்திச்
சாய்ச்சாளிலைக்கறிச் சாற்றையெல்லாமது தானு மன்றிக்
காய்ச்சாப்புளியு நற்கல்லுடன் சோறுங் கலந்துவைத்த
ஆய்ச்சாளை யான்மறவேன் மறந்தான்மன மாற்றிடுமே.

இ - ள். நீச்சால்பெருகிடு - நீச்சுநிலையால் பெருகியோடுகிற, காவேரிஆற்றை நிலைநிறுத்தி - காவேரிநதியைத்தடுத்து, இலைக்கறி சாற்றையெல்லாம் சாய்ச்சாள் - கீரைச்சாற்றையெல்லாம் சாய்த்தாள், அதுதானும்அன்றி - அதுவுமன்றி, காய்ச்சாப்புளியும் - பச்சைப்புளியையும், கல்லுடன்சோறும் - கல்லோடுகூடிய சோற்றையும், கலந்துவைத்த - கலந்துபடைத்த, ஆச்சாளை யான்மற

வேன் - ஆச்சாளை நான்மறக்கமாட்டேன், மறந்தால் - மறந்தேனாயின், மனம் ஆற்றிடுமே - என்மனம் பொறுக்குமோ, எ - று.

ஆற்றிடுமேஎன்பதில் ஏகாரம்வினா.

ஒருவேசையானவள் கதைசொல்லச் சொன்னபோது பாடியது.

159. சோமன் புறப்படத் தென்றலும்வீசத் துயிலொழிய
யாமங்க டோறுங் குயில்வந்துகூவி டந்நேரத்திலே
நாமும்பிழைத்து மனிதர்முன் பேசிட நாமு முண்டாய்க்
காமக்கலகந் தெளிந்தபின் னானுங் கதை சொல்வனே.

இ - ள். சோமன்புறப்பட - சந்திரன் உதிக்க, தென்றலும்வீச - தென்றற்காற்றும் வீச, துயில்ஒழிய-நித்திரைநீங்க, யாமங்கள்தோறும் குயில்வந்துகூவிடு - சாமங்கள்தோறும் குயில்வந்து கூவுகின்ற, அந்நேரத்தில் - அந்தவேளையில், நாமும்பிழைத்து - யாமும் (இறவாது) பிழைத்து, மனிதர்முன் பேசிட நாமும்உண்டாய் - மனிதருக்கெதிரில் பேசும்படி நாமும்உண்டாயிருந்து, காமக்கலகம் தெளிந்தபின் - காமப்போர்தெளிந்த பிறகு, நானும் கதைசொல்வன்-நானும் கதைசொல்வேன், எ - று.

சோமன் புறப்பாடு முதலியவற்றிற்குத் தப்பிப் பிழைத்திருந்தால் கதை சொல்வேன் என்பதாம்.

ஒரு ஊரார்மேல் கோவங்கொண்டு, அந்தஊரிலுள்ள ஏரியுடைந்து
ஓட்டைஏரியாகும்படி பாடியது.

160. கலங்கற் றுறையதனிற் காராளர் போதத்
தெலுங்கப்ப நாரணன் தெண்டிக்கச் - சலம்பெருகி
நட்டாறு கொண்டுகரை நன்று யுடைந்து
கட்டா தொழிதல் கடன்.

இ - ள். கலங்கல் துறை யதனில் காராளர்போத - கலங்கல்போகுந்துறையில் வேளாளரை (நீரோட்டத்தோடு அடித்துக்கொண்டு) செல்லவும், தெலுங்கப்ப நாரணன்தெண்டிக்க - தெலுங்கப்ப நாரணன் தண்டிக்கவும், சலம் பெருகி - நீர்பெருகி, நட்டாறுகொண்டு - நட்டாற்றைத் தன்னுட்கொண்டு, கரைநன்றுய்உடைந்து—கரைமுழுதும் உடைய, நீர்கட்டாது ஒழிதல் - நீர்கட்டப்படாதொழிதலே, கடன்-முறைமையாகும், எ - று.

நடுவெழுத்தலங்காரம்.

161. திருமால்வாகனநாவா யிராசியொன்று
சினைதெவிட்டார்மாதுலன்கோ கிலமிவ்வேழின்

உருவாமேழெழுத்துநடு வெனக்குச்செய்தான்
உடனானபதினொன்றுந் தானேகொண்டான்
ஒருபாகத்திருத்தினான் றலையிலேற்றான்
ஒருமதலைதனக்களித்தா னுண்டான்பூண்டான்
பரிவாயொண்கரத்தமைத்தா னுகந்தானிந்தப்
பைம்பொழிற்றில்லையுளாடும் பரமன்றானே.

இ - ள். இந்தபைம்பொழில் தில்லையுள் ஆடும்பரமன் - பசியசோலைசூழ்ந்த இந்தத் தில்லையில் நடனம்பண்ணுகிற மேலோனாகிய சிவபெருமான், திருமால்வாகனம் - கருடன் (நாகாரி), நாவாய் - தெப்பம் (கலம்), இராசிஒன்று - கன்னி, கிளை - (கவடு), தெவிட்டார் - ஆரார், மாதுலன் - மாமன், கோகிலம் - பல்லி, இ எழின் - இவ்வேழு சொற்களிலுள்ள, உருஆம் எழ்எழுத்துநடு - வரிவடிவாகிய நடுவெழுத்தேழையும், எனக்குசெய்தான் , உடனான பதினொன்றும் தானேகொண்டான் - கூடஇருந்த பதினொன்றையும் தானேகொண்டு, (முறையே) ஒருபாகத்து இருத்தினான் - ஒருபங்கில் வைத்துக்கொண்டான், தலையில் ஏற்றான் - சிரத்திலேற்றுக்கொண்டான், ஒருமதலைதனக்கு அளித்தான் - ஒரு புதல்வனுக்குத் தந்தான், உண்டான்—, பூண்டான்—, பரிவாய் - அன்போடு, ஒள்கரத்து அமைத்தான் - அழகாகியகையில் அமைத்துக்கொண்டான், உகந்தான் - விரும்பினான், எ - று.

ஒருபாகத்திருத்தினான் கையிலேற்றான் எனச்சிலர்பாட மோதுவர், இப்பாடத்தில் கம்என்பதற்கு கபாலம்எனப் பொருள்கூறலாம்-ஆயினும் கரத்தமைத்தான் எனமேல்வருகையால் தலையிலேற்றான் என்பதே சிறப்புடைத்து. * நடுவிலுள்ள ஏழெழுத்துக்களை யெடுத்துக்கொண்டு, காலன்வராமல் செய்தான் என்றும், நடுவெழுத்தொழியனின்ற முதலெழுத்தையும் கடையெழுத்தையும் முறையேசேர்த்து பெண்ணைப்பாகத்தி லிருத்தினான், நீரைத்தலையிலேற்றான், கனியைப் புதல்வனுக்குத்தந்தான், விஷத்தையுண்டான், ஆத்திமாலையைப் பூண்டான், மானைக்கையிலமைத்தான், பலியைவிரும்பினான் என்றுங்கூறுக.

| | | |
|---|---|---|
| * நா | கா | ரி |
| க | ல | ம் |
| க | ன் | னி |
| க | வ | டு |
| ஆ | ரா | ர் |
| மா | ம | ன் |
| ப | ல் | லி |

கனிகொடுத்தசெய்தி - சிவபெருமான் கையிலிருந்த மாங்கனியை விநாயகர் சுப்பிரமணியர் இருவரும் விரும்பிக்கேட்க, சிவபெருமான் அவ்விருவரையும்நோக்கி, உம்மிருவரில்யார் உலகமுழுதும் வலம்வந்து முன்னே என்னிடம் சேருகிறீர்களோ அவர்களுக்கு கொடுப்பேனென்றுசொல்ல, சுப்பிரமணியர் மயிலின்மீதேறி உலகத்தை வலம்வருமுன்னே, விநாயகர் எழுந்து சிவபெருமானை வலம்வந்து, உலகமெல்லாம் உன் வடிவமாதலால் உன்னை வலம்வந்தது, உலகத்தை வலம்வந்ததாயிற்று என்றுசொல்ல, இந்த யுக்திக்கு மெச்சிக் கனியைத் தந்தருளினர் என்பது.

நிரனிறைப்பொருள்கோள்.

162. கூற்றுவனை வின்மதனை யரக்கர்கோவைக்
கூனிலவைக் குஞ்சரத்தை யிஞ்சிமூன்றை
ஏற்றுலகின்புறவுருவ மாளத்தோள்க
ளிறவெறிப்பவிமையப்பெண் வெருவவேவக்
காற்றொழிலானயனத்தால் விரலாற்கற்றைக்
கதிர்முடியாற் கரதலத்தாற் கணையாற்பின்னும்
ஊற்றழியவுதைத்தெரித்து நெரித்துச்சூடி
யுரித்தெரித்தானவனென்னை யுடையகோவே.

இ - ள். ஏற்று-எதிர்த்து, கூற்றுவனை-யமனையும், வில்மதனை-கருப்புவில்லையுடைய மன்மதனையும், அரக்கர்கோவை - அரக்கருக்கரசனாகிய ராவணனையும், கூன்நிலவை - வளைவாகிய பிறைச்சந்திரனையும், குஞ்சரத்தை - யானையையும், இஞ்சிமூன்றை - மும்மதில்களையும், உலகுஇன்பு உற - உலகம் இன்பமடையவும், உருவம்மாள - உருவமழியவும், தோள்கள் இற - புயங்கள்முறியவும், எறிப்ப-விளங்கவும், இமையப்பெண்வெருவ - உமாதேவியஞ்சவும், வேவ-வெந்துநீறாகவும், கால்தொழிலால் - காலின்றொழிலாலும், நயனத்தால் - கண்ணினாலும், விரலால்-கால்விரலினாலும், கற்றைகதிர் முடியால் - திரட்சியாகிய ஒளியுள்ள சடாமகுடத்தாலும், கரதலத்தால்-கைத்தலத்தாலும், கணையால்-அம்பினாலும்,பின்னும்ஊற்று அழிய-மேலும் சுரப்பற்றொழியும்படி,உதைத்து-உதைத்தும், எரித்து - எரித்தும், நெரித்து - நெரித்தும், சூடி - சூடியும், உரித்து-உரித்தும்,எரித்தான் - எரித்தவனும்ஆகிய, அவன் - அவனே, என்னை உடைய கோ - என்னை யடிமையாகவுடைய இறைவன், எ - று.

கூற்றுவனை உலகின்புற காற்றொழிலால் உதைத்து என்றும், வின்மதனை உருவமாள நயனத்தால் எரித்து என்றும், அரக்கர்கோவை தோள்களிற விரலால்நெரித்து என்றும், கூனிலவை எறிப்ப கற்றைக் கதிர்முடியால்சூடி என்றும், குஞ்சரத்தை இமையப்பெண்வெருவ கரதலத்தால்உரித்து என்றும், இஞ்சிமூன்றைவேவ கணையால் எரித்தான்என்றும் இயைத்துப் பொருளுரைத்துக் கொள்க. குஞ்சரம்என்றது கயாசுரனை. இஞ்சிமூன்று என்றது திரிபுரங்களை.

நிரனிறைப்பொருள்கோள்.

163. பொன்னனைவா ளரக்கனைநாற் றுவரைக்காவைப்
பொருசிலையைக் கனைகடலைப் பொன்னனீன்ற
நன்மகற்காய்ச் சுரர்க்காமை வருக்காய்க்காதல்
நப்பினைக்காய்ச் சானகிக்காய் நடவைக்காக
மன்னுகிரால் வடிக்கணையால் வளையாற்புள்ளால்
வயங்குதோள் வலியால்வா னரங்களாலும்

முன்னுடற்கீ றிச்சரங்கொண் டமரில்வீழ்த்தி
முதலொடுங்கொண் டிறுத்தடைத்த மோகூரானே.

இ - ள். பொன்னனை - இரணியனையும், வாள் அரக்கனை-வாட்படையை யுடைய அரக்கனாகிய ராவணனையும், நூற்றுவரை - துரியோதனன் முதலிய நூற்றுவரையும் - காவை, பாரிசாதமரச் சோலையையும், பொருசிலையை-போர் புரிதற்குரியவில்லையும், கனைகடலை - ஒலிக்கின்றகடலையும், பொன்னன் ஈன்ற நல் மகற்காய் - இரணியன்பெற்ற சற்புத்திரனாகிய பிரகலாதனன் பொருட்டா கவும், ஐவருக்காய் - பஞ்சவர் பொருட்டாகவும், காதல் நப்பினைக்காய் - அன்பு ள்ள நப்பின்னைப் பிராட்டிக்காகவும், சானகிக்காய் - சீதாபிராட்டியின் பொரு ட்டாகவும், நடவைக்காக - வழியுண்டாகும் பொருட்டாகவும், மன்உகிரால் - நிலைபெற்றநகத்தாலும், வடிக்கணையால் - வடித்தலமைந்த அம்பினாலும், வளை யால் - சங்கத்தொனியினாலும், புள்ளால் - பறவையாலும், வயங்குதோள் வலி யால் - விளங்குகின்ற புஜபலத்தினாலும், வாநரங்களாலும், முன் - முற்கால த்தில், உரம்கீறி - மார்பைப் பிளந்தும், சிரங்கொண்டு - தலையை யறுத்தும், அமரில்வீழ்த்தி - யுத்தகளத்தில் விழுத்தியும், முதலோடுங்கொண்டு - வேரோ டுபெயர்த்தெடுத்தும், இறுத்து - ஒடித்தும், அடைத்த - திருவணை கட்டித்தடு த்த-மோகூரானே, திருமோகூரிலெழுந்தருளிய இறைவனே, எ - று.

பொன்னுக்கு இரணியம்என்று பெயராதலால் பொன்னன் என்றது இர ணியனுக்காயிற்று

பொன்னனை நன்மகற்காய் மன்னுகிரால் உரங்கீறிஎன்றும், வாளரக்கனை சுரர்க்காய்வடிக்கணையால் சிரங்கொண்டு என்றும், நூற்றுவரை ஐவருக்காய் வளையால் அமரில்வீழ்த்தி என்றும், காவை காதனப்பினைக்காய் புள்ளால் முத லோடுங்கொண்டு என்றும், பொருசிலையை சானகிக்காய் வயங்கு தோள்வலியா ல் இறுத்து என்றும், கனைகடலை நடவைக்காக வானரங்களாலும் அடைத்தஎன் றும், இயைத்துப் பொருளுரைத்துக்கொள்க.

வீரசென்னன் என்னும் வடுகப்பிராமணன் வீட்டில்
உண்டகூழைக்குடித்துப்பாடியது.

164. ஏழாளையடித்தபுலிதனையடித்தான்வீரசென்னனென்றேகாட்டில்
வாழாமற்சிறுபுலிகளீப்புலியோடெலிப்புலியாய்வடிவங்கொண்டு
பாழாகிக்காடெல்லாம்பரதவிக்கவடுகரடுப்படியில்வந்து
கூழாகிவயினிற்றினிற்போம்பொழுதுகுணம்போகாமற்குமுறுந்தானே.

இ - ள். ஏழ்ஆளை அடித்தபுலிதன்னை - ஏழாட்களைக்கொன்ற புலியை, வீரசென்னன் அடித்தான்என்று - வீரசென்னன் கொன்றானென்று (அஞ்சி), சிறுபுலிகள் - சிறியபுலிகள், காட்டில்வாழாமல் - காட்டில் தங்காமல், ஈப்புலி யோடு எலிப் புலியாய்வடிவங்கொண்டு - ஈப்புலிகளோடு எலிப்புலியின் வடிவங் கொண்டு, காடுஎல்லாம் பாழ்ஆகி - காடுமுழுதும் பாழ்பட்டு - பரதவிக்க-வரு

ந்த, வடுகர் அடுப்பு அடியில்வந்து கூழ்ஆகி-வடுகருடைய அடுப்பினடியில்வந்து கூழினுருவமாகி, வயிற்றினில் போம்பொழுதும்—, குணம்போகாமல் - பழைய குணம்நீங்காமல், குமுறும் - முழங்கும், எ - று.

ஏழாட்களைக்கொன்ற புலியை வீரசென்னன் கொன்றானென்னுஞ் செய்தியைக் காட்டில்வாழ்கின்ற மற்றைப்புலிகள் கேட்டு அஞ்சி அப்புலியும் எலிப்புலியுமாய் வடிவங்கொண்டு ஊரில்வந்து வீடுகளில் சஞ்சரிப்பதுமன்றி இன்றுகூழுருவெடுத்து வடுகருடைய அடுப்படியினின்றும் என் வயிற்றிற்புகுந்தது, ஆனால்அப்படி புகும்பொழுதும் தமது பழையகுணமாகிய குமுறலை யொழிந்திலது என்பதாம்.

இடைச்சிமிகுதியாய்த் தண்ணீர்கலந்தமோரைக்
கொடுத்தபோதுபாடியது.

165\. காரொன்றுபேர்படைத்தாய்ககனத்துறும்போது
நீரொன்றுபேர்படைத்தாய்நெடுந்தரையில்வந்ததற்பின்
வாரொன்றுமென்முலையாராய்ச்சியர் கைவந்ததற்பின்
மோரொன்றுபேர்படைத்தாய்மூப் பேரும்பெற்றாயே.

இ - ள். ககனத்து உறும்போது - ஆகாயத்திலிருக்கும்போது, கார்என்று பேர்படைத்தாய்-மேகமென்று பேர்படைத்தாய், நெடுந்தரையில் வந்ததற்பின்-பெரியபூமிக்கு வந்தபிறகு, நீர்என்று பேர்படைத்தாய் - நீரென்று பேர்படைத்தாய், வார்ஒன்றும் - கச்சுப்பொருந்திய, மென்முலையார் - மெல்லியதனங்களையுடையவராகிய, ஆய்ச்சியர் கைவந்ததற்பின்-இடைச்சிமார் கையில் வந்தபிறகு, மோர்என்று பேர்படைத்தாய் - மோரென்று பேர்படைத்தாய் (ஆதலால்), மூப்பேரும் பெற்றாய் - மூன்றுபேர்களும்படைத்தாய், எ - று.

செட்டிகள் இவரைக்கண்டு தம்முள் பரிபாஷையாய்ப்
பேசிக்கொண்டதைக்குறித்துப்பாடியது.

166\. கருந்தலைசெந்தலைதங்கான்றிரிக்கால்கடையிற்சுற்றி
வருந்திக்குடவற்குந்தாட்டிக்குங்கொத்திட்டுமாய்வதல்லால்
கரந்தைகளாண்டிலொருக்கால்வருவதுகண்டிருந்தும்
அரும்புக்குங்கொத்துக்கும்வந்தார்பிழைப்பதரிதென்பரே.

இ - ள். கரந்தைகள் - குருக்கள், ஆண்டில் ஒருக்கால் வருவது கண்டிருந்தும் - வருஷத்திலொருதரம் வரப்பார்த்திருந்தும், (அவ்வாறு செய்யாமல் அடிக்கடிவருகிறார் என்று நினைத்து) கருந்தலை - கால், செந்தலை-அரைக்கால், தங்கான் - அரை, திரிக்கால்-முக்கால், (இந்தத்தொகைகளைப்பெற), கடையில்சுற்றிவருந்தி - கடைகளில் சுற்றிவருந்தி, குடவற்கும் - தேவடியாளுக்கும், தாட்டிக்கும் - வைப்பாட்டிக்கும், கொத்து இட்டு மாய்வது அல்லால் - சோறிட்டுமடிவதேயல்லாமல், அரும்புக்கும் - அரிசியின்பொருட்டும், கொத்துக்கும்-சோற்றின்பொருட்டும், வந்தார் - வந்துவிட்டார், பிழைப்பது - இனிநாம்பிழைப்பது, அரிது என்பர் - அருமையாகுமென்று சொல்லுவர், எ - று.

திம்மியென்னுந்தெலுங்கத்தேவடியாள்மரியாதையின்றிப்
பேசினதைக்கூறித்துப்பாடியது.

167. ஏமிராவோரியென்பாளெந்துண்டிவஸ்திவென்பாள்
தாமிராச்சொன்னவெல்லாந்தலைகடைதெரிந்ததில்லை
போமிராச்சூழுஞ்சோலைபொருகொண்டைத்திம்மிகையில்
நாமிராப்பட்டபாடுநமன்கைபிற்பாடுதானே.

இ - ள். ஏமிராஓரிஎன்பாள் - அடே என்னடா என்பாள், எந்துஉண்டி வஸ்திவிஎன்பாள் - எங்கிருந்துவந்தாய் என்பாள், தாம் இராசொன்னஎல்லாம்-அவள் இராத்திரி சொன்ன சொற்களெல்லாம், தலைகடை தெரிந்ததில்லை-முதல்இறுதிகள் அறியப்பட்டதில்லை, போம் இராசூழும் சோலைபொரு - மிகுந்த இருளையும் நெருங்கியசோலையையுமொத்த,கொண்டை-கொண்டையையுடைய, திம்மிகையில் - திம்மி என்பவள்கையில், நாம் இராபட்டபாடு - யாம் ராத்திரிபட்டதுன்பம், நமன்கையில் பாடுதானே - யமன்கையில் அகப்பட்டுஅடைந்த துன்பமேயாம், எ - று.

தன்னைஏளனம்செய்தபாடத் தெரியாத கிழத்தாசியை
நிந்தித்துப்பாடியது.

168. இந்துமுடிக்குஞ்சடையாளரிருக்குந்தொண்டைவளநாட்டில்
சிந்துபடிக்கக்கவிபடிக்கத்தெரியாமடவாயுன்றனக்குக்
கெந்தபொடியேன்பூமுடியேன்கிழமாய்நரைத்துமுகந்திரைந்தும்
இந்தமுறுக்கேன்வீறுப்பேனெடுப்பேனுன்னைக் கொடுப்பேனே.

இ - ள். இந்துமுடிக்கும் சடையாளர் - சந்திரனையணிந்த சடாபாரத்தையுடைய சிவபெருமானனவர், இருக்கும் - வாழ்கின்ற, தொண்டைவளநாட்டில்—, சிந்துபடிக்க - சிந்துபடிக்கவும், கவிபடிக்க - கவிபடிக்கவும், தெரியா - அறியாத, மடவாய் - பெண்ணே, உன்தனக்கு - உனக்கு, கெந்தபொடிஏன் - கெந்தப்பொடியாதுக்கு, பூமுடிஏன் - பூமுடித்தல் யாதுக்கு, கிழம்ஆய்நரைத்து முகம் திரைந்தும் - கிழப்பருவம்வந்து மயிர்நரைத்து முகம் தோல் திரைந்தும், இந்த முறுக்கு ஏன்—, வீறுப்புஏன்—, எடுப்பேன் உன்னைக் கொடுப்பேன்—, எ - று.

169. ஏறுகட்டிய கொட்டிலரங்கமே யீரிரண்டுமு கன்வாயி லாயமே, மாறுகண்ணப்பன் வாய்மடைப்பள்ளியே வாய்த்தவோடை திருமால்வதனமே, வீறுசேர்சிறுத்தொண்டனில்லாளுந்திவேட்டகற்கறி காய்க்கின்றதோட்டமே, நாறுபூம்பொழில்சூழ்தில்லையம்பல நாரிபாகற்கு நாடகசாலையே.

**இ - ள்.** நாரிபாகற்கு - உமாதேவியை இடது பாகத்திலுடைய சிவபெருமானுக்கு, அரங்கம் - திருவரங்கமானது, ஏறுகட்டிய கொட்டில் - இடபத்தைக்கட்டிவைத்த தொழுமாகும், ஈரிரண்டுமுகன்வாய் - நான்கு முகங்களையுடையவனாகிய பிரமனது வாயானது, இலாயம் - குதிரைப்பந்தியாகும், மாறுகண்ணப்பன்வாய் - ஊனமாயிருந்த கண்ணுக்குப் பிரதியாகத் தன்கண்ணைத்தோண்டி அப்பினவனாகிய கண்ணப்பநாயனாரது வாயானது, மடைப்பள்ளி - மடைப்பள்ளியாகும், திருமால்வதனம் - திருமாலின்முகமானது, வாய்த்த ஓடை - மாட்சிமைப்பட்ட குளமாகும், வீறுசேர் சிறுத்தொண்டன் இல்லாள் உந்தி - மேன்மை பொருந்திய சிறுத்தொண்ட நாயனாரது மனைவியின் வயிறானது, வேட்ட நல்கறிகாய்க்கின்ற தோட்டம் - விரும்பிய நல்லகறிகள் காய்க்கின்ற கொல்லையாகும், நாறுபூபொழில்சூழ் தில்லையம்பலம் - மணக்கின்ற பூஞ்சோலைகள் சூழ்ந்த தில்லைப் பொன்னம்பலமானது, நாடகசாலை - நடனசபையாகும், எ-று.

திரிபுரசங்காரகாலத்தில் திருமால் இடபமாயிருந்தாராதலாலும் அவருக்கு இடமாயிருப்பது திருவரங்கமாதலாலும் “ஏறுகட்டிய கொட்டிலரங்கமே” என்றும், வேதங்கள் பிரமனதுவாயில் தங்குதலாலும் அவைசிவ பெருமானுக்குக் குதிரைகளாதலாலும் “ஈரிரண்டு முகன்வாயிலாயமே” என்றும், கறியைமென்று பதமாக்கிக்கொடுத்தது கண்ணப்பன் வாயாதலால் “கண்ணப்பன்வாய் மடைப்பள்ளியே” என்றும், திருமால் நாடோறும் ஆயிரம் தாமரைமலர்களால் அருச்சித்துவந்து ஒரு நாள் ஒருமலர்குறைதலும் அதற்குப் பிரதியாகத் தன்முகத்திலுள்ள கண்ணைப்பிடுங்கி அருச்சித்ததனால் “ஓடைதிருமால் வதனமே, என்றும், சிறுத்தொண்டன் மனைவியின் வயிறானது கறியாகச்சமைத்துப் படைத்தற்குரிய புதல்வனைப்பெற்ற வயிறாதலால் “சிறுத்தொண்டனில்லாளுந்திவேட்ட நற்கறிகாய்க்கின்ற தோட்டமே” என்றும் கூறினார்.

முற்றிற்று.

---

# ஔ வை ய ா ர்.

-------*-------

சேரமான்பெருமாணுயனூர் பொன்வண்ணத்தந்தாதியையும் ஆதியுலாவை யும்பாடித் திருக்கைலாயத்தில் சிவபெருமான் சந்நிதியில் அரங்கேற்றப் போகும்போது சுந்தரமூர்த்தி சுவாமிகளையும் அழைத்துக்கொண்டு, விநாயகரைப் பூசித்துக்கொண்டிருந்த ஔவையாரையும் தம்முடன் வரும்படி யழைத்தனர். ஔவையார் விநாயகபூசையைச் சீக்கிரத்தில் முடித்துப்போக நினைத்தார். அந் தநினைப்பை விநாயகக்கடவுளறிந்து, அவர்களுக்கு முன் உன்னைக் கைலாயத்தில் சேர்க்கிறேன், அவசரப்படாமல் பூசைசெய்யென்று கட்டளையிட, ஔவையாரும், அந்தப்படியே விரையாமல்பூசித்து, சீதக்களப" என்னும் அகவலைப்பாடித் துதித்தனர். உடனே விநாயகர் விசுவரூபங்கொண்டு ஔவையாரைத் தம் துதிக்கையாலேந்திக் கைலாயத்தில்விடுத்தனர். தமக்குமுன் ஔவையார் வந்திருப்பதைக்கண்டு சேரமான் பெருமாணுயனூர் வினவினபோது பாடியது.

1. மதுரமொழிநல் லுமையாள் புதல்வன்மலர்ப்பதத்தை
முதிரநினையவல்லார்க்கரிதோமுகில்போன்முழங்கி
அதிரவருகின்றயானையுந்தேருமதன்பின்சென்ற
குதிரையுங்காதங்கிழவியுங்காதங்குலமன்னனே.

இ - ள். குலமன்னனே - சிறப்பையுடையவேந்தனே, மதுரமொழி-இன்சொல்லையுடைய, நல் உமையாள்புதல்வன் - நன்மையைத் தருகின்ற உமாதேவிக்குப் புத்திரனாகிய விநாயகக்கடவுளின், மலர்பதத்தை - தாமரை மலர் போலுந் திருவடியை, முதிர நினையவல்லார்க்கு - மிகுதியாக நினையவல்லவர்க்கு, அரிதோ - (இப்படி முந்திவந்திருப்பது) அரிதாகுமோ, முகில்போல்முழங்கி - மேகம்போல கர்ஜித்து, அதிரவருகின்ற-(பூமிஅதிரும்படி) நடந்து வருகின்ற, யானையும் - யானையும், தேரும் - இரதமும், அதன்பின்சென்ற குதிரையும் - அதன்பின்போன குதிரையும், காதம் - (நடப்பது) காததூரமே, கிழவியும் காதம் - கிழவியாகிய நானும் (நடந்தது) காததூரமே, எ - று.

சோழன் ஔவையைநோக்கி நீயெங்கிருந்து வந்தாயென்று
கேட்கப் பாடியது.

2. காலொந்தே னொந்தேன் கடுகி வழிநடந்தேன்
யான் வந்த தூரமெளிதன்று—கூனல்
கருந்தேனுக் கண்ணுந்த காவிரிசூழ் நாடா
இருந்தேனுக் கெங்கே யிடம்.

இ - ள். கால் நொந்தேன் நொந்தேன் - கால் வருந்தினேன் வருந்தினேன், கடுகி வழிநடந்தேன் - விரைந்து வழிநடந்தேன், யான்வந்த தூரம் எளிது அன்று - நான் வந்ததூரம் எளிதல்ல, கூனல் - சங்கானது, கருதே

னுக்கு அண்ணுந்த-பெரியதேனின்பொருட்டு கிமிர்ந்த, காவிரிசூழ் நாடா-காவிரியாறுசூழ்ந்த நாட்டையுடைய சோழனே, இருந்தேனுக்கு-இப்படியிருந்த எனக்கு, இடம் எங்கே - இடம் எவ்விடத்தே, எ-று.

நான் இருப்பது இன்னவிடம் என்றில்லை என்பது கருத்து.

சோழன் ஔவையென்றறியாமல் கம்பர்பாட்டை வியந்தபோது பாடியது.

3. விரகரிருவர்புகழ்ந்திடவேவேண்டும்
விரனிறையமோதிரங்கள்வேண்டும் - அரையதனில்
பஞ்சேனும்பட்டேனும்வேண்டுமவர்கவிதை
நஞ்சேனும்வேம்பேனுநன்று.

இ - ள். விரகர் இருவர் - விவேகியர் இருவர், புகழ்ந்திடவேண்டும்-(உடனிருந்து) புகழவேண்டும், விரல்நிறைய மோதிரங்கள் வேண்டும்-விரல்கள் நிரம்ப மோதிரங்கள் அணிந்திருக்கவேண்டும், அரையதனில்-இடையில், பஞ்சேனும் பட்டேனும் வேண்டும் - நூலாடையாயினும் பட்டாடை யாயினும் (அலங்காரமாக அணிந்திருக்க) வேண்டும், (இப்படியொருவ ரிருப்பாராயின்) அவர் கவிதை - அவர் பாடியபாடல், நஞ்சேனும் வேம்பேனும் - விஷமாயிருப்பினும் வேம்பாயிருப்பினும், நன்கு-அழகிதே, எ-று.

சோழன் கம்பர்போலப் பாரகாவியம் பாடுவோர் ஒருவருமில்லை என்றுசொன்னபோது பாடியவை.

4. வான்குருவியின்கூடுவல்லரக்குத்தொல்கறையான்
தேன்சிலம்பியாவர்க்குஞ்செய்யரிதால்-யாம்பெரிதும்
வல்லோமேயென்றுவலிமைசொலவேண்டாங்காண்
எல்லார்க்குமொவ்வொன்றெளிது.

இ - ள். வான் குருவியின்கூடு - சிறந்த குருவிக்கூடும், வல் அரக்கு-வன்மையாகிய அரக்கும், தொல்கறையான் - பழமையாகிய சிதலும், தேன்-தேனும், சிலம்பி - சிலம்பிப்பூச்சியின்கூடும், யாவர்க்கும்செய் அரிது - எவர்க்கும் செய்வது அருமையாகும், (ஆதலால்) யாம்பெரிதும்வல்லோம் என்று-நாம்மிகவும் வல்லோமென்று, வலிமை சொல்லவேண்டாம் - வன்மை பேசவேண்டாம், எல்லார்க்கும் ஒவ்வொன்று எளிது - யாவர்க்கும் ஒவ்வொரு காரியஞ்செய்தல் எளிதாகும், எ-று.

5. சித்திரமுங்கைப்பழக்கஞ்செந்தமிழுநாப்பழக்கம்
வைத்ததொருகல்விமனப்பழக்கம்-நித்தம்
நடையுநடைப்பழக்கநட்புந்தயையும்
கொடையும்பிறவிக்குணம்.

இ - ள். சித்திரமும் கைப்பழக்கம் - சித்திர மெழுதுவதும் கைப்பழக்கமாகும், செந்தமிழும் நாபழக்கம் - செந்தமிழ்த் தேர்ச்சியும் நாவினது பழக்கமாகும், வைத்ததொருகல்வி மனப்பழக்கம் - வைத்ததோர் கல்வி மனப்பழக்கத்தினு லுண்டாகும், நித்தம் - நாள்தோறும், நடையும் - நடத்தலும், நடைப்பழக்கம் - நடத்தற்பழக்கமாகும், நட்பும் - நட்புக்குணமும், தயையும் - கருணையும், கொடையும்-ஈகையும், பிறவிக்குணம் - பிறவிக் குணங்களாம், எ-று.

வலியோரைக்கண்டால் மெலியோர் அஞ்சுவரெனப் பாடியது.

6. காணமல்வேணதெல்லாங்கத்தலாங்கற்றோர்முன்
கோணமல்வாய்திறக்கக்கூடாதே-நாணமல்
பேச்சுப்பேச்சென்னும்பெரும்பூனைவந்தக்கால்
கீச்சுக்கீச்சென்னுங்கிளி.

இ - ள். காணமல் - பாராமல், வேணது எல்லாம் கத்தலாம் - வேண்டியவைகளையெல்லாம் கதறலாகும், கற்றோர்முன் - கற்றவர்களுக் கெதிரில், கோணமல் வாய்திறக்கக்கூடாது-நாணமல் வாய்திறக்க வொண்ணது, கிளி - இளிப்பிள்ளையானது, நாணமல் - வெட்கப்படாமல், பேச்சுபேச்சு என்னும் - பல பேச்சுகள் பேசும், பெரும்பூனை வந்தக்கால் - பெரியபூனைவந்து எதிர்ப்பட்டால், கீச்சு கீச்சு என்னும் - கீச்சு கீச்சு என்று (அச்சத்தால்) கூவும், எ-று.

மனிதர்களுக்கு இவை அழகாம் எனப்பாடியது.

7. சுரதந்தனிலிளைத்ததோகைசுகிர்த
விரதந்தனிலிளைத்தமேனி-நிரதம்
கொடுத்திளைத்ததாதாகொடுஞ்சமரிற்பட்ட
வடுத்துளைத்தகல்லபிராமம்.

இ - ள். சுரதம்தனில் இளைத்ததோகை - கலவியினல் மெலிந்த மாதினது, சுகிர்தவிரதம்தனில் இளைத்தமேனி - புண்யவிரதங்களால் மெலிந்த மேனியும், நிரதம் - எப்பொழுதும், கொடுத்து இளைத்ததாதா - கொடுத்து மெலிந்த கொடையாளியினது, கொடுசமரில்பட்ட - கொடுமையாகிய யுத்தத்தில் பட்ட (வீரத்தன்மையைக்குறித் தெழுதப்பட்ட), வடுதுளைத்தகல் - வடுவாகத் தொளைக்கப்பட்ட கன்னிற்றலும், அபிராமம் - அழகாகும், எ-று.

பெண்களுக்கு இம்மைப்பயனாகிய நன்மக்கட்பேறு கருதிச்செய்யும் யும் மறுமைப்பயனுக் குதவுவதாகிய விரதாதிகளை யனுஷ்டித்தலும் அழகாகும், புருடருக்கு இம்மைப்பயனாகிய புகழ் கருதிச்செய்யும் தானமும், மறுமைப் பயனாகிய வீரசொர்க்கங்கருதிப் போரிற்பின்னிடாது நின்று போர்செய்து தமது வீரமுதலியவற்றை யெழுதின கல்லில் நிற்றலும் அழகாகும் என்பது கருத்து. கொடையாளியினது கல்லென இயைக்க.

சற்பாத்திரத்தில் செலவழியாத செல்வம் வீணில்
அழியும் எனப்பாடியது.

8. நம்பனடியவர்க்குநல்காத்திரவியங்கள்
பம்புக்காம்பேய்க்காம்பரத்தையர்க்காம்-வம்புக்காம்
கொள்ளைக்காங்கள்ளுக்காங்கோவுக்காஞ்சாவுக்காம்
கள்ளர்க்காந்தீக்காகுங்காண்.

இ - ள். நம்பன் அடியவர்க்கு - சிவனடியார்க்கு, நல்கா திரவியங்கள்-கொடாத திரவியங்கள், பம்புக்கு ஆம் - சூனியத்துக்குதவும், பேய்க்கு ஆம் - வீண் காரியங்களுக் குதவும், கொள்ளைக்கு ஆம்- (திருடர்) கொள்ளையிடுதற் குதவும், கள்ளுக்கு ஆம்-கள்ளுண்டற்குதவும், கோவுக்கு ஆம் - அரசனுக்குதவும், சாவுக்கு ஆம் - இழவுக்குதவும், கள்ளர்க்காம்-கள்ளருக்குதவும், தீக்குஆகும் - நெருப்பில் அகப்பட்டு அழியும். எ-று.

ஒருதறவனுக்கு இரண்டுபேர் மனைவிமார் இருந்தனர். அவர்களுள் இளையவள்மீது அவனுக்கு அதிகவிருப்பம், அவன்ஒருநாள் ஊருக்குப் போம்போது மனைவியரைநோக்கி நான் அன்பாக வளர்க்கிற இந்தப் பலாவை நீங்க ளிருவரும் பத்திரமாகப் பார்த்துக்கோள் ளுங்க ளென்று சொல்லிப்போயினன், இளையவள் அந்த மரத்தை வெட்டிவிட்டு மூத்தவள்மேல் பழிசுமத்தினள். குற்றமற்றவளாகிய மூத்தவள்கணவன் என்னசெய்வானோ என்று துக்கித்துக்கொண்டிருந்தாள். அவளை ஔவை நோக்கி வினவிச் சங்கதி தெரிந்துகொண்டு பலாமரம் தழைக்கப் பாடியது.

9. கூரிய வாளாற் குறைத்திட்ட கூன்பலா
ஓரிதழாய்க் கன்றா யுயர்மரமாய்ச்-சீரியதோர்
வண்டுபோற்கொட்டையாய் வண்காயாய்த் தின்பழமாய்ப்
பண்டுபோ னிற்க பலா.

இ - ள். கூரியவாளால்-கூர்மையாகிய வாளினுல், குறைத்திட்ட - வெட்டிவிட்ட, கூன்பலா - வளைவாகிய பலாமரமானது, ஓர் இதழ் ஆய் - ஒரிதழாகி, கன்றாய் - கன்றாகி, உயர்மரம் ஆய் - உயர்ந்தமரமாகி, சீரியது ஓர் வண்டுபோல் கொட்டை ஆய்-சிறந்ததாகிய ஒருவண்டி னுருவம்போலக் கொட்டையை யுடையதாகி, வன்காய் ஆய் - வளமாகிய காய்களையுடையதாகி, தின்பழம் ஆய் - உண்ணும் கனிகளையுடையதாகி, பார்-உலகில், பண்டுபோல் நிற்க - முன்னிருந்ததுபோலவே நிலைபெற்றிருக்க, எ-று,

ஔவையின் கையிலிருந்த முட்டையைச் சோழன்பார்த்து
அது என்னென்று கேட்டபோதுபாடியது.

10. கூழைப் பலாத்தழைக்கப் பாடக் குறமகளும்
மூழக் குழக்குத் தினைதந்தாள் - சோழகேள்
உப்புக்கும் பாடிப் புளிக்கு மொருகவிதை
ஒப்பிக்கு மென்ற னுளம்.

இ - ள். கூழைப்பலா தழைக்கப்பாட-சறிபட்ட பலாமரம் தழைக்கும்படி நான்பாட, குறமகளும் - குறப்பெண்ணும்,மூழக்குழக்கு - மூவுழக்குழக்கு என்னும் அளவுள்ள, தினைதந்தாள் - தினையரிசியைக் கொடுத்தாள், சோழகேள்-சோழனே கேட்பாயாக, உப்புக்கும்பாடி - உப்பின்பொருட்டும்பாடி, புளிக்கும்-புளியின்பொருட்டும், ஒருகவிதை - ஒருபாடலை, என்றன் உள்ளம் ஒப்பிக்கும்-என்மனமானது ஒப்பியாநிற்கும், எ-று.

ஒப்பிக்கும் - பாடும் என்றபடி.

ஒருவன் ஔவைக்கு அமுதுபடைக்க வேண்டுமென்று மனைவியோடு
சொல்ல, அவள்செய்த காரியங்களைப்பற்றிப் பாடியது.

11. இருந்து முகந்திருத்தி யீரோடுபேன் வாங்கி
விருந்துவந்த தென்று விளம்ப வருந்திமிக
ஆடினாள் பாடினா ளாடிப் பழமுறத்தால்
சாடினா ளோடோடத் தான்.

இ - ள். இருந்து - அருகிலிருந்து, முகம்திருத்தி - முகத்தைத் துடைத்து, ஈரோடுபேன்வாங்கி - ஈருடனே பேனையும் உருவியெடுத்து, விருந்து வந்தது என்று விளம்ப-விருந்துவந்ததென்று (கணவன்) சொல்ல, (மனைவியானவள்)மிகவருந்தி-மிகவருத்தப்பட்டு, ஆடினாள்—, பாடினாள்—, ஆடி—, ஓடோட-(அவன்)ஓடவோட, பழமுறத்தால் சாடினாள்-பழமுறத்தைக்கொண்டு (அவனை) அடித்தாள், எ-று.

"இருந்தங் கிதம்பேசி யீரூரீஇப் பேன்பார்த்து, விருந்துவந்ததன் பன்விளம்ப" என்றும் பாடமுண்டு.

ஒருத்தி, தன்கணவன் வேண்டிக்கோடலால் வெறுப்போடு
ஔவைக்கு அன்னமிட அவளது அன்பின்மை
யைக் குறித்துப் பாடியது.

12. காணக்கண் கூசுதே கையெடுக்க நாணுதே
மாணுக்க வாய்திறக்க மாட்டாதே - வீணுக்கென்
என்பெல்லாம் பற்றி யெரிகின்ற தையையோ
அன்பில்லா ளிட்ட வமுது.

இ - ள். ஐயையோ—, அன்பு இல்லாள் இட்ட அமுது - அன்பில்லாதவள் படைத்த அன்னத்தை, காண - பார்க்க, கண்கூசுதே - கண் கூசாநின்றதே, கை எடுக்கநாணுதே-கையானது எடுத்தற்கு நாணாநின்றதே, மாண் ஒக்க வாய்திறக்கமாட்டாதே - மாட்சிமைபொருந்த வாயானது அங்காத்தல் செய்யாதே, வீணுக்கு - வீணாக, என்-எனது, என்பு எல்லாம் - எலும்புகளெல்லாம், பற்றி எரிகின்றது - பற்றி எரியாநின்றது, எ - று.

ஒரு அவிவேகிக்கு வாழ்க்கைப்பட்டிருந்த சற்குணமுள்ள ஒரு பெண்ணைக்கண்டிரங்கிப் பிரமனைநிந்தித்துப் பாடியது.

13. அற்றதலைபோகவறாததலைநான்கினையும்
பற்றித்திருகிப்பறியேனோ - வற்றும்
மரமனையானுக்கிந்தமானை வகுத்திட்ட
பிரமனையான்காணப்பெறின்.

இ - ள். வற்றும்மரம் அனையானுக்கு - உலர்ந்த மரத்தையொத்தவனுக்கு, இந்தமானை வகுத்திட்ட - இந்தப்பெண்ணை யுண்டாக்கிவைத்த, பிரமனை-பிரமதேவனை, யான்காணப்பெறின்-நான் காணப்பெற்றால், அற்றதலைபோக - (முன்பே) அறுபட்ட தலையொன்றும் ஒழிய, அறாததலை நான்கினையும் - அறுபடாத நான்கு தலைகளையும், பற்றி திருகிப்பறியேனோ - பிடித்துத் திருகிப் பிடுங்கேனோ, எ - று.

நற்குண நற்செய்கைகளில்லாத மனையாளோடுகூடி வாழ்தலினும் இல்வாழ்க்கையைத் துறப்பதே நன்றெனப் பாடியது.

14. பத்தாவுக் கேற்ற பதிவிரதை யுண்டானால்
எத்தாலுங் கூடி யிருக்கலாம் — சற்றேனும்
ஏறுமா றாக விருப்பாளே யாமாயின்
கூறாமற் சந்நியாசங்கொள்.

இ - ள். பத்தாவுக்கு ஏற்ற - கணவனுக்குத்தக்க, பதிவிரதை உண்டானால் - கற்புடைய மனைவியுண்டாயிருந்தால், எத்தாலும்-எவ்வழியாலும், கூடி இருக்கல் ஆம் - சேர்ந்திருக்கலாம், சற்றேனும் - சிறிதாயினும், ஏறுமாறாக இருப்பாளேயாமாயின் - ஏறுமாறாக இருந்தாளேயாயின், கூறாமல் - ஒருவரோடும்சொல்லாமல், சந்நியாசம்கொள் - துறவைக் கைக்கொள்வாய், எ - று.

15. சண்டாளி சூர்ப்பநகை தாடகையைப் போல்வடிவு
கொண்டாளைப் பெண்டென்று கொண்டாயே - தொண்டர்
செருப்படிதான் செல்லாவுன் செல்வமென்ன செல்வம்
நெருப்பிலே வீழ்ந்திடுத னேர்.

இ - ள். சண்டாளி - இழிந்தசெய்கையுடையவளை, சூர்ப்பநகைதாடகை யைப்போல் வடிவுகொண்டாளை - சூர்ப்பநகையும் தாடகையும்போல உருவமு டையவளை, பெண்டென்று கொண்டாயே - மனைவியாகப்பெற்றாயே, தொண் டர்செருப்பு அடிதான்செல்லா உன்செல்வம் என்னசெல்வம் - அடியாருடைய செருப்பின்அடிக்கும் ஈடாகாத உன்னுடையசெல்வமும் ஒருசெல்வமா, (இத னினும்) நெருப்பிலே வீழ்ந்திடுதல்நேர் - நெருப்பிலே விழுந்து இறத்தலேத குதியுடையதாம், எ - று.

**சிலம்பியென்னும் தாசிஐந்நூறு பொன்கொடுக்கக் கம்பர்பாடிய அரைப்பாடலை ஔவைகூழுக்கு முழுப்பாடலாகப் பாடியது.**

16. தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே
மண்ணாவ துஞ்சோழ மண்டலமே—பெண்ணாவாள்
அம்பொற் சிலம்பி யரவிந்தத் தாளணியும்
செம்பொற் சிலம்பே சிலம்பு.

இ - ள். தண்ணீரும் - தண்ணீராவதும், காவிரியே-காவிரிநதியே, தார் வேந்தன் - மாலையையணிந்த அரசனாவான், சோழனே - சோழனேயாவான், பெண் ஆவாள் - பெண்ணென்று சொல்லப்படுவாளும், அம்பொற்சிலம்பியே - அம்பொற் சிலம்பியென்பவளே, சிலம்பு - சிலம்பாவது, அரவிந்தம் தாள் அணி யும் - (அவளது) தாமரைமலர்போன்ற பாதத்தில் தரிக்கப்படுகிற, செம்பொன் சிலம்பே - செம்பொன்னாற் செய்யப்பட்ட சிலம்பேயாகும், எ - று.

**கம்பன்பொறாமையால் ஔவையை அடியென்று சொல்ல விரும்பி ஒருகாலடி நாலிலைப்பந்தலடியென்று சிலேடையாகச் சொல்லிப் பொருள்கேட்டபோது பாடியது.**

17. எட்டேகா லட்சணமே யெமனே றும்பரியே
மட்டில் பெரியம்மை வாகனமே—முட்டமேற்
கூரையில்லா வீடே குலராமன் றூதுவனே
ஆரையடா சொன்னா யடா.

இ - ள். எட்டேகால் லக்ஷணமே - அவலக்ஷணமே, எமன் ஏறும்பரியே - இயமன் ஏறுகின்றவாகநமாகிய எருமைக்கடாவே, மட்டு இல்பெரியம்மைவாகந மே - அளவு இல்லாத மூதேவிக்கு வாகநமாகிய கழுதையே, முட்டமேல்கூரை இல்லாவீடே - முழுதும் கூரையில்லாத வீடாகிய குட்டிச்சுவரே, குலராமன் தூதுவனே - மேன்மையாகிய ஸ்ரீராமதூதனாகிய ஆஞ்சநேயனே (குரங்கே) ஆரைஅடா சொன்னாய் அடா - ஆரைக்கீரையடா சொன்னாய்அடா, எ - று.

சேருமலைத் தேய்விகனுடைய திருக்கோவலூரில், பெண்ணைநதிக்குத் தேன்கரையில் குடிசைபோட்டுக் கொண்டிருந்த பாரியேன்னும் இடையன் வீட்டிற்கு, ஔவைமழையில் நனைந்து நடுங்கிக்கொண்டு போயினள். அந்தவீட்டில் கலியாணமில்லாதிருந்த அங்கவை சங்கவையேன்னும் இரண்டுபேண்கள், தமது சிற்றடையைக்கோடுத்து நெருப்பில் குளிர்காயச்செய்து, முருங்கைக்காயை நெய்விட்டுச்சமைத்து, கேழ்வரகு களிகிளறி விருந்திட்டார்கள், அப்போது அவர்களைப் புகழ்ந்து பாடியது.

18. *வெய்தாய் நறுவிதாய் வேண்டளவுந் தின்பதாய்*
*நெய்தா னளாவி நிறம்பசந்த—பொய்யா*
*அடகென்று சொல்லி யமுதத்தை யிட்டார்*
*கடகஞ் செறிந்தகையார்.*

இ - ள் *கடகம் செறிந்தகையார் - கடகம்பொருந்திய கையினையுடையவராகிய அங்கவைசங்கவையென்பவர், வெய்தாய் - சூடுள்ளதாய், நறுவிதாய்-நன்மணமுள்ளதாய், வேண்டளவும் தின்பதாய் - வேண்டுமளவும் உண்ணப்படுவதாய், நெய்தான் அளாவி - நெய்யோடுகலந்து, நிறம்பசந்த - நிறத்தாற்பசுமையாகிய, பொய்யா அடகு என்றுசொல்லி - உண்மையாகிய இலைக்கறி யென்று சொல்லி, அமுதத்தையிட்டார் - அமிர்தத்தைப் படைத்தார்கள், எ - று.*

அங்கவை சங்கவையேன்னும் பேண்கள்கோடுத்த நீலச்சிற்றடையை வியந்து பாடியது.

19. *பாரி பறித்த பறியும் பழையனூர்க்*
*காரி கொடுத்த களைக்கொட்டும்—சேரமான்*
*வாரா யெனவழைத்த வாய்மையு மிம்மூன்றும்*
*நீலச்சிற் றாடைக்கு நேர்.*

இ - ள். *பாரிபறித்தபறியும் - பாரியென்னும் இடையன் ஆடையைப் பறித்துத் தன்னைவிட்டுநீங்காம லிருக்கும்படி தடுத்ததும், பழையனூர் காரிகொடுத்தகளைக்கொட்டும்—, சேரமான்வாராய் எனஅழைத்த வாய்மையும்-சேரமான் பெருமாணயனார் வாராயென்றழைத்தசொல்லும் ஆகிய இம்மூன்றும், நீலச்சிற்றாடைக்குநேர் - நீலச்சிற்றாடைகொடுத்த அன்பிற்குநேராகும், எ - று.*

*அன்பின்மிகுதியால் பாரியென்னும் இடையன் ஔவையை ஆடைபற்றியிழுத்துத் தன்னைவிட்டுப்போகாமல் தடுத்தானென்பதும், பழையனூரிலிருக்கும் காரிமுதலியார் தன்கொல்லையில்களை வெட்டும்போது ஔவையார்வர,*

அவள்கையிலும் கனைக்கொட்டுக்கொடுத்துக் கனைவெட்டச் சொன்னுனென்ப தும், சேரமான் பெருமாணுயனுர் தினந்தோறும் கைலாயத்துக்குப் போகும் போது வாராய்என் றழைத்தானென்பதும் முன்னேநிகழ்ந்த கதையாதலால் இவ்வாறுகூறினுர்.

அங்கவை சங்கவையென்னும் பெண்களிருவரில் ஒருத்தியைச் சோழனுக்கும், மற்றொருத்தியைப் பாண்டியனுக்கும் கலியாணஞ்செய்து கொடுக்கஎண்ணி மணவோலையெழுத விநாயகரைவரும்படி பாடியது.

20. ஒருகொம் பிருசெவி மும்மதத்து நால்வாய்க்
கரியுரிவைக் கங்காளன் காளாய்—பரிவுடனே
கண்ணுல வோலை கடிதெழுத வாராயேல்
தன்னுண்மை தீர்ப்பன் சபித்து.

இ - ள். கரிஉரிவை கங்காளன்-யானைத்தோலையுடைய சிவபெருமானது, ஒருகொம்பு - ஒற்றைக்கொம்பையும், இருசெவி - இரண்டுகாதுகளையும், மும்மதத்து - மூன்றுமதங்களையும், நால்வாய் தொங்குகின்றவாயையும் உடைய, காளாய் - மூத்தபுதல்வனுகிய விநாயகமூர்த்தியே, கண்ணுல ஓலைகடிது எழுத - மணவோலையை விரைவாய் எழுதும்பொருட்டு, பரிவுடனே வாராயேல் - அன்போடு வாராயாயின், சபித்து - சாபமிட்டு, தன் ஆண்மைதீர்ப்பன்-உனதுஆண்மையை ஒழிப்பேன், எ - று.

நால்வாய் நான்குவாய்என்றும் சொன்னயம் தோன்றுதல் காண்க. கங்காளன் - முழுவெலும்பைத் தரித்தவன்.

சோழனைக்கலியாணம் செய்துகொள்வதற்கு வரும்படி பாடியது.

21. புகார்மன்னன் பொன்னிப் புனனுடன் சோழன்
தகாதென்று தானங் கிருந்து—நகாதே
கடிதின் வருக கடிக்கோவ லூர்க்கு
விடியப் பதினெட்டாநாள்.

இ - ள். புகார்மன்னன் - காவிரிப்பூம் பட்டினத்துக்கரசனும், பொன்னிபுனல்நாடன் - காவிரியாற்றுநீர்சூழ்ந்த நாட்டையுடையவனும் ஆகிய,சோழன்-சோழபூபதி, தகாதுஎன்று - தகாதகாரியமென்று, அங்குஇருந்துநகாதே - அவ்விடத்திருந்து நகையாமல், பதினெட்டாம் நாள்விடிய - பதினெட்டாநாள் விடியுமளவில், கடிகோவலூர்க்கு - காவலையுடைய திருக்கோவலூருக்கு, கடிதின்வருக - விரைவாகவருக, எ - று.

பாண்டியனைக் கலியாணம் செய்துகொள்வதற்கு வரும்படி பாடியது.

22. வையைத் துறைவன் மதுராபுரிதென்னன்
செய்யத் தகாதென்று தேம்பாதே—தையலர்க்கு

வேண்டுவன கொண்டு விடியவீ ரொன்பானாள்
ஈண்டு வருக விசைந்து.

இ - ள். வையைத்துறைவன் - வையையாற்றுத் துறையை யுடையவனாகிய, மதுராபுரிதென்னன் - மதுராபுரியிலுள்ள பாண்டியன், செய்யத்தகாது என்று தேம்பாதே - செய்யத்தகாதென்று வருந்தாமல், தையலர்க்குவேண்டுவனகொண்டு - பெண்களுக்கு வேண்டுமவற்றைச் சேகரித்துக்கொண்டு, ஈரொன்பான் நாள்விடிய - பதினெட்டா நாள்விடியுமளவில் - இசைந்துஈண்டுவருக, மனமிசைந்து இவ்விடத்துக்குவருக, எ - று.

சேரனைக் கலியாணத்துக்கு வரும்படி பாடியது.

23. சேரலர்கோன் சேரன் செழும்பூந் திருக்கோவல்
ஊரளவுந் தான்வருக வுட்காதே—பாரிமகள்
அங்கவையைக் கொள்ள வரசர் மனமிசைந்தார்
சங்கவை யையுங்கூடத் தான்.

இ - ள். பாரிமகள்-பாரியின்மகளாகிய, அங்கவையை சங்க வையையுங் கூடக்கொள்ள - அங்கவையையும் சங்கவையையும் மணஞ் செய்துகொள்ள, அரசர் உட்காதே மனமிசைந்தார் - சோழன் பாண்டியனென்னும் இரண்டரசரும் நாணமல் மனமிசைந்தார்கள் (ஆதலால்), சேரலர்கோன் சேரன் - சேரநாட்டார்க் கரசனாகியசேரன், செழும்பூ - செழுமையும் அழகுமுள்ள, திருக்கோவலூரளவும்வருக - திருக்கோவலூர் வரைக்கும்வருக, எ - று.

வருணனைப் பொன்மாரிபெய்விக்கப் பாடியது.

24. கருணையா லிந்தக் கடலுலகங் காக்கும்
வருணனே மாமலையன் கோவல்—திருமணத்தில்
முன்மாரி பெய்யு முதுவாரி யைமாற்றிப்
பொன்மாரி யாகப் பொழி.

இ - ள். கருணையால் - கிருபையினால், இந்தகடல் உலகம்காக்கும் - இந்தக்கடல்சூழ்ந்த உலகத்தைக்காக்கின்ற, வருணனே - வருணபகவானே, மாமலையன்கோவல் - பெருமலைத் தெய்வீகனது திருக்கோவலூரில், திருமணத்தில்-திருமணக்காலத்தில், முன்மாரிபெய்யும் - முன்னே மழையாகப் பெய்கின்ற, முதுவாரியைமாற்றி - பழமையாகிய கடல்நீரையொழித்து, பொன் மாரியாகப் பொழி - பொன்மழையாகச் சொரியக்கடவாய், எ - று.

பெண்ணை நதியைப் பால் நெய்யாகப்,பெருகிவரும்படி பாடியது.

25. முத்தெறியும் பெண்ணை முதுநீ ரதுதவிர்ந்து
நித்திய நெய்பா றலைப்பெய்து—குத்திச்

செருமலைத் தெய்வீகன் றிருக்கோவலூர்க்கு
வருமளவுங் கொண்டோடி வா.

இ - ள். முத்துஎறியும் - முத்துக்களை வீசுகின்ற, பெண்ணை - பெண்ணை நதியே - முதுநீர் அதுதவிர்ந்து - பழையநீராகிய அதனையொழித்து, தத்திய நெய்பால் தலைப்பெய்து - அவைகள் தாவுகின்ற நெய்பால்களின் பெருக்கோடு கூடி, குத்தி - (எதிர்ப்பட்ட மேடுகளைக்) குத்திக்கொண்டு, செருமலை தெய்வீகன் திருக்கோவலூர்க்கு - செருமலை தெய்வீகனது திருக்கோவலூருக்கு, வருமளவும் - வரும்வரைக்கும், கொண்டோடிவா - கொண்டுவிரைந்து வரக்கடவாய், எ - று.

திருக்கோவலூரைச் சிறப்பித்துப் பாடியது.

26. பொன்மாரி பெய்யுமூர் பூம்பருத்தி யாடையாம்
அந்நாள் வயலரிசி யாகுமூர் — எந்நாளும்
தேங்குபுக ழேபடைத்த சேதிமா நாடதனில்
ஓங்குந் திருக்கோவ லூர்.

இ - ள். பொன்மாரிபெய்யும் ஊர் - பொன்மழைபெய்யும் ஊரும், பூபருத்தி ஆடைஆம் அந்நாள் - அழகாகியபருத்தி ஆடையாகின்ற அந்நாளில், வயல்அரிசி ஆகும் ஊர் - வயலரிசியாகிற ஊரும் (யாதெனின்), எந்நாளும் - எக்காலமும், தேங்குபுகழே படைத்த - நிறைந்த புகழையே படைத்திருக்கிற, சேதிமாநாடு அதனில் - பெரிதாகிய சேதிதேசத்தில், ஓங்கும் - உயர்ந்ததாகிய - திருக்கோவலூர் - திருக்கோவலூரேயாகும், எ - று.

பனந்துண்டந் தளிர்க்கப் பாடியது.

27. திங்கட் குடையுடைச் சேரனுஞ் சோழனும் பாண்டியனும்
மங்கைக் கறுகிட வந்துநின் றூர்மணப் பந்தலிலே
சங்கொக்க வெண்குருத் தீன்றுபச் சோலை சல சலத்து
நுங்குக்கண் முற்றி யடிக்கண் கறுத்து நுனி சிவந்து
பங்குக்கு மூன்று பழந்தர வேண்டும் பனந் துண்டமே.

இ - ள். திங்கள்குடை உடை - சந்திரவட்டக் குடையையுடைய, சேரனும் - சேரராஜனும், சோழனும் - சோழராசனும், பாண்டியனும் - பாண்டிய ராசனும், மங்கைக்கு - (அங்கவைசங்கவை என்னும்) பெண்களுக்கு, அறுகு இட - அக்ஷதையிடும்பொருட்டு, மணப்பந்தலிலே வந்துநின்றார் - மணப்பந்தலிலே வந்துநின்றார்கள், (ஆதலால்) பனந்துண்டமே - பனங்கட்டையே, சங்கு ஒக்கவெண்குருத்து ஈன்று - சங்கைநிகர்க்க வெண்மையாகிய குருத்தைவிட்டு, பச்சோலை சலசலத்து - பச்சையோலை சலசலவென் றொலிக்கப்பெற்று, நுங்குக்கண்முற்றி - நுங்குக்கண்கள் முதிர்ந்து, அடிக்கண்கறுத்து - அடியில்கறு

த்து, நுனிசிவந்து - நுனியில்சிவந்து, பங்குக்கு மூன்றுபழம் தரவேண்டும் - ஒவ்வொரு பாகத்துக்கு மும்மூன்று பழங்களைக் கொடுக்கவேண்டும், எ - று.

**அங்கவை சங்கவையென்னும் பெண்களுக்கு இடையர் மரபின்படி சீதநங்கொடுக்கும் பொருட்டுச் சேர ராஜனை ஆடுகேட்டனள், அவன்பொன் ஆடுகொடுத்தான், அதைச்சிறப் பித்துப் பாடியது.**

28. சிரப்பான் மணிமவுலிச் சேரமான் றன்னைச்
சுரப்பா டியான்கேட்கப் பொன்னொன் றீந்தான்
இரப்பவ ரென்பெறினுங் கொள்வர் கொடுப்பவர்
தாமறிவார் தம்கொடையின் சீர்.

இ - ள். சிரப்பால்-சிரத்தின்கண், மணிமவுலி-மணிமுடியைத்தரித்த, சேரமான்தன்னை - சேரமானை, யான் சுரப்பு ஆடுகேட்க - நான்பால்சுரக்கிற ஆட்டைக்கேட்க, (அவன்) பொன்ஆடுஒன்று ஈந்தான் - பொன்னினாற் செய்யப்பட்ட ஆடொன்றைக் கொடுத்தான், இரப்பவர் என்பெறினும்கொள்வர் - யாசிப்பவர் எதனைப்பெறினும் ஏற்றுக்கொள்ளுவார், கொடுப்பவர்தாம் - ஈவோர், தம் கொடையின்சீர் அறிவர் - தமதுகொடையி னேற்றத்தை யறிவார், எ - று.

'இரப்பவரென் பெறினுங்கொள்வர் கொடுப்பவர், தாமறிவார் தங்கொடையின்சீர், என்றதனால், கொடைப்பொருளின் மேன்மை கொடையாளனுக்கே தெரியுமாதலால் இரப்பவளாகிய யான்புகழ அறிந்து வல்லேனல்லேன் என்பதுகருத்து.

**சோழனையும் பாண்டியனையும் ஆசீர்வதித்து இந்தப்பெண்களை எப்போதும் அன்பாகப் பாதுகாக்க வேண்டுமென்று பாடியது.**

29. ஆயன் பதியி லரன்பதிவந் துற்றளகம்
மாய னூதுங்கருவி யானாலும் - தூயமணிக்
குன்றுபோல் வீறு குவிமுலையார் தம்முடனீர்
இன்றுபோ லென்று மிருப்.

இ - ள். ஆயன்பதியில்-திருமாலின் இடமாகிய ஆலிலைமேல், அரன்பதிவந்து உற்று-சிவனதிடமாகிய மலைவந்துபொருந்தி, அளகம்மாயன் ஊதும் கருவி ஆனாலும் - கூந்தல் அந்தத்திருமால் ஊதுகின்ற கருவியாகிய சங்கமாய்விட்டாலும், தூயமணிக் குன்றுபோல்வீறு - பரிசுத்தமாகிய ரத்நமலைபோலப் பூத்த, குவிமுலையார்தம்முடன் - குவிந்ததனங்களை யுடையவர்களாகிய இந்தப்

பெண்களுடன்கூடி, நீர்-நீங்கள், இன்றுபோல்-இன்றிருப்பதுபோலவே, என்றும் இரும் - எந்நாளும் கூடிவாழ்ந்திருங்கள், எ - று.

ஆயன்பதியிலரன்பதி வந்துற்றுஎன்பதற்கு ஆலிலைவயிற்றுக்கும் மலைதனங்களுக்கும் உவமையாதலால், தனங்கள்தளர்ந்து வயிற்றளவும் தொங்கினும் என்பதும், அளகம்மாயனூதுங் கருவியானாலும் என்பதற்கு கூந்தலானதுநரைத்து சங்குபோல வெளுத்துப்போனாலும் என்பதும்கருத்து.

**உத்தமர்மத்திமர் அதமர்என்னுமூவரையும் உவமைமுகத்தாற் கூறியது.**

30. சொல்லாமலேபெரியர் சொல்லிச் சிறியர்செய்வர்
சொல்லியுஞ் செய்யார் கயவரே---நல்ல
குலாமாலை வேற்கண்ணாய் கூறுவமை நாடிற்
பலாமாவைப் பாதிரியைப் பார்.

இ - ள். பெரியோர் சொல்லாமலேசெய்வர் - பெரியோர் சொல்லாமலேயிருந்து ஒரு (உபகாரத்தைச்) செய்வர், சிறியர்சொல்லி செய்வர், சிறியோர் சொல்லிச் செய்வர், கயவர்சொல்லியும் செய்யார் - கீழ்மக்கள் சொல்லியும் செய்யமாட்டார்கள், நல்ல-அழகாகிய, குலாம்மாலை - விளங்குகின்ற பூமாலையையணிந்த, வேல்கண்ணாய் - வேல்போலுங் கண்களை யுடையாளே, கூறுஉவமை நாடின் - (இம்மூவருக்கும்) முறையே சொல்லுதற்குரிய உவமைப்பொருள்களை ஆராயின், பலாவைமாவை பாதிரியைபார் - பலாமரத்தையும் மாமரத்தையும் பாதிரிமரத்தையும் நோக்கு, எ - று.

பலாபூவாது பயன்தருவது, மாபூத்துப்பயன்தருவது, பாதிரிபூத்தும் பயன்தராதொழிவது.

**தீயோர்கள் தீமையைநாடுவார் எனப் பாடியது.**

31. இலக்கணக் கவிஞர்சொ லின்பந் தேடுவர்
மலக்குசொற் றேடுவர் வன்க ணாளர்கள்
நிலத்துறுங் கமலத்தை நீளுட் வண்டதீ
தலைக்குறை கமலத்தைச் சாருந் தன்மைபோல்,

இ - ள். வண்டது - வண்டானது, நிலத்து உறும் கமலத்தைதேடும் தன்மைபோல் - உலகத்தில் தாமரைமலரைத்தேடும் தன்மைபோலவும், ஈ - ஈயானது, தலைக்குறை கமலத்தைசாரும் தன்மைபோல் - முதற்குறையாகிய கமலத்தைச்சேரும் தன்மைபோலவும், இலக்கணக்கவிஞர்-இலக்கண வித்துவான்கள், சொல்லின்பம்தேடுவர் - சொல்லின் இன்பத்தைத்தேடுவார்கள், வன்கணாளர்கள் - அவிவேகிகள், மலக்குசொல்தேடுவர் - மயங்குதற்கேதுவாகிய சொற்களைத்தேடுவார்கள், எ - று.

தலைக்குறை கமலம்-மலம்.

### இவரிவர் கெடுவரென்று பாடியது.

32. நிட்டூரமாக நிதிதேடு மன்னவனும்
இட்டதனை மெச்சா விரவலனும்—முட்டவே
கூசிநிலை நில்லாக் குலக்கொடியுங் கூசிய
வேசியுங் கெட்டு விடும்.

இ - ள். நிட்டூரமாக நிதிதேடும் மன்னவனும்-எல்லார்க்கும் விரோதமுண்டாகப் பொருள்தேடுகிற அரசனும், இட்டதனை மெச்சா இரவலனும்-தந்ததைக்கொண்டு மகிழாத யாசகனும், முட்டகூசி நிலைநில்லாகுலக்கொடியும் - முழுதும்நாணி அந்த நிலையில்நில்லாத குலமாதும், கூசியவேசியும் - நாணியவேசையும், கெட்டுவிடும் - கெட்டுப்போவார்கள், எ - று.

முட்ட - முற்ற என்பதன் மரூஉ.

### சோழன்தனக்கு உயர்ந்தபட்டாடை கொடுத்துத் தன்கொடையைத் தானேபாராட்டிமகிழ, அவ்வாடையினும் உயர்ந்த தன்பாடலைச் சிறப்பித்துப் பாடியது.

33. நூற்றுப்பத் தாயிரம் பொன்பெறினு நூற்சிலை
நாற்றிங்க ளுக்குள்ளே நைந்துவிடும் - மாற்றலர்கள்
பொன்றப் பொருதடக்கைப் போர்வே லகளங்கா
என்றுங் கிழியாதென் பாட்டு.

இ - ள். நூற்றுப்பத்து ஆயிரம்பொன்பெறினும் - நூற்றுப்பத்தாகிய ஆயிரம்பொன் விலைபெற்றதாயிருப்பினும் - நூல்சிலை- நூலாற்செய்யப்பட்ட ஆடையானது, நால்திங்கள்நாளுக்குள் - நான்குமாத காலத்துக்குள்ளே, நைந்துவிடும்-நைந்துகிழிந்துபோகும், மாற்றலர்கள்-பகைவர்கள், பொன்ற-அழியும்படி, பொரு - போர்செய்கின்ற, தடக்கை - பெரியகைகளில், போர்வேல்-போரிற்சிறந்த வேலைத்தாங்கிய, அகளங்கா-மாசற்றவனாகியசோழனே, என்பாட்டு-என்பாட்டானது, என்றும்கிழியாது-எக்காலத்தும் கிழியாது, எ - று.

அகளங்கன் - மற்றோர் பிரபுவின்பெயர் என்பாருமுளர்.

### வேளூர்ப்பூதன் விருந்திட்டதைப் புகழ்ந்து பாடியது.

34. வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்
முரமுரெனவே புளித்த மோரும் - திரமுடனே
புல்வேளூர்ப் பூதன் புரிந்துவிருந் திட்டான்
றெல்லா வுலகும் பெறும்.

இ - ள். வரகரிசிசோறும் - வரகரிசிச்சோற்றையும், வழுதுணங்காய் வாட்டும்-கத்திரிக்காய்த் துவட்டலையும், முரமுரெனவே புளித்தமோரும் - முரமுரென்றிரைந்து நுரைத்துப் புளித்தமோரையும், புல்வேளூர்பூதன் - சிறிதாகிய

வேளூரில் வாழ்வோனாகிய பூதன்என்பவன், திரமுடனேபுரிந்து விருந்திட்டான் - உறுதியாக விரும்பிவிருந்திட்டான், ஈது - இந்தவிருந்தானது, எல்லாஉலகும்பெறும் - எல்லாஉலகங்களையும் விலைமதிக்கப்பெறும், எ - று.

"புகழ்ந்து பரிந்திட்டசோறு" என்றும்பாடம்.

இதனினும் இதுநன்றெனல்

35. ஏசி யிடலி னிட ாமையே நன்றெதிரிற்
பேசு மனையாளிற் பேய்நன்று - நேசமிலா
வங்கணத்தி னன்று வலியபகை வாழ்வில்லாச்
சங்கடத்திற் சாதலே நன்று.

இ - ள். ஏசிஇடலின் - ஏற்பாரைவைது பின்பு பிச்சையிடுவதினும், இடாமையேநன்று - இடாதிருப்பதே நன்மையாகும், எதிரில்பேசும் மனையாளின் - (கணவனுக்கு) எதிராகநின்று பேசுகிறமனைவியினும், பேய்நன்று - பேயேநன்மையாகும், நேசம்இல்லா வங்கணத்தின்-உள்ளன்பில்லாத சிநேகத்தினும், வலியபகைநன்று - வலிமையாகிய விரோதம்நன்மையாகும், வாழ்வுஇல்லா சங்கடத்தின் - செல்வமில்லாத வருத்தத்தினும், சாவதேநன்று - இறப்பதே நன்மையாகும், எ - று.

கோரைக்கால் என்னும் ஊரிலுள்ள ஆழ்வான்
கொடையை நிந்தித்துப் பாடியது.

36. கரியாய்ப் பரியாகிக் காரெருமை தானாய்
எருதாய் முழப்புடவை யாகித் —திரிதிரியாய்த்
தேரைக்கால் பெற்றுமிகத் தேய்ந்துகா லோய்ந்தே
கோரைக்கா லாழ்வான் கொடை.

இ - ள். கோரைக்கால் ஆழ்வான்கொடை - கோரைக்கால்என்னும் ஊரிலிருக்கிற ஆழ்வான்என்பவனது கொடையானது, கரிஆய் - (முதலில்) யானையாகி, பரிஆய் - (பின்பு) குதிரையாகி, கார்எருமை ஆய்-பின்புகரிய எருமையாகி எருதுஆய் - (பின்பு) எருதாகி - முழப்புடவைஆகி - ஒருமுழநீட்சியுள்ள சேலையாகி, திரிதிரிஆய் - திரிதிரியாகி, தேரைக்கால் பெற்று - கால் தேரைக்கால்களின் தன்மையையடைந்து, மிகத்தேய்ந்து ஓய்ந்தது - மிகவும் தேய்ந்துதளர்ந்தது, எ - று.

யானைமுதலானவைகளைக் கொடுப்பேனென்று பலநாளும் ஆசைவார்த்தை சொல்லி யலையவைத்து முடிவில்ஒன்றும் கொடாமையால் இவ்வாறு அவமதுக் கூறலாயிற்று.

**ஈகையில்லாதவனாகிய சேடன்என்பவனை இழித்துப் பாடியது.**

37. பாடல் பெறானே பலர் மெச்சவாழானே
நாடறிய நன்மணங்க ளாடானே - சேடன்
இவன்வாழும் வாழ்க்கை யிருங்கடல்சூழ் பாரில்
கவிழ்ந்தென் மலர்ந்தென்ன காண்.

இ - ள். பாடல்பெறான் - (சிறந்தபுலவர்களது) பாடலைப் பெறாதவனும், பலர்மெச்சவாழான் - பலரும்மெச்சும்படி வாழாதவனும், நாடுஅறிய நல்மணங்கள்நாடான்-உலகமறியநல்ல சுபங்களை விரும்பாதவனும்ஆகிய, சேடன்இவன்-சேடன்என்னும் பெயருள்ள இவன், வாழும்வாழ்க்கை - வாழும் வாழ்வானது, இருகடல்சூழ்பாரில் - பெரியகடல்சூழ்ந்த பூமியில், கவிழ்ந்துஎன் - அழிந்தால் என்ன, மலர்ந்துஎன் - செழித்தால்என்ன.

காண் - அசை. பாடல்பெறுதல் முதலானவை யில்லாதவன் உலகிலிருந் தென்ன இறந்தென்ன என்பதுகருத்து.

**முல்லான்என்பவனைப் புகழ்ந்துபாடியது.**

38. காலையிலொன்றாவர் கடும்பகலி லொன்றாவர்
மாலையிலொன் றாவர் மனிதரெலாம் - சாலவே
முல்லானைப் போல முகமுமக முமலர்ந்த
நல்லானைக் கண்டறியோ நாம்.

இ - ள். மனிதர்எல்லாம் - மனிதரெல்லாரும், காலையில்ஒன்றுஆவர் - காலையில் ஒருதன்மையராவர், கடும்பகலில்ஒன்று ஆவர் - கடும்பகலில் ஒருதன்மையராவர், மாலையில் ஒன்றுஆவர் - மாலைக்காலத்தில் ஒருதன்மையராவர், (இவருள்) சால - மிகவும், முல்லானைப்போல - முல்லானைப்போல, முகமும் அகமும்மலர்ந்த நல்லானை - (எப்போதும்) முகமும்மனமும் அலரப்பெற்ற நல்லோனொருவனை, நாம்கண்டறியோம் - யாம்கண்டறிந்திலேம், எ - று.

**கல்விக்கு ஓரெல்லையில்லை யாதலால் நீர் செருக்காதீர்**
**என்று புலவரைநோக்கிக் கூறியது.**

39. கற்றதுகைம் மண்ணளவு கல்லா துலகளவென்
றுற்றகலை மடந்தை யோதுகிறாள் - மெத்த
வெறும் பந்தயங்கூற வேண்டாம் புலவீர்
எறும்புந் தன்கையா லெண்சாண்.

இ - ள். புலவீர் - புலவரே, கற்றதுகைமண்அளவு - கற்கப்பட்டது கை மண்ணளவேயாகும், கல்லாது உலகுஅளவு - கற்கப்படாதது உலகினளவேயாகும், என்று - என்று, உற்றகலைமடந்தை ஓதுகிறாள் - பொருந்திய கலைமாதும் சொல்லாநின்றாள், (ஆதலால்) மெத்த - மிகவும், வெறும்பந்தயம் கூறவேண்

டாம்—, எறும்பும் தன்கையால் எண்சாண் - எறும்பும் தன்கையினால் எட்டு சாணள வுள்ளதேயாகும், எ - று.

மந்திரிகளாக இன்னாரைக் கொள்ளத்தகும்எனப் பாடியது.

40. நூலெனிலோ கோல்சாயு நுந்தமரேல் வெஞ்சமராம்
கோலெனிலோ வாங்கே குடிசாயும் - நாலாவான்
மந்திரியு மாவான் வழிக்குத் துணையாவான்
அந்த வரசே யரசு.

இ - ள். நூல்எனிலோ கோல்சாயும் - பூணூலை யுடையவனாகிய அந்தணன் மந்திரியானாலோ செங்கோல்முறைபிறழும், நுந்தமர் எல்வெஞ்சமர்ஆம் - உம்மவராகிய க்ஷத்திரியராயின் கொடியபோர்வினையும், கோல்எனிலோ ஆங்கே குடிசாயும் - நிறைகோலை யுடையவனாகிய வணிகனென்றாலோ அப்பொழுதே குடிகளழியும், நால்ஆவான் - நான்காம் வருணத்தனாகிய சூத்திரன், மந்திரியும் ஆவான் - மந்திரியும் ஆதற்குரியனாவான், வழிக்குத் துணையாவான் - வழிநடைக்குத் துணையாதற்கு முரியவனுமாவான், அந்த அரசேஅரசு - அப்படிப்பட்ட மந்திரியையுடைய அரசனே அரசன், எ - று.

முருகர்மீது, ஒரு பெண்ணின்தாய் இரங்கிக்கூறியதாகப் பாடியது.

41. செம்மான் கரத்தனருள் சேயா நெடியோனை
அம்மா னெனப்பெற் றருள்வேலா - இம்மான்
கரும்பிறைக்குள் வெண்பிறைக்குங் கண்ணம் பிறைக்கும்
அரும்பிறைக்குங் கூந்தலணை.

இ - ள். செம்மான் கரத்தன் அருள்சேயா - செவந்தமானைக் கையிலேந்தினவனாகிய சிவபெருமான் ஈன்றருளினபுதல்வனே, நெடியோனை-திருமாலை, அம்மான்எனப் பெற்றருள்வேலா - அம்மான்என்று சொல்லப் பெற்றருளின வேலவனே, இம்மான் - இந்தப்பெண்ணானவள், கரும்புஇறைக்கும் - கருப்பு வில்லையுடைய மன்மதராஜனுக்கும், வெண்பிறைக்கும்-வெண்மையாகிய பிறைச்சந்திரனுக்கும், கண்அம்பு இறைக்கும்-கண்ணீரையிறைக்கிறாள், (ஆதலால்) அரும்புஇறைக்கும் கூந்தல் - பூவரும்புகளைச் சிந்துகின்ற கூந்தலையுடைய இவளை, அணை - நீவந்து தழுவவேண்டும், எ - று.

இன்னின்ன செயல்கள் சிறந்தனஎன்று பாடியது.

42. மதியாதார்முற்ற மதித்தொருகாற் சென்று மிதியாமை கோடி பெறும், உண்ணீருண் ணீரென்றுபசரியார்தம்மனையிலுண் ணாமை கோடி பெறும், கோடிகொடுத்துங் குடிப்பிறந்தார்தம் மோடுகூடுதல் கோடிபெறும், கோடானுகோடி கொடுப்பினுந் தன்னுடைநாக்கோ டாமை கோடிபெறும்.

**இ - ள்.** மதியாதார்முற்றம் - மதிக்காதவருடைய முற்றத்தை, மதித்து - மதித்தலைச்செய்து, ஒருகால்சென்று - ஒருதரம்போய், மிதியாமை - மிதியாதிருத்தல், கோடிபெறும் - கோடிபொன்பெறும், உண்ணீர் உண்ணீர்என்று-புசியும் புசியும்என்று, உபசரியார் தம்மனையில் - உபசரிக்காதவருடைய வீட்டில், உண்ணாமை - புசியாதிருத்தல், கோடிபெறும் - கோடிபொன்பெறும், கோடி கொடுத்தும் - கோடிபொன்னைக் கொடுத்தாயினும், குடிப்பிறந்தார் தம்மோடு - உயர்குடியிற் பிறந்தவரோடு, கூடுதல் - சேர்தல் கோடிபெறும் - கோடிபொன் பெறும், கோடானுகோடி கொடுப்பினும் - கோடானுகோடி பொன்னைக் கொடுத்தாலும், தன்னுடைநா - தனது நாவானது, கோடாமை - சொன்னசொல் தவறாதிருத்தல், கோடிபெறும் - கோடிபொன் பெறும், எ - று.

43. வாதக்கோ னாளையென்றான் மற்றைக்கோன் பின்னையென்றான்
ஏதக்கோன் யாதேனு மில்லையென்றான் - ஓதக்கேள்
வாதக்கோன் சொல்லதினும் மற்றைக்கோன் சொல்லதினும்
ஏதக்கோன் சொல்லே யினிது.

**இ - ள்.** வாதக்கோன் நாளைஎன்றான் - வரதராஜன் நாளைக்கென்றான், மற்றைக்கோன்பின்னை என்றான் - மற்றைராஜன் பிறகென்றான், ஏதக்கோன் யாதேனும் இல்லைஎன்றான் - ஏதராஜன் யாதொன்று மில்லையென்றான், ஓதக்கேள் - சொல்லக்கேள், வாதக்கோன் சொல்லதினும் - வாதக்கோன் சொல்லினும், மற்றைக்கோன் சொல்லதினும் - மற்றைக்கோன் சொல்லினும், ஏதக்கோன் சொல்லே இனிது - ஏதக்கோன் சொல்லே இனிமையைத் தருவதாகும், எ - று.

நாளைக்கென்று சொல்லுவோனும் பின்னைக்கென்று சொல்லுவோனும் ஆகிய இருவர்சொல்லினும் இல்லையென்பவனது சொல்லே இனிதாமென்பதாம் - வாதநாடியடங்கினால் ஒருநாளிலும், பித்தநாடியடங்கினால் ஒரு நாழிகையிலும், சிலேத்தும நாடியடங்கினால் ஒருநிமிஷத்திலும் உயிர்நீங்கும் என்பது சொன்னயம்.

ஈயாத லோபிகளுடைய தனம் இதற்கு நிகராமென்று பாடியது.

44. சுற்றுங் கருங்குளவி சூரைத்தா றாரியப்பேய்
எற்றுஞ் சுடுகா டிடிகரையின் - புற்றில்
வளர்ந்த மடற்பனைக்குள் வைத்ததே னொக்கும்
தளர்ந்தோர்க்கொன் றீயார் தனம்.

**இ - ள்.** தளர்ந்தோர்க்கு-(செல்வப்பெருக்கமற்றுத்) தளர்ச்சி யடைந்தவர்களுக்கு, ஒன்று ஈயார்தனம் - (அவர்வேண்டிய) ஒருபொருளைக் கொடாதவருடையதனமானது, சுற்றும்கருகுளவி - சுற்றிலுங்கருங்குளவி மொய்த்த, சூரைத்தாறு-சூரைச்செடிப்புதலிலும், ஆரியப்பேய் எற்றும் சுடுகாடு இடிகரையின் புற்றில்-(சேர்ந்தாரை) பார்ப்பனப்பேய் அறைகின்ற சுடுகாட்டிலுள்ள இடிகரையின்

கண்உள்ள புற்றிலும், வளர்ந்த மடல்பனைக்குள் - உயர்ந்த மடற்பனைமரத்தின்மீதும், வைத்ததேன் ஒக்கும் - வைக்கப்பட்ட தேனையொக்கும், எ - று.

மடற்பனை - மடல்கழிக்காதபனை. கூரைப்புதல்முதலிய இடங்களில் கட்டப்பட்டதேன் எளிதிற்கிடையாததுபோல, உலோபரது தனமும்எளிதிற் கிடையாதென்பது கருத்து.

பொற்கிழி அறும்படி பாடியவை.

45. ஆர்த்தசபை நூற்றொருவ ராயிரத்தொன் றாம்புலவர்
வார்த்தை பதினா யிரத்தொருவர் - பூத்தமலர்த்
தண்டா மரைத்திருவே தாதாகோ டிக்கொருவர்
உண்டாயி னுண்டென் றறு.

இ - ள். ஆர்த்தசபைநூற்றொருவர் - நிறைந்தசபைக்கேறத் தகுதியுடையவர் நூற்றிலொருவர், புலவர் ஆயிரத்தொன்று ஆம் - அவருள் புலவராயிருப்பவர் ஆயிரத்திலொருவர், (அவருள்) வார்த்தை பதினாயிரத்தொருவர் - வார்த்தை சொல்லுதற்குரியார் பதினாயிரத்திலொருவர், பூத்த தண்தாமரை மலர்திருவே - மலர்ந்த குளிர்ச்சியாகிய தாமரைமலரில் வாழ்கின்ற திருமகளே, தாதாகோடிக்கு ஒருவர் - கொடையாளிகள் கோடிக்கொருவர், உண்டு ஆயின் உண்டென்று அறு - உண்டென்றால் உண்டென்று அறுபடுவாய், எ று - .

46. தண்டாம லீவது தாளாண்மை தண்டி
அடுத்தக்கா லீவது வண்மை - அடுத்தடுத்துப்
பின்சென்றா லீவது காற்கூலி பின்சென்றும்
ஈயானெச் சம்போ லறு.

இ - ள். தண்டாமல் ஈவதுதாளாண்மை - கேளாமல் (குறிப்பறிந்து) கொடுப்பது ஊக்கமாம், தண்டிஅடுத்தக்கால் ஈவதுவண்மை - கேட்டு அடுத்தால் கொடுப்பது கொடையாம், அடுத்துஅடுத்து பின்சென்றால் ஈவதுகால்கூலி - அடுத்தடுத்துப் பின்னே தொடர்ந்துசென்றால் கொடுப்பது கால்கூலியாம், பின்சென்றும் - பின்னே தொடர்ந்துசென்றும், ஈயான்-கொடாதவனுடைய, எச்சம்போல்அறு - சந்ததியைப்போல அறுபடுவாய், எ - று.

47. உள்ள வழக்கிருக்க வூரார் பொதுவிருக்கத்
தள்ளி வழக்கதனைத் தான்பேசி - எள்ளளவும்
கைக்கூலி தான்வாங்குங் காலறுவான் றன்கிளையும்
எச்சமறு மென்றா லறு.

இ - ள். உள்ளவழக்கு இருக்க - உண்மையாகிய வழக்கிருக்கவும், ஊரார் பொதுஇருக்க - ஊரிலுள்ளாரது சபையிருக்கவும், தான்பேசி-தான் முனைந்து பேசி, வழக்கதனை தள்ளி - வழக்கினைத் தள்ளிவிட்டு, எள்அளவும் - சிறிதளவிலும், கைக்கூலிதான் வாங்கும் - கைக்கூலியை வாங்குகின்ற, கால் அறுவான்

தன்கிளையும்-சந்ததியற்றுப் போவானது சுற்றமும், எச்சம் அறும்என்றால்அறு-சந்ததியற்றுப்போமாயின் நீயும் அறுபடுவாய், எ - று.

48. வழக்குடையா னிற்ப வலியானைக் கூடி
வழக்கை யழிவழக்குச் செய்தோன் - வழக்கிழந்தோன்
சுற்றமுந் தானுந் தொடர்ந்தழுத கண்ணீரால்
எச்சமறு மென்றா லறு.

**இ - ள்.** வழக்கு உடையான்நிற்ப - (உண்மையாகிய) வழக்குடையவனிருக்க, வலியானைக்கூடி - வலியவனைச்சேர்ந்து, வழக்கை - நல்வழக்கை, அழிவழக்குச் செய்தோன் - கெடுவழக்காக்கினவன், வழக்கு இழந்தோன் - வழக்கைத்தோற்றவன், சுற்றமும்தானும்-தன்சுற்றமும்தானுமாக, தொடர்ந்துஅழுதகண்ணீரால் - இடையறாதழுத கண்ணீரினால், எச்சம் அறும்என்றால் - சந்ததியற்றொழிவதாயின், அறு - (நீயும்) அறுபடுவாய், எ - று.

ஒருராஜகுமாரத்தி அழகுள்ள ஒரு ராஜகுமாரனைக் கல்வியில்லாதவனென்றறியாமல் ஒருசத்திரத்தில் இன்னகாலத்தில் நீவந்திருந்தால் நான்வருகிறேன், கூடிக்களிக்கலாம் என்றெழுதினள், அதை அவன்படித்த ஒருவனுக்குக் காட்ட, அவன் அதிலுள்ள செய்தியை யறிந்துகொண்டு, ராஜகுமாரனைநோக்கி, நீ இவ்விடத்தி லிருந்தால் அரசன்உன்னைத் தலை வெட்டும்படி நேரிடுமென்று சொல்லி அவனைப் போகச்செய்து, தான் அந்த ராஜகுமாரனைப்போல வேஷங்கொண்டு அங்கிருந்தான், ராஜகுமாரத்தி அவ்வாறேவந்து அந்நியனென்று அறியாமல் கூடிரமித்த பின்புதெரிந்து பிராணத்தியாகஞ் செய்துகொண்டு பிசாசமாகி அந்தச் சத்திரத்தில் வந்து தங்குவோரைத் தொந்தரைசெய்து கொண்டிருந்தாள். அங்கு ஔவைவந்தனள், அவளையும் சாயந்தோறும் தொந்தரைசெய்தபோது நான்குசாமத்திலும் பாடியவை.

49. வெண்பா விருகாலிற் கல்லானை வெள்ளோலை
கண்பார்க்கக் கையா லெழுதானைப் - பெண்பாவி
பெற்றாளே பெற்றாள் பிறர்நகைக்கப் பெற்றாளே
எற்றோமற் றெற்றோமற் றெற்று.

**இ - ள்.** வெண்பா - வெண்பாவை, இருகாலில் - இரண்டுதரம் சொல்லுமளவில், கல்லானை - கல்லாதவனையும், வெள்ஓலை கண்பார்க்க - வெண்மையாகிய ஓலையைக்கண்பாராதிற்க, கையால்எழுதானை - கையினால் (எழுத்தாணியைக்கொண்டு) எழுதாதவனையும், பெண்பாவி பெற்றாள்பெற்றாள் பெண்பாவி ஈன்றாள், பிறர் நகைக்கப்பெற்றாள்-பிறர்பார்த்துச் சிரிக்கும்பொருட்டு ஈன்றாள், (ஆதலால் அவர்களை) எற்று எற்று எற்று - அறை அறை அறை.

50. கருங்குளவி சூரைத்தூ றீச்சங் கனிபோல்
வருந்தினர்க்கொன் றீயாதான் வாழ்க்கை—அரும்பகலே

இச்சித் திருந்தபொருள் தாயத்தார் கொள்வரே
எற்றோமற் றெற்றோமற் றெற்று.

இ - ள். கருகுளவி - கருங்குளவிமொய்த்த, சூரைத்தூறு - சூரைப்புதலிலுள்ள, ஈச்சங்கனிபோல் - ஈச்சமரத்தின்கனிபோல், வருந்தினர்க்கு - துன்பமடைந்தார்க்கு, ஒன்று ஈயாதவன்வாழ்க்கை - ஒருபொருளையும் கொடாதவனது செல்வத்தையும், இச்சித்திருந்த பொருள் - விரும்பியிருந்த பிறபொருள்களையும், அருபகலே - அருமையாகிய (அன்றைப்) பகலிற்றானே, தாயத்தார்கொள்வர் - தாயாதிகள் கவர்ந்துகொள்வார்கள் (ஆதலால் அந்தலோபியை) எற்று எற்று எற்று - அறை அறை அறை, எ - று.

51. வானமுளதான் மழையுளதான் மண்ணுலகில்
தானமுளதாற் றடமுளதால் — ஆனபொழு
தெய்த்தோ மிளைத்தோமென் றேமாந் திருப்பாரை
எற்றோமற் றெற்றோமற் றெற்று.

இ - ள். வானம் உளது - மேகமுண்டு, மழைஉளது - (அதனால் பெய்யப்படுவதாகிய) மழையுண்டு, மண்ணுலகில் - நிலவுலகத்தில், தானம்உளது - நிலமுண்டு, தடம்உளது - நீர்நிலைகளுமுண்டு, ஆனபொழுது - (இப்படி) ஆயினபின்பு, எய்த்தோம் இளைத்தோம் என்று - (யாம்) இளைத்தோம் மெலிந்தோமென்று, ஏமாந்திருப்பாரை - ஏமாந்திருப்பவர்களை, எற்று எற்று எற்று - அறை அறை அறை, எ - று.

52. எண்ணாயிரத்தாண்டு நீரிற் கிடந்தாலும்
உண்ணீரம் பற்றாக் கிடையேபோல் — பெண்ணாவாய்
பொற்றொடி மாதர் புணர்முலைமேற் சாராரை
எற்றோமற் றெற்றோமற் றெற்று.

இ - ள். எண்ணாயிரத்து ஆண்டு - எண்ணாயிரவருஷம், நீரில் கிடந்தாலும் - நீரிலே தங்கியிருந்தாலும், உள் நீரம்பற்றா - உள்ளே நீரைக்கொள்ளாத, கிடையேபோல் - சடைபோலவே, பெண் ஆவாய் - பெண்ணானவளே, பொன்தொடிமாதர் - பொன் வளையலையணிந்த குலமாதரது, புணர்முலைமேல் சாராரை - நெருங்கிய தனங்களின்மீது பொருந்தாது வேசையரைவிரும்புந் தூர்த்தரை, எற்று எற்று எற்று - அறை அறை அறை, எ - று.

**ஔவையால்பாடல்பெறவிரும்பியமுருகக்கடவுள்எருமைமேய்க்கிறபிள்ளைகளைப்போல ரூபங்கொண்டு நாவல்மரத்தில் ஏறியிருந்தனர். ஔவை அவரைநோக்கி, அப்பா நாவற்பழம் போடென்றாள். அவர்சுடுகிற பழம்போடவா சுடாதபழம் போடவாஎன்றார். அதைக்கேட்ட ஔவை ஆச்சரியமடைந்து சுடுகிற பழம் போடென்றுசொல்ல, அவர் அவிந்த ஒர் பழ**

த்தைப்போட்டார், அது மணலில் விழுந்
ததனுல் மணல் ஒட்டிக்கொண்டது,
அதை ஔவையெடுத்து மண
லையூதும்போது முருகர்,
பழம் சுடப்போகிற
தென்று பரிஹாசி
த்தபோது பா
டியது.

53. கருங்காலிக் கட்டைக்கு நாணுக்கோ டாலி
இருங்கதலித் தண்டுக்கு நாணும்—பெருங்கானில்
காரெருமை மேய்க்கின்ற காளைக்கு நான்ருேற்ற
தீரிரவுந் துஞ்சாதென் கண்.

இ - ள். கருங்காலிகட்டைக்கு - கருங்காலிக்கட்டைக்கு, நாணு கோடா லி - அஞ்சாத கோடாரியானது, இருகதலித் தண்டுக்குநாணும் - பெரியவாழைத் தண்டுக்கு அஞ்சும், (அதுபோல) பெருகானில்-பெருங்காட்டில், கார் எருமை மேய்க்கின்ற காளைக்கு - கரிய எருமைகளைமேய்க்கிற சிறுவனுக்கு, நான்தோ ற்றது - நான்தோற்றதைக்குறித்து, என்கண் - என்கண்ணனது, ஈரிரவும்துஞ் சாது - இரண்டிராக்களும் நித்திரைகொள்ளாது, எ - று.

முருகர் கோடியதுமுதலாயின எவையேன்றுகேட்க ஔவைபாடியது.

54. கொடியது கேட்கி னெடியவெவ் வேலோய்
கொடிது கொடிது வறுமை கொடிது
அதனினுங் கொடிது இளமையில் வறுமை
அதனினுங் கொடிது ஆற்ருெணுக் கொடுநோய்
அதனினுங் கொடிது அன்பிலாப் பெண்டிர்
அதனினுங் கொடிது
இன்புற அவர்கையி லுண்பது தானே.

இ - ள். கொடியதுகேட்கின் - கொடியதைக்கேட்குமிடத்து, நெடியவெ வ்வேலோய் - நெடுமையாகிய வெவ்விய வேலாயுதத்தை யுடையவனே, வறுமை கொடிது கொடிது கொடிது - தரித்திரம்கொடியது கொடியது கொடியது, இளமையில்வறுமை அதனினும் கொடிது - இளமையில் நேரிட்ட தரித்திரம் அதினும் கொடியது, ஆற்ருெணு கொடுநோய் அதனினும் கொடிது - சகிக்கக் கூடாத கொடியவியாதி அதினும்கொடியது, அன்பு இல்லாபெண்டிர்-அன்பில் லாத பெண்டிரையுடைத்தாதல், அதனினும் கொடிது - அதினும் கொடியது, இன்புஉற - இன்பமுண்டாக, அவர்கையில் உண்பது - அவர்கையில் அன்னம் புசிப்பது, அதனினும்கொடிது - அதினும்கொடியது, எ - று.

55. இனியது கேட்கிற் றனிநெடு வேலோய்
இனிது இனிது ஏகாந்த மினிது
அதனினு மினிது ஆதியைத் தொழுதல்
அதனினு மினிது அறிவினர்ச் சேர்தல்
அதனினு மினிது அறிவுள் ளோரைக்
கனவினு நனவினுங் காண்பது தானே.

இ - ள். இனியது கேட்கின்-இனியதைக் கேட்பையாயின், தனிநெடுவேலோய் - ஒப்பற்ற நெடியவேலை யுடையவனே, ஏகாந்தம் - தனித்திருத்தல், இனிது இனிது இனிது - இனியது இனியது இனியது, ஆதியைதொழுதல்- முதற்கடவுளை வணங்குதல், அதனினும் இனிது - அதினும் இனியது, அறிவினர் சேர்தல் - அறிவுள்ளவரைக்கூடுதல், அதனினும் இனிது - அதினும் இனியது. அறிவுள்ளவரை-அறிவுள்ளவரை, கனவினும் நனவினும் காண்பது- சொப்பனத்திலும் சாக்கிரத்திலும்தரிசிப்பது, அதனினும் இனிது - அதினும் இனியது, ௳ - று.

56. பெரியது கேட்கி னெரிதவழ் வேலோய்
பெரிது பெரிது புவனம் பெரிது
புவனமோ நான்முகன் படைப்பு
நான்முகன் கரியமா லுந்தி வந்தோன்
கரிய மாலோ அலைகடற் றுயின்றோன்
அலைகடல் குறுமுனி யங்கையி லடக்கம்
குறுமுனி யோகலசத்திற் பிறந்தோன்
கலசமோ புவியிற் சிறுமண்
புவியோ அரவினுக் கொருதலைப் பாரம்
அரவோ உமையவள் சிறுவிரன் மோதிரம்
உமையோ இறைவர் பாகத் தொடுக்கம்
இறைவரோ தொண்ட ருள்ளத் தொடுக்கம்
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே.

இ - ள். பெரியதுகேட்பின் - பெரியதனைக் கேட்பையாயின், எரிதவழ் வேலோய் - நெருப்புப் பரவிய வேலை யுடையவனே, புவனம்பெரிது பெரிது பெரிது - உலகம் பெரியது பெரியது பெரியது, புவனமோ நான்முகன்படைப்பு - உலகமோ பிரமனது சிருஷ்டி, நான்முகன் கரியமால் உந்திவந்தோன்- பிரமன் திருமாலின் உந்தியிற்பிறந்தவன், கரியமாலோ அலைகடல் துயின்றோன் - திருமாலோ அசையாநின்ற கடலில் உறங்கினவன், அலைகடல் குறுமுனி அங்கையில்அடக்கம் - அசையாநின்றகடல் அகத்தியரது உள்ளங்கையில் அட

க்கம், குறுமுனியோ கலசத்தில் பிறந்தோன் - அகத்தியனே குடத்தில்பிறந்தவன், கலசமோபுவியில் சிறுமண் - குடமோ நிலத்திலுள்ள அற்பமண், புவியோ அரவினுக்கு ஒருதலைப்பாரம் - நிலமோ ஆதிசேடனாகிய பாம்புக்கு ஒருதலைப்பளுவு, அரவோ உமையவள் சிறுவிரல்மோதிரம் - ஆதிசேடனே உமாதேவிக்குச் சிறுவிரலி லணியப்பட்டமோதிரம், உமையோ இறைவர் பாகத்து ஒடுக்கம் - உமாதேவியோ சிவபெருமானது இடப்பாகத்தில் ஒடுக்கம், இறைவரோ தொண்டர் உள்ளத்து ஒடுக்கம் - சிவபெருமானே அடியாரது மனத்தில்ஒடுக்கம், தொண்டர்தம் பெருமைசொல்லவும் பெரிதே - அடியாரதுமேன்மை சொல்வதற்கும் பெரியதேயாம், எ - று.

57. அரியது கேட்கின் வரிவடி வேலோய்
அரிதரிது மானிட ராத லரிது
மானிட ராயினுங் கூன்குரு டுசெவிடு
பேடு நீங்கிப் பிறத்த லரிது
பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமுங் கல்வியு நயத்த லரிது
ஞானமுங் கல்வியு நயந்த காலையும்
தானமுந் தவமுந் தான்செய லரிது
தானமுந் தவமுந் தான்செய்வ ராயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே.

இ - ள். அரியதுகேட்கின் - அரியதனைக் கேட்பையாயின், வரிவடிவேலோய் - நீண்டவடித்த வேலையுடையவனே, மானிடர்ஆதல் - மனிதராகப்பிறப்பது, அரிது அரிது அரிது - அரியது.அரியது அரியது, மானிடர் ஆயினும், மனிதராகப்பிறந்தாலும், கூன்குருடு செவிடுபேடு நீங்கிபிறத்தல் அரிது-கூன் குருடு செவிடுபேடு என்பவற்றை யொழிந்துபிறப்பது அரியது, பேடுநீங்கிப்பிறந்தகாலையும் - (கூன்குருடுசெவிடு) பேடுநீங்கிப் பிறந்தகாலத்திலும், ஞானமும் கல்வியும் நயத்தல்அரிது - ஞானத்தையும் கல்வியையும் விரும்புதல் அரியது, ஞானமும்கல்வியும் நயந்தகாலையும் - ஞானத்தையும் கல்வியையும் விரும்பினகாலத்திலும், தானமும் தவமும்செயல்அரிது - தானத்தையும் தவத்தையும் செய்தல்அரியது, தானமும்தவமும்செய்வர் ஆயின் - தானத்தையும் தவத்தையும் செய்வாராயின், (அவர்களுக்கு) வானவர்நாடு - சுவர்க்கலோகம், வழிதிறந்திடும் - வழிதிறந்துவைக்கப்படும், எ - று.

பயனற்றன இவ்வை எனப்பாடியது.

58. மாடில்லான் வாழ்வு மதியில்லான் வாணிபங்
நாடில்லான் செங்கோ னடாத்தவதுங்—கூடும்
குருவில்லா வித்தை குணமில்லாப் பெண்டு
விருந்தில்லா வீடு விழல்.

இ - ள். மாடுஇல்லான்வாழ்வு - செல்வமில்லாதவனது வாழ்க்கையும், மதி இல்லான் வாணிபம் - அறிவில்லாதவனது வியாபாரமும், நல்நாடு இல்லான் செங்கோல்நடாத்துவது - நல்லதேசமில்லாத அரசன்செங்கோல் செலுத்துவதும், கூடும்குரு இல்லாவித்தை - பொருந்திய குரு இல்லாதவித்தையும், குணம்இல்லாபெண்டு - நற்குணமில்லாத மனைவியும், விருந்துஇல்லாவீடு - விருந்து வராதவீடும், விழல் - வீணேயாகும், எ - று.

இன்னாரை இன்னஇடத்திற் புகழவேண்டுமென்று பாடியது.

59. நேசனைக்காணா விடத்தி னெஞ்சார வேதுதித்தல்
ஆசானை யெவ்விடத்து மப்படியே—வாச
மனையாளைப் பஞ்சணையில் மைந்தர்தமை நெஞ்சில்
வினையாளை வேலைமுடி வில்.

இ - ள். நேசனை - நண்பனை, காணா இடத்தில் - காணாதஇடத்தில், நெஞ்சுஆர துதித்தல் - மனமாரப்புகழ்க, ஆசானை - குருவை, எவ்விடத்தும் அப்படியே - எவ்விடத்திலும் அவ்வாறேபுகழ்க, மனையாளை - மனைவியை, வாசம் பஞ்சணையில் - பரிமளம் பொருந்திய பஞ்சணைமீதுபுகழ்க, மைந்தர் தமைநெஞ்சில் - புதல்வரை மனத்திற்புகழ்க, வினைஆளை - தொழிலாளியை, வேலைமுடிவில் - தொழிலின் முடிவிற்புகழ்க, எ - று.

சாத்தியப்படாத காரியங்கள் இவையெனப் பாடியது.

60. ஆலைப் பலாவாக்க லாமோ வருஞ்சுணங்கன்
வாலை நிமிர்க்க வசமாமோ—நீலநிறக்
காக்கைதனைப் பேசுவிக்க லாமோ கருணையிலா
மூர்க்கனைச்சீ ராக்கலா மோ.

இ - ள். ஆலை பலா ஆக்கல்ஆமோ - ஆலமரத்தைப் பலாமரமாகச்செய்தல் கூடுமோ, அருஞ்சுணங்கன்வாலை நிமிர்க்க வசம்ஆமோ - அருமையாகிய நாயின் வாலைநிமிர்க்க வசப்படுமோ, நீலநிறம் காக்கைதனை பேசுவிக்கல்ஆமோ - கருநிறமுள்ள காகத்தைப் பேசுவித்தல் கூடுமோ, கருணைஇல்லா மூர்க்கனை சீர் ஆக்கல்ஆமோ - (மனத்தில்) இரக்கமில்லாத மூர்க்கனைச் சீர்படுத்தல் கூடுமோ, எ - று.

சோமன்என்னும் பிரபுவையடுத்துப் பலஉதவிபெற்றிருந்து அவனிறந்தவுடனே அவனதுகோடையருமை தோன்றப் புகழ்ந்து பாடியது.

61. நிழலருமை வெய்யிலிலே நின்றறிமினீசன்
கழலருமை வெவ்வினையிற் காண்மின்—பழகுதமிழ்ச்
சொல்லருமை நாலிரண்டிற் சோமன் கொடையருமை
புல்லரிடத் தேயறிமின் போய்.

**இ - ள்.** நிழல்அருமை - நிழலினது அருமையை, வெய்யிலிலேசென்றுஅறிமின் - வெயிலிற்போய்நின்று அறிந்துகொள்ளுங்கள், ஈசன்கழல் அருமை - கடவுளினது திருவடியின் அருமையை, வெவ்வினையில் காண்மின் - கொடிதாகிய வினைவசப்பட்டுத் திகைக்குங்காலத்தில் கண்டுகொள்ளுங்கள், பழகு-(அறிஞர்) பழகுகின்ற, தமிழ்ச்சொல்அருமை - தமிழ்ச்சொற்களின் அருமையை, நால்இரண்டில் - நான்கடிகொண்ட பாடல்களாற் செய்யப்பட்ட நாலடியாரிலும் இரண்டடிகொண்ட பாடல்களாற் செய்யப்பட்ட குறளிலும் (கண்டுகொள்ளுங்கள்), சோமன் கொடை அருமை - சோமனென்பவனது ஈகையின் அருமையை, புல்லர் இடத்தேபோய் அறிமின் - அற்பரிடத்தேசென்று அறிந்துகொள்ளுங்கள், எ - று.

### இன்னவிஷயத்தில் இன்னதுசிறந்ததென்று பாடியது.

62\. காசினியிற் பிள்ளைக் கவிக்கம் புலிபுலியாம்
பேசுமுலா விற்பெருந் தம்பைபுலி — ஆசு
வலவர்க்கு வண்ணம் புலியாமற் றெல்லாப்
புலவர்க்கும் வெண்பாப் புலி.

**இ - ள்.** காசினியில் - உலகத்தில், பிள்ளைக்கவிக்கு - பிள்ளைத்தமிழில், அம்புலிபுலிஆம் - அம்புலிப்பருவம் சிறந்ததாகும், பேசும்-சொல்லப்பட்ட, உலாவில் - உலாஎன்னும் பிரபந்தத்தில், பெருந்தம்பைபுலி - பெருந்தம்பைப்பருவம் சிறந்ததாகும், ஆசுவல்லவர்க்கு-ஆசுகவியில் வல்லவர்க்கு, வண்ணம்புலிஆம்-வண்ணம்பாடுதல் சிறந்ததாகும், மற்று எல்லாப்புலவர்க்கும் - மற்றை வித்துவான்களெல்லார்க்கும், வெண்பாபுலி-வெண்பாப்பாடுதல் சிறந்ததாகும், எ - று.

### அறமுதலியநான்கினையும் ஒருகவியி லமைத்துப் பாடியது.

63\. ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றும்
காத லிருவர் கருத்தொருமித் — தாதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு.

**இ - ள்.** ஈதல்அறம் - (வரையாது) கொடுத்தலே அறமாகும், தீவினைவிட்டு ஈட்டல்பொருள் - தீச்செயலைவிட்டுத் தேடுதலே பொருளாகும், எஞ்ஞான்றும் - எக்காலத்தும், காதல்இருவர் - (ஒருவர்மேல்ஒருவர்) ஆசையுள்ள (கொழுநன் மனைவியென்னும்) இருவரும், கருத்துஒருமித்து - (தமது) மனமொன்றுபட்டு, ஆதரவுபட்டதே இன்பம் - அன்பாய்ப் பொருந்தியிருத்தலே இன்பமாகும், பரனைநினைந்து - கடவுளைநினைந்து, இம்மூன்றும் விட்டதே-இந்தமூன்றினையும் விட்டொழிந்ததே, பேரின்பவீடு - பேராநந்தத்தைத் தருகிற மோட்சமாகும், எ - று.

### இதனோடு இதுநீங்குமென்று பாடியது.

64. தாயோ டறுசுவைபோந் தந்தையொடு கல்விபோம்
சேயோடு தான்பெற்ற செல்வம்போம் — ஆயவாழ்
வுற்றா ருடன்போ முடன்பிறப்பாற் றோள்வலிபோம்
பொற்றாலி யோடெவையும் போம்.

இ - ள். தாயோடு அறுசுவைபோம் - தாயுடன் அறுசுவையுண்டியும் நீங்கும், தந்தையொடு கல்விபோம் - தகப்பனுடன் கல்வியும்நீங்கும், சேயோடு தான்பெற்ற செல்வம்போம் - புதல்வனுடன் தானடைந்த செல்வமும்நீங்கும், உற்றாருடன் ஆய வாழ்வுபோம் - உறவினருடன் (ஒருவனுக் குண்டாயிருக்கிற) சுகவாழ்க்கை நீங்கும், உடன்பிறப்பால் தோள்வலிபோம் - சகோதரனோடு புஜபலம் நீங்கும், பொற்றாலியோடு எவையும்போம் - பொற்றாலியை யுடையவளாகிய மனைவியோடு எல்லா நன்மைகளுநீங்கும், எ - று.

தாய்முதலியோர் நீக்கத்தில் அவ்வோர்நலம்நீங்கும், மனைவிநீக்கத்தில்எல்லாநலங்களும் நீங்குமென்பது கருத்து.

### இவர்க்கிது துரும்பென்று பாடியது.

65. போந்த வுதாரனுக்குப் பொன்றுரும்பு சூரனுக்குச்
சேர்ந்த மரணஞ் சிறுதுரும்பு — ஆய்ந்த
அறிவோர்க்கு நாரி யருந்துரும்பா மில்லத்
துறவோர்க்கு வேந்தன் றுரும்பு.

இ - ள். போந்த உதாரனுக்கு - (கொடைக்கென்றே) வந்துபிறந்த உதாரகுணமுள்ளவனுக்கு, பொன் துரும்பு - பொன்னானது துரும்புக்கு நிகராகும், சூரனுக்கு-சௌரியமுள்ளவனுக்கு, சேர்ந்த மரணம்-பொருந்திய மரணமானது, சிறுதுரும்பு - சிறுதுரும்புக்கு நிகராகும், ஆய்ந்த அறிவோர்க்கு-நல்லநூல்களையாராய்ந்த அறிஞருக்கு, நாரி - பெண்ணானவள், அருந்துரும்பு ஆம் - அற்பமாகிய துரும்புக்குநிகராவாள், இல்லத்துறவிக்கு - இல்வாழ்க்கையைவிட்டு நீங்கினவர்களுக்கு, வேந்தன் - அரசனானவன், துரும்பு-துரும்புக்குநிகராவான், எ-று.

### தம்மை யாசித்தவர்களுக்குக் கொடாதபோது சம்பூரணமான செல்வமுடையவர்க்கும் குறைவுநேரும் என்னும் நீதி தோன்ற, பரமசிவத்தின் பிட்சாடனத்திருக் கோலத்தை அலங்கரித்துப் பாடியது.

66. மேற்பார்க்க மைந்தரும் மூவாவெருதும் விளங்கு கங்கை
நீர்ப்பாய்ச் சலுநன் னிலமுமுண் டாகியு நின்னிடத்தின்
பாற்பாக் கியவதி நீங்கா திருந்தும் பலிக்குழன்றீர்
ஏற்பார்க் கிடாமலன் றோபெருங் கோயி லிறையவனே

இ - ள். மேல்பார்க்க மைந்தரும் - மேற்பார்வை பார்த்துவரப் புதல்வரும், மூவாளருதும் - முதிராதஎருதும், விளங்கு கங்கைநீர் பாய்ச்சலும் - விளங்குகின்ற கங்காநதியின் நீர்பாய்ச்சலும், நல்நிலமும் உண்டாகியும் - நல்லநிலமும் உண்டாயிருந்தும், நின்இடத்தின் பால்பாக்கியவதி நீங்காதிருந்தும்-உன்இடப்பாகத்தில் பாக்கியவதியாகிய உமாதேவி நீங்காதிருந்தும், ஏற்பார்க்கு இடாமல்அன்றோ - இரப்பவர்க்குக் கொடாமையா லன்றோ, பலிக்கு உழன்றீர்-(நீர்) பிச்சையின்பொருட்டு உழன்றீர், பெருங்கோயில் இறையவனே - பெருங்கோயிலில் எழுந்தருளிய இறைவனே, எ - று.

வீரமுதலிய இல்லாத ஒருவன்தன்னைப் பாடும்படி
கேட்டபோது பாடியது.

67. மூவர்கோவையுமூவிளங்கோவையும்
பாடியவென்றன்பனுவல்வாயால்
என்னையும்பாடுகவென்றனையெங்ஙனம்
பாடுதும்யாங்களிறுபடுசெங்களம்
கண்ணிற்காணீர்வெளிறுபடுநல்யாழ்
விருப்பமாய்க்கேளீர்
இலவவாய்ச்சியரிளமுலைபுல்லீர்
புலவர்வாய்ச்சொற்புலம்பலுக்கிரங்கிலீர்
ஊடருண்ணீர்கோடீர்கொள்ளீர்
ஓவாக்கானத்துயர்மரம்போலத்
தாவாக்கனியிற்றோன்றினீரே.

இ - ள். மூவர் கோவையும் - மும்மூர்த்திகளுக்கு இறைவனையும், மூவிளங்கோவையும் - இளமையுள்ள மூவேந்தரையும், பாடிய - பாடின, என்றன் - எனது, பனுவல்வாயால் - நூல்பயின்றவாயினால், என்னையும் பாடுகஎன்றனை- என்னையும்பாடக் கடவையென்று நீசொல்லினை, யாம் எங்ஙனம் பாடுதும்-யாம் எவ்வாறுபாடுவோம், களிறுபடு செங்களம் கண்ணில் காணீர் - யானைகளிறக்கின்ற செவந்தபோர்க்களத்தை கண்ணிற்கண்டிலீர், வெளிறுபடு நல்யாழ் விருப்பமாய்கேளீர் - வெண்மையாகிய நல்லவீணையை விருப்பமாய்க் கேட்டிலீர், இலவவாய்ச்சியர் இளமுலைபுல்லீர்-முருக்கமலர்போன்ற வாயையுடைய மாதரது இளமுலைகளைத் தழுவிலீர், புலவர்வாய்ச்சொல் புலம்பலுக்கு இரங்கிலீர் - புலவர் வாய்ப்பாடலாகிய புலம்பலுக்கு இரங்கிலீர், ஊடர்உண்ணீர் - ஊடுகின்றிலீர் (அதுபோகரசத்தை) உண்டிலீர், கோடீர்கொள்ளீர் - கொடுத்திலீர் கொண்டிலீர், ஓவாகானத்து - (மரநெருக்கம்) நீங்காதகாட்டில் உள்ள, உயர்மரந் தன்னில் - உயர்ந்தமரத்தில் (பழுத்த), தாவாகனியின் - எட்டப்படாத கனியைப்போல, தோன்றினீரே - உண்டாயிருக்கின்றீரே, எ - று.

கொள்ளீர் என்றது வித்வான்களால் பாடல்பெற்றிலீர் என்றபடி.

**துர்வியாச்சியம் செய்வோன் சுற்றம் அழியும் என்னும் நீதிதோன்றப் பாடியது.**

68. கல்வியுடையீர் கருங்கா னகத்திடையே
நெல்லி யிலையுதிர்ந்து நிற்பதெவன்—வல்லாய்கேள்
வெல்லா வழக்குக விலைவாங்கி வெல்விக்கும்
வல்லாளன் சுற்றம்போன் மாண்டு.

இ - ள். வல்லாய்கேள்-வல்லவனே கேட்பாயாக, வெல்லாவழக்கை-வெல்லாத துர்வியாச்சியத்தை, விலைவாங்கிவெல்விக்கும் - விலைக்குக்கொண்டுவெல்லும்படிச் செய்கிற, வல்லாளன் சுற்றம்போல் - வன்கண்ணனது உறவினர்போல, மாண்டு-பட்டு, கல்விஉடையீர் - கல்வியுடையீரே, கருகானகத்துஇடையே - கரியகானகத்தினிடையில், நெல்லிஇலை உதிர்ந்துநிற்பது எவன் - நெல்லியிலையுதிர்ந்து நிற்பதற்குக்காரணம் யாது, எ - று.

**பாண்டியனது கலியாணத்தில்தான் விருந்துண்டதைக் குறித்துப் பாடியது.**

69. வண்டமிழைத் தேர்ந்த வழுதிகலியாணத்
துண்டபெருக்க முரைக்கக்கேள்—அண்டி
நெருக்குண்டேன் றள்ளுண்டே னீள்பசியினாலே
சுருக்குண்டேன் சோறுண்டி லேன்.

இ - ள். வண்தமிழைத்தேர்ந்த-வளமாகிய தமிழ்நூல்களை ஆராய்ந்த, வழுதிகலியாணத்து-பாண்டியன் விவாகத்தில், உண்டபெருக்கம் உரைக்கக்கேள்-யான்விருந்துண்ட பெருமையைச் சொல்லக் கேட்பாயாக, அண்டிநெருக்கு உண்டேன்-கிட்டிநெருக்கப் பட்டேன், தள்உண்டேன் - தள்ளப்பட்டேன், நீள்பசியினாலே சுருக்குஉண்டேன் - மிகுந்தபசியினால் இளைக்கப்பெற்றேன், சோறுஉண்டிலேன் - அன்னமொன்றையுமே உண்ணப்பெற்றேனில்லை, எ - று.

**மலைநாடு முதலியவற்றைச் சிறப்பித்துப் பாடியது.**

70. வேழமுடைத்துமலைநாடுமேதக்க
சோழவளநாடுசோறுடைத்து—பூழியர்கோன்
தென்னாடுமுத்துடைத்துத்தெண்ணீர்வயற்றொண்டை
நன்னாடுசான்றோருடைத்து.

இ - ள். மலைநாடு வேழம்உடைத்து-மலைநாடானது யானைகளையுடையது, மேதக்க சோழவளநாடு சோறுஉடைத்து - மேன்மைபொருந்திய சோழவளநாடு சோற்றையுடையது, பூழியர்கோன் தென்னாடு முத்து உடைத்து-சேரனதுதெ

ன்றூடு முத்தையுடையது; தெள்நீர் வயல்தொண்டை நன்றூடுசான்றோர்உடைத்து - தெளிந்தநீர் நிறைந்த வயல்சூழ்ந்த நல்லதொண்டைநாடு பெரியோரையுடையது, எ - று.

---

ஔவையார்முதலிய எழுவரும்பிறந்தவுடனே தாயாராகிய ஆதியென்பவள் இவர்களைவிட்டு நீங்கமாட்டாமல் மயங்கும்போது அவளுக்கு மனவுறுதி யுண்டாகும்படி பாடியவை.

ஔவையார்.

1. இட்டமுடனென்றலையி லின்னபடி யென்றெழுதி
விட்டசிவனுஞ்செத்துவிட்டானோ—முட்டமுட்டப்
பஞ்சமேயானாலும் பாரமவனுக்கன்னாய்
நெஞ்சமேயஞ்சாதேநீ.

இ - ள். அன்னாய் - தாயே, இட்டமுடன் - விருப்பத்தோடு, என்தலையில் என்சிரசில், இன்னபடியென்று - (சுகதுக்கங்கள்) இவ்வாறு நிகழ்கவென்று, எழுதிவிட்டசிவனும் செத்துவிட்டானோ - எழுதிவிட்டசிவனும் இறந்துபோயினனோ, முட்டமுட்ட பஞ்சமேஆனாலும் - மிகப்பெரும் பஞ்சமேயாயினும், பாரம்அவனுக்கு -(எம்மைக்காக்கவேண்டியது) பாரம் அவனுக்கேயாகும், (ஆதலால்) நீநெஞ்சம் அஞ்சாதே - நீமனமஞ்சாதே, எ - று.

உப்பை.

2. அத்திமுதலெறும்பீறானவுயிரத்தனைக்கும்
சித்தமகிழ்ந்தளிக்குந்தேசிகன்— முற்றவே
கற்பித்தான்போனானோகாக்கக்கடனிலையோ
அற்பனோவன்னாயரன்.

இ - ள். அத்திமுதல் எறும்பீறான உயிர் - யானைமுதல்எறும்பு கடையாகிய, உயிர்அத்தனைக்கும் - உயிர்களனைத்திற்கும், சித்தமகிழ்ந்து அளிக்குந்தேசிகன் - மனமகிழ்ந்து (உணவுமுதலியவற்றைக்) கிருபைசெய்கிற பரமகுருவாய், முற்றகற்பித்தான் - உலகமுழுதும் கற்பித்தவன், போனானோ - இறந்தானோ, காக்க - (யாவரையும்) காத்தலுக்கு, கடனில்லையோ - (அவனுக்கு) கடமையில்லையோ, அன்னாய் - தாயே, அரன் - சிவபெருமான், அற்பனோ - புன்மையனோ, எ - று.

அதிகமான்.

3. கருப்பைக்குண்முட்டைக்குட்கல்லினுட்டேரைக்கும்
விருப்புற்றமுதளிக்குமெய்யன்—உருப்பெற்றால்
ஊட்டிவளர்க்கானோவோகெடுவாயன்னாய்கேள்
வாட்டமுனக்கேன்மகிழ்.

இ - ள். கருப்பைக்குள் - கருப்பைக்குள்ளுள்ள உயிருக்கும், முட்டைக்குள் - முட்டைக்குள்ளுள்ள உயிருக்கும், கல்லினுள் தேரைக்கும்-கல்லுக்குளிருக்கிறதேரைக்கும், விருப்புற்று-விரும்பி, அமுதுஅளிக்கும் - உணவையூட்டுகின்ற, மெய்யன் - அழியாதவன், உருப்பெற்றால்-உருவம்பெற்றால், ஊட்டி வளர்க்கானோ - ஊட்டிவளர்க்க மாட்டானோ, ஓகெடுவாய் - ஆகெடுவாய், அன்னாய் - தாயே, கேள் - கேட்பாயாக, உனக்கு வாட்டமென் - உனக்குவாட்டம் யாதுக்கு, மகிழ் - மகிழ்ந்துசெல், எ - று.

கருப்பைக்குள்ளுள்ள வுயிர்கள் - மனிதர் மிருகம்முதலாயின, முட்டைக்குள்ளுள்ள வுயிர்கள் - கோழிமுதலிய பறவைகளும் பாம்புமுதலியவும்.

உறுவை.

4. சண்டப்பைக்குள்ளுயிர்தன்றாயருந்தத்தானருந்தும்
அண்டத்துயிர்பிழைப்பதாச்சரியம் - மண்டி
அலைகின்றவன்னையரனுடையவுண்மை
நிலைகண்டுநீயறிந்துநில்.

இ - ள். சண்டப்பைக்குள்உயிர் - கருப்பமாகிய பையிலுள்ள உயிரானது, தன்தாய்அருந்த - தன்தாய்உண்ண, தான்அருந்தும் - தானும்உண்ணும், அண்டத்து உயிர்பிழைப்பது ஆச்சரியம் - முட்டையிலுள்ள உயிரானது பிழைத்தல் அதிசயம், மண்டிஅலைகின்ற அன்னாய் - மிகுதியாய் அலைகின்றதாயே, அரனுடைய உண்மைநிலை - சிவபெருமானது மெய்யாகிய நிலைமையை, நீ கண்டறிந்துநில் - நீகண்டறிந்து (சலியாமல்) நிற்கக்கடவாய், எ - று.

கபிலர்.

5. கண்ணுழையாக்காட்டிற்கருங்கற்றவளைக்கும்
உண்ணும்படியறிந்தூட்டுமவர் - நண்ணும்
நமக்குப்படியளப்பார்நாரியோர்பாகர்
தமக்குத்தொழிலென்னதான்.

இ - ள். கண்ணுழையாகாட்டில்-கண்ணும்நுழையப் பெறாதகாட்டிலுள்ள, கருங்கல்தவளைக்கும் - கருங்கல்லினுள்வாழ்கின்ற தேரைக்கும், உண்ணும்படி அறிந்து ஊட்டுமவர் - உண்ணும்முறையறிந்து உண்பிப்பவர், நண்ணும் - அவரையடைந்திருக்கிற, நமக்கும் படிஅளப்பர்---, நாரி ஓர்பாகர்தமக்கு-பெண்ணையொருபாகத்தி லுடையவராகிய சிவபெருமானுக்கு, தொழில்என்ன - (இதைவிட) வேறு என்னவேலை யிருக்கின்றது, எ - று.

வள்ளியம்மை.

6 அன்னைவயிற்றிலருந்திவளர்த்தவன்றான்
இன்னும்வளர்க்கானோவென்றாயே - மின்னரவம்

சூடும்பெருமான்சுடுகாட்டினின்றுவிளை
யாடும்பெருமானவன்.

**இ - ள்.** என்தாயே—, மின்அரவம் சூடும்பெருமான் - மின்னுகின்றபாம்பைத் தரிக்கின்றசிவபெருமானும், சுடுகாட்டில்நின்று விளையாடும்பெருமான் - மயானத்தில்நின்று விளையாடும்பெருமானும், அன்னைவயிற்றில்அருத்தி வளர்த்தவன் - தாய்வயிற்றிலிருக்கும்போதே ஊட்டிவளர்த்தவனுமாகிய, அவன்-அந்தச்சிவபெருமான், இன்னும்வளர்க்கானோ - இனிமேலும் வளர்க்கமாட்டானோ (வளர்ப்பான், நீவருந்தாது செல்வாய்), எ - று.

திருவள்ளுவர்.

7. எவ்வுயிருங்காக்கவொருவீசனுண்டோவில்லையோ
அவ்வுயிரில்யானொருவனல்லேனோ—வவ்வி
அருகுவதுகொண்டிங்கலைவதேனன்னே
வருகுவதுதானேவரும்.

**இ - ள்.** எவ்வுயிரும்காக்க - எல்லாவுயிர்களையும் காப்பதற்கு, ஒருஈசன் உண்டோ இல்லையோ - ஒப்பற்றசிவபெருமான் உளனோஇலனோ, அவ்வுயிரில்- அந்தவுயிர்களுள்ளே, யானொருவன் அல்லேனோ - நானொருவ னல்லேனோ, வவ்வி - விரும்பி, அருகுவது கொண்டு - அழியும்பொருளைக்கொண்டு, இங்கு அலைவதுஏன் - இவ்விடத்து அலைவதுயாதுக்கு, அன்னே - தாயே, வருகுவது தானேவரும் - வரும்பொருள் தானேவரும் (நீவருந்தவேண்டாம்), எ - று.

---

தேவர்கள்ஊர்த்துவ நடநத்துக்குக் காரணம் யாதென்று கேட்டதற்கு விடைகொடுத்தது.

1. பூவினயனும்புரந்தரனும்பூவுலகைத்
தாவியளந்தோனுந்தாமிருக்க—நாவில்
இழைநக்கிநூனெருடுமேழையறிவேனோ
குழைநக்கும்பிஞ்ஞகன்றன்கூத்து.

**இ - ள்.** பூவில்அயனும் - தாமரைமலரில்வாழும்பிரமனும், புரந்தரனும் - இந்திரனும், பூவுலகைதாவி அளந்தோனும் இருக்க - அழகாகிய லோகங்களைத் தாவி யளந்ததிருமாலும் இருக்கச்செய்தே, நாவின் இழைநக்கிநூல் நெருடும் - நாவினால் நூலிழையைநக்கி நெருடுகின்ற ஏழை - ஏழையாகியநான், குழைநக்கும்பிஞ்ஞகன்தன்கூத்து - கழன்றுவிழுந்த குண்டலத்தை (காதினால்) ஒற்றியெடுத்து அணிந்த சிவபெருமானது கூத்தின் பெருமையை, அறிவேனோ-அறியவல்லேனோ, எ - று.

சிவபெருமான் திருவாலங்காட்டில் ஊர்த்தவ நடனஞ்செய்யும்போது காதில் அணிந்திருந்த குண்டலம்கழன்று கீழேவிழுந்ததாகவும் அவர்தமது நடனத்தை நிறுத்தாமலேஅதைக் காலினால் ஒற்றிஎடுத்து அணிந்ததாகவும்பூர்வகதை. பிஞ்ஞகன்-தலைக்கோல மணிந்தவன்.

**திருவள்ளுவர் அகங்காரித்திருந்த சங்கப்புலவரைச் செயிக்கப்போன போது, அவர்கள் திருவள்ளுவரைநோக்கி, நீர் ஐயரோ என்றும், ஞானவானோ என்றும், என்னசாதி என்னசமயம் என்றும், எந்த ஊர் என்றும், அப்படி நில் என்றும், இரும் என்றும், போம்என்றும் கூறியபோது பாடியவை.**

௨. ஐயரென்றுரைத்தீர்நாயேற்கடுக்குமோவருளில்லேனை
பொய்யொடுகளவுமற்றுப்புலன்களையொடுக்கிக்கொண்டு
உய்யவேபொறிகளைந்துமுயர்பரவெளியுள்ளாக்கி
வெய்யவன்மதியம்போலவிரவுவாரையராவார்.

**இ - ள்.** அருள் இல்லேனை - திருவருள்பெறாதஎன்னை, ஐயர்என்றுஉரைத்தீர் - ஐயரேயென்றுசொன்னீர், நாயேற்கு அடுக்குமோ-நாயினேனுக்கு (அந்தப்பெயர்) பொருந்துமோ, பொய்யொடுகளவும் அற்று - பொய்யோடுகளவும் ஒழிந்து, புலன்களை ஒடுக்கிக்கொண்டு-ஐம்புலன்களையடக்கிக்கொண்டு, உய்ய-பிழைக்கும்படி, பொறிகள்ஐந்தும் - ஐம்பொறிகளையும், உயர் பரவெளியுள் ஆக்கி - உயர்ந்தபரமாகாயத்திற்செலுத்தி, வெய்யவன் மதியம்போலவிரவுவார்-சூரியசந்திரகலைகளாகிய இடைபிங்கலைகள்ஒன்றி நிற்றல்போல அதில் கலந்துநிற்பவர், ஐயர்ஆவார் - ஐயராவார், எ - று.

௩. ஞானவானென்றுசொன்னீர்நாதவிந்துவுங்கடந்து
கானலைவரையுஞ்சுட்டுக்கடுவெளிபரமாநந்தந்
தானெனுமவையிரண்டுந்தவிர்ந்துதன்வசமுங்கெட்டு
மோனமுங்கடந்தேயப்பான்முடிந்தவன்ஞானியாவன்.

**இ - ள்.** ஞானவான் என்றுசொன்னீர் - ஞானவானென்றுசொன்னீர், நாதவிந்துவுங்கடந்து - நாததத்துவத்தையும் விந்து தத்துவத்தையும் தாண்டி, கானல்ஐவரையும்சுட்டு - கானல்நீர்போன்ற பஞ்சவிஷயங்களையும்நீறாக்கி, கடுவெளிபரமாநந்தம் - கடுவெளியாகிய பேராநந்தமும், தான் - தானும், என்னும்-என்கிற, அவையிரண்டும் - அவ்விரண்டையும், தவிர்ந்து - ஒழிந்து, தன்வசமுங்கெட்டு - தன்வசமும்அழிந்து, மோனமுங்கடந்து - மௌநநிலையையுந்தாண்டி, அப்பால்முடிந்தவன் - அப்புறம் முடிவுபெற்றவன், ஞானி ஆவன் - ஞானவானவன், எ - று.

4. சாதியிலேதொண்ணூற்றொன்பானுஞ்சாதி
சமயத்திற்பதின்மூன்றுஞ்சமயமாகும்
நீதியிலேசிவனுடையநீதியாகும்
நிலைமையிலேவேதாந்தநிலைமையாகும்
ஆதியிலேயெங்களூர்கருவூராகும்
அந்தத்திற்போயடைவோர்பேரூர்தன்னில்
சோதியிலேபரஞ்சோதிக்கூட்டமாகும்
சொல்லுதற்குமெங்கள்குலஞ்சுக்கிலந்தானே

இ - ள். சாதியிலே தொண்ணூற்றொன்பான் ஆம்சாதி - சாதியிலேதொண்ணூற்றொன்பதாஞ்சாதி, சமயத்தில் பதின்மூன்றும் சமயம்ஆகும் - சமயத்தில் பதின்மூன்றுஞ் சமயமாகும், நீதியிலேசிவனுடைய நீதிஆகும் - நீதியிலே சிவபெருமானது நீதியாகும், நிலைமையிலே வேதாந்தநிலைமைஆகும் - நிலைமையில் வேதாந்தநிலைமையாகும், ஆதியிலே எங்கள் ஊர் கருவூர்ஆகும் - பூருவத்தில் எங்களூர் கருவூராகும், அந்தத்தில் பேரூர்தன்னில்போய் அடைவோம் - முடிவில்பேரூரில்போய்ச் சேர்வோம், சோதியிலே பரஞ்சோதிக் கூட்டமாகும்—, சொல்லுதற்கும் - சொல்வதற்கும், எங்கள்குலம் - எங்கள்குலமானது, சுக்கிலம்ஆம் - சுக்கிலகுலமாகும், எ - று.

தொண்ணூற்றொன்பான் சாதிஎன்றது தொண்ணூற்றாறு தத்துவங்களுடன், நாததத்துவத்தையும், விந்து தத்துவத்தையும்கூட்டி சாதி தொண்ணூற்றெட்டென்பதும் இவற்றைக்கடந்துநின்றவன் தொண்ணூற்றொன்பதாம் சாதியுடையான் என்பதும் சங்கேதப்பொருள். பதின்மூன்றும் சமயம்என்றது அகச்சமயம்ஆறும், புறச்சமயம் ஆறும்ஆகிய பன்னிரண்டையுங்கடந்த நிலையை. சிவனுடைய நீதியாவது சிவபெருமான் சர்வசங்காரகாலத்தில் எவற்றையும் சுட்டெரித்துத் தனித்து நிற்றல்போல சகலகர்ம பரித்தியாகஞ்செய்து நிற்கும்நீதி. கருவூர் என்றதுதாயின் உதரத்தில் தரித்தகருவை. பரஞ்சோதிக்கூட்டம் என்றது சோமசூரியாக்கினிகளுக்கு மேலாகிய பேரொளிப்பிழம்பை. இது யோகிகளுக்குக் காணப்படுவது.

5. எந்தவூரென்றீரிருந்தவூர்நீர்கேளீர்
அந்தவூர்ச்செய்தியறியீரோ—அந்தவூர்
முப்பாழும்பாழாய்முடிவிலொருசூனியமாய்
அப்பாலும்பாழென்றறி.

இ - ள். எந்தஊர் என்றீர் - எந்தவூரென்றுகேட்டீர், இருந்தஊர் நீர்கேளீர் - (நான்முன்னே) இருந்தவூரை நீர்கேட்கக்கடவீர், அந்தஊர்செய்தி அறியீரோ - அந்தவூரின்செய்தியை அறியீரா, அந்தஊர் - அந்தவூரானது, முப்பாழும்பாழ்ஆய்—, முடிவில் ஒருசூனியம்ஆய்—, அப்பாலும் - அப்புறமும், பாழ்என்றுஅறி - பாழேயென்றுணரும், எ - று.

முப்பாழ்என்றது ஜகஜீவபரங்களின் இன்மையை. இதனைச் சூனியமென்றும் வழங்குவர். இதன்விரிவெல்லாம் குருமுகத்தாலறிக.

6. நில்லுநில்லென்றுசொன்னீர்நேசபாசங்களைந்தும்
புல்லறிவோடுவாங்காப்புலைகொலைகளவுமற்றுச்
சொல்லுதற்கரியஞானச்சுழுமுனைமுடியின்மீதில்
எல்லையுங்கடந்தேயப்பாலேகமானவர்கணிற்பார்.

இ - ள். நில்லுநில்லென்றுசொன்னீர் --, நேசபாசங்கள்ஐந்தும் - ஆசாபாசங்கள்ஐந்தையும், புல்அறிவோடுவாங்கா - அற்ப புத்தியோடுநீக்கி, புலைகொலைகளவும் அற்று - புலாலுண்டல் கொலைசெய்தல் திருடல் என்பவைகள் ஒழிந்து, சொல்லுதற்கு அரியஞானச்சுழுமுனை முடியின்மீதில்—, எல்லையுங்கடந்து - எல்லையையுந்தாண்டி, அப்பால் - அப்புறம், ஏகம்ஆனவர்கள் நிற்பார் - ஒன்றானவர்கள் நிற்பார்கள், எ - று.

சுழுமுனை - இடைபிங்கலைகளுக்கு இடையிலுள்ளது. இதுநடுநாடி எனவும்படும். முடியின்மீதி னெல்லையுங்கடந்து என்றது இந்தமூன்றுநாடிகளொருங்குகூடிய இடத்தையுங் கடந்துநிற்றலை.

7. இருமிருமென்றுசொன்னீரேற் றமோவேழையேற்குத்
தருபொருளுணர்ந்துசைவசமயமுமனைத்துநீங்கி
மருடருவினையுநீங்கிமாசிலாவுண்மைஞானம்
பொருந்தினரிருப்பர்பின்புபொறுதவரிறப்பர்தாமே.

இ - ள். இரும்இரும் என்றுசொன்னீர் —, (அப்படிசொல்லல்) ஏழையேற்குஏற்குமோ - ஏழையேனுக்குத்தகுமோ, தருபொருள் உணர்ந்து - அன்பர் (விரும்பினவற்றையெல்லாம்) தருகின்ற (உண்மைப்) பொருளையறிந்து, சைவசமயமும் அனைத்தும்நீங்கி - சைவசமயப் பற்றையும் மற்றெல்லாப்பற்றையும் நீங்கி, மருள்தருவினையும் நீங்கி-மயக்கத்தை யுண்டாக்குகிற வினைகளையும்நீங்கி, மாசுஇல்லா - குற்றமில்லாத, உண்மைஞானம் பொருந்தினர் இருப்பர் - மெய்ஞ்ஞானத்தை யடைந்தவர்கள் இருப்பார்கள், பின்பு பொறுதவர் இறப்பர் - பிறகு (இக்குணங்களைப்) பொறுக்காதவர் இறந்தொழிவர், எ - று.

8. போமெனவுரைத்தீரென்னைப்பொறியொடுபுலன்களைந்தும்
ஆமெனுமவிச்சையோடுமங்ஙனேமதித்துக்கொண்டே
ஏமமுஞ்சாமமற்றேயிரவொடுபகலுமற்றுச்
சோமனர்பதியைவிட்டுத்துறந்தவர்போவரன்றே.

இ - ள். என்னைபோம் எனச்சொன்னீர் - என்னைப்போமென்றுசொன்னீர், பொறியொடுபுலன்கள் ஐந்தும் - பொறிகளோடு ஐம்புலன்களையும், ஆம் என்னும் அவிச்சையோடும் - ஆமென்கிற அஞ்ஞானத்துடன், அங்ஙனே மதித்

துக்கொண்டே-அவ்விடத்தே கணித்துக்கொண்டு, ஏமமும் சாமம்அற்று-ஏமசாமங்களுமொழிந்து, இரவொடுபகலும்அற்று - இராப்பகல்களுமொழிந்து, சோமனார்பதியைவிட்டுத் துறந்தவர்போவர் - சோமனாருடைய இடத்தைவிட்டு நீங்கினவர் போவர், எ - று.

ஏமம் - இரவு. சாமம்-அதின்பகுதி. சோமனார்பதி-சந்திரமண்டலம். இது ஆறாதாரங்களுக்கு மேலாயிருப்பது.

இவர் மனைவியாராகிய வாசுகியென்பவர் இறந்த போது மனம்வருந்திப் பாடியது.

9. அடிசிற்கினியாளேயன்புடையாளே
படிசொற்றவறாதபாவாய் - அடிவருடிப்
பின்றூங்கிமுன்னெழூந்தபேதையேபோதியோ
என்றூங்குமென்கணிரா.

இ - ள். அடிசிற்கு இனியாளே - (எனக்கு) அன்னமூண்பித்தலில் இனியவளே, அன்புடையாளே - (என்னிடத்து) அன்புடையவளே, படிசொல்தவறாத பாவாய் - என்சொற்படியே காரியங்களைச் செய்தலில் பிழைபடாத பாவையே, அடிவருடி - (முன்னேநான் நித்திரைசெய்யஎன்) கால்களைவருடிக்கொண்டிருந்து, பின்தூங்கி - பின்னைநித்திரைசெய்து, முன்எழுந்த - (எனக்குமுன்) எழுந்திருந்த, பேதையே - பெண்ணே, போதியோ - (என்னைவிட்டுப்) போகின்றாயோ, இரா - இராக்காலத்தில், என்கண் - என்கண்கள், என் தூங்கும் - எப்படியுறங்கும், எ - று.

பாவை - பிரதிமைபோலும் உருவமுடையவள்.

---

## கம்பர்.

சோழநாட்டெல்லை இதுவெனப் பாடியது.

1. கடல்கிழக்குத்தெற்குக்கரைபொருவெள்ளாறு
குடதிசையிற்கோட்டைக்கரையாம் - வடதிசையில்
ஏணாட்டுப்பண்ணையிருபத்துநாற்காதஞ்
சோணாட்டுக்கெல்லையெனச்சொல்

இ - ள் கிழக்குகடல்-கிழக்கில்கடலும், தெற்குகரை பொருவெள்ளாறு-தெற்கில்கரையில் அலைமோதுகின்ற வெள்ளாறும், குடதிசையில் - மேற்றிசையில், கோட்டைக்கரைஆம் - கோட்டைக்கரையும்உண்டு, வடதிசையில் - வடக்குத்திக்கில், ஏணாட்டுப்பண்ணை - ஏணாட்டின்வயல்களுள், இருபத்துநாற்காதம் - இந்த இருபத்துநாற்காதம் விஸ்தீர்ணமுள்ளபூமியே, சோணாட்டுக்குஎல்லையெனச்சொல் - சோழநாட்டின் எல்லையென்றுகூறு, எ - று.

### பாண்டிநாட்டெல்லை இதுவெனப் பாடியது.

2. வெள்ளாறதுவடக்காமேற்குப்பெருவழியாம்
தெள்ளார்புனற்கன்னிதெற்காகும் — உள்ளார
ஆண்டகடல்கிழக்காமைம்பத்தறுகாதம்
பாண்டிநாட்டெல்லைப்பதி.

இ - ள். வெள்ளாறது வடக்குஆம் - வெள்ளாறு வடக்கிலுளது, மேற்கு பெருவழிஆம் - மேற்கில் பெரியவழியுளது, தெள் ஆர் புனல்கன்னி தெற்குஆகும் - தெளிவுபொருந்திய நீரையுடைய கன்னியாறு தெற்கிலுளது, உள்ஆர ஆண்டகடல் கிழக்கு ஆம் - மனமார ஆளப்பட்ட கடல் கிழக்கேயுளது, ஐம்பத்தறுகாதம் - (இந்த) ஐம்பத்தறுகாத விஸ்தீர்ணமானபூமியே, பாண்டிநாட்டு எல்லைப்பதி - பாண்டிநாட்டின் எல்லையாகிய இடம்.

உள்ளார ஆண்டகடல் என்றது பலவேந்தராலும் துறைமுகமா யாளப்பட்டகடலை, எ - று.

### சேரநாட்டெல்லை இதுவெனப் பாடியது.

3. வடக்குத்திசைபழனிவான்கீழ்தென்காசி
குடக்குத்திசைகோழிக்கோடாம் கடற்கரையின்
ஓரமோதெற்காகுமுள்ளெண்பதின்காதம்
சேரநாட்டெல்லையெனச்செப்பு.

இ - ள். வடக்குத்திசை பழனி - வடதிசையில் பழனியுளது, வான்கீழ் தென்காசி - மேன்மையாகிய கீழ்த்திசையில் தென்காசியுளது, குடக்குத்திசை கோழிக்கோடு ஆம் - மேற்றிசையில் கோழிமலையுளது, கடற்கரையின் ஓரம் தெற்கு ஆகும் - கடற்கரையோரமே தென்றிசையிலுளது, உள் - (இந்தநான்கு திசையெல்லைக்கு) உட்பட்ட, எண்பதின்காதம் - எண்பதின்காத விஸ்தீர்ணமான பூமியே, சேரநாட்டுஎல்லை எனச்செப்பு - சேரநாட்டெல்லையென்று சொல், எ - று.

### தொண்டைநாட்டெல்லை இதுவெனப் பாடியது.

4. மேற்குப்பவளமலைவேங்கடநேர்வடக்காம்
ஆர்க்குமுவரியணிகிழக்கு—பார்க்குளுயர்
தெற்குப்பினாகிதிகழிருபதின்காதம்
நற்றொண்டைநாடெனவேநாட்டு.

இ - ள். மேற்கு பவளமலை - மேற்றிசையில் பவளமலையுளது, வேங்கடம் நேர்வடக்கு ஆம் - திருவேங்கடமலை நேர்வடக்கிலுளது, ஆர்க்கும் உவரி அணி கிழக்கு - ஆரவாரிக்கின்றகடல் அழகிய கிழக்குத்திக்கிலுளது, பார்க்குள் உயர்

பிராகி தெற்கு-உலகத்தில் உயர்ந்த பிராகிருதி தென்றிசையிலுளது, திகழ்இரு பதின்காதம் - விளங்குகின்ற (இந்த) இருபதின்காத விஸ்தீர்ணமான பூமியே, நல்தொண்டைநாடு எல்லைநாட்டு-நல்லதொண்டைநாட்டின் எல்லையென்று நீலே பொறுத்து, எ - று.

இராமாயணத்தை அரங்கேற்றும்பொருட்டுச் சிதம்பரத்திலிருக்கும் தீக்ஷதரிடத்திற்கொண்டுபோய் நெடுநாள் காத்திருந்தும் அவர்களெல்லாரும் ஓரிடத்திற்கூடி அந்த நூலைக் கேளாதிருந்தனர். ஒருநாள் அவருள் ஒருவருடைய குழந்தையைப் பாம்புகடித்து இறந்துபோக, அந்தக்குழந்தையை எல்லாருங்கூடி மயானத்திற்குக் கொண்டுபோயினர். அப்போது கம்பர் இதுதான் நல்ல சமயமென்று அவ்விடத்திற்குப்போய், நீங்களெல்லாரும் ஒருங்குகூடியிருக்கின்ற இந்தச்சமயந்தவறினால் மறுபடியும் கூடும்படி நேரிடுவது அருமையாதலால், என்னால் பாடப்பட்ட இராமாயணத்தைக் கேட்டீர்களாயின், இந்தக் குழந்தையை நான் பிழைப்பித்துத் தருகிறேன் என்றனர். அதற்கு அவர்கள் ஒத்துக்கொண்டு, முன்னேகுழந்தையை யெழுப்புமென்றபோது பாடியவை.

5. ஆழியான்பள்ளியணையேயவன்கடைந்த
ஆழிவரையின்மணித்தாம்பே—பூழியான்
பூணேபுரமெரித்தபொற்சிலையிற்பூட்டுகின்ற
நாணேயகலநட.

இ - ள். ஆழியான்பள்ளி அணையே-சக்கராயுதத்தை யுடையவனாகிய திருமால் பள்ளிகொள்ளுதற்குரிய சயனமே, அவன்கடைந்த ஆழிவரையில் மணித்தாம்பே-அவன்கடைந்த திருப்பாற்கடலில் மத்தாகநட்ட மந்தரமலையில்கட்டிய அழகிய கடைகயிறே, பூழியான்பூணே - விபூதியைத் தரித்தவனாகிய சிவபெருமானது ஆபரணமே, புரம்எரித்த பொன்சிலையில் பூட்டுகின்ற நாணே - (அவன்) திரிபுரங்களை யெரித்தற்குக் கருவியாயிருந்த (மேருவாகிய) பொன்வில்லிற் பூட்டினநாணே, அகலநட - தூரநடப்பாயாக, எ - று.

அணையாயும் தாம்பாயும் பூணும் நாணும் இருந்தன ஆதிசேஷன் வாசுகி தாருகாவனத்திருடியர் வேள்விக்கண்ணேபிறந்த பாம்புகள் என்பவைகளே யாதலால், பாம்பேயென்றற்கு இவ்வாறுகூறினர். மணித்தாம்பு - முகப்பில் மாணிக்கமிழைத்த தாம்பு எனினுமாம்.

6. மங்கையொருபங்கர்மணிமார்பிலாரமே
பொங்குகடல்கடைந்தபொற்கயிறே - திங்களையும்
சீறியதன்மேலூருந்தெய்வத்திருக்கோளே
ஏறியபண்பேயிறங்கு.

இ - ள். மங்கை ஒருபங்கர்மார்பில் மணிஆரமே - மங்கைப் பருவத்தையுடைய உமாதேவியை ஒருபாகத்திலுடையவராகிய சிவபெருமானது மார்பிலணி

ந்த மாணிக்கஆரமே, பொங்கு கடல்கடைந்த பொன்கயிறே - பொங்குகின்ற பாற்கடலைக்கடையக் கருவியாயிருந்த அழகிய கடைகயிறே, திங்களையும்சிறி அதன்மேல் ஊரும்தெய்வம் திருக்கோளே - பிறைச்சந்திரனையும் கோவித்து அதன்மேல்தவழ்கின்ற தெய்விகமாகிய அழகியகிரகமே, ஏறியபண்பே இறங்கு, நீயேறின பிரகாரமே இறங்குக, எ - று.

7. பாரைச்சுமந்தபடவரவேபங்கயக்கண்
வீரன்கிடந்துறங்குமெல்லணையே - ஈரமதிச்
செஞ்சடையான்பூணுந்திருவாபரணமே
நஞ்சுடையாய்தூரநட.

இ - ள். பாரைசுமந்த படம அரவே-பூமியைத் தாங்கிய படத்தையுடைய பாம்பே, பங்கயம் கண்வீரன்கிடந்து உறங்கும் மெல்அணையே - தாமரை மலர் போலுங் கண்களையுடைய வீரனுகிய திருமாலானவன் படுத்துறங்குகின்ற மெல்லியசயநமே, ஈரம்மதி செஞ்சடையான்பூணும் திருஆபரணமே - குளிர்ச்சி யாகிய சந்திரனையணிந்த செவந்த சடாபாரத்தையுடைய சிவபெருமான் தரிக்கி ன்ற அழகாகிய ஆபரணமே, நஞ்சு உடையாய் - விஷத்தையுடையவனே, தூர நட - அகலப்போ, எ - று.

சீராமன் என்னும் வண்ணான் தனக்கு ஆடைவெளுத்துக்கொடுத்த நேர்த்தியை மெச்சிப்பாடியது.

8. சிரம்பார்த்தானீசனயன்றேவிதனைப்பார்த்தான்
கரம்பார்த்தான்செங்கமலக்கண்ணன் — உரஞ்சேர்
மலைவெளுத்ததிண்புயத்துவண்ணான்சீராமன்
கலைவெளுத்தநேர்த்திதனைக்கண்டு.

இ - ள். உரம்சேர் - வலிமைபொருந்திய, மலைவெளுத்த - மலையும் வெளு த்துப்போதற்குக் காரணமாகிய, திண்புயத்து - திடமானதோள்களையுடைய, வண்ணான் சீராமன் - வண்ணானுகிய சீராமனென்பவன், கலைவெளுத்த நேர்த் திதனைக்கண்டு - ஆடைகளைச் சலவைசெய்த நேர்த்தியைப்பார்த்து, ஈசன் சிர ம்பார்த்தான் - சிவபெருமான் தன் தலையைத் தீண்டிப்பார்த்தான், அயன் தேவி தனைப்பார்த்தான் - பிரமன் தன்மனைவியைத் தொட்டுப்பார்த்தான், செங்கம லக்கண்ணன் - செந்தாமரைமலர்போலுங் கண்களையுடைய திருமாலானவன்- கரம் பார்த்தான் - தன் கையை நோக்கினான், எ - று.

ஈசன், அயன், செங்கமலக்கண்ணன் இம்மூவரும் முறையே தத்தமது சிரத்தையும் தேவியையும் கரத்தையும் பார்த்தற்குக்காரணம், சீராமனென்னும் வண்ணான் வெளுத்தவெள்ளாடைகளை நோக்கின மாத்திரமே வெண்ணிற முள்ள கங்கையும், வெண்ணிறமுள்ள சரசுவதியும், வெண்ணிறமுள்ள பாஞ்ச

சங்யம் என்னும் சங்குமே நம்மை நீங்கினவோ என்னும் ஐயம் அன்றி இவ்வெண்மைக்கு நம்மிடத்துள்ள கங்கை முதலியவற்றின் வெண்மை ஒத்திருப்பதோ என்று உவமித்துப்பார்த்தல். மலைவெளுத்தலாவது இவனது தோள்களின் பெருமை வலி திரட்சி முதலியவற்றிற்கு ஒவ்வாமை.

**சிதம்பரத்தில் இருந்த தம்பிபுகான் என்னும் பெயருள்ள அம்பட்டன் தமக்கு க்ஷவரஞ்செய்த நேர்த்தியை மெச்சி அவனைப்புகழ்ந்து பாடியது.**

9. ஆரார்தலைவணங்காராரார்தாங்கையெடார்
ஆரார்தாஞ்சத்திரத்திலாறுதார்—சீராரும்
தென்புலியூர்மேவுஞ்சிவனருள்சேரம்பட்டத்
தம்பிபுகான்வாசலிலேதான்.

இ - ள். சீர் ஆரும் - மேன்மைநிறைந்த, தென்புலியூர் - தென்புலியூரில், மேவும் - எழுந்தருளியிருக்கின்ற, சிவன் அருள்சேர் - சிவபெருமானது அருள் பொருந்திய, அம்பட்டத் தம்பிபுகான் வாசலிலே - அம்பட்டனாகிய தம்பிபுகான் முற்றத்தில்வந்து, ஆர் ஆர் தலைவணங்கார் - எவரெவர் தலைவளையாதவர், ஆர் ஆர் தாம்கையெடார் - எவரெவர் தாம் கையெடுக்காதவர், ஆர் ஆர் தாம் சத்திரத்தில் ஆறுதார் - எவரெவர்தாம் (அவன்) சத்திரத்தில் (உண்டு இளைப்பு) ஆறுதவர் (ஒருவருமில்லை) எ - று.

சிரத்தில் க்ஷவரஞ் செய்யும்போது தலைகுனிதலும், கக்ஷத்தில் க்ஷவரம் செய்யும்போது கைகளை உயரவெடுத்தலும் கத்தித்தொழிலினால் சூடுதணிதலும் உண்டென அவனது தொழிலின் இயற்கையுந் தோன்றுதல் காண்க. சத்திரம்-கத்தி. ஆரார்தாம் சத்திரத்தில் ஆறுதார் என்பதற்குச் சூரியால் அறுத்துப் புண் ஆறப்பெறுதவர் எவர் எனினுமாம்.

**தானும் தன்மனைவியும் பள்ளியறையிலிருக்கும்போது, காற்று கதவை மோத, யாரோ கதவைத் தட்டுகிறார்களென்று நினைத்துக் கதவைத் திறந்துபார்த்து யாருமில்லாதிருக்கையால் கதவைமோதினது காற்றென்று தெளிந்து காற்றை முன்னிலையாக்கிப் பாடியது.**

10. கொற்கையான்மாறன்குலசேகரப்பெருமான்
பொற்கையானனைகதவைபோதாதோ—நற்கமலை
மன்றலேவாரிமணிவாசலையசைக்கத்
தென்றலேயேன்வந்தாய்செப்பு.

இ - ள். கொற்கையான்-கொற்கைப்பதியையுடையவனாகிய, மாறன் குலசேகரப்பெருமான் - குலசேகரபாண்டியனாகிய பெருமையையுடையோன், பொ

ற்கையான் ஆனகதை போதாதோ - பொற்கையான் ஆகியகதை பற்றாதோ, தென்றலே - தென்றற்காற்றே, நல் கமலம் மன்றலே வாரி - நன்மையாகிய தாமரைமலரின் மணத்தையே முகந்துகொண்டு, மணிவாசலை அசைக்க - ரத்நகசிதமாகிய கதவை யசைத்தற்பொருட்டு, ஏன்வந்தாய - நீயேன்வந்தாய், எ - று.

பாண்டியன் மூடியிருந்த பிறர்வீட்டுக்கதவைத்தட்டின குற்றத்துக்காகத் தன்கையை வெட்டிக்கொண்டனன். பின் அவனுக்குப் பொற்கை முளைத்தது. இதனை "எனக்குத்தவன்றால்" என்னும் பழமொழிச்செய்யுளாலுமறிக.

ஆறைநகரிலிருந்தும் ஏகம்பவாணனைப் புகழ்ந்துபாடியவை.

11. பேரரசர்தேவிமார்பெற்றமதலையர்தம்
மார்பகலங்கண்டுமகிழ்வரே—போர்புரிய
வல்லானகளங்கன்வாணன்றிருநாமம்
எல்லாமெழுதலாமென்று.

இ - ள். பேர் அரசர் தேவிமார் - பெரிய அரசருடைய மனைவிமார்பெற்ற மதலையர்தம் - தாம்பெற்ற புதல்வருடைய, மார்பு அகலம் கண்டு - மார்பின் அகலத்தைநோக்கி, (அம்மார்பில்) போர்புரியவல்லான் அகளங்கன் - போர்செய்யவல்லவனும் குற்றமற்றவனுமாகிய, வாணன் - வாணனது, திருநாமம் எல்லாம் - திருநாமங்களெல்லாவற்றையும், எழுதலாம் என்று - எழுதலாமென்றுகருதி, மகிழ்வர் - களிப்பார்கள், எ - று.

வாணன் திருநாமமெல்லா மெழுதலாமென்று கருதினமையால் அவனது பெரும்புகழ் விளங்குகின்றது.

12. உலைக்குரியபண்டமுவந்திரக்கச்சென்றால்
கொலைக்குரியவேழங்கொடுத்தான்—தலைக்குரிய
வாணர்கோனாறைமகதேவனுக்கிந்தப்
பாணனோடென்னபகை.

இ - ள். உலைக்கு உரியபண்டம் உவந்து - உலையிற் பெய்தற்குரிய பொருளாகிய அரிசியை விரும்பி, இரக்கசென்றால் - யாசிக்கப்போனால், கொலைக்குரிய வேழம் கொடுத்தான் - கொல்லுதற்குரிய யானையைத் தந்தான், தலைக்கு உரிய - தலைமைப்பாட்டுக்குரிய, வாணர்கோன் - வாணர்பிரானாகிய, ஆறைமகதேவனுக்கு - ஆறையிலிருக்கும் மகதேவனுக்கு, இந்தப் பாணனோடு - இந்தப் பாணனுடன், என்னபகை - என்னபகையுளது, எ - று.

பிச்சையேற்க வந்தவனுக்கு யானையைக்கொடுத்தால் அதை அவன் கொண்டுபோய்க் காப்பாற்றமாட்டாமல் வருந்துவானாதலால், "பாணனோடென்ன பகை" என்றார்.

13. வாணன்பெயரெழுதாமார்புண்டோமாகதர்கோன்
வாணன்புகழுரையாவாயுண்டோ—வாணன்
கொடிதாங்கிநில்லாதகொம்புண்டோவுண்டோ
அடிதாங்கிநில்லாவரசு.

இ - ள். வாணன்பெயர் எழுதாமார்பு உண்டோ—, மாகதர்கோன் வாணன்புகழ் உரையாவாய் உண்டோ - மகதர்பிரானாகிய வாணனது கீர்த்தியைச் சொல்லாதவாயுளதோ, வாணன்கொடிதாங்கி நில்லாதகொம்பு உண்டோ - வாணனது வெற்றிக்கொடியைத்தாங்கி நில்லாதகொம்புண்டோ, (வாணன்) அடிதாங்கிநில்லா அரசுஉண்டோ - வாணனது பாதத்தைத்தாங்கி நில்லாதவேந்தன் உண்டோ (இல்லை), எ - று.

14. பாண்டியனைப்பேர்மாற்றிப்பாணர்க்கரசளித்த
வாண்டகையென்றுன்னையறியேனே—மூண்டெழுந்த
கார்மாற்றுஞ்செங்கைக்கடகரிவாணாவுனது
பேர்மாற்றுவதரிதோபேசு.

இ - ள். பாண்டியனைபேர்மாற்றி - பாண்டியனது பேரை மாறச்செய்து, பாணர்க்கு அரசு அளித்த - பாணர்க்கு ராஜ்ரீகத்தைக்கொடுத்த, ஆண்தகையென்று - ஆண்மையுடையவனென்று, உன்னை அறியேனே - உன்னையறியமாட்டேனே, மூண்டு எழுந்த - திரண்டெழுந்த, கார்மாற்றும் - மேகத்தின்கொடையை மாறப்பண்ணுகின்ற, செம்கை - செவந்தகையினையும், கடம்கரி - மதயானைகளையுமுடைய, வாணா - வாணனே, உனது பேர்மாற்றுவது அரிதோ - உன்பேரையுமாற்றுவது அருமையாகுமோ, பேசு-சொல்லாய், எ - று.

ஆறைநகரிலிருக்கும் இவர் ஏகன்என்பவன் தனக்குச்செய்த நன்றிக்காக அவன்பெயரை முன்னும், கம்பர் தனக்காசிரியர் ஆகையால் அவர்பெயரை இடையிலும், வாணன் தன்னைப்பெற்றவனாகையால் அவன் பெயரைக் கடையிலும்சேர்த்து ஏகம்பவாணன் எனத் தான்பெயரிட்டுக்கொண்டனர். இவருக்குத் தாய்தந்தையரால் இட்டபெயர் விளங்கவில்லை.

15. பாணன்மதுரைப்பதியாளவைத்தபிரான்
வாணர்புகழவருமேகம்ப—வாணன்
கரும்போதகமேநின்கால்பணிவேன்மீண்டு
வரும்போதகமேவரின்.

இ - ள். பாணன் - பாணனானவன், மதுரைப்பதி ஆள-மதுரைநகரத்தை ஆளும்படி, வைத்த - நியமித்துவைத்த, பிரான் - பெருமான், வாணர்புகழவரும் - கவிவாணர் புகழும்படிதோன்றிய, ஏகம்பவாணன் - ஏகம்பவாணன் கட

த்துகின்ற, கருபோதகமே - கரியயானையே, மீண்டுவரும்போது - திரும்பிவரு ம்பொழுது, அகமேவரின்-என்வீட்டிற்கு வருவையாயின், நின்கால்பணிவேன்- உன்பாதத்தை வணங்குவேன், எ - று.

வாணனை யிச்சித்தவளொருத்தி அவனை வணங்குதற்குப் பதிலாக அவன் ஊர்ந்துசெல்லும் யானையைநோக்கி வணங்கிக்கூறினாள்.

16. என்கவிகையென்சிவிகையென்கவசமென்றுவசம்
என்கரியீதென்பரியீதென்பரே—மன்கவனம்
மாவேந்தன்வாணன்வரிசைப்பரிசுபெற்ற
பாவேந்தரைவேந்தர்பார்த்து.

இ - ள். மன்கவனம் - மிக்கவேகத்தையுடைய, மாவேந்தன் - அசுவஞ்செ லுத்துவதில்வல்ல நகுலராஜனையொத்த, ஏகம்பவாணன் - ஏகம்பவாணனது, வரிசைபரிசுபெற்ற - வரிசைப்பரிசுபெற்றுவருகிற, பாவேந்தரை - கவிராஜரை, வேந்தர்பார்த்து - (அவர்களுக்கெதிரேவருகிற) அரசர்கள்பார்த்து, ஈதுஎன்கவி கை - இந்தப்புலவர் பிடித்துச்செல்லுவது என்குடை, ஈது என்சிவிகை - இந் தப்புலவர் ஏறிப்போவது எனதுதண்டிகை, ஈது என்கவசம்-இந்தப்புலவர் தரி த்திருப்பது என்கவசம், ஈது என்துவசம் - இந்தப்புலவர் ஏந்திச் சொல்வது என்துவசம், ஈது என்கரி - இந்தப்புலவர் செலுத்திவருவது என்யானை, ஈது என்பரி - இந்தப்புலவர் ஏறிச்செல்லுவது என்குதிரை, என்பர் - என்றுசொல் வார்கள், எ - று.

இப்படிக்கூறியதனால் இவன் கவிவாணருக்குப் பரிசிலாகக்கொடுத்த கு டைமுதலியவைகள் தனக்குத்தோற்ற அரசர்களுடையன என்றதாயிற்று.

17. சேற்றுக்கமலவயற்றென்னாறைவாணனையான்
சோற்றுக்கரிசிதரச்சொன்னக்கால்—வேற்றுக்
களிக்குமாவைத்தந்தான்கற்றவர்க்குச்செம்பொன்
அளிக்குமாறெவ்வாறவன்.

இ - ள். சேறு-சேற்றின்கண், கமலம்-தாமரை மலர்கள்நெருங்கிய, வயல்- வயல்சூழ்ந்த, தென் ஆறைவாணனை - தெற்கிலுள்ள ஆற்றூரில் வாழ்கின்றவா ணனை, யான் - நான், சோற்றுக்கு அரிசிதரச்சொன்னக்கால்-சோற்றுக்கு அரி சியைத் தரச்சொல்லிவேண்டினால், வேறு - அதனின்வேறாகிய, களிக்கு-களி கொளும்பொருட்டு, மாவைதந்தான்-யானைக்கொடுத்தான், கற்றவர்க்கு - கற்று வல்லபுலவர்களுக்கு—, செம்பொன்அளிக்கும் ஆறு எவ்வாறு-செம்பொன்னைக் கொடுக்கும் விதம்எவ்விதம், எ - று.

களிக்குமா என்பது களிக்கும் மா எனப்பிரிக்கப்பட்டு, களிக்கின்றயானை யென வேறுபொருள் தருதல்காண்க.

18. அலங்கலணிமார்பனாறையர்கோன்வாணன்
விலங்குகொடுவருகவென்றான்—இலங்கிழையீர்
சேரற்கோசோழற்கோதென்பாண்டிநாடாளும்
வீரற்கோயார்க்கோவிலங்கு.

இ - ள். அலங்கல் அணிமார்பன் - பூமாலையையணிந்த மார்பினை யுடையவனும், ஆறையர்கோன் - ஆறையர் வேந்தனுமாகிய, வாணன்—, விலங்குகொடுவருக என்றான் - விலங்கைக்கொண்டு வருகவென்று கட்டளையிட்டான், இலங்குஇழையீர் - பிரகாசியாநின்ற ஆபரணத்தையணிந்த தோழியரே, விலங்கு-(அந்த) விலங்கு, சேரற்கோ-சேரனுக்கோ, சோழற்கோ- சோழனுக்கோ, தென்பாண்டிநாடு ஆளும்வீரற்கோ-தென்பாண்டிநாட்டை யாள்கின்ற வீரனாகிய பாண்டியனுக்கோ, யார்க்கோ - (இவர்களொழிந்தமற்ற) எவருக்கோ (யாமறியோம்), எ - று.

இவ்வாறு கூறியதனால் இவன் மூவேந்தரையும் தளைபூட்டி யடக்கியாளவல்லோனென்றதாயிற்று.

19. தேருளைப்புரவிவாரணத்தொகுதிதிறைகொணர்ந்துவருமன்னநின்
தேசமேதுனதுநாமமேதுபுகல்செங்கையாழ்தடவுபாணகேள்
வாருமொத்தகுடிநீருநாமுமகதேவனாறைநகர்காவலன்
வாணபூபதிமகிழ்ந்தளிக்கவெகுவரிசைபெற்றுவருபுலவன்யான்
நீருமிப்பரிசுபெற்றுமீளவரலாகுமேகுமவன்முன்றில்வாய்
நித்திலச்சிகரமாடமாளிகைநெருங்குகோபுரமருங்கெலாம்
ஆருநிற்குமுபர்வேம்புநிற்கும்வளர்பனையுநிற்குமதனருகிலே
அரசுநிற்குமரசைச்சுமந்தசிலவத்திநிற்குமடையாளமே.

இ - ள். தேர் - இரதங்களையும், உளைபுரவி - புறமயிரினையுடைய குதிரைகளையும், வாரணம்தொகுதி - யானைக் கூட்டங்களையும், திறைகொணர்ந்துவரும் - பகுதிப் பொருளாகக் கொண்டுவருகின்ற, மன்ன-அரசனே, நின்தேசம் ஏது - உன்நாடுயாது, உனதுநாமம்ஏது - உன்பெயர்யாது, புகல் - சொல்வாய் (என்றுபாணன்கேட்க), (புலவன் விடையாகக் கூறுவதுயாதெனின்) செங்கையாழ் தடவுபாண - செவந்தகையினால் வீணையைவருடுகின்ற பாணனே, கேள்- கேட்பாயாக, வாரும் - வருவீராக, நீரும் நாமும் ஒத்தகுடி - நீரும்நாமும் (கல்வியால்) ஒத்தகுடிப் பிறப்பினையுடையேம், மகதேவன் - மகதேவனும், ஆறைநகர் காவலன் - ஆறைநகர்க்கிறைவனுமாகிய, வாணபூபதி - வாணனென்னும் மண்டலேசுவரன், மகிழ்ந்து அளிக்க - மனமகிழ்ந்து கொடுக்க, வெகு வரிசை பெற்றுவரு புலவன்யான் - அநேகமாகிய வரிசைகளைப் பெற்றுவருகிற புலவன் நான், நீரும்-(என்னைக்கல்வியால் நிகர்த்த) நீரும், இப்பரிசுபெற்று மீளவரல் ஆகும்-இந்தப் பரிசில்களைப்பெற்று மீண்டுவருதல்கூடும், ஏகும்-போம், அவன் முன்றில்வாய் - அவனது முற்றத்தில், நித்திலம்சிகரம் - முத்துத்தொழிலமை

ந்த சிகரங்களையுடைய, மாடமாளிகைநெருங்கு கோபுரம் - மாடமாளிகைக ளில் நெருங்கிய கோபுரங்களின், மருங்கு எல்லாம் - எல்லாவிடங்களிலும், ஆரும்நிற்கும் - ஆத்திமரமும்நிற்கும், உயர்வேம்பும் நிற்கும் - உயர்ந்தவேப்பமர மும்நிற்கும், வளர்பனையும்நிற்கும் - உயர்ந்தபனைமரமும்நிற்கும், அதன் அருகி லே - அதன்சமீபத்திலே, அரசுநிற்கும்-அரசமரம் நிற்கும், அரசைசுமந்த சில அத்திநிற்கும் - அரசமரத்தைத்தாங்கிய சிலஅத்தி மரங்கள்நிற்கும், அடையா ளம் - (இதுவேஅவனுக்குள்ள) அடையாளம்.

ஆர் - ஆத்தி மாலையைத்தரித்த சோழன், வேம்பு - வேப்பமாலையைத்தரி த்தபாண்டியன், பனை-பனைமாலையைத் தரித்தசேரன், அரசு - மற்றஅரசர்கள், அரசைச்சுமந்தஅத்தி - அரசைத்தாங்கிய யானைகள் எனவேறு மொருபொருள் தோன்றுதல் காண்க.

20. வாணன்புகழ்க்கெல்லைவாழ்த்துவோர்நாவெல்லை
வாணன்புகழ்க்கெல்லைமண்ணெல்லை—வாணன்
படைக்கெல்லைதிக்கெல்லைபைந்தமிழ்தேர்வாணன்
கொடைக்கெல்லையேற்பவர்தங்கோள்.

இ - ள். வாணன்புகழ்க்கு எல்லை - வாணனது கீர்த்திக்கு எல்லையாவது, வாழ்த்துவோர் நாஎல்லை - புகழ்வோரது நாவினெல்லையே, வாணன்புகழ்க்கு எல்லை, வாணனதுகீர்த்திக்கு எல்லையாவது, மண்எல்லை - மண்ணினது எல்லை யே, வாணன்படைக்குஎல்லை - வாணனது சேனைக்கெல்லையாவது, திக்குஎ ல்லை - திசைகளினெல்லையே, பைந்தமிழ் தேர்வாணன் கொடைக்கு எல்லை - பசுந்தமிழை யாராய்ந்து தெளிந்தவாணனது ஈகைக்கு எல்லையாவது, ஏற்பவர் தம்கோள் - இரப்பவர்களுடைய மனக்கொள்கையே, எ - று.

21. வாட்டானைத்தென்னவர்கோன்மாகதற்குத்தோற்றசெய்தி
கேட்டானத்தீங்குரலுங்கேட்டதற்பின்—நாட்டம்
பொருந்தாயிரவிழியான்பொன்முடியைச்சாய்த்தங்
கிருந்தானிங்கென்னாகுமென்று.

இ - ள். வாள்தானை - வாட்படையையுடைய, தென்னவர்கோன் - பாண் டியன், மாகதற்குதோற்ற செய்திகேட்டான் - ஏகம்பவாணனுக்குத்தோற்ற செ ய்தியைக்கேட்டான், அத்தீங்குரலும் கேட்டதற்பின் - அந்தமதுரமாகிய குர லையும் கேட்டபிறகு, நாட்டம்பொருந்து ஆயிரவிழியான் - பார்வைபொருந்திய ஆயிரங்கணகளையுடைய இந்திரன், பொன் முடியைச்சாய்த்து - பொன்முடியை வளைத்து, இங்கு என் ஆகும் என்று - இவ்விடத்தில் என்னவிளையுமோவென் றஞ்சி, அங்குஇருந்தான் - அவ்விடத்தில் இருந்தான், எ - று.

தீங்குரல் - மதுரமாகிய குரல் எனினுமாம். "வாணன் பெயரெழுதாமாபுர ண்டோ மாகதர்கோன்வாணன் புகழுரையாவாயுண்டோ" என, ம்க-ஆம் செய்

யுளிலும் கூறியிருப்பதால் மாகதற்கு என்பதற்கு வாணன் எனப்பொருள் கூற பபட்டது. வாணனுக்கு அப்பெயர்வந்த காரணம் விளங்கவில்லை.

பாண்டியன் மனைவியாகிய மங்கையர்க்கரசியைப் புகழ்ந்து பாடியது.

22. உமையாளுநீயுமொருங்கொப்பேயொப்பே
உமையாளுக்குண்டங்கோரூனம்—உமையாடன்
பாகந்தோய்ந்தாண்டான்பலிக்குழன்றான்பாண்டியனின்
ஆகந்தோய்ந்தாண்டானரசு.

இ - ள். உமையாளுநீயும் - உமாதேவியும் நீயும், ஒருங்கு ஒப்பேஒப்பே-முழுதும் நிகர்ப்பீர் நிகர்ப்பீர் (ஆயினும்), அங்கு-அவ்வொப்புமையில், உமையாளுக்கு—, ஓர்ஊனம்உண்டு - ஒருகுறையுளது - (என்னெனின்), ஆண்டான் - ஆண்டவனாகிய சிவபெருமான், உமையாள் தன்பாகம்தோய்ந்து - உமாதேவியின்பாகத்தைப் பொருந்தி (அதனால்), பலிக்கு உழன்றான் - பிச்சையின்பொருட்டுத்திரிந்தான், பாண்டியன்-பாண்டியனானவன், நின் ஆகம்தோய்ந்து-உன்மார்பிற்படிந்து, அரசுஆண்டான் - அரசாட்சிசெய்தான், எ - று.

சடையப்ப முதலியாரைப் புகழ்ந்து பாடியது.

23. மோட்டெருமைவாவிபுக்குமுட்டுவரால்கன்றென்று
வீட்டளவும்பால்சொரியும்வெண்ணெயே—நாட்டில்
அடையாநெடுங்கதவுமஞ்சலென்றசொல்லும்
உடையான்சடையப்பனூர்.

இ - ள். நாட்டில்—, அடையாநெடுகதவும் - மூடாத நீண்டகதவையும், அஞ்சல் என்றசொல்லும் - அஞ்சாதே என்றவார்த்தையையும், உடையான் - உடையவனாகிய, சடையப்பன்ஊர் - சடையப்ப முதலியாருக்கு ஊராவது, மோடு எருமைவாவிபுக்கு - பெரியஎருமைகள் தடாகங்களில் பிரவேசித்து, முட்டுவரால்-(தம்முலைகளில்வந்து) முட்டுகின்றவரால் மீன்களை, கன்றுஎன்று-தம்கன்றுகளென்று நினைத்து, வீடுஅளவும் - வீட்டுக்குப்போமளவும், பால்சொரியும் - பால்சுரந்துநிலத்தில் பொழிந்துகொண்டே செல்லுகின்ற, வெண்ணெயே - திருவெண்ணெய்நல்லூரே, எ - று.

ஆதோண்டைச் சக்ரவர்த்தி தமக்கு உபகாரஞ்செய்ததற்கு மகிழ்ந்து பாடியது.

24. வெற்றிபுனைதாதகிக்கும்வேம்புக்கும்பெண்ணைக்கும்
சுற்றும்பெருநிழலாய்த்தோன்றுமே—கற்றோர்
திறந்தாங்குந்தாங்குஞ்செகமுழுதுந்தாங்கும்
அறந்தாங்குந்தொண்டையரசு.

இ - ள். தொண்டை அரசு - தொண்டைநாட்டிற்கு வேந்தனாகிய ஆதொண்டைச் சக்கரவர்த்தியானவன், வெற்றி புனைதாதகிக்கும் - வெற்றியைத்தரித்த ஆத்திமாலையையணிந்த சோழனுக்கும், வேம்புக்கும்-வேப்பமாலையையணிந்த பாண்டியனுக்கும், பெண்ணைக்கும் - பனைமாலையையணிந்த சேரனுக்கும், சுற்றும் பெருநிழலாய்த் தோன்றும் - சுற்றிலும் பெரியநிழலைச் செய்பவனாகத் தோன்றுவான், (அன்றியும்), கற்றோர் திறந்தாங்கும் தாங்கும் - கற்றோரது கூட்டத்தை ஆதரிப்பான், செகமுழுதும்தாங்கும் - உலகமுழுதையும் தாங்குவான், அறம்தாங்கும் - தருமத்தையும் தாங்குவான், எ - று.

தாங்கும் செகமுழுதும் தாங்கும் எனவைத்து, ஆதிசேஷன் ஆயிரந்தலைகளால் தாங்குகின்ற உலகத்தைத் தன்னொருதோளினால் தாங்குவான் என்றுரைப்பினுமமையும். தொண்டைநாட்டிலுள்ள அரசமரம் சோழநாட்டிலுள்ள ஆத்திமரத்துக்கும், பாண்டிநாட்டிலுள்ள வேப்பமரத்துக்கும், சேரநாட்டிலுள்ள பனைமரத்துக்கும் பெருநிழலைச்செய்யும் எனவேறுமொருபொருள் தோன்றுதல்காண்க.

### வல்லியென்னும் தாசியை இகழ்ந்து பாடியது.

25. கந்தமலர்ப்பிரமன்கன்னிமடவார்க்கெல்லாம்
அந்தவிளநீரைமுலையாக்கினான் — சுந்தரஞ்சேர்
தோற்றமிகுவல்லிக்குத்தோப்பைமுலையாக்கினான்
ஏற்றமிதில்யார்தானியம்பு.

இ - ள். கந்தம் மலர் பிரமன் - மணமுள்ள தாமரைமலரில் வாழ்கின்ற பிரமன், கன்னி மடவார்க்கு எல்லாம் - கன்னிப் பெண்களுக்கெல்லாம், அந்தம் இளநீரைமுலை ஆக்கினான் - அழகாகிய இளநீரை முலைகளாகப் படைத்தான், சுந்தரம்சேர்தோற்றம் மிகுவல்லிக்கு - அழகுபொருந்திய காட்சியாற்சிறந்த வல்லியென்பவளுக்கு, தோப்பை முலைஆக்கினான் - தோப்பை முலைகளாகப்படைத்தான், இதில் - இந்த பிரஸ்தாபத்தில், ஏற்றம்யார் - அதிகம்யாவர், இயம்பு - நீசொல்வாய், எ - று.

தோப்பை என்பது தோற்பையெனவும் வேறுமொருபொருள் தருதல்காண்க. பால்கமருக்குஉகுத்து என்பதை "பாக்கமருக்குஉகுத்து" என்றூர்பிறரும்.

### கத்திரிக்காயும் முளைக்கீரையும் கொடுத்த தோட்டக்காரனாகிய மாத்தத்தன்மேல் பாடியது.

26. இருந்தவளைப்போனவளையென்னையவளைப்
பொருந்தவளைபறித்துப்போனான் — பெருந்தவளை
பூத்தத்தத்தேன்சொரியும்பொன்னிவளநன்னாட்டில்
மாத்தத்தன்வீதியினில்வந்து.

இ - ள். பெருதவளை - பெரியதவளைகள், பூதத்த - தாமரைமலர்களின் மீது குதிக்க, தேன்சொரியும் - (அந்தமலர்கள்விரிந்து) தேனைப் பொழிகின்ற, பொன்னிவளம்நல்நாட்டில்-காவிரிநதியினால் பலவளங்களும்நிறைந்த நல்லசோழநாட்டிலுள்ள, மாத்தத்தன் - மாத்தத்தன்என்பவன், வீதியினில்வந்து - தெருவில்வந்து, இருந்தவளை - இருந்தவளையும், போனவளை - போனவளையும், என்னை அவளை - என்னையும் அவளையும், பொருந்தவளை பறித்துப்போனான் - பொருந்தும்படி வளையலைக் கவர்ந்து சென்றான், எ - று.

சிங்கன் என்னும் கருமானைப் புகழ்ந்து பாடியது.

27. ஆழியானாழியயனெழுத்தாணியென்பார்
கோழியான்குன்றெறியவேலென்பான்—பூழியான்
அங்கைமழுவென்பானருள்பெரியமாவண்டூர்ச்
சிங்கனுலைக்களத்திற்சென்று.

இ - ள். அருள்பெரிய - கருணையாற்சிறந்த, மாவண்டூர் சிங்கன் உலைக்களத்தில் சென்று - மாவண்டூரிலுள்ள கருமாரச்சிங்கனது உலைக்களத்திற்போய், ஆழியான் அயன் - பாற்கடலையுடையவனாகிய திருமாலும் பிரமனும், ஆழிஎழுத்தாணிஎன்பார் - சக்கரமும் எழுத்தாணியும் வேண்டுமென்பார்கள், கோழியான் - கோழிக்கொடியை யுடையவனாகிய முருகன் - குன்று எறிய - கிரவுஞ்சமலையை யெறிதற்கு, வேல் என்பான்-வேலாயுதம் வேண்டுமென்பான், பூழியான் - திருநீற்றையுடையவனாகிய சிவபெருமான், அங்கை - அகங்கையில் தாங்குதற்குரிய, மழு என்பான்-மழுவாயுதம் வேண்டுமென்பான், எ - று.

திருமால்முதலியோர் சிங்கனுலைக்களத்தில்வந்து தமது ஆயுதங்களாகிய சக்கர முதலியவற்றைச்செய்து கொடுக்கும்படி அவனை வேண்டுவர் என்பது கருத்து.

அச்சுதன் என்பவனைப் புகழ்ந்து பாடியவை.

28. தினைவிளைத்தார்முற்றந்தினையுணங்குஞ்செந்நெல்
தனைவிளைத்தார்முற்றமதுதானும்—கனையு
முரசுணங்கச்சங்குணங்குமூரித்தேர்த்தானை
அரசுணங்குமச்சுதன்முற்றம்.

இ - ள். தினைவிளைத்தார் முற்றம் தினைஉணங்கும் - தினையைப் பயிர்செய்தாரது முற்றங்களில் தினைஉலரும், செந்நெல்தனை விளைத்தார் முற்றம் அது தான் ஆம் - செந்நெல்லைப்பயிர் செய்தாரது முற்றத்தில் அந்தச் செந்நெல்லே உலரும், மூரித்தேர்தானைஅரசு உணங்கும் அச்சுதன்முற்றம் - வலிமையாகிய தேர்களையும் சேனைகளையுமுடைய அரசர் உலர்தற்கிடமாகிய அச்சுதனது முற்றத்தில், கனையும் - முழங்குகின்ற, முரசுஉணங்க-முரசம் உலர, சங்குஉணங்கும் - சங்கங்களும் உலரும், எ - று.

திணைவிளைத்தார் முற்றத்தில் திணையும் நெல்விளைத்தார் முற்றத்தில் நெல்லும் உலர்தல்போல, அச்சுதன் முற்றத்தில் வேற்றரசர்உலர முரசவாத்தியமும் சங்கவாத்தியமும் உலரும் என்பது கருத்து.

29 அரசனகளங்கனச்சுதன்முற்றத்
தரசரவதரித்தவந்நாள்—முரசதிரக்
கொட்டிவிடுமோசையினுங்கோவேந்தர்காற்றளையை
வெட்டிவிடுமோசைமிகும்.

இ - ள். அரசர் அவதரித்த அந்நாள்-வேந்தர்பிறந்த அத்தினத்தில், முரசு அதிர கொட்டிவிடும் ஓசையினும் - முரச மதிரும்படி கொட்டுகின்ற ஒலியினும், அரசன் அகளங்கன் அச்சுதன் முற்றத்து - அரசனும் களங்க மற்றவனுமாயிருக்கிற அச்சுதனது முற்றத்தில், கோவேந்தர் கால்தளையை - பேரரசரது காலிலங்கை, வெட்டிவிடும் ஓசைமிகும் - வெட்டிவிடுகின்ற ஒலியே மிகுந்திருக்கும், எ - று.

இது இவனது பவனிகண்டு மயங்கிவளையிழந்த
ஒரு பெண்ணின் கூற்றகக்கூறியது.

30 தளையவிழ்நாண்மாலைத்தாயரோமாவி
களையினுமென்கண்டிறந்துகாட்டேன்—வளைகொடுபோம்
வன்கண்ணன்மாவிசயன்மால்யானைதன்னொடும்வந்
தென்கண்புகுந்தானினி.

இ - ள். தளை அவிழ் - கட்டவிழ்ந்த, நாள்மாலை - புதிய மலர்மாலையைத் தரித்த, தாயரே - தாய்மாரே, வளைகொடுபோம் - வளையலைக் கவர்ந்துகொண்டுபோன, வன்கண்ணன் - வன்கண்மை யுடையவனாகிய, மாவிசயன் - மாவிசயன் என்பவன், மால்யானை தன்னொடும்வந்து - மதமயக்கமுள்ள யானையோடு வந்து, என் கண்புகுந்தான் - என்கண்ணில் நுழைந்தான், இனி-இனி, ஆவி களையினும் - என் உயிரை வாங்கினாலும், என்கண் திறந்து காட்டேன் - என் கண்ணைத் திறந்து (அவனைஉங்களுக்குக்) காட்டமாட்டேன், எ - று.

சோழன் ஏழடி எதிர்கொண்டுவந்து மரியாதைசெய்தபோது பாடியது.

31. படுபருந்துஞ்சூர்ப்பேயும்பன்மிருகஞ்செந்நாய்
கொடிகழுகுமித்தனையுங்கூடி — வடிவுடைய
கோமான்களப்பாளன்கொல்யானைபோமாறு
போமாறுபோமாறுபோம்.

இ - ள். படுபருந்தும்-பொருந்திய பருந்துகளும், சூர்பேயும்-அச்சத்தைத் தருகிறபேய்களும், பல்மிருகம் செந்நாய் கொடிகழுகும் - பலமிருகங்கள் செந்நாய்கள் காக்கைகள் கழுகுகள் என்பவைகளுமாகிய, இத்தனையும்கூடி - இந்த

னையும் ஒருங்குசேர்ந்து, வடிவுஉடைய - அழகையுடைய, கோமான் களப்பாளன் - வேந்தனாகிய சோழனது, கொல்யானை-(பகைவரைக்) கொல்லுகின்ற யானையானது, போம்ஆறு போம்ஆறு போம்ஆறுபோம் - செல்லும்வழிதோறும் தொடர்ந்து செல்லும், எ - று.

சோழனது யானையைப் பருந்துமுதலியவை தொடர்ந்து செல்லுதல் அந்தயானையால் கொலையுண்டவர் பிணங்களைத் தின்னுதற் கெனக்கொள்க.

**தன்புதல்வனாகிய அம்பிகாபதி இறந்ததைக்குறித்துப் பாடியது**

32. பரப்போதஞாலமொருதம்பியாளப்பனிமதியந்
துரப்போனொருதம்பிபின்வரத்தானுந்துணைவியுடன்
வரப்போனமைந்தற்குத்தாதைபொறாதுயிர்மாய்ந்தனனெஞ்
சுரப்போவெனக்கிங்கினியாருவமையுரைப்பதற்கே.

இ - ள். பரப்புஓதம் - விஸ்தாரமாகிய கடல்சூழ்ந்த, ஞாலம் - பூமியை, ஒருதம்பிஆள - ஒருதம்பியாகிய பரதன்ஆளவும், பனிமதியம்துரப்போன் ஒருதம்பி பின்வர-குளிர்ச்சியாகிய சந்திரனை (சிறப்பினால்) வெல்வோனாகிய ஒருதம்பியாகிய இலக்குமணன் பின்தொடர்ந்து செல்லவும், தானும் துணைவியுடன் - தானும்மனைவியாகிய சீதையோடுகூடி, வரப்போனமைந்தற்கு - (பதினான்குவருடம்கழிந்தவுடனே) வரவுத்தேசித்துப்போன புதல்வனாகிய ஸ்ரீராமனது பிரிவின்பொருட்டு, தாதை - தந்தையாகிய தசரதன், பொறாது - சகிக்காமல், உயிர் மாய்ந்தனன்-உயிர்நீங்கினான், (அப்படியிருக்க என்புதல்வ னிறந்ததைக்குறித்து நான் இறவாதிருந்தலால்) நெஞ்சுஉரப்பு - மனவுறுதியில், எனக்கு உவமை உரைப்பதற்கு - எனக்கு ஒப்பாக எடுத்துச் சொல்வதற்கு, இங்குஇனியார்-இவ்வுலகத்தில் இனி யாவருளர், எ - று.

**தாசி பொன்னிக்குக் கம்பனடிமையென எழுதிக்கொடுத்த முறிச்சீட்டைச்சோழன் தன்சபையாருக்குக் காட்டிச்சிரிக்க, அப்போது கம்பர் உலகமாதாவாகிய ஸ்ரீலட்சுமிக்குக் கம்பன் அடிமையெனப் பொருத்தமான பொய்சொல்லிச் சமர்த்தித்தபோது, சோழன் பாடியது.**

33. போற்றினும்போற்றுவர்பொருள்கொடாவிடில்
தூற்றினுந்தூற்றுவர்சொன்னசொற்களை
மாற்றினுமாற்றுவர்வன்கணாளர்கள்
கூற்றினும்பாவவர்கொடியராவரே.

இ - ள். போற்றினும் போற்றுவர் - புகழ்ந்தாலும் புகழ்வார், பொருள் கொடாவிடில் - பொருள் கொடாவிட்டால், தூற்றினும் தூற்றுவர் - இகழ்ந்தாலும் இகழ்வார், சொன்ன சொற்களை மாற்றினும் மாற்றுவர் - தாம்சொன்ன

சொற்களை மாற்றினும் மாற்றுவர் - (ஆதலால்) வன்கணாளர்கள் பாவலர் - வன்கண்ணராகிய வித்துவான்கள், கூற்றினும் கொடியர்ஆவர் - யமனிலும் கொடியோராவர், எ - று.

சோழன் என்தேசத்தைவிட்டுப் போவென்றபோது பாடியவை.

34\. மன்னவனுநீயோவளநாடுமுன்னதோ
உன்னையறிந்தோதமிழையோதினேன்—என்னை
விரைந்தேற்றுக்கொள்ளாதவேந்துண்டோவுண்டோ
குரங்கேற்றுக்கொள்ளாதகொம்பு.

இ - ள். மன்னவனும் நீயோ - வேந்தனுவதும் நீதானோ, வளநாடும் உன்னதோ - வளமுள்ள தேசமும் உன்னுடையது தானோ, உன்னை அறிந்தோ தமிழைஓதினேன் - உன்னையறிந்துதானோ தமிழைப்படித்தேன், என்னைவிரைந்து ஏற்றுக்கொள்ளாத வேந்துஉண்டோ - என்னைவிரைந்துவந்து ஏற்றுக்கொள்ளாத அரசன்உண்டோ, குரங்கு ஏற்றுக்கொள்ளாத கொம்புஉண்டோ - குரங்கை யேற்றுக்கொள்ளாத மரக்கொம்பு உண்டோ.

35\. அன்றையிலும்வையமகன்றதோவல்லவென்று
குன்றெடுத்துநீதிருத்திக்கொண்டாயோ—என்றும்
அடைந்தாரைக்காக்குமகளங்காதுங்கா
நடந்தாயோநாலாறடி.

இ - ள். அன்றையிலும் வையம் அகன்றதோ - அந்நாளினும் பூமி விசாலித்ததோ, அல்லஎன்று குன்று எடுத்து நீ திருத்திக் கொண்டாயோ, அல்லவென்று மலைகளைத்தோண்டியெடுத்து நீதிருத்திக் கொண்டாயோ, என்றும் அடைந்தாரைகாக்கும் அகளங்கா - எந்நாளும் அடைந்தவரைக் காக்கின்ற களங்கமற்றவனே, துங்கா - பரிசுத்தனே, நாலாறு அடிநடந்தாயே - நாலாறடிதூரம் நடந்தனையே, எ - று.

36\. காதமிருபத்துநான்கொழியக்காசினியை
ஓதக்கடல்கொண்டொளித்ததோ—மேதினியில்
கொல்லிமலைதேன்சொரியுங்கொற்றவாநீமுனிந்தால்
இல்லையோவெங்கட்கிடம்.

இ - ள். காதம் இருபத்துநான்கு ஒழிய - இருபத்துநான்கு காததூரமொழிய, காசினியை - மற்றபூமியை, ஓதக் கடல்கொண்டு ஒளித்ததோ-அலைகளையுடைய கடலானதுகொண்டு மறைத்ததோ, மேதினியில் - உலகத்தில், கொல்லிமலை தேன்சொரியும் கொற்றவா - கொல்லி மலையானது தேனைப் பொழிகின்ற பூபாலனே, நீமுனிந்தால் - நீகோவித்தால், எங்கட்கு இடம்இல்லையோ- எங்களுக்கு வேறிடமில்லையோ, எ - று.

கோங்குநாட்டிற் சென்றபோது அந்தநாட்டார் இவர்க்கு மரியாதை செய்யாதிருந்ததனால் இகழ்ந்து பாடியது.

37. நீரெலாஞ்சேற்றுநாற்ற நிலமெலாங்கல்லுமுள்ளும்
ஊரெலாம்பட்டிதொட்டியுண்பதோகம்பஞ்சோறு
பேரெலாம்பொம்மன்திம்மன்பெண்களோநாயும்பேயும்
காருலாங்கொங்குநாட்டைக்கனவிலுநினைக்கொணாதே.

இ - ள். நீர் எல்லாம் சேற்றுநாற்றம் - நீரெல்லாஞ் சேற்று நாற்றமேநாறும், நிலம்எல்லாம் கல்லுமுள்ளும் - நிலமெல்லாம் கல்லுமுள்ளு மாகவேயிருக்கும், ஊர்எல்லாம் பட்டிதொட்டி - ஊர்கள் எல்லாம் பட்டிதொட்டி யென்பனவே, உண்பதோ கம்பஞ்சோறு - உண்ணுவதோ கம்பஞ்சோறேயாம், பேர் எல்லாம் பொம்மன் திம்மன் - பேர்களியாவும் பொம்மன் திம்மன் என்பனவே, பெண்களோ நாயும்பேயும் - பெண்களென்றாலோ நாயும்பேயும்போல் மார்பு திறந்தும் தலைவிரித்தும் இருப்பார்கள், (ஆதலால்) கார் உலாம் கொங்குநாட்டை - மேகங்கள் சஞ்சரிக்கிற கொங்குதேசத்தை, கனவினும் நினைக்கொணாது - சொப்பநத்திலும் நினைக்கக்கூடாது, எ - று.

வன்னியரை நிந்தாஸ் துதியாகப் பாடியது.

38. குமிண்டியும்பண்ணையுங்கூடமுளைக்கின்றகொல்லைக்கம்பை
நிமிண்டியுமூதியுந்தின்னவல்லோரிந்தநீணிலத்தில் [கண்டீர்
தமிண்டியங்காய்தன்னைமொட்டையம்பாலெய்யுஞ்சூரர்
நமிண்டியிற்பள்ளிகளத்தனைபேர்களுநல்லவரே.

இ - ள். குமிண்டியும் பண்ணையும் கூடமுளைக்கின்ற கொல்லைக்கம்பை - குமிண்டிக்கீரையும் பண்ணைக்கீரையும் கூடவே விளைகின்ற கொல்லையிலுள்ள கம்பை, நிமிண்டியும் ஊதியும் தின்னவல்லோர் - கையால் நிமிண்டியும் வாயால் ஊதியும் தின்னவல்லவர், இந்தநீள்நிலத்தில் - இந்தப்பெரிய நிலவுலகத்தில், துமிண்டியங் காய்தன்னை - துமிண்டிக்காயை, மொட்டை அம்பால் எயயும் - மொட்டையம்பினுல் எய்கின்ற, சூரர்-வீரராகிய, நமிண்டியில் பள்ளிகள் அத்தனைபேர்களும் - நமிண்டியென்னும் ஊரிலுள்ள பள்ளிகள்எல்லாரும், நல்லவரே, நல்லவரே யாவர், எ - று.

செட்டிகள் முதலியோரிடத்திற்சென்று அவரால்மதிக்கப் பெறமையால் அவர்களையிகழ்ந்தும் வேளாளரைப் புகழ்ந்தும் பாடியது.

39. செட்டிமக்கள்வாசல்வழிச்செல்லோமேசெக்காரப்
பொட்டிமக்கள்வாசல்வழிப்போகோமே—முட்டிபுகும்
பார்ப்பாரகத்தையெட்டிப்பாரோமேயெந்நாளும்
காப்பாரேவேளாளர்காண்.

**இ - ள்.** செட்டிமக்கள் வாசல்வழி செல்லோம் - வணிகர் வீட்டுவாயில் வழிபோகோம், செக்காரப் பொட்டிமக்கள்வாசல் வழிப்போகோம் - செக்கடித்துச் சீவனஞ்செய்யும்வாணியர் வீடுகளின்வழியே போகமாட்டோம், முட்டிபுகும் பார்ப்பார் அகத்தைஎட்டிப் பாரோம் - பிச்சையெடுத்துச் சீவனஞ்செய்யும் பிராமணர் வீட்டை எட்டியும் பார்க்கமாட்டோம், எந்நாளும் காப்பார் வேளாளரே - (எம்மை) எக்காலமும்காப்பவர் வேளாளரேயாவர்.

இச்செய்யுளும் வருஞ்செய்யுளும் சோழன் தன்தேசத்தைவிட்டுப் போவென்று கடிந்துசொல்லக் கோபித்துப் போகும்போது தமது வீட்டாருடன்சொல்லாமலும், வஸ்திரம் வழிச்செலவுக்குவேண்டும் பணம் உணவுக்குவேண்டும் சாமக்கிரிகள் முதலானவைகளைக் கொண்டுபோகாமலும் வெறுங்கையுடனே போகிறவழியில், மிகுந்த பசியாயிருந்தமையால் ஒருசெட்டி கடையில்போய் எனக்குக்கொஞ்சம் அவல்கொடுமென்றார். அவன்கடை போணியாவதற்கு முன்கொடேன் போஎன்றான். அப்புறம் கொஞ்சதூரம்போய் ஓர்வாணியன் எள்ளாடுவது கண்டு கொஞ்சம் பிண்ணாக்குக் கொடுவென்றார். அவனும் கொடுக்கவில்லை, அப்பால் ஒருபிராமணன் வீட்டைக்கண்டு தாகத்திற்குக் கொஞ்சம்தண்ணீர் தரவேண்டுமென்றார். அவனும் தண்ணீர்கொடேன் என்றான். பிறகுஇவர் பசியும் தாகமும் சகிக்கமுடியாமல் மிகவும்இளைத்து ஒரு மரநிழலில் படுத்திருந்தார், அங்கே ஏர்உழுகிற வேளாளனொருவனுக்கு பழயதுவந்தது. அவன்அதைச்சாப்பிடப்போகும் தருணத்தில் இவர்போய் கையேந்த அவன் அந்தப்பழஞ்சோற்றை இவருக்கு இட்டு உபசரிக்க, இவர் உண்டு பசிதீர்ந்தபிறகு மனமகிழ்ந்துபாடியவை.

40. மேழிபிடிக்குங்கைவேல்வேந்தர்நோக்குங்கை
ஆழிதரித்தேயருளுங்கை—சூழ்வினையை
நீக்குங்கையென்றுநிலைக்குங்கைநீடூழி
காக்குங்கைகாராளர்கை.

**இ - ள்.** காராளர்கை - வேளாளர்கையானது, மேழிபிடிக்கும் கை - கலப்பைபிடித் துழும்கையாகும், வேல்வேந்தர்நோக்கும் கை - வேற்படையையேந்திய அரசர்களும் எதிர்பார்க்கும் கையாகும், ஆழிதரித்தே அருளும் கை-மோதிரம் தரித்தருளும்கையாகும், சூழ்வினையை நீக்கும் கை - (எம்மை) வளைந்த தீவினைப்பயனாகிய வறுமையை நீக்கும்கையாகும், என்றும் நிலைக்கும் கை-எந்நாளும் ஒரேநிலையில் நிலைத்திருக்கும் கையாகும், நீடூழிகாக்கும் கை - நீடூழிகால்ம்வரைக்கும் (உயிர்களைக்) காக்கும் கையாகும், எ - று.

உணவுக்குரிய தானியம் முதலியவற்றைப் பயிர்செய்து தருபவர் ஆதலால், வேல்வேந்தர் நோக்கும் கை என்றார்.

### வேளாளனாகிய செல்லனது மனைவியிட்ட கம்பஞ்சோற்றைப் புகழ்ந்து பாடியது.

41. கல்லங்காடுதனில்விளையாக்கடியநிலத்திற்றான்முளையா
அல்லங்கிருந்தகருங்கூந்தலணங்குக்கணங்குபோலாவாள்
செல்லன்றேவிமனைகடொறுந்தேடித்திரிந்துங்காணாத
நெல்லஞ்சோறேகம்பஞ்சோற்றினைநீசுமந்துதிரிவாயே.

இ - ள். கல்லங்காடுதனில் விளையாகடிய நிலத்தில்தான் முளையா - கல்நிலத்தில் விளையாததும் வலியநிலத்தில் முளையாததுமாகிய, அல் அங்கு இருந்த கருகூந்தல் - இருள்தங்கியிருந்த கரியகூந்தலையுடைய, அணங்குக்கு-தெய்வப் பெண்ணுக்கு, அணங்குபோல்ஆவாள் - தெய்வப் பெண்போல்பவளாகிய, செல்லன்தேவி-செல்லன் மனைவியானவள், மனைகள்தொறும் தேடி திரிந்தும்-வீடுகள்தோறும் தேடியலைந்தும், காணாத - காணப்படாத, நெல்லஞ்சோறே-நெற்சோறே, கம்பஞ்சோற்றினை நீசுமந்து திரிவாய் - கம்பஞ் சோற்றினைநீ தாங்கித்திரியக்கடவை, எ - று.

இவரைக்கண்டளவில் இவருக்குத் தன்வீட்டிலிருந்த கம்பஞ்சோற்றையிட நாணி, அயலிலிருக்கிற சிலவீடுகளிற்போய் நெல்லஞ்சோற்றைக் கேட்டுக்கிடையாமையால் மீண்டுவந்து கம்பஞ்சோற்றையே படைக்க, நெற்சோற்றினும் அது சுவையுள்ளதாய் இருந்ததைப்பற்றி இவ்வாறுகூறினர். விளையாமுளையா காணாத நெல்எனக்கூட்டுக.

அப்பால் போகும்போது ஓர்ஊரில் பெண்ணரசியாயிருக்கும் வேலியென்பவள் ஒருமண்சுவர் கட்டுவிக்க எத்தனித்து, இந்தச் சுவர்கட்டிமுடித்தவனுக்குக் குறுணிநெல் கொடுப்பேனென்று பிரசித்தம்பண்ணியிருந்தாள், அங்குத்தினம் ஒருவர்வந்து சுவர் எழுப்பித் திரும்பும்போது அது ஒரு பிரமராட்சசால் தள்ளப்பட்டுக் கூலிபெறாமல்போவது வழக்கம். இதனையறியாத கம்பர் சுவர்எழுப்பிக் கூலிவாங்கித்திரும்பி ஓரடி யெடுத்துவைக்கையில் சுவர்விழுகிற குறிப்பையறிந்து இப்பாடலைப்பாட, அந்தப் பிரமராட்சசு இவர் மகாபண்டிதர்என்று உணர்ந்து விலகிப்போகச் சுவர்விழாமல் நிற்பதைக் குறித்தது.

42. மற்கொண்டதிண்புயத்தான்மாநகர்விட்டிங்குவந்தேன்
சொற்கொண்டபாவின்சுவையறிவாரீங்கிலையே
விற்கொண்டவாணுதலாள்வேலிதருங்கூலி
நெற்கொண்டுபோமளவுநில்லாய்நெடுஞ்சுவரே.

இ - ள். மல்கொண்ட திண்புயத்தான் - மற்போரைக் கொண்டதிடமாகிய புயங்களையுடையவனாகிய சோழனது, மாநகர்விட்டு இங்குவந்தேன் - பெரியபட்டணத்தைவிட்டு இவ்விடம்வந்தேன், ஈங்கு-இவ்விடத்தில், சொல்கொ

ண்ட பாவின்சுவை - சொற்களை உறுப்பாகக் கொண்டபாடல்களின் ரசத்தை, அறிவார் இல்லையே - அறிவோர் இல்லையே, நெடுசுவரே - நீண்டசுவரே, வில் கொண்டவாள் நுதலாள் வேலிதரும் - வில்லின் உருவத்தைக்கொண்ட ஒளி பொருந்திய நெற்றியையுடையவளாகிய வேலியென்பவள் கொடுக்கின்ற, கூலி நெல் கொண்டுபோமளவும்-கூலிநெல்லைக் கொண்டு போகுமளவும், நில்லாய் - (விழாமல்) நிற்கக்கடவை, எ - று.

சேரன்சால்வையைக் கம்பர் போர்த்துக்கொண் டிருந்ததினுல், அவ்வரசன் மனைவி தன்கணவனெனக்கருதிக்கூடப்படுத் துக்கொண்டிருந்ததை யறிந்தபின் கம்பர் பாடியது.

43\. தேரையார்செவ்விளநீருண்ணப்பழிசுமப்ப
நாரியார்தாமறிவார்நாமவரைநத்தாமை
கோரைவாய்ப்பொன்சொரியுங்கொல்லிமலைநன்னாடா
ஊரைவாய்மூடவுலைமூடிதானிலையே.

இ - ள். தேரையார் - தேரைகள், செவ்விளநீர் உண்ணப்பழிசுமப்பர் - செவ்விளநீரை உண்ணுமலே பழியைச்சுமக்கும், நாரியர்தாம் - அரசன்மனைவி யர்தாம், அவரைநத்தாமை - நாம் அவரை விரும்பாமையை, அறிவார் - அறிவர், கோரைவாய் பொன்சொரியும் - கோரையி னிடங்களிலெல்லாம் அருவிகள் பொன்னைப்பொழிகின்ற, கொல்லிமலைநன்னாடா - கொல்லிமலையுள்ள நல்லநா ட்டை யுடையானே, ஊரைவாய்மூட - ஊராரை வாய்மூடுதற்கு, உலைமூடி தான் இல்லையே - உலைமூடி யில்லையே, எ - று.

இளநீரை உண்ணுமலே பழியடைந்த தேரைபோல அரசன்மனைவியை விரும்பாமலே பழிசுமந்தேனென இரங்கி இவ்வாறுகூறினர்.

சோழன்மகளை அம்பிகாபதி இச்சித்ததாகச் சந்தேகித்து, சந்தேக நிவர் த்தியின் பொருட்டு ஒரு விருந்துசெய்து அம்பிகாபதியுடன் மற்றுஞ் சிலரை வரவழைத்து, அவர்களுக்குத் தன் மகளையேபரிமாறச் சொன்னபோது, அவள் பதார்த்தவட்டிலைச்சுமந்து வர க்கண்ட இவன் மோகமிகுதியால், இட்டடிநோவ வெ டுத்தடி கொப்புளிக்க - வட்டில்சுமந்து மருங் கசைய,, என்று அரைப்பாட்டுப் பாடின தைக்கண்ட கம்பர் தன் மகனுக்கு அபாயம் வருமென்றஞ்சி, சரசு வதியைத் தியானம்பண்ண, சரசுவதி ஒருகிழவியுருவங் கொண்டு தெருவில் கோ ட்டிக்கிழங்குவிற்பவள்

போல்வர, அதைப்
பொருத்தி மற்ற அ
ரைப்பாட்டுப்
பாடியது.

44. இட்டடிநோவவெடுத்தடிகொப்புளிக்க
வட்டில்சுமந்துமருங்கசையக்—கொட்டிக்
கிழங்கோகிழங்கென்றுகூறுவாணாவில்
வழங்கோசைவையம்பெறும்.

இ - ள். இட்ட அடிநோவ - (நிலத்தில்) வைத்த அடிநோவவும், எடுத்த அடிகொப்புளிக்க-(நிலத்தில்வைத்து) எடுத்த அடிகொப்புளிக்கவும், வட்டில்சுமந்து மருங்குஅசைய-வட்டிலேச்சுமந்து இடையசையவும், கொட்டிக்கிழங்கோகிழங்குஎன்று கூறுவாள் நாவில்வழங்கு ஓசைவையம்பெறும் - கொட்டிக்கிழங்கோ கிழங்குஎன்று கூவுவாள் நாவிலுண்டாகும் குரல் உலகமுழுதும் விலைமதிக்கப் பெறும், எ - று.

அரசன் தன்மகளை அம்பிகாபதி இச்சித்தானெனச் சந்தேகித்து சிற்
றின்பமாகப் பாடாமல் நூறுகவி சுவாமி விஷயமாகப் பாடி
னால் தண்டியாமல் விட்டுவிடுகிறேன் என்று சொல்லி
னன். அம்பிகாபதி அவ்வாறே பாடிக்கொண்டு வரு
ம்போது அரசன்புத்திரி மறைவாகவிருந்து எ
ண்ணிக்கொண்டுவந்து-கூகூ-பாடல் பாடி
னவுடன், காப்புச்செய்யுளுடன் நூ
றுஎன்று நினைத்து எட்டிப்பார்
த்தபோது பாடியது.

45. சற்றேபருத்ததனமேகுலுங்கத்தரளவடந்
துற்றேயசையக்குழையூசலாடத்துவர்கொள்செவ்வாய்
நற்றேனொழுகநடனசிங்காரநடையழகின்
பொற்றேரிருக்கத்தலையலங்காரம்புறப்பட்டதே.

இ - ள் சற்றே பருத்த தனமேகுலுங்க - சற்றுப்பெருத்த தனங்கள் குலுங்கவும், தரளவடம் துற்றேஅசைய - முத்துமாலைகள் நெருங்கிஅசையவும், குழைஊசல்ஆட - குண்டலங்கள் ஊசலாடவும், துவர்கொள்செவ்வாய் - பவளத்தின் தன்மையைக்கொண்ட செவந்தவாயின்கண், நல்தேன்ஒழுக - நல்லதேனொழுகவும், நடநசிங்காரநடை அழகின் பொன்தேர் இருக்க - நடனசிங்காரநடை யழகினையுடையபொற்றேர் உள்ளிருக்க, தலைஅலங்காரம் புறப்பட்டது - சிரத்தினழகு வெளிபட்டது, எ - று.

பொற்றேரென்றது சிரம்பப்பிரதேசத்தை. தலைஅலங்காரம்என்றது, [illegible]ச்சாத்தினது அழகை.

### அம்பிகாபதிக்கு ராஜதண்டனை நேர்ந்தபோது அவன்வருந்திப் பாடியவை.

46 வீரமுண்டோமதன் கையம்பினுல்வெந்துவீழுகைக்கு
நேரமுண்டோவஞ்சிநேர்பட்டகாலையில்நெஞ்சைவிடப்
பேரமுண்டோசொலவொண்ணுதகாமப்பெருநெருப்புக்
கீரமுண்டோவையனேயென்னபாவமினிச்சொல்வதே.

இ - ள். மதன்கை அம்பினுல் வெந்துவீழுகைக்கு வீரம்உண்டோ - மன்மதன்கைப் பாணத்தினுல் வெந்து விழுதலில் ஒருவீரத தன்மையுமுண்டோ, வஞ்சிநேர்பட்ட காலையில் - கொடிபோல்வாள் எதிர்ந்தகாலத்தில், நேரம்உண்டோ - சமயம்பார்த்தலுமுண்டோ, நெஞ்சைவிட பேரம்உண்டோ - மனத்தைக் கொடுப்பதைவிட வேறுவிவகாரமுமுண்டோ, சொல்லவொண்ணுத - சொல்லக்கூடாத, காமம்பெரு நெருப்புக்கு - காமமாகிய பெரியநெருப்புக்கு, ஈரம்உண்டோ - நனைவுண்டோ, ஐயனே --, என்னபாவம் இனிச்சொல்வது - இனி இதைப்பற்றிச் சொல்வது என்னகொடுமை, எ - று.

### அம்பிகாபதி அரசன்மகளைப் புகழ்ந்து பாடியது.

47. உருகியுடலகருகியுள்ளீரல்பற்றி
எரிவதவியாதென்செய்கேன் — வரியரவ
நஞ்சிலேதோய்ந்தநளினவிழிப்பெண்பெருமாள்
நெஞ்சிலேயிட்டநெருப்பு.

இ - ள். வரி அரவநஞ்சிலேதோய்ந்த - நீண்டபாம்பின் விஷத்தில்தோய்ந்த, நளினம் - தாமரை மலர்போன்ற, விழி - கண்களையுடைய, பெண்பெருமாள் - மங்கையாககரசி, நெஞ்சிலே இட்டநெருப்பு - என்மார்பில மூட்டிவிட்ட நெருப்பானது, உருகி - மனமுருகி, உடலகருகி - உடம்புக்கரிந்து, உள்ஈரல் பற்றி எரிவது - நெஞ்சில்உள்ள ஈரல் மூண்டெரிவது, அவியாது - ஆருது, என்செய்வேன் - நான் என்னசெய்வேன், எ - று.

### அம்பிகாபதி அரசன்மகளைப்புகழ்ந்து பாடியது.

48. மைவடிவக்குழலியர்தம்வதனத்தைநிகரொவ்வாமதியேமானே
செய்வடிவைச்சிற்றிடையைத்திருநகையைவேய்த்தோளைத்தெய்வமாக
இவ்வடிவைப்படைத்தவடிவெவ்வடிவோவாயானறியேனுண்மையாகக்
கைப்படியத்திருமகளைப்படைத்திவளைப்படைத்தனனற்கமலத்தோனே

இ - ள். மைவடிவம் - மேகத்தினுருவமாகிய, குழலியர்தம் - கூந்தலையுடைய இம்மாதரது, வதனத்தை நிகர்ஒவ்வா - முகத்தையொவ்வாத, மதியே - சந்திரனே, மானே - பெண்மானே, செய்வடிவை - செய்யப்பட்ட உருவத்தை, சிற்றிடையை - நுட்பமான இடையையும், திருநகையை - அழகியபற்

ளையும், வேய்தோளை - மூங்கில்போலும் தோள்களையும், தெய்வமாக - தெய்வீகமாக, இவ்வடிவை படைத்தவடிவு - இந்த அழகைப்படைத்த உருவம், எவ்வடிவோ - எந்தஉருவமோ, யான் அறியேன் - நானறிந்திலேன், உண்மையாக - யதார்த்தமாக, நல் கமலத்தோன் - அழகியதாமரையி லிருப்பவனாகிய பிரமன், கய்படிய - கைபடியும்பொருட்டு, திருமகளைப்படைத்து - திருமகளைச்சிருஷ்டித்து, இவளைப் படைத்தனன் - (பிறகு) இவளைபடைத்தனன்—,

அரசன் அதைக்கண்டு ஒட்டக்கூத்தனுக்குச் சொல்லியது.

49. கண்டீரோகாணம்பிகாபதிசெய்யும்பிழையைக்
கண்டீரோநம்மீதிற்கள்ளமில்லை—உண்டோகாண்
ஆற்றாதகோபமடங்கவிவனையொட்டக்
கூத்தாவென்செய்திடலாங்கூறு.

இ - ள். ஒட்டக்கூத்தா - ஒட்டக்கூத்தனே, அம்பிகாபதி செய்யும்பிழையைகண்டீரோ—, நம்மீது கள்ளமில்லை - நம்மிடத்தில் வஞ்சனையில்லை, உண்டோ - இருக்கிறதோ, ஆற்றாதகோபம் அடங்க - சகிக்கவொண்ணாத கோபம் தணியும்படி, இவனை என்செய்திடலாம் - இவனை என்னதண்டனை செய்யலாம், கூறு - சொல்வாய், எ - று.

அதற்கு ஒட்டக்கூத்தன் சொல்லியது.

50. பனிப்பகையோன்மாமரபின்பார்த்திபனேசோழா
உனக்கியான்சொல்லுவதொன்றுண்டோ—கனத்த
பிழைசெய்தானன்னைக்குப்பின்பார்க்கவேண்டாம்
கழுவினிலேயேற்றிவிடல்காண்.

இ - ள். பனிப்பகையோன் - சூரியனது, மாமரபில் - பெரிய வமிசத்தில் அவதரித்த, பார்த்திபனே - அரசனே, சோழா - சோழனே, உனக்கு இனி யான் சொல்லுவது ஒன்றுஉண்டோ—, அன்னைக்கு - நம்புதல்விக்கு, கனத்த பிழைசெய்தான் - பெரியகுற்றத்தைச் செய்தான், பின்பார்க்கவேண்டாம்-இனி தாட்சணியம் பார்க்கவேண்டுவதில்லை, கழுவினிலே ஏற்றிவிடல் - (இவனை) கழுவிலேற்றுக, எ - று.

அம்பிகாபதியை அரசன் யானையின்காலில் இடறச்சொன்ன
போது அம்பிகாபதி பாடியது.

51. வெங்கண்சிவக்குவெடிவான்முறுக்கிவெகுண்டெழுந்தென்
அங்கம்பிளக்கவருங்களிறேயன்றிரணியனைப்
பங்கம்படவுரங்கீண்டேயுதிரம்பருகுநர
சிங்கமிருக்குதுகாண்கெடுவாயென்றன்சிந்தையிலே.

**இ - ள்.** வெம்கண் சிவந்து - கொடியகண்கள் சிவந்து, வெடிவால் முறுக்கி - வெடித்தவாலைமுறுக்கி, வெகுண்டெழுந்து - கோவித்தெழுந்து, என் அங்கம்பிளக்கவரும் - என் உடம்பைப் பிளக்கவருகின்ற, களிறே - யானையே, அன்று - அந்நாளில், இரணியனை - இரணிய கசிபனை, பங்கம்பட உரம்கீண்டு - (அவன்) பங்கமடைய (அவனது) மார்பைக்கிழித்து, உதிரம்பருகும் - (அவனது) ரத்தத்தைக்குடித்த, நரசிங்கம் - நரசிங்கமானது, என்றன்சிந்தையிலே இருக்குது - என்மனத்தின்கண் இருக்கின்றது, கெடுவாய் - (நீஎன்மீது வருவையாயின்) அழிவாய், எ - று.

### கம்பர்சொல்லியது.

52. இந்நாளிதுவிளையுமென்றெழுத்துத்தானிருக்க
என்னாலேயாவதொன்றுமில்லையே—உன்னாலே
வந்ததுதானப்பாமகனே தவிர்ப்பவராரார்
முந்தையினீசெய்தவினையே.

**இ - ள்.** அப்பாமகனே - , இந்நாள் - இந்தக்காலத்தில், இதுவிளையும் - இந்தத்துன்பம் உண்டாகும், என்றஎழுத்துஇருக்க - என்றபிரமனெழுத்திருக்க, என்னாலேஆவது ஒன்றும்இல்லையே - என்னாலே உனக்குச் செய்யத்தகுவது ஒன்றுமில்லையே, உன்னாலேவந்ததுதான் - இவ்வினை உன்னாலேயேவந்தது, முந்தையில் - முற்பிறப்பில், நீசெய்தவினை - நீசெய்த வினைப்பயனை, தவிர்ப்பவர் ஆர் - நீக்குவோர்யாவர், எ - று.

### அதற்கு அம்பிகாபதி சொல்லியது.

53. இந்நாளிதுவிளையுமென்றெழுத்துத்தானிருக்க
என்னாலேயாவதொன்றுமில்லையே—என்னாலே
வந்ததுகாணையாவருவிதியையார்தடுப்பார்
எந்தைமகதேவர்செயலே.

**இ - ள்.** ஐயா - தந்தையே, இந்நாள் இதுவிளையும் என்றஎழுத்துஇருக்க - இக்காலத்து இதுஉண்டாகும்என்று பிரமனெழுதியஎழுத்து இருக்க, என்னாலேஆவது ஒன்றுமில்லையே - என்னாலே அதனைத் தடுக்கக்கூடியசெயல் ஒன்றுமில்லை, என்னாலேவந்தது - என்னாலே உண்டானதாகி, வரும்விதியை - வருகிற ஊழின்பயனை, யார்தடுப்பார் - தடுக்கவல்லவர்யாவர், (இவையாவும்) எந்தைமகதேவர் செயலே - எமது தந்தையாகிய மஹாதேவனது செயலேயாகும், எ - று.

### யானை அம்பிகாபதியை வலம்வந்து தொழுதுசெல்ல, அரசன் அவனை வெட்டியபோது கம்பர் பாடியது.

54. மட்டுப்படாக்கொங்கைமானார்கலவிமயக்கத்திலே
கட்டுப்பட்டாயென்னகாதல்பெற்றாய்மதன்கையம்பினால்

பட்டுப்பட்டாயினுந்தேறுவையேயென்றுபார்த்திருந்தேன்
வெட்டுப்பட்டாய்மகனேதலைநாளின்விதிப்படியே.

இ - ள். மகனே - புதல்வனே, மட்டுப்படா - அளவுபடாத, கொங்கை - தனங்களையுடைய, மாதரா - மாதரது, கலவிமயக்கத்திலே - புணர்ச்சி மயக்கத்தில், கட்டுப்பட்டாய் - பிணிக்கப்பட்டாய், என்னகாதல் பெற்றாய் - என்ன ஆசையை யடைந்தாய், மதன்கை அம்பினால் - மன்மதனுடைய கைப்பாணத்தால், பட்டுப்பட்டு ஆயினும் - வருந்திவருந்தியாயினும், தேறுவையே என்று பார்த்துஇருந்தேன் - தெளிவாயென்று நோக்கியிருந்தேன், தலைநாளின்விதிப்படியே - முன்னாளின் விதிப்பிரகாரமே, வெட்டுப்பட்டாய் - வெட்டுப்பட்டனை, எ - று.

அம்பிகாபதியும் கம்பரும்பாடிய கண்டசுத்தி.
அதாவது ஒருவர் சமிக்கைகொடுக்க,

அச்செய்தியைத் தாம்கண்டதாகப் பாட்டிலமைத்துப் பாடுவது.

55. கரைக்குவடக்கிருக்குங்காளிகாளம்மைக்
கரைத்துவழிசாந்தைத்தொட்டபேய்—உரைத்தும
மறைக்கவறியாதவன்பேயின்கையைக்
குறைக்குமாங்கூன்கத்திகொண்டு.

இ - ள். கரைக்கு வடக்குஇருக்கும், காளிகாளம்மைக்கு அரைத்து - காளியாகிய காளிகாளம்மையின்பொருட்டு அரைத்து, வழிசாந்தைதொட்ட - வழிந்த சந்தனத்தைத்தீண்டி, அப்பேய் உரைத்தும - அந்தப்பேய் உரைத்தும், மறைக்க அறியாத - ஒளிக்கஅறியாத, வன்பேயின்கையை - வலியபேயின்கையை, கூன் கத்திகொண்டு குறைக்கும - வளைவாகிய கத்தியைக்கொண்டு வெட்டும், எ - று.

சேரன்ஒருநாளிரவில் நகர்சோதனைவருமப்போது காளிகோயிலில ஒருவன் சந்தனம்அரைத்து வழிவதைககண்ட ஒருபேய் அதனைத்தீண்ட, அரைப்பவன் கத்தியைக்கொண்டு வெட்டக்கண்டு, அதனைக கம்பரைக்கொண்டு கண்டசுத்தியாகப் பாடுவிக்க வேண்டுமென்றெண்ணி, அவர் வீட்டுக்கதவை அப்போதே போய்த் தட்டினசத்ததை நடையில் படுத்திருந்த அம்பிகாபதி கேட்டெழுந்து தன்தந்தையாகிய கம்பரை அப்பேய்என்றழைதது முதலிரண்டடியையும் பாட, கம்பர்மற்ற இரண்டடியையும் - சொல்லிமுடிக்க, அரசன்கேட்டுக் களித்துச் சென்றனன்.

கம்பர் வேளாளரைப் புகழ்ந்து பாடியது.

56. கார்ப்பிடியனிகர்காரர்ள்ர்தம்மக்கட்டலுடுத்த
தாலக்குலமங்கைபெற்றதன்றசதகாலமுமால்
கோலத்திருமுகத்தாலேமுகன்தனன்கூட்டிலே
ஆலக்கரம்படையாளன்றலைமீதுசுமந்தனனே.

இ - ள். காலம் புயல்நிகர் - (கொடையினால்) கார்கால மேகம்போன்ற, காராளர் தம்மை - வேளாளரை, கடல்உடுத்த - கடலாகிய ஆடையையுடுத்த, குலம் - உயர்ச்சியுள்ள, தாலம்மங்கை - நிலமகள், பெற்றதனால் - பெற்றமையால், தலைக்காலத்து - முற்காலத்தில், மால்-திருமால், கோலம் திருமுகத்தாலே முகந்தனன் - தனது அவதாரமாகிய வராகத்தின் அழகிய முகத்தைக்கொண்டு குத்தியெடுத்தான், கூடலிலே - மதுரையிலுள்ள, சூலக்கரப்படையான்-கையில் சூலாயுதத்தையுடைய சிவபெருமான், தலைமீது சுமந்தனன் - தலைமேற்சுமந்தான், எ - று.

திருமால் கோலத்திருமுகத்தாலே முகந்தனனென்றது இரணியாக்ஷன் கவர்ந்துபோன நிலமகளைப் பாதாளத்தினின்றும் கொம்பினால் குத்தியெடுத்த வராகாவதாரத்தைக் குறித்தது. கூடலிலே சூலக்கரப்படையான் றலைமீது சுமந்தனனே என்றது மதுரையில் வைகைநதிப் பெருக்கைத்தடுக்கும்போது செம்மனச் செல்வியென்னும் பிட்டுவாணிச்சியின் கூலியாளாய்வந்து மண்சுமந்துபாண்டியனால் பிரம்படிபட்ட சரித்திரத்தைக்குறித்தது.

கம்பரால் பாடல்பெற விரும்பிய ஒரு கைக்கோளன் மனைவி தன்புருஷனை ஒளித்துவைத்துக் கம்பரைத் தன்னிடத்து வரும்படிசெய்தனள். கம்பர்வீட்டில் வந்தவுடன் அந்தக் கைக்கோளன் ஒரு குறுந்தடியை கைக்கொண்டு கம்பரை அடிக்க வரும்போது அவர் பாடியது.

57\. மைக்கிணையானவிழிக்கணைகொண்டு மருட்டியிருட்டறையில்
பொய்க்களவாகப் புகுந்ததுமுண்டு புணர்ந்ததுமில்லையடா
கய்க்கிசைவானகுறுந்தடிகொண்டு கழுத்தைநெரிக்கவரும்
கய்க்களவாவென்றங்கையடா நின்றாரமடாவிட்டடா.

இ - ள். மய்க்கு இணையான - அஞ்சனத்துக்கு நிகரான, விழிக்கணைகொண்டு - கண்களாகிய பாணங்களைக்கொண்டு, மருட்டி (என்மனம்) மருளச்செய்ததனால், பொய்க்களவாக - பொய்யாகிய களவுப்புணர்ச்சிக்காக, இருட்டுஅறையில் - இருளாகியவீட்டில், புகுந்ததும் உண்டு - நுழைந்ததும் உண்டு, புணர்ந்ததும் இல்லையடா - புணர்ந்ததும் இல்லையடா, கய்க்கு இசைவான - கைக்கிசைவாகிய, குறுந்தடிகொண்டு—, கழுத்தை நெரிக்கவரும் - கழுத்தைமுறிக்க வருகிற, கய்க்களவா-கைக்கோளனே, (இவள்) என்தங்கையடா—, நின்தாரமடா - உன்மனைவியடா, விட்டடா - (என்னை) விட்டடா.

வலையன்வீட்டிலும் இவ்வாறே அகப்பட்டுக் கொண்ட போது பாடியது.

58\. இருளையிருள்விழுங்கியெவ்விடமுந்தெரிகின்ற
திருவிழியுங்கொள்வழியேசெல்ல—வருமல்லில்

வந்ததுண்டுசேர்ந்ததில்லைமாலையல்லைரம்மே
அந்தமனையுந்தன்மனையே.

இ - ள். இருளை இருள் விழுங்கி-மிகஇருண்டு, எவ்விடமும்தோன்றாது-எவ்விடமும் தோன்றாமல், இருவிழியும் - இரண்டுகண்களும், கோல்வழியே செல்ல - கைக்கோலின் வழியாகவேபோக, வரும்அல்லில்-வருகின்ற இரவில், வந்தது உண்டு - நான்வந்ததுண்டு, மாலை அல்லாமல் - ஆசையேயன்றி, சேர்ந்தது இல்லை - புணர்ந்ததில்லை, அந்த அம்மனை - அந்தத்தாய், உன்தன்மனையே-உன்மனைவியேயாவாள், எ - று.

கம்பர் தன் மகனாகிய அம்பிகாபதியைச் சோழன் கொன்றனனென்னும் பகையால், யானை தூரத்திவந்ததற்கஞ்சித் தன் வீட்டில் நுழைந்த அவ்வரசன் புதல்வனைக் கம்பர் எழுத்தாணியாற் குத்திக்கொல்ல, அரசன் அவர்மீது அம்பெய்த போது பாடியது.

59. வில்லம்புசொல்லம்புமேதினியில்ரெண்டுண்டு
வில்லம்பிற்சொல்லம்பேமேலதிகம் —வில்லம்பு
பட்டதடாவென்மார்பிற்பார்வேந்தாநின்குலத்தைச்
சுட்டதடாவென்வாயிற்சொல்.

இ - ள். பார்வேந்தா - சோழனே, மேதினியில் - உலகத்தில், வில்அம்பு சொல்அம்பு ரெண்டுஉண்டு - வில்லம்புஞ் சொல்லம்புமாகிய இரண்டுண்டு, (அவற்றுள்) வில்லம்பின் - வில்லம்பினும், சொல்லம்பே - சொல்லாகிய அம்பே, மேல்அதிகம - மிகவும் சிறந்தது, (என்னெனின்) அடா - ஏடா, வில்அம்பு - நீ உன் வில்லிற்றொடுத்த அம்பு, என்மார்பில்பட்டது - என் நெஞ்சிற்பாய்ந்தது, என்வாயில்சொல்-என்வாயினின்றும் வெளிப்பட்டசொல்லாகிய அம்பு, அடா - ஏடா, நின்குலத்தைசுட்டது - உன்வமிசத்தை எரித்து நீறாக்கிவிட்டது, எ - று.

கம்பன்வீட்டு வெள்ளாட்டி பாடியது.

60. நெற்படிவிளைகழனிபுடைசூழ்நென்மலிவாழ்தச்சன்
கற்படிபணைதோளான்பெயரோகங்கணகணகணவன்
விற்படிவாணுதலாண்மனைவிமின்மினிமினிமினிமினிமி
சொற்படிவேலைசெயும்மவளோதுந்துமிதுரிதுரிதி.

இ - ள். நெற்படி விளைகழனி - நெல்லானது தரந்தரமாக விளைகின்றவயல்கள், புடைசூழ் - பக்கங்களில் சூழ்ந்திருக்கின்ற, நென்மலி - நென்மலியென்னும் ஊரில், வாழ்-வாழ்கின்ற, தச்சன்—, கல்படிபணைதோளான் - மலைபோலப் பருத்தபுயங்களையுடையவன், பெயரோ - (அவனது) பெயரோ, கங்கணகணகணவன்—, (அவனுக்கு) வில்படிவாள் நுதலாள்மனைவி, வில்லைப்போல

ஒளிபொருந்திய நெற்றியை யுடையவளாகிய மனைவி, மின்மினிமினிமினிமி— (அவளுக்கு) சொற்படிவேலைசெயும் அவளோ - சொல்லின்படி வேலைசெய்பவ ளோ, துந்துமிதுரிதுரிதி—, எ - று.

தென்மலியூரில்வாழ்கின்ற தச்சன்பெயர் கங்கணகணகணவன், அவன்மனை விபெயர் மின்மினிமினிமினிமி, அவள் வேலைக்காரியின்பெயர் துந்துமிதுரிது ரிதி என்பது கருத்து.

**இச்செய்யுளும் அவ்வெள்ளாட்டி கம்பரிடத்தில் தன் கல்வித் திறத்தைக்காட்டவந்த சோமாசியென்னும் வித்வானை நோக்கிப்பாடியது.**

61. வட்டமதிபோலிருக்கும்வன்னிக்கொடிதாவும்
கொட்டுவார்கையினின்றுகூத்தாடும் - சுட்டால்
அரகராவென்றுமேயம்பலசோமாசி
ஒருநாள்விட்டேனீதுரை.

இ - ள். ஏ அம்பலசோமாசி - ஓய் அம்பல சோமாசிஎன்னும் வித்வானே' வட்டமதிபோல் இருக்கும்-வட்டவடிவமுள்ள சந்திரன்போலிருக்கும், வன்னி க்கொடிதாவும் - நெருப்புச்சிகை தாவிப்படரும், கொட்டுவார் கையில்நின்று கூத்தாடும் - அறைவோருடைய கைகளில்நின்று கூத்தாடும், சுட்டால் - சுட்டு நீறாக்கினால், அரஅராஎன்னும்—, அரகரா என்றுசொல்லி யணிதற்குரிய தா கும், ஈது - இப்பெயருள்ளது இன்னதென்று நீயாலோசித்துச் சொல்வதற்கு, ஒருநாள்விட்டேன் - ஒருநாள்முழுதும் அவகாசம்கொடுத்தேன், உரை-ஆலோ சித்துச் சொல்வாயாக, எ - று.

வரட்டியென்பது பொருள். இதனைச்சொல்ல வகையறியாது அப்புலவன் அவமானப் பட்டுப்போயினன் என்பர்.

**அரசன், காக்கை கழுகோட்டுங்கை என்றுசொல்ல, அதைச்சேர்த்துப் பாடியகண்டசுத்தி.**

62. கண்டாயோபார்வேந்தகானகத்துக்கள்ளியின்கீழ்
வெண்டாழைபூத்துவிளக்கெரியப்—பெண்டாலி
பூட்டுதற்குமுன்னபொருபுத்திரனைப்பெற்றெடுத்தாள்
காக்கைகழுகோட்டுங்கை.

இ - ள். பார்வேந்தா-பூமியையாளுகின்ற அரசனே, கண்டாயோ - பார்த் தாயோ, கானகத்து கள்ளியின்கீழ் - காட்டிலுள்ள கள்ளிப்புதலின்கீழ், வெள் தாழைபூத்து விளக்குஎரிய-வெண்டாழைபூத்து விளக்குப்போலெரிய, பெண்- பெண்ணானவள், தாலிபூட்டுதற்கு முன்னம் - மங்கலியம்தரிப்பதற்கு முன்பே, ஒருபுத்திரனை பெற்றெடுத்தாள் - (விபசரித்து) ஒருபுதல்வனை யீன்றெடுத்தாள்,

(அதைக்கண்ட அவள்முதியோர் அவளைக்கொலைசெய்து ஆற்றில் மிதக்கவிட்டார்கள் ஆதலால்) கை - அவளதுகை, காக்கைகழுகு ஓட்டும் - (அசைதலால் அது தன்னைக்கொத்தவரும்) காக்கையையும் கழுகையுமோட்டுகின்றது.

காட்டிற்கழுகோட்டும் என்றும்பாடம்.

திருவிடைமருதூர் தாசிகளைச் சிறப்பித்துப் பாடியது.

63. வாசமலர்மடந்தைபோல்வார்மருதவனத்
தீசனடியாரெழுபதின்மர்—நேசித்
திரவலர்மேனீட்டுவர்கையிவ்வுலகையாளும்
புரவலர்மேனீட்டுவர்பொற்றாள்.

இ - ள். வாசம் - மணமுள்ள, மலர் - தாமரை மலரில் வாழ்கின்ற, மடந்தைபோல்வார் - திருமகளை நிகர்ப்பவரும், மருதவனத்து ஈசன் அடியார்-மருதவனத்தீசனது அடியாரும்ஆகிய, எழுபதின்மர் - எழுபதின்மரும், இரவலர்மேல் - யாசகர்மீது, நேசித்து கைநீட்டுவர் - விரும்பிக்கையைநீட்டுவர், இவ்வுலகை ஆளும் புரவலர்மேல் - இந்தவுலகத்தை யாளுகின்ற அரசர்மீது, பொன்தாள்நீட்டுவர் - அழகியபாதங்களை நீட்டுவர், எ - று.

அச்சுதன் என்பவனது வாயிலில்முழங்கும் முரசைப்புகழ்ந்து பாடியது.

64. குடகர் குணகடலென்பர் குடகுக்
கிடகர்வடகடலென்பர்—வடகடலோர்
தென்கடலென்பர்திருந்துதாரச்சுதநின்
முன்கடைநின்றார்க்குமுரசு.

இ - ள். திருந்துதார் அச்சுத - திருத்தமாகிய பூமாலையையணிந்த அச்சுதனே, நின்முன்கடை - உன்தலைவாயிலில், நின்று ஆர்க்கும் - நிலைபெற்று முழக்குகின்ற, முரசு-பேரிகை யோசையை, குடகர் குணகடல் என்பர்-மேற்றிசையார் கீழ்கடலென்பர், குடகுக்கு இடகர்வடகடல்என்பர் - குடகுக்குத் தெற்கிலுள்ளார் வடகடலென்பர், வடகடலோர் தென்கடல்என்பர்-வடகடலோர் தென்கடலென்பார், எ - று.

அச்சுதன் தலைவாயிலைப் புகழ்ந்துபாடியது.

65. குறையுளாரெங்கிரார்கூர்வேலிராம
னிறையாறுதிங்களிருந்தான்—முறைமையால்
ஆலிக்குந்தார்மார்பாவச்சுதாவந்நாளில்
வாலிக்கிளையான்கடை.

இ - ள். ஆலிக்கும் தார்மார்பா - (தேனைத்) துளிக்கின்ற பூமாலையையணிந்த மார்பையுடையவனே, அச்சுதா - அச்சுதனே, அந்நாளில் - திரேதாயுகத்தில், முறைமையால்—ஊழினால், வாலிக்கு இளையான்கடை - வாலிக்குஇளையவனாகிய சுக்ரீவனதுவாயிலில், கூர்வேல் இராமன்இறை - கூர்மையாகிய வேற்படையையுடைய இராமபிரான், ஆறுதிங்கள் இருந்தான் - ஆறுமாதம்இருந்தான், (ஆதலால்) குறைஉளார்-குறையுள்ளவர், எங்குஇரார் - (அந்தக்குறை தீருமளவும்) எவ்விடத்துத்தான்இரார் (இருப்பர்), எ - று.

சுக்ரீவன் தலைவாயிலில் ஸ்ரீராமர் காத்திருந்ததுபோல உன்தலைவாயிலில் பல அரசரும் காத்திருக்கின்றனர் என்பது கருத்து.

### கம்பர் கற்றுச்சொல்லி பாடியது.

௬௬. மாவுறங்கினபுள்ளுறங்கினவண்டுறங்கினதண்டலைக்
காவுறங்கினவெங்கண்மாளிருகண்ணுறங்கிலளையகோ
கோவுறங்குகடைத்தலைக்குலதீபவள்ளைகுதட்டிவாய்
ஆவுறங்குபுகாரசஞ்சலவஞ்சலென்னவடுக்குமே.

இ - ள். கோ - (திறைகொண்டுவந்த) அரசர், உறங்கு - (சமயம்வாய்க்காமையால்) உறங்குகின்ற, கடைத்தலை - தலைவாயிலையுடைய, குலதீப-குலவிளக்குப்போன்றவனே, ஆ-பசுக்கள், வாய் - வாயினால், வள்ளைகுதட்டி - வள்ளைக்கொடியை மென்றுகொண்டே, உறங்கு-உறங்குகின்ற, புகார்-காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள, அசஞ்சல - அசஞ்சலனே, மாஉறங்கின - மிருகங்கள் உறங்கின, புள்உறங்கின - பறவைகள்உறங்கின, வண்டுஉறங்கின - வண்டுகள் உறங்கின, தண்டலைகா உறங்கின-குளிர்ந்த இடத்தையுடைய சோலைகளுறங்கின, எங்கள்மான் - எங்கள்பெண்ணானவள், இருகண் உறங்கிலள்-இருகண் ணுறங்கினளில்லை, ஐய-ஐயனே, அஞ்சல் என்னஅடுக்கும் - நீ எம்மை அஞ்சற்கஎன்றுசொல்லத்தகும், எ - று.

அசஞ்சலனே, மிருகமுதலியவை உறங்குகின்ற இந்த இராக்காலத்திலும் என்மகள் உறங்குகின்றாளில்லை. ஆதலால் இவளை நீ அஞ்சலென்று சொல்லத்தகும் என்பதுகருத்து. இதனைக் கண்படைபெறாது கங்குலோதலைத் தாய் அறிவுறுத்துவதாகக் கொள்க.



சேரசோழ பாண்டியர்கள் ஏகம்ப வாணமுதலியார் வீட்டிற்குவந்து முதலியாரெங்கேயென, அவர்மனைவி கழனிக்குப் போயிருரென, அவர்கள் வேடிக்கையாக முடி நடப்போருரோ வென்றபோது ஷை முதலியார்மனைவி பாடியது.

1. சேனைதழையாக்கிச்செங்குருதிநீர்தேக்கி
ஆனைமிதித்தவடிச்சேற்றில்—மானபரன்
மாவேந்தர்வேந்தன்பறித்துநட்டானேகம்பன்
மூவேந்தர்தங்கண்முடி.

இ - ள். மானபரன் - பெருமையிற் சிறந்தோனும், மாவேந்தர்வேந்தன் - பேரரசனுமாகிய, ஏகம்பவாணன் - ஏகம்பன், சேனைதழைஆக்கி - சேனைகளை எருத்தழையாக்கி, செங்குருதிநீர்தேக்கி - செவந்த உதிரநீரைத் தேங்கவிட்டு, ஆனைமிதித்த அடிச்சேற்றில் - யானைமிதித்த அடிச்சேற்றின்கண், மூவேந்தர் தங்கள் முடிபறித்து - சேரசோழ பாண்டியர்களாகிய மூன்றரசர்கள் முடியைப் பறித்து, நட்டான் - (நாற்ருக) நட்டான், எ - று.

அரசர்கள் சொன்னதை ஏகம்பவாணமுதலியார் மனைவி கணவனுக்குச் சொல்ல, அவர்கோபித்துக்கொண்டு பூதத்தையனுப்பி, சேரனையும், சோழனையும் தன் சிறைச்சாலையி லடைத்துவிட்டுப் பாண்டியனிடத்திற்கனுப்ப, அவனிடத்தில் வேப்பமாலையிருப்பதனல் பூதம்அஞ்சித்திரும்ப, அப்போது ஏகம்பவாணர் அவ்வேப்பமாலையை உபாயமாய் வாங்கிவர நான்குபெண்களையனுப்ப, அந் நால்வரும் ரம்பைமுதலிய தேவதாசிகளைப்போல அரசன் சமுகத்தில் நடனஞ் செய்து அவனைப் பிரமிக்கப்பண்ணியபோது, அவன்முத்துமாலைமுதலிய அணிகளைப் பரிசாகக்கொடுக்கவர, அவர்கள் அவற்றை மறுத்து வேப்பமாலையைத் தருகவெனப் பாடியவை.

2. தென்னவாமீனவாசீவிலிமாருமதுரை
மன்னவாபாண்டிவளநாடா—முன்னம்
சுரும்புக்குத்தாரளித்ததுய்யதமிழ்நாடா
கரும்புக்குவேம்பிலேகண்.

இ - ள். தென்னவா - தென்னவனே, மீனவா - மீனக்கொடியை யுடையானே, சீவிலிமாரு-ஸ்ரீவில்லிபுததூரையுடைய அழகிய வில்லாளியாகிய பாண்டியனே, மதுரைமன்னவா - மதுரைக்கரசனே, பாண்டிவளநாடா - பாண்டிவளநாட்டை யுடையவனே, முன்னம்-முன்னளில், சுரும்புக்கு தார்அளித்த - வண்டுகளுக்கு மாலையைக்கொடுத்த, துய்யதமிழ்நாடா-பரிசுத்தமாகிய தமிழ்நாட்டை யுடையானே, கரும்புக்கு - கரும்புபோல் வானாகிய என்பெண்ணுக்கு, வேம்பிலேகண் - உன் வேப்பமாலையிலே திருஷ்டியுண்டு, எ - று.

3. மாப்பைந்தார்க்கல்லமுத்துவண்ணத்தார்க்கல்லவென்பெண்
வேப்பந்தார்க்காசைகொண்டுவிட்டாளே — பூப்பைந்தார்
சேர்ந்திருக்குநெல்வேலிச்சிவிலிமாறுதமிழை
ஆய்ந்திருக்கும்வீரமாறு.

இ - ள். பூ - மலர்கள்நிறைந்த, பைதார் சேர்ந்திருக்கும்-பசியசோலைகள் பொருந்தி யிருக்கின்ற, நெல்வேலி சிவிலிமாறு-திருநெல்வேலிக் கிறைவனாகிய சிவிலிமாறனே, தமிழை ஆய்ந்துஇருக்கும் வீரமாறு-தமிழை யாராய்ந்திருக்கிற வீரமாறனே, என்பெண் - என்மகள், மாபைதார்க்கு அல்ல - அழகாகிய பசிய பூமாலைக்கு விருப்பங்கொண்டாளல்லள், வண்ணம்-அழகாகிய, முத்து தார்க்கு அல்ல-முத்துமாலைக்கு விருப்பங்கொண்டாளல்லள்,வேப்பந்தார்க்கு ஆசைகொண்டுவிட்டாள்-(உனது) வேப்பமாலைக்கு விருப்பங்கொண்டுவிட்டாள், எ-று.

4. வேம்பாகிலுமினியசொல்லிக்குநீபுனைந்த
வேம்பாகிலுமுதவவேண்டாவோ — மீன்பாயும்
வேலையிலேவேலைவைத்தமீனவாநின்புயத்து
மாலையிலேமாலைவைத்தாண்மான்.

இ - ள். வேம்பாகிலும் இனியசொல்லிக்கு - வேகின்ற சர்க்கரைப்பாகி னும் இனிமையாகிய சொல்லையுடையாளுக்கு, நீபுனைந்த - நீதரித்த, வேம்பா கிலும் உதவவேண்டாவோ - வேப்பமாலையையாவது கொடுக்க வேண்டாமோ, மீன்பாயும்வேலையிலே - மீன்கள்தாவுகின்ற கடலின்மீது, வேலைவைத்த - வே லைப்பிரயோகித்த, மீனவா - பாண்டியனே, மான் - (என்) பெண்ணானவள், நின்புயத்து மாலையிலே - உன்தோளிலணிந்த வேப்பமாலையின்மீது, மாலை த்தாள் - விருப்பத்தைவைத்தாள், எ - று.

5. இலகுபுகழாறையேகம்பவாணன்
அலகைவரும்வருமென்றஞ்சி — உலகறிய
வானவர்கோன்சென்னிமிசைவண்கைவளையெறிந்த
மீனவர்கோன்கைவிடான்வேம்பு.

இ - ள். உலகுஅறிய - உலகத்தார் அறியும்படி, வானவர்கோன் சென்னி மிசை-தேவேந்திரனது சிரத்தின்மீது, வன்கை வளைஎறிந்த - (தன்) கொடை க்கையிலுள்ள வளையையேவின, மீனவர்கோன் - பாண்டியன், இலகுபுகழ்- விளங்குகின்ற கீர்த்தியையுடைய, ஆறை ஏகம்பவாணன் - ஆறை ஏகம்பவாண னது, அலகைவரும்வரும் என்றுஅஞ்சி - பூதம்வரும்வரும் என்றுபயந்து, (அ ன்றுணிந்து) கைவிடான்வேம்பு - வேப்பமாலையைக் கைவிடான், எ - று.

பரத்தையிற்பிரிந்துவந்த தன்நாயகனைநோக்கிப்
பாண்டியன்மனைவிகூறியது.

6. வேண்டியபோதின்பம்விளைக்குமடந்தையரைத்
தீண்டியகையாலென்னைத்தீண்டாதே---பாண்டியா
முல்லைக்கதிபாமுகம்பார்த்தகலநின்று
சொல்லக்கடவவெல்லாஞ்சொல்.

இ - ள். வேண்டியபோது-விரும்பியபோது, இன்பம்விளைக்கும்-சுகத்தை யுண்டாக்குகிற, மடந்தையரை - (பொது) மாதரை, தீண்டியகையால் - தொட்டகையால், என்னைதீண்டாதே - என்னைத்தொடாதே, பாண்டியா—, முல்லைக்கு அதிபா-முல்லைநகர்க்கு இறைவனே, அகலநின்று - தூரநின்று, முகம் பார்த்து - என்முகத்தைப்பார்த்து, சொல்லக்கடவ எல்லாம்சொல் - சொல்ல வேண்டியவற்றையெல்லாம் சொல்லக்கடவாய், எ - று.

இதுவுமது.

7. கலையான்முலைமூடிக்கண்வலைக்குள்ளாக்கும்
விலைமாதர்தாம்வரவிட்டாரோ—விலைமாதர்
கொங்கையிலேதோய்ந்தகுறைதீரத்துய்யசிவ
கங்கையிலேநீராடிவா.

இ - ள். கலையால்முலைமூடி - ஆடையால் தனங்களைமறைத்து, கண்வலைக்கு உள்ஆக்கும் - கண்களாகிய வலைக்குள்ளே அகப்படுத்துகிற, விலைமாதர் தாம்வரவிட்டாரோ - வேசையர்தாம் (உன்னைஇங்கு) வரவிட்டனரோ, விலை மாதர் - (அந்த) விலைமாதரது, கொங்கையிலே தோய்ந்த-தனதடத்தில்படிந்த, குறைதீர - பாவம்தீர, துய்ய - பரிசுத்தமாகிய, சிவகங்கையிலே நீராடிவா - சிவகங்கையில் மூழ்கி வருவாயாக, எ - று.

---

## ஒட்டக்கூத்தரும், புகழேந்திப்புலவரும்.

கைக்கோளர் ஈட்டியெழுபது என்னும் பிரபந்தத்தை
ஒட்டக்கூத்தர் பாடும்பொருட்டுத் தமது சிரங்களையே பரிசாகக்கொடுக்க,
அப்புலவர் அவர்களைப்பிழைப்பிக்கும்பொருட்டுச்
சிரச்சிங்காதனத்திலிருந்துபாடியது.

1. கலைவாணிநீயுலகிலிருப்பதுவுங்கல்வியுணர்கவிவல்லோரைத்
தலையாகக்காப்பதுவுமவர்நாவில்வாழ்வதுஞ்சத்தியமேயன்றோ
சிலைவாணனுவிருந்தாயிரம்புயங்கடுணிந்துமுயர்சீவனுற்றான்
தலையாவிகொடுத்திடுஞ்செங்குந்தருயிர்பெற்றிடநீதயைசெய்வாயே.

இ - ள். கலைவாணி - எல்லாக்கலைகளுக்கும் அதிதேவதையாகிய சரசுவதியே, நீயுலகில் இருப்பதுவும் - நீ உலகத்தில் வியாபித்திருப்பதும், கல்விஉணர்கவிவல்லோரை - வித்தையை யறிந்த புலவோர்களை, தலைஆக காப்பதுவும்- தலைமைபெறக்காப்பதுவும், அவர்நாவில் வாழ்வதும்-அவருடைய நாவினிடத்து வசிப்பதும், சத்தியமேஅன்றோ-சத்தியமேயல்லவோ, சிலைவாணன்நா இருந்து- வில்லையுடைய வாணாசுரனது நாவில் தங்கியிருந்ததனால், ஆயிரம் புயங்கள் துணிந்தும் - (அவனது) ஆயிரந்தோள்களும் அறுபட்டும், உயர் சீவன்உற்றான்- உயர்ந்த உயிரைப்பெற்றிருந்தான், (ஆதலால்) தலை ஆவிகொடுத்திடும்-(தமது) தலையையும் உயிரையும் தந்த, செங்குந்தர் - செங்குந்தரெல்லாரும், உயிர்பெற்றிட - உயிர்பெற்றெழும்வண்ணம், நீ தயைசெய்வாய் - நீ கருணை செய்யவேண்டும், எ - று.

ஒட்டக்கூத்தன் செங்குந்தரைப் புகழ்ந்து பாடியது.

2. நிலைதந்தாருலகினுக்கு மியாவருக்கு மானமதை நிலைக்கத்தந்தார், கலைதந்தார் வணிகருக்குச் சீவனஞ்செய் திடவென்றே கையிற்றந்தார், விலைதந்தார் தமிழினுக்குச் செங்குந்தரென்கவிக்கே விலையாகத்தம், தலைதந்தாரெனக்குமொட்டக் கூத்தனெனப் பெயரிலையுந்தாந்தந்தாரோ.

இ - ள். செங்குந்தர் - செங்குந்தர்கள், உலகினுக்குள்-உலகத்தில், நிலைதந்து ஆர்யாவருக்கும் - நிலைபெற்றிருக்கிற எல்லாச் சாதியார்க்கும், மானமது நிலைக்கத்தந்தார் - மானம் அழியாது நிலைபெறச்செய்தார்கள், ஆர் வணிகருக்கு- உலகில்நிறைந்த வியாபாரிகளுக்கு, சீவனம் செய்திடஎன்று - சீவனஞ் செய்தற் பொருட்டு, கலைதந்து - ஆடையையுண்டாக்கி, கையில்தந்தார் - (அவருடைய) கையில்கொடுத்தார்கள், தமிழினுக்கு - (வித்வான்கள்பாடிய) தமிழ்ப்பாடல்களுக்கு, விலைதந்தார் - (பெரும்பொருளை) பரிசிலாகக்கொடுத்தார்கள், என் கவிக்கு விலையாக - (இவர்மீது பாடப்பட்டஈட்டி யெழுபது என்னும் பிரபந்தமாகிய) என்பாடலுக்கு விலையாக, எனக்கும் தம்தலைதந்தார் - எனக்கும் தமது

தலையையும் கொடுத்தார்கள், ஒட்டக்கூத்தனென்னும் பெயரினையும் தாம்தந்தார் - ஒட்டக்கூத்தன் என்கிற பெயரையும் தாம்கொடுத்தார்கள், எ - று.

சோழராஜன் ஒருவித்வானுக்கு விருதுகொடுத்தபோது ஒட்டக்கூத்தன் பொறுமைகொண்டு பாடியது.

3. பத்துக்கொண்டன திக்கும்பதறிப்போயுலையப்
பைம்பொற்றாரகைசிந்தப்பகிரண்டத்திடைநீள்
மத்துக்கொண்டுமதிக்குந்திரையாழிநெடுமால்
வடிவாகிப்புவிகைக்கொண்டருண்மாநுபரநு
முத்துப்பந்தரினிற்குங்குருவேக்குஞ்சினவேல்
முருகற்கும்பொதியக்கோமுனிவற்குஞ்சடிலக்
கொத்தற்கும்பதுமக்கொந்தயனுக்குமலதிக்
கூழைத்தண்டமிழுக்கேன்கொடியுங்காளமுமே.

இ - ள். பத்துகொண்டன திக்கும் பதறி போய் உலைய - பத்தென்னும் தொகையைக்கொண்ட திசைகளும் பதறி நடுங்கவும், பைம்பொன் தாரகை சிந்த - பசும்பொன்னிறமுள்ள நக்ஷத்திரங்கள் உதிரவும், பகிரண்டந்துஇடை நீள் - பகிரண்டத்தினளவும் நீண்ட, மத்துக்கொண்டு - (மந்தரமலையாகிய) மத்தினால், மதிக்கும் - கடைந்த, திரை ஆழி - அலைகளோடுகூடிய பாற்கடலையுடைய, நெடுமால் - திருமாலின், வடிவு ஆகி - உருவங்கொண்டு, புவி-பூமிமுழுதும், கைக்கொண்டு - கைப்பற்றி, அருள் - ஆண்டருளுகின்ற, மாநுபரநு- மாநுபரணனே, முத்துப்பந்தரில் நிற்கும் குருவேக்கும் - முத்துப்பந்தலில் வசிக்கின்ற திருஞான சம்பந்தர்பாடிய பாடலுக்கும், சினம் வேல் முருகற்கும்-கோபத்தையுடைய வேலாயுதமேந்திய முருகர் பாடியபாடலுக்கும், பொதியம் கோமுனிவற்கும் - பொதியமலையில் வாழ்கின்ற முனிசிரேஷ்டராகிய அகத்தியர்பாடிய பாடலுக்கும், சடிலம்கொத்தற்கும் - சடைக்கற்றையையுடைய பரமசிவன் பாடியபாடலுக்கும், பதுமக்கொந்து அயனுக்கும் - தாமரைமலரை யாசநமாகவுடைய பிரமதேவன் பாடியபாடலுக்கும், அலது - அன்றி-இ-இந்த, கூழைதண் தமிழுக்கு-அற்பமாகிய தமிழ்ப்பாடலுக்கு, கொடியும் காளமும் என்-கொடியும் காளமும் (கொடுத்தல்) யாதுக்கு, எ - று.

கம்பைக்காவலன் என்னும் ஓர்பிரபுவின்மீது பாடியது.

4. மாங்குயிலால்வில்லிதன்னம்பினாற்கம்பவாரிதியால்
ஓங்கியபூமெல்லணையொன்றினாற்பனூர்மதியால்
தீங்குறுமேநல்லெழில்குன்றுமேகொம்புசீர்கெடுமே
காங்கெயனேசொல்லகளங்கனேகம்பைக்காவலனே.

இ - ள். மாகுயிலால் - மாமரத்திலுள்ள குயிலினாலும், வில்லி தன் அம்பினால் - மன்மதனது பாணத்தினாலும், கம்பம் வாரிதியால் - அசைதலுள்ள கடலினாலும், ஓங்கிய - உயர்ந்த, மெல் - மென்மையாகிய, பூஅணை ஒன்றினால்,

புஷ்பசயந மொன்றினாலும், உம்பர் ஊர்மதியால் - ஆகாயத்தில் தவழ்கின்ற சந்திரனாலும், கொம்பு - பூங்கொம்புபோல் வாளாகிய என் பெண்ணானவள், தீங்குஉறும் - தீமையையடைவாள், நல் எழில்குன்றும் - நல்ல அழகழிவாள், சீர்கெடும் - மேன்மையை யிழப்பாள், காங்கேயனே—, அகளங்கனே—, கம்பைக்காவலனே—, சொல்-சொல்வாயாக.

குயில் முதலியவற்றால் என்பெண் சீரழிவதற்குமுன் கம்பைக் காவலனே நீவந்து இவளைக் காக்கவேண்டுமென்பது கருத்து. மூன்றாமடியில் ஏகாரமூன்றும் ஈற்றசை.

காகங்கரையப் பயந்த ஒருபெண் ஒருசோரநாயகனை விரும்பி, இராக்காலத்தில் நீர்ப்பெருக்கில் மிதக்கின்ற பிணத்தையே தெப்பமாகக் கொண்டுசென்று அவனைக்கூடி யநுபவித்து மீண்டுவரும்போது, முதலையானது காலைப்பற்ற, அதைத் தன்காலிலணிந்த கொலுசினால் கன்னத்தில் உதைத்தாள். இந்தச்செய்தியைச் சோழன்கண்டுவந்து கேட்டபோது ஒட்டக்கூத்தன்பாடிய கணடசுத்தி.

5. கரண்டகண்டத்தொனிக்கஞ்சியமான்கருங்கங்குலிலே
திரண்டவெள்ளத்திற்பிணமீதுசென்றனள்சேர்ந்தவனை
அரண்டவின்பங்கொடுமீளக்கராம்பற்றவங்கொலுசால்
குரண்டகன்னத்திலுதைத்தனள்காணங்குலோத்துங்கனே

இ - ள். அம்குலோத்துங்கனே - அழகிய குலோத்துங்கச்சோழனே, கரண்டம் - நீர்க்காக்கையின், கண்டத்தொனிக்கு அஞ்சிய - குரலோசைக்குப்பயந்த, மான் - பெண்ணானவள், கருங்கங்குலிலே - கருமையாகிய இராக்காலத்தில், திரண்டவெள்ளத்தில் - பெரியவெள்ளத்தில், பிணமீது சென்றனள் - பிணத்தின் மேலேறிப்போய், அவனைசேர்ந்து - அந்தச் சோரநாயகனைக்கூடி, அரண்ட இன்பம்கொடு - வெருட்சியாகிய இன்பத்தையநுபவித்து, மீள-மீண்டுவர, கராம்பற்ற - முதலை (காலைப்) பிடிக்க, அம்கொலுசால் - அழகிய கால் கொலுசினால், குரண்ட கன்னத்தில் உதைத்தனள் - திரைந்த கன்னத்தில் உதைத்தாள், எ - று.

ஒட்டக்கூத்தன் சோழனுக்குப் பெண்கேட்டபோது பாண்டியன் சோழனுக்கு என்னபெருமையென்று வினவ, அச்சோழனுடைய
குதிரை, நதி, மாலை, தலம், வீரம், கொடி, நகர், தேசம்
இவைகளுக்குப் பாண்டியனுடைய குதிரைமுதலிய
அவ்வெட்டும் ஒப்பாக மாட்டா எனப்
பாடியது.

கோரத்துக்கொப்போகனவட்டமம்மானை
கூறுவதும்காவிரிக்குவையையோவம்மானை

ஆருக்குவேப் புநிகராகுமோவம்மானை
ஆதித்தனுக்குநிகரப் புலியோவம்மானை
வீரர்க்குள்வீரனொருமீனவனேயம்மானை
வெற்றிப்புலிக்கொடிக்குமீன்கொடியோவம்மானை
ஊருக்குறந்தைநிகர்கொற்கையோவம்மானை
யொக்குமோசோணாட்டுக்குப்பாண்டிநாடம்மானை.

இ - ள். கனவட்டம் கோரத்துக்கு ஒப்போ - கனவட்டமானது கோரத்துக்குஒப்பாகுமோ, காவிரிக்கு கூறுவதும் வையையோ - காவிரியாற்றுக்கு உவமையாகச் சொல்லப்படுவதும் வையையாறோ, வேம்புஆருக்கு நிகர்ஆகுமோ - வேப்பமாலை ஆத்திமாலைக்கு நிகராகுமோ, ஆதித்தனுக்கு - சூரியனுக்கு, அம்புலியோநிகர் - சந்திரனோ நிகராவது, ஒருமீனவனே - ஒருபாண்டியனோ, வீரர்க்குள்வீரன் - வீரருக்குள்ளே வீரனாயிருப்பவன், வெற்றி புலிக்கொடிக்கு - வெற்றியுள்ள புலிக்கொடிக்கு, மீன்கொடியோ - மீனக்கொடியோ நிகராவது, ஊருக்கு - ஊர்களில், கொற்கையோ - கொற்கைநகரமோ, உறந்தைநிகர் - உறந்தை நகரத்துக்கு நிகராவது, பாண்டிநாடு - பாண்டிநாடானது, சோணாட்டுக்கு ஒக்குமோ - சோழநாட்டை நிகர்த்திருக்குமோ, எ - று.

கோரம் - சோழன் ஏறும்குதிரை. கனவட்டம் - பாண்டியன் ஏறும்குதிரை.

அதற்குமாறகப் புகழேந்திப்புலவர் பாடியது.

7. திருநெடுமாலவதாரஞ்சிறுபுலியோவம்மானை
சிவன்முடியிலேறுவதுஞ்செங்கதிரோவம்மானை
ஒருமுனிவனேரியிலோவுரைதெளிந்ததம்மானை
ஒப்பரியதிருவிளையாட்டுறந்தையிலோவம்மானை
கரையெதிரேடேறியதுகாவிரியோவம்மானை
கடிப்பகைக்குத்தாதகியங்கண்ணியோவம்மானை
பரவைபணிந்ததுஞ்சோழன்பதந்தனிலோவம்மானை
பாண்டியனார்பராக்கிரமப்பகரெளிதோவம்மானை.

இ - ள். திருநெடுமால் அவதாரம் சிறுபுலியோ - திருமகளையுடைய நெடுமாலின் அவதாரம் சிறுபுலிதானோ, சிவன் முடியில் ஏறுவதும் செங்கதிரோ - சிவனது சிரசின்மீதேறுவதும் சூரியன்தானோ, உரைதெளிந்தது ஒருமுனிவன் நேரியிலோ - தமிழ்ப்பாஷை தெளிவடைந்தது ஒப்பற்ற நேரிமலையிற்றானோ, ஒப்பு அரிய திருவிளையாட்டு உறந்தையிலோ - உவமையில்லாத திருவிளையாடல்களைச் சிவபெருமான் செய்தது உறந்தையில்தானோ, கரை எதிர்ஏடு ஏறியது காவிரியோ - கரையைநோக்கி ஏடு எதிரேறியதற் கிடமாயிருந்தது காவிரிநதிதானோ, கடிப்பகைக்கு-வேம்புக்கு நிகராவது, தாதகி அம்கண்ணியோ - அழகிய ஆத்திதானோ, பரவைபணிந்ததும் சோழன் பதந்தனிலோ - கடலானது

வந்துபணிந்ததும் சோழனது பாதத்தில்தானே,பாண்டியனார் பராக்கிரமம் பகர் எளிதோ - பாண்டியனாருடைய வல்லமை சொல்லுதற்கெளிதாகுமோ, எ-று.

**சோழன்பவனிவரும்போது ஒட்டக்கூத்தன் அவனைப்புகழ்ந்து இரண்டடிபாட, சோழனிரண்டடிபாயது.**

8. ஆடுங்கடைமணிநாவசையாமலகிலமெங்கும்
நீடுங்குடையைத்தரித்தபிரானிந்தநீணிலத்தில்
பாடும்புலவர்புகழொட்டக்கூத்தன்பதாம்புயத்தைச்
சூடுங்குலோத்துங்கசோழனென்றேயென்னைச்சொல்லுவரே.

இ - ள். ஆடும் கடைமணி நாவசையாமல் - அசையு மியல்புள்ளவாயில் மணியானது நாவசையாதவண்ணம், அகிலம் எங்கும் - உலகமெங்கும், நீடும் குடையைத் தரித்தபிரான் - பெரிய குடையைத்தரித்து நிழலைச்செய்கின்றபெருமான், இந்த நீள் நிலத்தில்-இந்தப்பெரிய நிலவுலகத்தில், புலவர் பாடும்புகழ்-புலவர் புகழ்ந்துபாடும் புகழையுடைய, ஒட்டக்கூத்தன் பதாம்புயத்தை - ஒட்டக்கூத்தனது திருவடித்தாமரையை, சூடும் - சிரசிலணிகின்ற, குலோத்துங்கச் சோழன் என்றே என்னைச்சொல்லுவர், எ - று.

**ஒட்டக்கூத்தன் சோழனது யானைச்சங்கிலி யவிழ்க்கப் பட்டதைக் குறித்துப்பாடியது.**

9. இன்னங்கலிங்கத்திகல்வேந்தருண்டென்றோ
தென்னன்தமிழ்நாட்டைச்சீறியோ—சென்னி
அகளங்காவுன்றனயிராவதத்தின்
நிகளங்கால்விட்டநினைவு.

இ - ள். சென்னி அகளங்கா - அகளங்கச்சோழனே, உன்றன் அயிராவதத்தின் - உன் யானையினது, நிகளம் - கால்விலங்கானது, கால்விட்டநினைவு-காலைவிட்டு நீங்கினதற்குக்கருத்து, இன்னம் - இன்னமும், கலிங்கத்து - கலிங்கதேசத்தில், இகல்வேந்தர் உண்டென்றோ-பகையரசர் உளரென்பதுதானோ, தென்னன் தமிழ்நாட்டைச்சீறியோ - பாண்டியனது தமிழ்நாட்டைக் கோவித்தோ, (யாமறியோம்), எ - று.

**புகழேந்திப்புலவர் பாண்டியனது யானைச்சங்கிலி யவிழ்க்கின்வரும் பயனைக்குறித்துப் பாடியது.**

10. தென்னவன்றென்னர்பெருமான்றிறன்மதுரை
மன்னவன்கோக்களிற்றின்வல்லிக்கும்—பொன்னிநா
டாலிக்கும்வேந்தாமபயகுலன்மகளிர்
தாலிக்குமொன்றேதளை.

இ - ள். தென்னவன் - பாண்டியன், தென்னர் பெருமான் - தென்னாட்டார்க்கிறைவன், திறல்-வலிமைபொருந்திய, மதுரைமன்னவன் - மதுரையிறை

ந்தன், (அவனது) கோ களிற்றின்வல்லிக்கும் - பட்டத்துயானைச் சங்கிலிக்கும், பொன்னிநாடு ஆலிக்கும்வேந்து ஆம் - பொன்னி நாட்டில்களித்து வாழ்கின்ற வேந்தனாகிய, அபயகுலன் மகளிர்தாலிக்கும்-சோழனது குலமகளிரது மங்கல சூத்திரத்துக்கும், தளைஒன்றே - முடிச்சு ஒன்றேயாம், எ - று.

பாண்டியனது பட்டத்து யானைச்சங்கிலி யவிழ்க்கப்பட்டவுடனே அது சென்று சோழன் முதலியோரைக்கொல்லும், அதனால் அவன்குலமகளிர் மங்கல நாணை யிழப்பர் என்பதுகருத்து.

அரசன் புகழேந்தியை யாரென வினவ, ஒட்டக்கூத்தன் இவன் பித்தனென்றபோது புகழேந்திப்புலவர் பாடியது.

11. சத்தப் பயிலும் புலவோர்கதலித்தண்டோட்டம்புகும்
பித்தனிவனென்பரென்னைக்கண்டாற்பெருத்துப்பணைத்துத்
தத்தம் பிறகிடும்பார்வேந்தர்தங்கடடமகுட
சத்தமபசத்தங்காண்கங்குல்யானைச்சயதுங்கனே.

இ - ள். பெருத்து பணைத்து - மிகப்பெருத்து, தத்தம் பிறகிடும்-தத்தமக்குப்பின்னிடுகின்ற, பார்வேந்தர் தங்கள் - பூமியையுடைய அரசரது, தடமகுட சத்தம் - பெரியமுடியோசையை, அபசத்தம்காண் - அபசத்த மாகக்காண்கிற, கங்குல்யானை சயதுங்கனே - இருள்போலும் கரியயானைகளையுடைய சயதுங்கனே, சத்தம்பயிலும் புலவோர் - இலக்கணசாத்திரத்தில் பழகுகின்ற புலவர்கள், என்னைக்கண்டால் - என்னைப்பார்த்தால், இவன் தண் கதலி தோட்டம் புகும்பித்தன்என்பர் - இவன்குளிர்ந்த வாழைத்தோட்டத்தில் நுழைகின்ற பித்தனென்பார்கள், எ - று.

பித்தர் வாழைக்கொல்லையில் நுழைந்து அந்தநிழலிலிருந்தால் பித்தம்தணியுமென்பது ஆயுள்நூல் வழக்காதலால் "கதலித்தண்டோட்டம் புகும்பித்தன்" என்றார். அபசத்தமாகக்காண்டலாவது-உடைத்து ஓட்டையாக்கல்.

யானைமேல் பவனிவரும் சோழன் ஒட்டக்கூத்தனால் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டு, அச்சாலையின் தளத்தில் நின்று வேடிக்கையாக பார்த்துக்கொண்டிருந்த புகழேந்திப்புலவரைச் சுட்டி, இவன்சிறந்த புலவனன்றே என்றபோது ஒட்டக்கூத்தன் பாடியது.

12. மானிற்குமோவிந்தவாளரிவேங்கைமுன்வற்றிச்செத்த
கானிற்குமோவிவ்வெரியுந்தணன்முன்கனைகடலின்
மீனிற்குமோவிந்தவெங்கட்சுறாமுனம்விசும்பனி
தானிற்குமோவிக்கதிரவன்றோற்றத்திற்றார்மன்னனே.

- ள். தார்மன்னனே - வெற்றிமாலையையணிந்த சோழ மகாராசனே, இந்த வாளரிவேங்கைமுன் - இந்த ஒளியுள்ள கீற்றுக்களையுடைய வேங்கைப்

புலிக்கெதிரே, மான்கிற்குமோ - மானானதுகிற்குமோ, இ எரியும் தணல்முன்- இந்தஎரிகின்ற நெருப்புக்கெதிரில், வற்றிச்செத்தகான் கிற்குமோ-நீர்ப்பசை யற்றுப்போன காடானதுகிற்குமோ, இந்தவெங்கண் சுறாமுனம் - இந்தக்கொடு மையையுடைய சுறாமீனுக்கெதிரில், கனைகடலின் மீன்கிற்குமோ-ஒலிக்கின்ற கடலிலுள்ள மற்றைச் சிறுமீன்கள்கிற்குமோ, இக்கதிரவன் தோற்றத்தில் - இந்தச்சூரியோதயத்தில், வீசுபனிதான்கிற்குமோ - வீசுகின்ற பனிதானும் கிற் குமோ, (இவ்வுவமைகள்போல எனக்கெதிரில் இந்தப்புகழேந்தி கிற்கமாட்டுவ னோ), எ - று.

இதைக்கேட்ட புகழேந்திப்புலவர் அரசனைநோக்கி, இக்கவியை ஒட்டிப்பாடவோ வெட்டிப் பாடவோவென, அரசன் ஒட்டக் கூத்தனிடத்துள்ள அன்பால் ஒட்டிப்பாடென அவ்வாறே புகழேந்தி ஒட்டிப் பாடியது.

13. மானவனானந்தவாளரிவேங்கைமுன்வற்றிச்செத்த
கானவனானவ்வெரியுந்தணன்முன்கனைகடலின்
மீனவனானந்தவெங்கட்சுறாமுனம்வீசுபனி
தானவனானக்கதிரவன்றோற்றநற்றார்மன்னனே.

இ - ள். நல்தார்மன்னனே-அழகிய பூமாலையைத் தரித்த அரசனே, அவன் மான் - அந்த ஒட்டக்கூத்தன் மான், நான் அந்தவாள் அரிவேங்கை - நான் அந்த மான்களைக்கொல்லுகின்ற ஒளிபொருந்திய கோடுகளையுடையபுலி, அவ ன்முன்வற்றிச் செத்தகான் - அவன்பசையற்று உலர்ந்தகாடு, நான் அஎரியும் தணல்—நான் அதனைஎரிக்கின்ற அந்தக்காட்டுத்தீ, அவன்கனைகடலின்மீன் - அவன் ஒலிக்கின்றகடல்மீன், நான் அந்தவெங்கண்சுறா—நான் அந்தக்கொடிய சுறாமச்சம், அவன்வீசுபனி - அவன்பெய்யும்பனி, நான் அகதிரவன் தோற் றம் - நான் அதனைநீக்கும் சூரியோதயம், எ - று.

புகழேந்திப்புலவர் தன்பிதாவின் சமஸ்தான வித்வானுகையாலும்,நெ டுநாளாய் அவர்சிறையிலிருப்பதினாலும், அந்தச் சிறையினின் றும்மீட்க விரும்பின ராஜபத்தினி தனதுபள்ளியறைக்கு அரசன்வரும் குறிப்பறிந்து, கதவை மூடிக்கொண்டு உள்ளே பிரவேசிக்கவொட்டாமல் தடைசெ ய்தபோது, அக்காலத்து வழக்கத்தின்படி அரசன் மனைவியின் ஊடலைத்தணி க்கும்படி ஒட்டக்கூத்தனையனு ப்ப, அவன்போய் கதவி ன்புறத்துநின்று பாடியது.

14. நானேயினியுன்னைவேண்டுவதில்லைநளினமலர்த்
தேனேகவாடந்திறந்திடுவாய்திறவாவிடிலோ

வானேறனையவிரவிகுலாதிபன்வாயில்வந்தால்
தானேதிறக்குமுன்கையிதழாகியதாமரையே.

இ - ள். நளினமலர்தேனே - தாமரைமலரில் வாழ்கின்ற தேன்போலும் இன்சுவையைத் தருகிறமொழியையுடைய திருமகளை நிகர்ப்பவளே, கவாடம் திறந்திடுவாய் - கதவைத் திறப்பாயாக, திறவாவிடில் - திறவாவிட்டால், வான் ஏறுஅனைய - (பகைவராகிய பாம்புகளுக்கு)மேகத்திலிடிக்கின்ற ஆணிடிபோன்றவனாகிய, இரவிகுலாதிபன் - சூரியகுலத்தரசனாகிய சோழன், வாயில்வந்தால்-(உன்) வாசலில்வந்தால், நின் - உனது, கைஇதழ் தாமரை - (விரல்களாகிய) இதழ்களையுடைய கைத்தாமரையானது, தானேதிறக்கும்-தானேதிறந்துவிடப் போகின்றது, (ஆதலால் அந்தவிஷயத்தைப்பற்றி) நான் இனி உன்னைவேண்டுவதில்லை - நான் இனியுன்னைப் பிரார்த்திப்பதில்லை, எ - று.

இதைக்கேட்ட அரசன்மனைவி ஒட்டக்கூத்தன் புகழேந்திப் புலவரைச் சிறையில் வைத்திருக்கின்ற கோபமிகுதியால், ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள் என்றுசொல்லி மேலும் ஓர் தாள் பூட்ட, இதனை ஒட்டக்கூத்தனால் அறிந்த அரசன் இவள் ஊடலுக்குக் காரணம் புகழேந்தியைச் சிறையில் வைத்தமை யாகுமென்று ஆலோசித்துத் துணிந்து புகழேந்திப் புலவரைச் சிறையினின்று நீக்கி, அவ்வூடலை நீக்கும்படி அனுப்பியபோது அப்புலவர் பெருமான் பாடியது.

15. இழையொன்றிரண்டுவகிர்செய்தநுண்ணிடையேந்துவள்ளைக்
குழையொன்றிரண்டுவிழியணங்கேகொண்டகோபந்தணி
மழையொன்றிரண்டுகைமானாபரணனின்வாயில்வந்தால்
பிழையொன்றிரண்டுபொறாரோகுடியிற்பிறந்தவரே.

இ - ள். இரண்டுவகிர்செய்த இழைஒன்று - இருபிளவாகச் செய்யப்பட்ட நூலிழையின் ஒரு சிறுகூறுபோன்ற, நுண்இடை-நுட்பமாகிய இடையையும், ஏந்துவள்ளைக் குழை ஒன்று இரண்டுவிழி-காதில் அணிந்த குழைகளைச்சென்று தீண்டுகிற இருகண்களையும்உடைய, அணங்கே-தெய்வப்பெண் போல்பவளே, கொண்டகோபம்தணி - நீ கொண்டகோவத்தை நீயே தணித்துக்கொள்ளவேண்டும், மழைஒன்று - கைம்மாறு கருதாக்கொடையாகிய மேகத்தின்குணமமைந்த, இரண்டுகை - இரண்டுகைகளையும், மானம் ஆபரணன் - மானமாகிய ஆபரணத்தையும் உடையவனாகிய சோழமஹாராஜன், நின் வாயில்வந்தால் - உன் வாசலில் வந்தால், குடியில்பிறந்தவர் - உயர்குடியிற் பிறந்தமாதர்கள், ஒன்று இரண்டு பிழைபொறாரோ - ஒருபிழை இருபிழைகளைப் பொறுக்க மாட்டார்களா, எ - று.

மழையொன்று இரண்டுகை என்பதற்கு மேகம்கொடையால் ஒருமடங்கும் இவன்இருமடங்குமாக மதித்தற்குரிய இரண்டாகிய கொடைக்கைஎன வுரைப்பினும்மையும், ஏந்திய பொற்குழை யென்றும்பாடம்.

ஔவையார் ஒட்டக்கூத்தன் புகழேந்தி இவ்விருவரில், புகழேந்திப்புலவருக்கு நீட்டியகாலைமடக்கி மரியாதைசெய்து, ஒட்டக்கூத்தனுக்கு அப்படிச் செய்யாம லிருந்தமையால், அவன் அதை அரசனுக்குத் தெரிவிக்க, அரசன் ஔவையைநோக்கி இவ்விருவரும் ஒத்தபுலவராயிருக்க, நீ இவ்வாறு செய்ததற்குக் காரணம் யாதென்றுவினவ, ஔவையார் இவ்விருவருக்கும் உள்ள தாரதம்மியத்தை விளக்கிக் காட்டுகிறேன் பாருமென்று ஒட்டக்கூத்தனைநோக்கி, மூன்று பிறைவரும்படி ஒருபாட்டுப்பாடாய் என்றுசொல்ல அவன் பாடியது.

16. வெள்ளத்தடங்காச்சினவாளைவேலிக்கமுகின்மீதேறித்
துள்ளிமுகிலைக்கிழித்துமழைத்துளியோடிறங்குஞ்சோணாடா
கள்ளக்குறும்பர்குலமறுத்தகண்டாவண்டர்கோபாலா
பிள்ளைமதிகண்டெம்பேதைபெரியமதியுமிழந்தாளே.

இ - ள். வெள்ளத்து அடங்கா - நீர்ப்பெருக்கி லடங்காத, சினவாளை - கோவத்தையுடைய வாளைமீன்கள், வேலி கமுகின்மீதுஏறி - வேலியிலுள்ள கமுகமரத்தின்மேலேறி, துள்ளி - குதித்து, முகிலைகிழித்து - மேகத்தைக்கிழித்து, மழைத்துளியோடு இறங்கும் - மழைத்துளியோடே இழிகின்ற, சோணாடா - சோழனே, கள்ளம் - குற்றமுள்ள, குறும்பர்-குறுநிலமன்னரது, குலம்-வமிசத்தை, அறுத்த - அறுத்தொழித்த, கண்டா - வாளாயுதத்தை யுடையானே, அண்டர்கோபாலா - ஆயர்களுடைய பசுக்களைப் பரிபாலித்தவனே, பிள்ளைமதிகண்டு - இளம்பிறையைக்கண்டு, எம்பேதை - எமது பேதைப்பெண்ணானவள், பெரியமதியும் இழந்தாள்-பேரறிவையும் இழந்துவிட்டாள், எ-று.

அரசர் திருமாலின் அமிசமாதலால் "அண்டர்கோபாலா" என்றார். இதில் பிள்ளைமதிபெரிய மதிஎன பிறையின்பரியாயமாகிய இரண்டு மதிமாத்திரம் வந்ததைநோக்கிய ஔவை ஒட்டா ஒருமதிகெட்டாய் என்றிகழ்ந்து புகழேந்திப்புலவரைநோக்கினர். நோக்குதலும்.

## புகழேந்திப் புலவர் பாடியது.

17. பங்கப்பழனத்துழுமுழவர்பலவின்கனியைப்பறித்ததென்று
சங்கிட்டெறியக்குரங்கிளநீர்தனைக்கொண்டெறியுந்தமிழ்நாடா

*கொங்கைக்கமராபதியளித்தகோவேராசகுலதிலகா*
*வெங்கட்பிறைக்குங்கரும்பிறைக்கும்மெலிந்தப்பிறைக்கும்விழிவேலே*

**இ - ள்.** பங்கம்பழனத்து - சேற்றையுடையவயலில், உழும் உழவர் - உழுகின்ற மள்ளர்கள், (குரங்கு) பலவின் கனியை பறித்ததுஎன்று - பலாப்பழங்களை பிடுங்கினதென்று, சங்கு இட்டெறிய - சங்குகளால் எறிதலும், குரங்கு - குரங்குகள், இளநீர் தமைக்கொண்டெறியும் - இளநீர்களால் எறிகின்ற, தமிழ்நாடா - தமிழ்நாட்டை யுடையவனே, கொங்கு ஐக்கு - கொங்கர்பிரானுக்கு, அமராபதி அளித்தகோவே - சுவர்க்கலோகத்தைக் கொடுத்த இறைவனே, ராசகுலதிலகா - ராஜகுலத்துக்குத் திலகம் போல்பவனே, (எமது பெண்ணானவள்) வெங்கண்பிறைக்கும் - கொடுமையுள்ள பிறைச்சந்திரனுலும், கரும்பு இறைக்கும் - கரும்புவில்லையுடைய மன்மதனுலும், மெலிந்து-இளைத்து, விழிவேல் - வேல்போலும் கண்களில் நின்றும், அப்புஇறைக்கும் - நீரை யிறைப்பாள், எ - று.

கொங்கைக்கு அமராபதி யளித்தலாவது கொங்கநாட்டரசனைவென்று வீரசுவர்க்கம் அடைவித்தது. கொங்கைக்கு அமராபதியளித்த என்பதற்கு, தனத்துக்கு வெள்ளிய நகக்குறியைத்தந்த என்றும்பொருள்கொள்ளலாம். அமராபதிக்கு வானகம் என்றும்பெயர். இதனை வால்நகம் எனப்பிரித்து வெள்ளியநகம் எனப் பொருள்கொள்க.

**அரசன் சபைக்குவந்த ஒட்டக்கூத்தனை நோக்கிக் களி என்னும்**
**கலம்பக வுறுப்பினுல் ஒருபாட்டுப் பாடுக எனப் பாடியது.**

18. *புள்ளிருக்குந்தார்மார்பன்பூம்புகார்வாழ்களியேம்*
*சுள்ளிருக்குங்கள்ளையுண்டுஞ்சோர்விலேம்—உள்ளபடி*
*சொல்லவாவாலிதுரோபதையைமூக்கரிந்த*
*தல்லவாமாபாரதம்.*

**இ - ள்.** புள்இருக்கும் தார்மார்பன் - வண்டுகள் மொய்த்திருக்கிற பூமாலையைத்தரித்த மார்பினையுடையவனது, பூ புகார்வாழ்களியேம் - அழகாகிய காவிரிப்பூம்பட்டணத்தில் வாழ்கின்ற களியரேம், சுள்இருக்கும் கள்ளைஉண்டும் சோர்வுஇலேம் - (மயக்கமாகிய) அற்பத்தன்மையுள்ள கள்ளைக்குடித்தும் யாம் மறதியிலேம், (என்னெனின்) உள்ளபடி சொல்லவா - உள்ளபிரகாரம் சொல்லட்டுமா, மாபாரதம் - மஹாபாரதம் என்பது, வாலிதுரோபதையை மூக்கு அரிந்தது அல்லவா - வாலியானவன் துரோபதையை மூக்கறுத்த சரித்திரமல்லவா, எ - று.

மஹாபாரதம் என்பது துரியோதனன் துரோபதையை மானபங்கம் செய்ததனுல் உண்டானது என்பதுகருத்து. மூக்குஅரிதலாவது மானபங்கஞ் செய்தல். வாலி-வாலினையுடையது இதுவானுள்ள பிறவுயிர்களுக்கும் ஆகுமாயினும் இவ்விடத்தில் துரோபதையை மூக்கரிந்தது என்னுங்குறிப்பால் வாலினையுடை

யசர்ப்பமெழுதிய கொடியை யுயர்த்தவனாகிய துரியோதனனுக் காயிற்று. சுள்" உலர்ந்தமீன் எனினுமாம்.

**தலைவி சந்திரனைநோக்கி இரங்கிக் கூறியதாகப் பாடியது.**

19. என்றுபெறுவேன்யானீசன் றிருமுடிமேல்
சென்றுவிளையாடுகின்றதீபமே—என்றும்
செருப்புக்குத்தோல்வாங்குஞ்சென்னியகளங்கன்
பொருப்புக்குத்தோலாப்புயம்.

இ - ள். என்றும் செருபுக்கு - எந்நாளும் போர்க்களத்திற் புகுந்து, தோல்வாங்கும் - (பகையரசரது) யானைகளைக்கவர்கின்ற, சென்னி அகளங்கன் - அகளங்கச்சோழனது, பொருப்புக்கு தோலாபுயம் - மலைக்குத் தோற்காத தோள்களை, யான்என்று பெறுவேன் - நான் எக்காலம் பெறக்கடவேன், ஈசன்திருமுடிமேல்சென்று - பரமசிவனுடைய திருமுடிமேற்போய், விளையாடுகின்றதீபமே - விளையாடாநின்ற தீபமே (நீசொல்வாயாக), எ - று.

தீபம் என்றது சந்திரனை. செருப்புக்குத்தோல் செருப்பின் பொருட்டுத் தோல் எனச்சொன்னயம். புயம்என்று பெறுவேன் எனக்கூட்டுக. சந்திரனே சோழனுடைய புயத்தையான் எக்காலம் அணையப் பெறுவேன் என்பது கருத்து.

சோழன் தன் வித்யாகுருவாகிய ஒட்டக்கூத்தரை நகரை ஆளவைத்துத் தான் தென்மதுரைக்குச்சென்று, பாண்டியன்மகளை மணஞ்செய்தனன். பாண்டியன் தன்மகளுக்குச் சீதனமாகப் பொன்னணிமுதலியவற்றையும், புகழேந்திப்புலவரையும் கொடுத்தனன். சோழன் சீதனப்பொருள்களையும், அப்பொருள்களில் ஒருவராகிய புகழேந்திப்புலவரையும் முன்னதாகத் தனது நகரத்துக்கு அனுப்பினன். அங்குஅப்போது அரசுபுரிந்திருந்த ஒட்டக்கூத்தன்முன் தான் சோழனுக்குப் பெண்கேட்கச் சென்றபோது புகழேந்திப்புலவர் தன்னைக்கல்வியறிவால் அவமதித்தனரென்னும் பகைமையால் சிறையிலிட்டனன். அவரும் சிறையிலிருந்து காலங்கழித்துவந்தனர். அக்காலத்தில் அரசனிடத்தில் பரிசு பெறும்பொருட்டு கவிபாடிக்கொண்டு வரும்புலவர்களைச் சிறையிலடைத்துவைத்திருந்து நவராத்திரிகாலத்தில் அந்தச் சமஸ்தானவித்வானாகிய ஒட்டக்கூத்தன்பொறாமையால் சிலவற்றைவினாவி, விடைசொல்ல அறியாதவர்களையெல்லாம்தேவிக்குப் பலியிடுவதுவழக்கம். இவ்வழக்கை நிறுத்தும்பொருட்டு புகழேந்திப்புலவர் தம்மோடு சிறையிருந்தவர்களில் ஐந்து புத்திமான்களைத் தெரிந்தெடுத்து அவர்களைஇலக்கண இலக்கியங்களில் மிகு சமர்த்தராக்கினார், அவர்கள் குயவன்முதலிய ஐவர். விஜயதசமியில் ஒட்டக்கூத்தன் அவர்களைப் பரிட்சித்து அறியும்பொருட்டு அரசன் சமுகத்தில் தனித்தனியே இட்டுக்கொண்டு வரும்படிசொல்ல, அவர்கள்வந்தவுடன் அவர்களில் முதலில்நின்றவனாகிய குயவனை நோக்கி ஒட்டக்கூத்தன்முதல் இரண்டடியால் என்முன் நின்றவன்யாரடாஎன, அதற்குக்குயவன் இரண்டடி பாடியது.

20. மோனைமுத்தமிழ்மும்மதமும்பொழி
யானைமுன்வந்தெதிர்த்தவனாரடா
கூனையுங்குடமுங்குண்டுசட்டியும்
பானையும்வனையங்குசப்பையல்யான்.

இ - ள். மோனை முத்தமிழ் - மோனைமுதலியவையமைந்த முத்தமிழ்ப் பாடல்களாகிய, மும்மதமும்பொழி-மும்மதங்களையும் சொரிகின்ற, யானைமுன்- (கவி) யானையாகிய என்முன், வந்துஎதிர்த்தவன்-வந்துஎதிர் நின்றவனாகிய நீ, ஆரடா - யாவனடா, (என்று ஒட்டக்கூத்தன்வினவ அதற்குக்குயவன்) யான்- நான், கூனையுங்குடமும் குண்டுசட்டியும் பானையும் வனை-கூனைமுதலிய மண்பாத்திரங்களைச் செய்கின்ற, அம்குசப்பையல்-அழகிய குசப்பையன், எ - று.

ஒட்டக்கூத்தன் தன்னை யானை யென்றமையால் குயவன் அதனை யடக்குகின்ற தோட்டியெனப்பொருள்பட, அங்குசம் பையல்என்றான்.

மஹா கவிகளாகிய எங்களுக்குமுன், கவிஞர் என்று பெயர் பூண்டுவந்து நின்றவன் யாரடா என்று ஒட்டக் கூத்தன்கேட்க, வேளாளன் பாடியது.

21. கோக்கண்டுமன்னர்குரைகடற்புக்கிலர்கோகநகப்
பூக்கண்டுகொட்டியும்பூவாதொழிந்திலபூதலமேழ்
காக்கின்றமன்னன்கவியொட்டக்கூத்தநின்கட்டுரைபாம்
பாக்கண்டொளிப்பர்களோதமிழ்பாடியபாவலரே.

இ - ள். மன்னர் - அரசர்கள், கோகண்டு-சக்ரவர்த்தியைக்கண்டு, குரை கடல்புக்கிலர் - ஒலிக்கின்றகடலில்வீழ்ந்து இறந்திலர், கொட்டியும்-கொட்டிப் பூண்டும், கோகநப்பூகண்டு - தாமரை மலரைப்பார்த்து, பூவாதுஒழிந்தில-மலராதொழிந்தனவில்லை, பூதலம்ஏழ் - ஏழுதீவுகளையும், காக்கின்றமன்னன் - காக்கின்ற சோழமஹாராஜனது, கவி-சமஸ்தான வித்வானாகிய, ஒட்டக்கூத்த - ஒட்டக்கூத்தரே, தமிழ்பாடியபாவலர் - தமிழ்க்கவிபாடுகின்ற புலவர்கள், நின் கட்டுரைஆம்பாகண்டு - உன் சொல்வன்மைபொருள் நுண்மைகளமைந்த கவிகளைக்கண்டு, ஒளிப்பர்களோ - ஒளித்துக்கொள்வார்களோ, எ - று.

கருமான் பாடியது.

22. செல்லன்புதல்வன்திருவேங்கடவன்செகத்குருவாம்
கொல்லன்கவியைக்குறைசொல்லுவோரைக்குறடுகொண்டு
பல்லைப்பிடுங்கிப்பருந்தாட்டமாட்டிப்பகைவர்முன்னே
அல்லும்பகலுமடிப்பேன்கவிதிருப்பாணிகொண்டே.

இ - ள். செல்லன்குமரன் - (நான்) செல்லப்பாசாரிகுமாரன், திருவேங்கடவன் - (என்பெயர்) திருவேங்கடாசாரி, செகத்குருஆம் கொல்லன் - ஜகத்

குருவாயிருக்கும் கருமாரகுலத்தன், கவியை - (குற்றமற்றஎன்) கவியை, குறை சொல்லுவோரை - குறைகூறுவோரை, குறடுகொண்டு பல்லைப்பிடுங்கி - குறட்டினால் பல்லைப்பிடுங்கி, பருந்தாட்டம்ஆட்டி - பருந்துபோல் அலையச்செய்து, பகைவர்முன்னே—பகைவருக்கெதிரில், அல்லும்பகலும்-இரவும்பகலும், கவி இருப்பு ஆணிகொண்டு - கவியாகிய இருப்பாணியைக்கொண்டு, அடிப்பேன்-கடாவுவேன், எ - று.

அரைப்பாட்டு ஒட்டக்கூத்தனும் அரைப்பாட்டு அம்பட்டனும் பாடியது.

23. விண்பட்டகொக்குவல்லூறுகண்டென்னவிலவிலத்துப்
புண்பட்டநெஞ்சொடுமிங்குநின்றாய்பொட்டையாய்புகலாய்
கண்பொட்டையாயினுமம்பட்டனன்கவிவாணர்முன்னே
பண்பட்டசெந்தமிழ்நீயுந்திடுக்கிடப்பாடுவனே.

இ - ள். பொட்டையாய் - பொட்டைக்கண்ணனே, விண்பட்ட கொக்கு வல்லூறு கண்டென்ன - ஆகாயத்தில் பறக்கின்ற கொக்கு வல்லூறென்னும் பறவையைக் கண்டாற்போல, விலவிலத்து - (கைகால்கள்) நடுக்கமடைந்து, புண்பட்ட நெஞ்சொடும் - வருந்துகின்ற மனத்தோடும், இங்குநின்றாய்-இவ்விடத்தில் நின்றனே, புகலாய் (நீயாவன்) சொல்வாய், (என்று ஒட்டக்கூத்தன் வினவ அதற்கு அம்பட்டன்) நான் அம்பட்டன்—நானே அம்பட்டன், கண் பொட்டை - (என்) கண்ணும்பொட்டை, ஆயினும் - ஆனாலும், கவிவாணர் முன்னே - புலவர்களுக்கெதிரே, பண்பட்ட செந்தமிழ் - செம்பாகமான செந்தமிழ்ப்பாடல்களை, நீயும் திடுக்கிடப்பாடுவன் (யாவரையும் திடுக்கிடப்பண்ணுகிற) நீயும் திடுக்கிடும்படி பாடுவேன், எ - று.

தச்சன் பாடியது.

24. சொன்னசந்தக்கவியாவருஞ்சொல்லுவர்சொற்சுவைசேர்
இன்னசந்தக்கவியேதென்றபோதிலெதிர்த்தவரை
வன்னசந்தங்கெடவாயைக்கிழித்திந்தவாய்ச்சியினால்
கன்னசந்தங்களினிற்கவியாப்பைக்கடாவுவனே.

இ - ள். சொன்னசந்தக்கவி - (எதிரிகள்) சொல்லிய சந்தமமைந்த கவிகளை, யாவருஞ்சொல்லுவர் - எல்லாரும்பாடுவர், சொல்சுவைசேர்-சொற்சுவை பொருந்திய, இன்னசந்தக்கவி ஏதுஎன்றபோதில் - இப்படிப்பட்ட அழகமைந்தகவி யாதென்று வினவினகாலத்தில், எதிர்த்தவரை - எதிர்த்துநின்றவரை, வன்னசந்தம்கெட-நிறமும்அழகும்அழிய, வாயைக்கிழித்து - வாயைப்பிளந்து, இந்தவாய்ச்சியினால் - இந்த வாய்ச்சியைக்கொண்டு, கன்னசந்தங்களினில் - காதாகிய துவாரத்தில், கவிஆப்பை கடாவுவன் - கவியாகிய ஆப்பைக் கடாவுவேன், எ - று.

### தட்டான் பாடியது.

25. திகிரிவட்டக்குடைச்செங்கோலபயன்செழுஞ்சிலம்பில்
பகுதியொட்டக்கூத்தபட்டனைநானப்பனைக்கவியில்
மிகுதவொட்டத்தட்டிவிட்டகையோட்டிலுருக்கிக்குத்திப்
புகுதவொட்டித்தட்டிமேலணுகாவண்ணம்போர்செய்வனே.

இ - ள். திகிரி - (ஆணைச்) சக்கரத்தையும், வட்டக்குடை-சந்திரவட்டக் குடையையும், செங்கோல் - செங்கோலையும்உடைய, அபயன்-சோழராஜனது, செழுசிலம்பில் - செழுமையாகியமலையில், பகுதி - பிறபுலவர்களிடத்து பகுதி பெறுதற்குரிய, ஒட்டக்கூத்த பட்டனை - ஒட்டக்கூத்தனென்னும் புலவனை, நான்—, அ பனைகவியின்- அந்தக் கவியாகியபனையினல், மிகுதஒட்டத்தட்டி- மிகவும் அச்சமாகத்தட்டி, விட்டகை ஒட்டில்உருக்கி - உடைந்தகை யோட்டில் வைத்துஉருக்கி, குத்தி - குத்தி, புகுதஒட்டித்தட்டி - புகும்படி ஒட்டித்தட்டி, மேல் அணுகாவண்ணம் - இனிநம்மீது எதிர்த்துவராவகை, போர்செய்வன் - சண்டைசெய்வேன், எ - று.

### ஒட்டக்கூத்தன் சோழனைப் புகழவேண்டி முதலிரண் டடிபாடி சற்று ஆலோசிக்க (மற்ற) இரண்டடி யையும் புகழேந்திப்புலவர் பாடியது.

26. வென்றிவளவன்விறல்வேந்தர்தம்பிரான்
என்றுமுதுகுக்கிடான்கவசம் — துன்றும்
வெறியார்தொடைகமழுமீனவர்கோன் கைவேல்
எறியான்புறங்கொடுக்கினென்று.

இ - ள். துன்றும் - மலர்கள்நெருங்கிய, வெறிஆர் - மணம்பொருந்திய, தொடை - பூமாலை, கமழும் - பரிமளிக்கப் பெற்ற, மீனவர்கோன் - பாண்டி யன், புறம்கொடுக்கின் - (பகைவர்) முதுகுகாட்டினல், கைவேல் எறியானெ ன்று - தன்கைவேலை (அவர்மீது) எறியானென்று, வென்றி வளவன் விறல்வே ந்தர் தம்பிரான் - வெற்றியையுடைய சோழனகிய வலியவேந்தர்க்கு வேந்தன், என்றும் - எந்நாளும், முதுகுக்கு கவசம்இடான் - (தன்) முதுகுக்குக் கவசம் பூணன், எ - று.

### மற்றும் சோழனைநோக்கி உனக்கு விற்கொடியையும் மீனக்கொடியையும் உடைய சேரனும் பாண்டியனும் தோற்றர்களாயினும் அவ் வில்லும் மீனும் என் பெண்ணின்புருவமும் கண்ணு மாகிவந்து உன்னை வெல்கின்றன எனத் துறை யிலமைத்துப் பாடியது.

27. பழியும்புகழுமெவர்க்குமுண்டாமிந்தப்பாரினுனக்
கழியுஞ்சிலையுங்கயலுமென்றூலகளங்கதுங்கா

மொழியும்பொழுதெங்கள்பெண்சக்ரவர்த்திமுகத்திரண்டு
விழியும்புருவமுமாகியந்தோவுனைவெல்கின்றவே.

இ - ள். அகளங்க துங்கா - அகளங்கதுங்கனே, இந்தப்பாரில் - இந்தப் பூமியில், எவர்க்கும்-யாவருக்கும், பழியும்புகழும்உண்டாம்—, (என்னெனின்) கயலும்சிலையும் உனக்கு அழியும்என்றால் - மீனும்வில்லும், உனக்குத்தோற்கு மெனினும், (அவை) மொழியும்பொழுது - சொல்லுமிடத்து, எங்கள்பெண் சக்ரவர்த்திமுகத்து - எங்கள் பெண்ணரசியின்முகத்தில், இரண்டுவிழியும்புரு வமும்ஆகி - இரண்டுகண்களும் புருவங்களுமாகிவந்து, அந்தோ உன்னைவெல் கின்ற - அந்தோ உன்னைவெல்லாநின்றன, எ - று.

அந்தோ - இரக்கத்தின்கண் வந்ததெனினுமாம்.

ஒருநாள் சோழன் திருக்குறுங்குடியென்னும் தலத்தில் எழுந்தருளியிரா நின்ற திருமாலின்மீது வல்லோசையுள்ள கட்டளைக்கலித்துறை பாடும்படி ஒட்டக்கூத்தனையும் புகழேந்திப்புலவரையும் கேட்க ஒட்டக்கூத்தன் பாடியது.

28. திக்குளெட்டுக்கயந்துக்கமுற்றுத்திடுக்கிட்டலற
மைக்கடற்குட்சரந்தைக்கவிட்டோர்க்கிடமாமதுர
இக்குமுற்றிக்கணுச்சற்றுவிட்டுத்தெறித்திட்டமுத்தைக்
கொக்குமொக்கிக்கக்கிவிக்குமச்சோலைக்குறுங்குடியே.

இ - ள். திக்குள்எட்டுக்கயம் - அஷ்டதிக்குயானைகளும், துக்கம்உற்று - வருத்தமடைந்து, திடுக்கிட்டுஅலற-திடுக்கிட்டுஅலறும்படி, மைகடற்குள்-கருங் கடலின்மீது, தைக்க-பதியும்படி, சரம்விட்டோர்க்கு இடம் - பாணமேவிய ஸ்ரீராமபிரானுக்கு இடமாவது, மாமதுரம் இக்குமுற்றி-மிகவும் இனிமையாகிய கரும்புகள்முதிர்ந்து, கணுசற்றுவிட்டு - கணுக்கள் சற்றேவெடித்து, தெறித்தி ட்டமுத்தை - தெறித்தமுத்துக்களை, கொக்கு-கொக்குகள், மொக்கி-விழுங்கி, கக்கிவிக்கும் - கக்கிவிக்குதற்கிடமாகிய, அச்சோலை - அந்தச்சோலைகள் சூழ்ந்த, குறுங்குடியே - திருக்குறுங்குடிதான், எ - று.

புகழேந்திப் புலவர் பாடியது.

29. எட்டெழுத்தைக்கருத்திற்குறித்திட்டுநித்தம்பரவும்
சிட்டர்கட்குத்திருப்பொற்பதத்தைச்சிறக்கத்தருமல்
வட்டநெட்டைப்பணிமெத்தையத்தற்கிடம்வாரிசப்பொ
குட்டினத்துக்குலந்தத்திமுத்தீனுங்குறுங்குடியே.

இ - ள். எட்டெழுத்தை - திருவட்டாட்சரத்தை, கருத்தில் - தம்மனத் தில், குறித்திட்டு-தியானித்து, நித்தம் - நாள்தோறும், பரவும் - துதிக்கின்ற, சிட்டர்கட்கு - தாசர்களுக்கு, திருப்பொன்பதத்தை - தமது அழகிய திருவடி

சிறக்கதரும்-சிறப்பாகக்கொடுக்கின்ற, அவட்டம் நெட்டைபணிமெத்தை-அந்தவட்டவடிவாகச் சுற்றியிருக்கின்ற ஆதிசேஷனாகிய மெத்தையையுடைய, அத்தற்குஇடம் - எம்பெருமானுக்கு இடமாவது, வாரிசம்பொருட்டில் - தாமரை மலரின்கர்ணிகையில், நத்துக்குலம்தத்தி - சங்குக்கூட்டங்கள் தாவியிருந்து, முத்துஈனும் - முத்துகளைப்பெறுகின்ற, குறுங்குடியே - திருக்குறுங்குடியென்னும் திருப்பதியேயாம், எ - று.

**கார்காலங்கண்டு மயங்கிய தலைவிக்குத் தோழிகூறியதாக ஒட்டக்கூத்தன் பாடியது.**

30. நையும்படியேநாங்கொற்றநங்கோன்செஞ்சிவரைமீதே
ஐயம்பெறுநுண்ணிடைமடவாயகிலின்றூபமுகிலன்று
பெய்யுந்துளியோமழையன்றுபிரசத்துளியேபிழையாது [ரே
வையம்பெறினும்பொய்யுரைக்கமாட்டார்தொண்டைநாட்டா

இ - ள். நாம்கொற்றம் நையும்படியே - நாம் வெற்றி கெடும்படியோ, நம்கோன் செஞ்சிவரைமீது - நம்மிறைவனது செஞ்சிமலையின்மீது, ஐயம்பெறும் நுண் இடைமடவாய் - சந்தேகத்துக்கிடமாகிய நுட்பமாகிய இடையையுடைய பெண்ணே, அகலின்தூபம்-(இவ்விடத்துத் தோன்றுவது) அகிலின் புகையே, முகில்அன்று - மேகமல்ல, பெய்யும்துளியோ - சொரிகின்றதுளிகளோ, மழை அன்று - மழைத்துளியல்ல, பிரசத்துளியே-தேனின் துளிகளே, பிழையாது-தவறாது, வையம்பெறினும் - உலகமுழுதும் பெறவரினும், தொண்டைநாட்டார் - தொண்டை நாட்டிலுள்ளவர்கள், பொய் உரைக்க மாட்டார்-பொய்சொலமாட்டார்கள், எ - று.

தலைமகனைப்பிரிந்து தனியேயிருந்த தலைமகள் கார்காலங்கண்டு வருந்தும்போது தோழி அவள்வருத்தந் தணிவித்தற்பொருட்டு மேகத்தை அகிற்புகையென்றும் மழைத்துளியைத் தேன்துளி யென்றும்சொல்லித் தேற்றினளென்பதுகருத்து.

**புகழேந்திப்புலவர் செங்கலங்கை வடுகநாதமுதலியார்மேல் பாடியது.**

31. தன்னுடன்கூடப்பிறந்தசகோதரத்தம்பியுயிர்
அந்நிலைமாண்டதுதோன்றாமன்மூடிவைத்தன்னமிட்டான்
மன்னவர்போற்றிடவாழ்செங்கலங்கைவடுகனுக்குக்
கன்னனுஞ்சோமனுமோவிணையாகக்கழறுவதே.

இ - ள். தன்னுடன் கூடப்பிறந்த சகோதரத்தம்பி - தன்னோடு கூடப்பிறந்த ஒருதாய்வயிற்றுத் தம்பியானவர், உயிர்மாண்டது - உயிர் நீங்கினதாகிய, அந்நிலைதோன்றாமல் - அந்தநிலைமை பிறர்க்குவெளியாகாமல், மூடிவைத்து - (பிணத்தை) மறைத்துவைத்து, அன்னம்இட்டான் - அன்னம்பகிர்ந்தான், (அவ

லால்) மன்னவர் போற்றிடவாழ் - அரசரும வணங்கும்படி வாழ்கின்ற, செங்கலங்கை வடுகனுக்கு - செங்கலங்கை என்னும் ஊரிலுள்ள வடுகநாத முதலியாருக்கு, கன்னனும் சோமனுமோ இணையாக கழறுவது - கர்ணனையும் சோமனையுமோ சமானாகச்சொல்லுவது, எ-று.

சோமன் ஒருபிரபு.

**சோழன் ஒருநாள் ஒட்டக்கூத்தப் புலவனையும், புகழேந்திப்புலவனையும் நோக்கி, "நெய்த்தானத்தானைச் சேவித்தே" என்பதுமதடமாய் வரும்படி சந்தவிருத்தமாக ஆளுக்கு ஒவ்வொருபாட்டுப் பாடுகவென ஒட்டக்கூத்தப்புலவர் பாடியது.**

32. *விக்காவுக்காவித்தாவிப்போய்விட்டானட்டார்சுட்டூர்புக்கார்*
*இக்காயத்தாசைப்பாடுற்றேயிற்றேடிப்போய்வைப்பீர்நிற்பீர்*
*அக்காடட்பேய்தொக்காடச்சூழப்பாடத்தீவெப்பாடப்பூண்*
*நெக்காடக்கானத்தாடப்போர்நெய்த்தானத்தானைச்சேவித்தே.*

இ - ள். விக்கா - விக்கலகொண்டு, உக்கு - அஞ்சிநடுங்கி, ஆவிதாவிபோய் விட்டால் - (உடலைவிட்டு) உயிரானது அப்புறப்பட்டுப் போய்விட்டால், நட்டார் - (முன்பிரியாமல் பரிவுற்றிருந்த) தாய்தந்தைமுதலிய சுற்றத்தார், சுட்டு ஊர் புக்கார் - (உடமபைசசுட்டு) ஊரில் புகுந்துவாழ்வார், இக்காயத்து ஆசைப்பாடுஉற்று - இத்தன்மையாகிய இழிதன்மையாகிய தேகத்தினிடத்து ஆசைகொண்டு, இல்தேடிபோய்வைப்பீர - (அதனைப்போஷிக்க வித்தம்பொருளைத் தேடிவந்து அறஞ்செய்யாமல்,) வீட்டில்புதைத்து வைக்கின்றவர்களே, அக்காட - அந்நுராலே அனைத்தாடவும, பேய்தொக்குஆட-பேய்கள்கூடியாடவும், சூழ் அப்புஆட - சடாமகுடத்திலிருக்கும கங்கைஆடவும், தீவெப்புஆட - வலதுகையிலிருக்கும மழுவானது சுவாலித்துஆடவும, பூண்நெக்குஆட - காதிலணிந்த சர்ப்பக்குழைகள் நெகிழ்ந்துஆடவும், கானத்துஆடபோம் - மயானத்திலாடுகின்ற, அபோர் நெய்த்தானத்தானை-அந்தப்பெரிய நெய்த்தானம் என்னும் க்ஷேத்திரத்தில் எழுந்தருளிய பரமசிவனை, சேவித்து - வணங்கி, நிற்பீர் - நிற்கக்கடவீர், எ - று.

**புகழேந்திப் புலவர்.**

33. *தற்கோலிப்பூசற்பாசத்தேதப்பாமற்சாகைக்கேநிற்பீர்*
*முற்கோலிக்கோலிப்பூசித்தேமுட்டாமற்சேவித்தேநிற்பீர்*
*வற்றுநெட்டோடைப்பாரைச்சேண்மைப்பூகத்தேறித்தாவிப்போய்*
*நெற்றுணற்றலைப்பாகிற்சேர்நெய்த்தானத்தானைத்தியானித்தே.*

இ - ள். தன்கோலி - இருவினைகள் தன்னை வளைந்துகொள்ள, பூசல்பாசத்தே - பாசத்திரயமாகிய போராட்டத்தில் அகப்பட்டு, தப்பாமல் சாகைக்கே நிற்பீர் - தப்பாமலே சாகும்படி நிற்பவர்களே, முன்கோலிகோலி-முன் [illegible]

ந்து, முட்டாமல்பூசித்து - மந்திரதந்திர வழுவுவராமல் பூசைசெய்து, சேவித்து - வணங்கி, வற்றா நெடு ஓடை - வற்றாத நெடிய நீரோடைகளிலுள்ள, பாரைச்சேல் - பாரைமீன்கள், மைபூகத்து மேகமண்டலத்தை அளாவியிருக்கிற கமுகமரத்தில், தாவிஏறிப்போய் - தாவி ஏறிச்சென்று, (பாக்குக்குலைகளை உதிர்த்து அங்கிருந்துதிரும்பி) நெலதாள் உற்று - நெல்லின் அடியில்விழுந்து, (அந்நெற்கதிர் கதிர்களைச்சிதறி) ஆலை பாகில்சேர் - ஆலையாடிக் காய்ச்சப்படும் கரும்பின்பாகில் பாய்கின்ற, (வளப்பமிகுந்த) நெய்த்தானத்தானைத தியானித்து - நெய்த்தானத்தி லெழுந்தருளிய எமபெருமானைத் தியானித்து, ஈற்றீர்-ஈற்கக்கடவீர்கள், எ - று.

பாசத்திரயம் - மண் - பெண்-பொன்களில் ஆசை.

**வடுகநாதமுதலியார் குமாரர்வீட்டில் அசுபம் உண்டான காலத்தில் புகழேந்திப்புலவர் தமது கலியாணத் துக்கு வரும்படி பாடியது.**

34. முந்தவிளையோன்மாளமுத்தமிழோர்க்கன்னமிட்ட
அந்தவடுகன்மகனுயின்—வந்தென்
தலைக்கலியாணத்துக்கேதான்பிணத்தைமூடி
இலக்கணமாச்செய்தவைநீயே.

இ - ள். முந்த இளையோன்மாள - முற்காலத்தில் தம்பியிறக்க, (அந்தப் பிணத்தை மறைத்துவைத்து) முத்தமிழோர்க்கு அன்னம்இட்ட - முத்தமிழ்ப் புலவருக்கு அன்னம்பகிர்ந்த,அந்தவடுகன்மகன் ஆயின்-அந்த வடுகநாதமுதலியாருக்கு மகனுனல், பிணத்தைமூடி-(உன்தந்தைபோலநீயும்) பிணத்தைமறைந்து வைத்து, என்தலை கலியாணத்துக்குவந்து என்முதன்மையாகிய விவாகத்துக் குவந்து, இலக்கணமாச் செய்தவை - நீ (செய்யவேண்டிய) முறைமையாகச் செய்வாயாக, எ - று.

**புகழேந்திப்புலவர் அயன்றைப்பதிக் காவலனுகிய சடையன் என்பானது கொடையைப் புகழ்ந்து பாடியது.**

35. இரவலாளரோபெ நந்திருவுறுக
அரவுமிழ்மணியுமலைகடலமிர்தும
திங்கட்குழவியுஞ்சிங்கப்பறழும்
குதிரைமருப்புமுதிர்சுவைச்சுரபியும
ஈகெனமொழியினுமில்லெனமொழியான்
சடையனையயன்றைத்தலைவனைநீர்போய்
உடையதுகேண்மினுறுதியுள்ளோரே.

இ - ள். இரவலாளரே - யாசகரே, அரவு உமிழ்மணியும் - சர்ப்பம் ஈன்ற மாணிக்கத்தையும், அலைகடல் அமிர்தும் - அலைகளையுடைய திருப்பாற் கடலிற்பிறந்த அமிர்தத்தையும், திங்கள்குழவியும் - இளஞ்சந்திரனையும், சிங்கறழும்

சிங்கத்தின் குட்டியையும், குதிரைமருப்பும் - குதிரைக் கொம்பையும், முதிராசுவை சுரப்பியும் - மிகுந்த சுவையுள்ளபாலைச் சொரிகின்ற காமதேனுவையும், ஈகஎன மொழியினும் - தாவென்று கேட்கினும், இல்எனமொழியான் - இல்லையென்று கூறாதாகிய, சடையனை - சடையன் என்பவனை, அயன்றைத்தலைவனை - அயன்றை என்னும்பதிக்கு இறைவனை, நீர்போய் - நீங்கள்போய் அடைந்து, உறுதியுள்ளோர் - மனவுறுதியுடையவராய், உடையது-உம்மனத்தில் பெறநினைத்தபொருளை, கேண்மின் - கேளுங்கள், பெருதிருஉறுக-மிகுந்த சம்பத்தை யடையக்கடவீர், எ - று.

---

# பொய்யாமொழிப்புலவர் பாடல்.

---

இவர்தமது ஆசிரியர் கொல்லையைக் காத்திருக்கும்போது
காளிங்கன் என்னும் அரசனதுகுதிரை அப்பயிரை
மேயக்கண்டு, ஆசிரியர்வைவாரென்று பயந்து
அந்தக்குதிரை யிறக்கும்படி பாடியது.

1. வாய்த்தவயிரபுரமாகாளியம்மையே
ஆய்த்தமணலிலணிவரையிற்- காய்த்த
கதிரைமாளத்தின்னுங்காளிங்கனேறும்
குதிரைமாளக்கொண்டுபோ.

இ - ள். வாய்த்த வயிரபுரம் - நீர்வளமுதலியவை யமைந்த வயிரபுரத்தில் வாழ்கின்ற, மாகாளியம்மையே - மாகாளியம்மே, ஆய்த்த மணலில்-ஆய்ந்தமணலினும், அணிவரையில் - அழகியமலைநிலத்தினும், காய்த்த - காய்த்திருக்கிற, கதிரை - தினைக்கதிர்களை, மாள-அழியும்படி, தின்னும்-மேய்கின்ற, காளிங்கன்ஏறும் - காளிங்கராயனேறுகின்ற, குதிரை-குதிரையானது, மாள - இறக்கும்படி, கொண்டுபோ - அதைக் கொண்டுபோவாயாக, எ - று.

இது கம்பரால் பாடப்பட்டதெனக் கூறுதலுமுண்டு.

இது குதிரையிறக்கக்கண்ட இவர் உபாத்தியாயர் பாடியது.

2. பொதியிலகத்தியனைப்பொய்யாமொழியாய்ச்
சிதைவில்புலவர்சிகாமணியாய்த்—துதிசேரும்
செங்காட்டங்கோட்டத்துறையூரெனுந்தலத்தில்
தங்காட்டங்கொண்டிருப்பாய்தான்.

இ - ள். பொதியில் அகத்தியனை - பொதியமலையில் அகத்தியனை, பொய்யாமொழியாய் - பொய்யாமொழிப் புலவனேயும், சிதைவு [illegible]

மணியாய் - அழிவில்லாத புலவர்களுக்குச் சூடாமணியாகியும், துதிசேரும்-புகழ்பொருந்திய, செங்காட்டங் கோட்டத்துறையூர் என்னும்தலத்தில் - செங்காட்டங் கோட்டத்துறையூர் என்னும்ஊரில், தங்குஆட்டம் கொண்டிருப்பாய் - தங்கி யிருத்தலாகிய விளையாட்டையுங் கொண்டிருப்பாய், எ - று.

அகத்தியனே பொய்யாமொழியென்னும் பெயர்பூண்டு செங்காட்டங்கோட்டத்துறையூரில்வந்து தங்கியிருக்கிறான் என்பதுகருத்து.

பாண்டியன் வேண்டுகோளின்படி பொற்றமரைத்தடத்தில்
அழுந்திக்கிடந்த சங்கப்பலகை மிதக்கப்பாடியது.

3. பூவேந்தர்முன்போற்புரப்பாரிலேயெனினும்
பாவேந்தருண்டென்னும்பான்மையாற்—கோவேந்தன்
மாறனறியமதுராபுரித்தமிழோர்
வீறணையேசற்றேமித.

இ - ள். பூவேந்தர் - பூமியையுடைய அரசரில், முன்போல் புரப்பார்இல்லெனினும் - முன்போலத தமிழைக்காப்பவர் இல்லையாயினும், பாவேந்தர் உண்டென்னும் பான்மையால் - வித்வான்கள் உண்டென்னுந் தன்மையால், கோவேந்தன் - அரசர்க்கரசனாகிய, மாறன் அறிய - பாண்டியனறியும்படி, மதுராபுரிதமிழோர் - மதுரைத் தமிழ்ச்சங்கத்தார், வீறுஅணையே - செருக்குதற்குக் காரணமாயிருந்த பலகையே, சற்றேமித - சற்றுமிதப்பாயாக, எ - று.

சங்கப்புலவருடைய உருவங்களாகிய விக்கிரகங்கள் தலை
யசைக்கும்படி பாடியது.

4. உங்களிலேயானொருவனொவ்வுவனோவொவ்வேனோ
திங்கட்குலனறியச்செப்புங்கள்—சங்கத்தீர்
பாடுகின்றமுத்தமிழ்க்கென்பைந்தமிழுமொக்குமோ
ஏடெழுதாரேழெழுவீரின்று.

இ - ள். சங்கத்தீர் - சங்கப்புலவர்களே, உங்களிலே யான்ஒருவன் ஒவ்வுவனோ - உங்களிலே நானொருவன் ஒப்பாவேனோ, ஒவ்வேனோ - ஒப்பாகேனோ, திங்கட்குலன் அறியசெப்புங்கள் - சந்திரகுலத் தரசனாகிய பாண்டியனறியச் சொல்லுங்கள், ஏடெழுதார் - இதழ்விரிந்த பூமாலையையணிந்த, ஏழ் எழுவீர் - நாற்பத்தொன்பதின்மரே, இன்று-இப்பொழுது, பாடுகின்ற முத்தமிழ்க்கு - நீர் பாடுகின்ற முத்தமிழ்ப்பாடல்களுக்கு, என்பைந்தமிழும் ஒக்குமோ - என் பைந்தமிழ்ப்பாடல்களும் ஒத்திருக்குமோ, எ - று.

## பொய்யாமொழிப்புலவர் பாடல்.

இவர் பாலைநிலத்தின்வழியாக ஊருக்குப் போகும்போது முருகக்கடவுள் ஒருவேடுவ வுருக்கொண்டுவந்து நீயாரென்றுகேட்க, பொய்யாமொழியென்னும் ஒருவித்வான் என, அப்படியானால் என்மீது ஒருபாடலைப்பாடு என்று முருகர்சொல்ல, இவர் உன்பெயர் என்னென்றுகேட்க, முருகர்தம்பெயர் முட்டையென்றும், பாட்டு சுரம்போக்குத் துறையாயிருக்கவேண்டுமென்றும் சொல்லப் பாடியது.

5. *பொன்போலுங்கள்ளிப்பொறிபறக்குங்கானலிலே*
*என்பேதைசெல்லற்கிசைந்தனளே—மின்போலும்*
*மானவேன்முட்டைக்குமாறாயதெவ்வர்போம்*
*கானவேன்முட்டைக்குங்காடு.*

இ - ள். மின்போலும் - மின்னலைநிகர்க்கின்ற, மானம் - பெருமையடைந்த, வேல் - வேலாயுதத்தையேந்திய, முட்டைக்கு மாறாய - முட்டையென்பவனுக்கு மாறுபட்ட, தெவ்வர்போம் - பகைவர்போகிற, கான - மணம்[illegible]ன்ற, வேல்முள்தைக்கும்-வேலமுள்தைக்கிற, காடு-காட்டில், பொன்போ[illegible] பொன்னைநிகர்க்கின்ற, கள்ளி - கள்ளிச்செடிகளினின்றும், பொறிபறக்[illegible] நெருப்புப் பொறிபறக்கின்ற, கானலிலே-கானல்பரவிய பாலைநிலத்தில், என்[illegible] பேதை - என்பேதைப் பெண்ணானவள், செல்லற்குஇசைந்தனள் - போ[illegible] இசைந்தாள், ஏ-இதென்னபாவம், எ - று.

இதனைக்கேட்டுக்களித்த முருகக்கடவுள் பொய்யா மொழிப்புலவனைப் புகழ்ந்துபாடிய சுரம்போக்கு.

6. *விழுந்ததுளியந்தரத்தேவேமென்றும்வீழின்*
*எழுந்துசுடர்சுடுமென்றேங்கிச்—செழுங்கொண்டல்*
*பெய்யாதகானகத்திற்பெய்வளையுஞ்சென்றனளே*
*பொய்யாமொழிப்பகைஞர்போல்,*

இ - ள். விழுந்ததுளி அந்தரத் தேவேம்என்றும் - விழுந்த மழைத்துளி ஆகாசத்திற்றானே வேகுமென்றும், வீழின்-வீழ்ந்தால், எழுந்து - மே[illegible] சுடர்சுடும்என்று - அனலானது சுடுமென்று, ஏங்கி - ஏக்கமுற்று, செழு[illegible]ண்டல் - செழுமையாகிய மேகங்கள், பெய்யாத கானகத்தில் - ம[illegible] காட்டில், பொய்யாமொழிப் பகைஞர்போல் - பொய்யாமொழி[illegible] [illegible]போல, பெய்வளையும் போயினள் - [illegible]; ஏ - இதென்னபாவம், எ - று.

## ௩அ அந்தகக்கவி வீரராகவமுதலியார் பாடல்.

திருவேங்கடம் என்னும் கொடையாளியை யிவர் போயடைந்திருக்க, அவன் இரங்கி இவருக்குச் சம்மானம்பண்ணப் போந்தருணத்தில், அவன் தமையனாகிய கண்ணுக்கினியான் என்பவன் தடுத்தமையால், அவன்மீது கோபங்கொண்டு அவனை மூதேவியென் றிகழ்ந்தும், அவன் தம்பியாகிய திரு வேங்கடத்தைச் சீதேவியென்று புகழ்ந்தும் பாடினது இச்செய்யுள்.

1. *தேன்பொழிந்தவாயான்றிருவேங்கடத்துடனே*
*என்பிறந்தான்கண்ணுக்கினியானே—வான்சிறந்த*
*சீதேவியாருடனேசெய்யதிருப்பாற்கடலில்*
*மூதேவியேன்பிறந்தாண்முன்.*

இ - ள். தேன்பொழிந்தவாயான் - தேனைச்சொரிந்த வாயையுடையவனாகிய, திருவேங்கடத்துடனே, திருவேங்கடம் என்பவனோடு, கண்ணுக்கினியான் என்பிறந்தான் - கண்ணுக்கினியான் ஏன்பிறந்தான், செய்யதிருப்பாற்கடலில் - அழகிய திருப்பாற்கடலில், வான்சிறந்த சீதேவியாருடனே-மேன்மையிற்சிறந்த திருமகளோடு, முன்-முன்னே, மூதேவி-மூதேவி, ஏன்பிறந்தாள்-ஏன்பிறந்தனள், எ - று.

தேன்பொழிந்த வாயான் என்பதற்கு இன்சொல்லை யுடையான் என்பது கருத்து.

தமக்கு யானையைப் பரிசிலாகக் கொடுத்த இராமன் என்பவனைப் புகழ்ந்து பாடியது.

2. *இம்பர்வானெல்லையிராமனையேபாடி*
*என்கொணர்ந்தாய் பாணநீயென்றாள் பாணி*
*வம்பதாங்களபமென்றேன் பூசுமென்றாள்*
*மாதங்கமென்றேன்யாம்வாழ்ந்தேமென்றாள்*
*பம்புசீர்வேழமென்றேன் றின்னுமென்றாள்*
*பகடென்றேனுழுமென்றாள்பழனந்தன்னைக்*
*கம்பமாவென்றேனற்களியாமென்றாள்*
*கைம்மாவென்றேன்சும்மாகலங்கினாளே.*

இ - ள். பாணி - பாடினியானவள், பாண-பாணனே, இம்பர்வான் எல்லை இராமனையேபாடி - இவ்வுலகமும் அவ்வுலகமும் (தன்புகழ்க்கு) எல்லைகளாகவுடைய இராமன் என்பவனைப்பாடி, நீ என்கொணர்ந்தாய் - நீ யென்னபொருள் கொண்டுவந்தாய், என்றாள் - என்று என்னைநோக்கிவினவினள், (அதற்குயி

டையாகநான்) வம்பதுஆம் களபம்என்றேன்-புதுமையாகிய களபமென்று சொன்னேன், (அதற்குஅவள்) பூசும்என்றாள் - பூசுவீர்என்று சொன்னாள், மாதங்கம் என்றேன் - மாதங்கம் என்றுசொன்னேன், நாம் வாழ்ந்தேம் என்றாள்-நாம் வாழ்ந்தோம்என்றாள், பம்புசீர் வேழம்என்றேன் - மிக்கசிறப்பினையுடையவேழமென்றுசொன்னேன், தின்னும்என்றாள்-தின்னுவீர்என்றாள், பகடுஎன்றேன்-பகடென்றுசொன்னேன், பழனம் தன்னை உழும்என்றாள் - வயலைஉழுவீரென்றாள், கம்பமாஎன்றேன் - கம்பமா என்றுசொன்னேன், நல்களிஆம் என்றாள்-நல்லகளி இளறலாமென்றாள், கைம்மாஎன்றேன் - கைம்மா என்றுசொன்னேன் (பொருள் தெரியாமையால்) சும்மா கலங்கினாள்-சும்மா கலங்கினென்றாள், எ-று.

களபம்முதலியன யானைக்குப பரியாயப்பேர்கள், இவன் பரிசிலாகப் பெற்றுவந்தது யானையாதலால் அதன்பரியாயப் பேர்கள்கூறிவர, அவற்றிற்கெல்லாம் வேறுபொருள்கொண்டு பரிகசித்ததாகக்கூறி கைம்மாஎன்பதற்கு வேறுபொருள் கூறத்தெரியாது மயங்கினதாகக்கூறியது, களபம் - கலவைச்சந்தநம், மாதங்கம் - உயர்ந்தபொன், வேழம் - கரும்பு, பகடு-எருமைக்கடா, கம்பம் - கட்டுத்தறி, கம்பமா - கமலையரைத்துச்செய்கமா.

தமக்குயானையைப் பரிசிலாகக் கொடுத்த தானன்என்பவனைப்
புகழ்ந்து பாடியது.

3. இல்லெனுஞ்சொல் அறியாத சீகையில்வாழ் தானனைப்போய்
யாழ்ப்பாணன்யான், பல்லைவிரித்திரந்தக்கால் வெண்சோறும்பழந்தூசும் பாலியாமல், கொல்லநினைந்தேதனது நால்வாயைப் பரிசென்றுகொடுத்தான்பார்க்குள், தொல்லையெனதொருவாய்க்குநால்வாய்க்கு மிரையெங்கே தேடுவேனே.

இ - ள். இல் என்னும் சொல் அறியாத - இல்லையென்று சொல்லுஞ்சொல்லை அறியாத, சீகையில்வாழ்தானனை - சீகையென்னும் ஊரில் வாழ்கின்றதானன் என்பவனை, பாணன்யான்போய் - பாணனாகிய நான்போய், பல்லைவிரித்து இரந்தக்கால் - பல்லைததிறந்து யாசித்தால், வெண்சோறும்-வெண்மையாகிய அன்னத்தையும், பழந்தூசும் - பழயவஸ்திரத்தையும், பாலியாமல்-கொடுக்காமல், கொல்லநினைந்து - (என்னைக்) கொல்லஎண்ணி, தனது நால்வாயை-தனது நால்வாயினை, பரிசென்றேகொடுத்தான் - எனக்குப் பரிசிலென்றேதந்தான், பார்க்குள்-உலகத்தில், தொல்லைஎனது ஒருவாய்க்கும்-பழைய என்ஒருவாய்க்கும், நால்வாய்க்கும் - (இப்பொழுதுபெற்ற) நால்வாய்க்கும், இரையெங்கே தேடுவேன் - உணவுஎங்கே கொண்டுவந்து நிறைப்பேன், எ - று.

நால்வாய் - நான்குவாய்எனவும், தொங்குகின்ற வாயினையுடைய யானையெனவும் பொருள்படும். ஒருவாய்க்கு இரைபெறாத நான்ஐந்துவாய்க்கு இரையெங்கே பெறுவேன் என்பதுசொன்னயம்.

### பாலனைப்பழித்தல்.

4. முன்னாளிருவர்க்கும்யாக்கையொன்றாகமுயங்கினமால்
பின்னாட்பிரியன்பிரியையென்றாயினப்பேசலுறும்
இந்நாட்கொழுநன்மனைவியென்றாயினமின்னமுமோர்
சின்னாளிலெப்படியோவையநீயின்றுசெப்புகவே.

இ - ள். (உன்தந்தையும்நானும்) முன்னாள் - முன்னாளில், இருவர்க்கும் யாக்கைஒன்று ஆகமுயங்கினம் - இருவருக்கும் உடலொன்றென்னும்படி கலந்திருந்தோம், பின்னாள் - பிற்காலத்தில், பிரியன் பிரியையென்றுஆயினம்-பிரியன்பிரியையென்று சொல்லலானோம், பேசல்உறும் இந்நாள்-சொல்லப்பட்ட இக்காலத்தில், கொழுநன் - கணவன், மனைவி - மனையாட்டி, என்றுஆயினம், என்று சொல்லப்பட்டவரானோம், இன்னம் ஓர் சில்நாளில் இன்னமும் ஒரு சொற்பகாலத்தில், எப்படியோ - எவ்வாறாகுமோ, ஐய - புதல்வனே, நீ இன்றுசெப்புக - நீ யின்றுசொல்லக் கடவாய், எ - று.

மகனே, நீபிறந்தபிறகு உன்தந்தைக்கு என்மீதுள்ள அன்பு நீங்கும்படி நேரிட்டதென்பது கருத்து.

### அகளங்கன் என்பவனைப் புகழ்ந்து பாடியது.

5. வடவைக்கனலைப்பிழிந்துகொண்டு
மற்றுமொருகால்வடித்தெடுத்து
வாடைத்துருத்திவைத்தூதி
மறுகக்காய்ச்சிக்குழம்புசெய்து
புடவிக்கயவர்தமைப்பாடிப்
பரிசுபெறாமற்றிரும்பிவரும்
புலவர்மனம்போற்சுடுநெருப்பைப்
புழுகென்றிறைத்தாற்பொறுப்பாளோ
அடவிக்கதலிப்பசுங்குருத்தை
நச்சுக்குழலென்றஞ்சியஞ்சி
அஞ்சொற்கிளிகள்பஞ்சரம்விட்
டகலாநிற்குமகளங்கா
திடமுக்கடவாரணமுகைத்த
தேவேதேவசிங்கமே
திக்குவிசயஞ்செலுத்திவரு
செங்கோனடாத்துமெங்கோனே.

இ - ள். வடவைக்கனலைப் பிழிந்துகொண்டு - வடாவா முகாக்கினியைக் கசக்கிப் பிழிந்துகொண்டு, மற்றும் ஒருகால் வடித்துஎடுத்து - மற்று மொருதரம்

வடிகட்டியெடுத்து, வாடை - வடகாற்றாகிய, துருத்திவைத்தூதி - துருத்தியைவைத்தூதி, மறுகக்காய்ச்சி குழம்புசெய்து - மறுபடியும் காயச்சிக்குழம்பாக்கி, புடவிகயவர் தமைப்பாடி - உலகத்திலுள்ள கீழ்மக்களைப்புகழ்ந்துபாடி, பரிசுபெறாமல் திரும்பிவரும்-பரிசுபெறாமல் திரும்பிவருகிற, புலவர்மனம்போல் சுடும்நெருப்பை - வித்துவான்களுடைய மனத்தைப் போலச்சுடுகின்ற நெருப்பை, புழுகுஎன்று இறைத்தால் - புனுகுஎன்றுசொல்லி இறைத்தால், பொறுப்பாளோ - ஆற்றுவாளோ, அடவி-காட்டிலுள்ள, கதலி-வாழையின், பசுங்குருத்தை - பசுமையாகியகுருத்தை, நச்சுக்குழலென்று அஞ்சிஅஞ்சி - நச்சுக்குழலென்றுபயந்துபயந்து, அம்சொல்கிளிகள் - அழகிய சொல்லையுடையகிளிகள், பஞ்சரம்விட்டு அகலாநிற்கும் - கூட்டைவிட்டு வெளிப்படாநின்ற, அகளங்கா - அகளங்கனே, திடம்-உறுதியாகிய, முக்கடம்வாரணம் உகைத்த - மும்மதங்களையுடையயானையைநடாத்திய, தேவே - தேவனே - தேவசிங்கமே - தேவர்களுக்குள் சிங்கம்போல்பவனே, திக்குவிசயம் செலுத்திவருபவனே—, எ - று.

சிதம்பரபூபதியின் மீதுபாடியவை.

நற்றாயிரங்கல்.

6. மாதரணிமென்முலைதோய்மாராசிதம்பரபூ
மாதரணிராசர்மகிழ்மாவசன — மாதர்
மறுகிடத்தேயம்பொன்மடவார்பழிக்கநெஞ்ச
மறுகிடத்தேங்குந்துரைப்பெண்வா.

இ - ள். மாதர் - மாதரது, அணி - அழகாகிய, மெல் - மெல்லிய, முலைதனங்களில், தோய் - படிகின்ற, மாரா-மன்மதனே, சிதம்பரபூமா - சிதம்பரபூபதியே, தரணிராசாமகிழ்-பூபாலர்கள் மகிழ்தற்கேதுவாகிய, மாவசன-மிருதுவசனங்களை யுடையவனே, மாதர-அழகாகிய, மறுகிடத்தே-தெருக்களிலுள்ள, அம்பொன்மடவார் பழிக்க - அழகிய திருமகளையொத்த மாதர்கள்நிந்திக்க, நெஞ்சம் மறுகிட - மனமயங்க, துரைப்பெண் - எங்கள் பெண்ணரசி, தேங்கும் - திகையாநின்றாள், (ஆதலால் அவளைக் காக்குமபொருட்டு) வா - நீ வருவாயாக, எ - று.

இதுவும் அத்துறை.

7. சொல்லுமல்லும்பகலுஞ்சோருங்கிடைகிடக்கும்
கல்லுமுருகக்கனிந்தரற்றும் — புல்லியணை
விண்கலக்குங்கீர்த்தியுறுவேள்சிதம்பரக்குழுஞ
பெண்கலக்கங்கொண்டுநின்றன்பேர்.

இ - ள். விண்கலக்குங்கீர்த்திஉறு - சுவர்க்கலோகத்திலும் வியாபித்திருக்கிற கீர்த்திமிகுந்த, வேள் - மன்மதனையொத்த, சிதம்பரக்குழுஞ - சிதம்பரனே, பெண் - எமதுபெண்ணானவள், கலக்கங்கொண்டு - மனங்கலங்கி, நின்றன்பேர் - உன்பெயரை, அல்லும்பகலும்சொல்லும் - இரவினும் பகலினும் சொல்

வாடின்றாள், சோரும்-தளர்வாள், கிடைகிடக்கும் - படுக்கையில் (செயலற்றுக்) கிடப்பாள், கல்லும்உருக-கற்களும் உருகும்படி, கனிந்துஅரற்றும்-நைந்துஅழுவாள், (ஆதலால்இவளை) புல்லிஅணை-கலந்தணைக்கவேண்டும், எ - று.

8. வந்தனந்தபெண்பூமணந்தோய்ந்தபாயப்பா
வந்தனம்விம்மிச்சேர்ந்தாள்வாகோடி — வந்தனங்கள்
அன்னமனங்கொள்ளாமலாள்சிதம்பரக்குமுண
அன்னமனங்கொண்டுபவேயாங்கு.

இ - ள். சிதம்பரக்குமுண - சிதம்பரவள்ளலே, அன்னம் - (நடையால்) அன்னம்போல்பவளாகிய என்பெண், வந்து - (சென்றற்) காற்றானது, அனந்தம் - அநேகமாகிய, மெல்பூமணந்தோய்ந்து - மெல்லியமலர்களின் மணத்திற் படிந்து, பாய - (வந்து) படுதலால், பாவம் - அந்தோ, தனம் விம்மிசேர்ந்தாள்-தனம்பூரித்துவாடினாள், அன்னம் கொண்டுஉய்ய - அன்னமுண்டு பிழைக்கும்படி, ஆங்கு-அவளிடத்தில், கல்அன்ன மனம்கொள்ளாமல்-கல்லேகர்த்தவன் மனமாயிராமல், ஆள் - (இரங்கி) ஆளவேண்டும், வா-வருவாயாக, கோடிவந்தனம் - (உமக்குக்) கோடிநமஸ்காரம், எ - று.

மாவாரிமுத்தவெண்பன்மாதுபயலைத்தணிசோ
மாவாரிமுத்தளித்தவைபோகா - மாவுச்
சிதம்பரவையாநீதிக்குளுயர்பூமா
சிதம்பரவையாநீதிக்கு.

இ - ள். சோமா - (குளிர்ச்சியாகிய தோற்றமுதலியவற்றால்) சந்திரனை நிகர்ப்பவனே, ஆரிமுத்து அளித்தவைபோகா - ஆரிமுத்து வள்ளல்பெற்றவை போகனே, மா உச்சிதம்பரவஜயா - மிகமேன்மையாக யாவராலும் துதிக்கப்படுகிற அழகனே, நீதிக்குள் உயர்பூமா - நீதிநெறியாலுயர்ந்த சார்வபௌமனே, சிதம்பரஜயா - சிதம்பரஜயனே, நீதிக்கு - (எமக்கு) நீயே திக்கு, (ஆதலால்) மா - பெரிய, வாரி - கடலிற்பிறந்த, முத்தம் - முத்துப்போன்ற, வெள்பல் - வெள்ளியபல் வரிசையையுடைய, மாது - (என்) பெண்ணினது, மயலை - காம மயக்கத்தை, தணி-தணித்தருளவேண்டும், எ - று.

10. பங்கஜமேன்மேவியசௌபாக்யசுபமானளித்த
அங்கஜவேள்வெங்கணையாலாவிநொந்த—எங்களிட
மாரஞ்சிதப்பரவுமாதினையாள்கோடிநமஸ்க்
காரஞ்சிதம்பரயோகா.

இ - ள். சிதம்பரயோகா - சிதம்பரவள்ளலே, பங்கஜம்மேல் மேவிய - தாமரைமலர்மேல் வீற்றிருக்கிற, சௌபாக்ய சுபமான்அளித்த - சௌபாக்கியங்களையும் சுபங்களையும்தருகிற திருமகள்பெற்ற, அங்கஜவேள் - மன்மதனது, வெம்கணையால் - கொடியபாணங்களால், ஆவிநொந்த - மனம்வருந்தின, எங்

கள்இடம் - எம்மிடக்துள்ள, மாரஞ்சிதம் - மிகவும் மனோரஞ்சகத்துக் கேது வாய், பரவும் - புகழப்படுகிற, மாதினை - பெண்ணை. ஆள்-ஆண்டருளவேண் டும், கோடிநமஸ்காரம் - (உனக்குக்) கோடிவந்தநம், எ - று.

11. கோளரவேந் துலகிலிந்தப் புதுமையுண்டோ வெனமொழிந்தகுமுறுகேளாய், ஆனாவர்த மைக்கோர்ந்த கற்புடையபாஞ்சாலியணைந்தவீமன், வாளரிபோ லருகிருக்கமலை வெற்பிலிருந்துவந்த மாமனரைச், சாளரவா சலத்திறந்து வரவழைத்து முலையாரத்தழுவினளே.

இ - ள். கோள் அரவு ஏந்து உலகில் - வலிய பாம்பாகிய ஆதிசேடனால் தாங்கப்பட்ட இந்த உலகத்தில், இந்தப் புதுமை உண்டோ எனமொழிந்த குமுறுகேளாய் - இந்த ஆச்சரிய முண்டோ என்றுகேட்ட குருவே கேட்பாயாக' ஆனாவர் தமைச்சேர்ந்த - ஐந்து நாயகரைச் சேர்ந்த கற்பு உடைய பாஞ்சாலி - கற்பினையுடைய துரௌபதையை, அணைந்தவீமன் - தழுவினவீமன், வாள் அரிபோல அருகு இருக்க - கூரியவாள் சிங்கம்போல் அருகேயிருக்கவும், மலையவெற்பில் இருந்து வந்த மாமனாரை - பொதியமலையினின்றும் வந்தமாமனாரை, சாளரவாசலைத் திறந்து - சன்னலைத்திறந்து, வரவழைத்து - (உள்ளே) வரும்படியழைத்து, முலையாரத் தழுவினாள் - தனங்களிற் பொருந்தும்படி தழுவினாள், எ - று.

மாமனார் என்றது தென்றற்காற்றை. வாயு வீமனுக்குத் தந்தை யாதலால் துரோபதைக்கு மாமனாயிற்று

12. பணியாரந்தோசையிலைக்கொங்கைதோயந்திடப்பார்ப்பர்பல்லி
பணியாரந்தோசைபிலாச்செந்துபாய்ப்பிறப்பார்களென்னே
பணியாரந்தோசைமுன்னோனுக்கிட்டேத்திப்பழனிச்செவ்வேட்
பணியாரந்தோசைவராகாரன்னோர்க்கென்னபாவமிதே.

இ - ள். பணிஆர் - ஆபரணம்நிறைந்த, தோ-இரண்டாகிய, சையிலம் - மலைபோன்ற, கொங்கை-தனங்களை, தோய்ந்திடப் பார்ப்பர்-பொருந்தப்பார்ப்பார்கள், பல்லி-பல்லி, பணி-பாம்பு, ஆர் அந்து-நிறைந்த அந்து, (இவைகளாகவும்) ஓசை இலா செந்து ஆய் பிறப்பார்கள்-சத்தமற்றசெந்துக்களாகவும் ஜனிப்பார்கள், என்னே - (இதற்குக்காரணம்) யாதோ, பணியாரம் தோசை - பணியாரந் தோசைகளை, முன்னோனுக்கு இட்டு ஏத்தி-மூத்தபிள்ளையாருக்குப் படைத்துத் துதித்து, பழனிசெவ்வேள் - திருப்பழனியி லெழுந்தருளி இருக்கிற முருகவேளை, பணியார் - வணங்காதவர்கள்,சைவர்ஆகார் - சைவசமயிகளாக மாட்டார்கள், அந்தோ - ஐயோ, அன்னோர்க்கு - அவர்களுக்கு, இது என்ன பாவம் இதுஎன்ன தீவினைப்பயன், எ - று.

### விநாயகர்மீது நிந்தாஸ்துதியாகப் பாடியது.

13. வீரஞ்சொரிகின்றபிள்ளாயுனக்குப்பெண்வேண்டுமென்றால்
ஆருங்கொடாருங்களப்பன்கபாலியம்மான்றிருடன்
ஊருஞ்செங்காடுநின்றன்முகம்யானையுனக்கிளையோன்
பேருங்கடம்பனுன்றாய்நீலிநிற்குப்பெருவயிறே.

**இ - ள்** வீரம்சொரிகின்ற பிள்ளாய் - வீரத்தன்மை பொழிகின்றபிள்ளையாரே, உனக்குப் பெண்வேண்டும் என்றால் - உனக்குப்பெண்வேண்டு மானால் ஆரும்கொடார் - ஒருவரும்கொடுக்கமாட்டார் (ஏனெனின்), உங்கள் அப்பன்கபாலி - உங்கள்தந்தைகபாலி, அம்மான்திருடன் - அம்மானாகிற கிருஷ்ணன் வெண்ணெய் திருடி, ஊரும் - ஊரும், செங்காடு-செங்காடு, நின்றன்முகம்யானை-உன் முகம் யானைமுகம், உனக்கு இளையோன்பேரும் கடம்பன்-உன் தம்பிபேரும்கடம்பன், உன் தாய்நீலி - உன்தாய்நீலி, நிற்குப்பெருவயிறு - உனக்கும் மகோதரம் (ஆதலால்) எ - று.

கபாலி - கபாலத்தை யேந்தினவன். கடம்பன் - கடப்பமலர் மாலையை யணிந்தவன். நீலி - நீலநிறமுள்ளவள்.

### பிரயாணத்தில் கட்டுச்சோற்றைப் பறிகொடுத்தபோது பாடியது

14. சீராடையற்ற வைரவன்வாகனஞ்சேரவந்து
பாரார் நான்முகன் வாகனந்தன்னைமுன்பற்றிக்கௌவி
நாராயணனுயர் வாகனமாயிற்றுநம்மைமுகம்
பாரான் மைவாகனன் வந்தேவயிற்றினிற்பற்றினனே.

**இ - ள்.** சீர் ஆடை அற்ற - சிறப்புள்ள வஸ்திரமில்லாத, வைரவன்வாகனம் - வைரவக்கடவுளின் வாகனமானது, சேரவந்து-நெருங்கவந்து, பார்ஆரும் - உலகிலுள்ள, நான்முகன்வாகனம் தன்னைமுன் பற்றி கௌவி-பிரமனது வாகனத்தைப்பற்றிக் கவ்விக்கொண்டு, நாராயணன் - திருமாலின், உயர் - உயரப்பறக்கின்ற வாகனம் ஆயிற்று - வாகனமாய்விட்டது, (அதனால்)மைவாகனன் - ஆட்டுவாகன மாகவுடையவன், நம்மை - எம்மை, முகம் பாரான் - தாட்சணியம் பாராதவனாகி, வந்து வயிற்றினில் பற்றினன் - வந்து வயிற்றில் பற்றி யெரியாநின்றான், எ - று.

வைரவன்வாகனம் - நாய், நான்முகன் வாகனம் - அன்னம் (சோறு), நாராயணன்வாகனம் - கருடன் (கருடன்போலப்பறந்தோடிவிட்டது) மைவாகனன் - அக்கினிதேவன். அவன் வயிற்றினிற் பற்றினன் என்றது பசி அதிகரித்தது என்றபடி.

### கோதண்டராமனைப் புகழ்ந்து பாடியது.

15. பாண்டியன்மாலைகண்டாய் மகளேநினைப்பார்த்தவர்க்கு
வேண்டியவின்பமிகவருமோ வெண்ணையேதிருடித்
தாண்டிக்குதித்தநற்கோதண்டராமன்றடவரைமேல்
ஆண்டியிருப்பிடந்தாதனிருப்பிடமானபின்னே.

இ - ள். வெணணையே திருடி - வெண்ணெயையேதிருடி, தாண்டிகுதித்த - தாவிக்குதித்துக் கூத்தாடின, நல்கோதண்டராமன் - நல்ல கோதண்டராமனது, தடவரைமேல் - பெரிய மலையின்மீது, ஆண்டி இருப்பிடம் - ஆண்டியிருப் பிடமானது, தாதன் இருப்பிடம் ஆனபின் - தாதனிருப்பிடமான பிறகு, மகளே - மகளே, நினை பார்த்தவர்க்கு - உன்னைப் பார்த்தவர்களுக்கு, பாண்டியன்மாலை - பாண்டியன் மாலையாகிய வேம்பாயிருக்கிறாய், வேண்டிய இன்பம்மிகவருமோ-வேண்டியசுகம் மிகுதியாக உனக்கு உண்டாகுமோ, எ-று.

ஆண்டியிருப்பிடம் - சிவபெருமா னிருப்பிடமாகிய மலை. தாதனிருப்பிடம்ஆலிலை. மலைபோன்றமுலை திருமாலிருப்பிடமாகிய ஆலிலைபோன்ற வயிற்றளவும் தொங்கிவிட்டதனால் இனிநோக்குவோர்க்கு நீ இனிமையா யிராய், வேம்பாகத்தோன்றுவாய் என்பதுகருத்து.

### திருமால்துதி.

16. சோனையுங்காத்துநல்லானையுங்காத்துத்துரோபதைதன்
தானையுங்காத்தடைந்தானையுங்காத்துத்தடத்தகலி
மானையுங்காத்தனுமானையுங்காத்துமடுவில்விழும்
ஆனையுங்காத்தவனேயெனைக்காப்பதரிதல்லவே.

இ - ள். சோனையுங்காத்து - சோனைமழையையும் தடுத்து, நல் ஆனையும் காத்து - நல்லபசுக்களையும் காத்து-துரோபதை தன்தானையும் காத்து, துரோபதையின் வஸ்திரத்தையும் காத்து, அடைந்தானையும் காத்து - சரணமடைந்தவனையும் காத்து, தடத்து அகலி மானையும் காதது - வழியில் அகலிகை [illegible] பவளையும் காத்து, அநுமானையும் காத்து, அநுமானையும் காத்து, மடுவில் விழும் - (முதலையால்கவ்வப்பட்டு) மடுவில்விழுந்த, ஆனையும்காத்தவனே-கஜேந்திர [illegible] வானையும் காத்தருளினவனே, எனைக்காப்பது அரிது அல்லவே-என்னைக் [illegible] பது உனக்கு அருமை யல்லவே. எ - று.

சோனைகாத்த - கிருஷ்ணாவதாரத்தில் கோவர்த்தன கிரியை [illegible] த் தாங்கிக்கல் மழையைத் தடுத்தது, ஆன்காத்தது-பசுக்களை மேய்த்[illegible] [illegible]காத்தது - ராமாவதாரத்தில் விபீஷணனைக் காத்தது. [illegible] [illegible] - கல்லாய்க்கிடந்தவளைப் பெண்ணாக்கினது. அநுமானை [illegible] [illegible]சஞ்சீவியருள் ஒருவனாக்கினது.

### இன்னின்னார்க்குப் பொய்சொன்னால் இன்னின்னபயனுண்டா மெனப் பாடியது.

17. பொய்யருக்குப் பொய்யுரைத்தால் வெற்றியா மவருக்குப் பொய்யாகாத, மெய்யருக்குப்பொய்யுரைத்தால் தேய்பிறைபோற்றவக்குறையு மிடியுண்டாகும், துய்ய தாய்தந்தையர்க்குப் பொய்யுரைத்தால் வறுமைபிணிதொலையா வென்றும், உய்யவருள் தேசிகர்க்குப் பொய்யுரைத்தானரகமது வுண்மைதானே.

இ - ள். பொய்யருக்கு பொய்உரைத்தால் - பொய்பேசுவோருக்குப் பொய்யைச் சொன்னால், அவருக்கு-அந்தப்பொய்சொன்னவர்க்கு, வெற்றி ஆம் - வெற்றியுண்டாகும், பொய்ஆகாதமெய்யருக்கு பொய்உரைத்தால் - பொய்யற்ற மெய்பேசுவோருக்குப் பொய்சொன்னால், தேய்பிறைபோல்-தேய்பிறைபோல, தவம்குறையும்-தவம்குறைந்துபோகும், மிடி உண்டாகும்-தரித்திரமுண்டாகும், துய்யதாய் தந்தையர்க்கு பொய் உரைத்தால் - பரிசுத்தராகியமாதாபிதாக்களுக்குப் பொய்சொன்னால், வறுமை பிணியென்றும் தொலையா-தரித்திரமும் நோயும் எக்காலமும் நீங்கா, உய்ய - கடைத்தேறும்படி, அருள் - அருள்செய்த, தேசிகர்க்கு - குருமூர்த்திக்கு, பொய் உரைத்தால்-பொய்சொன்னால், நரகம்உண்மை-நரகமடைவது சத்தியம், எ - று.

### இவர் இறந்தபோது இவர் மாணாக்கர் பாடியவை.

18. இன்னங்கலைமகள் கைமீதிற்புத்தகமேந்தியந்தப்
பொன்னம்பலந்தனிற்புக்கிருந்தாளென்னபுண்ணியமோ
கன்னன்களந்தைக்கவிவீரராகவன்கச்சியிலே
தன்னெஞ்சமேடெனக்கற்றானொருமுத்தமிழையுமே.

இ - ள். கலைமகள் - சரசுவதி, இன்னம் - இன்னமும், கைமீதில்புத்தகம் ஏந்தி - கையின்மீது புத்தகத்தைத்தாங்கி, அந்தபொன் னம்பலந்தனில் புக்கு இருந்தாள்-அந்தப்பொன் னம்பலத்தில் போயிருந்தாள், என்னபுண்ணியமோ-என்னபுண்ணிய விசேஷத்தினாலோ, கன்னன் - கர்ணனுக்கு நிகரானவனும், களந்தை - களந்தைப்பதியில் வாழ்வோனுமாகிய, கவிவீரராகவன் - கவிவீரராகவன், கச்சியிலே - திருக்காஞ்சிநகரத்தில், தன்னெஞ்சம் ஏடு என - தன்மனத்தையே ஏடாகக்கொண்டு (அதிலெழுதி), ஒருமுத்தமிழையும் கற்றான் - ஒப்பற்ற முத்தமிழையும் கற்றான். எ - று.

மூனாடுத்தலமுனியுஞ் சேடனும்வான் மீகனுமுன் மூன்றில் லாமல், தென்னாட்டு மலையிடத்தும் பாரிடத்தும் புற்றிடத்துஞ் சென்று சேர்ந்தார், இந்நாட்டுப்புலவருனக் கெதிரிலையே கவிவீரராகவா நீ, பொன்னாட்டுப்புலவருடன் வாதுசெய்யப் போயினையோ புகலுவாயே.

(இ - ள்.) கவிவீரராகவா - கவிவீரராகவனே, முன் - முன்னே, நாடு-இவ்வுலகத்திலுள்ள, தவமுனியும்-தவத்தையுடைய அகத்தியமுனிவனும், சேடனும் - ஆதிசேஷனும், வான்மீகனும்-வான்மீக முனிவனும், உன்முன்னில்லாமல்- உனக்கெதிரேநிற்காமல், (முறையே) தென்னாட்டு மலையிடத்தும் - தென்னாட்டிலுள்ள பொதியமலையினிடத்தும், பாரிடத்தும் - பூமியின்கீழும், புற்றிடத்தும் - புற்றினிடத்தும், சென்றுசேர்ந்தார் - போய்ச்சேர்ந்தார்கள், இந்நாட்டுப்புலவர் உனக்கு எதிர் இலையே - இந்தவுலகிலுள்ளபுலவர்களில் உனக்கு நிகராவார் ஒருவருமில்லையே, (ஆதலால்) நீ-நீ, பொன்னாட்டுப் புலவருடன் - பொன்னுலகத்திலுள்ள புலவரோடு, வாதுசெய்யப்போயினையே - வாதுபண்ணச் சென்றையோ, புகலுவாய் - சொல்வாயாக எ - று.

பொன்னாட்டுப்புலவர் - பிரகற்பதி, இந்திரன்முதலானோர்.

— ✻ —

## சிவப்பிரகாசசுவாமிகள் பாடல்.

— ✻ —

### ஒருகலியாணத்தில் சேஷைபுயிடும்போது பாடியது.

1\. ஐயநின் சென்னிமிசை யுறைகின்ற மடமங்கை யாரென்னவுமை வினவுற, அன்னதொரு மடமங்கை யன்றுவெண் டிரைகொழித் தழகொழுகு தண்புனலெனத், துய்யவொளி யானனங் கரியவிழி காதுவாய் தோயத்தி லுண்டோவெனச், சொல்லருங் கமலமலர் காவிமலர் கொடிவள்ளை தூயசங் குமுதமென்னப், பொய்யெனநினைத்து நற்கொங்கையுங் கூந்தலும் புனலினிடை யுண்டோவெனப், புற்புதஞ் சைவலந் தெனவோ துறுத்துப் புகன்றிடுதி நங்காயெனத், தையலவ ளென்னநா ணுறிவணகிமென் றன்பிழை பொறுத்திடென்றே, சங்கரனுரைத்திடத் திருவுளமகிழ்ந்தசிவசங் கரியுமைமக்காக்கவே.

(இ - ள்.) ஐய - ஐயனே, நின்சென்னிமிசை உறைகின்ற மடமங்கை - உன்சிரமீது வசிக்கின்ற இளம்பெண், யார்என்ன - யார்என்று, உமைவினவவும் - உமாதேவிகேட்கவும், அன்னது ஒரு மடமங்கை அன்று - அப்படியுனக்குத் தோற்றுவது ஒரு இளம்பெண்ணல்லள், வெள்திரைகொழித்து - வெண்மையாகிய அலைகளைவீசி, அழகுஒழுகு தண்புனல்என - அழகொழுகாநின்ற குளிர்ந்த நீரொன்றாம், துய்யஒளி - பரிசுத்தமாகிய வொளியையுடைய, ஆநநம் - முகமும், கரியவிழி - கருங்கண்களும், காது - செவிகளும், வாய் - வாயும், தோயத்தில் உண்டோ என - நீரிலுண்டோவென்று கேட்க, (முகமுதலியவாகத் தோன்றுவது) சொல்அரு - சொல்லுதற்கரிய, கமலமலர் - தாமரைமலரும், காவிமலர் - கருங்குவளைமலரும், கொடிவள்ளை - வள்ளைக்கொடியும், தூய

என்ன - தாம்புக்கயிற்றால் அடித்ததைச்சொல்லென்றுசொல்ல, எண்ணாயிரம் பெண்கள்-எண்ணாயிரம் பெண்களுடைய, மிருகற்பைநீக்கினை என - மிருந்த கற்பைநீக்கினையென்றுசொல்ல, பம்புகற்பினில் - மிருந்தகற்பினில், ஓர் இரட்டிப்புநீக்கினது - ஓர் இரட்டிப்பாக நீக்கினதை, பதறுயல் நீகேள் என் - பதறுமலிருந்து நீ கேட்பாயென்றுசொல்ல, பரமருடன்-பரமசிவனோடு, இவ்வாறு - இந்தப்பிரகாரம், விளையாடு - விளையாடாநின்ற, பச்சை பசுங்கொடி - உமாதேவியானவள், உமைக்காக்க - உம்மைக்காக்கக்கடவள், எ - று.

திருமால் அரவுருவமானது பார்வதியும் பரமேச்சுவரனும் சூதாடுங்காலத்தில் பார்வதிகெலித்திருக்கச் சிவபெருமான்நான்கெலித்தேனென்று பொய்சொல்லி, அருகிருந்த திருமாலைச் சாட்சியாக்கோர, அவர் சிவபிரானே கெலித்ததாகப் பொய்சாட்சி சொல்ல 'உமாதேவி' கோபங்கொண்டுநீபொய்ச்சாட்சிசொன்னமையால் அரவமாகக்கடவையென்று சபித்தனள் என்பது கந்தபுராணத்திலுள்ளது. சிவபெருமான்பொய்கூறியதும் அந்தச் சந்தர்ப்பத்தில்தான்.

4. அச்சுதனளிப்பனிலமுமைந்தநேயன்வித்தையருளுவன் பலபத்தி
ரன், அலமுதவுவன்சமன் பகடளிப்பனந்தமக் காளதோரெருதுமு
ண்டே, முச்சிரவயிற்படையினைக் கொழுவதாக்குவேமொய்ம்புட
னிழுத்திறுக்க, முந்தியவடக்கயிற் றுடன்மற்று நமதன்பர்முன்
போயிரந்துகொள்வோம், இச்சையுடை நமதிளையதநயனாகிய
கந்தனினிமையொடுமாடு மேய்ப்பன், இனியுழுது பயிரிடுதனன்
றுநன் றிதைவிட்டிரந்துண்பதீனமெனவே, கச்சுமுலைமாதுமை
யுரைத்திடும் புத்தியைக் கைக்கொண்டுளத்திலிதுநற், காரியமெ
னக்கருதி மெத்தக்களித்திடுங் கண்ணுதலுமைக்காக்கவே.

(இ - ள்.) அச்சுதன் - திருமால், நிலம் அளிப்பன் - (நாம்வேண்டும்) பூமியைக்கொடுப்பன், உமதுநேயன், உமதுதோழனாகிய குபேரன், வித்தை அருளுவன் - வித்தைக்கொடுப்பன், பலபத்திரன் அலம் உதவுவன் - பலராமன் கலப்பையை உதவிசெய்வான், சமன்பகடு ஈவன் - யமன் எருமைக்கடாவைக் கொடுப்பான், நந்தமக்கு ஆளது ஓர் எருதும் உண்டே-நமக்கு ஆளாயிருப்பதாகிய ஒரு எருதும் உளதே, முச்சிரம் அயில்படையினை-முத்தலைச்சூலத்தை, கொழு ஆக்குவோம் - கொழுவாக்கிக்கொள்வோம், மொய்ம்புடன் இழுத்து இறுக்க - வலிமையோடு இழுத்திறுக்குதற்கு, முந்தியவடக்கயிற்றுடன்-முதன்மையாகிய வடக்கயிற்றோடு, மற்றும்-மற்றும்வேண்டுவனயாவும், நமது அன்பர்முன்போய் இரந்துகொள்வோம் - நமது அன்பரிடத்திற்சென்று யாசித்துக்கொள்வோம், இச்சை உடை - விருப்பத்தையுடைய, நமது இளையதநயன் ஆகிய கந்தன்-நமது இளையகுமாரனாகிய முருகன், இனிமையொடு மாடுமேய்ப்பன்-இனிதாகமாடு மேய்ப்பான், இனி உழுதுபயிரிடுதல் நன்றுநன்று - இனி உழுது பயிரிடுதலே நல்லது நல்லது, இதைவிட்டு - இதனைவிட்டு, இரந்து உண்பது - யாசித்துண்

மித்திரன் - சிநேகன். களத்திரம் - மனைவி, சிவபெருமான் ஓடு திருடினை தென்பது திருநீலகண்டனார் திருவோட்டைமறைத்த சரித்திரத்தைக்குறித் தது. அவ்வாடல் அரவம் அறியாதோ என்றது காளிங்கமர்த்தன சரித்திரத்தை க் குறித்தது.

தாயார்சோற்படி உப்புக்காரியை அழைத்தது.

ப. நிறையுளதோவெளிதோகொளுவேம்
பிறையைமுடிக்கணிந்தபெம்மான்—உறையும்
திருக்காட்டுப்பள்ளிதிரிபாவாய்நீயிங்
கிருக்காட்டுப்பள்ளியெமக்கு.

இ - ள். பிறையை முடிக்கு அணிந்த பெம்மான் உறையும் - பிறைச்சந் திரனைச்சிரத்திலணிந்த சிவபெருமான் வாழ்கின்ற, திருக்காட்டுப்பள்ளி திரிபா வாய் - திருக்காட்டுப்பள்ளியில் திரிகின்றபெண்ணே, நீ இங்கு இரு - நீ இவ் விடத்தில் இரு, உப்புஅள்ளி எமக்குக் காட்டு - உப்பையள்ளி எமக்குக்காட்டு, நிறையுளதோ - நிரம்ப இருக்கிறதோ, வெளிதோ - வெண்மையாயிருக்கிற தோ, (நிறையவும் வெண்மையாயும் இருக்குமாயின்) கொளுவேம் - விலைக்கு வா ங்குவோம், எ - று.

தோட்டக்காரன் மாம்பழத்தை யெடுத்ததற்காக இவரை மடி பிடித்திழுத்தபோது பாடியது.

எ. அடுத்துவருந்தொண்டனுக்காவந்தகனைத்தாளால்
அடர்த்ததுவுஞ்சத்தியமேயானால்—எடுத்தவொரு
மாங்கனிக்காவென்னைமடிபிடித்தமாபாவி
சாங்கன்னிக்காதித்தன்வரத்தான்.

இ - ள். அடுத்துவரும் தொண்டனுக்கா - ஆசிரயித்துவந்த அடியவனுக்கா க, அந்தகனை - யமனை, தாளால் அடர்த்ததுவும் - திருவடியால் உதைத்ததுவும், சத்தியமேஆனால் - சத்தியமேயாயின், எடுத்தது ஒருமாங்கனிக்கா - எடுத்த தொ ரு மாம்பழத்தின் பொருட்டு, என்னை மடிபிடித்த மாபாவி - என்னை மடிபிடித் திழுத்த படுபாவியானவன், கன்னிக்கு ஆதித்தன்வர - கந்யாராசியில் சூரியன் வர, சாம் - சாவன், எ - று.

தொண்டனென்றது மார்க்கண்டனை கன்னிக்கு ஆதித்தன்வர என்றது புரட்டாசிமாதத்தை புரட்டாசிமாதத்தில் சாவாய் என்பது கருத்து.

தருமபுர மடத்துக்குச் சென்றபோது வெள்ளியம்பலத்தம்பிரான் இவர்கல்வித்திறத்தை யறியும்பொருட்டு, சிவபெருமானது ஊர் முதலிய மூன்றையும் ஒர்வெண்பாவில் அமைத்து முதலிலும் இறுதியிலும் டுகரம்வரப் பாடுகவெனப் பாடியது.

8. குடக்கோடுவானெயிறு கொண்டார்க்குக் கேழன்
முடக்கோடுமுன்னமணி வார்க்கு—வடக்கோடு
தேருடையான் றெவ்வுக்குத்தில்லை தோன்மேற்கொள்ளல்
ஊருடையானென்னுமுலகு.

இ - ள் குடக்கு ஓடுவான் எயிறுகொண்டார்க்கு - மேற்றிசையைநோக்கியோடுகிறவனாகிய சூரியனது பற்களைத் தகர்த்தவருக்கு, கேழல் முடக்கோடு முன்னம் அணிவார்க்கு - பன்றியினது வளைவாகிய கொம்பை முற்காலத்தில் அணிந்தவருக்கு, வடக்கு ஓடு தேர் உடையான் தெவ்வுக்கு - வடதிசையைநோக்கியோடுகின்ற (தென்றலாகிய) தேரையுடையவனாகிய மன்மதனது பகைவருக்கு, தில்லை ஊர் - தில்லை நகரம் ஊராகும், தோல் உடை - யானைத்தோல் புலித்தோல்கள் வஸ்திரமாகும், மேற்கொள்ளல் ஆன் - ஊர்தல் இடபமாகும், என்னும் உலகு - என்று உலகத்தார் சொல்வர், எ - று.

**வடக்கோடுதேர் - தென்றல். சூரியன் பற்களைத் தகர்த்தது தக்கன் யாகத்தில். கேழல்முடக்கோடு அணிந்தது திருமாலெடுத்தவராக ரூபத்தை யழித்தபோது.**

9. செய்கொண்டாருங்கமலச் செம்மலுடனேயரவப்
பாய்கொண்டானும்பணியும் பட்டீச்சரத்தானே
நோய்கொண்டாலுங் கொளலாம் நூறுவயதாமளவும்
பேய்கொண்டாலுங் கொளலாம்பெண் கொள்ளலாகாதே.

இ - ள். செய்கொண்டு ஆரும் - செந்நிறத்தைக்கொண்டிருக்கிற, கமலம் - தாமரைமலரில்வீற்றிருக்கும், செம்மலுடனே - பெரியோனாகிய பிரமனுடன் அரவப்பாய் கொண்டானும் - சர்ப்பசயனத்தை யுடையவனாகிய திருமாலும், பணியும் - வணங்குகின்ற, பட்டீச்சரத்தானே - பட்டீச்சரம் என்னும் திருப்பதியி லெழுந்தருளினவனே, நோய் கொண்டாலும் கொளலாம் - நோய்கொள்ளப் பெற்றாலும்பெறலாம், நூறுவயது ஆம் அளவும் பேய்கொண்டாலும் கொளலாம் - நூறுபிராயம்வரையிலும் பேய்பிடிக்கப் பெற்றாலும்பெறலாம், பெண்கொள்ளல் ஆகாது - பெண்ணைக்கலியாணஞ்செய்துகொள்ளலாகாது, எ - று.

10. நிட்டையிலேயிருந்து மனத்துறவடைந்த பெரியோர்க ணிமலன்
றாளைக், கிட்டையிலே தொடுத்து முத்திபெறுமளவும் பெரியசுக
ங்கிடைக்குங்காம, வெட்டையிலே மதிமயங்கிச் சிறுவருக்கு மண
ம்பேசி விரும்பித்தாலி, கட்டையிலே தொடுத்துநடுக்கட்டையி
லே கிடத்துமட்டுங் கவலைதானே.

இ - ள். நிட்டையிலே இருந்து-யோகத்திலிருந்து, மனத்துறவு அடைந்த பெரியோர்கள் - அகத்துறவடைந்த பெரியோர்கள், நிமலன்தாளை - நின்மலனாகிய சிவபெருமானது திருவடியை, கிட்டையிலே தொடுத்து - அடுத்தவுடன்

தொடங்கி, முத்திபெறுமளவும் - மோக்ஷமடையுமளவும், பெரியசுகம் கிடைக்கும் - (அவர்களுக்கு) பேரின்பம் கிடைக்கும், காமவெட்டையிலே மதிமயங்கி-காமச்சூட்டால் புத்திமயங்கி, சிறுவருக்கு மணம்பேசி - சிறுவருக்குக் கலியாணம்பேசி, விரும்பி தாலிகட்டையிலே தொடுத்து - விரும்பித் தாலிகட்டியது முதல், (இறந்தபின் சுடலையிற் கொண்டுபோய்த் சகனத்தின்பொருட்டுப் பரப்பிய) நடுக்கட்டையிலே கிடத்துமட்டும்-கட்டையின்மத்தியில் வளர்த்தும் வரையில், கவலைதான்-கவலையேயாகும், எ - று.

காளியின்தேர் சாய்ந்து முருங்கைமரம் ஒடிந்தபோது பாடியது.

11. திருந்துதமிழிலக்கணமைந் திணைக்கோவை விருத்தகிரிச் செல்வர்க்கோதும், பெருந்தகைமை யுடையம்யாம் விடுமோலை வெங்கனூர்ப் பிடாரிகாண்க, இருப்புவியி லொருமுருங்கைக் கொம்பொடியாமற் காத்திங் கிருக்குநீயம், முருங்கைதனை வேரோடுங் களைந்தனை யென்றா லுனக்குமுறை நன்றாமோ.

இ - ள். திருந்து தமிழ் இலக்கணம் ஐந்திணைக்கோவை - திருத்தமாகிய தமிழிலக்கணமமைந்த ஐந்திணைக்கோவையை, விருத்தகிரி செல்வர்க்கு ஓதும்-முதுகிரியிலுள்ள சிவபெருமான்மீது பாடிய, பெருந்தகைமை உடையம் யாம் - பெருந்தன்மையை யுடையோம் யாம், விடும் ஓலை - அனுப்பும் ஓலையை, வெங்கனூர் பிடாரி காண்க - வெங்கனூர் பிடாரி அறிவதாக, இரும்புவியில் - பெரிதாகிய இவ்வுலகத்தில், ஒரு முருங்கைக்கொம்பு ஒடியாமல் காத்து - நீவாழ்கின்ற முருங்கைமரத்தின் ஒருகிளையும் ஒடியாமல் காத்து, இங்கு இருக்கும் நீ - இங்கேயிருக்கிற நீ, நம்முருங்கைதனை வேரோடும் களைந்தனை யென்றால் - எமது முருங்கைமரத்தை வேருடன் களைந்தாயானால், உனக்குமுறை நன்றாமோ - உனக்கு அதுநல்ல முறைமை யாகுமோ, எ-று.

12. நாணியென்பதை நாரியென் றுரைத்திடு நசையால்
வேணுவானது வளைந்து போய்ப்புகுந்தது வென்றாற்
காணலாவதோ ருருவமெய்ந் நாரியைக் கண்டால்
பூணுவார்மயல் காளைய ரென்பதும் புதிதோ.

(இ - ள்.) நாணி என்பதை - நாணி என்னும் மொழியை, நாரி என்று - நாரியென்று, உரைத்திடும் நசையால் - சொல்லப்படுதலா லுளதாகிய விருப்பத்தால், வேணுவானது வளைந்துபோய்ப் புகுந்தது என்றால் - மூங்கிலானது வளைந்து போயிற் றென்றால், காணலாவது - காணக்கூடுவ தாகிய, ஓர் உருவம் - ஒப்பற்ற உருவத்தை யுடைய, மெய்நாரியைக் கண்டால்-உண்மையாகிய நாரியைக்கண்டால் காளையர் - இளைஞர், மயல்பூணுவார் என்பதும் - மயல்கொள்ளுவாரென்பதும், புதிதோ-புதுமையோ, எ - று.

நாரி-பெண். நாணி என்பதை நாரியென்று உலகத்தார் சொல்லக்கேட்டு நாரியென்னுஞ்சொல் பெண்ணைக்குறித்தலால் ஓரறிவினதாகிய மூங்கிலும் வ

ளாந்ததென்றால் உண்மையாகிய பெண்ணுருவைக் கண்டால் காளையர் மயங்குவர் என்பது புதுமையோ.

### கருணைப்பிரகாசர் இறந்தபோது மூத்தவராகிய சிவப்பிரகாசர் பாடியது.

13. முன்னமொரு தமிழ்ப்புலவன் றனையுண்டு கண்டசுவை முதிர்ச்சியாலே, தன்னியலை முழுதுமுரைத்தமையா முன்னினைக் கவர்ந்து தடங்காளத்தி, மன்னவ னுண்டானெனது மாதவத்தின் வலிதீர மண்ணின்மீதே, என்னுடன் வந்தவதரித்த விளங்கருணைப்பிரகாச னென்னுங் கோவே.

**இ - ள்.** மண்ணின்மீது - மண்ணுலகின்மேல், என்னுடன்வந்து அவதரித்த இளங்கருணைப் பிரகாசன் என்னுங் கோவே - என்னோடு கூடப்பிறந்த என்தம்பியாகிய கருணைப்பிரகாசன் என்னும் இறைவனே, முன்னம் ஒருதமிழ்ப்புலவன் தன்னை உண்டுகண்ட சுவை முதிர்ச்சியாலே - முற்காலத்தில் ஒரு தமிழ்ப்புலவனை யுண்டறிந்த சுவை மிகுதியால், தன் இயலை முழுதும் உரைத்து அமையாமுன்-தன் தன்மையை முழுதுஞ்சொல்லி யமையாமுன்னமே, இனைகவர்ந்து, உன்னைப்பற்றி, தடம்காளத்தி மன்னவன்-பெரிய காளத்திநாதன், என் மாதவத்தின் வலிதீர உண்டான்-என் பெருந்தவத்தினது வலிமை நீங்கும்படி உண்டுவிட்டான், எ - று.

முன்னமொரு தமிழ்ப்புலவன் றன்னை உண்டது என்றது அப்பர் சுவாமிகளைத் திருக்காளத்திச் சிவலிங்கப்பெருமான் விழுங்கிய சரித்திரத்தைக் குறித்தது, கருணைப் பிரகாசர் ஸ்ரீ காளத்தி புராணத்தைப் பாடத் தொடங்கி அது முடிவுபெறு முன்னமே இறந்தமையால் இவ்வாறு கூறினார்.

### இது இரண்டாந் தமையனாராகிய வேலைய சுவாமிகள் பாடியது.

14. ஆண்டதனா லெனையொவ்வாய் வித்தையினிற் றமையனினு மதிகனென்றே, பூண்டவுலகுதனிலுள்ளோர் புகல்வது கேட்டிருந்து மென்ன புதுமைதானோ, காண்டகு கண்மணியே நல்லிளங் கருணைப் பிரகாசக் காளாய்நீதான், மாண்டனையென் றறிந்திருந்து முயிர்தரித்தேன் யானுமிருவன் னெஞ்சேனே.

**இ - ள்.** காண்தகு கண்மணியே-நோக்குதற்குரிய கண்மணியே, நல் - அழகாகிய, இளமை-இளமைப்பருவமுள்ள, கருணைப் பிரகாசக்காளாய் - கருணைப்பிரகாசன் என்னுங்காளையே, நீதான்-நீ, ஆண்டு அதனால் எனை ஒவ்வாய் - வயதினால் என்னை நிகர்க்காய், வித்தையினில் தமையனினும் அதிகன் என்று-கல்வியில் தமையனைக் காட்டிலும் அதிகப்பட்டவனென்று, பூண்ட உலகதனில் உள்ளோர் - நிரம்பிய உலகத்தி லுள்ளவர்கள், புகல்வது - சொல்லுவதை, கே

ட்டிருந்தும் - நான்கேட்டிருந்தும், என்னபுதுமைதானோ - இதென்னஆச்சரிய மோ, நாண்டனை யென்று, நீ இறந்தாயென்று, அறிந்திருந்தும்-நான் அறிந்திருந்தும், உயிர்தரித்தேன்-உயிர்தாங்கிநின்றேன், யானும் மிகுவல் நெஞ்சேன்-நானும் மிக்கவலிய மனமுள்ளவன், எ-று.

தமையனாகிய சிவப்பிரகாசரும், தம்பியாகிய கருணைப்பிரகாசரும் இறந்தபோது வேலையசுவாமிகள் பாடியது.

15. அல்லிமலர்ப் பண்ணவனு மாராய்ந் தறிகவிதை
சொல்லு மிருவரிடைத் தோன்றியயான் - முல்லை
அரும்பிற் பொலிவு மணிமுறுவ னல்லாய்
கரும்பிற் சுணுவிகர்த்தேன் காண்.

இ - ள். முல்லை அரும்பின் - முல்லையரும்புபோல, பொலியும்-விளங்குகின்ற, அணிமுறுவல் நல்லாய் - அழகிய பல்வரிசையையுடைய பெண்ணே, அல்லிமலர் பண்ணவனும் - அகவிதழ்களையுடைய தாமரைமலரில் வீற்றிருக்கிற பிரமதேவனும், ஆராய்ந்து அறி-ஆராய்ந்தறிதற்குரிய, கவிதைசொல்லும் இருவர் இடைதோன்றியயான்-கவிபாடவல்ல இருவருக்கிடையே பிறந்தநான், கரும்பில்கணு விகர்த்தேன்-கரும்பின் கண்ணுள்ள கணுவை விகாத் திருந்தேன், எ-று.

தனக்கு மூத்தவராகிய வேலைய சுவாமிகளையும் இளையவராகிய கருணைப் பிரகாசரையும் கரும்பின் முதலும் கடையுமாகவைத்து இவ்வாறு கூறினார்.

இவர்கள் பிதா குமார சுவாமிகள் பாடியது.

16. கயல்வாய்த்த கண்ணிபுலகீன்ற வல்லிபங்கா வுனது
செயல்வாய்த்த வன்பர்க்கு மல்லாதவர்க்குஞ் சிரிப்பல்லவோ
இயல்வாய்த்த வெந்தைக்கியான் வாய்த்ததுவுமிங் கென்றனக்கு
வயல்வாய்த்தது மனைவாய்த்தது மைந்தர்கள் வாய்த்ததுமே.

இ - ள். கயல்வாய்த்த கண்ணி - சேல்போன்ற கண்களை யுடையவளும், உலகு ஈன்றவல்லி - உலகங்களெல்லாவற்றையும் பெற்ற கொடிபோல் பவளுமாகிய உமாதேவியை, பங்கா - ஒருபாகத்தில் உடையவனே, இயல் வாய்த்த எந்தைக்கு யான் வாய்த்ததுவும் - இல்லறவியல் படைத்த என் தந்தைக்கு நான் உண்டானதும், இங்கு என்றனக்கு - இவ்விடத்தில் எனக்கு, வயல்வாய்த்ததுவும் - வயல் கிடைத்ததும், மனைவாய்த்ததும்-மனைவி கிடைத்ததும்,மைந்தர்கள் வாய்த்ததும் - புதல்வர் கிடைத்ததும், உனது செயல் வாய்த்த அன்பர்க்கும் - உன் திருவருள்பெற்ற அன்பர்க்கும், அல்லாதவர்க்கும் - மற்றவர்க்கும், சிரிப்பு அல்லவோ-நகைப்பல்லவோ, எ - று.



# சத்திமுத்தப் புலவர் பாடல்.



ஒருநாள் பாண்டியன் தன் சபையிலிருந்த வித்வான்களை நோக்கி நாரையின் வாய்க்கு எதனை உவமிக்கலாம் என்று வினவ அவர்கள் அதற்கு மறுமொழி சொல்லாதிருக்க, அன்றிரவில் அரசன் நகர்சோதனை வரும்போது வறுமையால் மெலிந்து பொருள்தேடிவரப் புறப்பட்ட இந்தப் புலவர் மதுரைப்பதியின் ஓர் பாழ்ந் சத்திரத்தில் படுத்துக் கொண்டு தமது வறுமையை நினைந்துக் கூறியது.

1. நாராய் நாராய் செங்கா ணாராய்
பழம்படு பனையின் கிழங்கு பிளந்தன்ன
பவளக் கூர்வாய்ச் செங்கா ணாராய்
நீயுநின் மனைவியுந் தென்றிசைக் குமரியாடி
வடதி சைக் கேகுவீ ராயின்
எம்மூர்ச் சத்திமுத்த வாவியுட் டங்கி
நனைசுவர்க் கூரை கனைகுரற் பல்லி
பாடுபார்த் திருக்குமெம் மனைவியைக் கண்டு
எங்கோன் மாறன் வழுதி கூடலில்
ஆடை யின்றிவா டையின் மெலிந்து
கையது கொண்டு மெய்யது பொத்திக்
காலது கொண்டு மேலது தழீஇப்
பேழையு ளிருக்கும் பாம்பென வுயிர்க்கும்
ஏழையா ளனைக் கண்டன மெனுமே.

(இ-ள்.) நாராய் நாராய்-நாரைகளே நாரைகளே, செங்கால் நாராய்-செங்கால்நாரையே, பழம்படு பனையின் கிழங்கு பிளந்தன்ன-பழம்பழுக்கின்ற பனையினதுகிழங்கைப் பிளந்தாற்போன்ற, பவளம் கூர்வாய்-பவளம்போன்ற கூர்வாயையும், செங்கால்-செவந்த கால்களையுமுடைய, நாராய்-நாரையே, நீயும் நின் மனைவியும் - நீயும் உன்மனைவியும், தென்திசைக் குமரிஆடி - தென்றிசையிலுள்ள குமரியாற்றில் மூழ்கி, வடதிசைக்கு ஏகுவீராயின் - வடதிசைக்குப் போவீரானால், எம் ஊர்சத்திமுத்தம் வாவியில் தங்கி - எமது ஊராகிய சத்திமுத்தத்திலுள்ள தடாகத்தில்தங்கி,நனைசுவர் கூரை-நனைந்தசுவரின் கூரையில்,கனைகுரல்பல்லி பாடு பார்த்திருக்கும் - ஒலிக்கின்ற குரலையுடைய பல்லியின் ஓசையையே பார்த்திருக்கிற, எம்மனைவியைக்கண்டு-எம்மனைவியைக்கண்டு, எம்கோன்மாறன் வழுதிகூடலில் - எம்மிறையவனும் மாறனுமாகிய பாண்டியனது மதுரைப்பட்டணத்தில், ஆடை இன்றி வாடையின் மெலிந்து - ஆடையில்லாமல் குளிர்காற்றினால் மெலிவடைந்து, கையதுகொண்டு மெய்யது பொத்தி-கையினால் உடம்மைப் போர்த்து, காலதுகொண்டு மேலதுதழீஇ - காலால் மேலே

தழுவி, பேழையுள் இருக்கும் - பெட்டகத்துள் இருக்கின்ற, பாம்பு என உயிர்க்கும் - பாம்பைப்போல மூச்செறிகின்ற, ஏழையாளனை, ஒரு ஒளியவனை, கண்டனம் எனும் - கண்டோமென்று சொல்லுங்கள், எ - று.

மேற்கூறிய பாடலைக்கேட்டு அரசன் மனமகிழ்ந்து இவருக்கு வேண்டிய வெகுமதிசெய்தது மன்றி, இவர் தம்மூரை அடைவதன் முன்னம் இவர்வீட்டில் செல்வம் மிகுந்திருக்கும்படி அமைத்து வைக்க அதனைக்கண்டு மகிழ்ந்து பாடியது.

2. வெறும்புற்கையு மரிதாங்கிள்ளை சோருமுன் வீட்டில்வரும்
எறும்புக்குமாற் பதமில்லைமுன் னென்ற னிருங்கலியாம்
குறும்பைத் தவிர்த்துக்குடி தாங்கியைச்சென்று கூடியபின்
தெறும்புற்கொல் யானைகவளங் கொள்ளாமற் றெவுட்டியதே.

இ - ள். முன்னாள் - முற்காலத்தில், என் வீட்டில் - என்வீட்டில், வெறும் புற்கையும் அரிதாம் - வெறுஞ்சோறு கிடைப்பதும் அருமையாகும், கிள்ளை சோரும்-வளர்க்கும் கிளிப்பிள்ளையும் பசியால்வாடும், வரும் எறும்புக்கும் - வருகிற எறும்புகளுக்கும், ஆற்பதம் இல்லை - ஆதாரமில்லை, என் இருகலியாம் - என்பெரிய வறுமையாகிய, குறும்பை தவிர்த்த - குறும்பைமுன்னை யழித்த, குடிதாங்கியைச் சென்று கூடியபின்-அரசனைச் சென்று சேர்ந்த பிறகு, செறும்புல் கொல்யானை - கொல்லுந் தொழிலையுடைய புலியைக் கொல்லுகின்ற யானையானது, கவளம் கொள்ளாமல் தெவுட்டியது - கவளத்தை உட்கொள்ளாமல் உமிழ்ந்து விட்டது, எ - று.

---

## வரதுங்க பாண்டியர்.

---

இவர் சரமதசையில் இவர் மனைவி இவரை நோக்கிப் பயப்படுகிறீரோவென்று கேட்டபோது பாடியது.

1. அஞ்சலென்ற கரதலமுங் கணபண கங்கணமும்
அரைக்கிசைந்த புலியுடையு மரைப்புலிச்செஞ் சடையும்
கஞ்சமலர்ச் சேவடியுங் கனகழலுஞ் சிலம்பும்
கருணைபொழி திருமுகமுங் கண்களொரு மூன்றும்
நஞ்சையுண்ட மணிமிடறு முந்நூலு மார்பும்
நலந்திகழ்வெண் ணீற்றொளியு மறிமானு மழுவும்
பஞ்சடிச்சிற் றிடையுமையா ளொப்பனைபா கமுமாய்ப்
பால்வண்ண ருளத்திருக்கப் பயமுண்டோ வெனக்கே

இ - ள். அஞ்சல் என்ற கரதலமும் - அஞ்சாதே யென்றமைத்த [illegible] கணையணைக்கணமும் - கூட்டமாகிய படங்களையுடைய பாம்பாகிய க[illegible]மும், அரைக்கு இசைந்த புலி உடையும் - அரைக்கேற்ற புலித்தோலாடை[illegible], அம்புலி செஞ்சடையும் - சந்திரனையணிந்த செவந்த சடையும், கஞ்சமலர் சேவடியும் - தாமரைமலர்போன்ற திருவடியும், கனைகழலும் சிலம்பும் - ஒலிக்கின்ற வீரக்கழலும் சிலம்பும், கருணைபொழி திருமுகமும் - அருள்மழையைச் சொரிகின்ற திருமுகமும், கண்கள் ஒருமூன்றும் - ஒப்பற்ற மூன்றுகண்களும், நஞ்சையுண்ட மணிமிடறும் - விஷத்தையுண்ட நீலமணிபோலுங் கண்டமும், முந்நூலும் - முப்புரிநூலும், மார்பும் - திருமார்பும், நலம்திகழ்வெண்ணீற்று ஒளியும் - அழகு விளங்கா நின்றதிரு வெண்ணீற்றி னொளியும், மறிமானும் - மான்கன்றும், மழுவும் - மழுவாயுதமும், பஞ்சு அடிசிற்றிடை உமையாள் - பஞ்சுபோன்ற பாதத்தையும சிற்றிடையையும் உடைய உமாதேவியாகிய, ஒப்பனை பாகமும் ஆய் - ஒப்பனையம்மைபாகமுமாகி, பால்வண்ணன் உள்ளத்து இருக்க - பால்வண்ணநாதர் எம்மனதிலிருக்கும்போது, எனக்குப் பயம் உண்டோ - எனக்குப் பயமுளதோ, எ - று.

### இவர் மனைவி பாடியது.

2. யாக்கையெனுட்புழுக்குரம்பையணைந்தணையாப்பொருளை
அருளொளியைப்பராபரத்துக்கப்புறமாமறிவை
நீக்கமறமயிர்முனைக்குமிடமறவெங்கெங்கும்
நிறைந்துநின்றமுழுமுதலைநினைவிலெழுஞ்சுடரைப்
பாக்கியங்கள்செய்தனந்தந்தவக்குறைகண்முடிக்கும்
பழவடியார்தமக்குதவும்பசுந்துணர்க்கற்பகத்தை
வாக்குமனவிகற்பத்தாலளவுபடாவொன்றை
மாசற்றவெறுவெளியைமனவெளியிலடைப்பாம்.

இ - ள். ஆக்கை என்னும் புழுக்குரம்பை அணைந்து அணையா பொருளை - உடம்பென்கின்ற புழுக்கூட்டைச் சேர்ந்தும் சேராத பரம்பொருளை, அருள் ஒளியை - அருட்பிரகாசத்தை, பராபரதுக்கு அப்புறம் ஆம் அறிவை - பரம் அபரம் என்பவைகளுக்கு அப்பாற்பட்ட அறிவை, நீக்கம் அற - நீங்குதலின்றி, மயிர்முனைக்கும் இடம் அற - மயிர்முனையை யூன்றுதற்கும் இடமில்லாமல், எங்கெங்கும் நிறைந்துநின்ற முழுமுதலை - எவ்விடத்தும் நிறைந்துநின்ற முழுமுதற்பொருளை, நினைவில் எழும் சுடரை - நினைப்பிலுண்டாகின்ற ஒளியை, பாக்கியங்கள்செய்து - அதிர்ஷ்டங்கள்செய்து, அநந்தம் தவக்குறைகள் முடிக்கும் - அளவற்ற தவக்குறைகளை நிறையப்பண்ணுகிற, ப[illegible]யார் [illegible] உதவும் - பழ அடியார்க்கு வேண்டும் பொருளைக் கொடுக்[illegible] கத்தை - பசுமையாகிய பூங்கொத்துக்களையுடைய கற்பகவி[illegible]

## திருவள்ளுவர் ஔவையார் இடைக்காடர்.

[illegible]ல்-வாக்குமனங்களின் வேறுபாட்டால், அளவுபடா ஒன்றை - [illegible]யப்படாத ஒருபொருளை, மாசு அற்ற வெறு வெளியை - களங்கமற்ற [illegible] வெளியை, மனவெளியில் அடைப்பாம் - மனமாகிய ஆகாயத்தில் அடைத்துவைப்போம், எ - று.

பரம் - ஆதி. அபரம் - அந்தம்.

---

**முன்னொருகாலத்தில் திருவள்ளுவரும், ஔவையாரும், இடைக்காடரும் சந்தித்தபோது, திருவள்ளுவரை ஔவையாரும் இடைக்காடரும் நோக்கி நீர்செய்தநூல் எத்தன்மையது என்று வினவ, அவர் அதற்கு விடையாகப் பாடியது.**

1. குறுமுனிவன் முத்தமிழுமென் குறளுநங்கை
சிறுமுனிவன் வாய்மொழியின் சேய்.

இ - ள். குறுமுனிவன் - அகத்தியராற் செயயப்பட்ட, முத்தமிழும் - இயல் இசை நாடகம் என்னும் முததமிழும, என்குறளும் - என்னாற்செய்யப்பட்ட குறளும், நங்கை - உடையநங்கையின், சிறுமுனிவன் - குமாரனாகிய சடகோபராற் செய்யப்பட்ட, வாய்மொழியின் - திருவாய் மொழியினது, சேய் - பிள்ளைகள், எ - று.

பிறந்தபோதே முனிவேடமா யிருந்தமையால் சிறுமுனிவன் என்றார்.

திருவள்ளுவர்கூறிய மேற்பாடலைக்கேட்டு ஔவையார் பாடியது.

2. ஐம்பொருளுநாற்பொருளுமுப்பொருளும்பெய்தமைத்த
செம்பொருளையெம்மறைக்குஞ்சேட்பொருளைத் - தண்குருகூர்ச்
சேய்மொழியதென்பர்சிலரியானிவ்வுலகில்
தாய்மொழிய[illegible]பேன்றகைந்து.

இ - ள். ஐம்பொருளும் - அர்த்தபஞ்சகத்தையும், நாற்பொருளும் - சதுர்விதபுருஷார்த்தங்களையும், முப்பொருளும் - தத்துவத்திரயத்தையும், பெய்து அமைத்த - அமைத்துச்சொன்ன, செம்பொருளை - செவ்வியபொருளை, எம்மறைக்கும் சேட்பொருளை - எல்லாவேதங்களுக்கும் எட்டாத பொருளை, சிலர் - சிலர், தண்குருகூர் - குளிர்ச்சியாகிய திருக்குருகூரிலெழுந்தருளிய, சேய்மொழியது என்பர் - ஆழ்வார் திருவாய்மொழியென்று சொல்லுவர், யான் - நான், [illegible] - அவர்சொல்வதைத்தடுத்து, இவ்வுலகில் - இந்தவுலகிலுள்ள, தாய் [illegible] (எல்லாப் பொருள்களுக்கும்) தாய்மொழியாகிய வேதமெ[illegible], எ - று.

[illegible]கமாவது பரம், வியூகம், விபவம், அந்தரியாமி, அர்ச்சை என் [illegible] - [illegible]பதத்தில் இருக்கும் இருப்பு. வியூகம் - சங்கர்ஷணன், பிர

த்தியும்னன், அநிருத்தன், வாசுதேவன் என்னும் நான்கு வகுப்புக்களே... டித் திருப்பாற்கடலில் எழுந்தருளியிருக்கும் இருப்பு. விபவம்-ராமகிரு... அவதாரங்கள், அந்தரியாமி - எங்கும் நிறைந்திருக்கும் இருப்பு. அர்ச்சை... கிரகரூபமாயிருக்கும் இருப்பு. முப்பொருள்—சித்து, அசித்து - ஈச்வரன் என்பன.

இவைகளைக்கேட்ட இடைக்காடர் பாடியது.

3. சேய்மொழியோ தாய்மொழியோ செப்பிலிரண்டுமொன்றே
வாய்மொழியையாருமறையென்பர்—வாய்மொழிபோல்
ஆய்மொழிகள்சாலவுளவெனினுமம்மொழியும்
சாய்மொழியவென்பேன்றகைந்து.

இ - ள். வாய்மொழியை - திருவாய் மொழியை, யாரும் மறைஎன்பர்- யாவரும் வேதமென்று சொல்லுவர், வாய்மொழிபோல் - அத்திருவாய் மொழி போல, ஆய்மொழிகள் சால உளஎனினும் - ஆராயப்பட்ட மொழிகள் மிகவு முள்ளனவென்று பிறர்சொல்லினும், தகைந்து - தடுத்து, அம்மொழியும் - அந்தமொழிகளும், சாய்மொழிய என்பேன் - இம்மொழியின் சாயையான மொழி களேயாம் என்பேன், சேய்மொழியோ - குழந்தைவடிவாயிருந்த ஆழ்வார் வாக்காகிய திருவாய்மொழியையும், தாய்மொழியோ - எல்லா நூல்களுக்கும் மாதுர்ஸ்தானமாயிருக்கிற வேதத்தையும், செப்பில்-சீர்தூக்கிச் சொல்லுமிடத்தில், இரண்டும் ஒன்றே - அவ்விரண்டும் (பாஷையால் இரண்டாயிருப்பினும் பொருளால்) ஒன்றேயாகும், எ - று

சங்கத்தார் நம்மாழ்வாரைப் புகழ்ந்து பாடியது.

4. சேமங்குருகையோசெய்யதிருப்பாற்கடலோ
நாமம்பராங்குசனோநாரணனோ — தாமம்
துளவோவகுளமோதோளிரண்டோநான்கோ
உளவோபெருமானுனக்கு.

இ - ள். பெருமான் உனக்கு-பெருமானாகிய உனக்கு, சேமம்-இனிதாகிய இடம், குருகையோ - திருக்குருகூரோ, செய்ய திருப்பாற்கடலோ-செவ்விய திருப்பாற்கடலோ, நாமம்-திருநாமம், பராங்குசனோ - பராங்குசனோ, நாரணனோ-நாராயணனோ, தாமம்-மாலை, துளவோ - துழாயோ, வகுளமோ - மகிழம் பூவோ, தோள் - புயங்கள், இரண்டோ - இரண்டோ, நான்கோ - நான்கோ, உள-உள்ளன, எ - று.

ஆழ்வார் ஸ்ரீமந்நாராயணனுடைய அவதாரம் என்பது...

## மதுரைச்சொக்கநாதர் தருமி என்னும் பிராமணனுக்குப் பாடிக் கொடுத்தது.

1. கொங்குதேர்வாழ்க்கையஞ்சிறைத்தும்பி
காமஞ்செப்பாதுகண்டதுமொழிமோ
பயிலியதுகெழீஇயநட்பின்
மல்லியற்
செறியெயிற்றரிவைகூந்தலின்
நறியவுமுளவோநீயறியும்பூவே.

இ - ள். கொங்குதேர்வாழ்க்கை - புஷ்பரசத்தை யாராய்கின்ற வாழ்க்கையையும், அம்சிறை - அழகிய சிறகுகளையுமுடைய, தும்பி - வண்டே, காமஞ்செப்பாது - விருப்பத்தின்படி சொல்லாமல், கண்டதுமொழி - கண்டதைச்சொல்வாயாக, பயிலியது கெழீஇயநட்பின் - பழகினவொருவரோடு பொருந்திய நட்பினால், மயில் இயல் - மயிற்சாயலையும், செறி எயிறு - நெருங்கிய பற்களையுமுடைய, அரிவை கூந்தலின் - மாதினது கூந்தலின் இயற்கைமணம்போல, நீ அறியும்பூ - நீ யறிந்த மலர்களுள், நறியவுமுளவோ - மணமுள்ளனவும் உளவோ, எ - று.

சண்பகபாண்டியன் ஒருநாள் தன் மனைவியின் கூந்தலின் நறுமணங்கண்டு, இம்மணம் இவள் கூந்தலுக்கு இயற்கையால் அமைந்ததோ செயற்கையான் அமைந்ததோவெனச் சந்தேகித்து, எனது இக்கருத்தறிந்து கவிகூறுவோர் ஆயிரம்பொன்னைப் பெறக்கடவரெனச் சங்கமண்டபத்தில் முடிப்புக் கட்டிவைத்தனன். இதனை அறிந்த ஆதிசைவனாகிய தருமி என்னும் ஓர் ஏழைப்பிராமணன் ஆலவாயடிகளையடைந்து, என் வறுமை தீர அரசன் கருத்தறிந்து பாசுரம் பாடியருள்க வென்றிரக்க, எம்மிறைவன் "கொங்குதேர் வாழ்க்கை" என்னும் இப்பாசுரத்தைப் பாடியருளினார். அதனைப் பெற்ற அந்தணன் சங்கமண்டப மடைந்து காட்ட, நக்கீரரொழிந்த புலவரும், தன் மனக்கருத்து ஒத்திருந்தமையால் அரசனும் ஒத்துக்கொண்டு பொன்முடிப்பைக் கொடுக்கப்போகும் தருணத்தில் நக்கீரர்வந்து தடுத்து, இப்பாசுரத்தில்சொற்குற்றமில்லையாயினும் பொருட் குற்றமுண்டு. அதாவது கூந்தலுக்குஇயற்கைமணம் உண்டென்று கூறியதேயாம என்றனர்; அதைக்கேட்ட அந்தணன் வாடிக் கடவுள் சந்நிதானம் அடைந்து முறையிட, எமதுஇறைவன் அந்தணன் வேடங்கொண்டு சங்கமண்டபம்வந்து நக்கீரரைநோக்கி பதுமினி ஸ்திரீகளின் கூந்தலுக்கு இயற்கை மணமுண்டென்று கூறியும் நக்கீரர்மறுத்து, கூந்தலுக்கு மணம் செயற்கையதே என்றுமறுக்க, சிவபெருமான் தமது நெற்றிக்கண்ணைக் காட்டியும் நக்கீரர் "நெற்றிக்கண் காட்டினும் குற்றம் குற்றமே" யென்றனர், அப்போது நெற்றிக்கண்ணின் வெப்பத்தால் நக்கீரர்வெதும்பிப் பொற்றாமரைக்குளத்தில் அழுந்தக் கபிலர்முதலிய மற்றபுலவர் வணங்கித்துதிக்க, நக்

கீரனைக் கரையேறப்பண்ண, கரையேறிய நக்கீரனும் சர்வமொழிந்து [illegible] வணங்கி அவராணையால் அகத்தியரிடம்போய் இலக்கணம் கற்றனர் [illegible].

நக்கீரர் கூந்தலுக்கு இயற்கைமணம் இல்லையென்றும், மேற்கூறிய பாடல் தவறு என்றும் சொன்னதைக்கேட்ட சொக்கநாதர் பாடியது.

2. அங்கம்வளர்க்கவரிவாளினெய்தடவிப்
பங்கம்படவிரண்டுகால்பரப்பிச்—சங்கதனைக்
கீருகீறென்றறுக்குங்கீரனோவென்கவியைப்
பாரிற்பழுதென்பவன்.

இ - ள். அங்கம்வளர்க்க - உடம்புவளர்க்கும்பொருட்டு, அரிவாளில் நெய் தடவி - அரிவாளில் நெய்யைப்பூசி, பங்கம்பட இரண்டுகால் பரப்பி-இழிவுண்டாக இரண்டுகால்களையும் விரிந்து, சங்கதனை - சங்கை, கீருகீரு என்று அறுக்கும் கீரனோ - கீரு கீரு என்றோசையுண்டாம்படி யறுக்கின்ற கீரன்தானோ, பாரில் - உலகத்தில், என்கவியைப்பழுது என்பவன் - என்கவியைக் குற்றமென்று சொல்லவல்லவன், எ - று.

இதைக்கேட்ட நக்கீரர் பாடியது.

3. சங்கறுப்பதெங்கள்குலஞ்சங்கரனார்க்கேதுகுலம்
பங்கமுறச்சொன்னாற்பழுதாமே—சங்கை
அரிந்துண்டுவாழ்வோமரனாரைப்போல
இரந்துண்டுவாழ்வோமினி.

இ - ள். சங்கு அறுப்பது எங்கள்குலம் - சங்கையறுத்துச் சீவிப்பதே எங்கள்குலம், சங்கரனார்க்கு ஏதுகுலம் - சிவனுக்குக் குலம்யாது, பங்கம்உற சொன்னால் பழுது ஆமே - இழிவுண்டாகச்சொன்னால் குற்றமாமே, சங்கை அரிந்து உண்டுவாழ்வோம், சங்கை அறுத்து உண்டு உயிர் வாழ்வோம், அரனாரைப் போல - சிவனைப்போல, இரந்து உண்டுவாழோம் இனி - இனியிரந்துண்டுயிர்வாழ மாட்டோம், எ - று.

மதுரைச் சொக்கநாதர் பாணபத்திரர் என்பவருக்கு எழுதிக்கொடுத்த திருமுகப்பாசுரம்.

4. மதிமலிபுரிசைமாடக்கூடல்
பதிமிசைநிலவும்பாணிறவரிச்சிற
கன்னம்பயில்பொழிலாலவாயின்
மன்னியசிவன்யான்மொழிந்திடுமாற்றம்
பருவக்கொண்மூப்படியெனப்பாவலர்க்
கொருமையினுரிமையினுதவியணிதிகழ்

குருமாமணிதிகழ்குலவியகுடைக்கீழ்ச்
செருமாவுகைக்குஞ்சேரலன்காண்க
பண்பால்யாழ்பயில்பாணபத்திரன்
தன்போலென்பாலன்பன்றன்பால்
காண்பதுகருதிப்போந்தனன்
மாண்பொருள்கொடுத்துவரவிடுப்பதுவே.

இ - ள். மதிமலிபுரிசை - சந்திரன் தவழ்கின்றமதிலும், மாடம் - மாளிகைகளுஞ்சூழ்ந்த, கூடல்பதிமிசை நிலவும் - மதுரைப்பதியில் வாழ்கின்ற, பால்நிறம் - வெண்ணிறத்தையும், வரிச்சிறகு - சிற்றுகளையுடைய சிறகையுமுடைய, அன்னம் பயில்பொழில் - அன்னப்பறவைகள் வாழ்கின்ற சோலைசூழ்ந்த, ஆலவாயில் மன்னியசிவன் யான் - திருவாலவாயிலில் நிலைபெற்றிருக்கும் சிவனாகிய யான், மொழிதரும் மாற்றம் - சொல்லுஞ் சொல்லாவது யாதெனின், பருவக்கொண்மூப்படியென - கார்ப்பருவ மேகம்போல, பாவலர்க்கு - புலவர்களுக்கு, ஒருமையின் உரிமையின் உதவி - மனவொருமையோடு அவரவர்க்குத் தக்கபடி கொடுத்து, அரிதிகழ் - அழகாய்விளங்குகின்ற, குருமாமணிதிகழ் - நிறமுள்ள பெரியரத்நங்கள் ஒளிசெய்கிற, குலவிய குடைக்கீழ் - சூழ்ந்த குடையின்கீழ், செருமா உகைக்கும் - போரிற்சிறந்த யானையைச் செலுத்திவருகின்ற, சேரலன்காண்க - சேரலர்கோன் (இத்திருமுகத்தை) காணக்கடவன், பண்பால் - பண்ணின் பகுதியமைந்த, யாழ்பயில் - வீணைவாசிக்கிற, பாணபத்திரன் - பாணபத்திரன் என்பவன், தன்போல் - உன்னைப்போலவே, என்பால் அன்பன் - என்னிடத்து அன்புடையான், தன்பால் - உன்னிடத்தில், காண்பது கருதிப்போந்தனன்-உன்னைக்காண்பது கருதிவந்தான் (அவனுக்கு), மாண்பொருள்கொடுத்து - மிகுதியாகிய பொருளைக்கொடுத்து, வரவிடுப்பது - வரவிடல்வேண்டும், எ - று.

மதுரைச்சொக்கநாதர் சந்நிதியில் யாழ்வாசிக்கும் அடியாராகிய பாணபத்திரர் என்பவர் வறுமையால் மெலிந்து, ஆலவாய் அடிகளை இரக்க, அவர் கருணைகூர்ந்து சேரர்பிரானுக்கு, இத்திருமுகப பாசுரத்தைப் பாடிக்கொடுக்க, அதனைக்கண்ட சேரர்பிரான அடியாருக்கு வேண்டிய நிதிகளை அளித்து உபசரித்தனன் என்பது.

திருஞானசம்பந்தரும், திருமங்கையாழ்வாரும் சந்தித்தபோது.
ஆழ்வார்மீது சம்பந்தர் பாடியது.

5. கடியுண்டநெடுவாளைகராவிற்றப்பிக்
கயத்துக்குளடங்காமல்விசும்பிற்பாய
அடியுண்டவுயர்தெங்கின்பழத்தாற்பூகம்
அலையுண்டுகுலைசிதறுமாலிநாடா

படியுண்டபெருமானைப்பறித்துப்பாடிப்
பதம்பெற்றபெருமானேதமியேன்பெற்ற
கொடியொன்றுநின்பவனிக்கெதிரேசென்று
கும்பிட்டாளுயிரொன்றுங்கொடுவந்தாளே.

இ - ள். கடிஉண்ட நெடுவாளை - மணம்பொருந்திய நெடிய வாளைமீன்கள், கரர்வில்தப்பி - முதலையினின்றும் தவறி, கயத்துக்குள் அடங்காமல் - குளத்தி லடங்கியிராமல், விசும்பில்பாய - ஆகாயத்தில் பாய்தலால், அடிஉண்ட - அவற்றால்அடிபட்ட, உயர்தெங்கின்பழத்தால் - உயர்ந்த தென்னம்பழங்களால், பூகம்அலையுண்டு - கமுகமரங்கள் அசைதலைப்பொருந்தி, குலைசிதறும் - குலைகளைச்சிந்துகின்ற, ஆலிநாடா - திருவாலிநாடனே, படி உண்ட பெருமானை - உலகத்தையுண்ட பெருமானை, பறித்து - வழிகட்டிப்பறித்து, பாடி - கவிபாடி, பதம்பெற்ற பெருமானே - உயர்ந்தபதத்தைப்பெற்ற பெருமையுடையோனே, தமியேன் பெற்றகொடி - தனியனேன் பெற்றகொடிபோல் வாளாகியமாது, ஒன்றும் நின்பவனிக்கு எதிரேசென்று கும்பிட்டாள் - அழகு பொருந்திய உன்பவனிக்கெதிரேவந்து கும்பிட்டு, உயிர் ஒன்றும் கொடுவந்தாள் - உயிரொன்றையுமே கொண்டு மீண்டுவந்தாள், எ - று.

திருமங்கை யாழ்வார்காட்டில் செல்வோரை வழிகட்டிப்பறித்து, அப்பொருளைக்கொண்டு பாகவதர்களுக்குக் கைங்கரியஞ்செய்து வருகையில் ஸ்ரீமந்நாராயணன் பிராட்டியாரோடு பிராமணத் திருவுருக்கொண்டு அம்மார்க்கமாய் வந்தபோது எம்பெருமானையும் அவ்வாறே வழிகட்டிப் பறித்து, அப்பொருளை எடுக்கப்போகையில் அதுஎடுபடாமைகண்டு ஆழ்வார் பிராமண வேடங்கொண்டுவந்த இறைவனைநோக்கி நீர்ஏதோ மந்திரஞ் செபித்திருக்கின்றீர், அதனை எனக்கு உபதேசஞ் செய்யாவிட்டால், உம்மை உயிரோடுவிடேனென்று பயமுறுத்துகையில், பிராமணராகிய எம்பெருமான் ஆழ்வாரை அருகில் அழைத்துத் திருஅஷ்டாக்ஷர மந்திரத்தைஉபதேசித்துச் சேவைசாதித்தனர். அப்போது ஆழ்வார் அடியற்றபனைபோல் நிலத்தில்விழுந்து தேவரீர் திருவாபரணங்களைக் கழற்றத் துணிந்தேனேயென்று பலபலசொல்லித் துக்கித்தபோது எம்பெருமானுனவர் அடியார்கள் பக்தியால் செய்தவையெல்லாம் நமக்கிஷ்டமேயென்று கருணையோடுநோக்கி, இனிச்சேகரிக்கும் பொருளைக்கொண்டு திருவரங்கத்தில் கைங்கரியஞ்செய்து நமது விஷயமாகத் தமிழில் தோத்திரங்களைப் பாடுகவென்று ஆக்ஞாபிக்க, ஆழ்வாரும் அவ்வாறேசெய்து, திருமந்திரார்த்தங்களைப் பக்தர்களுக்கு உபதேசித்து அவர்கள் வல்வினையையும் போக்கியருளினர். இதனை, "குறள்வேடத்தும்மை வழிபறித்து மந்திரங் கொண்டன்பர் தங்கள்வல்வினையைப் பறித்தபிரான்" என மேலோர் கூறியவாற்றானுமறிக.

உயிரொன்றே கொடுவந்தாள் என்றமையால் கைவளை ஆழிமுதலியவற்றை இழந்துவந்தாள் என்பது கருத்து.

இதனைக்கேட்ட திருமங்கையாழ்வார் திருஞான சம்பந்த சுவாமிகள்மீது பாடியது.

6. வருக்கைநறுங்கனிசிதறிச்செந்தேன்பொங்கி
மடுக்கரையிற்குளக்கரையின்மதகிலோடப்
பெருக்கெடுத்துவண்டோலஞ்செய்யுங்காழிப்
பிள்ளையார்சம்பந்தப்பெருமாள்கேளீர்
அருட்குலவுமயிலைதனிலனலால்வெந்த
அங்கத்தைப்பூம்பாவையாக்கினோமென்
றிருக்குமதுதகவன்றுநிலவால்வெந்த
இதனையுமோர்பெண்ணாக்கலியல்புதானே.

இ - ள். வருக்கை நறுகனிசிதறி - பலாவின் மணமுள்ள கனிகள் சிந்துதலால், செந்தேன்பொங்கி - செந்தேன்பெருகி, மடுக்கரையில் - மடுவின்கரையிலும், குளக்கரையில்-குளத்தின் கரையிலும், மதகில்-மதகுகளிலும், ஓட-ஓடும்படி, பெருக்கெடுத்து - பெருகுதலால், வண்டு ஓலம்செய்யும் - வண்டுகள் ஒலிக்கின்ற, காழிப்பிள்ளையார்-காழிப்பிள்ளையாராகிய, சம்பந்தப் பெருமான்-சம்பந்தப்பெருமானே, கேளீர் - கேட்பீராக, அருள்குலவும் மயிலைதனில்-அருள்விளங்குகின்ற திருமயிலையில், அனலால்வெந்த - நெருப்பினால்வெந்த, அங்கத்தை - எலும்பை, பூம்பாவை ஆக்கினோம் என்று இருக்குமது-பூம்பாவையென்னும் பெண்ணாக்கினோமென்று நீர் இறுமாந்திருப்பது, தகவுஅன்று - தகுதியல்ல, நிலவால்வெந்த - நிலவினால்வெந்த, இதனையும் - இந்தஎலும்பையும், ஓர்பெண் ஆக்கல் - ஒருபெண்ணாக்கல், இயல்புதான் - உமக்குரிய குணமேயாகும், எ - று.

அனலால்வெந்த எலும்பைப் பெண்ணாக்கிக் காத்ததுபோல, உன்விஷயத்தில்மோகங்கொண்டு நிலவால்வெந்த இந்தப்பெண்ணையும் காத்தருளல் நும்கடனாம் என்பதுகருத்து.

திருமழிசையாழ்வார் திருக்கச்சியில் சயனத்திருக்கோலங் கொண்டருளிய பெருமானை நோக்கிக்கூறியது.

7. கணிகண்ணன்போவென்றான்காமருபூங்கச்சி
மணிவண்ணாநீயிங்கிராதே—துணிவுடனே
செந்நாப்புலவன்யான்செல்கின்றேனீயுமுன்றன்
பைந்நாகப்பாய்சுருட்டிக்கொள்.

இ - ள். கணிகண்ணன் போகின்றான் - கணி கண்ணன்போகின்றான், காமரு பூ கச்சி - அழகும்பொலிவுமுள்ள திருக்கச்சியிலெழுந்தருளிய, மணிவண்ணா - நீலரத்னம்போன்றநிறத்தையுடையவனே, நீ இங்குஇராதே - நீ இவ்விடமிருக்க வேண்டாம், துணிவுடனே - மனவுறுதியுடன், செந்நாப்புலவன்

யான் செல்கின்றேன் - செந்நாப்புலவனுகிய நான்போகின்றேன், நீயும் - நீயு ம், உன்றன் - உனது, பைநாகம் பாய் - படத்தையுடைய சர்ப்பமாகியபாயை, சுருட்டிக்கொள் - சுருட்டிக்கொள்ளுவாயாக, எ - று.

திருமழிசை யாழ்வார் திருக்கச்சியில் யோகத்தில் எழுந்தருளியிருக்குங் காலத்தில், அவர் திருவடிகளிலே கணிகண்ணன் ஆசிரயித்திருக்க, அவ்வளவி லே ஒரு கிழவி ஆழ்வாரை வழிபட்டு வருகையில் ஒருநாள் ஆழ்வார் திருவுளமு கந்து அவளைநோக்கி உன் அபீஷ்டத்தைச் சொல்லாயென,, அவள் அடியே னுக்கு இந்த வார்த்திகம் போம்படி கடாட்சித்தருளவேண்டுமென்ன, ஆழ்வா ர்கடாக்ஷத்தால் அவளும்யௌவனமடைந்து தேவஸ்த்ரீபோல் விளங்கினாள். அ ப்போது அந்நாட்டை ஆண்டுவந்த பல்லவராயன் இவளைக்கண்டு மோகித்துத் தனக்குப் பத்தினியாக வேண்டுமென்று பிரார்த்திக்க, அவளும் சம்மதித்து அவனுடனே போகங்களை அனுபவித்து வருகையில், பல்லவராயன் தனக்கு வார்த்திகம் வரக்கண்டு இவளைநோக்கியுனக்கு இந்த யௌவனம் எங்ஙனம் உ ண்டாயிற் றென்றுகேட்க, அவளும் ஆழ்வாராலே தனக்குண்டான விதத்தை க்கூறி, நீயும் உன்வீட்டுக்கு அநுதினமும் உபாதானத்துக்குவருகிற ஆழ்வாரு டைய சிஷ்யராகிய கணிகண்ணனைப் புருஷகாரமாகக்கொண்டு ஆழ்வார்திருவ டிகளை வணங்குவாயானால் உனக்கும் இப்படிப்பட்ட யௌவனம் உண்டாகு மென்றனள். அதுகேட்டு அரசன் கணிகண்ணனை அழைத்து உம் ஆசாரி யனை நாம் சேவிக்கவேண்டும அவரைநமயிடததது அழைத்துவாரும் என்ன, க ணிகண்ணரும் நம்மாசாரியர் ஒருவரகததுக்கு எழுந்தருளார் என்ன, அதன்மே ல் அரசன்தன்மீது கவிபாட வேண்டுமென்று கணிகண்ணனை அபேக்ஷிக்க, அ வர் பகவத்பாகவத விஷயமொழிய நான் நரஸ்துதிபண்ணி ஒருவரைப் பாடுவ தில்லையென்று மறுக்க, அரசன் கோபிதது நம்மைப் பாடீராயின் நம்மிராச் சியத்தை விட்டுப்போமென்றனன். உடனே கணிகண்ணர் ஆழ்வார்முன் செ ன்று தண்டம் சமர்ப்பிதது, அரசன்சொன்னதை விண்ணப்பஞ்செய்து அடி யேன் இவ்விடத்தில் நின்றும் விடைகொள்ளுகின்றே னென்ன' ஆழ்வாரும் நீர போகிறீர ஆகில் நாமும்பெருமாளும் இங்கிருக்கப் போகின்றோமோவெ ன்று பெருமானைநோக்கி மேற்செய்யுளைக்கூற, ஆழ்வார்சொன்னவண்ணமே பெருமாள் இவர் பின்னே எழுந்தருள, காஞ்சிமாநகரில் அந்தகாரம் கவிந்து உதயாஸ்த மயந்தெரியாதே பாழ்பட்டபடியைக்கண்டு, ராஜாவும் மந்திரிகளும் மிகக்கிலேசித்து இவர்களைப்பின்தொடாந்து ஓரிரவிருக்கை யென்கிற ஊரிலே இவர்களைக்கண்டு வணங்கி, கணிகண்ணனை வேண்டிக்கொள்ள, கணிகண்ண ரும் மீண்டெழுந் தருளும்படி ஆழ்வாரை வேண்டிக்கொள்ள, ஆழ்வாரும்மீண் டெழுந்தருளத் திருவுள்ளமாய்ச் சொன்னவண்ணஞ்செய்த பெருமாளைப்பார்த் து "கணிகண்ணன்போக்கொழிந்தான் காமருபூங்கச்சி - மணிவண்ணா நீகிடக் கவேண்டும்- துணிவுடைய, செந்நாப் புலவனும்போக் கொழிந்தேனீயுமுன்றன் பைந்நாகப்பாய்படுத்துக் கொள்" என்று அதையே மாற்றிப்பாட அங்ஙனே

அங்கு சயனித் தருளினர். இது காரணத்தாலே வடமொழியில் யதோக்தகாரி என்றும், தென்மொழியில் சொன்னவண்ணம் செய்தபெருமாள் என்றும் பெருமாளுக்குப் பெயர்வழங்கும்.

# இ ர ட் டை ய ர்.

இவர் திருவாங்கூருக்குச்சென்று சிவதரிசனம்செய்து அன்றிரவில் தமக்குப் பசித்திருக்க நேர்ந்தமையால் சிவபெருமானை நிந்தாஸ்துதியாகப் பாடியது.

1. தேங்குபுகழாங்கூர்ச்சிவனேயல்லாளியப்பா
நாங்கள்பசித்திருக்கைஞாயமோ—போங்காணும்
கூறுசங்குதோல்முரசுகொட்டோசையல்லாமல்
சோறுகண்டமூளியார்சொல்.

இ - ள். தேங்குபுகழ் - நிறைந்த புகழையுடைய, ஆங்கூர் சிவனே - திருவாங்கூரில் வாழ்கின்ற சிவபெருமானே, அல்லாளியப்பா—, நாங்கள் பசித்திருக்கை - யாங்கள் பசிதிருத்தல், ஞாயமோ-நீதியோ, (என்று ஒருவர்சொல்ல, மற்றொருவர்) போங்காணும்—, கூறு சங்கு - ஒலிக்கின்றசங்கினோசையையும், தோல் - தோலையும், முரசு - முரசத்தைபும், கொட்டு - அறைகின்றதனாலுண்டாகிற, ஓசை - ஓசையையும், அல்லாமல் - கண்டதே அன்றி, சோறுகண்டமூளி - சோற்றைக் கண்டமூளி, யார - யாவா, சொல் - சொல்வாயாக என்றார், எ - று.

சிதம்பரத்திற்சென்று ஓர் அறிவிலியைப் புகழ்ந்துபாடி அவன் சம்மானியாதபோது கூறியது

2. மூடர்முன்னேபாடன்மொழிந்தாலறிவரோ
ஆடெடுத்ததென்புலியூரம்பலவா—ஆடகப்பொன்
செந்திருவைப்போலணங்கைச்சிங்காரித்தென்னபயன்
அந்தகனேநாயகனானால்.

இ - ள். ஆடு எடுத்த - நடனத்தை மேற்கொண்ட, தென்புலியூர் அம்பலவா - தென்புலியூரில் பொன்னம்பலத்தை யுடையவனே, நாயகன் அந்தகன் ஆனால் - கணவன் குருடனானால், ஆடகம்பொன் - ஆடகமென்னும் பொன் போன்ற, செந்திருவைப்போல் - திருமகளை நிகர்த்த, அணங்கை - பெண்ணை, சிங்காரித்து - அலங்கரித்ததனால், என்னபயன் - பிரயோஜநம் யாது, (ஒன்றுமில்லை அதுபோல என்று ஒருவர்சொல்ல அதற்கு மற்றொருவர்) மூடர் முன்

னேபாடல் மொழிந்தால் - மூடருக்கெதிரில் கவியைச்சொன்னல், அறிவரோ- (அதின்சாரத்தை அவர்) அறியவல்லரோ என்றார், எ - று.

திருநெல்வேலியில் சிவதரிசனம் செய்தபோது பாடியது.

3. வேயீன்றமுத்தர்தமைவெட்டினனேயிடையன்
தாயீன்றமேனிதயங்கவே—பேயாகேள்
எத்தனைநாளென்றேயிடறுவான்பாற்குடத்தை
அத்தனையும்வேண்டுமவர்க்கு.

இ - ள். இடையன் - இடையனானவன், தாய் - தாயினது, ஈன்றமேனி- பெற்றவுடம்பு, தயங்க - அசையும்படி, வேயீன்ற முத்தர்தமை வெட்டினனே - விண்டுமுத்தரை வெட்டினனே, (இதென்ன பரிதாபம் என்று ஒருவர்சொல்ல மற்றொருவர்) பேயாகேள் - பேயனேகேட்பாயாக, (இடையன்) பால்குடத்தை—, எத்தனை நாளென்றே இடறுவான் - எத்தனைநாளாய்த்தான் இடறிக் கவிழ்ப்பான், அவர்க்கு - அந்தவிண்டு முத்தர்க்கு, அத்தனையும்வேண்டும் - அவ்வளவும்தகும் என்றார், எ - று

விண்டு - மூங்கில், திருநெல்வேலியில் ஓர் இடையன் அரசன் வீட்டுக்குப் பாற்குடம் கொண்டுபோகிறது வழக்கம், அப்படியிருக்கையில் அவ்வழியில் சிவபெருமானைத் தன்னுள்ளே அடக்கிக்கொண்டிருந்த ஓர் மூங்கிலானது இவனது பாற்குடத்தை ஒருநாள்போலவே பலநாளும் இடறிவிழச்செய்து பாலைநிலத்தில் சிந்திவந்தது. அவ்விடையன் அந்த அரசனுக்குத் தெரிவிக்க அவன் ஆட்களைக்கொண்டு அப்புதலைவெட்டிச் சோதிக்க, அதனுள் சிவலிங்கப்பெருமான் தோன்றினர். இக்காரணத்தால் அப்பெருமானுக்கு விண்டுமுத்தரென்றுபெயர். சிவபெருமானுக்குத் தாய் மூங்கில் என்பதற்கும் காரணம் இதுவே. இதனைத் திருநெல்வேலிப் புராணத்தில் பரக்கக்காண்க.

ஓர் வேளாளன் தன்மகளை மருமகன் வீட்டுக்கு அழைத்துச்செல்லும் வழியில் அன்பின்மிகுதியால் அவளைத் தழுவிச்செல்வதைக்கண்டு பாடியது.

4. மாங்காட்டுவேளான்மகளைமருமகன்பால்
போங்காட்டிலின்பம்புணர்ந்தானே—ஆங்காணும்
மக்கண்மெய்தீண்டலுடற்கின்பமற்றவர்
சொற்கேட்டலின்பஞ்செவிக்கு.

இ - ள். மாங்காட்டு வேளான் - மாங்காட்டு வேளாளன், மகளை - தன்மகளை, மருமகன்பால் போம்காட்டில் - மருமகனிடத்திற் செல்லும் வழியாகிய காட்டில், இன்பம் புணர்ந்தானே - சுகமநுபவித்தானே (இதென்ன முறைகே[illegible] என்று ஒருவர்சொல்ல அதற்கு மற்றொருவர்), ஆம்காணும்—, மக்கள் மெய்[illegible]ணடல் - மக்களுடம்பைத்தீண்டுதல், உடற்கு இன்பம் - (தாய்தந்தையர் [illegible]) உடம்புக்கு இன்பமாகும், அவர் சொல்கேட்டல் - அவரது சொல்[illegible]ை கேட்டல், செவிக்கு இன்பம் - காதுக்கு இன்பமாகும், எ - று.

முருமகன் வீட்டுக்குத் தன்மகளை அழைத்துச்செல்லும் வேளாளன் தான் போகும் காட்டுவழியில் இனி இவளை அடிக்கடி கண்டுகளிக்க நேராதேயெ ன்று இன்மொழிகூறி எடுத்தணைத்துச் சென்றான் என்பதுகருத்து.

இவர் மலையும் மலைச்சாரலுமாகிய காட்டுவழியிற்சென்று வருந்தியபோது பாடியது.

5. குன்றுங்குழியுங்குறுகிவழிநடப்ப
தென்றுவிடியுமெமக்கென்கோவே—ஒன்றும்
கொடாதானைக்கோவென்றுங்காவென்றுங்கூறில்
இடாதோநமக்கிவ்விடி.

இ-ள். குன்றும் குழியுங்குறுகி - மலைகளையும் பள்ளங்களையும் கிட்டி, வழிநடப்பது - வழிநடத்தலாகிய இத்தொழில், எமக்கு என்று விடியும் - நம க்கு என்று முடிவுபெறும், (என்று ஒருவர்சொல்ல அதற்கு மற்றொருவர்) என் கோவே - என்னிறைவனே, ஒன்றும்கொடாதானை - சிறிதும் கொடாதவனை, கோ என்றும் கா என்றும் கூறின் - காமதேனு என்றும் கற்பகத்தரு என்றும் புனைந்து சொன்னால், இவ்விடி நமக்கு இடாதோ - இந்தத்துன்பம் நமக்கு நேரி டாதோ என்றார், எ - று.

இரட்டையரும் காளமேகப்புலவரும் பாடியது.

6. நாணென்றானஞ்சிருக்குநற்சாபங்கற்சாபம்
பாணந்தான்மண்டின்றபாணமே—தாணுவே
சீராரூர்மேவுஞ்சிவனேநீயெப்படியோ
நேரார்புரமெரித்தநேர்.

இ-ள். நாண் என்றால் - நாணென்றாலோ, நஞ்சு இருக்கும் - நைந்திரு க்கும், நல்சாபம் கல்சாபம் - நல்லவில்லென்றாலோ கல்வில்லாகும், பாணம் தான் மண் தின்ற பாணம் - அம்பென்றாலோ மண்ணுண்ட அம்பாகும், (இப்ப டியிருக்க) தாணுவே - சிவபெருமானே, சீர் ஆரூர் மேவும் - சிறப்புள்ள திருவா ரூரிலெழுந்தருளிய, சிவனே - சிவனே, நீ - நீ, நேரார் -பகைவரது, புரம் - முப்புரத்தை, எரித்தநேர் எப்படியோ - நீறு படுத்தின விதம் எவ்வாறோ-அறி யோம், எ - று.

இவர்கள் திருவாரூருக்குச்சென்று சிவதரிசனஞ்செய்து மண்டபத்துக்கு வந்து தங்கியிருக்குங்காலத்தில், இவருள் ஒருவர் "நாணென்றால்" என்று தொடங்கி "பாணந்தான்" என்னுமளவும்பாடிவிட மற்றொருவருக்கு அவ்விட் டவிடத் தொடங்கி மற்றதைப் பூர்த்திசெய்யத்தோற்றாமையால் இதனை அம்ம ண்டபச்சுவரில் எழுதிவைத்து மற்றுஞ்சில திருப்பதிகள் சென்று வணங்கி மீண்டுவந்தபோது காளமேகப்புலவரால் மண்டின்ற என்று தொடங்கி நேர் எ ன்று முடியும் பூர்த்திசெய்து அடியில் காளமேகன் என்று கையெழுத்திட்டிரு க்கக்கண்டு வியந்தார்கள்.

பின் இவ்விருவரும் இவ்வருமைப்புலவரைக்கண்டு களிக்கவேண்டும், இவர் எங்குளார் என்று அங்குள்ளாரைவினவ, அவர்கள் இப்புலவர் இன்று தான் தேகவியோகமடைந்து அவரது பிரேதம் மயானத்தில் வெந்துகொண்டிருக்கின்றது என்றார்கள், இதைக்கேட்ட இவர்கள் மயானத்திற்சென்று அவரது வாய் வேகிறதைக்கண்டு பாடினது.

7. ஆசுகவியாலகிலவுலகெங்கும்
வீசுபுகழ்க்காளமேகமே—பூசுரா
விண்கொண்டசெந்தழலில்வேகுதேஐயையோ
மண்டின்றபாணமென்றவாய்.

இ - ள். ஆசுகவியால் - ஆசுகவிபாடுந் திறத்தால், அகில உலகு எங்கும் - எல்லா வுலகங்களாகிய எவ்விடத்தும், வீசுபுகழ் - பரிமளிக்கிற கீர்த்தியை யுடைய, காளமேகமே - காளமேகப்புலவரே, பூசுரா - வேதியா, மண்டின்ற பாணம் என்றவாய் - மண்தின்ற பாணம் என்று சொன்ன உன் வாயானது, விண்கொண்ட செந்தழலில் வேகுதே-ஆகாயத்தை யளாவியசெந்தீயில் வேவா நின்றதே, ஐயையோ - அந்தோ இது என்னபரிதாபம், எ - று.

பாண்டியனைநோக்கிக் கூறியது.

8. புராதனமானதமிழ்ப்புலவீரிந்தப்புன்குரங்கு
மராமரம்விட்டிங்குவந்ததென்னேவகைகேட்டிலேயோ
தராதலம்வென்றதமிழ்மாறனையுந்தன்றம்பியையும்
இராகவனென்றுமிலக்குவனென்றுமிருந்ததுவே.

இ - ள். புராதநம் ஆனதமிழ்ப்புலவீர்-பழமையாகிய தமிழ்வித்வான்களே, இந்தபுல்குரங்கு - இந்த அற்பமான (குரங்கு), மராமரம்விட்டு இங்கு வந்தது என்னே - மராமரத்தைவிட்டு இவ்விடத்திற்கு வந்ததற்குக் காரணம்யாதோ, வகைகேட்டிலேயோ - இதற்கு விவரம் கேட்கவில்லையோ, தராதலம்வென்ற - உலகமுழுதும் வென்ற, தமிழ்மாறனையும் தன் தம்பியையும் - தமிழ்ப்பாண்டியனையும் அவன்தம்பியையும், இராகவன் என்றும் இலக்குவன் என்றும் இருந்தது- ஸ்ரீராமனென்றும் லக்ஷ்மணனென்றும் எண்ணி இங்கேயிருந்துவிட்டது., எ-று.

இவர்கள் பாண்டியன் சமுகத்திற்சென்று அவனால் பரிசில்பெறுஞ் சமயத்தில் துர்மந்திரியாகிய ஒருவன் விலக்க அவன்மீது கோபங்கொண்டு ஒருவர் மற்றொருவரைநோக்கி இந்தப்புன்குரங்கு மராமரம்விட்டு இங்கு ஏன்வந்ததென வினவ, அதற்கு விடையாக மற்றொருவர் பாண்டியனை இராமனாகவும் அவன் தம்பியை இலக்குமணனாகவும், புகழ்ந்தும், தடுத்தவனைக் குரங்கு என்று நிந்தும்பாடினர் என்பது கருத்து.

வீரசம்பு என்பவர் கொடுத்தபரிசை இரட்டையர் இடதுகையால் வாங்கினதற்கு வீரசம்பு வினவாகப் பாடியது.

9. பதிவீரசம்புவென்றுபாராமற்கல்விச்
கிதமுடையிரட்டையரேயீகை—உதவில்வலக்
கைத்தலத்திற்கொண்டுகளிக்காமலும்மிடது
கைத்தலத்திற்கொள்ளுவதேன்காண்.

இ - ள். கல்விக்கு இதம் உடை இரட்டையரே - கல்வியால் உலகத்துக்கு நன்மைசெய்தலையுடைய இரட்டையரே - வீரசம்பு - வீரசம்பு என்கிற என்னை, பதி என்று பாராமல் - உமக்குப்பிரபு என்றுநோக்காமலும், ஈகை உதவின் - யாம் கொடைப்பொருளைகொடுத்தால், (அதனை) வலக்கைதலத்தில் கொண்டு களிக்காமல் - வலக்கையிலேற்று மகிழாமல், உம் - உமது, இடது கைத்தலத்தில் கொள்ளுவது - இடக்கையி லேற்றுக்கொள்வதற்குக் காரணம், என் - யாது, எ - று.

இரட்டையர் விடை.

10. கூவராயன்றியாகங்கொள்வோம்வலக்கைமுடி
யாவர்தரினுமிடக்கைகொள்வோம்—பூவுலகில்
மின்பணிமின்னார்மதனேவீரசம்புவேயினிநாம்
இன்பமுநேரோமினி.

இ - ள். பூவுலகில் - பூலோகத்தில், மின்பணி - மின்கொடியும் வணங்குதற்குரிய, மின்னார் - மாதருக்கு, மதனே - மன்மதனே, வீரசம்புவே - வீரசம்புவே, கூவராயன் தியாகம் - கூவராயன்தருகிறகொடைப் பொருளை, வலக்கை கொள்வோம் - வலக்கையால் வாங்குவோம், முடி - மகுடமணிந்த, யாவர்தரினும் - எவர் கொடுத்தாலும், இடக்கைகொள்வோம், இடக்கையால் வாங்குவோம், இனி - இனி, நாம் - யாம், இன்பமும் நேரோம் - சுகத்தை வேண்டிலோம், எ - று.

வீரசம்பு வினா.

11. என்னுடையபேரும்புகழுமிருஞ்சீரும்
என்னுடையவீகையுங்கண்டெப்படிநம்—முன்னவனை
ஆவனுடனேயதிகமாய்ச்சொன்னீரிரட்டையரே
கூவராயன்னியல்பென்கூறு.

இ - ள். என்னுடையபேரும் - என்பெயரையும், புகழும் - கீர்த்தியை யும், இருஞ்சீரும் - பெருஞ்சிறப்பையும், என்னுடைய ஈகையும் - எனது ஈகையையும், கண்டு - பார்த்தும், எப்படி - எவ்வாறு, நம்முன்னவனை - நம்தமையனை,

ஆவலுடனே - விருப்பத்துடனே, அதிகமாய்ச்சொன்னீர் - அதிகமாய்ச்சொன்னீர், இரட்டையரே - இரட்டைப்புலவரே, கூவராயன் இயல்பு என் - கூவராயனது தன்மையாது, கூறு - சொல்வீராக,

கொடையில் தன்னினும் சிறந்தவனுகையால் முன்னவன் என்றான்.

இரட்டையர் விடை.

12. மாதாபிதாவுமவன்மன்னுகுருதெய்வமவன்
தாதாவவனேதரும்கீர்த்திக்—காதாரன்
தியாகசமுத்திரன்றண்கூவராயன்றன்
ஈகைதனைச்சொல்லவெளிதோ.

இ - ள். மாதாபிதாவும் அவன்-(எமக்கு) தாய்தந்தையரும் அவனே, மன்னு - நிலைபெற்ற, குருதெய்வம் அவன் - குருவும் தெய்வமும் அவனே, தாதா - கொடையாளி, அவனே - அவனே, தரும்கீர்த்திக்கு ஆதாரன் (அவனே)-உண்டாகின்ற கீர்த்திக்கு ஆதாரமானவன் அவனே, தியாக சமுத்திரன் - தியாகம் கொடுப்பதில் சமுத்திரம்போல அளவிடற்கு அரியவன், தண் - சாந்தகுணமுள்ள, கூவராயன் தன் ஈகைதனை - கூவராயனுடைய ஈகையை, சொல்ல எளிதோ - சொல்லுதல் எளிமையுடையதோ, எ - று.



சொக்கநாதப்புலவர் பாடல்.

கறுப்பனென்னும் சீமானைப்புகழ்ந்து பாடியது.

1. சீர்கறுத்தமுகிற்கரத்தான்கஸ்தூரிபூபனருள்சேயாவென்றும்
ஓர்கறுப்புமில்லாததொண்டைவளநாட்டிருக்குமுசிதவேளே
ஆர்கறுப்பனென்றுசொல்லியழைத்தாலுநாமுன்னையன்பினாலே
பேர்கறுப்ப னிறஞ்சிவப்பன்கீர்த்தியினால்வெளுப்பனெனப்பேசுவோமே.

இ - ள். சீர் - சிறப்புள்ள, கறுத்த முகில் - கரிய மேகம்போன்ற, கரத்தான்-கொடைக்கையினை யுடையவனாகிய, கஸ்தூரிபூபன் அருள்சேயா - கஸ்தூரி பூபதிபெற்ற புதல்வனே, என்றும்-எக்காலத்தும், ஓர் கறுப்பும் இல்லாத-ஒருகளங்கமுமில்லாத, தொண்டை வளநாடு இருக்கும் - வளமாகிய தொண்டைநாட்டில் வாழ்கின்ற, உசிதவேளே - சிறந்த மன்மதனே, ஆர் - யாவர், கறுப்பன் என்றுசொல்லி அழைத்தாலும் -கறுப்பன் என்று கூப்பிட்டாலும், நாம்-யாம், உன்னை-உன்னை, அன்பினாலே - அன்பினாலே, பேர்கறுப்பன் என - பேரால் கறுப்பனென்றும், நிறம் சிவப்பன் என - நிறத்தால் சிவப்பன் என்றும் கீர்த்தியினால் வெளுப்பன் என - புகழினால் வெளுப்பனென்றும், பேசுவோம் - சொல்வோம், எ - று.

என்றும் ஓர் கறுப்புமில்லாத தொண்டைவளநாடு என்றது எக்காலத்தும் சிறுவிலைக்காலம் முதலிய குற்றமில்லாத தொண்டைவளநாடு என்றபடி. இவன் செந்நிறமுடையவனாதலால் நிறஞ்சிவப்பனென்றும் கீர்த்திக்கு நிறம் வெண்மையாதலாலும், இவன் அதனை யுடையனாதலாலும் கீர்த்தியினால் வெளுப்பன் என்றும் கூறினர்.

இதுவுமது.

2. பிள்ளைவயதினிற்கல்விகற்றோம்பின்பு
பெரியநரவாகனமும்பெற்றோம்பூமி
உள்ளளவுங்கீர்த்திநிலைநிறுத்திக்கொண்டோம்
ஒருகுறையுமில்லையினியுரைப்பக்கேண்மோ
தெள்ளிலகுசிதம்பரத்தைத்தெரிசித்தோம்பின்
சேற்கருங்கட்டளவநகைத்தெய்வயானை
வள்ளிபுணர்சிவப்பனையுந்துதித்தோமெங்கள்
மாவைவளர்கறுப்பவுன்னைவாழ்த்தினோமே.

இ - ள். பிள்ளைவயதினில் - பிள்ளைப் பருவத்திற்றானே, கல்விகற்றோம் - கல்விகற்றோம், பின்பு பெரியநர வாகநமும் பெற்றோம் - பின்னர்பெரிதாகியசிவிகையையும் பெற்றோம், பூமி உள்ள அளவும் கீர்த்திநிலை நிறுத்திக்கொண்டோம் - பூமி உள்ளவரையில் புகழைநிலைபெற்று விளங்கச்செய்துகொண்டோம், ஒரு குறையும் இல்லை - எமக்குஒரு குறையும்இல்லை, இனி உரைப்பக்கேள் - இனிசொல்லக்கேள், தெள் இலகு சிதம்பரத்தை-ஞானம்விளங்குகின்ற சிதம்பரத்தை, தெரிசித்தோம் - சேவித்தோம், பின் - அதன்பின், சேல்கருங்கண் - சேல்மீன்போன்ற கரியகண்களையும், தளவம் நகை - முல்லையரும்பு போன்ற பற்களையுமுடைய, தெய்வயானை வள்ளி - தெய்வயானை வள்ளியம்மைஆகிய (இவர்கள்), புணர் - புணர்கின்ற, சிவப்பனையும்துதித்தோம்- முருகக்கடவுளையும் துதித்தோம், எங்கள் மாவைவளர்கறுப்ப - எமது மாவையில்வளர்கின்ற கறுப்பனே, உன்னைவாழ்த்தினோம் - உன்னையும்வாழ்த்தினோம். எ - று.

தெள் இலகு சிதம்பரம் என்பதற்கு எல்லாத்திருப்பதிகளுள்ளும் சிறந்ததென்று தெளிந்தெடுக்கப்பட்டுவிளங்குகின்ற எனினும்பொருந்தும். செவப்பு நிறமுடையவனாகையால் முருகனை சிவப்பன் என்றார். கல்விகற்றல்முதல் சிவப்பனைத் துதித்தல் ஈறுயுள்ள இகலோகபரலோக சாதனங்களுக்கு கறுப்பன் என்னும் சீமான் துணையாய் நின்றமையால் "கறுப்பஉன்னை வாழ்த்தினோம்", என்றார்.

3. எல்லப்பனம்மையப்பன்றருதிரு வேங்கடராமனெழிற்சிராமன், [illegible]க்கொண்டமனுடனே மாதைவெங்கடேசனைப்போல் வரிசை [illegible], செல்லத்தம்பியருடனே மாவையில் வாழ்கறுப்பண்ணன்றெ

ருவீதிக்கே, பல்லக்குத்தான்சுமந்தா னதுநமக்கோராயிரம்பொன்பரி
சு தானே.

இ - ள். எல்லப்பன் அம்மையப்பன், எல்லப்பனம்மையப்பன், தரு - பெற்ற, திருவேங்கடராமன் - திருவேங்கடராமனையும், எழில் - அழகுள்ள, சீராமன் - சீராமனையும், வல்லகொண்டமனுடனே - வல்லக்கொண்டமனென்பவனோடு, மாதைவெங்கடேசனைப்போல் - மாதைவெங்கடேசனைப்போல, வரிசைதந்தான் - வரிசைகொடுத்தான், செல்லத்தம்பியருடனே - செல்லத்தம்பியரோடு, மாவையில்வாழ்கறுப்பண்ணன் - மாவையில் வாழ்கின்ற கறுப்பண்ணனென்பவன், தெருவீதிக்கு - தெருவீதியளவும், பல்லக்குத் தான்சுமந்தான், பல்லக்கையும் தானேசுமந்து சென்றான், அது - அச்செயல், நமக்கு ஓர் ஆயிரம் பொன் பரிசுதான் - நமக்கு ஒரு ஆயிரம் பொன்னைப் பரிசிலாகத் தந்தது போலாகும். எ - று.

4. மெய்யிலே யொருபாதி யுமைக்களித்த செங்காட்டுவிமலனாரே, மையிலே தோய்ந்தவிழிச் சந்தநங்கை தலைக்கறியை வளமாயாவின், நெய்யிலே தான்சமைத்துக் கொடுத்திருந்தும்படைத்திருந்த நீர்தானின்று, கையிலேமழுவெடுத்தாற பொய்யாமோ பிள்ளைகொன்றகளவுதானே.

இ - ள். மெய்யிலே ஒருபாதி - உடம்பிலே ஒருபாதியை, உமைக்கு அளித்த - உமாதேவியாருக்குக் கொடுத்த, செங்காட்டு விமலனாரே - திருச்செங்காட்டிலெழுந்தருளிய பரிசுத்தரே, மையிலே தோய்ந்தவிழி - அஞ்சனத்திலே படிந்த கண்களையுடைய, சந்தநங்கை - சந்தநங்கையானவள், தலைக்கறியை - தலைக் கறியை, வளமாய் - சுவையுடையதாக, ஆவின்நெய்யிலே தான் சமைத்துக் கொடுத்திருந்தும் - பசுவின் நெய்யிலே சமைத்துக் கொடுத்திருந்தும், படைத்திருந்தும் - (இலையில்) பரிமாறியிருந்தும், நீதான் கையிலே மழு எடுத்தால் - நீர் இன்றுகையில் மழுவைத் தாங்கியிருந்தால், பிள்ளைகொன்றகளவு பொய்யாமோ - பிள்ளையைக்கொன்ற குற்றம் மறையுமோ - எ - று.

சந்தநங்கை - சிறுத்தொண்டன் மனைவி.

5. துப்பனையுமரகதத்தின் கொழுந்தனையுமொன்றாகத் துலங்கு மெய்யா, செப்பரியபுலியதளைத் தரிக்குமுத்தராபதியிற்சிவனேநீதான், அப்பரையும் விழுங்கியொரு பிள்ளையுந்தின்றாற்றுமலையோவின்னும், கப்பரையுங்கையுமாய்ப் புறப்பட்டாய்நல்லதிருக் காட்சிதானே.

இ - ள். துப்பனையும் - பவளத்தையும், மரகதத்தின் கொழுந்தனையும் - மரகதத்தின் கொழுந்தையும், ஒன்றாக - ஒன்றும்படி, துலங்கும் - விளங்குகின்ற, மெய்யா - திருமேனியை யுடையவனே, செப்பு அரியபுலி அதளை [illegible]

கும் - சொல்லுதற்கரிய புலித்தோலை யணிகின்ற, உத்தராபதியில் சிவனே-உத்தராபதியி லெழுந்தருளிய சிவபெருமானே, அப்பனையும் விழுங்கி - அப்பர்சுவாமியையும் விழுங்கி, ஒருபிள்ளையும் தின்று - ஒரு பிள்ளையையும் தின்று, ஆற்றுமல்-பசியைச் சகிக்காமல், ஐயோ-அந்தோ, இன்னும் கப்பனையும் கையுமாய் புறப்பட்டாய் - இன்னும் கப்பரையும் கையுமாய் வெளிப்பட்டாய், நல்ல திருக்காட்சிதானே - (இது) நல்ல தரிசநந்தான்-எ-று.

"செழுந்தமிழப்பனைச் சிவலிங்கமாகி, விழுங்கிய" என்றார் மேலோரும். ஒருபிள்ளையென்றது சிறுத்தொண்டன் மகனாகிய சீராளனே.

6. அடிபட்டீர்கல்லாலு மெறிபட்டீ ரத்தனைக்கு மாளாயந்தப், படிபட்டும் போதாம லுதைபட்டீ ரிப்படியும் படுவாருண்டோ, முடிபட்ட சடையுடையீர் கழுக்குன் றீர்முதற்கோணன் முட்டக்கோணல்,இடிபட்டும்பொறுத்திருந்தீர் சிவசிவாவுமைத்தெய்வமென்னலாமே.

இ - ள். அத்தனைக்கும் ஆளாய்-அவ்வளவு பாடுகளுக்கும் உட்பட்டு, அடிபட்டீர் - பிரம்படி பட்டீர், கல்லாலும் எறிபட்டீர்-கல்லினாலும் எறியப்பட்டீர், அந்தபடி பட்டும் போதாமல் உதை பட்டீர் - அந்தவிதமாய் அடிபட்டதும்போதாமல் உதையும் பட்டீர், இப்படியும் படுவார் உண்டோ-இப்படியும் படுவாருளரோ, முடிபட்ட சடையுடையீர் - முடியோடுகூடிய சடையுடையவரே, கழுக்குன்றீர் - திருக்கழுக் குன்றத்தை யுடையவரே, முதல்கோணல் முட்டக்கோணல் - முதலில் கோணலுண்டானால் முழுதும் கோணலாகவே முடியும், இடிபட்டும் பொறுத்து இருந்தீர் - இடிபட்டும் பொறுத்திருந்தீர், சிவசிவா-சிவனே சிவனே, உம்மை தெய்வமென்னல் ஆமே-உம்மைத் தெய்வமென்று சொல்லுதல் பொருந்துமோ, எ - று.

பிரம்படிபட்டது வைகை யாற்றங்கரையில் பிட்டுக்கு மண்சுமக்க வந்தபோது. கல்லாலெறிபட்டது - சாக்கிய நாயனாரால். உதைபட்டது - கண்ணப்ப நாயனாரால். முதலில் ஒருவனால் அடிபட்டுப் பின்பலராலும் அடியும் உதையும் பட்டதனால் "முதல்கோணல் முட்டக்கோணல்" என்றார்.

7. செல்லாரும் பொழில்புடைசூழ் புலியூரம்பலவாண தேவாவும்மைக், கல்லாலும் வில்லாலுஞ் செருப்பாலும் பிரம்பாலுங் கடிந்துசாடும், எல்லாருநல்லவரென் றெண்ணியருளீந்ததென்னவிகழ்ச்சியொன்றும், சொல்லாமன் மலரால்விட் டெறிந்தவனைக் காய்ந்ததென்ன சொல்லுவீரே.

இ - ள்; செல்லாரும் - மேகங்களில் படிகின்ற, பொழில் - சோலைகள், புடைசூழ் - பக்கங்களில் சூழப்பெற்ற, புலியூர் அம்பலவாண தேவா - புலியூரிலுள்ள பொற்சபையில் வாழ்பவனாகிய தேவனே, உம்மை-தேவரீரை, கல்லாலும் வில்லாலும் செருப்பாலும் பிரம்பாலும் - கல்முதலியவற்றால், கடிந்து சாடும்,

கோவித்து அடித்த, எல்லாரும் நல்லவர்என்று எண்ணி - யாவரும் நல்லவர் என்று நினைத்து, அருள் ஈந்தது என்ன - அருள்செய்ததென்ன, இகழ்ச்சி-பழிமொழிகள், ஒன்றும் சொல்லாமல்-சிறிதும்சொல்லாமல், மலரால் விட்டெறிந்தவனை - புஷ்பங்களைக்கொண் டெறிந்தவனை, காய்ந்தது என்ன-எரித்துவிட்டதென்ன, சொல்லுவீர்-சொல்லுவீராக, எ - று.

வில்லா லடித்தவன் - அருச்சுனன்.

8. நல்லாளையிடமருவுந் தியாகையாவு மதிடத்தினியாயங்காணும்; கல்லாலேயெறிந்தோர்க்குஞ் செருப்படியாலுதைத்தோர்க்குங்கடிந்து போரில், வில்லாலேயடித்தோர்க்குங் கொடுத்தீரேயல்லாமல் விழிநீர் சோர, எல்லாமுன்செயலென்றே யிருப்போருக்கியாதேனு மீகிலீரே.

இ - ள். நல்லாளை-உமாதேவியை, இடம்மருவும் - இடது பாகத்திற்பொருந்திய, தியாகையா - தியாகராயரே, உமது இடத்தில் - உம்மிடத்தில், நியாயம்காணும் - நீதியைக்கண்டிலோம், கல்லாலே எறிந்தோர்க்கும் - சாக்கியநாயனாருக்கும், செருப்பு அடியால் - செருப்புக்காலால், உதைத்தோர்க்கும் - உதைத்த கண்ணப்பருக்கும், கடிந்து - கோவித்து, போரில் - யுத்தத்தில், வில்லாலே அடித்தோர்க்கும், அருச்சுனனுக்கும், கொடுத்தீரே யல்லாமல் - அவர்கள் விரும்பினவற்றை கொடுத்தீரே யல்லாமல், விழிநீர்சோர - கண்ணீர் ஒழுக, எல்லாம் உன்செயல் என்றே இருப்போருக்கு-யாவும் உன்செயலென்று இருப்பவர்களுக்கு, யாதேனும்-யாதாயினும், ஈகிலீர்-கொடுக்கிலீர்—, எ - இதென்ன அநியாயம், எ - று.

9. பண்காணுந் தமிழ்ப்புலவீ ரினத்தோடே யினஞ்சேரும் பரிசே போலத், தண்காவி மலர்த்தடஞ்சூழ் காவிரிநாட் டொருபுதுமை சாற்றக் கேளீர், கண்காண நரையான்மேல் வெண்காடை வீற்றிருக்கக் கண்டோமந்த, வெண்காடை யிடப்புறத்தே பச்சையன்னங் கலந்திருக்கும் விதங்கண் டோமே.

இ - ள். பண்காணும் தமிழ்ப்புலவீர் - பண்களைக்கொண்ட தமிழை யாராய்ந்த புலவர்களே, இனத்தோடே இனம் சேரும் பரிசேபோல - சாதியோடு சாதிசேருந் தன்மையேபோல, தண்காவி மலர்த்தடம்சூழ் - குளிர்ச்சி யாகிய குவளைமலர்த் தடாகங்கள் சூழ்ந்த, காவிரிநாட்டு - காவிரி நதி பாய்கின்ற சோழநாட்டில், ஒரு புதுமை-ஒரு புதுமையுண்டு, சாற்றக்கேளீர்-அதைச் சொல்லக் கேளுங்கள், கண்காண - பிரத்தியக்ஷமாய், நரையான்மேல்-காகத்தின் மீது, வெண்காடை வீற்றிருக்கக்.கண்டோம்-வெள்ளிய காடை வீற்றிருக்கப் பார்த்தோம், இந்தவெண்காடை இடப்புறத்தே-இந்தவெள்ளியகாடையின் இடதுபக்கத்தில், பச்சை அன்னம் கலந்து இருக்கும்விதம் கண்டோம் - பச்சையன்னம் சேர்ந்திருக்கப் பார்த்தோம், எ - று.

நனை - மீன்குத்தி எனினுமாம். நனையான் - (நனை ஆன்) வெள்ளை எருது, வெண்காடை (வெண்காடு ஐ) திருவெண் காட்டிலுள்ள சிவபெருமான், பச்சை அன்னம் - பச்சை நிறமுள்ள அன்னம்போல் பவளாகிய உமாதேவி.

10. இந்திரன்கலையா யென்மருங்கிருந்தா னக்கினியுதரம்விட்டக லான், எமனெனைக்கருதா னரனெனக்கருதி நிருதிவந்தென்னையென் செய்வான், அந்தமாம்வருணனிருகண் விட்டகலானகத்தினின்மக்களு ம்யானும், அநிலமதாகுமமுதினைக் கொள்வோம்யாரெதிரெமக்குளாரு லகில், சந்ததமிந்த வரிசையைப் பெற்றுத்தரித்திர ராசனைவணங்கித், தலைசெயுமெம்மை நிலைசெய்சற்கீர்த்திச் சாளுவகோப்பையனுதவும், மந்தரபுயத்தான் றிப்பையராயன் மகிழ்வொடு விலையிலாவன்னோன், வாக்கினாற்குபேரனாக்கினானவனே மாசிலீசானபூபதியே.

இ - ள். இந்திரன் - தேவேந்திரன், கலை ஆய் - ஒருகூறாகி, என்மருங்கு இருந்தான் - என்னிடத்திலிருந்தான், அக்கினி - தீக்கடவுள், உதரம்விட்டு அகலான் - வயிற்றைவிட்டு நீங்கான், என்னை அரன் எனக்கருதி - என்னைச் சிவனென்று நினைத்து, எமன்கருதான் - எமன் நினைக்கமாட்டான், நிருதிவந்து என்னை என்செய்வான் - நிருதியானவன்வந்து என்னையாது செய்யமாட்டுவான், அந்தம் ஆய் வருணன் - அழகாகியவருணன், இருகண்விட்டு அகலான் - இரண்டு கண்களையும்விட்டு நீங்கமாட்டான், அகத்தினில் - வீட்டில், மக்களும் யானும்---, அநில மது ஆகும் அமுதினைக் கொள்வோம் - காற்றாகிய அமிர்தத்தையுட்கொள்வோம், உலகில் - உலகத்தில், எமக்கு எதிர் - எமக்கு நிகராவார், யார் உளார் - யாரிருக்கின்றார்கள், சந்ததம் - எப்பொழுதும், இந்த வரிசையைப்பெற்று - இந்த முறைமையைப்பெற்று, தரித்திரராசனை வணங்கி - தரித்திரராஜனைத்தொழுது, தலைசெயும் எம்மை - வாழ்ந்து தழைக்கின்ற எங்களை, நிலைசெய் - நிலைப்படுத்திய, சற்கீர்த்தி - நல்ல கீர்த்தியையுடைய, சாளுவகோப்பையன் உதவும் - சாளுவகோப்பையன் பெற்ற, மந்தரபுயத்தான் - மந்தரமலைபோலும் தோள்களையுடையவனாகிய, திப்பையராயன் - திப்பையராயனென்பவன், மகிழ்வொடு - சந்தோஷத்துடன், அன்னோன் வாக்கினால்-அவனது சொல்லினால், குபேரன் ஆக்கினான்— குபேரனாகப்பண்ணினான், அவனே மாசு இல் - அவனேகுற்றமில்லாத, ஈசானபூபதி - ஈசானதிக்குக் கதிபதி யாவன், எ - று.

தான் உடுத்த ஆடைகந்தையாய்ப் பலதொளைகள் உள்ளது என்பது தோன்ற ஆயிரங்கண்களையுடைய இந்திரனைக்கலையாக உவமித்தார். கலை - வஸ்திரம். (வாசம்). மருங்கு-பக்கம், அக்கினி உதரம்விட்டு அகலான் - பசிவயிற்றை விட்டொழியவில்லை. அரன் - வறியன், வருணன் இருகண்விட்டு அகலான்- நீர் இருகண்ணை விட்டொழியவில்லை. அநிலமதாகும் அமுது-வாயு, இதில் இந்திரன் முதலிய அஷ்டதிக்குப்பாலகர்களும், என்வசமாயிருக்கிறார்களாதலால்

எனக்கு நிகராவார் உலகத்தில் ஒருவருமில்லையென்றும், பசிமுதலியன வருத்துகின்றன என்றும் இருபொருள் தோன்றுதல் காண்க.

11. வண்டுகிண்டியதொங்கலோதிகுணக்கெழுந்திடுமநிலமோ
மன்னுநூபுரமோபயோதரமூருவானவர்கணிகையோ
அண்டர்பூபதிவனிதையோமுகமமுதவாயிதழ்தும்பியோ
அரிகையாயுதமோபிறந்திடமன்னமென்னவுலாவுவீர்
கொண்டநண்புமுதாரமுந்தவறாதகோகனகானனன்
குத்திபல்லவராயமேருகுணாளதிப்பையன்வரையின்மேல்
துண்டவெண்பிறைவேணிகைச்சிலைநாணெனப்புகலாவிடின்
தாரமோவதிபாரமோவொருசேரனுக்கொருதொங்கலே.

இ - ள். கொண்டநண்பும் உதாரமும் - கொண்டநட்பிலும் உதாரகுணத்திலும், தவறாத - பிழைபடாத, கோகனக ஆனனன் - தாமரைமலர்போலும் முகத்தையுடையவனும், குத்தி பல்லவராயன் - குத்திபல்லவராயனும், மேருகுணாளன் - மேருமலைபோல அசையாத பெருங்குணத்தை யுடையவனுமாகிய, திப்பையன் வரையின்மேல் - திப்பையனது மலையின்மீது, அன்னம் என்ன உலாவுவீர் - அன்னம்போல உலாவுகின்ற மாதரே, (உமது) வண்டுகிண்டியதொங்கல் ஓதி - வண்டுகள் கிளறுகின்ற பூமாலையையணிந்த கூந்தலானது, குணக்கு எழுந்திடும் அநிலமோ - கிழக்கேயுண்டாய் வருகிறகாற்றோ, பயோதரம் - தனங்கள், மன்னும் நூபுரமோ - நிலைபெற்ற சிலம்போ, ஊருவானவர் கணிகையோ - தொடை தேவவேசையோ, முகம் அண்டர் பூபதிவனிதையோ - முகமானது தேவராஜனாகிய இந்திரன் மனைவியோ, அமுதவாய் இதழ்தும்பியோ - அமிர்தமூறுகின்ற வாயிதழானது வண்டோ, பிறந்திடம் - பிறந்த இடமானது, அரிகை ஆயுதமோ - திருமாலின் கையிலுள்ள ஆயுதமோ, துண்டம் - கண்டமாகிய, வெள்பிறை - வெள்ளிய பிறையைத்தரித்த, வேணி - சடையையுடைய பரமசிவனது, கைசிலைநாண் என புகலாவிடின் - கைவில்லின் நாணென்று நீர்சொல்லாவிடின், உயர் சேரனுக்கு ஒரு தொங்கல் - உயர்ந்தசேரனது ஒப்பற்ற மாலையானது, தாரமோ - எனக்கு தாரமாயிருப்பதோ, அதிபாரமோ - பெருஞ்சுமையோ, எ - று.

குணக்கெழுந்திடுமநிலம்-கீழ்காற்று, இதற்குக் கொண்டல் என்பது பரியாயம், கொண்டல் மேகத்தையு முணர்த்துமாதலால் உமது கூந்தலானது மேகமோ என்றபடி, சிலம்பு - மலையையுமுணர்த்து மாதலால் உமது தனம்மலையோ என்றபடி, வானவர்கணிகை - அரம்பை, இதுவாழையையுணர்த்துமாதலால் உமது தொடைவாழைத்தண்டோ என்றபடி, அண்டர்பூபதிவனிதை - சசி, இது சந்திரனையும் உணர்த்துமாதலால் உமதுமுகம் பூர்ணசந்திரனோ என்றபடி. தும்பி-வண்டு, இதுதேனுக்கும் பரியாய மொழியாதலால் உமது இதழ் தேனோ என்றபடி. அரிகையாயுதம்-சக்கரம், (ஆழி) இதுகடலையு முணர்த்து மா

உமதுபிறப்பிடம் திருப்பாற்கடலோ என்றபடி. துண்ட வெண்பிறை வேணிகைச் சிலைநாண்-ஆதிசேஷன், இதுவாசுகியையு முணர்த்து மாதலால், வாசுகி என்று நீர்சொல்லாவிடின் என்றபடி. உயர்சேரனுக்கொரு தொங்கல்-பனம்பூமாலை, தாரமோ வதிபாரமோ என்றது இந்தப் பனைமடலாற் செய்தகுதிரையை நானூர்ந்தாயினும் உன்னைப்பெறுவேன். (மடலேறுவேன்) என்றபடி.

12. சந்திரனுக் குடலூனந் தனதனுக்கோர் கண்ணூனந் தருவினீழல், இந்திரற்கோ பகக்குறியா மியமனுக்கோ புழுக்காலா மிரவியீன்ற, மைந்தனுக்கோ கான்முடமாம் வனசனுக்கோர் தலைகுறையாம் வரலாறீதேல், பந்தமுளமானிடரை விதிவிடுமோ வாலவாய்ப்பதியுளானே.

இ - ள். ஆலவாய் பதிஉள்ளானே - திருவாலவாய என்னுந் திருப்பதியிலெழுந்தருளி யிருப்பவனே, சந்திரனுக்கு-சந்திரனுக்கு, உடல்ஊனம் - உடற்பழுது, தனதனுக்கு ஓர்கண் ஊனம் - குபேரனுக்கு ஒருகண்பழுது, தருவின் நீழல் இந்திரற்கோ பகக்குறி ஆம்-கற்பகதருவின் நிழலிலிருக்கிற இந்திரனுக்கோ (உடம்புமுழுதும்) யோனிக்குறி, இயமனுக்கோ புழுக்கால் ஆம், யமனுக்கோ புழுத்தகாலுண்டு, இரவி ஈன்ற மைந்தனுக்கோ கால் முடம்ஆம்-சூரியன்பெற்ற புதல்வனுக்கோ கால் முடமாகும், வனசனுக்கு ஓர் தலைகுறைஆம்-தாமரை மலரை யாசனமாக வுடைய பிரமனுக்கு ஒரு தலைகுறையாகும், வரலாறு ஈதேல் - வரலாறு இதுவாயின், பந்தம் உள மானுடரை-பாசங்கட்டுள்ள மனிதரை, விதிவிடுமோ - ஊழ்வினையானது விடுமோ, எ - று.

உடலூனம்-களங்கமும் வளைவும், கண்ணூனம் -குருட்டுத்தன்மை, இரவியீன்றமைந்தன் - சனி.

சொக்கநாதப்புலவர் பல்லக்கின்மேல் ஆடம்பரத்தோடு வருவதைக் கண்டு தட்டானாகிய அரிகரபுத்திரன் என்னும் வித்வான் மனம்பொறாது அவரைப் பலகேள்விகள்கேட்டு அவமானஞ்செய்து அவர் பல்லக்குக்கொம்பை முறித்தெறிந்தபோது பாடியது.

13. அட்டாவதானமுந் தொல்காப்பியமு மகப்பொருளும் [வி
தொட்டாதி தொட்டப் ரபந்தமெல்லாநம் மைச்சொல்லச்சொல்
ஒட்டாரங்கட்டிநம் பல்லக்குக்கொம்பையொடித்தெறிந்த
தட்டாரப் பையலரிகரபுத்ரனைச் சண்ணினனே.

இ - ள். அட்டாவதானமும் - அஷ்டாவ தானமும், தொல்காப்பியமும் - தொல்காப்பிய மென்னும் இலக்கணமும், அகப்பொருளும் - அகப்பொரு ளிலக்கணமும், தொட்டாதிதொட்ட பிரபந்தம் எல்லாம்-மேலான நூல்களெல்லாம், நம்மை சொல்லச்சொல்லி-நம்மைச் சொல்லும்படி நிர்ப்பந்தித்து, ஒட்டாரம்

கட்டி - பிடிவாதம்பண்ணி, நம்பல்லக்குக் கொம்பை ஒடித்தெறிந்த-நமது பல்லக்குக் கொம்பை முறித்தெறிந்த, தட்டாரப்பையல் - தட்டாரப்பையலாகிய, அரிகரபுத்ரனைச் சண்ணினன் - அரிகரபுத்ரனைச் சாடினேன், எ - று.

14. பண்டனைப்பண்டனையோதும்பெம்மானைப்பனிவரைக்கோ
தண்டனைத்தண்டனைசெய்யுமுத்தண்டனைத்தண்டனைமூ
தண்டனையண்டர்தொழுந்திருமாற்பேறமர்ந்தமணி
கண்டனைக்கண்டனையாயினெஞ்சேமுத்திகண்டனையே.

இ - ள். நெஞ்சே - மனமே, பண்டனை - பழையோனை, பண்தனை ஓதும் பெம்மானை-பண்ணைப்பாடுகின்ற பெருமானை, பனிவரை கோதண்டனை-மேருமலையாகிய வில்லையுடையவனை, தண்டனைசெய்யும் உத்தண்டனை - (துஷ்டர்களை) சிக்ஷைசெய்கின்ற உக்கிரமூர்த்தியை, தண்டனை-கதையையுடையவனை, மூதண்டனை - பழமையாகிய அண்டங்களை உடையவனை, அண்டர்தொழும் - தேவர்கள் வணங்குகின்ற, திருமாற்பேறு அமர்ந்த - திருமாற்பேறு என்னும் திருப்பதியில் எழுந்தருளியிருக்கின்ற, மணிகண்டனை - நீலமணிபோலும் கண்டத்தையுடையவனை, கண்டனையாயின் - கண்டாயானால், முத்திகண்டனை-மோக்ஷத்தைக் கண்டவனானாய், எ - று.

15. துளைபடுமாமரமேழுமெய்தவன்றூதுகவி
உளைபடுவாரிதியொன்றேகடந்ததொளிர்தரள
வளைபடுவாவிமணவைமன்கூத்தன்வகுத்தகவி
தளைபடுகாலுடனேகடலேழுந்தாண்டினதே.

இ - ள். துளைபடுமாமரம் ஏழும் எய்தவன் - தொளையாதற்குரிய பெரிய மராமரங்கள் ஏழையும் அம்பெய்து தொளைத்தவனாகிய ஸ்ரீராமபிரானது, தூதுகவி-தூதாகிய கவி, உளைபடு - சேறுபொருந்திய, வாரிதி ஒன்றே கடந்தது - ஒருகடலைமாத்திரம் தாண்டினது, ஒளிர்தரள வளைபடு வாவி - பிரகாசிக்கிற முத்துக்களைப் பெறுகின்ற சங்கு பொருந்திய தடாகங்கள் சூழ்ந்த, மணவை - மணவை நகரத்துக்கு, மன - தலைவனாகிய, கூத்தன்-ஒட்டக்கூத்தன், வகுத்த-செய்த, கவி-கவியானது, தளைபடு காலுடனே-தளைபொருந்திய காலோடு, கடல் ஏழையும் தாண்டினது - எழுகடலையும் தாண்டினது, எ - று.

கவியிரண்டில் முன்னது வானரம் (அநுமான), பின்னது செய்யுள் தளை பிணிப்பு, கால் - செய்யுளடி, ஒட்டக்கூத்தனுடைய கவியின்புகழ் எழுகடலையும் கடந்துசென்று விளங்குகின்றது என்பது கருத்து.

16. துங்காதராதலமெல்லாமொருமிக்கத்துய்த்தநர
சிங்காதராதரந்தானறிந்தேநல்கச்சேலம்வந்த
கெங்காதராநின்புகழ்கேட்டசைப்பன்கிரீடமென்றே
வெங்காதராவுக்குச்செய்தானிலைமலர்வேதத்தனே,

இ - ள். துங்கா - பரிசுத்தனே, தராதலம் எல்லாம் - பூமி முழுதும், ஒரு மிக்கத் துய்த்த - ஒருமிக்கவிழுங்கின, நரசிங்கா - நரசிங்கனே, தரா தரம் அறிந்து - (வருவோருடைய) தராதரங்களை யாராய்ந்துணர்ந்து, நல்க - (அவரவர்க்குத் தகுதியாக) கொடுக்க, சேலம்வந்த - சேலத்தில் அவதரித்த, கெங்காதரா - கெங்காதரனே, நின்புகழ்கேட்டு - உன்கீர்த்தியைக்கேட்டு, கிரீடம் அசைப்பன் என்றே - மகுடத்தையசைப்பனென்று நினைத்தே, மலர்வேதத்தன் - தாமரை மலரையுடைய பிரமன், அராவுக்கு - ஆதிசேடனுக்கு, வெம்காதுசெய்தான் இல்லை - கொடிய காதைப்படைத்தானில்லை, எ - று.

ஆதிசேஷனுக்கு காது உண்டாயின் அவன்புகழ்கேட்டு ஆயிரம் முடிகளையும் அசைக்கவருமெனக்கருதிக் காதைப்படைக்காது விட்டனன். புகழைவியந்தமை அறிக.

17. புரசைவடமலையப்பாவிருட்கயம் பூண்டுகொண்டு
முரசைவடமலையப்பாலுஞ்செல்லமுழக்கஞ்செய்தோய்
சிரசைவடமலையப்பாம்பில்வைத்துத்திருக்கண்வளர்
இரசைவடமலையப்பாவிப்பாருக்கொரிந்திரனே.

இ - ள். புரசைவடம் அலைய - கழுத்திடுகயிறாகிய வடமசைய, பாவு இருள் - பரவிய இருளைநிகர்த்த, கயம்பூண்டுகொண்டு - யானையை யூர்ந்துகொண்டு, வடமலை அப்பாலும்செல்ல - மேருமலைக்கப்புறத்திலுஞ் செல்லும்படி, முரசை - பேரிகையை, முழக்கம் செய்தோய் - முழக்கினவனே, வடம் அலை அப்பாம்பில் சிரசைவைத்து - ஆலிலையின்மீதும் திருப்பாற்கடலிலும் அந்த ஆதிசேடன்மீதும் சிரத்தைவைத்து, திருக்கண்வளர் - திருக்கண்வளர்கின்ற, இரசை வடமலையப்பா - இரசையென்னும் ஊரில்வாழ்கின்ற வடமலையப்பனே, இப்பாருக்கு ஓர் இந்திரனே - இந்தப்பூமிக்கு ஒரு இந்திரனாயிருப்பவனே, எ - று.

அரசர்காத்தற்றொழில் பூண்டமைபற்றித் திருமாலாகக் கூறுதல் மரபாதலால் இங்கு வடமலையப்பனை "வடமலையப்பாம்பில் வைத்துத் திருக்கண்வளர்" என்றார்.

18. சோதிச்சவரிவிழிக்கோகரவில்லைதூயகுழல்
கோதிச்சவரிமுடிக்கறியாள்கொண்டகோலமென்னோ
நீதிச்சவரிப்பெருமாளென்றேதிநினைந்துருகப்
போதிச்சவரிவட்காரோவறிகிலன்பூங்கொடியே.

இ - ள். சோதிச்ச - (பிரமனால்) ஆராய்ந்து படைக்கப்பட்ட, வரிவிழிக்கோ - இரேகைகளையுடைய கண்களுக்கோ, கரவு இல்லை - வஞ்சனையுண்டாகவில்லை, தூய குழல்கோதி - பரிசுத்தமாகிய கூந்தலைவாரி, சவரிமுடிக்க அறியாள் - கவரிமயிர்க் கற்றையை முடித்துக்கொள்ளவும் அறிந்திலள், (இப்படியிருக்க) கொண்டகோலம் என்னோ - (இவள்) கொண்டவேஷம் என்னை

இ - ள். போதா - ஞானத்தை யுடையவனே, சிவகுருநாதா - சிவனுக்குத்தேசிகோத்தமனே, கலவைபுழுகொடு சவ்வாது ஆர்ந்த - கலவைச் சந்தநமும் புனுகுசவ்வாதும் பூசப்பட்ட, கொங்கை - தனங்களையுடைய, குறமாது வள்ளிக்கு - குறப்பெண்ணாகிய வள்ளிநாயகிக்கு, வாய்த்திடும் - கிடைத்தை, இன்பா - சுகானுபவத்துக் குரியவனே, தாருகன் செற்றவேல் விடுத்தால்-தாருகனைக்கொன்ற வேலாயுதத்தைப் பிரயோகித்தால், என்பகையை அறுக்காதா - என்பிறவிக் கேதுவாகிய ஐம்புலப்பகையைச் சேதிக்காதா, மனம் இரங்காதா- உனக்குமன மிரங்கமாட்டாதா, சிவகிரி - சிவகிரியிலெழுந்தருளிய, காங்கெயனே - காங்கேயனே, எ - று.

22. காப்பிட்டபிள்ளைக்கறிக்கிச்சைப்பட்டு வையைக்கரைமேல்
மாப்பிட்டுவந்தமயிலேசனேபமலையானைநின்னைக்
கூப்பிட்டுநின்று குனிந்தொருகோலக்கொம்பாற்றடவிப்
பூப்பட்டகண்ணிச்சயமாக்கினான் மைப்புயல்வண்ணனே.

இ - ள். காப்பு இட்ட - (கையில்) காப்புச்சார்த்த, பிள்ளைக்கறிக்கு இச்சைப்பட்டு - பிள்ளைக்கறிக்கு ஆசைப்பட்டு, வையைக் கரைமேல் - வையையாற்றின் கரைமீது, மாப்பிட்டு - மாவினாற்செய்தபிட்டை, உவந்த - விரும்பியுண்ட, மயிலேசனே - திருமயிலேசனே, மைப்புயல்வண்ணன் - கரியமேகம்போலும் நிறத்தையுடையவனாகிய திருமால், மலை ஆனை நின்னை - மலையுருவாய்நின்ற உன்னை, கூப்பிட்டுநின்று - கூப்பிட்டுநின்று, குனிந்து - குனிந்து, ஒரு கோலக்கொம்பால் தடவி - ஒரு அழகிய கொம்பினால் தடவி, பூபட்ட கண் - (தனக்கு) பூபட்டகண் உண்டென்பதை, நிச்சயம் ஆக்கினான் - உண்மையாக்கினான், எ - று.

கூப்பிட்டு - மண்ணைப்பிளந்து, கோலக்கொம்பால்-பன்றிக்கொம்பினால், பூப்பட்டகண் - தாமரைமலர்போலுங்கண்.

23. உம்பரைவாழ்வித்தநஞ்சங்கண்டோமொள்புரமெரித்த
அம்பரையேற்றியசூலங்கண்டோமருளுங்குறைவில்
நம்பரைபாகமுங்கண்டோமவர்திருநாமஞ்சொல்லா [னே.
வம்பரையுங்கண்ணிற் கண்டோம்வெண்காடனை வாழ்த்துங்க

இ - ள். உம்பரை வாழ்வித்த -தேவர்களை வாழச்செய்த, நஞ்சங்கண்டோம் - விஷத்தைப் பார்த்தோம், ஒள்புரம் எரித்த-அழகிய முப்புரத்தையெரித்த, அம்பரை - அம்பை, ஏற்றிய - ஏற்றின, சூலம்கண்டோம் - சூலத்தைப்பார்த்தோம், அருளும் குறைவு இல் - அருளினாலும் குறைவு இல்லாத, நம்பரைபாகமும் கண்டோம் - நமது உமாதேவி பாகத்தையும் பார்த்தோம், அவர் திருநாமம் சொல்லா - அவரது திருநாமத்தை உச்சரியாத, வம்பரையும் -வீணரையும், கண்ணில் கண்டோம் - கண்ணில் பார்த்தோம், வெண்காடனை வாழ்த்துங்கள்- திருவெண்காடனைப் புகழுங்கள், எ - று.

புரமெரித்த அம்பர் - திருமால், அம்பு - அம்பர் எனப்போலியாயிற்று.

24. மாடேறுதாளுமதியேறுசென்னியுமாமலரோன்
ஓடேறுகையுமுடையார்க்கிடமோங்கியநெற்
கூடேறுசங்குஞ்சொரிமுத்தைமுட்டையென்றேகமலக்
காடேறுமன்னஞ்சிறகாலணைக்குங்கழுக்குன்றமே.

**இ - ள்.** மாடு ஏறு தாளும் - இடபத்தின் மீதேறுகின்ற திருவடியையும், மதி ஏறு சென்னியும் - பிறையேறிய சிரசையும், மாமலரோன் ஓடு ஏறுகையும்-பெருமையுள்ள பிரமகபாலமேறிய கையையும், உடையார்தமக்கு - உடையவராகிய சிவபெருமானுக்கு, இடம் - இடமாயிருப்பது, ஓங்கிய - உயர்ந்த, நெல் கூடு ஏறு சங்கம் - நெற்போரின் மேலேறிய சங்குகள், சொரிமுத்தை - ஈன்றமுத்தை, முட்டை என்றே - தமது முட்டையென்று நினைத்தே, கமலக்காடு ஏறும் அன்னம் - தாமரை மலர்க்காட்டில் ஏறிய அன்னங்கள், சிறகால் அணைக்கும் - தமது சிறகுகளால் அணைக்கும் இடமாகிய, கழுக்குன்றமே - திருக்கழுக்குன்றமேயாம், எ - று.

25. நெருப்புக்கறுக்கச்சிவப்புள்ளமேனியர்நீள்கனகப் [ன்
பொருப்பைக்குனித்துப்புரமெரித்தார்க்கிடம்போர்க்களிற்றி
மருப்புக்கண்முத்தும்வளர்கழைமுத்தும்வளைக்கண்முத்தும்
கருப்புக்கண்முத்துமதிக்குலங்காட்டுங்கழுக்குன்றமே.

**இ - ள்.** நெருப்பு கறுக்க - நெருப்புக் கறுக்கும்படியாகிய, சிவப்பு உள்ள மேனியர் - செந்நிறமுள்ள திருமேனியையுடையவரும், நீள் கனகப்பொருப்பைக் குனித்து - நீண்ட பொன்மலையை (வில்லாக) வளைத்து, புரம் எரித்தார்க்கு - முப்புரத்தை எரித்தவருமாகிய சிவபெருமானுக்கு, இடம் - இடமாயிருப்பது, போர்க்களிற்றின் மருப்பு கண் முத்தும் - போர்த்தொழிலையுடைய யானையின் கொம்பிலுண்டாகிய முத்துகளும், வளர் கழைமுத்தும் - உயர்ந்த மூங்கிலிலுண்டாகிய முத்துகளும், கருப்புக்கண் முத்தும் - கரும்பினிடத்துண்டாகிய முத்துகளும், மதிக்குலம் காட்டும் - சந்திரருடைய கூட்டத்தன்மையைக் காட்டுகின்ற, கழுக்குன்றமே - திருக்கழுக்குன்றமேயாம் எ - று.

26. ஆலங்கிடக்குமனத்தார்க்கொருநன்றியம்பிலிட்ட
கோலங்கிடக்குங்கிடக்குங்கண்டாய்குறையாதகுண
சீலங்கிடக்குமனத்தார்க்கொருநன்றிசெய்யில்வெகு
காலங்கிடக்குங்கிடக்குங்கண்டாய்செந்தில்காத்தவனே.

**இ - ள்.** ஆலம் கிடக்கும் மனத்தார்க்கு - விஷந்தங்கிய மனத்தை யுடையவர்க்கு, ஒருநன்றி செய்யில் - ஒருதவி செய்தால், (அது) அம்பில் இட்டகோலம் கிடக்கும் கிடக்கும் - நீரிலெழுதிய எழுத்துப்போல அழியும் அழியும், குறையாத குணசீலம் கிடக்கும் மனத்தார்க்கு-குறையாத நற்குண நல்லொழுக்கங்கள் தங்கிய மனத்தை யுடையார்க்கு, ஒருநன்றிசெய்யில் - ஒருதவிசெய்தால்,

வெகுகாலம் கிடக்கும் கிடக்கும் - (கல்லின்மேலெழுதிய எழுத்துப்போல)நெடுங்காலம் நிலைத்திருக்கும் நிலைத்திருக்கும், வணிகா - வணிகனே, செந்தில் காத்தவனே-திருச்செந்தில் நகரத்தில் வசிக்கும் முருகக்கடவுளே. எ - று.

27. சிந்தாமணி சங்கு தேனுமலர்த் தாமரைசீர்
ஐந்தருவு நின்னவே யாயிருக்க—வந்தேதான்
கச்சவிட மேயுண்ட கண்டா கடைதோறும்
பிச்சையிரந் துண்ட தென்ன பேசு.

இ - ள். சிந்தாமணி-சிந்தாமணியும், சங்கு-சங்கநிதியும், தேனு-காமதேனுவும், மலர்த்தாமரை-பதுமநிதியும், சீர் ஐந்தருவும்-சிறப்புள்ள பஞ்சதருக்களும், நின்னவே ஆய் இருக்க - உன்னுடையனவேயாயிருக்க, வந்து, (அவைகளை விட்டு) வந்து, கச்சவிடம் உண்டகண்டா - கசந்த விஷத்தையுண்ட கண்டத்தையுடையவனே, கடைதோறும் - வாயில்கள்தோறும் சென்று, பிச்சை - பிச்சைச்சோற்றை, இரந்து உண்டது - இரந்து உண்டமைக்குக் காரணம், என்ன - யாது, பேசு - சொல், எ - று.

28. அந்திக்கார் வந்துமய லாற்றுவா ரன்னையிடு
வந்திக்கார் வந்து வழக்குரைப்பார்—நந்திக்கார்
கச்சிக்கா ளத்திக்கார் காதலுரைப்பார் கனகக்
கச்சிக் காளத்திக்கார் காண்.

இ - ள். அந்திக்கு - அந்திக்காலத்தில், வந்துமயல் ஆற்றுவார் ஆர் - வந்து காமமயக்கத்தைத் தணிப்பவர்யாவர், அன்னை இடுவந்திக்கு - தாய்செய்யும் சிந்தைக்கு, வந்துவழக்கு உரைப்பார் ஆர் - வந்து வழக்குப் பேசுவோர் யாவர், நந்துஇக்கு ஆர்கச்சி-சங்குகளும் கருப்பந் தோட்டங்களும் நிறைந்த கச்சிநகரில் வாழ்கின்ற, காளத்தி - காளத்தியென்னும் வள்ளலுக்கு, காதல் உரைப்பார் ஆர் - எம்பெண்ணினது ஆசைப்பெருக்கத்தைச் சொல்லுவோர் யாவர், கனகம் கச்சிக்கு-பொன்வேலையமைந்த கச்சணிந்தவளுக்கு, ஆளத்திக்கு ஆர் - ஆளுதற்குத் திக்காவார் யாவர், எ - று.

29. இருப்போ மென்றாலு மிராதுள மானேயிக்
கருப்போ மென்றாலுங் கசக்கும்—விருப்பாரும்
காசண் முகனைக் கடல்புடைசூழ் கோவளம்வாழ்
மாசண் முகனை மறந்து.

இ - ள். மானே - பெண்ணே, விருப்புஆரும் - யாவருடைய விருப்பமும்நிறைந்த, காசுஅண்மு - மணிகள்பொருந்திய, கனைகடல் புடைசூழ் - ஒலித்தலையுடைய கடல்பக்கத்தில் சூழப்பெற்ற, கோவளம்வாழ் - கோவளத்தில் வாழ்கின்ற, மா-பெருமையுள்ள, சண்முகனை மறந்துஇருப்போம் என்றாலும்-சண்முகனென்பவனை மறந்திருப்போமென்றாலும், உள்ளம்இராது - என்மன

பிராது, இக்கருப்போ - இந்தக்கரும்போ, மென்றாலும் கசக்கும்-மென்றுதின்றாலும் கசக்கின்றது, எ - று.

நாயகன் கூடப்பெறாமையால் இனிக்கும் இயல்புள்ள கரும்பும் கசக்கின்றது என்பது கருத்து.

30. பாரவிள நீர்சுமக்கப் பண்டே பொறாதவிடை
ஆரவடஞ் சுமக்க வாற்றுமோ—நேரே
புடைக்கனத்த கொங்கையின்மேற் பூங்களபஞ் சாத்தி
இடைக்கனத்தம் வைத்தவரா ரின்று.

இ - ள். பாரம் - பளுவாகிய, இளநீர்சுமக்க - இளநீர்களைத் தாங்குதற்கு, பண்டேபொறாத - முன்னமேயாற்றாத, இடை - இடையானது, ஆரவடம்சுமக்க ஆற்றுமோ-முத்துமாலையைச் சுமக்கலாற்றுமோ, நேரே-நேராக, புடைகனத்த-பக்கங்கனத்திருக்கிற, கொங்கையின்மேல்-தனங்களின்மேல், இன்று—, பூங்களபம்சாத்தி - பொலிவாகிய கலவைச் சந்தனத்தைப்பூசி, இடைக்கு - மருங்குலுக்கு, அனர்த்தம் வைத்தவர் ஆர் - அனர்த்தம் உண்டாக்கி வைத்தவர் யார், எ - று.

31. வெங்காயஞ் சுக்கானால் வெந்தயத்தா லாவதென்ன
இங்கார் சுமந்திருப்பா ரிச்சரக்கை—மங்காத
சீரகத்தைத் தந்தீரேற் றேடேன் பெருங்காயம்
ஏரகத்துச் செட்டி யாரே.

இ - ள். ஏரகத்து செட்டியாரே - திருவேரகத்திலுள்ள செட்டியாரே, வெங்காயம் சுக்கு ஆனால் - , வெந்தயத்தால் ஆவது என்ன - , இங்கார் சுமந்திருப்பார் இச்சரக்கை - இங்கு இச்சரக்கை ஆர் சுமந்திருப்பார், மங்காத சீரகத்தைத் தந்தீரேல் - குறையாத சீரகத்தைத் தந்தீராயின், பெருங்காயம் தேடேன்-பெருங்காயத்தைத் தேடமாட்டேன், எ - று.

திருவேரகத்தி லெழுந்தருளிய முருகக்கடவுளே, கொடிதாகிய உடம்பு சுக்குப்போலுலர்ந்தால் வெவ்விய வினையினால் ஆவதென்ன, இந்தவுடம்பாகிய சரக்கை இவ்விடத்தில் யார் சுமந்திருப்பார், அழியாத சிறப்புள்ள இடமாகிய மோக்ஷத்தைக் கொடுத்தீராயின், மிகுதியாகிய உடம்புகளைத்தேடிப் பிறக்கப் போகேன், என வேறுமொரு பொருள் தோன்றுதல்காண்க. வெம் காயம் - கொடியசரீரம், வெந்தை அத்தால்-வெப்பமாகிய அவ்வினையினால், சீர் அகம் - சிறந்த இடம் (மோட்சம்), பெருங்காயம் - பலசரீரம், செட்டியார்-முருகர்.

32. முன்னேயிரண்டுமுலைமுற்றியபின்னாலுமுலை
எந்நேரமென்மதலைக்கெட்டுமுலை—எந்நாளும்
பைந்நாகஞ்சூழ்மதுரைப்பாணுதின்பாகனுக்கின்
கென்னுகமென்னுமினி.

**இ - ள்.** முன்னேஇரண்டுமுலை - முற்காலத்தில் இரண்டு முலைகளாயிருந்தன, முற்றியபின் - முதிர்ந்தபிறகு, நாலுமுலை - நாலுமுலைகளாயின, எந்நேரம் - எப்பொழுதும், என்மதலைக்கு - என் குழந்தையின் பொருட்டு, எட்டுமுலை - எட்டுமுலைகளாயின, எந்நாளும் - எக்காலமும், பைந்நாகம்சூழ் - படத்தையுடைய பாம்பினால் வளைக்கப்பட்ட, மதுரை - மதுரையிலுள்ள, பாணா - பாணனே, நின் பாங்கனுக்கு - உன்தோழனுக்கு. என்ஆகம் - என்னுடம்பு, இங்குஇனி என்ஆம் - இவ்விடத்தில் இனியென்ன பயன்படும்.

நாலுமுலை - தொங்குகின்றமுலை - எட்டுமுலை - எட்டுகின்றமுலை எனவேறுபொருள் தோன்றலறிக.

## பரத்தையி லிருக்கும்போது தலைவனுக்குப் பரத்தையர் மீதுள்ள நினைவையறிந்து தலைவிசொல்லியது.

33. நங்கையொருத்தியொடுநாமிருவர்மூவரையும்
பொங்குமளிபொறுக்குமோ—சங்கம்
குழையவரால்பாயுங் குருநாடர்கோவே
பழையவராலென்னபயன்.

**இ - ள்.** சங்கம்குழைய - சங்குகள் வருந்தும்படி, வரால்பாயும் - வரால் மீன்கள் குதித்தற்கிடமாகிய, குருநாடர்கோவே - குருநாட்டார்க்கரசனே, நங்கை ஒருத்தியொடு - என்தங்கை யொருத்தியோடு, நாம் இருவர் - நாமிருவராக, மூவரையும் - மூன்றுபேரையும், பொங்கும்அமளி - விளங்குகின்ற சயனம், பொறுக்குமோ - தாங்குமோ, பழையவரால் என்னபயன் - பழையவர்களால் என்னபிரயோசனம், எ - று.

என்தங்கையாகிய புதியவளோடிணங்கியிரு, நான்பழையவள், எனனால் பிரயோஜனமில்லை யென்பதுகருத்து.

## இதுவுமது.

34. ஒருவர்க்கிடமாயுகந்திருந்தபாயல்
இருவர்க்கிடமாயதென்னோ—மருவலரைக்
கன்னாட்டவின்னாட்டுங்கண்டன்கரிகாலன்
தன்னாட்டிதுபுதுமைதான்.

**இ - ள்.** உகந்து ஒருவர்க்கு இடமாயிருந்தபாயல் - விரும்பி ஒருவருக்கிடமாயிருந்த சயநம், இருவர்க்கு இடம்ஆயது என்னோ - இருவருக் கிடமானதற்குக் காரணம்யாதோ, மருவலரை - பகைவரை, கல் நாட்ட - கல்லில் நிலைபெறுத்தும் பொருட்டு, வில்நாட்டும் - வில்லையெடுத்து நிறுத்தின, கண்டன் கரிகாலன் தன்நாடு - கரிகாற்சோழனது நாட்டில், இதுபுதுமைதான் - இதுஆச்சரியமேயாம், எ - று.

கண்டன் - ஓர்சோழன், தலைவனாகிய நீஒருவனே இருத்தற்குரிய என்பா யலில் பரத்தையோடுகூடி இருவராகியிருத்தல் தகாது என்பது கருத்து.

35. நங்கைபயணநமக்கென் றுரைத்தளவில்
அங்கம்பசலைநிறமானதே—செங்கை
வளைநெகிழப்பாதிமறுத்தேனென்றோத
வளைநெகிழப்பாதியுடைந்து.

இ - ள். நங்கை - பெண்ணே, நமக்கு பயணமென்று உரைத்த அளவில் - நமக்குப்பிரயாணம் நேரிட்டதென்று சொன்னமாத்திரத்தில், அங்கம்பசலை நிறம் ஆனது - (நம் தலைவியின்) உடம்பு பசலைநிறங்கொண்டது, (அன்றியும்) செங்கைவளை பாதிநெகிழ - செவ்விய கையிலணிந்த வளையலில் பாதிநெகிழ்ந்து கழல, மறுத்தேன் என்று ஓத - (பிரயாணத்தை) நிறுத்தினேனென்று சொல்லவே, பாதிஉடைந்து நெகிழ்வுள - பாதி உடைந்து கழல வுள்ளன, எ - று.

பிரயாணமென்றதனாலுண்டாகிய விசனத்தால் உடல்மெலிதலால் பாதிவளையல் கழன்றுபோயின, பிரயாணம் நின்றுவிட்டது என்றதனாலுண்டாகிய சந்தோஷத்தால் உடல்பூரித்தலால் பாதிவளையல் உடைந்துபோயின என்பதாம்.

36. அம்பலவாவின்னொருகாலாடினலாகாதோ
உம்பரெலாங்கண்டதெனக்கொப்பாமோ—சம்புவே
வெற்றிப்பதஞ்சலிக்கும்வெம்புலிக்குந்தித்தியென
வொற்றிப்பதஞ்சலிக்குமூர்.

இ - ள். சம்புவே - சிவபெருமானே, வெற்றி பதஞ்சலிக்கும் - வெற்றியையுடைய பதஞ்சலியின்பொருட்டும், வெம்புலிக்கும் - கொடிய புலிக்காலர்பொருட்டும், தித்தி என ஒற்றி - தித்தியென்று ஒற்றியாடி, பதம் சலிக்கும் - பாதம் ஓய்தற்குரிய, ஊர் - ஊராகிய, அம்பலவா - பொன்னம்பலவனே, இன்னொருகால் ஆடினல் ஆகாதோ - இன்னொருதரம் ஆடினல் தகாதோ, உம்பர் எல்லாம் கண்டது - தேவர்களெல்லாம் பார்த்தது, எனக்கு ஒப்பு ஆமோ - எனக்குச் சம்மதியாகுமோ, எ - று.

தித்தி என்றது தாளவொற்று. வெம்புலி - வியாக்கிரபாதமுனிவர்.

37. இந்தவிடைநிற்பதரிதென்னாணையும்மாணை
சந்தேகமாகச்சமைத்தானே—அந்தவயன்
பாரதிராமன்வரையிற்பைங்கொடியீர்கொங்கையினே
நீரதிராடன்னடமின்னீர்.

இ - ள். இந்த இடை நிற்பது அரிது - இந்த மருங்குல் நிற்பது அருமை, என் ஆணை - என்மேல் ஆணைப்படி, உம் ஆணை - உம்மேல் ஆணைப்படி, அந்த

அயன் - அந்தப்பிரமன், சந்தேகமாகச் சமைத்தானே - (உண்டோ இல்லையோ என்று) சந்தேகமுண்டாகும்படி படைத்தானே, பாரதிராமன்வரையில்-பாரதிராமனது மலையிலுள்ள, பைங்கொடியீர் - பசியகொடிபோல்பவரே, நீர் - நீங்கள், கொங்கை - தனங்களாகிய, இளநீர் - இளநீர்கள், அதிராமல் - அசையாமல், நடமின் - நடப்பீர்களாக, எ - று.

38. உன்னுயிருமென்னுயிருமொன்றென்பதின்றறிந்தேன்
மன்னுபுகழ்மச்சத்தார்மன்னவா — உன்னுடைய
பொன்னாகத்தெங்கையர்தம்போகநகச்சின்னங்கள்
என்னாகத்தேயெரிகையால்.

இ - ள். மன்னுபுகழ்-நிலைபெற்ற கீர்த்தியையுடைய, மச்சத்தார்மன்னவா - மச்சதேசத்தார்க் கரசனே, உன்னுடைய பொன் ஆகத்து - உனது அழகாகிய நெஞ்சில், எங்கையர்தம் - எமது தங்கையராகிய பரத்தையரது, போகம் நகச்சின்னம்கண்டு - போககாலத்தில் பட்ட நகக்குறியைக்கண்டு, என் ஆகத்து எரிகையால் - என்நெஞ்சில் எரிவதனால், உன் உயிரும் என உயிரும் - உனதுயிரும் எனதுயிரும், ஒன்று என்பது - ஒன்றே என்பதை, இன்று அறிந்தேன் - இன்றையதினம் அறிந்தேன், எ - று.

39. காளத்தி கண்டத்தே காளத்திநெற்றியிலே
காளத்தி யுன்றன் கரத்திலே — காளத்தி
அங்கமெங்கும் வெவ்வழலை யாற்றினாள் ஞானப்பூங்
கங்கையென்னும் பெண்ணொருத்திகண்டு.

இ - ள் கண்டத்தே காளத்தி - கண்டத்தில் காளத்தி உண்டு, நெற்றியிலே காளத்தி - நெற்றியில் காளத்தி உண்டு, உன்றன் கரத்திலே காளத்தி-உன் கையில் காளத்தி உண்டு, அங்கம் எங்கும் காளத்தி - உடல்முழுதும் காளத்தியுண்டு, வெவ் அழலை - (இந்த) வெம்மையாகிய நெருப்பை, ஞானம் - ஞானத்தையும், பூ - பொலிவையுமுடைய, கங்கை என்னும் - கங்கையென்கிற, பெண் ஒருத்திகண்டு - ஒரு பெண்ணானவள் பார்த்து, ஆற்றினாள் - தணித்தாள், எ-று.

ஞானப்பூ - ஞானமாகிய அழகு எனினுமாம். காளத்தி நான்கனுள் முன்னையது பாற்கடலில்பிறந்த ஆலகாலவிஷத்தையும், இரண்டாவது நெற்றிக்கண்ணெருப்பையும், மூன்றாவது நெருப்புருவமாகிய மழுவையும், நான்காவது திருமேனிமுழுதும் நெருப்புருவாயிருத்தலையும் உணர்த்தின. காளத்தி-விஷாக்கினி.

40. மேனியுடனே விடியும்விடியாது
கோவைமணிமார்பா கூடாநாள் — தேவர்
திரண்டாதரிக்கின்ற தென்னரங்கமாலே
இரண்டாலும் பொல்லாதிரா.

**இ - ள்.** கோவை மணிமார்பா - மணிவடத்தையணிந்த மார்பினையுடையவனே, தேவர்திரண்டு - தேவர்கள்கூடி, ஆசரிக்கின்ற - அன்புசெய்கின்ற, தென் அரங்கம்மாலே - தென்னரங்கத்தி லெழுந்தருளிய திருமாலே, மேவில் - கூடினால், உடனேவிடியும் - உடனே விடிந்துபோம், கூடாநாள் - கூடாநாளில், விடியாது - பொழுதுவிடியாது, (ஆதலால்) இரண்டாலும் - இருவகையாலும், இரா - இரவானது - (எனக்கு) பொல்லாது - கெட்டதாயிருக்கின்றது.

தலைமகன் கூடியிருக்குங்காலத்தில் இரவானது சுகரூபமாயும் அற்பகாலமாயும் இருத்தலையும், கூடாதகாலத்தில் அவ்விரவு துக்கரூபமாயும் நெடுங்காலமாயும் இருத்தலையும்பற்றித் தலைமகள் வருந்திக்கூறியது.



## பொற்களந்தை - படிக்காசுத்தம்பிரான்.



1. அடங்கெடுவாய்பலதொழிலு மிருக்கக்கல்வி
அதிகமென்றேகற்றுவிட்டோமறிவில்லாமல்
திடமுளமோகனமாடக் கழைக்கூத்தாடச்
செப்பிடுவித்தைகளாடத் தெரிந்தோமில்லைத்
தடமுலைவேசையராகப் பிறந்தோமில்லைச்
சனியானதமிழைவிட்டுத் தையலார்தம்
இடமிருந்துதூதுசென்று பிழைத்தோமில்லை
என்னசென்மமெடுத் திரக்கின்றோமே.

**இ - ள்.** அடங்கெடுவாய் - அடங்கெடுவாய் (மனமே), உலகில் - உலகத்தில், பலதொழிலும் இருக்க - அநேக வேலைகளிருக்க, (அவற்றினும்) அறிவில்லாமல் கல்வியே அதிகம் என்று கற்றுவிட்டோம் - அறிவில்லாமல் கல்வியே சிறந்ததென்று கற்றுவிட்டோம், திடம் உள்ள மோகனம் ஆட - உறுதியுள்ள மோகனவித்தைகள் செய்யவும், கழைக்கூத்து ஆட - கழைக்கூத்தாடவும், செப்பிடு வித்தைகள் ஆட - செப்பிடுவித்தைகள் செய்யவும், தெரிந்தோம் இல்லை - தெரிந்துகொண்டோமில்லை, தடம் முலை வேசையர் ஆக பிறந்தோம் இல்லை - மலைபோலும் தனங்களையுடைய வேசையராகப் பிறந்தோமில்லை, சனி ஆன தமிழைவிட்டு - இந்தச் சனியன்போன்ற தமிழைவிட்டு, தையலார் தம் இடம் இருந்து - அம்மாதரிடத்திலிருந்துகொண்டு, தூதுசென்று பிழைத்தோம் இல்லை - தூதுபோய் பிழைத்தோமில்லை, என்ன சன்மம் எடுத்து - என்னபிறவியெடுத்து, இரக்கின்றோம் - யாசிக்கின்றோம், எ - று.

**கறவைப்பசுவை யாசித்துக்கூறியது.**

2. பெற்றதொருபிள்ளையென்மனையாட்டியப்பிள்ளைக்குப்பால்
பற்றுதுகஞ்சிகுடிக்குந்தரமல்லபாலிரக்கச்

சிற்றாளுமில்லையிவ்வெல்லாவருத்தமுந்தீரவொரு
கற்றாதரவல்லையோவல்லமாநகர்க்காளத்தியே.

இ - ள். என்மனையாட்டி ஒருபிள்ளை பெற்றாள் - என்மனைவி ஒரு பிள்ளையை ஈன்றாள், அப்பிள்ளைக்குப் பால்பற்றாது - அக்குழந்தைக்குப் பால்போதாது, கஞ்சிகுடிக்கும் தரம் அல்ல - கஞ்சிகுடிக்கும் பருவமுமல்ல, பால் இரக்க - பால் யாசித்துக்கொண்டு வருதற்கு, சிற்றாளும் இல்லை - ஒரு சிறுபையலுமில்லை, இ - இந்த, எல்லாவருத்தமும் தீர - இந்த எல்லாத்துன்பங்களும் நீங்கும்படி, ஒரு கன்று ஆதரவல்லையோ - ஒரு கன்றையுடைய பசுவைக்கொடுக்கவல்லையோ, வல்ல மாநகர் காளத்தியே - வல்லம் என்னும் பெரியநகரத்திலுள்ள காளத்திவள்ளலே, எ - று.

கன்று - கற்று என வலித்தல்பெற்றது.

பசுப்பெற்று மகிழ்ந்துபாடியது.

3. வழிமேல்விழிவைத்துவாடாமலென்மனையாளுமற்றோர்
பழியாமற்பிள்ளையும்பாலென்றழாமற்பசிரெனுஞ்சொல்
மொழியாமலென்னைவரவிட்டபாவிமுசித்துச்சதை
கழியாமலாவளித்தாய்வல்லமாநகர்க்காளத்தியே.

இ - ள். என்மனையாளும் - என்மனைவியும், வழிமேல் விழிவைத்து வாடாமல் - நான் வரும் வழியின்மீது கண்வைத்து வாடாமலும், மற்றோர் பழியாமல் - அயலார் பழிக்காமலும், பிள்ளையும் பால் என்று அழாமல் - குழந்தையும் பாலென்றழாமலும், பசி என்னும் சொல் மொழியாமல் - (மனம்) திடுக்கிடும் சொல்லை (அயலார்) சொல்லாமலும், என்னை வரவிட்ட பாவி - என்னை இங்கே யனுப்பின பாவியாகிய என்மனைவி, முசித்துச் சதை கழியாமல் - மெலிவித்து என்சதையைக் கழிக்காமலும், ஆ அளித்தாய் - பசுவைத்தந்தாய், வல்லமாநகர் காளத்தியே,—எ - று.

சீதக்காதிமீது பாடியது.

4. ஓர்தட்டிலேபொன்னுமோர்தட்டிலேநெல்லுமொக்கவிற்கும்
கார்தட்டியபஞ்சகாலத்திலேதங்கள்காரியப்பேர்
ஆர்தட்டினுந்தட்டுவாராமலேயன்னதானத்துக்கு
மார்தட்டியதுரைமால்சீதக்காதிவரோதயனே.

இ - ள். ஓர் தட்டிலே பொன்னும் ஓர் தட்டிலே நெல்லும் - ஒரு துலையிலே பொன்னையும் ஒருதுலையிலே நெல்லையும், ஒக்க-சமமாயிட்டு நிறுத்து, விற்கும் - விற்கின்ற, கார்தட்டிய - மேகம் (மழைபெய்தலை) தவறிப்போன, பஞ்சகாலத்திலே - சிறுவிலைக்காலத்தில், தங்கள் காரியப்பேர் ஆர்தட்டினும் - தமது சுயகாரியத்தில் நோக்கமுள்ள யாவர் தடுத்தாலும், தட்டு வாராமல் - தடையுண்

டாகாமல், அன்னதானத்துக்கு-அன்னதானம் செய்வதற்கு, மார்தட்டிய துரை-(நானிருக்கிறேன் வறியரே அஞ்சவேண்டாம் என்று) மார்தட்டித் தைரிய வார்த்தைசொன்ன துரைமால் - (கைம்மாறு கருதாதகொடையால்) மேகம்போன்ற சீதக்காதி - சீதக்காதியென்னும் பெயருள்ள, வரோதயனே - வரத்தினால் தோன்றினவனே (ஆவன்), எ - று.

5. நேசித்துவந்தகவிராசர்தங்கட்குநித்தநித்தம்
பூசிக்குநின்கைப்பொருளொன்றுமேமற்றப்புல்லர்பொருள்
வேசிக்குஞ்சந்நடப்பார்க்கு நம்வேசிக்குவேலைசெயும்
தாசிக்குமாகுங்கண்டாய்சீதக்காதிதயாநிதியே.

இ - ள். நித்தநித்தம் - நாள்தோறும், பூசிக்கும் நின்கைப்பொருள் ஒன்றுமே - புகழப்படுகிற உன்கைப்பொருளொன்றுமாத்திரமே, நேசித்துவந்த கவிராசர்தங்கட்கு - விரும்பிவந்த புலவர்களுக்கு உதவும், மற்றபுல்லர்பொருள் - மற்ற அற்பருடைய பொருள், வேசிக்கும் - தாசியின்பொருட்டும், சந்நடப்பார்க்கும் - (அத்தாசிகளிடத்து) சந்நடப்பவர்க்கும், வேசிக்கு வேலைசெய்யும் தாசிக்கும் - வேசைக்கு வேலைசெய்கிற அடியாளுக்கும், ஆகும் - உதவும், சீதக்காதி தயாநிதியே, எ - று.

6. ஈயாதபுல்லரிருந்தென்னபோயென்ன வெட்டிமரம்
காயாதிருந்தென்ன காய்த்துப்பலனென்ன கைவிரித்துப்
போயாசகமென்றுரைப்போர்க்குச்செம்பொன்பிடிபிடியாய்
ஓயாமலீபவன்சீதக்காதியொருவனுமே.

இ - ள். ஈயாதபுல்லர் - கொடாத அற்பர், இருந்தென்ன போயென்ன - உயிரோடிருந்தாலென்னவோ இறந்தாலென்னநஷ்டம், எட்டிமரம் காயாது இருந்து என்ன - எட்டிமரம் காய்க்காமலிருந்துஎன்ன, காய்த்து பலன்என்ன - காய்த்துப் பலன்யாது, கைவிரித்துப்போய் - கையைவிரித்துச்சென்று, யாசகம் என்று உரைப்போர்க்கு - யாசகமென்று சொல்லுவோருக்கு, செம்பொன் - செம்பொன்னை, பிடி பிடி ஆய் - பிடி பிடியாக, ஓயாமல் ஈபவன் - இடையறாமல் கொடுப்பவன், சீதக்காதி ஒருவனுமே - (அழகினால்) மன்மதனையொத்த சீதக்காதி என்கிற ஒருவன்மாத்திரமே, எ - று.

7. காய்ந்துசிவந்ததுசூரியகாந்திகலவியிலே
தோய்ந்துசிவந்ததுமின்னார்நெடுங்கண்டொலைவில்பன்னூல்
ஆய்ந்துசிவந்ததுபாவாணர்நெஞ்சமனுதினமும்
ஈந்துசிவந்ததுமால்சீதக்காதியின்கரமே.

இ - ள். சூரியகாந்தி காய்ந்து சிவந்தது - சூரியகிரணம் காய்ந்துசெவந்தது, மின்னார் நெடுகண் - மாதருடைய நெடியகண், கலவியிலே தோய்ந்து சிவந்தது - புணர்ச்சியிற்படிந்துசிவந்தது, பாவாணர் நெஞ்சம் - புலவோர்களுடையமனம், தொலைவு இல் பல்நூல் ஆய்ந்து சிவந்தது - அழியாத அனேக

நூல்களை ஆராய்ந்துசிவந்தது, மால்சீதக்காதி இருகரம் - மேகம்போலும் சீதக்காதியின் இருகைகளும், அனுதினமும் ஈந்துசிவந்தது - நாள்தோறும் கொடுத்துச் செவந்தது, எ - று.

இடைவிடாது காய்தலால் சூரியகிரணமும், கலவியின்வெப்பத்தால் மாதர்கண்களும், நூலாராய்ச்சியால் பாவாணர்மனமும், பொன்முதலியவற்றைப் பலகாலும் அள்ளிக் கொடுத்தலால் சீதக்காதியின் கையம் செவந்தன என்பதுகருத்து.

8. சேட்டாளன்காயற்றுறைசீதக்காதிசிறந்தவச்ர
நாட்டான்புகழ்க்கம்பநாட்டிவைத்தான்றமிழ்நாவலரை
ஓட்டாண்டியாக்கியவர்கடம்வாயிலொருபிடிமண்
போட்டானவனுமொளித்தான்சமாதிக்குழிபுகுந்தே.

இ - ள். சேட்டாளன் - திரவிய சேகரிப்பில் சிறந்தவன், காயல்துறை - காயற்பட்டணத்துக்கிறைவன், சீதக்காதி - சீதக்காதி, சிறந்த வச்ரநாட்டான் - மேன்மையாகிய வச்ரநாட்டையுடையவன், புகழ் கம்பம் நாட்டிவைத்தான் - கீர்த்தியாகிய கம்பத்தைநிலைபொருத்திவைத்தவன். (இவன்) தமிழ் நாவலரை - தமிழ்ப்புலவரை, ஓட்டாண்டியாக்கி - இரந்துண்ணும் ஓட்டைக் கையிலுடைய பிச்சைக்காரர்களாக்கி, அவர்கள் தம்வாயில் - அவர்களுடைய வாயில், ஒருபிடி மண்போட்டான் - ஒருபிடி மண்ணைப்போட்டு, அவனும் - அச்சீதக்காதியும், சமாதிக்குழிபுகுந்து ஒளித்தான் - சமாதிக்குழியிற்புகுந்து மறைந்தான் (இறந்தான்) எ - று.

இவன் இறந்தபின் புலவர்களுக்குக் கொடுப்பார் இல்லாமையைக் குறிப்பித்தற்கு "ஓட்டாண்டியாக்கி" முதலியவாகக்கூறினர்.

சீதக்காதியின்பேரில் தாசிபாடியது.

9. தினங்கொடுக்குங்கொடையானே
தென்காயற்பதியானேசீதக்காதி
இனங்கொடுத்தவுடைமையல்ல
தாய்கொடுத்தவுடைமையல்லவெளியாளாசை
மனங்கொடுத்துமிதழ்கொடுத்துமபிமானந்
தனைக்கொடுத்துமருவிரண்டு
தனங்கொடுத்துமீட்டுடைமைகள்ளர்கையிற்
பறிகொடுத்துத்தவிக்கின்றேனே.

இ - ள். தினம்கொடுக்கும் கொடையானே - நாள்தோறும் கொடுக்கும் கொடையையுடையவனே, தென்காயல் பதியானே - தென்காயற் பட்டணத்தையுடையவனே, சீதக்காதி - சீதக்காதியே, இனம் கொடுத்தவுடைமை அ

ல்ல - உறவினர் தந்த உடைமையல்ல, தாய்கொடுத்த உடைமை அல்ல - தாய் கொடுத்த உடைமைகள் அல்ல, எளியாள்-எளியவளாகிய நான், ஆசைமனம் கொடுத்தும் - விருப்பமுள்ள மனத்தைக்கொடுத்தும், இதழ்கொடுத்தும் - அதரத்தைக் கொடுத்தும், அபிமானந்தனைகொடுத்தும். மர்மஸ்தானத்தைக் கொடுத்தும், மருவு இரண்டுதனம்கொடுத்தும் - பொருந்திய இரண்டு தனங்களைக்கொடுத்தும், இட்டு உடைமை-சம்பாதித்த உடைமைகளை, கள்ளர்கையில்பறிகொடுத்து - திருடர்கையில் பறிகொடுத்து, தவிக்கின்றேன் - திகைக்கின்றேன், எ - று.

### தலைவன் பொருளீட்டற்குக் கப்பலேறிப் போயினனாக, தலைவி அவன் பிரிவாற்றாது வருந்திக்கூறல்.

10. தரைகண்டமட்டும்படர்ந்தண்டகோளமுந்தாவியெங்கும்
உரைகண்டகீர்த்திபெறுஞ்சீதக்காதியுலகினில்வெண்
டிரைகண்டெழுங்கடன்மீதேதன்வங்கத்தைச்செல்லவிட்டுக்
கரைகண்டவனின்னங்காணானென்னாசைக்கடற்கரையே.

**இ - ள்.** தரைகண்டமட்டும் படர்ந்து - பூமி காணப்படுமளவும்பரவி, அண்டகோளமுந்தாவி - அண்டகோளத்தையுந்தாண்டி, எங்கும் உரைகண்ட கீர்த்திபெறும் - எவ்விடத்தும் சொல்லப்பட்ட புகழைப்பெற்ற, சீதக்காதி - சீதக்காதியென்பவன், உலகினில் - பூமியில், வெண் திரைகண்டு எழும் கடல்மீதே - வெண்மையாகிய அலைகள்தோன்றி மேலெழாநின்ற கடலின்மீது, தன் வங்கத்தைச் செல்லவிட்டு - தனது மரக்கலத்தைச் செலுத்தி, கரை கண்டவன்-தான் நினைத்த கரையிற்சென்றவன், என் ஆசை - என் ஆசையாகிய, கடல் - கடலினது, கரை - கரையை, இன்னம் காணான் - இன்னம் காணாதவனாயிருக்கின்றான், எ - று.

கடலெல்லை கண்டவன் என் ஆசையின் எல்லையை அறியாதிருக்கின்றான் என்பது கருத்து.

### உமாதேவியைநோக்கி முருகர் முதலியோர்க்கு வேல்முதலியவற்றைக் கொடுத்த நீ எனக்கு யாதொன்றுங் கொடுத்திலையேயென்று இரக்கம் உண்டாகப் பாடியது.

11. வேல்கொடுத்தாய்திருச்செந்தூரர்க்கம்மியின்மீதுவைக்கக்
கால்கொடுத்தாய்நின்மணவாளனுக்குக்கவுணியர்க்குப்
பால்கொடுத்தாய்மதவேளுக்குமூவர்பயப்படச்செங்
கோல்கொடுத்தாயன்னையேயெனக்கேதுங்கொடுத்திலையே

**இ - ள்.** திருச்செந்தூரர்க்கு வேல்கொடுத்தாய் - திருச்செந்தூரிலுள்ள முருகக்கடவுளுக்கு வேலாயுதத்தைத் தந்தருளினாய், நின்மணவாளனுக்கு அம்மியின்மீதுவைக்கக் கால்கொடுத்தாய் - உன்கணவனாகிய சிவபெருமானு

க்கு (விவாஹகாலத்தில்) அம்மிமீது வைத்தற்பொருட்டுத் திருவடியைத் தந்தனை, கவுணியர்க்குப் பால்கொடுத்தாய் - கவுணியர்குலத்துதித்த திருஞானசம்பந்தருக்கு ஞானப்பாலைத் தந்தருளினை, மதவேளுக்கு - மன்மதனுக்கு, மூவர் பயப்பட - மும்மூர்த்திகளும் அஞ்சும்படி, செங்கோல் கொடுத்தாய் - செங்கோலைத் தந்தருளினை, அன்னையே-தாயே, எனக்கு ஏதும் கொடுத்திலையே - எனக்கு ஒன்றையுங் கொடுத்தாயில்லையே, எ - று.

உமாதேவியார் முருகக்கடவுளுக்கு வேற்படை கொடுத்தார் என்பதை "உமைக்கண்ணின்று, தற்பயப் புணர்த்திக் கற்பினொடு கொடுத்த அமையா வென்றி அரத்தநெடுவேலோய்" என்னுங் கல்லாடத்துக் காப்புச் செய்யுளானுணர்க. செங்கோல் - செவ்வியபாணம்.

### முடியாத காரியங்கள் இவையெனப் பாடியது.

12. பொல்லாதமூர்க்கருக்கெத்தனைதான்புத்திபோதிக்கினும்
நல்லோர்க்குண்டானகுணம்வருமோநடுச்சாமத்திலே
சல்லாப்புடவைகுளிர்தாங்குமோபெருஞ்சந்தையினில்
செல்லாப்பணஞ்செல்லுமோதில்லைவாழுஞ்சிதம்பரனே.

இ - ள். பொல்லாத மூர்க்கருக்கு - பொல்லாத மூர்க்கபுத்தி யுடையவர்க்கு, எத்தனைதான் புத்திபோதிக்கினும் - பல புத்திகளைப் போதித்தாலும், நல்லார்க்கு உண்டான குணம்வருமோ - நல்லோர்க்குண்டான குணம்வருமோ, நடுச்சாமத்திலே - நடுராத்திரியில், சல்லாப்புடவை குளிர்தாங்குமோ - மெல்லிய புடவை குளிர்தாங்குமோ, பெருஞ்சந்தையினில் - பெரிய சந்தைகூடுமிடத்து, செல்லாப்பணம் செல்லுமோ - செல்லாத பணம் செல்லுமோ, தில்லைவாழும் சிதம்பரனே, எ - று.

13. மூவேந்தருமற்றுச்சங்கமும்போய்ப்பதின்மூன்றொடெட்டுக்
கோவேந்தருமற்றுமற்றொருவேந்தன்கொடையுமற்றுப்
பாவேந்தர்காற்றிலிலவம்பஞ்சாகப்பறக்கையிலே
தேவேந்திரதாருவொத்தாய்ரகுநாதசெயதுங்கனே.

இ - ள். மூவேந்தருமற்று - (தமிழினது அருமையறிந்த) மூவேந்தருமழிந்து, சங்கமும்போய் - சங்கமுமழிந்து, பதின்மூன்றொடு எட்டுக்கோவேந்தரும் அற்று - இருபத்தொரு வள்ளல்களும்அழிந்து, மற்றொருவேந்தன் கொடையும்அற்று - வேறொரு அரசனது ஈகையுமொழிந்து, பாவேந்தர்-கவிராஜர்கள், காற்றில் இலவம்பஞ்சு ஆக பறக்கையிலே - பெருங்காற்றிலகப்பட்ட இலவம் பஞ்சுபோலப் பறக்கும்போது, தேவேந்திர தாரு ஒத்தாய்-இந்திரனது கற்பகதருவை நிகர்த்திருந்தாய், ரகுநாதசெயதுங்கனே - ரகுநாதனென்னும் வெற்றியிற் சிறந்தவனே, எ - று.

மூவேந்தர் - சேரசோழபாண்டியர்.

திருச்செந்தூர் முருகர்மீது பாடியது.

14. முன்னைநின்னன்னைமுலையூட்டிமையிட்டுமூக்குச்சிந்திக்
கன்னமுங்கிள்ளியநாளல்லவேயென்னைக்காப்பதற்கே
அன்னமுமஞ்ஞையும்போலிருபெண்கொண்டவாண்பிள்ளைநீ
இன்னமுஞ்சின்னவன்றானோசெந்தூரிலிருப்பவனே.

இ - ள். செந்தூரில் இருப்பவனே - திருச்செந்தூரில் எழுந்தருளியிருப்பவனே, முன்னை - முற்காலத்தில், நின் அன்னை - உன் தாயாகிய உமாதேவி, முலை ஊட்டி - தன் திருமுலைப்பாலை யுண்பித்து, மை இட்டு - (கண்ணுக்கு) மையெழுதி, மூக்குச்சிந்தி - மூக்கைச்சிந்தி, கன்னமும் கிள்ளியநாள் அல்லவே - கன்னத்தைக் கிள்ளின இளமைப்பருவ மல்லவே, அன்னமும் மஞ்ஞையும்போல் - அன்னமும் மயிலும்போல, இருபெண்கொண்ட - இரண்டு மனைவியரைப் படைத்த, ஆண்பிள்ளை நீ - ஆண்பிள்ளையாகிய நீ, என்னைக் காப்பதற்கு - என்னைக் காத்தருள, இன்னமும் சின்னவன் தானோ - இன்னமும் சிறுபிள்ளை தானோ, எ - று.

அன்னம் தெய்வயானைக்கும், மஞ்ஞை வள்ளிநாயகியார்க்கும் உவமையாகக் கொள்க.

இதுவுமது.

15. முன்கரையப்பனையேறவிட்டாட்கொண்முதல்வருள்ளக்
கற்கரைக்கும்படிபோதித்திடுங்கருணைக்கடலைச்
சிற்பரைக்குட்டியையெங்குந்தித்திக்குஞ்செங்கரும்பின்
சர்க்கரைக்கட்டியைக்கண்டேன்செந்தூரெனுந்தானத்திலே.

இ - ள். அப்பனை - திருநாவுக்கரசரை, முன் - முற்காலத்தில், கரை ஏற விட்டு - கடற்கரையி லேறப்பண்ணி, ஆட்கொள் - (அவரை) ஆட்கொண்டருளிய, முதல்வர் - தலைவராகிய சிவபெருமானது, உள்ளம் கல் கரைக்கும்படி - மனமாகிய கல்லை யுருக்கும்படி, போதித்திடும் - (பிரணவார்த்தத்தை) உபதேசித்தருளிய, கருணைக்கடலை - அருட்கடலை, சிற்பரைக்குட்டியை - ஞானசத்தியின் புதல்வனை, எங்கெங்கும் தித்திக்கும் - எந்தப்பாகத்திலும் இனிக்கிற, செங்கரும்பின் - செங்கரும்பிலுண்டாகிய, சர்க்கரைக்கட்டியை - சர்க்கரைக் கட்டியை, செந்தூர் என்னும் தானத்திலே கண்டேன் - திருச்செந்தூர் என்னும் திருப்பதியில் கண்டுகொண்டேன், எ - று.

இதுவுமது.

16. சின்னஞ்சிறுபிள்ளைசெங்கோட்டுப்பிள்ளைசிவந்தபிள்ளை
பொன்னன்மணிப்பிள்ளைபூலோகமெங்கும்புகழும்பிள்ளை
சொன்னெஞ்சமுல்கின்றசூரனைக்கொன்றசொக்கேசர்பிள்ளை
வன்னக்கிளிப்பிள்ளைசெந்திற்குறத்திக்குமாப்பிள்ளையே.

இ - ள். சின்னஞ் சிறுபிள்ளை - மிகச்சிறுபிள்ளை, செங்கோட்டுப்பிள்ளை - திருச்செங்கோட்டி லெழுந்தருளிய பிள்ளை, சிவந்தபிள்ளை - சிவந்த பிள்ளை, பொன்நல் மணிபிள்ளை - பொன்னினாலும் மணியினாலும் அலங்கரிக்கப்பட்ட பிள்ளை, பூலோகம் எங்கும் புகழும்பிள்ளை - பூமிமுற்றும் புகழ்பெற்றபிள்ளை, சொல் நெஞ்சு அழல்கின்ற - சொல்லும் மனமும் சுடுகின்ற, சூரனை - சூரபன்மனை, கொன்ற - முடிவுசெய்த, சொக்கேசர் பிள்ளை - மதுரைச் சொக்கநாதர் பிள்ளை, (இத்தன்மைகளையுடைய இவரே) வன்னக்கிளிப்பிள்ளை - அழகாகிய கிளிப்பிள்ளை போன்ற, செந்தில் குறத்திக்கு - திருச்செந்திற் குறத்தியாகிய வள்ளி நாயகியார்க்கு, மாப்பிள்ளை - மணவாளராயிருப்பவர், எ - று.

சொன்னெஞ் சுழலுதல் - வன்சொல்லும் வன்மனமு முடையனாதல்.

திருமலைநாய்க்கன் சிறைப்படுத்திவைத்தகாலத்தில் பாடியது.

17. நாட்டிற்சிறந்ததிருமலையா துங்கநாகரிகா
காட்டில்வனத்திற்றிரிந்துழலாமற்கலைத்தமிழ்தேர்
பாட்டிற்சிறந்தபடிக்காசனென்றொருபைங்கிளியைக்
கூட்டிலடைத்துவைத்தாயிரைதாவென்றுகூப்பிடுதே.

இ - ள். நாட்டில் சிறந்த திருமலையா - உலகத்திற்சிறந்த திருமலையனே, துங்கம் நாகரிகா - உயர்வாகிய நாகரிகமுள்ளவனே, காட்டில் வனத்தில் திரிந்து உழலாமல் - காட்டிலும் சோலையிலும் அலைந்து வருந்தாமல், கலைத்தமிழ்தேர் - தமிழ் நூல்களில் தெளிந்த, பாட்டில் சிறந்த - கவிபாடுவதிற் சிறந்த, படிக்காசன் என்ற ஒரு பைங்கிளியை - படிக்காசனென்று சொல்லப்பட்ட ஒரு பசுங்கிளியை, கூட்டில் அடைத்து வைத்தாய் - கூட்டில் அடைத்து வைத்தனை, இரை தா என்று கூப்பிடுதே - (அது) உணவு கொடு என்று கூவாநின்றதே, எ - று.

சீதக்காதி இறந்ததற்கிரங்கிப் பாடியவை.

18. விண்ணுக்குமண்ணுக்கும்பேராய்விளங்குதேவேந்த்ரனென்னுங்
கண்ணுக்கினியதுரைசீதக்காதிகமலநிகர்
தண்ணுக்கிசைந்தவதனசந்த்ரோதயசாமியிந்த
மண்ணுக்குள்ளேயொளித்தான்புலவோர்முகம்வாடியவே.

இ - ள். விண்ணுக்கும் மண்ணுக்கும் பேராய் விளங்கு - விண்ணுலகத்திலும் மண்ணுலகத்திலும் பிரபலமாய் விளங்குகின்ற, தேவேந்த்ரன் என்னும் - தேவேந்திரனென்று சொல்லப்பட்ட, கண்ணுக்கு இனிய துரை சீதக்காதி - கண்ணுக்கினியனாகிய துரையாகிய சீதக்காதி என்கிற, கமலம் நிகர் - தாமரைமலரை நிகர்த்த, கண்ணுக்கு இசைந்த - குளிர்ச்சிபொருந்திய, வதன சந்த்ரோதய சாமி சந்த்ரோதயம்போன்ற முகத்தினையுடைய சாமியானவன், இந்த மண்ணுக்குள்ளே ஒளித்தான் - இந்த மண்ணுக்குள்ளே மறைந்தான், (மறையவே) புலவோர் - புலவரது, முகம் வாடிய - முகங்கள் வாடிப்போயின, எ - று.

19. மறந்தாகிலுமரைக்காசுங்கொடாமடமாந்தர்மண்மேல்
இறந்தாவதென்னவிருந்தாவதென்னவிறந்துவிண்போய்ச்
சிறந்தாலுங்காயற்றுறைசீதக்காதிதிரும்பிவந்து
பிறந்தாலொழியப்புலவோர்தமக்குப்பிழைப்பில்லையே.

இ - ள். மறந்தாகிலும் அரைக்காசும் கொடா - மறந்தாயினும் அரைக்காசையும் ஒருவர்க்குக் கொடாத, மடமாந்தர் - அறியாமையுள்ள மக்கள், மண்மேல் - உலகில், இறந்து ஆவது என்ன - இறந்தால் உண்டாவதாகிய நஷ்டம் யாது, இருந்து ஆவது என்ன - உயிர்வாழ்தலா லுண்டாவதாகிய லாபம் யாது, இறந்து - செத்து, விண்போய் சிறந்து ஆலும் - விண்ணுலகிற்சென்று மேன்மையை யடைந்து (அவ்வுலகையும்) ஆளுகின்ற, காயல் துறை - காயற்பட்டணத்துக்கிறைவனாகிய சீதக்காதி, திரும்பிவந்து பிறந்தாலொழிய - மீண்டுவந்து பிறந்தாலன்றி, புலவோர்தமக்கு பிழைப்பு இல்லை, புலவர்களுக்குப் பிழைப்பில்லை, எ - று.

20. கல்லடிக்கு முளியிரண்டு காதடிக்குளடிப்பதெனக் கவிதை கேட்டுப், பல்லடிக்கக் கிடுகிடெனப் பறையடிக்கு நெஞ்சர்தமைப் பாடுவேனே, வில்லடிக்கும் பிரம்படிக்குங் கல்லடிக்கும் விரும்பிநின்றமெய்யனீன்ற, செல்லடிக்குந் தடவரையிற் சேறடிக்க வலையடிக்குஞ் செந்திலானே.

இ - ள். வில் அடிக்கும்-(அருச்சுனனது) வில்லடிக்கும், பிரம்பு அடிக்கும்-(பாண்டியனது) பிரம்படிக்கும், கல் அடிக்கும் - (சாக்கியநாயனரது) கல்லடிக்கும், விரும்பிநின்ற - விரும்பியிருந்த, மெய்யன் - உண்மைப்பொருளான பரமசிவன், ஈன்ற - பெற்ற, செல் அடிக்கும் தடவரைமேல் சேறு அடிக்க - மேகங்கள் தவழ்கின்ற பெரியமலையின்மீது சேறுபடும்படி, அலை அடிக்கும் - அலைகள் மோதுகின்ற, செந்திலானே - திருச்செந்தூரனே, கல் அடிக்கும் உளி - கல்லை வெட்டுகின்ற உளியானது, இரண்டு காது அடிக்குள் அடிப்பது என - இரண்டு காதுகளின் அடியில் அடிப்பதுபோல, கவிதை கேட்டு - புலவர்களுடைய கவிகளைக்கேட்டு, பல் கிடுகிடு என அடிக்க - பற்கள் ஒன்றோடொன்று கிடுகிடென்றடிபட, பறையடிக்கும் நெஞ்சர்தமை - நடுங்குகின்ற மனத்தை யுடையவரை, பாடுவேனோ - நான் பாடுவேனோ, எ - று.

திருச்செந்திலானே, என் கவிகளைக்கேட்டு மகிழும் உன்னைப்பாடாமல், அவற்றை காதடியில் உளிவைத் தறைந்தாற்போல் வெறுப்பாய்க்கேட்கும் லோபரைப்பாடுவேனோ என்பது கருத்து.

முன்போலச் சிறந்த வித்வான்கள் இப்பொழுதில்லையென்பதை யுணர்த்தப் பாடியது.

21. குட்டுதற்கோபிள்ளைப்பாண்டியனிங்கில்லைக்
குறும்பியளவாய்க்காதைக்குடைந்துதோண்டி
எட்டினமட்டறுப்பதற்கோவில்லியில்லை
இரண்டொன்றாய்முடிந்துதலையிறங்கப்போட்டு
வெட்டுதற்கோகவியொட்டக்கூத்தனில்லை
விளையாட்டாய்க்கவிதைதனைவிரைந்துபாடித்
தெட்டுதற்கோவறிவில்லாத்துரைகளுண்டு
தேசமெங்கும்புலவரெனத்திரியலாமே.

இ - ள். குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டியன் இங்கு இல்லை - கேட்ட கேள்விக்குத் தக்க விடைசொல்லாதவரை தலையில் குட்டி யனுப்புதற்குப் பிள்ளைப் பாண்டியன் இவ்வுலகத்தில் இல்லை, குறும்பி அளவாய் காதை குடைந்து தோண்டி எட்டினமட்டு அறுப்பதற்கோ வில்லி இல்லை - குறும்பியினளவும் காதைக்குடைந்து தோண்டிக் கைக்கு எட்டினமட்டும் அறுப்பதற்கோ வில்லி புத்தூரர் இல்லை, இரண்டு ஒன்றாய் முடிந்து தலையிறங்கப்போட்டு வெட்டுதற் கோ கவி ஒட்டக்கூத்தன் இல்லை - (நவராத்திரிகாலத்தில்) இருவர் தலைகளை ஒன்றாக முடிந்து வெட்டுதற்கு ஒட்டக்கூத்தனென்னும் கவிஞனில்லை, விளை யாட்டாய் கவிதைதனை விரைந்துபாடி - விநோதமாய்க் கவிகளை விரைவாகப் பாடி, தெட்டுதற்கோ அறிவு இல்லா துரைகள் உண்டு - ஏமாற்றுதற்கோ அறி வில்லாத பிரபுக்கள் உளர், (ஆதலால்) தேசம் எங்கும் புலவர் எனத்திரியலாம்- எந்தத் தேசத்திலும் புலவரென்று சொல்லிக்கொண்டு திரியலாகும், எ - று.

## சவ்வாதுப்புலவர் பாடல்.



இரகுநாத சேதுபதியின்மீது பாடியது.

1. இளையாளன்சேதுபதிரகுநாயகன்கிஞ்சுகவாய்
இளையார்கலவியிடத்துநம்மீசரிடத்துமென்றும்
வளையாதபொன்முடிசற்றேவளையுமகுடமன்னர்
தளையாடியகையிற்காளாஞ்சியேந்துஞ்சமயத்துமே.

இ - ள். இளையாளன் - உறவினரைக் காப்பவனாகிய, சேதுபதி ரகுநாய கன் - ரகுநாத சேதுபதியின், என்றும் வளையாத பொன்முடி-என்றும் வணங் காத பொன்முடியானது, கிஞ்சுகம் வாய் - முருக்கம்பூப்போன்ற வாயினையுடை ய, இளையார் - மாதரது, கலவியிடத்தும் - புணர்ச்சிக்காலத்திலும், நம் ஈசரிட

ந்தும் - நமது சிவபெருமான் சந்நிதியிலும், மகுடமன்னர் - முடிவேந்தர், தளையாடிய கையில் - விலங்குபூண்டகையில், காளாஞ்சிஏந்தும் சமயத்தும் - படிக்கந்தாங்கிநிற்கும் சமயத்திலும், சற்றேவளையும்-சிறிது வணங்கும், எ - று.

புதுவை - ஆநந்தரங்கப் பிள்ளையின்மீது பாடியது.

2. பானுகிரணம்பார்க்கும்பங்கேருகநிலவு
தானும்வரப்பார்க்குஞ்சகோரங்கள்—வானமரும்
மையைப்பார்க்கும்மயில்கண்மாவிசயாநந்தரங்கன்
கையைப்பார்க்கும்புலவோர்கண்.

இ - ள். பங்கேருகம் - தாமரை, பானுகிரணம் பார்க்கும் - சூரியகிரணத்தை நோக்கும், சகோரங்கள் - சகோரபட்சிகள், நிலவுதானும் வரப்பார்க்கும்- நிலவுண்டாக நோக்கும், மயில்கள் வான்அமரும் மையைபார்க்கும் - மயில்கள் ஆகாயத்திலுள்ள மேகங்களை நோக்கும், புலவோர்கண் - வித்துவான்களுடைய கண்கள், மாவிசயம் - மிகுந்த வெற்றியையுடைய, ஆநந்தரங்கன் - ஆனந்தரங்கப்பிள்ளையின், கையைப்பார்க்கும் - கையை நோக்கும், எ - று.

3. பாலயிலாள்பின்னங்காற்பஞ்சுளியென்றேசுளிப்பாள்
பாலையிலாள்பின்னென்படுவளோ—சோலையிலே
ஆடுமயிற்பெரம்பூராநந்தரங்கதுறை
நாடுதனிலென்னிளமின்னாள்.

இ - ள். சோலையில் மயில் ஆடும் - சோலைகளில் மயில்கள் நடனம் பண்ணுகின்ற, பெரம்பூர் - பெரம்பூரில் வாழ்கின்ற, ஆநந்தரங்கதுறை - ஆநந்த ரங்கதுரையின், நாடுதனில் - நாட்டில், என் - எனது, இளமின்னாள் - இளமைப்பருவமுள்ள பெண்ணானவள், பால்அயிலாள் - பாலுண்ணாள், பின்னங்கால் பஞ்சு - பின்னங்காலில் வைத்துக்கட்டிய செம்பஞ்சை, உளிஎன்றே சுளிப்பாள் - உளியென்றே கோபிப்பாள், (இத்தன்மையள்) பாலையில் - பாலைநிலத்தில், ஆள்பின்-தலைவன்பின்னே, என்படுவளோ-என்னபாடுபடுவாளோ, எ-று.

ஆநந்தரங்கப்பிள்ளை புதுவையிலிருந்த ஓர் யாதவப்பிரபு.

4. அலையான்கவடுபடானாரிடத்துங்காயான்
இலையென்பதோர்நாளுமில்லை—கலைதேர்ந்த
சாலைமுத்துகிருஷ்ணனருள்சற்குணசிந்தாமணியைச்
சோலையென்றுசொன்னவரார்சொல்.

இ - ள். அலையான் - அலையான், கவடுபடான்-கவடுபடான், ஆரிடத்தும் காயான் - எவரிடத்தும்காயான், இலையென்பது ஓர்நாளும் இல்லை - இலையென்பது ஓர்நாளுமில்லை, (இப்படியிருக்க) கலைதேர்ந்த, நூல்களில்தெளிந்த, சாலை

முத்து கிருஷ்ணன் அருள் - சாலை முத்துக்கிருஷ்ணன்பெற்ற, சற்குணசிந்தா மணியை - நற்குணமமைந்த சிந்தாமணியை விகர்த்தவனே, சோலையென்று சொன்னவர் ஆர் - சோலையென்று சொன்னவர் யாவர், சொல்-சொல்லுவாய், எ-று.

சோலைக்கு அலைதல் - அசைதலெனவும், கவடுபடல் - கிளைத்தலெனவும் காய்த்தல் - காய்விடுதலெனவும், இலையின்மை - இலைகளை யுடைத்தாதல் வின்மையெனவும், (இலைதெரியாதபடி மலர்களை யுடைத்தாதல்) சோலையப்பனுக்கு அலைதல் - சலித்தலெனவும், கவடுபடல்-கபடமுடைத்தாதலெனவும், காய்தல்-கோபித்தலெனவும், இலையென்பது - இல்லையென்று சொல்லுதலெனவும் பொருளுரைத்துக்கொள்க.

கச்சிச் செல்லப்பன்மீது பாடியது.

5. செல்லப்பன்கச்சியிலேசேர்ந்ததற்பி னைமணிகள்
நல்லதருமேகநவநிதியம்—சொல்லவே
முட்டின்றியொன்றிரண்டுமூன்றுநான்கைந்தாறேழ்
எட்டொன்பான்பத்தானவே.

இ - ள். செல்லப்பன் - செல்லப்பன் என்பவன், கச்சியிலே சேர்ந்ததற்பின் - கச்சியில் தோன்றினபிறகு, முட்டுஇன்றி - தடைஇல்லாமல், ஆ ஒன்று இரண்டுஆன - பசுஒன்று இரண்டாயின, மணிகள் மூன்று நான்குஆன - ரத்நங்கள் மூன்றுநான்காயின, நல்லதரு ஐந்து ஆறு ஆன - நல்லதருக்கள் ஐந்து ஆறாயின, மேகம் ஏழ் எட்டு ஆன - மேகங்கள் ஏழெட்டாயின, நவநிதியம் ஒன்பான் பத்துஆன - நவநிதியம் ஒன்பது பத்தாயின, எ - று.

செல்லப்பன் தோன்றினபின் ஒன்றாயிருந்த காமதேனு இவனோடு இரண்டெனவும், மும்மணிகள் நான்மணியெனவும், ஐந்தருக்கள் ஆறு தருக்கள் எனவும், ஏழுமேகங்கள் எட்டுமேகங்கள் எனவும், ஒன்பது நிதியம் பத்து நிதியங்கள் எனவும் சொல்லும்படியாயின என்பது கருத்து. மும்மணிகள் - சோமசூரியாக்கினிகள், இவை ஒளியுடைப்பொருள்களாகையால் மணியெனப்பட்டன. ஐந்தருக்கள் - அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பன. ஏழுமேகங்கள் - சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவருணம் என்பன, ஒன்பது நிதியம் - சங்கநிதி, பதுமநிதி முதலியன.

## நமச்சிவாயப்புலவர் பாடல்.



தஞ்சைச்செவிசெட்டிமீது பாடியது.

அவிசெட்டிவாங்குசூரர்க் கிறைநிகராய் வளமருவு மமரரென்றே, தவிசெட்டிமரம்போல வளர்ந்திருப்போர் தமைப்பாடேன் தனிநக்கீரனை, கவிசெட்டி திருவடியைப் புகழ்வணிகனிசையுடனற் கவினார் தஞ்சைச், செவிசெட்டிபாலடைந்தா னமதுகுறை விட்டோடுஞ்சேற்கண்மானே.

இ - ள். எட்டிமரம்போல வளர்ந்து - எட்டிமரம்போல் ஓங்கிவளர்ந்து, அவிசு எட்டிவாங்கு - அவிர்ப்பாகத்தை எட்டிவாங்குகின்ற, சுரர்க்கு இறைநிகராய் - தேவராசனுக்கு நிகராகி, வளம் மருவும் - வளம்பொருந்திய, அமரர் என்றே - (தம்மைத்) தேவர் என்று கருதியே, தவிசு - ஆசநத்தில், இருப்போர்தம்மை - இருப்பவரை, பாடோம் - பாடமாட்டோம், தனி நக்கீரன் கவி - ஒப்பற்ற நன்மைபொருந்திய நக்கீரனது கவியால், செட்டி திருவடியை - முருகனது திருவடியை, புகழ் வணிகன் - புகழ்கின்ற வணிகனைப், இசையுடன் - கீர்த்தியோடு, நல் கவின் ஆர் - நல்ல அழகுநிறைந்த, தஞ்சை - தஞ்சைமாநகரத்தில் வாழ்கின்ற, செவிசெட்டிபால் அடைந்தால் - செவிசெட்டியினிடத்தைச் சேர்ந்தால், நமது குறைவிட்டு ஓடும் - நமது குறைகள் யாவும் நம்மை விட்டு ஓடிப்போம், சேல்கண்மாதே - சேல்மீன்போலும் கண்களையுடைய மான்போல்வாளே, எ - று.

நக்கீரன்கவி - திருமுருகாற்றுப்படை. எட்டிமரம்போலப் பயனற்ற செல்வரைப் பாடாமல் திருமுருகாற்றுப்படையைக்கொண்டு முருகக்கடவுளை வழிபடுகிற தஞ்சைச்செவிசெட்டியையடைந்தால் நமது குறை நீங்கும் என்பது கருத்து.

திருக்கோவலூர் தாண்டவராயப் பிரபுவின்மேல் பாடியது.

துறை - இரங்கல்.

2. பாங்குயர்பளிக்கு மேடைகொல்லுலையா மாருதந்துருத்தி யாநீடும், பகர்நிலாக்கற்றை பதடியாமூடும் படரிருட் குழாங்குடைகரியா, ஓங்கியசெக்கருள்ளிடுங்கனலா வுயர்பெரும் பனிகொடும்புகையா, வுருவிலியென்னுங் கொல்லனென்பொன்னை யுருக்குமாறென்கொலோ வுரையாய், தூக்கியவிழியுந் தாமரைக்கவிழுந் தூரியுங் காரியற்குழலும், தூவருமடைத்தாகிலுங் கமருமடைக்கழியுந் தொழுவிய நறிபடுகுடமும், தாங்கியகையு மெய்யுமாய்நின்று பண்ணவிரிபெய்யுமா முகிலே, தாண்டவராயா பாண்டவர்தூதா தாழ்விலாக்கோவலாதிபனே.

இ - ள். பாங்கு உயர் - பக்கத்தில் உயர்ந்து தோன்றுகின்ற, பளிக்கு மேடை - பளிங்கு மேடையானது, கொல் உலை ஆ - கொல்லனுலைக்களமாகவும், மாருதம் - காற்றானது, துருத்தி ஆ - துருத்தியாகவும், நீடும் - நீண்ட, பகர் - சொல்லப்பட்ட, நிலாக்கற்றை - நிலவின் தொகுதியானது, பதடி ஆ - உமியாகவும், மூடும் - மூடுகின்ற, படர் இருள் குழாம் - பரவிய இருட்கூட்டமானது, குடைகரி ஆ - குடைந்த கரியாகவும், ஓங்கியசெக்கர் - அதிகரித்த செவ்வானமானது, உள்ளிடும் கனல் ஆ - உலையிலிடுதற்குரிய நெருப்பாகவும், உயர் பெரும் பனி - உயர்ந்த பெரும்பனியானது, கொடும்புகை ஆ - கொடிய புகையாகவும் கொண்டு, உருவிலி என்னும் - மன்மதனென்கிற, கொல்லன் - கொல்லனானவன், என் பொன்னை - எனது பொன்னை நிகர்த்தமகளை, உருக்கும் ஆறு - உருக்கும் விதம், என் - யாது, உரையாய் - சொல்லாய், தூங்கிய

விழியும் - உறங்கிய கண்ணும், தாம்பு உடைக்கயிறும் - தாம்புக் கயிறும், தூம்பு உறு - துளை பொருந்திய, காம்பு இயல் குழலும் - மூங்கிலாலியன்ற வேய்ங் குழலும், துவர் உடை துகிலும் - செந்நிறத்தையுடைய ஆடையும், கவர் உடை கழியும் - பிளவையுடைய மாட்டாங்கோலும், தொறுவியர் - இடைச்சியரது, உறிபடு குடமும் - உறியிற்பொருந்திய குடமும், தாங்கிய - ஏந்திய, கையும் மெய்யும் ஆய் நின்று - கையும் உடம்புமாய் நின்று, தண் அளி பெய்யும் - கருணை மழையைப் பொழிகின்ற, மா முகிலே - பெரிய மேகமே, தாண்டவராயா - தாண்டவராயன் என்னும் பெயரையுடையவனே, பாண்டவர் தூதா - பாண்டவர்களுக்குத் தூதுவனே, தாழ்வு இல் சீர் - குறைவில்லாத சிறப்புடைய, கோவல் - திருக்கோவலூருக்கு, ஆதிபனே - இறையவனே, எ - று.

உருக்குதல் - மெலிவித்தல், தன்மகளைப் பொன் என்றதற் கேற்பப் பனிக்கு மேடை முதலியவற்றைக் கொல்லுலை முதலியவாக்கிக் கூறினாள். குடைகரி - தோண்டினகரி.

திருக்கருவைக் களவீசர்மீது நிந்தாஸ்துதியாகப் பாடியது.

3. மெய்யாரப்புலிகாணப்பொதுவிலாட்டை
மிகவெடுத்தீருமையாளுக்கொருபங்கீந்தீர்
பையாரப்பணமெடுத்தீரையாநீர்தாம்
பாரறியச்சக்கரத்தைமாலுக்கீந்தீர்
செய்யாரத்தடம்புடைசூழ்கருவைவாழுந்
திருக்களாவீச்சுரரேதேவரீர்தாம்
கையாரமழுவெடுத்துக்காட்டினாலுங்
களவும்மைக்கொண்டேநான்காண்பிப்பேனே.

இ - ள். மெய் ஆரம் புலி காண - உம்முடைய திருமேனியில் ஆரமாகப் பூண்ட பாம்பும் புலியுங்காணும்படி, பொதுவில் ஆட்டை - பொதுவிலுள்ள ஆட்டை, மிகஎடுத்தீர் - மிகவுந்தூக்கினீர், (அந்தஆட்டில்) உமையாளுக்கு - உமையவளுக்கு, ஒருபங்கு ஈந்தீர் - ஒருபாகம் கொடுத்தீர், பைஆர் - பசுமை நிறைந்த, அ - அந்த, பணம்எடுத்தீர் - பணத்தையெடுத்தீர் (அதில்) ஐயா நீர் தாம் - ஐயனே நீர்தாம், பார்அறிய - உலகமறியும்படி, சக்கரத்தை - சக்கரப் பணத்தை, மாலுக்குஈந்தீர் - திருமாலுக்குக் கொடுத்தீர், செய்ஆர - கழனி கள்நிறைய, தடம் - தடாகங்கள், புடைசூழ் - அயலிற்சூழ்ந்த, கருவைவாழும் - கருவாபுரியில் வாழ்கின்ற, திருக்களா ஈச்சுரரே - திருக்களாவீசரே, தேவரீர் - தேவரீர், கையார - கையிற்பொருந்த, மழுஎடுத்து காட்டினாலும் - மழு வேந்திக் காட்டினாலும், நான் - யான், உம்மைக்கொண்டே, களவுகாண்பிப்பேன் - உமது திருட்டுத்தனத்தைக் காட்டுவேன், எ - று.

பாம்பும் புலியும் என்றது பதஞ்சலி வியாக்கிரபாதர்களை. பொது-பொன்னம்பலம். ஆட்டு - நடனம். நடிக்கும்போது ஒருபங்கமர்ந்த இறைவியுமாடுத

லால் உமையாளுக் கொருபங்கீந்தீர் என்றார். மை ஆர் அப்பணம் என்பதற்கு பசுமைநிறைந்த அந்தப்பொன்பணம் எனவும் பசுமையாகிய அப்பாம்பின் படம் எனவும் பொருள்கொள்க. சக்கரம் - சக்கரப்படையென வேறொருபொருள். மழுவெடுத்தாக்காட்டுதல் - சத்தியஞ்செய்தல், களவு - களாமரம் என வேறொருபொருள்.

திருக்காளத்தி நாதர்மீது நிந்தாஸ்துதியாகப் பாடியது.

4. மான்பிடித்தீர்முயன்மிதித்தீரெவருங்காண
மன்றுதனிலாடெடுத்தீர்மகத்துவந்த
ஊன்பெருத்தயானையைக்கொன்றுரித்தீரிப்பால்
உரப்பானதலைக்கறிக்குமுவந்தீரையா
மீன்பொதிந்தவிழியுடையாட்கொருபங்கீந்தீர்
மேலானவேடனெச்சின்மிகவேகொண்டீர்
கான்பொதிந்தகாளத்திநாதாவும்மைக்
கழுக்கள்வந்துசுற்றுவதுங்காணத்தானே.

இ - ள். மான் பிடித்தீர் - மானைப்பற்றினீர், முயல்மிதித்தீர் - முயலைமிதித்தீர், எவருங்காண - யாவரும்பார்க்க. மன்றுதனில் - பொதுவில், ஆடெடுத்தீர் - ஆட்டையெடுத்தீர், மகத்துவந்த - மகத்திற்றோன்றின, ஊன் பெருத்த யானையை - சரீரம் பருத்தயானையை, கொன்றுரித்தீர் - கொன்றுதோலையுரித்தீர், இப்பால்-இதற்குமேல், உரப்பு ஆன - உறுதியாகிய, தலைக்கறிக்கும்-தலைக்கறிக்காகவும், உவந்தீர் - விரும்பினீர், (அதில்) ஐயா - ஐயனே, மீன்பொதிந்த - மீனின்தன்மையமைந்த, விழியுடையாட்கு - கண்களையுடைய உமாதேவிக்கு, ஒருபங்குஈந்தீர் - ஒருபாகங்கொடுத்தீர், மேலானவேடன் எச்சில் - மேன்மையாகிய வேடனெச்சிலை, மிகவேகொண்டீர் - அதிகமாகவே கொண்டீர், கான் பொதிந்த - காடுமூடிய, காளத்தி - திருக்காளத்திக்கு, நாதா - இறைவனே, உம்மைக் காணத்தான் - உம்மைத் தரிசிக்கத்தான், கழுக்கள்வந்து சுற்றுவதும் - கழுக்கள்வந்து சூழ்வதும், எ - று.

முயல் - முயலகன். ஆடெடுத்தல் - நடித்தல். மகத்துவந்த யானை - கஜாசுரன். தலைக்கறிக்குவந்தது சிறுத்தொண்டன்மனையில். ஒருபங்கீதல் - அர்த்தநாரீச்சுரனாயிருத்தல். வேடன் - கண்ணப்பநாயனார். மான், முயல், யானை, தலைக்கறி, வேடனெச்சில் முதலியவற்றின் பொருட்டுக் கழுக்கள்வந்து சுற்றுகின்றன என்பதுகருத்து. ஐ ஆம் மீன் எனப்பிரித்து அழகாகிய மீன் எனினும்பொருந்தும்.

முத்திருளப்பனென்னும் பிரபுவின்மீது அவன்செய்த சிவாலயத்திருப் பணியைக்குறித்துப் புகழ்ந்து பாடியது.

5. பருப்பதங்க ளொவ்வொருதூண் பாவுக்கல்வளையாத பாரமேரு, சுரிப்படங்காப்போதிகைநீ செய்தபணிவிடையையென்ன சொல்வே னையா, தருப்பொலியுங்கரதலமுத் திருளப்பசாமிநின்றாய்பாலுன்னை க், கருப்பணிமுன் றிருப்பணிக்கென் றுருப்பணினான் மருப்பொலியு ங் கமலத்தோனே.

இ - ள். ஒவ்வொரு தூண் - ஒவ்வொரு தூணும், பருப்பதங்கள் - மலை யை நிகர்க்கும், பாவுக்கல் - ஒவ்வொரு பாவுகல்லும், வளையாத - வணங்காத, பாரமேரு - பளுவாகிய மேருமலையை நிகர்க்கும் போதிகை ஒவ்வொருகு றுந்தறியும், சுரிப்பு அடங்கா - சொல்வதற்குச் சுருங்கி யடங்காதனவாகும், நீசெய்த பணிவிடையை - நீ செய்த திருப்பணியை, என்னசொல்வேன்-என் னென்று புகழ்ந்து உரைப்பேன், ஐயா - ஐயனே, தரு - கற்பகத்தருவின் தன் மை, பொலியும் - விளங்குகின்ற, முத்திருளப்பசாமி - முத்திருளப்பதுரையே, நின் தாய்பால் - உன் தாயினிடத்து, உன்னை கருபண்ணி - உன்னைக் கருத் தரிக்கப்பண்ணி, முன் - முன்னமே, திருப்பணிக்கு என்று - திருப்பணிக்குரி யனுகுக வென்றே, உரு பண்ணினான் - உருவமாக்கினான், (யாவனெனின்) மரு பொலியும் - மண மிகுந்த, கமலத்தோன் - தாமரைமலரை யிடமாகவுடைய பிர மன், எ - று.

சிவாலயத் திருப்பணியின் பொருட்டே உன்னைப் பிரமன் படைத்தான் என்பது கருத்து.

இராமநாதபுரம் முத்துராமலிங்கதுரைமீது நிந்தாஸ்துதியாகப் பாடியது.

6. சேதுபதிகாத்தமுத்துராமலிங்கதுரைராசசிங்கமந்திரி மாதுபதிமுத்திருளப்பன்கொடியவரிவேங்கைவளராதிக்கம் கோதுறுபாமரக்காடுகருணீகர்மும்மதக்கொல்யானைமற்றோர் மோதுபெரும்புலிக்காடுகல்விமான்களுந்திரிந்தான்மோசந்தானே.

இ - ள். சேதுபதிகாந்த-சேதுபதிவளர்த்த, முத்துராமலிங்கதுரை - மு த்துராமலிங்கதுரை, ராஜசிங்கம்-ராஜசிங்கமாவன், மந்திரி-(அவனுக்கு)மந்திரி யாகிய, முத்திருளப்பன் - முத்திருளப்பன், கொடிய - கொடுமை யாகிய, வரி வேங்கை - கோடுகளையுடைய வேங்கைப்புலியாவன், வளர்-விருத்தியடைகின் ற, ஆதிக்கம்-உயர்வாகிய அரசாட்சி, கோது உறு-குற்றமிகுந்த, பாமரக்காடு-து ன்மார்க்கர்களுடைய காடாகும், கருணீகர் - கணக்கர், மும்மதம்-மும்மதங்களை யுடைய, கொல்யானை - கொலைத்தொழி லமைந்த யானைகளுக்கு நிகராவர்,

மற்றோர்-மற்றையோர், மோது - பாய்கின்ற, பெரும்புலிகாடு - பெரிய புலிகள் வாழ்கின்ற காட்டுக்கு நிகராவர், (இவற்றினிடையே) கல்விமான்களும் திரிந்தால் - கல்வியாகிய மான்களும்உலாவினால், மோசம்தான்-(அது) பிழையேயாகும், எ - று.

கல்விமான்கள் - வித்துவான்கள், முத்துராமலிங்கதுரைமுத்திருளப்பன் முதலியோராகிய ராஜசிங்கம் வேங்கைப்புலி முதலியவைகளுக் கிடையே வித்துவான்களாகிய மான்கள்சஞ்சரிப்பது அபாயத்துக் கேதுவாகும் என்பது கருத்து.

திருக்குடந்தைச் சிவபெருமானைப்புகழ்ந்துபாடியது.

7. ஞாலத்தெவரும்புகழ்குடந்தாபுரிநாதனெங்கோன்
காலப்புயல்வண்ணன்கண்மலர்சாத்தக்கருத்திலுன்னிச்
சீலத்தவனம்மடியானென்றியார்க்குந்தெரியவிட்ட
சூலக்குறியல்லவோநாமமாதெனச்சொல்லுவதே.

இ - ள். ஞாலத்து - உலகத்திலுள்ள, எவரும் - யாவரும், புகழ் - புகழ்கின்ற, குடந்தாபுரிநாதன் - திருக்குடந்தைக்கிறைவனாகிய, எம்கோன் - எமது சிவபெருமான், காலப்புயல் வண்ணன் - கார்கால மேகம்போன்ற நிறத்தையுடையவனாகிய திருமால்? கண்மலர் சாத்த - தன் கண்ணாகிய தாமரைப்பூவைச் சாத்துதலும், கருத்தில் உன்னி - திருவுளத்தில் எண்ணி, சீலத்தவன் - நல்லொழுக்கமுள்ளவனாகிய இவன், நம் அடியான் என்று - நம்மடியவனென்று, யார்க்கும் தெரிய - எல்லார்க்கும் தெரியும்படி, இட்ட - வைத்த, சூலக்குறி அல்லவோ - சூலத்தின் அடையாளமல்லவா, நாமம் - நாமமானது, யாது என சொல்லுவது - வேறு யாதென்று சொல்லுவது, எ - று.

திருமால் கண்மலர் சாத்த மகிழ்ந்து தன் சூலக்குறியை அடையாளமாக அவனது நெற்றியிலிட்டதன்றோ நாமமென்று சொல்லப்படுவது என்பது கருத்து, கண்மலர் என்பதைக் கள்மலர் எனப்பிரித்துத் தேனையுடைய மலர் எனினும் பொருந்தும்.

திருக்கழுக்குன்றத்தைப் புகழ்ந்துபாடியது

8. வியந்தநிசாசரனுமென்றுசந்த்ரனும்வெஞ்சனிக்குப்
பயந்தவனுமென்றுபானுவும்வந்துபணியச்செம்பொன்
நயந்தருசெல்வக்கழுகாசலமதுநண்புவைத்துச்
செயந்தந்ததான்மதியாதவரென்னத்திரிந்தனரே.

இ - ள். வியந்த - அதிசயித்த, நிசாசரன் ஆம் என்று - இரவிற்சஞ்சரிப்பவனென்று, சந்த்ரனும் - சந்திரனும், வெம் - கொடிய, சனிக்கு-சனியென்னும் கிரகத்துக்கு, பயந்தவன் ஆம் என்று - அஞ்சினவனுமென்று, பானுவும்-சூரியனும், வந்து பணிய - வந்து வணங்க, செம்பொன் - செம்பொன்னினது,

நயம் தரு - நன்மையைத்தந்த, செல்வம்-செல்வ மிகுதியுள்ள, கழுகாசலமது-கழுக்குன்றமானது, நண்புவைத்து - பக்ஷம் வைத்து, சயம் தந்ததால் - வெற்றியைக் கொடுத்ததனால், மதி ஆதவர் என்ன - சந்திரசூரியரென்று சொல்லும்படி, திரிந்தனர் - திரிந்தார்கள், எ - று.

பயந்தவன் - பெற்றவன் (தந்தை) என்றொருபொருள். கழுகாசலம் சந்திர சூரியர் வந்துவணங்க அவர்களுக்கு வேண்டியவற்றை அருள்செய்தமையால் அவர்கள் ஒருவரையும் மதிக்காமல் திரிகின்றார்களென்பது கருத்து.

திருத்தில்லைக் கற்பகவிநாயகரைப் புகழ்ந்துபாடியது.

9. பொருகோட்டுவாரிநிலத்திற் குணங்கெட்டபூரியரைத்
தருகோட்டுக்கொம்பென் றுரைத்தென்பயன்வருந்தண்டமிழீர்
வருகோட்டுத்திங்கண்முடிக்கூத்தர்தில்லைவனத்தில்வளர்
ஒருகோட்டுக்கற்பகமெல்லாந்தருந்தன்னையுற்றவர்க்கே.

இ - ள். கோட்டு - கரையில், பொரு - அலைகள் மோதுகின்ற, வாரி-கடல்சூழ்ந்த, நிலத்தில் - மண்ணுலகத்தில், குணங்கெட்ட - குணத்தாற்கெட்ட, பூரியரை - கீழ்மக்களை, கோடு கொம்பு தரு என்று - வளைவாகிய கிளைகளையுடைய கற்பகமரமென்று, உரைத்து - புகழ்ந்துசொல்லி, என்பயன் வரும்-என்னபயன் உண்டாகும், வண் தமிழீர் - வளமாகிய தமிழ்ப்புலவர்களே, வருகோட்டு திங்கள் - உண்டாகிய வளைவையுடைய சந்திரனை, முடி - சிரசிலணிந்த, கூத்தர் - நடராசரது, தில்லைவனத்தில் வளர் - தில்லைவனத்தில் வளராநின்ற, ஒருகோட்டு - ஒரு கிளையுள்ள, கற்பகம் - கற்பகமானது, தன்னை உற்றவர்க்கு- தன்னை யடைந்தவர்களுக்கு, எல்லாம் தரும் - (அவர் விரும்பிய) எல்லாப்பொருள்களையும் கொடுக்கும், எ - று.

தில்லைவனம் - தில்லை மரக்காடு, ஒருகோடு - ஒற்றைக் கொம்பு, கற்பகம்-கற்பகமரம், கற்பகவிநாயகர். தமிழ்ப்பாவலர்களே-அற்பரைப்பாடி யென்னபயன், தில்லைவனத்துக் கற்பகவிநாயகரையடைந்தால் நீங்கள் விரும்புவன யாவும் கிடைக்கப்பெறுவீர்கள் என்பது கருத்து.

திருமாலிருஞ் சோலைமலை அழகர்மீது பாடியது.

துறை - வெறிவிலக்கல்.

10. வண்டுறைசோலைமலைப்பரிகாரிவந்தாலிவளுக்
கண்டுபடாதவிக்காமச்சுரம்விடுமாதலினால்
பண்டுபழகினர்போலிந்தவேலையிற்பாயசத்தைக்
கொண்டுவந்தீரிதிற்றோஷம்பிறந்திடுங்கோதையரே.

இ - ள். வண்டு உறை - வண்டுகள் வாழ்கின்ற, சோலை மலை - சோலைமலையிலுள்ள, பரிகாரி வந்தால் - வைத்தியன் வந்தால், இவளுக்கு - இவளுக்குண்டாயிருக்கிற, அண்டுபடாத - அணுகப்படாத, இ - இந்த, காமச்சுரம் -

காமமாகிய சுரம், விடும் - நீங்கும், ஆதலினால் - ஆகலால், பண்டு - முன்னமே பழகினர்போல் - பழகினவர்போல, இந்த வேளையில் - இந்தச்சமயத்தில், பாய சத்தை - பாயசத்தை, கொண்டுவந்தீர் - கொண்டுவந்தீர்கள், இதின்-இதனால், தோஷம் பிறந்திடும் - தோஷமுண்டாகும், கோதையரே - பெண்களே, எ-று.

பாயசம் என்பதனை பாய் அசம் எனப் பிரித்து பாய்கின்ற ஆடு என வெறி விலக்குக் கேற்பப்பொருள் கொள்க. தோஷம் - பாவம்.

மதுரைச்சொக்கநாதர்மீது பாடியது.

துறை - செவிலியிரங்கல்.

11. படைத்தாமவேற்கண்ணிகண்ணீர்ப்ரவாகப்பரவைபொங்கி
உடைத்தாலடைக்கற்குபாயமுண்டோநறையுற்றிதழித்
தொடைத்தார்மவுலியிற்சும்மாடுகட்டிச்சுமந்துசுமந்
தடைத்தாலடைபடச்சொக்கேயிதுவையையாறல்லவே.

இ - ள். சாமம் வேல்படை - அழியுள்ள வேலாயசம் போன்ற, கண்ணி-கண்களையுடையாளது, கண்ணீர் ப்ரவாகம் - கண்ணீர் வெள்ளமாகிய, பரவை-கடலானது, பொங்கி - மேலெழுந்து, உடைத்தால் - (சிறையாகிய கரையை) உடைத்தால், அடைக்கற்கு - தடுத்தற்கு, உபாயம் உண்டோ - உபாயமுள தோ, நறை - தேனே, ஊற்று - உமிழ்கின்ற, இதழி - கொன்றை மலர்களால், தொடை - தொடுத்த வரைந்த, தார் - மாலையையணிந்த, மவுலியில் - சடாமகுடத்தின்மீது, சும்மாடு கட்டி சுமந்து சுமந்து - சும்மாடு கோலிச் சுமந்து சுமந்து, அடைத்தால் - தடுத்தால், அடைபட - தடைபட, சொக்கே - சொக்கலிங்கரே, இது வையையாறு அல்ல - இது வையைநதி யன்று, எ - று.

சொக்கநாதர், நீர் முற்காலத்தில் வையைப்பெருக்கை யடைத்தாற்போல மெது பெண்ணின் காமப்பெருக்கை யடைக்கவொண்ணு தென்பது கருத்து.

மானிடரைநோக்கி சொக்கநாதரது பெருமையை யறியீரெனப் பாடியது.

12. ஏழேழுசங்கத்துடனிருந்தானென்றியம்புகின்றீர்
பாழேழ்மையுற்றிடுமானிடரேசொக்கர்பண்பறியீர்
ஆழேழுலகத்துக்கப்பாலிருந்தவடிகளும்பர்
வாழேழுலகத்துக்கப்பாலிருந்தமணிமுடியே.

இ - ள். பாழ் ஏழ்மை உற்றிடும் மானிடரே - பாழாகிய அறிவின்மையைப்பொருந்திய மனிதரே, சொக்கர் - சொக்கநாதரது, பண்பு - தன்மையை, அறியீர் - அறியீராகி, ஏழேழு சங்கத்துடன் - நாற்பத்தொன்பதின்மராகிய சங்கத்தாரோடு கூடி, இருந்தான் என்று - இருந்தாரென்று, இயம்புகின்றீர்-சொல்லுகின்றீர், (அவரது) அடிகள் - திருவடிகள், ஆழ் ஏழுலகத்துக்கு-ஆழ்ந்த ஏழுலகங்களுக்கும், அப்பால் இருந்த - அப்புறத்தேயிருந்தன, மணி முடி - அழகிய

சடாமகுடம், உம்பர்வாழ் ஏழுலகத்துக்கு - தேவர்கள் வாழ்கின்ற ஏழுலகங்களுக்கும், அப்பால் இருந்த - அப்புறத்தே யிருந்தது, எ - று.

ஆழேழுலகம் என்றது கீழேழுலகங்களை. உம்பர் வாழேழுலகம் என்றது மேலேழுலகங்களை. அடி முடிகள் இவ்வாறிருந்தது பிரம விட்டுணுக்கள் முடியடிகளைக் காணப்புக்க காலத்தில்.

## தமக்கு மோதிரமிட்ட செல்லூரானைப்புகழ்ந்து பாடியது.

13. காவொன்றுங்கைத்தலத்தண்ணல்செல்லூரன்கனிந்துநம்மை
வாவென்றழைத்திட்டமோதிரமேவண்மையானதமிழ்ப்
பாவென்றுஞ்சற்றுமறியாதபுல்லர்தம்பக்கலிற்போய்த்
தாவென்றுகையெடுத்தேற்காமலிட்டதடையிதுவே.

இ - ள். கா ஒன்றும் - பஞ்ச தருவின் கொடைத் தன்மையமைந்த, கைத்தலத்து - கைத்தலத்தையுடைய, அண்ணல் - பெரியோனாகிய, செல்லூரன்- செல்லூரான், கனிந்து - மனங்கனிந்து, நம்மை வாவென்று அழைத்து - நம்மைவாவென்றழைத்து, இட்ட - விரலில் பூட்டிய, - இது-இது, மோதிரமே- மோதிரமா, (அன்று, மற்றென்னெனில்) வண்மையான-வளமாகிய, தமிழ்ப்பா- தமிழ்ப்பாடல்களை, என்றும் - எப்பொழுதும், சற்றும் அறியாத - சற்றுமுணராத, புல்லர் தம் பக்கலில்போய் - அற்பரிடத்திற்சென்று, தா வென்று - தரவேண்டுமென்று, கையெடுத்து ஏற்காமல் - கையேந்தி இரக்காமல், இட்ட தடை - செய்த தடையேயாகும், எ- று.

செல்லூரான் நமக்கு மோதிரம்பூட்டியது இந்தக் கையானது இனியொருவரிடத் தேற்காதிருத்தற் கேயாமென்பது கருத்து.

## சீதக்காதியைச் சிறப்பித்துப்பாடியது.

14. தடக்கும்பகிம்புரிக்கொம்பாசலப்பெருந்தந்திபட
நடக்குந்துரங்கத்துரைசீதக்காதிநன்னாட்டினை
வடக்குங்குமக்கொங்கைமின்னேயவன்றெருவாயிலிலே
கிடக்குங்கவியும்பரராஜரத்நகிரீடமுமே.

இ - ள் தடம் - பெரிய, கும்பம் - மத்தகத்தையும், கிம்புரி கொம்பு-பூணணிந்த கொம்புகளையுமுடைய, அசலம் - மலைபோன்ற, பெருந்தந்திபட-பெரிய யானைகள் இறக்க, நடக்கும் - நடக்கின்ற, துரங்கம் - குதிரைகளையுடைய, துரை - பிரபுவாகிய, சீதக்காதி - சீதக்காதியின், நல் நாட்டில் - நல்ல நாட்டின் கண், நலம் - அழகாகிய, வடம் - முத்துவடத்தையும், குங்குமம்-குங்குமக் குழம்பையுமணிந்த, கொங்கை - ஸ்தநங்களையுடைய, மின்னே - மின்கொடி போல்வாளே, அவன்-அவனது, தெருவாயிலிலே - தெருவாசலில், கவியும் - பாடல்களும், பரராஜர்-வேற்றுத்தேயத் தரசருடைய, ரத்ந கிரீடமும்-மணி முடிகளும், கிடக்கும்-கிடக்கும், எ-று.

சீதக்காதியைப் புகழ்ந்து பாடாத புலவர்களும் அவனுக்குத்தோற்று வணங்காத அரசர்களும் இல்லை யென்பது கருத்து.

சீதக்காதி யிறந்ததற்கு இரங்கிப்பாடியது.

15. பூமாதிருந்தென் புவிமாதிருந்தென் பூதலத்தில்
நாமாதிருந்தென்ன நாமிருந்தென்ன நன்னாவலர்க்குக்
கோமானழகமர்மால்சீதக்காதி கொடைமிகுந்த
சீமானிறந்திட்டபோதே புலமையுஞ்செத்ததுவே.

இ - ள். பூமாது இருந்து என் - திருமகள் இருந்தாலென்ன பயன், புவி மாது இருந்து என்ன - நிலமகள் இருந்தாலென்ன பயன், பூதலத்தில் - உலகத்தில், நாமாது இருந்து என்ன - கலைமகள் இருந்தாலென்னபயன், நாம் இருந்து என்ன - நாமிருந்தால் என்னபயன், நல் நாவலர்க்கு - நல்ல வித்துவான்களுக்கு, கோமான் - தலைவன், அழகு அமர் - அழகு அமைந்த, மால் - பெருமையுள்ள, சீதக்காதி - சீதக்காதி, கொடைமிகுந்த - ஈகை மிகுந்த, சீமான் - பெருஞ்செல்வன், (அவன்) இறந்திட்டபோதே - இறந்தபொழுதே, புலமையும் செத்தது - புலமையும் இறந்தது, எ - று.

சீதக்காதி யிறந்தபோதே புலமையும் இறந்தது என்பது கருத்து.

நற்றாய் சோதிடரை நிந்தித்துப் பாடியது.

16. மாகத்தத்தும்புகழான்பகைவேந்தர்மகுடம்பொடி
ஆகத்தத்தும்பரியான்சீதக்காதியணிமலரின்
ஏகத்தத்தும்பியிசைபாடுமார்பனிலென்மகட்கோர்
மோகத்தத்துண்டென்றுசொன்னாரிலைமுன்மொழிந்தவரே.

இ - ள். மாகம் தத்தும் புகழான் - விண்ணுலகத்திலும் தாவிச் செல்லுகின்ற புகழை யுடையவன், பகைவேந்தர் மகுடம் - பகை யரசருடைய முடிகள், பொடியாக - பொடிபட, தத்தும் - தாவி நடக்கின்ற, பரியான் - குதிரைகளை யுடையவன், சீதக்காதி - சீதக்காதியாகிய, அணிமலரினே - அணிந்த மலர் மாலையின்கண்ணே, தத்து - ஒலிக்கின்ற, அ - அந்த, தும்பி இசைபாடும் - வண்டுகள் இசைபாடுகின்ற, மார்பனில் - மார்பை யுடையவனால், என் மகட்கு - என் புதல்விக்கு, ஓர் - ஒரு, மோகம் தத்து - மோகமாகிய கண்டம், உண்டு என்று - உளதென்று, சொன்னார் இல்லை - சொன்னார்களில்லை, முன் மொழிந்தவர் - முன்னே சாதகஞ் சொன்ன சோதிடர்கள், எ - று.

என்மகள் சீதக்காதியின் மோகத்தா லிறக்கத்தகுந்த ஒரு கண்டமுண்டென்று சோதிடர் சொன்னாரில்லையே என்பது கருத்து.

உலோபரிடத்திற்சென்று வருந்திச் சீதக்காதியின் கொடையை நினைந்திரங்கிப் பாடியது.

17. மைப்போதகமும்வளநாடுஞ்செந்தமிழ்வாணர்க்கருள்
கைப்போதகமனையான்சீதக்காதியைக்காத்திருந்த

அப்போதறிந்திலமிப்பாழ்ம்பணத்தினருமையெல்லாம்
இப்போதறிந்தனமீயாதலோபரிடத்திற்சென்றே.

இ - ள். மை - கருமையாகிய, போதகமும் - யானைகளையும், வளநாடும்-வளமாகிய ஊர்களையும், செந்தமிழ் வாணர்க்கு-செந்தமிழ்ப் புலவருக்கு, அருள்-கிருபை செய்கிற, கை - துதிக்கையையுடைய, போதகம் அனையான் - யானையை நிகர்த்தவனாகிய, சீதக்காதியை - சீதக்காதி துரையை, காத்திருந்த - காத்துக்கொண்டிருந்த, அப்போது - அந்தக்காலத்தில், இ - இந்த, பாழ் - பாழாகிய, பணத்தின் அருமை யெல்லாம்-பணத்தருமை முழுதும், அறிந்திலம் - அறிந்தோமில்லை, இப்போது-இப்பொழுது, ஈயாதலோபர் இடத்தில் சென்று-கொடுக்காத லோபிகளிடத்திற்போய், அறிந்தனம்-அறிந்து கொண்டோம், எ - று.

### திருப்பரங்குன்ற முருகர்மீது பாடியது.

செவிலி கூற்று.

18. கிட்டாதுபெண்குடிமார்க்கங்கணவன்கிழவனல்ல
பட்டாணிச்சேவகனல்லும்பகலுமப்பாற்பிசக
ஒட்டான்பொய்யல்லமலைமேலிருக்குமுமக்குமிவள்
எட்டாதகொம்பிற்கனிகாண்பரங்குன்றிருப்பவனே.

இ - ள். பரங்குன்று இருப்பவனே - திருப்பரங் குன்றத்தில் இருப்பவனே, பெண்கிட்டாது - பெண் கிடையாது, குடிமார்க்கம் - குடும்பமார்க்கம், கணவன் கிழவன் அல்ல-நாயகன் முதியோனல்ல, பட்டாணிச்சேவகன் - பட்டாணிவீரன், அல்லும் பகலும்-இரவும் பகலும், அப்பால் பிசக ஒட்டான்-அப்புறம் நழுவவொட்டான், பொய் அல்ல - இது பொய் அன்று, மலைமேல் இருக்கும் உமக்கும் - மலைமீதிருக்கிற உமக்கும், இவள்-இந்தப் பெண்ணானவள், எட்டாத கொம்பில் கனி - எட்டாதகிளையிலுள்ள கனியை நிகர்ப்பாள், எ - று.

### ஒருபெண்ணின் கண்ணழகை வியந்து பாடியது.

துறை - கண்ணயந்துரைத்தல்.

19. மஞ்சுமஞ்சுங்கைப்பரராஜசேகரமன்னன்வெற்பில்
பஞ்சுமஞ்சும்பதப்பாவைநல்லாய்படைவேள்பகழி
அஞ்சுமஞ்சுங்கயலஞ்சுமஞ்சுங்கடலஞ்சுமஞ்சும்
நஞ்சுமஞ்சும்வெற்றிவேலோனுணுநயனங்களே.

இ - ள். மஞ்சும் - மேகமும், அஞ்சும் - அஞ்சும்படியான, கை-கொடைக்கையினையுடைய, பரராஜ சேகர மன்னன் வெற்பில் - பரராஜ சேகரன் என்னும் அரசனது மலையில் உள்ள, பஞ்சும் - செம்பஞ்சும், அஞ்சும் - அஞ்சும்படியான, பதம் - பாதங்களையுடைய, பாவை நல்லாய் - பிரதிமைபோன்ற மாதே, படை - சேனையையுடைய, வேள் - மன்மதனது, பகழி அஞ்சும் அஞ்சும் - பாணங்களும் அஞ்சும் அஞ்சும், கயல் அஞ்சும் அஞ்சும்-சேல்மீன்களும் அஞ்சும் அஞ்சும், கடல் அஞ்சும் அஞ்சும் - கடலும் அஞ்சும் அஞ்சும், நஞ்சும் அஞ்சு

ம் - நஞ்சமும் அஞ்சும், உனது நயனங்கள்-உன் கண்கள், வெற்றி வேலோ-வெற்றி வேல்களோ, எ - று.

### பிரம்பை ஆநந்த ரங்கனைப்புகழ்ந்து பாடியது.

20. பாரார்சொல்லாரார்பறவைக்குலங்கட்டம்மில்
சீராருங்கிள்ளைமுதற்செப்பலால்---ஓரா
இரம்பையானந்தரங்கனின்பரங்கனன்பன்
பிரம்பையானந்தரங்கன்பேர்.

இ - ள். ஓர் ஆயிரம் பையான் - ஓராயிரம் படங்களை யுடையவனாகிய ஆதிசேஷனுக்கு, அந்தரங்கன் - பிரியமுள்ளவன், இன்பரங்கன் அன்பன்-இன்பத்தைத் தருகிற ரங்கநாதனுக்கு அன்பன், பிரம்பை - பிரம்பூரில் வாழ்கின்ற, ஆனந்தரங்கன் - ஆனந்தரங்கனது, பேர் - பெயரை, பறவைக் குலங்கள் தம்மில் - பறவைக் கூட்டத்தில், சீர் ஆரும் - சிறப்புமிகுந்த, கிள்ளை முதல் - கிளிமுதலியவை, செப்பலால் - சொல்லுதலால், பாரார் - உலகத்தாருள், சொல்லார் ஆர் - சொல்லாதவர் யாவர், எ - று.

ஓராயிரம் பையான் அந்தரங்கன் என்பதற்கு கல்வியிற்சிறந்தவன் என்பது கருத்து.

### திருத்தணிகைப் பதியைப் புகழ்ந்து பாடியது,

21. பங்கயமுமேரிகளும்பாவையர் கையுமணியும்
தங்கவளைசூழுந்தணிகையே---திங்களாநுதற்
செந்திலகத்தாள்புல்லீதன்செல்வன்கடற்கரைசேர்
செந்திலகத்தாள்புனிதன்சேர்பு.

இ - ள். திங்கள் - அர்த்த சந்திரன்போன்ற, நுதல் - நெற்றியில், செந்திலகத்தாள் - செவந்ததிலகத்தை யணிந்தவளாகிய உமாதேவியை, புல் - தழுவிய, வீதன் - வீதனாகிய சிவபெருமானுக்கு, செல்வன் - புதல்வனும், கடல் கரைசேர் - கடற்கரையிற் பொருந்திய, செந்தில் - திருச்செந்திலில் எழுந்தருளி, ஆள் - எல்லாவுயிர்களையும் ஆண்டருளுகின்ற, புனிதன் - பரிசுத்தனுமாகிய முருகக்கடவுளது, சேர்பு-சேரிடம், பங்கயமும்-தாமரைகளும், ஏரிகளும்-ஏரிகளும், பாவையர் கையும் - பாவைபோலும் உருவமுள்ள மாதர்களுடைய கைகளும், மணியும்-ரத்நங்களும், தங்கவளைசூழும்-தங்கவளை சூழ்கின்ற, தணிகையே - திருத்தணிகைப் பதியே. எ-று.

வீத்தன் என்பது வீதன் எனத் தகரவொற்றுக் குறைந்து நின்றது. பங்கயம் தங்கவளை சூழ்தலாவது-தங்கும்படி சேறுபொதிந்திருத்தல்; ஏரிகள் தங்கவளை சூழ்தலாவது-தங்கும்படி சங்குகள் சூழ்ந்திருத்தல், அன்றி வள்ளைக்கொடிகள் சூழ்ந்திருத்தல்; பாவையர்கை தங்கவளை சூழ்தலாவது - பொற்றொடியில் பதிக்கப்பட்டிருத்தல்.

### பாண்டியனைப் புகழ்ந்து பாடியது.

22. கோலெடுத்துக்கோத்துரத்துங்கோப்பாண்டிமன்னன்வடி
வேலெடுத்துக்கோத்துரத்தல்விட்டிலனே—சால்படுத்த

பூபாலனானாலும்போமோபுராதனத்திற்
கோபாலனானகுணம்.

**இ - ள்.** கோல் எடுத்து - செங்கோலைக் கைக்கொண்டு, கோதுரத்தும் - பகையரசரை யோட்டுகின்ற, கோபாண்டி மன்னன் - அழகாகிய பாண்டியராஜன், வடிவேல் எடுத்து - வடித்த வேலாயுதத்தைத் தாங்கியும், கோதுரத்தல் விட்டிலனே - கோக்களைத் துரத்துந் தொழிலை விட்டானில்லையே, சால்பு அடுத்த - பெருமை பொருந்திய, பூபாலன் ஆனாலும் - பூபதி யாயினும், புராதனத்தில் - முற்காலத்தில், கோபாலன் ஆனகுணம் - கோபாலனாயிருந்த குணமானது, போமோ - நீங்குமோ, எ - று.

கோல் அம்பு எனினுமாம். கோத்துரத்தல் - பசுக்களைத்துரத்தல் எனவும், கோல் - மாட்டாங்கோல் எனவும் வேறுமொரு பொருளைக் கோபாலனுக் கேற்க உரைத்துக்கொள்க. கோபாலன் - பசுக்களைக்காப்பவன், (இடையன்) கிருஷ்ணன்.

புதுவையம்பதி வேங்கடராயன்மீது பாடியது.

துறை - பூவைவிடுதூது.

23. விதுவையம்பதி யோசையைப்பேரிகவிகையெனும்மதன் வில்லி
ல் வண்டேற்றினான், மதுவையம்பதி வேகமோடெய்துகு வலய மீது
கைவைக்கவென் னுள்ளநோ, வையம்பதி னாலும் புகழ்பெறுங்
குமுணன் கன்னன் கொடைகளை மாற்றிய, புதுவையம்பதி வேங்கட
ராயன்பாற் புகலிவ்வேளையி லென்றன்கைப் பூவையே.

**இ - ள்.** என்றன்கை - என்கையிலுள்ள, பூவையே - நாகணவாய்ப்புள்ளே, விதுவை - பூர்ண சந்திரனையும், அம்பு அதி ஓசையை - கடலினது மிக்க ஒலியையும், கவிகை பேரி என்னும் - (முறையே) குடையும் முரசுமெனக் கொண்ட, மதன் - மன்மதன், வில்லில் - தனது கருப்பு வில்லில், வண்டு ஏற்றினான் - வண்டாகிய நாணையேற்றி, மது - தேனொடுகூடிய, ஐ - கூர்மையாகிய, அம்பு - புஷ்பபாணங்களை, அதிவேகமோடு எய்து - மிகுவேகத்துடன் எய்து, குவலயம் மீது - குவளைமலரின்மேல், கைவைக்க - கை வைத்தலால், என் உள்ளம் நோகுது - என் மனம் வருந்தாநின்றது, (ஆதலால் இச்செய்தியை) வையம் பதினாலும் புகழ்பெறும் - பதினான்குலோகங்களினும் புகழ்பெற்ற, குமுணன் - குமுணன், கன்னன் - கர்ணன், (இவர்களுடைய) கொடைகளை - ஈகைகளை, மாற்றிய - நீக்கிய, புதுவையம்பதி - புதுவையம்பதியில் வாழ்கின்ற, வேங்கட ராயன்பால் - வேங்கடராயனிடத்திற்சென்று, இவ்வேளை புகல் - இந்தச்சமயத்திற் சொல்வாய், எ - று.

குமுணன் - முதலெழு வள்ளல்களி லொருவன், குவளை மலர்க்கணையிறந்து படுதற்கேதுவாதலால் 'குவலயமீது கைவைக்கவென்னுள்ளநோகுது" என்றாள். "நீலக்கணையிற் கைவைத்தானினிச் சற்றுநேரத்திற் பிற்காலற்கிரை யிடு மென்னாவியை" என்றார் பிறரும்.



## சுப்பிரமணியப்புலவர் பாடல்கள்.

### சிவசுப்பிரமணியப் பிரபுவின்மேல் பாடியது.

துறை - நற்றாயிரங்கல்.

1. வாரிட்டுவிம்மிப் புடைத்திறுகி யிளகிமணி மார்பிட மெலாங்கவ
ர்ந்து, வட்டமிட் டடியிட்டு நாளுக்கு நாண்மேல் வளர்ந்துபூரித்துமு
த்து, மாலையிட் டிறுமாந்து பட்டவர்த்தனயானை மத்தகத்தோ டெதி
ர்த்து, வாதிட்டு மல்லிகைப் பூச்செண்டினைத்தினம் வாட்டப்படுத்தி
வரையைப், போரிட்டு மைந்தர்கள் மனஞ்சூறையிட்டுமேற் புளகித்
து வச்ரரத்நப், புதுச்செப்பினைத் தோழமைக்கொண்டு பொன்னினை
ப் பொடியாக வாரிமீதிற், பொட்டிட்ட தென்னவே தேமற்படர்ந்து
செம்பொற்சரிகை வேலையிட்டுப், புனைதரு ரவிக்கையையிறுக்கிக்கிழி
த்துப் புறப்பட்டு வாசனைப்பூந், தாரிட்டு வரவரப் பளபளப்பாகியுயர்
தங்கக்கிணத்தை யொத்துச், சந்தனம் புழுகு கஸ்தூரி கர்ப்பூரஞ்
சவ்வாது குங்குமமணிந்து, சந்த்ரகாவிச் சேலை வல்லைவாட்டுக்குட் ட
தார்பியண்ணாந் திடையினிக், காங்கா தெனக்கனத் தோங்கிமன்மத
னுஞ் சலாமிட்டு நிற்கவுந்தான், சீரிட்டு நின்றுதக் கலைவணங்காமற் றி
ரண்டபூண் முலைகளுன்றன், திருமார்பி லணையவோ கூசிமேலே தவ
ஞ்செய்கின்ற தொக்குமென்னுஞ், சிறுசோம ரேகையாள் வந்தாள்
பராக்கென்று சேவித்து நிற்கிறாள் பார், திகழ்வடிக நாதநுரை மெச்
சுப்பர தானி சிவசுப்ரமணியராசனே.

**இ - ள்.** வார் இட்டு - கச்சணியப் பெற்று, விம்மி - பருத்து, புடைத்து-புடைகொண்டு, இறுகி - வன்மையாகி, இளகி - குழைந்து, மணிமார்பு இடம் எல்லாம் கவர்ந்து - அழகிய மார்பினிட முழுமையும் கவர்ந்துகொண்டு, வட்டமிட்டு - வட்டவடிவாகி, அடியிட்டு - அடிகோலி, நாளுக்குநாள் மேல்வளர்ந்து-நாளுக்குநாள் அபிவிர்த்தியாகி, பூரித்து - நிரம்பி, முத்துமாலையிட்டு - முத்துவடமணியப் பெற்று, இறுமாந்து - நிமிர்ந்து, பட்டவர்த்தந யானை மத்தகத்தோடு எதிர்த்து வாதிட்டு - பட்டவர்த்தந யானையின் மத்தகத்தோடெதிர்த்துச் சண்டைசெய்து, மல்லிகைப்பூ செண்டினை - மல்லிகை மலர்ச்செண்டை, தினம் வாட்டப்படுத்தி - நாடோறும் வாட்டமடைவித்து, வரையை போரிட்டு, மலைகளோடு போர்செய்து, மைந்தர்கள் மனம் - இளைஞருடைய மனங்களை, சூறையிட்டு - கொள்ளையிட்டு, மேல் புளகித்து - மேல் புளகங்கொண்டு, வச்ரரத்நம் - வயிரத்தாலும் மற்றை மணிகளாலும் செய்யப்பட்ட, புதுசெப்பினை-நூதநமாகிய செப்புகளை, தோழமை கொண்டு - நட்புக்கொண்டு, பொன்

னிலை-பொன்னை, பொடியாக அராவி-பொடியாக ராவி, மீதில்-மேல், போட்டிட்டது என்ன - தூவிவிட்டாற் போல, தேமல் படர்ந்து - தேமல்பரவி, செம்பொன் சரிகை வேலையிட்டு - செம்பொற் சரிகை வேலையமைந்து, புனைதரு ரவிக்கையை - தரித்த ரவிக்கையை, இறுக்கிக்கிழித்து புறப்பட்டு - இறுக்கிக் கிழித்து வெளிப்பட்டு, வாசனை - மணமுள்ள, பூதார் இட்டு - பூமாலையையணிந்து, வரவர பளபளப்பு ஆகி - வரவரப் பளபளப்புடைத்தாகி, உயர் - உயர்ந்த, தங்கக்கிண்ணத்தை ஒத்து - தங்கக்கிண்ணத்தை நிகர்த்து, சந்தனம் புனுகு கஸ்தூரி கர்ப்பூரம் சவ்வாது குங்குமம் அணிந்து - சந்தன முதலியவற்றைப் பூசப்பெற்று, சந்த்ர காவிச் சேலை வல்ல வாட்டுக்குள் - சந்த்ரகாவிப் புடவை மாராப்புக்குள்ளே, ததும்பி - நிறைந்து, அண்ணாந்து - மேல்நோக்கி, இடை இனிதாங்காது - இடை இனிபொறுக்காது, என - என்று கண்டோர் சொல்லும்படி, கனத்து ஓங்கி - பருத்துயர்ந்து, மன்மதனும்சலாம் இட்டு நிற்கவும் - மன்மதனும் கும்பிட்டு நிற்கவும், சீர் இட்டு நின்று - சிறப்படைந்து நின்று, தம் தலை வணங்காமல் - தமது சிகரம் வளையாமல், திரண்ட - திரட்சியாகிய, பூண் - ஆபரணங்களணிந்த, முலைகள் - தனங்கள், உன்றன் திருமார்பில் அணைய - உனது அழகிய மார்பில் அணையப்பொருட்டு, ஓர் வனசிமேலே தவம் செய்கின்றது ஒக்கும் - ஒரு வனசிமுனையில் நின்று தவஞ்செய்வதை நிகர்க்கும், என்னும் - என்று சொல்லுதற்குரிய, சிறுரோம ரேகையாள் - சிறிய மயிரொழுங்கையுடையவளாகிய என்பெண், வந்தாள் - வந்து, பராக்கு என்று - பராக்குக்கூறி, சேவித்து நிற்கிறாள் - வணங்கி நிற்கின்றாள், பார் - (இவளை) நோக்குவாய், திகழ் - விளங்குகின்ற, வடகாரதுரை - வடகாரதுரையானவர், மெச்சும் - மெச்சுகின்ற, ப்ரதானி - ப்ரதானியாகிய, சிவசுப்ரமண்ணிய ராசனே - சிவசுப்ரமணிய ராஜனே, எ - று.

## நையாண்டிப் புலவர் பாடல்.



### திருவாரூர்ச் சிவபெருமானை வணங்குவோர்க்கு உண்டாகும் பயன் இன்னதெனக்கூறியது.

1. விற்கம்பத் தடியாலு மடியுண்டான் விண்ணவரை வேலைகொள்ளும், நற்கம்பத் தடியானுந் தூக்கவசையானூர்நாதன் கோயில், பொற்கம்பத் தடியினின்று வன்மீகத் தானையுன்னிப் போற்றினோர்க்குச், சொற்கம்பத் தடியப்பான் மோக்ஷம் பத்தடியாகத் தோற்றுந் தானே.

இ - ள். (அருச்சுனனது) வில் - வில்லாகிய, கம்பம் தடியாலும் - தூண் போன்ற தண்டினாலும், அடி உண்டான் - அடியுண்டவனும், விண்ணவரை வேலைகொள்ளும் - தேவரை வேலை கொள்ளுகின்ற, நல்கம்பத்து அடியானும் -

அழகிய பத்துத் தலைகளையுடைய அடியவனாகிய ராவணனும், தூக்க அசையா ன் - தூக்க அசையாதிருந்தவனும் ஆகிய, ஆரூர்நாதன் கோயில்-திருவாரூர்ச் சிவபெருமானது திருக்கோயிலில், பொன் ஸ்தம்பத்து அடியில்நின்று - பொற் றூணின் அடியினின்று, வன்மீகநாதனை - புற்றிடங்கொண்ட பிரானை, உன் னி - நினைத்து, போற்றினோர்க்கு - வணங்கினவர்களுக்கு, சொற்கம்பத்து அடி - சொர்க்கலோகம் பத்தடி தூரமாகவும், அப்பால் மோக்ஷம்பத்து அடியாக- அப்பால் மோக்ஷம் பத்தடி தூரமாகவும், தோற்றும் - காணப்படும், எ - று.

திருவாரூர் வன்மீகநாதனை வணங்குவோர்க்கு சொர்க்க மோக்ஷங்கள் சமீ பம் என்பது கருத்து.

**பள்ளிகொண்டான் என்னும் பிரபுவின் கொடைச் சிறப்பைப் புகழ்ந்து பாடியது.**

2. செங்கைவரிச்சிலை தங்கமதாகச் சம்பு தீவுதன்னில்
எங்கும் வைத்தாலும் அப்பள்ளிகொண்டான் றமிழ்க்கெவனென்றே
திங்களிரவி தினஞ்சுற்றிக்காக்கத் திரையுருட்டும்
கங்கைக்குமுத்தரத்தே யொளித்தானுமை காதலனே.

இ - ள். உமை காதலன் - உமாதேவியிற்குப் பிரியனாகிய சிவபெருமான், செங்கை - தனது சிவந்த கையில் வைத்துத் தரித்த, வரிசிலை - கட்டமைந்த வில்லானது, தங்கம் - தங்கமயமாயிருக்கிறது, இதை - இதனை, சம்புத்தீவுதன்னில் - ஜம்புத்வீபத்தில், எங்கு வைத்தாலும் - எவ்விடத்தில் வைத்தாலும், அ - அந்த, பள்ளிகொண்டான் - பள்ளிகொண்டான் என்பவன், தமிழ்க்கு - தமிழ்ப்பாடல்களுக்கு, எவன் என்றே - (எவ்வளவாகக்) கொடுப்பானென் றெண்ணியே, திங்கள் இரவி - சந்திர சூரியர்கள், தினம் - நாள்தோறும், சுற்றிகாக்க - வலம் வந்து காக்கும்படி, திரையுருட்டும் - அலைகள் உருட்டப்படுகிற, கங்கைக்கும் உத்தரத்தே - கங்கைநதிக்கும் வடபுறத்தில், ஒளித்தான் - (அதனை) ஒளித்து வைத்தான், எ - று.

பள்ளிகொண்டான் - ஒரு கொடையாளி (பிரபு), தங்கம் என்றது மேரு மலையை, இது திரிபுர சங்கார காலத்தில் இறைவனுக்கு வில்லாயிருந்தமை யால் "செங்கை வரிச்சிலை தங்கம்" என்றார்.

**ஆடைச்சிறப்பில்லாதவர்க்கு உலகத்தில் மதிப்பில்லையெனப் பாடியது.**

3. மேலாடையின்றிச் சபைபுகுந்தாலிந்த மேதினியோர்
நாலாயிரம்படித்தாலுமெண்ணார் நுவல்பாற்கடலோ
மாலானவரணிபொன்னாடைகண்டுமகளைத்தந்தே
ஆலாலமீந்தது தோலாடைசுற்றுமரன்றனக்கே.

இ - ள். நுவல்-சொல்லப்பட்ட, பாற்கடலோ-திருப்பாற்கடலோ, மால் ஆனவர் - திருமாலானவர், அணி - தரித்திருந்த, பொன் ஆடை கண்டு-பொன்

வஸ்திரத்தைப் பார்த்து, மகளைத்தந்து - தன் மகளாகிய இலக்குமியை (அவருக்குக்) கொடுத்து, தோல் ஆடை சுற்றும் - தோலாகிய வஸ்திரத்தை அரையிற் சுற்றுகிற, அரன் தனக்கு - சிவபெருமானுக்கு, ஆலாலம் ஈந்தது - ஆலாகலவிஷத்தைக் கொடுத்தது, (ஆதலால்) நூல் ஆயிரம் படித்தாலும் - (ஒருவன்) ஆயிர நூல்களைப் படித்திருந்தாலும், (அவன்) மேல் ஆடை இன்றி - தன்னுடம்பின்மேல் (சிறந்த) வஸ்திரமில்லாமல், சவை புகுந்தால் - சபையில் பிரவேசித்தால், இந்த மேதினியோர் - இந்த உலகத்தார், எண்ணார் - (அவனை) மதியார், எ - று.

பொன் ஆடை - பீதாம்பரம். (பீதம் - பொன், அம்பரம் - வஸ்திரம்.)

**பள்ளிகொண்டான் என்னும் பிரபுவின் கீர்த்தியைச் சிறப்பித்துப் பாடியது.**

4. வள்ளிகொண்டான் மயிலேறிக்கொண்டான் மதிபோலுமலை, வெள்ளிகொண்டான் விடை யேறிக்கொண்டான் விண்ணவர்க் கமுதம், துள்ளிகொண்டான் புள்ளி லேறிக்கொண்டான்சுப சோபனஞ்சேர், பள்ளிகொண்டான் புகழேறிக்கொண்டானென்று பார்க்கவென்றே.

இ - ள். சுப சோபனம் சேர் - சுப சோபனம் பொருந்திய, பள்ளிகொண்டான் - பள்ளிகொண்டான் என்பவன், புகழ் ஏறிக்கொண்டான் என்று - புகழ்மீது ஏறிக்கொண்டானென்று, பார்க்க என்றே - (அதனை) பார்க்கவேண்டுமென்றெண்ணியே, வள்ளிகொண்டான் - வள்ளியை மனைவியாகக்கொண்டவனுகிய சுப்பிரமணியக் கடவுள், மயில் ஏறிக்கொண்டான் - மயிலின்மீதேறிக்கொண்டான், மதிபோலும் வெள்ளி மலை கொண்டான் - சந்திரன் போன்ற வெள்ளிமலையாகிய கைலாயத்தை தனக்கிருப்பிடமாகக் கொண்டவனுகிய சிவபெருமான், விடை ஏறிக்கொண்டான் - இடபத்தின்மீதேறிக்கொண்டான், விண்ணவர்க்கு - தேவர்கள்பொருட்டு, அமுதம் துள்ளிகொண்டான் - அமுதத்தைத் துளித்தவனுகிய திருமால், புள்ளில் ஏறிக்கொண்டான் - கருடன்மீதேறிக்கொண்டான், எ - று.

## எல்லீசுதுரை பாடல்.

**இராமசந்த்ர கவிராயர்மீது பாடியது.**

1. செந்தமிழ்ச்செல்வனுமோராயிரந்தலைச்சேடனும்யாழ்
சுந்தரத்தோடிசைவல்லோனும்யாவருந்தோத்திரஞ்செய்
கந்தனைச்சொல்லுங்கவிராமசந்த்ரனைக்கண்டுவெட்கி
அந்தரம்வெற்பிழிபாதாளத்தோடியடங்கினரே.

**இ - ள்.** யாவரும் - எல்லாரும், தோத்திரம் செய் - துதிசெய்கின்ற, கந்தனை - முருகக்கடவுளை, சொல்லும் - புகழ்ந்து சொல்லுகின்ற, கவிராம சந்திரனை - இராமசந்த்ர கவிராயனை, செந்தமிழ்ச் செல்வனும் - அகத்திய முனிவனும், ஓர் ஆயிரம் தலை சேடனும் - ஒப்பற்ற ஆயிரம் தலைகளையுடைய ஆதிசேடனும், யாழ் - வீணையை, சுந்தரத்தோடு - அழகோடு, இசைவல்லோனும் - வாசிக்க வல்லோனாகிய தும்புருவும், கண்டு - பார்த்து, வெட்கி - நாணி, அந்தரம் வெற்பு இழிபாதாளத்து - விண்ணுலகத்திலும் பொதியமலையிலும் ஆழ்ந்த பாதாளலோகத்திலும், ஓடி அடங்கினர் - ஓடிமறைந்தார்கள், எ - று.

இராமசந்திர கவிராயனைக்கண்டு நாணி, அகத்தியன் மலையிலும், சேடன் பாதாளத்திலும், தும்புரு விண்ணுலகத்திலும் ஓடி மறைந்தார்கள் என்பது கருத்து.

## இராமசந்திர கவிராயர் பாடல்.

### திருப்பரங்குன்றத்து முருகர்மீது பாடியது.

1. வணக்கம்வருஞ் சிலநேரங் குமரகண்ட
 வலிப்புவருஞ் சிலநேரம் வலியச்செய்யக்
கணக்குவருஞ் சிலநேரம் வேட்டைநாய்போற்
 கடிக்கவருஞ் சிலநேரங் கயவர்க்கெல்லாம்
இணக்கம்வரும்படிதமிழைப்பாடிப்பாடி
 எத்தனைநாடிரிந்துதிரிந்திளைப்பேனையா
குணக்கடலேயருட்கடலேயசுரரான
 குரைகடலைவென்றபரங்குன்றுளானே.

**இ - ள்.** ஐயா - ஐயனே, குணக்கடலே - மங்கள குணசாகரமே, அருள் கடலே - அருட்சமுத்திரமே, அசுரர் ஆன - ராக்ஷதராகிய, குரைகடலை - ஒலிக்கின்ற கடலை, வென்ற - சுவறச்செய்த, பரங்குன்று - திருப்பரங்குன்றத்தில், உள்ளானே - எழுந்தருளியிருப்பவனே, சிலநேரம் - சிலசமயம், வணக்கம் வரும் - வணக்க முண்டாகும், சிலநேரம் - சிலசமயம், குமரகண்டவலிப்புவரும் - குமரகண்டவலியுண்டாகும், சிலநேரம் - சிலசமயம், வலியச்செய்யக் கணக்குவரும் - வலியப்பண்ணும்படியான கணக்குண்டாம், சிலநேரம் - சிலசமயம், வேட்டை நாய்போல் கடிக்கவரும் - வேட்டை நாய்போலக் கடிக்கநேரிடும், (இப்படிப்பட்டகுணங்களுள்ள) கயவர்க்கு எல்லாம் - கீழ்மக்களுக் கெல்லாம், இணக்கம் வரும்படி - சம்மதியுண்டாகும்படி, தமிழை பாடி பாடி - தமிழ்ப்பாடல்களைப் பாடிப் பாடி, எத்தனைநாள் திரிந்து திரிந்து இளைப்பேன் - எத்தனை நாள் அலைந்து அலைந்து மெலிவேன், எ - று.

அருணாசலராயன் என்னும் பிரபுவின்மீது பாடியது.

துறை - நற்றாயிரங்கல்.

2. மாசற்றிடுதிருமேனியின்மறுவுற்றதுபோல
மாரப்பயல்கணைதைத்திடவந்தெய்தனனையோ
காசத்தனைபுண்ணானதுதுட்டத்தனையளவாய்க்
கையத்தனையானான்மகள்மெய்யெத்தனைநோமோ
வாசற்படிகடவாதவள்மனமெப்படியானாள்
மதனன்சிலுகறியாதவள்மயலெப்படியானாள்
ஆசைப்படுவாரோபுருடரின்மேன்மடவார்கள்
அருணாசலராயாதமிழறியும்பெருமானே.

இ - ள். மாசு அற்றிடு - களங்கமற்ற, திருமேனியில் - அழகியவுடம்பில், மறுஉற்றது போல - களங்கமுண்டானது போல, மாரப்பயல்கணை தைத்திட - மன்மதப்பையல் அம்புகள் தைக்கும்படி, வந்து எய்தனன் - வந்து எய்தான், ஐயோ - அந்தோ, காசு அத்தனை புண் ஆனது - காசளவாகியபுண், துட்டு அத்தனை அளவு ஆய் - துட்டின் அளவாகி, கை அத்தனை ஆனால் - பின்பு கையினளவானால், மகள் மெய் - என் மகளது உடம்பு, எத்தனை நோமோ - எவ்வளவு நோகுமோ, வாசல்படி கடவாதவள் - வாசற்படியைக் கடந்து போகாதவள், மனது எப்படி ஆனாள் - மனமெப்படி மயங்கினாள், மதனன்சிலுகு அறியாதவள் - மன்மதனது வேதனையையறியாதவள், எப்படி மயல் ஆனாள் - எப்படி மயங்கினாள், மடவார்கள் - மாதர்கள், புருடரின்மேல் - புருஷர்மீது, ஆசைப்படுவாரோ - ஆசைப்படுவார்களோ, அருணாசல ராயா - அருணாசல ராயனே, தமிழ் அறியும் பெருமானே - தமிழருமையறிந்த பெருமையுடையவனே, எ - று.

பொதியமலைச் சாரலிலுள்ள பெரியம்மைமீதுபாடியது.

3. புல்லுக்கட்டும் விறகுஞ்சுமந்தபேர் பூர்வகாலத்துப் புண்ணியவசத்தினால், நெல்லுக்கட்டும் பணக்கட்டுங் கண்டபின் நீலக்கல்லிற் கடுக்கனும்போடுவார், சொல்லுக்கட்டும் புலவரைக்கண்டக்காற் றூறிப்பாய்ந்து கதவை யடைத்தெதிர், மல்லுக்கட்டும் படையரைப்பாடவோ மலயச்சாரலில் வாழ்பெரியம்மையே.

இ - ள். புல்லு கட்டும் - புற்கட்டையும், விறகும் - விறகுக்கட்டையும், சுமந்த பேர் - சுமந்த பேர்கள், பூர்வ காலத்து - முன்னாளில் செய்த, புண்ணிய வசத்தினால் - புண்ணிய வசத்தால், நெல்லு கட்டும் - நெல்லின் திரளையும், பணக் கட்டும் - பணத்திரளையும், கண்டபின் - பார்த்தபிறகு, நீலக்கல்லின் கடுக்கனும் போடுவார் - நீலரத்நத்தாற் செய்த கடுக்கனையும் தரிப்பார்கள், மலயச் சாரலில் - பொதியமலைச்சாரலில், வாழ் - வாழ்கின்ற, பெரியம்மையே —, சொல்லுக்கட்டும் - சொற்களைச்சேர்த்துப் பாடலாகச்செய்கிற, புலவரை கண்டக்கால்-

வித்வான்களைப் பார்த்தால், சூறி - பழி கூறி, பாய்ந்து - குதித்து, கதவை அடைத்து - கதவை மூடி, எதிர் - எதிரேநின்று, மல்லு கட்டும் - மற்போர்செய்கிற, மடையரை - அறிவிலாரை, பாடவோ - பாடல் தகுதியோ, எ - று.

உன்னையன்றி அறிவில்லாத மூடரை நான்பாடுதல் தகுதியாமோ என்பதாம்.

### திருப்பழனி வேலவர்மீது பாடியது.

4. வெண்ணெய்க்கட்டியுந்தினையுண்டிடலாம்
விக்கிக்கொள்வதற்கென்செய்யலாமொரு
பெண்ணைக்கட்டிக்கொடுத்திடலாம்பிள்ளை
பெறுவதற்குமுடன்படிவார்களோ
பண்ணைக்கட்டியமென்மொழியாளுந்தன்
படுக்கைவீட்டில்வந்தாளேயவளைக்
கண்ணைக்கட்டியணையாமலேன்விட்டனர்
கழனிசூழும்பழனியில்வேலரே.

இ - ள். கழனி சூழும் - வயல்கள் சூழ்ந்த, பழனியில் வேலரே - திருப்பழனியில் எழுந்தருளியிருக்கிற வேலவரே, வெண்ணெய்க் கட்டியும் - வெண்ணெய்த் திரளையும், தினையும் - தினைச்சோறையும், உண்டிடலாம் - உண்பிக்கலாம், விக்கிக் கொள்வதற்கு - விக்கிக்கொள்வதனுக்கு, என் செய்யலாம் - யாது செய்யலாம், ஒரு பெண்ணை - ஒரு பெண்ணை, கட்டிக்கொடுத்திடலாம் - மணஞ்செய்து கொடுக்கலாம், பிள்ளை பெறுவதற்கும் - பிள்ளைபெறுதலுக்கும், உடன்படிவார்களோ - உடன்படுவார்களோ, பண்ணைக்கட்டிய - இராகங்களை வென்ற, மென்மொழியாளும் - மெல்லிய மொழிகளையுடைய என் பெண்ணும், தன் படுக்கை வீட்டில் வந்தாளே - உமது பள்ளியறைக்குள் வந்தாளே, அவள்தனை - அவளை, கண்ணைக்கட்டி - கண்ணைமூடி, அணையாமல் - தழுவாமல், ஏன் விட்டனர் - ஏன் விட்டு விட்டீர், எ - று.

### தஞ்சைக் குருவப்ப பூபன் கடுக்கனிட்டபோது பாடியது.

5. எதிலேவறியவர்க்குமினியகவிப்புலவருக்குமிரங்கியந்தப்
போதிலேதனங்கொடுக்குந்தஞ்சைநகர்க்குருவப்பபூபனெற்குக்
கோதிலேகிடந்துழலும்பலரிடத்திற்சென்றுதமிழ்கூறுவண்ணங்
காதிலேயொட்டிட்டுத்தாடையின்மோதக்கடுக்கன்றானிட்டானே.

இ - ள். எதிலே வறியவர்க்கும் - எப்பொருளிலும் வறியராயிருப்பவர்க்கும், இனிய கவி புலவருக்கும் - மதுரமாகிய பாடல்களைப் பாடுகின்ற வித்வான்களுக்கும், இரங்கி - மனமிரங்கி, அந்தப்போதிலே - அந்தக்ஷணத்திற்றானே, தனம் கொடுக்கும் - (அவர்களுக்கு வேண்டும்) பொருளைக் கொடுக்கிற, தஞ்சை

நகர் - தஞ்சை நகரத்தில் வாழ்கின்ற, குருவப்ப பூபன் - குருவப்பன் என்னும் பூபதி, கோதிலேகிடந்து உழலும் - தீநெறியில் கிடந்துழல்கின்ற, பலர் இடத்தில் சென்று - பலரிடத்தில்போய், தமிழ்கூறுவண்ணம் - தமிழ்ப்பாடல்களைப் பாடாவண்ணம், எமக்கு - எனக்கு, காதிலே ஒட்டு இட்டு - காதில் ஆணையிட்டு, தாடையில் மோத - கன்னத்தில் அறைய, கடுக்கன் இட்டான் - வண்டிக் கடுக்கனையுந்தரித்தான். எ - று.

ஒட்டு - ஒட்டுக்கடுக்கன் எனவும் ஒருபொருள்.

திருநாகைக்காரோணர்மீது பாடியது.

துறை - சுற்றுயிரங்கல்.

6. வம்பிறைக்குங் கடம்பிறைக்கும் பெரும்பிறைக்கு நிகராக வளர்ந்தவொற்றைக், கொம்பிறைக்குந் தாதையராங் கடனாகைக் காரோணர்கொன்றை நல்கார், அம்பிறைக்கும் விழிப்பாவை யாயர்குழல் கொல்லனுலை யனலிற்காய்ந்த, செம்பிறைக்கும் வெண்பிறைக்குங் கருப்பிறைக்கு பொருத்திதனித் தென்செய்வாளே.

இ - ள். வம்பு இறைக்கும் - வாசனையை வீசுகின்ற, கடம்பு - கடப்பமலர் மாலையைத்தரித்த, இறைக்கும் - முருகக்கடவுளுக்கும், பெருபிறைக்கு நிகராகவளர்ந்த - பெரியபிறைக்குச்சமானமாகவளர்ந்த, ஒற்றைக்கொம்பு - ஒருகொம்பையுடைய, இறைக்கும் - விநாயகமூர்த்திக்கும், தாதையர் ஆம் - தந்தையராகிய, கடல் நாகை காரோணர் - கடல்சூழ்ந்த திருநாகையிலெழுந்தருளிய காரோணர், கொன்றை நல்கார் - தமது கொன்றைமலர் மாலையை அருள்செய்யார், அம்பு இறைக்கும் விழிப்பாவை பொருந்தி - நீரைச் சொரிகின்ற கண்களையுடைய என்பெண்ணொருத்தி, தனித்து - தனியயிருந்து, ஆயர் குழல் - ஆயர் ஊதுகின்ற வேய்ங்குழலானது (என்னொருத்தியை), கொல்லன் உலை - கொல்லனுலைக்களத்திலுள்ள, அனலில்காய்ந்த - நெருப்பில் காய்ந்த, செம்பு இறைக்கும் - செம்புநீர்போல எடுத்து வீசாநிற்கும், (இதுவுமன்றி) வெண்பிறைக்கும் - வெண்மையாகிய சந்திரனுக்கும், கரும்பு இறைக்கும் - கருப்பு வில்லையுடைய மன்மதனுக்கும், என்செய்வாள் - என்னபரிகாரஞ் செய்வாள், எ - று.

செம்பு - தாமிரம்.

திருமயிலை வேங்கடசாமி என்னும் பிரபுவின்மீது பாடியது.

7. மூங்கிலிலேயொளித்திருந்தான் முக்கண்சாமி
முதியகடற்போய்ப்படுத்தான் முகுந்தசாமி
தாங்கமலப்பொகுட்டுறைந்தான் றலைநாற்சாமி
தடவரையிலுழன்றுநின்றான் றகப்பன்சாமி

வாங்கியுண்ணவழிகாத்தான்வயிற்றுச்சாமி
வாணருக்கிங்குதவுவரார்மற்றோர்சாமி
ஓங்கியசீர்மயிலையிற்பொன்னப்பசாமி
உதவியவேங்கடசாமியுசிதவேளே.

இ - ள். ஓங்கிய சீர் - உயர்ந்த கீர்த்தியையுடைய, மயிலையில் - திருமயிலையிலுள்ள, பொன்னப்பசாமி உதவிய - பொன்னப்பசாமிபெற்ற, வேங்கடசாமி - வேங்கடசாமி யென்னும், உசித வேளே - சிறந்தமன்மதனே, முக்கண் சாமி-மூன்று கண்களையுடைய கடவுளாகிய சிவபெருமான், மூங்கிலிலே ஒளித்திருந்தான் - மூங்கிலிலேமறைந்திருந்தான், முகுந்தசாமி - திருமாலானவன், முதிய கடல்போய்ப்படுத்தான்-பழமையாகிய பாற்கடலிற் சென்றுசயனித்தான், தலைநால் சாமி - நான்கு தலைகளையுடைய பிரமதேவன் - கமலப்பொருட்டு உறைந்தான் - தாமரைப்பொருட்டிலிருந்தான், தகப்பன் சாமி - முருகன், தடவரையில் உழன்று நின்றான் - பெரியமலை நிலங்களில் உழன்று நின்றான், வயிற்றுச்சாமி - விநாயகன், வாங்கி உண்ண - வாங்கியுண்ணும்பொருட்டு, வழிகாத்தான் - வழிகாத்திருந்தான், (இப்படியாயினமையால்) வாணருக்கு - கவிவாணருக்கு, இங்கு-இவ்வுலகத்தில், மற்று ஓர் சாமி-வேறொரு கடவுளாயிருந்து, உதவுவர் ஆர் - (அவர்வேண்டியவற்றை) கொடுப்பவர் யாவர், எ - று.

கவிவாணருக்குக்கொடுக்க உன்னையன்றி வேறொருவருமில்லையென்பதாம், சிவபெருமானுக்குப் பிரணவப்பொருளை யுபதேசித்ததனால் முருகக்கடவுளைத் தகப்பன்சாமி என்றார்.

திருப்பரங்கிரி கற்பகவிநாயகர்மீது பாடியது.

8. வஞ்சகத்தி லொன்றானைத் துதிக்கைமிகத் திரண்டானை வணங்காருள்ளே, அஞ்சரண மூன்றானை மறைமொழிநால் வாயானையத்தனாகித், துஞ்சவுணர்க் கஞ்சானைச் சென்னியணி யாறானைத் துகளெழானைச், செஞ்சொன்மறைக் கெட்டானைப் பரங்கிரிவாழ் கற்பகத்தைச் சிந்தைசெய்வாம்.

இ - ள். வஞ்சகத்தில் ஒன்றானை - கபடமனத்தில் பொருந்ாதவனை, துதிக்கை மிகத் திரண்டானை - துதிக்கை மிகவுந் திரண்டிருப்பவனை, வணங்கார் உள்ளே - தொழாதவர்களுடைய மனத்தில், அம் சரணம் ஊன்றானை - அழகிய திருவடியைப் பதியாதவனை, மறைமொழி நால் வாயானை-வேதங்களைச்சொரியாநின்ற தொங்குகின்ற வாயையுடையவனை, அத்தன் ஆகி - கடவுளாகி, துஞ்சு அவுணர்க்கு அஞ்சானை - நிலைபெற்ற அவுணர்களுக்குஅஞ்சாதவனை, சென்னி அணி ஆறானை - சிரசிலணிந்த நதியை யுடையவனை, துகள் எழானை-குற்றமுண்டாகாதவனை, செம் சொல்மறைக்கு எட்டானை - செவ்விய சொற்க

ளையுடைய வேதங்களுக்கும் எட்டாதவனை, பரங்கிரிவாழ் கற்பகத்தை - திருப்பரங்கிரியில் வாழ்கின்ற கற்பகப் பிள்ளையாரை, சிந்தை செய்வாம் - சிந்திப்போம், எ - று.

இதில் ஒன்றுமுதல் எட்டெண்களும் வந்தமைகாண்க.

அருணாசலேச்சுரன்மீதுபாடியது. துறை- தலைவியிரங்கல்.

திரிபங்கி - மூன்றுவெண்பா.

9. சலமேதோசங்கந்தா பூணாரந்தாமே
கலைதாநற்புங்கவன்மால்காணாப் • புலவுடைய
கங்கராகோணாகலாமதியக்கோடீர
சங்கராசோணாசலா.

இ - ள். நல் புங்கவன்மால் காணா - உயர்ந்த தேவனாகிய திருமாலுங்காணாத, புலவு உடைய - புலால் நாற்றத்தையுடைய, கம் - பிரமகபாலத்தைத் தாங்கிய, கரா - கையையுடையவனே, கோணா - மாறுபடாத, கலாமதியம் - ஒருகலையாகிய சந்திரனையணிந்த, கோடீர - சடாபாரத்தை யுடையவனே, சங்கரா - சங்கரனே, சோணாசலா - அருணாசலனே, சலம் ஏதோ - கோபத்திற்குக் காரணமேதோ, சங்கம் தா - சங்கவளையலைக்கொடு, பூணாரம் தா - ஆபரணங்களைக்கொடு, மேகலைதா - மேகலையைக்கொடு, எ - று.

கோணாகலாமதியம் என்பதனை கோண் ஆகு அல் ஆம் மதியம் எனப்பிரித்து, கோணலாகிய இரவில் தோன்றும் பிறைச்சந்திரன் எனவும் வேறொரு பொருள் கொள்ளலாம். இது அருணாசலேச்சுரருடைய பவனியைத்தரிசித்து வளையல் முதலியவற்றை யிழந்த தலைமகள் கூறியது. சோணாசலம் என்பதை சோணம் அசலம் எனப்பிரிக்க. செவந்த மலையென்பது பொருள். அருணாசலமென்பதற்கும் பொருளிதுவேயாம். சங்கந்தா என்றும், பூணாரந்தா என்றும் தொடங்கிவாசிக்கப் பொருள் வேறுபடாமல் இரண்டு வெண்பாக்களாய் முடிதல் காண்க.

தில்லைக் கோவிந்தராஜர்மீது பாடியது.

துறை - வண்டுவிடுதூது.

10. சீரிலங்குமாடகூடவீதிவீறுதில்லையான்
திருவிருக்குமார்பனெங்கடிருமலைக்குமுன்புபோய்
நீரிருந்துமாலைகேளுமவன்மறுத்துரைக்கினென்
நெஞ்சுசொல்லும்வார்த்தையாக நீங்கள்சொல்லும்வண்டுகாள்
வாரியொன்றுபாயிரண்டுமாலைமூன்றுநாலுவேய்
மதியமைந்துகங்குலாறுமாரனேழுவாடையெட்
டாரமொன்பதன்றில்பத்தடங்கலும்மொறுக்குமா
லத்தனைக்கெலாமிலக்கெனாவியொன்றுகாணுமே.

இ - ள். வண்டுகாள் - வண்டுகளே, சீர் இலக்கும் - மேன்மையாய் விளங்குகின்ற, மாடகூடவீதி - மாடகூடவீதிகள், வீறு - மிகுந்திருக்கிற, தில்லையான் - தில்லைப்பதியிலுள்ளவன், எங்கள் திரு இருக்கும் மார்பன் - எங்கள் திருமகள் தங்குகின்ற மார்பையுடையவன். (அவனது) திருமலைக்கு முன்பு போய் - அழகிய மலைக்கெதிரேசென்று, நீர் இருந்து - நீர் தங்கி, மாலைகேளும் - (அவனது திருத்துழாய்) மாலையைக்கேளுங்கள், அவன் மறுத்து உரைக்கில் - அவன் தடுத்துச்சொன்னால், என் நெஞ்சு சொல்லும் வார்த்தையாக - என்மனஞ் சொல்லும்சொல்லாக, நீங்கள் சொல்லும் - நீங்கள் சொல்லுங்கள், (என்னெனின்) வாரி ஒன்று - கடலொன்று, பாய் இரண்டு - சயநமிரண்டு, மாலை மூன்று - மாலைக்காலம்மூன்று, வேய்நாலு - வேய்ங்குழல்நாலு, மதியம் ஐந்து, சந்திரன் ஐந்து, கங்குல் ஆறு - ராத்திரி ஆறு, மாரன் ஏழு - மன்மதன் ஏழு வாடை எட்டு - வாடைக்காற்று எட்டு, ஆரம் ஒன்பது - முத்துமாலை ஒன்பது அன்றில் பத்து - அன்றிலோசை பத்து, (ஆகிய) அடங்கலும் - எல்லாம், ஒறுக்கும் - வருத்தாநின்றன, அத்தனைக்கு எல்லாம் - அவ்வளவு பொருள்களுக்கும், இலக்கு - லக்ஷ்யமாயிருப்பது, என் ஆவிஒன்று - என்னுயிரொன்றேயாம், எ - று.

ஆரம் - சந்தநமுமாம். தலைவனைப்பிரிந்து தனித்திருக்கும் தலைவியர்க்குக் கடலோசைமுதலியன துன்பஞ்செய்தலியல்பாதலால் இவ்வாறு கூறினள். "முத்துங்களபமுந்தண்பனிநீரு முயங்குமலர்ச், சொத்துங்குளிரியுந் தாமலர்ப் பாயலுஞ் சூழ்ந்துபுறங், கத்துங்கடலுங் கதலியுமாலியுங் கங்குலுமிப், பத்தும் பெரும்பகை யாய்விட்டவா பொருநைத்தொடிக்கே." என்றார்பிறரும்.

**திருவானைக்காவில் சிவபெருமான் பவனியைத்தரிசித்துப் பாடியது.**

தலைவிகூற்று.

11. ஓரானைவனத்தேதிருவொண்ணாவனிழற்கீழ்
உறையும்பெருமான்வீதியுலாவும்பவனிக்கே
நேராகநடப்பேன்வளைபறிபோனதுகேட்பேன்
நில்லென்றுதடுத்தால்வகைசொல்லென்றுமறிப்பேன்
போரானையைவிட்டான்முலையானையைவிடுவேன்
பொழியம்புதொடுத்தால்விழியம்புதொடுப்பேன்
தேராவழக்கிட்டால்வகைவாராவழக்கிடுவேன்
தொல்லைக்கணைகொண்டேவகைவெல்லப்பெறுவேனே.

இ - ள். ஓர் - ஒப்பற்ற, ஆனைவனத்தே - திருவானைக் காவின்கண்ணே, திரு - அழகிய, ஒள் - ஒட்பமாகிய, நாவல்நிழல்கீழ்-நாவல்மரத்தினதுநிழலில், உறையும் - எழுந்தருளியிருக்கிற, பெருமான் - சிவபெருமான், வீதி உலாவும் பவனிக்கு - தெருவில் உலாவுகின்ற பவனிக்கு, நேராகநடப்பேன் - நேரே போவேன், வளை பறிபோனதுகேட்பேன் - பறியான வளையலைக் கேட்பேன்,

வில்லென்று தடுத்தால் - வில்லென்று தடைசெய்தால், வகைசொல்என்று மறிப்பேன் - இதற்கு வகைசொல்லென்று மறிப்பேன், போர் - போர்செய்தற்குரிய, ஆனையைவிட்டால் - ஒருயானையை யேவினால், மூலை - தனங்களாகிய ஈராளனையைவிடுவேன் - இரண்டுயானைகளை யேவுவேன், பொழி அம்புதொடுத்தால் - சொரிதற்குரிய ஒருபாணத்தைத் தொடுத்தால், இருவிழி அம்பு தொடுப்பேன், இருகண்ணாகிய அம்புகளைத்தொடுப்பேன், தோரா வழக்குஇட்டால் - தொடர்ச்சியாகிய வழக்காடினால், வகைவாரா - ஒருவகையிலுஞ் சேராத, வழக்கிடுவேன் - வழக்குத் தொடுப்பேன், தொல்லைக் கணைகொண்டே - பழமையாகிய கரும்பைக்கொண்டே, வகையாய்வெல்லப்பெறுவேன் - வகையாக வெல்லப்பெறுவேன். எ - று.

திருவாரூர்ச் சிவபெருமான்
பிக்ஷாடநவேடமாய் வந்ததைக்குறித்துப் பாடியது.

12. அடல்கொண்டெழுசூலப்படையாரூர்ப்பெருமானார்
ஐயம்பகரென்றேயெமதகவாசலில்வந்தார்
கடுகும்படிசென்றேபலிகொண்டேயெதிர்நின்றேன்
கைவந்தனமென்றாரிதுகைவந்தனமென்றேன்
மடவன்னமதென்றாரிதுமடவன்னமதென்றேன்
வல்லோதனமென்றாரிதுவல்லோதனமென்றேன்
கொடுவந்தனமென்றாரிதுகொடுவந்தனமென்றேன்
கொள்ளார்பலிசெல்லாரவர்கோட்பாடறியேனே.

இ - ள். அடல்கொண்டு எழு - வலிகொண்டெழுகின்ற, சூலப்படை - சூலாயுதத்தையுடைய, ஆரூர்ப்பெருமானார் - திருவாரூர்ச் சிவபெருமானவர், ஐயம்பகர்என்று - பிச்சையிடென்று, எமது அகவாசலில்வந்தார் - எமது வீட்டு வாசலில்வந்தார், கடுகும்படிசென்று - விரைவாகப்போய், பலிகொண்டு-சோற்றைக்கொண்டு, எதிர்நின்றேன் - அவருக்கெதிரில் நின்றேன், கைவந்தனம் என்றார் - கையால் நமஸ்காரமென்றனர், இதுகைவந்த அனம் என்றேன்-இது கைக்கொண்ட சோறென்றேன், மட அன்னம் அதுஎன்றார் - இளமையாகிய அன்னம் அதுஎன்றனர், இது மடஅன்னமதுஎன்றேன் - இது மடத்துச்சோறென்றேன், வல்லோதனம்என்றார் - சூதாடுகருவியோ தனம் என்றனர், இது அல் ஓதனம்என்றேன் - இது இராச்சோறென்றேன், கொடு உவந்தனம் என்றார் - ஏற்றுக்கொண்டு களித்தோம் என்றனர், இது கொடுவந்த அனம்என்றேன் - இதுகொண்டுவந்த சோறென்றேன், கொள்ளார்பலி - பலியை ஏற்கவுமாட்டார், செல்லார்-போகவுமாட்டார், அவர் கோட்பாடு அறியேன் - அவரது கொள்கையை அறிந்திலேன், எ - று.

பொன்வண்ணத் தந்தாதியில், "பண்டங்கன்வந்து பலிதாவென்றான் பகலோற்கிடென்றேன், அண்டங்கடந்தவ னன்னமென்றா னயனூர்திஎன்றேன்,

கொண்டிங்குனையம் பெய்யென்றான் கொடித்தேர நங்கனென்றேன், உண்டிங் கமைந்ததென்றாற் கதுசொல்ல வுணர்வுற்றதே" என்பதும் இக்கவிபோலச் சிவபெருமானோடு அசதியாடற் பொருளதே.

### முறைமாறகத் தோன்றப் பாடியது.

13. வீமனுக்குமைந்தனார் வேதனாரும் வேதனுக்குமைந்தனா ரீசனாரும், காமனுக்கு மைந்தனார் வீமன்றம்பி கந்தனுக்கு மாமனார் காமன்றானே, மாமனுக்கு முன்றமையன் றந்தைகாலன் வையகத்திலும்முறைமைவழங்கலாலே, ராமனுக்குச்சீதைதங்கையாகவேண்டும்ராவணனுக்குத் தகப்பன் ராமன்றானே.

இ - ள். வீமனுக்கு மைந்தனார் - வீமனுக்குப் புதல்வனார், வேதன் ஆகும்- பிரமனாவான், வேதனுக்கு மைந்தனார் - பிரமனுக்குப் புதல்வனார், ஈசன் ஆகும்- சிவனாவான், காமனுக்கு மைந்தனார் - காமனுக்குப் புதல்வனார், வீமன் தம்பி - அருச்சுனனாவான், கந்தனுக்கு மாமனார் - முருகருக்கு மாமனார், காமன் தானே- காமனேயாவான், மாமனுக்கு முன் - மாமனுக்கு முன்னே, தமையன் தந்தை - தமையனுந் தந்தையுமாயிருப்பவன், காலன் - யமனாவான், வையகத்தில் - உலகத்தில், இம் முறைமை வழங்கலாலே - இந்த முறைமை வழங்குதலால், ராவணனுக்கு - இராவணனுக்கு, சீதை - சீதையானவள், தங்கை ஆகவேண்டும் - தங்கைமுறை யாதல் வேண்டும், ராவணனுக்கு - இராவணனுக்கு, தகப்பன் - தந்தை, ராமன்தான் - ஸ்ரீராமனே யாவான், எ - று.

வீமன் - கருடனுக்கிறைவனாகிய திருமால், வே - மூங்கில், மைந்தன் - சிவன், (சிவன் திருநெல்வேலியில் ஓர் மூங்கிலிற் பிறந்தார் என்பது கதை) காமன் - கற்பகத்துக் கிறைவனாகிய இந்திரன், வீமன் தம்பி - அருச்சுநன், கந்தனுக்கு மாமன் - காமன் - இந்திரன், மாமன் - குதிரைக்கிறைவனாகிய நகுலன், தமயன் - தருமன், தந்தை - யமன், ராமன் - ராத்திரிக்கிறைவனாகிய சந்திரன், ராவணன் - ராத்திரி பிறமுள்ள மன்மதன்.

### தமது பாக்குவெட்டி காணமற்போனபோது பாடியது.

14. விறகுதறிக்கக்கறிநறுக்கவெண்சோற்றுப்புக்கடகுவைக்கப்
பிறகுபிளவுகிடைத்ததென்றாலாறுகப்பிளந்துகொள்ளப்
பறகுபறகென்றேசொறியப்பதமாயிருந்தபாக்குவெட்டி
இறகுமுளைத்துப்போவதுண்டோவெடுத்தீராயிற்கொடுப்பீரே.

இ - ள். விறகு தறிக்க - விறகைத் துண்டாக்கவும், கறி நறுக்க - கறியை நறுக்கவும், வெண் சோற்று உப்புக்கு - வெண்மையாகிய சோற்றிற் போடும் உப்பின் பொருட்டு, அடகு வைக்க - அடகு வைக்கவும், பிறகு - அதின்பிறகு, பிளவு கிடைத்தது என்றால் - பாக்குப்பிளவு கிடைத்ததாயின், நால் ஆறு ஆக

பிளந்து கொள்ள - நாலாறாகப் பிளந்துகொள்ளவும், பறகு பறகு என்று சொறிய - பறகு பறகென்று சொறியவும், பதமாய் இருந்த - உபயோகமாயிருந்த, பாக்கு வெட்டி - பாக்கு வெட்டியானது, இறகு முளைத்து - இறகு முளைக்கப் பெற்று, போவது உண்டோ - பறந்துபோவதுண்டோ, எடுத்தீராயின் - எடுத்திருப்பீராயின், கொடுப்பீர் - கொடுத்து விடுவீராக, எ - று.

### திருவேங்கட நாதன் என்னும் பிரபுவின்மீது பாடிய வினாவுத்தரம்.

15. இரவலனேயுனக்கில்லாததென்னவிதயமென்ன
பரவுணவேதுசுவையற்றதென்னசொற்பான்மையென்ன
தரவுரைசெய்திடவென்றனதற்கொன்றுஞ்சாற்றிலன்யான்
வரதிருவேங்கடநாதவென்றேன்பொன்வழங்கினனே.

இ - ள். இரவலனே - யாசகனே, உனக்கு இல்லாதது என்ன - உனக்கு இல்லாதது யாது, இதயம் என்ன - உன்மன மெத்தன்மையது, பர உணவு ஏது - மேன்மையாகிய உணவுக்கு ஆதாரம் யாது, சுவையற்றது என்ன - உனக்கு சுவையற்ற வறுப்புயாது, சொல் பான்மை என்ன - நீ சொல்லுதற்குரிய தன்மையது யாது, தர - நான் கொடுக்கும்படி, உரை செய்திட - சொல்லக்கடவை, என்றான் - என்று வினவினன், அதற்கு - அவ்வினாவுக்கு, யான் ஒன்றும் சாற்றிலன் - நான் ஒன்றும் உத்தரம் சொல்லவில்லை, (ஆயினும்) வரதிருவேங்கடநாதா என்றேன் - சிரேஷ்டமாகிய திருவேங்கடநாதா என்று சொன்னேன், (சொல்லுதலும் அந்தச்சொல்லின்பொருளையுணர்ந்து) பொன்வழங்கினன் - பொன்னைக் கொடுத்தான்.

| | | | | |
|---|---|---|---|---|
| உனக்கில்லாததென்ன - வினா, | திரு | - உத்தரம் | (செல்வம்) |
| இதயமென்ன | ,, | வேம் | ,, | (புழுங்கும்) |
| உணவேது | ,, | கடன் | ,, | (கடன்பட்ட பொருள்) |
| சுவையற்றதென்ன | ,, | நா | ,, | (நாக்கு) |
| சொற்பான்மையென்ன | ,, | தா | ,, | (கொடு) |

இவ்வாறு வினா வுத்தரமாகப் பொருளுரைத்துக் கொள்ளும்படி நிற்றலால் இப்பாடல் வினா வுத்தர மெனப்படும். இது சித்திரகவியொன்று.

### தன் துற்றத்திற்கிரங்கிப் பாடியது.

16. கல்லாதவொருவனைநான்கற்றாயென்றேன்
காடெறியுமறவனைநாடாள்வாயென்றேன்
பொல்லாதவொருவனைநானல்லாயென்றேன்
போர்முகத்தையறியானைப்புலியேறென்றேன்
மல்லாரும்புயமென்றேன்சூம்பற்றோளை
வழங்காதகையனைநான்வள்ளலென்றேன்

இல்லாததுசொன்னேனுக்கில்லையென்றான்
யானுமென்றன்குற்றத்தாலேகின்றேனே.

**இ - ள்.** நான் - யான், கல்லாதஒருவனை - கல்விகல்லாத ஒருவனைநோக்கி, கற்றாய்என்றேன் - கல்விமானேயென்று புகழ்ந்தேன், காடெறியும் மறவனை - காட்டைவெட்டுகின்ற மறவனை, நாடுஆள்வாய் என்றேன் - நாட்டையாள்பவனேயென்று புகழ்ந்தேன், நான்-யான், பொல்லாதஒருவனை-பொல்லாதவனாகிய ஒருவனை, நல்லாய் என்றேன் - நல்லவனேயென்று புகழ்ந்தேன், போர்முகத்தை அறியானை-யுத்தமுகத்தை அறியாதவனை, புலியேறுஎன்றேன்-ஆண்புலியே யென்றுபுகழ்ந்தேன், சும்பல்தோளை - சுருங்கித்திரைந்த தோள்களை, மல்ஆரும் புயம்என்றேன்-மற்போர்க்குரிய புஜங்களென்று புகழ்ந்தேன், நான் - யான், வழங்காதகையனை - கொடாத கையையுடையவனை, வள்ளல் என்றேன் - வரையாது கொடுப்பவனாகிய வள்ளலென்று புகழ்ந்தேன், (இவ்வாறு) இல்லாதுசொன்னேனுக்கு - (ஒருவனிடத்தில்) இல்லாத குணத்தைச் சொன்ன எனக்கு, இல்லைஎன்றான் - (ஒன்றும்) இல்லைபோவென்றான், யானும் - நானும், என்றன் குற்றத்தால் - என் பிழையால், ஏகின்றேன் - போகின்றேன், எ - று.

துன்பம்வருங்காலத்தில் எல்லாம் ஒருமிக்கவேவருமெனப் பாடியது.

17. ஆவீனமழைபொழியவில்லம்வீழ
அகத்தடியாள்மெய்நோவவடிமைசாவ
மாவீரம்போகுதென்றுவிதைகொண்டோட
வழியிலேகடன்காரர்மறித்துக்கொள்ளச்
சாவோலைகொண்டொருவனெதிரேசெல்லத்
தள்ளவொண்ணாவிருந்துவரச்சர்ப்பந்தீண்டக்
கோவேந்தருழுதுண்டகடமைகேட்கக்
குருக்களோதட்சணைகள்கொடுவென்றாரே.

**இ - ள்.** ஆ ஈன - பசுவானது கன்றையீன, மழைபொழிய - மழைசொரிய, இல்லம்வீழ - வீடிடிந்துவிழ, அகத்துஅடியாள் மெய்நோவ - வீட்டுவேலைக்காரி உடம்புநோவ, அடிமைசாவ-வேலைக்காரன்இறக்க, மா ஈரம் போகுது என்று - மிகுந்த ஈரம்உலர்ந்து போகின்றதேயென்று, விதைகொண்டு ஓட - (விதைக்கும்பொருட்டு) விதையைக்கொண்டோட, வழியிலே கடன்காரர் மறித்துக்கொள்ள - வழியில் கடன்காரர்தடுக்க, ஒருவன் சாவோலைகொண்டு எதிரேசெல்ல - ஒருவன் சாவோலையெடுத்தெதிரேவர, தள்ளவொண்ணா விருந்துவர-நீக்கக்கூடாத விருந்தாளிவர - சர்ப்பம்தீண்ட - (அவனை) பாம்புகடிக்க, கோவேந்தர் - பூமியையாளுகின்றஅரசர், உழுதுஉண்ட கடமைகேட்க - நிலத்தைஉழுது பயிர்செய்துண்ட கடமையைக்கேட்க, குருக்களோ தட்சணைகள் கொடு என்றார் - ஆசாரியரோ தக்ஷணைதாவென்றார், எ - று.

### வறுமைத் துன்பத்தால்வருந்திப் பிரமனைநிந்தித்துப் பாடியது.

18. கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான் குடிக்கத்தான் கற்பித்தானா, இல்லைத்தான் பொன்னைத்தா னெனக்குத்தான் கொடுத்துத்தா னிரட்சித்தானா, அல்லைத்தான் சொல்லித்தானாரைத்தா னோவத்தானையோவெங்கும், பல்லைத்தான் றிறக்கத்தான்பதுமத்தான் புவியிற்றான் பண்ணினானே.

**இ - ள்.** பதுமத்தான் - தாமரைமலரை யிடமாகவுடைய பிரமன், புவியில்-இவ்வுலகத்தில், கல்லைமண்ணை - கல்லையும்மண்ணையும், காய்ச்சிகுடிக்க- காய்ச்சிக்குடிக்கும்படி, கற்பித்தானா-ஏற்படுத்தினானா, இல்லை - அப்படியன்றி, எனக்கு பொன்னைகொடுத்து இரட்சித்தானா - எனக்குப் பணத்தைக் கொடுத்துக் காப்பாற்றினானா, அல்லைசொல்லி - துன்பத்தைச்சொல்லி, ஆரைநோவ - யாரைநொந்து கொள்ளட்டும், ஐயோ - அந்தோ, எங்கும் - (போகத்தகாத) எவ்விடத்திலும்போய், பல்லைத் திறக்கப்பண்ணினான் - பல்லைத்திறந்து கெஞ்சும்படி சிருஷ்டிசெய்தான், எ - று.

### தம்மினும் சிவபெருமான் அதிகதுன்ப முள்ளவரெனப்பாடியது.

19. வஞ்சகர்பானடந்தலைந்தகாலிற் புண்ணும்
வாசறொறுமுட்டுண்டதலையிற்புண்ணும்
செஞ்சொல்லைநினைந்துருகுநெஞ்சிற் புண்ணுந்
தீருமென்றேசங்கரன்பாற்சேர்ந்தேனப்பா
கொஞ்சமல்லபிரம்படியின்புண்ணும்வேடன்
கொடுங்காலாலுதைத்தபுண்ணுங்கோபமாகப்
பஞ்சவரிலொருவன்வில்லாலடித்தபுண்ணும்
பாரென்றேகாட்டிநின்றான்பரமன்றானே.

**இ - ள்.** வஞ்சகர்பால் - வஞ்சகரிடத்தில், நடந்து அலைந்த - நடந்தலைந்ததனா லுண்டாகிய, காலில் புண்ணும் - என் காலிலுள்ள புண்ணையும், வாசல்தொறும் - வீட்டுவாசற் படிகள்தோறும், முட்டுண்ட - முட்டுண்டதனால் உண்டாகிய, தலையில் புண்ணும் - தலையிலுள்ள புண்ணையும், செஞ்சொல்லை (கவிபாடுதற்கு) செம்மையாகிய சொற்களை, நினைந்து உருகும். ஆலோசித் துருகுதலா லுண்டாகிய, நெஞ்சில் புண்ணும் - மனத்திலுள்ள புண்ணையும், தீரும் என்று - நீக்கியருளுவீரென்று, சங்கரன் பால் - சிவபெருமானிடத்தில், சேர்ந்தேன் - அடுத்தேன், (சேர்தலும்) பரமன் - சிவபெருமான் - (என்னைநோக்கி), அப்பா - அய்யா, கொஞ்சம் அல்ல - (உன்போலச்) சிறிதல்ல, பிரம்படியின் புண்ணும் - (பாண்டியனது) பிரம்படியாலுண்டாகிய புண்ணையும், வேடன் - வேடனாகிய கண்ணப்பன், கொடுகாலால் - வலியகாலினால், உதைத்த புண்ணும் - உதைத்ததனா லுண்டாகிய புண்ணையும், பஞ்சவரில் ஒரு

வன் - பாண்டவர் ஐவருள் ஒருவனாகிய அருச்சுநன், கோபம் ஆக - தனக்குக் கோபமுண்டாகி, வில்லால் அடித்த புண்ணும் - (பாசுபதாஸ்திரம் பெறவந்தபோது) வில்லினால் அடித்ததனா லுண்டாகிய புண்ணையும், பார் என - பாரென்று. காட்டி னின்றான் - எனக்குக் காட்டிநின்றான், எ - று.

மழவரங்கன் என்பவனை யிழித்துப் பாடியது.

20. கள்ளிக்கேன் முள்வேலி கழுதைக்கேன் கடிவாளங் கறுப்பில்லாத, உள்ளிக்கேன் பரிமளங்க ளுவர்நிலத்துக்கேன் விதைகளொடித்துப்போடும், சுள்ளிக்கேன் கோடாலி துடைப்பத்திற்கேன் கவசஞ்சும்மாபோகும், பள்ளிக்கேனதிவீர மழவரங்க பூபனெனும் பட்டந்தானே.

இ - ள். கள்ளிக்கு - கள்ளிச்செடிக்கு, முள்வேலி ஏன் - முள்ளினாற் செய்த வேலியாதுக்கு, கழுதைக்கு கடிவாளம் ஏன் - கழுதைக்கு கடிவாளம் யாதுக்கு, கறுப்பு இல்லாத உள்ளிக்கு - வெள்ளைப்பூண்டுக்கு, பரிமளங்கள் ஏன் - பரிமள திரவியங்கள் யாதுக்கு, உவர் நிலத்துக்கு - களர்நிலத்துக்கு, விதைகள் ஏன் - விதைகள் யாதுக்கு, ஒடித்துப்போடும் - ஒடித்தெறிகின்ற, சுள்ளிக்கு - சுள்ளி விறகுக்கு, கோடாலி ஏன் - கோடாலி யாதுக்கு, துடைப்பத்திற்கு - விளக்குமாறுக்கு, கவசம் ஏன் - மூடல்யாதுக்கு, சும்மாபோகும் பள்ளிக்கு - பயனில்லா திறக்கப்போகிற பள்ளிச்சாதியானுக்கு, அதிவீரம் - மிகுந்த பராக்கிரமமுள்ள, மழவரங்க பூபன் என்னும் - மழவரங்க பூபதியென்கிற, பட்டம் ஏன் - பட்டப்பெயர் யாதுக்கு. எ - று.

ஆரோ தன்மைந்தன்மீது பாடியது.

துறை - நற்றாயிரங்கல்.

21. கயக்காவிநாறுங் குழம்பிற்பிரசண்டா
காரார்கொடைச்செங்கையாரோ தன்மைந்தா
இயக்காநின்மார்பிற்செழும்பன்னையந்தார்
இப்போதுநீநல்கிலென்பேதைமார்பில்
சயக்காமவேளம்புதைத்தாதுழுத்துத்
தாமஞ்சுடாசந்தநம்பூசினாலும்
செயக்காதுவேயோசெவிக்கும்பொறுக்கும்
தீயென்னமீளாதுதிங்கட்கொழுந்தே.

இ - ள். கயம் - ஓடையிற்பூத்த, காவி-குவளை மலர்மாலையையும், நாறும்- பரிமளிக்கிற, குழம்பின் - சந்தனக் குழம்பையு மணிந்த, பிரசண்டா - ப்ரசண்டனே, கார் - மேகத்தின் தன்மை, ஆர் - பொருந்திய, கொடை - ஈகையுள்ள, செங்கை - செவந்த கையினையுடைய, ஆரோ தன்மைந்தா - ஆரோ தனது

புதல்வனே, இயக்கு ஆம் - விளக்க முண்டாகிய, நின்மார்பில் - உன்மார்பில் தரித்த, செழு - செழுமையாகிய, புன்னையந்தார் - புன்னை மலர்மாலையை, இப்போது நீ நல்கின் - இப்பொழுது நீ அருள்செய்தால், என் பேதைமார்பில் - என் பெண்ணினது மார்பில், சயம் - வெற்றியையுடைய, காமவேள் - மன்மதனது, அம்பு - பாணம், தையாது - தைக்காது, முத்துத்தாமம் சுடா - முத்து மாலைகள் சுடமாட்டா, சந்தநம் பூசினும் - சந்தனக்குழம்பைப் பூசினும், செயக்காது - வருத்தாது, வேயோ - வேயங்குழலோசையோ, செவிக்கும் பொறுக்கும் - காதுக்கும் பொறுத்திருக்கும், திங்கள் கொழுந்து - இளம் பிறையானது, தீயென்ன மீளாது - நெருப்புப்போல மீண்டும்வராது, எ - று.

உன்புன்னை மலர்மாலையைத் தந்தாயாயின், என்பெண் மன்மதபாணம் முதலியவற்றால் வருந்தாள் என்பது கருத்து.

திருக்கடன் மல்லையில் சிவந்தான் என்னும் பிரபுவின்மீது பாடியது.

22. சொன்னபன்னாடை தந்தான் வீதியில்வெற்றிலை படித்துச் சுருளுந் தந்தான், கன்னலின் போதிரந்தந்தான் சரப்பணி தந்தானிரட்டைக்கடுக்கன்றந்தான், செந்நெல்விளை யூர்தந்தான் பேர்தந்தான் மல்லையில்வாழ் சிவந்தானுங்கட், கென்னதந்தா னென்றவர்கட் கெத்தனையுத் தரந்தந்தா னியம்பத்தானே.

இ - ள். மல்லையில் வாழ் - திருக்கடன் மல்லையில் வாழ்கின்ற, சிவந்தான் - சிவந்தான் என்னும் பெயருள்ள கொடையாளன், சொன்னம் அன்னம் ஆடை தந்தான் - பொன்னையும் நல்ல போஜனத்தையும் நல்ல வஸ்திரத்தையும் கொடுத்தான், வீதியில் - தெருவில் நின்று, வெற்றிலைச்சுருளும் - வெற்றிலைச் சுருளையும், படித்து தந்தான் - படித்துக் கொடுத்தான், கல்நவில்போதிரம் தந்தான் - கல்லிழைத்த மோதிரத்தையும் கொடுத்தான், சரப்பணி தந்தான் - சரப்பணி யென்னும் ஆபரணத்தையும் கொடுத்தான், இரட்டைக் கடுக்கன் தந்தான் - இரட்டைக் கடுக்கனையும் கொடுத்தான், செந்நெல்விளை ஊர் தந்தான் - செந்நெல் விளைதற்குரிய ஊரையும் கொடுத்தான், பேர் தந்தான் - சிறப்புப்பெயரையும் கொடுத்தான், உங்கட்கு - உங்களுக்கு, என்ன தந்தான் என்பவர்கட்கு - என்ன கொடுத்தானென்று வினவுவோர்க்கு, இயம்ப - சொல்லுதற்கு, எத்தனை உத்தரம் தந்தான் - எத்தனை மறுமொழிகளைக் கொடுத்தான், எ - று.

பரிசில்பெற்று வரும்போது கண்டவர் யாவரும்கேட்க மறுமொழிகூறி அலுத்துக்கூறியது. மல்லையில்வாழ் சிவந்தான் சொன்ன முதலியவற்றைக்கொடுத்தானேயன்றி வினவுவோர்க்குச் சொல்லும் உத்தரங்களைக் கொடுத்திலன் என்பதுகருத்து.

மல்லார்குட்டிச்சுவரெனிலோமாடுமுறைஞ்சுமறைவாகும்
மதியாத்துடைப்பந்தானெனிலோமாடகூடங்களைவிளக்கும்
அல்லாதுலுத்தன்றனக்கிணையாயாரையுரைப்பேன்புவிமீதில்
அவனைக்குறித்துக்கூறுமிடத்தவனுக்கவனேசரிதானே.

இ - ள். கல் - கல்லானது, ஆலயம் ஆம் - கோயிலாகும், தேவரும் ஆம் - தெய்வங்களுமாகும், கழுதை - கழுதையானது, ஈசடர் பொதி சுமக்கும் - இழிசனங்களுடைய பொதியைச்சுமக்கும், கடாவோ - எருமைக்கடாவோ, உழுது பயிரிடற்கு ஆம் - (நிலத்தை) உழுது பயிர்செய்ய உதவும், கட்டம் - மலமானது, பன்றிக்கு இரை ஆகும் - பன்றிக்கு உணவாகும், புல் ஏறு - அற்பமாகிய எருது, ஈசர்வாகனம் ஆம் - சிவபெருமானுக்கு வாகனமாகும், பொதியும்சுமக்கும் - மற்றையர்க்குப் பொதிசுமந்தும் உதவிசெய்யும், பிணம் எனிலோ - பிணமென்றாலோ, பூசி - சந்தனமுதலிய வற்றைப்பூசி, முடித்து - மலர் முதலியவற்றை யணிந்து, மறையோர்க்கு - வேதியருக்கு, பொருளீந்து - பணத்தைக்கொடுத்து, புகழ் எய்தும் - கீர்த்தியை யடையும், மல் ஆர் குட்டிச்சுவர் எனிலோ - வளமாகிய குட்டிச்சுவரென்றாலோ, மாடும் உறைஞ்சும் - மாடுகளும் உறிஞ்சுதற்குதவும், மறைவு ஆகும், மறைவும் ஆகும், மதியா - ஒருபொருளாக மதிக்கப்படாத, துடைப்பம் எனிலோ - விளக்குமாறு என்றாலோ, மாடகூடங்களை விளக்கும் - மாடமாளிகைகளை விளக்கஞ்செய்யும், அல்லாது - இவைகளன்றி, உலுத்தன் தனக்கு இணையாய் - லோபிக்குச் சமானமாக, புவிமீதில் - பூமியின்மீது, யாரைஉரைப்பேன் - யாரைச்சொல்லுவேன், அவனைக்குறித்துக் கூறுமிடத்து - அவனைப்பற்றிச் சொல்லுமிடத்தில், அவனுக்கு அவனே சரி - அவனுக்கு அவனே சமானமாவான், எ - று.

திருவாரூர்த் தியாகராயப்பெருமான் பவனியைத்தரிசித்த தலைவிதன்னிலைமையை பூவைகிள்ளைகளோடு சொல்லியிரங்கல்.

25. வீரவெண்டையப்ரதாபர்தியாகராசர்கமலைசூழ்
வீதிகண்டுபவனிகண்டுவிருந்தைகண்டுபந்தியாய்த்
தூரநின்றபூவைகாளடுத்துநின்றகிள்ளைகாள்
துன்பமேயலாதுபாவிசுகமறிந்ததில்லையால்
மாரனம்புபட்டகாயமாறுதில்லையிரவெலாம்
மங்கைமார்தொடுத்தசண்டைமாறுதில்லையென்செய்வேன்
ஆரிருந்துமுதவியில்லையென்றனாசையொழியுமோ
அதுவுமில்லைவிதியைநொந்துமாவதில்லைகாணுமே.

இ - ள். வீரவெண்டையம் - வீரக்கழலையுடைய, பிரதாபர் - மிகுவீரர், தியாகராஜர் - தியாகராயர், கமலைசூழ் - கமலாலயத்தைச்சூழ்ந்த, வீதிகண்டு - வீதியைநோக்கியும், பவனிகண்டு - அவரது பவனியைநோக்கியும், விருந்தைக

ண்டு - வைபவத்தைநோக்கியும், பந்தியாய் - வரிசையாக, தூரநின்ற பூவை காள்-தூரத்தில்நின்ற நாகணவாய்ப் பறவைகளே, அடுத்துநின்ற கிள்ளைகாள்-கிட்டிநின்றகிளிகளே, துன்பமேஅல்லாது - துன்பமேயன்றி, பாவி - பாவியாகியநான், சுகம் அறிந்ததுஇல்லை - இன்பத்தை யநுபவித்தறிந்ததில்லை, மாரன் அம்புபட்ட காயம் - மன்மதபாணம் தைத்தகாயமானது, மாறுதுஇல்லை - ஆறுவதில்லை, இரவுஎல்லாம் - இராமுழுதும், மங்கைமார்தொடுத்த சண்டை - பெண்கள் தொடங்கினபோர், மாறுவதில்லை-நீங்குதலில்லை, என்செய்வேன்-நான் யாதுசெய்வேன், ஆர்இருந்தும் உதவியில்லை - யாரிருந்தும் சகாயமில்லை, என்றன் ஆசைஒழியுமோ - என்னுடைய ஆசைப்பெருக்கம் நீங்குமோ, அதுவும்இல்லை-அதுவுங்கிடையாது, விதியைநொந்தும் ஆவதுஇல்லை - என்விதியை நொந்துகொண்டாலும் உண்டாவதோர் பயனுமில்லை, எ - று.

முருகர்மீது பாடியது.

சந்தவிருத்தம்.

26. திமிரமறுதபுலாதிகளேதருதேடரிதாய்மாறுஞ
ஜெனனமகாமால்வசமேயா தமுறுசிறுமையின்மதியாலே
குமரசிகாமணியேகனிவாயருள்கூடெனவேகூறுங்
குருபரகோலாகலனேவிதியொடுகுறுகியமிடிதீராய்
நமதுவிநாயகதேவசகோதரநாடோறுமேதேறும்
நவ்விமகள்சேர்வேடுவனேபுதுமணநறுமலர்புனைமார்பா
அமரர்பிரானருள்குஞ்சரிதோள்புணராடவனேமீறும்
அரகரவேலாயுதனேமுதுமறையறுமுகமுருகோனே.

இ - ள். குமர - குமாரக்கடவுளே, சிகாமணியே - யாவருக்கும் சிரோரத்நமே, கனிவாய் - பரிவுகொண்டு, அருள்கூடு எனகூறும் - திருவருளைப் பெறக்கடவை யென்றுசொல்லுகின்ற, குருபர - குரு சிரேஷ்டனே, கோலாகலனே - சம்பிரமமுடையவனே, நமது விநாயகதேவ சகோதர - நமது விநாயகமூர்த்திக்குத் திருத்தம்பியே, நாள்தோறும் தேறும் - தினந்தோறும் சாராசாரங்களை தேர்ந்தறிந்த, நவ்விமகள் - மான்மகளாகிய வள்ளிநாயகியை, சேர் - புணர்ந்த, வேடுவனே - வேடனே, புதுமணம் - புதியவாசனையுள்ள, நறுமலர்-நறுவிய புஷ்பமாலைகளையணிந்த, மார்பா - திருமார்பை யுடையவனே - அமரர் பிரான் அருள் - தேவேந்திரன்பெற்ற, குஞ்சரி - தெய்வயானையின், தோள் புணர் - தோள்களைத் தழுவிய, ஆடவனே - மஹாபுருஷனே, மீறும் அரஅர - உயர்ந்த அரனுக்கரனே, வேலாயுதனே - வேற்படையை யுடையவனே, முதுமறை - பழமையாகிய வேதப்ரதிபாத்யனாகிய, அறுமுக-ஷண்முகனே, முருகோனே - முருகக்கடவுளே, திமிரம்அறுத - அஞ்ஞான இருள்நீங்காத, புலாதிகள் - ஐம்புலன் முதலியவைகள், தரு-தந்த, தேடு அரிதுஆய் - தேடிக்கண்டுகொள்ளல் அருமையாகி, மாறும் - மாறி மாறி வருகின்ற, ஜென்மம்-பிறவிகளிலுண்டாகிய, மகாமால்வசம் - பெரியமயக்கத்தின் வசப்பட்டு, மதம்உறு-

மதமிகுந்த, சிறுமையின் மதியாலே - சிற்றறிவால் உளதாகிய, விதியொடு-ஊழினால், குறுகிய-நேர்ந்த, மிடி-வறுமையை, தீராய் - நீக்கியருள்வாயாக, எ-று.

திமிரமறுதபுளாதிகளேதரு - தேடரிதாய்
மாறுஞ்செனனமகாமால்வசமே - மதமுறு - சிறுமையின்மதியாலே
குமரசிகாமணியேகனிவாயருள் - கூடெனவே
கூறுங்குருபரகோலாகலனே - விதியொடு - குறுகியமிடிதீராய்
நமதுவிநாயகதேவசகோதர - நாடொறுமே
தேறுந்நவிமகள்சேர்வேடுவனே - புதுமணை - நறுமலர்புனைமார்பா
அமரர்பிரானருள்குஞ்சரிதோள்புணர் - ஆடவனே
மீறும்மரகதவேலாயுதனே - முதுமறை - அறுமுகமுருகோனே.

சத்தபங்கியின் பிரிவு.

கட்டளைக்கலித்துறை.

1. திமிரமறுதபுளாதிகளேதருதேடரிதாய்
குமரசிகாமணியேகனிவாயருள்கூடெனவே
நமதுவிநாயகதேவசகோதரநாடொறுமே
அமரர்பிரானருள்குஞ்சரிதோள்புணராடவனே.

கொச்சகம்.

2. தேடரிதாய்மாறுஞ்செனனமகாமால்வசமே
கூடெனவேகூறுங்குருபரகோலாகலனே
நாடொறுமேதேறுந்நவிமகள்சேர்வேடுவனே
ஆடவனேமீறும்மரகதவேலாயுதனே.

கலிவிருத்தம்.

3. மாறுஞ்செனனமகாமால்வசமே, கூறுங்குருபரகோலாகலனே,
தேறுந்நவிமகள்சேர்வேடுவனே, மீறும்மரகதவேலாயுதனே.

சிந்தடிவஞ்சிவிருத்தம்.

4. மதமுறுசிறுமையின்மதியாலே, விதியொடுகுறுகியமிடிதீராய்,
புதுமணைநறுமலர்புனைமார்பா, முதுமறையறுமுகமுருகோனே.

குறளடிவஞ்சிவிருத்தம்.

5. சிறுமையின்மதியாலே, குறுகியமிடிதீராய்.
நறுமலர்புனைமார்பா, அறுமுகமுருகோனே.

### வெண்பா.

26. தேடரிதாய்மாறுஞ்சென்னமகாமால்வசமே
நாடொறும்போதேறுகவிராகள்சேர் — வேடுவனே
ஆடவனேமீறுமாரகாவேலாயுதனே
கூடெனவேகூறுந்தந.

இவற்றிற்கு மேலுள்ள முதற்பாட்டின் பொருளையே உரைத்துக்கொள்க. இந்தப்பாடல் எழுவகையாய்ப் பிரிக்கப்பட்டு எழுபாடலா யமைதலால் சத்த பங்கி எனப்பட்டது.

### மயிலாசல முருகர்மீது பாடியது.

நவபங்கி.

27. அரிமருகாகருணையனேதிடவாரணனேபோதன்
அரியிமையோர்சூழ்புனிதாபுலவடரயிலமர்பொற்கரனே
கரிமுகனேயசகோதரனேபடிகாரணனேநாதங்
கதியுறவேவானவனேநலமிகுகயிலையனற்குருவே
குரவலர்நீபமணிபுயனேவடிகூரமுதேயோதுங்
குருமணிசேர்மார்பினனேயுலகருள்குயிலுதவுத்தமனே
மரகதமாமயில்வாகனனேகொடிவாரணனேகோதின்
பதியகமேவாழ்குமாரதுலவியமயிலமலைக்குகனே.

இ - ள். அரிமருகா - திருமாலுக்கு மருகனே. கருணையனே - கருணைக் கிருப்பிடமானவனே, திட ஆரணனே - எல்லாருக்கும் த்ருடதரப்ரமாணமாகிய வேதப்ரதிபாத்யனே, போதன் - பிரமனும், அரி - திருமாலும், இமையோர் - மற்றைத்தேவரும், சூழ் - சூழ்ந்து வணங்குகின்ற, புனிதா - பரிசுத்தனே, புலவு அடர் அயில்-மாமிசம் பொருந்திய வேலாயுதம், அமர்-பொருந்திய பொன்கரனே - அழகிய கையை யுடையவனே, கரிமுகன் - யானை முகத்தோனாகிய விநாயகனுக்கு, நேய சகோதரனே - அன்புள்ள சகோதரனே, படிகாரணனே - உலககாரணனே, நாதம் கதிஉறவே - நாதவீடாகிய சுற்றமே, வானவனே - தேவனே, நலம்மிகு - நன்மைமிகுந்த, கயிலையன் - கயிலாயபதியாகிய சிவபெருமானுக்கு, நல்குருவே - சிறந்த ஆசாரியனே, குரவு அலர் - குராமலர் மாலையையும், நீபம் - கடப்பமலர் மாலையையும் அணிந்த, மணிபுயனே - அழகிய தோள்களை யுடையவனே, வடிகூர் அமுதே - தெளிவுமிகுந்த அமிர்தமே, ஓதும் குருமணிசேர் - சொல்லப்பட்ட நிறமுள்ள மணிமாலைகள் பொருந்திய, மார்பினனே, திருமார்பை யுடையவனே, உலகு அருள்-உலகங்களையெல்லாம் ஈன்ற, குயில் - குயில்போல் பவளாகிய உமாதேவி, உதவு-பெற்ற, உத்தமனே-நல்லோனே, மரகதம் - மரகத மணிபோன்ற, மா - பெரிய, மயில் - மயிலை, வாகனனே - வாகனமாக வுடையவனே, கொடிவாரணனே - கோழிக்கொடியை

யுடையவனே, கோது இல் - குற்றமற்ற, மதி அகம் - (அன்பரது) அறிவில், வாழ் - வாழ்கின்ற, குமரா - குமரனே, குலவிய - விளங்கிய, மயிலமலை - மயிலா சலத்திலுள்ள, குகனே - குகனே.

அரிமருகாகருணாலயனே - திட - ஆரணனே
போதன்னரியிமையோர்சூழ்புனிதா - புலவட - அயிலமர்பொற்கர
கரிமுகனேயசகோதரனே - படி - காரணனே [னே
நாதங்கதி - யுறவேவானவனே - நலமிகு - கயிலையனற்குருவே,
குரவலர்நீபமணிப்புயனே - வடி - கூரமுதே
ஓதுங்குருமணிசேர்மார்பினனே - உலகருள் - குயிலுதவுத்தமனே,
மரகதமாமயில்வாகனனே - கொடி - வாரணனே
கோதின்மதியகமேவாழ்குமரா - குலவிய - மயிலமலைக்குகனே.

நவபங்கியின் பிரிவு

சிந்தடிவஞ்சிவிருத்தம்.

1. அரிமருகாகருணாலயனே, கரிமுகனேயசகோதரனே
குரவலர்நீபமணிப்புயனே, மரகதமாமயில்வாகனனே.

சிந்தடிவஞ்சிவிருத்தம்.

2. புலவடரயிலமர்பொற்கரனே, நலமிகுகயிலையனற்குருவே,
உலகருள்குயிலுதவுத்தமனே, குலவியமயிலமலைக்குகனே.

கட்டளைக்கலித்துறை.

3. அரிமருகாகருணாலயனேதிடவாரணனே
கரிமுகனேயசகோதரனேபடிகாரணனே
குரவலர்நீபமணிப்புயனேவடிகூரமுதே
மரகதமாமயில்வாகனனேகொடிவாரணனே.

கோச்சகம்.

4. ஆரணனேபோதன்னரியிமையோர்சூழ்புனிதா
காரணனேநாதங்கதியுறவேவானவனே
கூரமுதேயோதுங்குருமணிசேர்மார்பினனே
வாரணனேகோதின்மதியகமேவாழ்குமரா.

சந்தவிருத்தம்.

5. போதன்னரியிமையோர்சூழ்புனிதாபுலவடரயிலமர்பொற்கரனே
நாதங்கதியுறவேவானவனேநலமிகுகயிலையனற்குருவே

**இ - ள்.** துங்கம் - பரிசுத்தமாகிய, வரை - மலைபோன்ற, மார்பா-மார்பை யுடையவனே, துரைரங்க பூபதியே - துரைரங்கன் என்னும் பூபனே, இங்கு- இவ்விடத்தில், ஓர் புதுமை - ஒருபுதியசெய்தி உண்டு, இயம்பக்கேள் - அதை நான் சொல்லக் கேட்பாயாக, (என்னெனின்) பங்கயம்கை - தாமரை மலர் போலுங் கையினையுடைய, ஆயிழைக்கு-பெண்ணுக்கு, நுதல் நான்கு- நெற்றி நான்கு, குழை ஐந்து - காதணி ஐந்து, முலைஆறு-தனங்கள் ஆறு, மாயம் விழி ஏழ் - வஞ்சகமுள்ள கண்கள் ஏழு, ஆம் - ஆகும், மதி - (இந்தப்புதுமையை நீயே) ஆலோசித் தறிவாயாக, எ - று.

**ஆயிழை** - கன்னி - (ராசி), இதற்கு நான்காவது ராசி தநுசு - (வில்)
,, ,, ,, ,, ஐந்தாவது ராசி, மகரம் - (மகரமீன்)
,, ,, ,, ,, ஆறாவது ராசி - கும்பம் - (குடம்)
,, ,, ,, ,, ஏழாவது ராசி - மீனம்-(கெண்டைமீன்)

ஒருபெண்ணுக்கு வில்லை நிகர்த்த நெற்றியும்,
மகரமீனுருவமைந்த காதணியாகிய மகரகுண்டலமும்,
குடம்போலுந் தனங்களும்,
கெண்டைமீன்போலுங் கண்களும் உளவென்பது கருத்து.

கொண்டுவந்து போட்டுக் கொளுத்தென்று முடிவுபெற ஒரு
வெண்பாப் பாடவேண்டுமென்று ஒருபுலவர் கம்மை
கேட்கப் பாடியது.

2. அந்திவெடிமுல்லை யரும்பெடுத்துநான் வந்தேன்
விந்தையதா நாயகற்கு மெல்லியலே - சுந்தரஞ்சேர்
செண்டுகட்டவேண்டுந் திருவிளக்கிலே திரியைக்
கொண்டுவந்துபோட்டுக்கொளுத்து.

**இ- ள்.** மெல்லியலே - மிருதுவாகிய சுபாவமுள்ள தோழியே, அந்தி - மாலைக்காலத்தில், வெடி - மலர்கின்ற, முல்லை அரும்பு - முல்லைமுகைகளை, நான் எடுத்துவந்தேன் - நான் பறித்துவந்தேன், (அவற்றை) விந்தை ஆக - ஆச்சரிய முண்டாக, நாயகற்கு - தலைவனுக்கு, சுந்தரம் சேர் - அழகு பொருந்திய, செண்டு கட்டவேண்டும் - செண்டாகக் கட்டவேண்டும், திருவிளக்கிலே - திருவிளக்கின் கண், திரியை கொண்டுவந்து போட்டுக் கொளுத்து - திரியைக் கொண்டுவந்துபோட்டுக் கொளுத்திவிடு, எ- று.

தலைவியிரங்கல்.

3. சித்திரமாமண்டபங்கடென்றல்வருசாளரங்கள்
பத்தியுலாவும்பளிக்கறைகள் - இத்தனைவிட்
டிக்குச்சிலையானிருப்பிடமென்றார்சொன்னா
ரிக்குச்சிலையானுக்கின்று.

கப் பொருளில்லாதிருப்பதினும் இறப்பதே நலமென்றெண்ணி, தமது வீட்டின் பின்புறத் தோட்டத்திலுள்ள ஒரு புற்றில் கையைவைத்தார், அந்தப் புற்றிலிருந்த பாம்பு அவர்கையில் தன் தலையிலிருந்த மாணிக்கத்தை உமிழ்ந்துபோய்விட்டது. முதலியார் மனமகிழ்ந்து அதனை அந்த வித்வானுக்குப் பரிசிலாகக் கொடுத்தனுப்பினார், அவர் அதைவாங்கிக்கொண்டு விக்கிரயஞ்செய்தற்காக அந்நாட்டரசனிடத்திற்சென்றனர், அரசன் இந்த ரத்நம் உமக்குக் கிடைத்ததெப்படியென்று வினவ, அவர் நடந்த செய்தியைச் சொல்லக்கேட்ட அரசன் கோபங்கொண்டு காளத்தியப்ப முதலியாரை வரவழைத்து, நான் உமது பொருள்களைக் கவர்ந்தபோது இதையெவ்விடத்தில் ஒளித்துவைத்திருந்தீர், இன்னும் இதுபோன்ற எவ்வெப்பொருள்களை ஒளித்துவைத்திருக்கின்றீர் என்று வருத்த, முதலியார் நடந்த செய்தியை உண்மையாய்ச்சொன்னார். அதுகேட்ட அரசன் நீர்சொன்னது உண்மையாயின் நாம்பார்க்க அந்தப் பாம்பு வந்து தன்னிடத்துள்ள ஜீவரத்நத்தை உமிழும்படி செய்வீராயின் ஒப்புக்கொள்வோம். அப்படி செய்யாதிருந்தால் உமது சிரசைவாங்கி விடுவோமென்றான், அதுகேட்ட முதலியார் அப்படியே செய்கிறேனென்று அரசனையழைத்துப்போய் அந்தப்புற்றை வலம்வந்து நீ முன்னேயெனக்கு இந்த ரத்நத்தைக் கொடுத்தது உண்மையானால் உன்னிடத்திலுள்ள ஜீவரத்நத்தையும் இவ்வரசன்காண எனக்குக் கொடுத்தருளவேண்டுமென்று வணங்கினார், அப்பாம்பு புற்றினின்றும் வெளிப்பட்டுவந்து முதலியாரைப் பிரதக்ஷிணஞ்செய்து அவர்கையில் தன் ஜீவரத்நத்தையுமிழ்ந்து இறந்துபோயிற்று. அதுகண்ட அரசன் அச்சமுற்று அவரை நமஸ்கரித்து அவரிடத்திலிருந்து தான் முன்கவர்ந்த பொருள்களையும் தன்னிடத்திலிருந்த திரவியங்களையுங்கொடுத்து, சிறியேன் உமது மகிமையை அறியாது செய்த அபராதத்தை க்ஷமித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்து வணங்கிச்சென்றனன். பிறகு முதலியார் வழக்கம்போலவே வருகிற வித்வான்களுக்கு வேண்டிய பொருள் கொடுத்து அவர்களை மனமகிழ்வித்துக்கொண்டிருந்து இறுதிக்காலத்தில் சிவபதமடைந்தார் என்பது கர்ணபரம்பரையாய்க் கேட்டசெய்தி.

### பிரம்பூர் ஆநந்தரங்கப் பிள்ளையின்மீது பாடியது.

5. உலங்கொண்ட மணிப்புயனே பிரம்பூரானந்தரங்கா வுன்பாற்
செல்ல, வலங்கொண்ட கருடனையா மிடங்கண்டோ மெழினரையான்
வலத்தேகண்டோம், பொலங்கொண்ட மாளிகையாட மீமிசைபிற்புறவ
ழும்புதுவையென்னும், தலங்கண்டோ நினதுசுக முகங்கண்டோமி
னிவேண்டுந் தனங்கண்டோமே.

இ - ள். உலம்கொண்ட - திரள் கல்லினுருவத்தைக்கொண்ட, மணி - அழகாகிய, புயனே - தோள்களையுடையவனே, பிரம்பூர் ஆனந்தரங்கா - பிரம்பூர் ஆநந்தரங்கனே, உன்பால்செல்ல - உன்னிடத்திற்குவர, வலங்கொண்ட கருடனை - வலமாகவந்தகருடனை, யாம் இடம்கண்டோம் - யாம்இடம் வரப்பார்த்தோம், எழில்நரையான் - அழகாகிய சிச்சிலிக்குருவியை, வலத்தேகண்

த்தி, உயர் - உயர்ந்த, செங்கோல் நடாத்தும் - செங்கோல் நடாத்துகின்ற, அரங்கா - அரங்கனே, நின்பக்கம்இருக்க - உன்பக்ஷமிருக்கும்போது, ஒருநாளும் பறவேன் பறவேன் பறவேன் - ஒருகாலத்திலும் பறவேன் பறவேன் பறவேன், எ - று.

### ஒருபெண்ணைக்கண்டு மோகித்துப் பாடியது.

மூவொன்பதென்பதிலோர்நாளில்லைமொய்வனத்தில்
தாவுந்தனிமிருகந்தானில்லை — நேரே
வளையாநடையில்லைவாரிறுகவிம்மும்
முலையாளையான்முயங்குதற்கு.

இ - ள். வாரிறுக - கச்சு இறுகும்படி, விம்மும் முலையாளை - பருத்த தனங்களையுடையவளை, யான் முயங்குதற்கு - நான் தழுவுதற்கு, மூவொன்பது என்பதில் - இருபத்தேழு நக்ஷத்திரங்களில், ஓர் நாள் இல்லை - ஒருநக்ஷத்திரமில்லை, மொய்வனத்தில் - நெருங்கிய காட்டில், தாவும் - தாண்டித் திரிகிற, தனிமிருகம்இல்லை - ஒப்பற்றமிருகமில்லை, நேரேவளையா நடைஇல்லை - நேராகவளையா நடையுமில்லை, எ - று.

மூவொன்பதென்பதிலோர்நாள் - உத்தரம் (மறுமொழி), மொய்வனத்தில் தாவுந்தனிமிருகம் - வேங்கை (பொன்), நேரேவளையா நடை - அன்னம் (சோறு), இந்தப்பெண்ணை நான் தழுவுதற்கு ஒரு மறுமொழியுஞ் சொல்லாள். என்னிடத்தில் பொன்னும் அன்னமும் இல்லை, எப்படித் தழுவுவேனென்பது கருத்து.

### வேதாசலம் என்னும் பிரபுவின்மீது பாடியது.

௧. தனம்பொன்பணம்படைத்தசம்பரிபாம்பான்றோர்
முனம்பிச்சைகள்வனிலமூட்டை — கனம்பெற்ற
மீதலத்தும்போற்றுகின்றவேதாசலாநினைப்போல்
ஈதலத்தமார்கிலரேயென்.

இ - ள். தனம்படைத்த சம்பு - தனத்தைப் படைத்தசிவனும், பொன்படைத்த அரி - பொன்னைப் படைத்த திருமாலும், பணம் படைத்தபாம்பு-பணத்தைப்படைத்த ஆதிசேடனும் ஆகிய, ஆன்றோர் - இத்தன்மையோர், முன்னம் - முற்காலத்தில் (முறையே), பிச்சை - பிச்சையேற்பவராயும், கள்வன் - திருடராயும், நிலமூட்டை - பூமியாகிய மூட்டையைச் சுமப்பவராயும் (இருந்தார்களேயன்றி), கனம்பெற்ற - பெருமைபெற்ற, மீதலத்தும் போற்றுகின்ற- விண்ணுலகத்திலும் புகழ்ப்படுகிற, வேதாசலா - வேதாசலனே, நினைப்போல்- உன்னைப்போல், ஈதல் அத்தம்ஆர்கிலர் - கொடைக்கையைப் பெற்றிலர், என்- (காரணம்) யாது, எ - று.

தன்னம் - மான்கன்று, இதுதனம் எனத்தொகுத்தது. பொன் - இலக்குமி, பணம் - படம், பாம்பு - பாப்பு எனவலித்தது. மானைத்தரித்த சிவன்

பிச்சையெடுத்தான், இலக்குமியைப்படைத்த திருமால் திருடினன், படத்தைப்பெற்ற ஆதிசேஷன் பூபாரத்தைச் சுமந்தான் என்பது கருத்து.

### சீனிவாசையன் என்னும் அந்தணன்மீது பாடியது.

துறை - தலைவியிரங்கல்.

10. சேராநாளெல்லாம்வெண்டிங்களன்னமேசேர்ந்தால்
ஆராவமுதாமென்னாச்சரியம் • ஓராமல்
நானிவாசைமேவநரசையன்றந்தருளுஞ்
சீனிவாசையன்மணஞ்செய்து.

இ - ள். அன்னமே - அன்னமே, ஓராமல் - ஆராயாமல், நான் - யான், இ ஆசைமேவ - இந்தப் [illegible] யுடைய, நரசையன் தந்தருளும் - நரசையன்பெற்றருளிய, சீனிவாசையன் - சீனிவாசையன் என்பவன், மணம் செய்து - விவாகஞ்செய்து, சேரா நாள் - என்னைக் கூடாதநாளில், வெள் திங்கள் - வெண்மையாகிய சந்திரன், எல் ஆம் - சூரியனாகின்றான், சேர்ந்தால் - கூடினல், ஆரா அமுது ஆம் - தெவிட்டாத அமுதம் ஆகிறான், என் ஆச்சரியம் - என்ன ஆச்சரியம், எ - று.

அன்னமே - தோழி என்றலுமொன்று, சீனிவாசைமேவ என்பதற்கு - நானிந்த ஆசையைப்பெருக்க எனினுமமையும்.

### கலைசை வேதாசலன்மீது பாடியது.

11. அஞ்சம்பின்னெய்துமன்னநடைக்கன்னிகையை
அஞ்சம்பினலெய்யுமப்பாவி • நெஞ்சமுறும்
காவிக்கணந்தார்கலைசைவேதாசலனே
காவிக்கணந்தார்கடந்து.

இ - ள். அஞ்சம் - அன்னங்கள், பின்னால் எய்தும் - பின்தொடர்தற்குரிய, அன்ன - அப்படிப்பட்ட, நடை - நடையையுடைய, கன்னிகையை - பெண்ணை, அஞ்சு அம்பினால் எய்யும் - பஞ்சபாணங்களால் எய்கின்ற, அப்பாவி - அந்தப்பாவியாகிய மன்மதன், நெஞ்சம் உறும் - மனத்தில் பொருந்தியிருக்கிறான், காவிக்கண் - கருங்குவளை மலர்மீது, நந்து ஆர் - சங்குகள் தவழ்கின்ற, கலைசை வேதாசலனே - கலைசையில்வாழும் வேதாசலனே, இக்கணம் - இந்தக்ஷணமே, தார்கள் தந்து - உன்மாலைகளைக்கொடுத்து - கா - ரக்ஷி, எ - று.

காவி கள் நந்து ஆர் எனப்பிரித்து - குவளைமலர்த்தேனைச் சங்குகள் உண்ணுகின்ற என்றலுமாம். காவிக்கணந்தார் - குவளைமலர்த் தொகுதியாற் சமைத்த மாலையைத்தரித்த எனப்பொருள் கூறுதலும் ஒருவாறு பொருந்துமாயினும் ஈற்றடியில் தார் என்பது மாலையென்றே பொருள்கொள்ளக் கிடத்தலால் பொருத்தப் பொருளன்றென்க.

இதுவுமது.

12. மதுமேவு குவளையணி புயனென்றேனை
மருவனஞ்சூழ் கலசைநகர் மன்னென்றேனை
முதுநீதி தெய்வசிகாமணி பாலுக்கு
மூத்தவொரு மகனென நான் மொழிந்திட்டேனை
பதுமாசனத்திமகனென்மேற்சமரடை
பண்ணுகின்றானவனாற்படுந்துன்பத்தால்
இதுவேதாசலமென்றேனிதற்கென்னன்னை
ஏதேதோவைதுபழிபிடிக்கின்றாளே.

**இ - ள்.** மதுமேவு - தேன்பொருந்திய, குவளை - குவளைமலர்மாலையை, அணி - அணிந்த, புயன் என்றேனை - தோள்களையுடையவன் என்று சொன்னேனை, மருவனம் சூழ் - வாசனை பொருந்திய சோலைசூழ்ந்த, கலசைநகர்மன் என்றேனை - கலசைநகருக்கு இறைவனென்று சொன்னேனை, முதுநீதி - உயர்ந்த நீதிமார்க்கத்தை யுடைய, தெய்வசிகாமணி பாலுக்கு - தெய்வசிகாமணி யென்னும் பெரியோனுக்கு, ஒரு - ஒப்பற்ற, மூத்தமகன் என - மூத்த குமாரன் என்று, நான்மொழிந்திட்டேனை - நான் சொன்னேனை, பதும ஆசனத்திமகன் - தாமரை மலரை ஆசனமாகவுடைய திருமகளுக்கு புதல்வனாகிய மன்மதன், என்மேல் சமரடை பண்ணுகின்றான் - என்மேற் போர்செய்கிறான், நான் அவனால்படும் துன்பத்தால் - நான் அவனால் அடைகின்ற துன்பத்தினால், இது வேதாசலம் என்றேன் - இது என்ன துன்பம் என்று சொன்னேன், இதற்கு - இதைச்சொன்னதற்கு, என் அன்னை - என் தாயானவள், ஏதேதோ வைது - ஏதேதோ திட்டி, பழி பிடிக்கின்றாள் - நிந்தை சுமத்துகின்றாள், எ - று.

இது வேதாசலம் என்பதை இது வேதாசலம் எனப்பிரித்துப் பிரபுவின் பெயராகக்கொள்க.

இதுவுமது.

13. பூங்கமலன் கலைசைவேதாசலன் போலுருவமைக்கும் பொற்பிலானென்றாங்கயலார் சொலக்கேட்டு வாணியரிபாலுரைக்கவடைந்தாளன்னோன், தூங்குவனம்போயிருந்தானரனிடத்திற் சொலப்பித்தாய்ச் சுழலலுற்றான், எங்கியந்தத் திறங்கற்பா ரிவனுளில் வீற்றிருந்தாளெழிற்கண்மானே.

**இ - ள்.** பூகமலன் - பொலிவாகிய தாமரைமலரை யிடமாகவுடைய பிரமன், கலசை - கலசைநகரில் வாழ்கின்ற, வேதாசலன்போல் - வேதாசலன்போல, உரு அமைக்கும் - உருவமுண்டாக்குகின்ற, பொற்பு இல்லான் என்று - திறமை யில்லாதவனென்று, ஆங்கு அயலார் சொல்லக்கேட்டு - பிறர் சொல்லக்கேட்டு, வாணி - சரசுவதி, அரிபால் உரைக்க அடைந்தாள் - திருமாலினிடத்தில் சொல்லப்போனாள், அன்னோன் - அந்தத்திருமால், தூங்குவனம்போ

ய் இருந்தான் - தூங்குதற்குரிய வனத்துக்குப் போயிருந்தான், அரனிடத்தில் சொல்ல - சிவனிடத்தில் சொல்ல, பித்தாய் சுழலல் உற்றான் - அவன்பித்தனாகிச் சுழலாநின்றான், ஏங்கி - ஏக்கமுற்று, அந்த திறம் கற்பான் - அந்தத்திறமையைக் கற்கும்பொருட்டு, இவன் நாவில் வீற்றிருந்தாள்-இந்த வேதாசலனது நாவில் வீற்றிருந்தாள், எழில் கண்மானே-அழகிய கண்ணையுடைய சரசுவதி எ-று.



## ஒப்பிலாமணிப்புலவர் பாடல்,



### குமணராஜன் தன் தமையனோடு விரோதப்பட்டு காட்டில் இருந்த போது அவனிடம் சென்று பாடிய அகவல்.

1. ஆடெரிபடர்ந்தகோடுயரடுப்பின்
ஆம்பிபூப்பத்தீம்பசியுழவ
இல்லிதூர்ந்தபொல்லாவறுமுலை
சுவைதொறுஞ்சுவைதொறும்பால்காணமல்
குழவிதாய்முகநோக்க
மனைவியென்முகநோக்கயாமும்
நின்முகநோக்கிவந்தனங்குமண.

இ - ள். குமண - குமணராஜனே, ஆடெரிபடர்ந்த - அசையாநின்ற அக்கினிச்சுவாலைகளையடர்ந்த, கோடுயர் அடுப்பில் - கொம்புயர்ந்த அடுப்பில், ஆம்பிபூப்ப - காளான் பூக்கவும், தீம்பசி உழவ - கொடியபசியென்னும் பொருள் நீங்காது உழலவும், இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை - துளை தூர்ந்தனவாகிய அழகற்ற வெறுமுலைகளை, சுவை தொறும் சுவை தொறும் - சுவைக்குந் தோறும் சுவைக்குந்தோறும், பால் காணமல் - பால் சுரக்கக்காணமல், குழவி தாய்முகம் நோக்க - குழந்தை தாயின் முகத்தைப் பார்க்க, மனைவி என்முகம் நோக்க - மனையாள் என்முகத்தைப் பார்க்க, யாமும் - நாமும், நின்முகம் நோக்கிவந்தனம் - உன்முகத்தைப் பார்த்துவந்தோம், எ - று.

### அதைக்கேட்ட குமணராஜன் சொல்லிய அகவல்.

2. அந்தநாள்வந்திலையருந்தமிழ்ப்புலவோய்
இந்தநாள்வந்துநீநொந்தெனையடைந்தாய்
தலைதனைக்கொடுபோய்த்தம்பிகைக்கொடுத்ததன்
விலைதனைப்பெற்றுன்வெறுமைநோய்களையே.

இ - ள். அருங்கவி புலவோய் - அருமையாகிய கவிபாடுதலில் வல்லபுலவனே, நீ அந்தநாள் வந்திலை - நீ அந்நாளில் வந்தாயில்லை, இந்தநாள் - இந்நாளி

ல், நொந்துவந்து என்னை அடைந்தாய் - வருந்திவந்து என்னைச் சேர்ந்தாய், (ஆயினும்அஞ்சவேண்டாம்) தலைதனை கொடுபோய் - என் தலையைக் கொண்டு போய், தம்பிகைகொடுத்து - என் தம்பியின் கையில்கொடுத்து, அதன்விலைதனை பெற்று - அதன்கிரயப் பொருளைப்பெற்று, உன்வெறுமை நோய்களை - உன் வறுமையாகிய பிணியை நீக்குவாயாக, எ - று.

அந்தநாள் என்றது தன் தமயனோடுகூடி அரசாண்டுகொண்டிருந்த காலத்தை. இக்குமுண ராஜனிடத்தில் பொருளில்லாமையாலும், தன்னிடத்தில் உள்ள பகையால், தன்தலையை வெட்டிக் கொண்டுபோய்க் கொடுப்பவர்களுக்கு ஆயிரம்பொன் தருவதாக அரசாளும் தன் தம்பி பறைசாற்றியதை யறிந்திருந்தமையாலும், புலவன் வறுமையைக் களையும்பொருட்டுத் தன் தலையைக் கொடுக்க இசைந்தான்.

புலவர் குமுணராஜன் தலைபோல் பொய்த்தலை செய்வித்துக்கொண்டு போய்க்கொடுத்து பொன்னைப்பெறவிரும்பி, மாந்தையென்னும் ஊரில்வாழ்கின்ற கம்மாளனைநெருங்கிக்கண்டு, குமுண ராசன் தலைபோல்செய்து தரவேண்டும் என்று கேட்க அவன்செய்துகொடுத்த பொய்த் தலையை வியந்து பாடியது.

3. மாந்தையிலே வாழுமகுடத்தியாகியுனக்
கேந்துதழும்பிரண்டுண்டு - வேந்தர்
முடித்தழும்புன் காலிலே முத்தமிழோர்க்கீயும்
படித்தழும்புன் கையிலே பார்.

இ - ள். மாந்தையிலே வாழும் - மாந்தையென்னும் ஊரில் வாழ்கின்ற, மகுடத்தியாகி - மகுடதானம் செய்வோனே, உனக்கு ஏந்துதழும்பு இரண்டு உண்டு - உனக்குத் தாங்குதற்குரிய வடுக்கள் இரண்டுண்டு, (எவ்விடத்துண்டெனின்) உன்காலிலே - உன்பாதத்தில், வேந்தர் முடித்தழும்பு - அரசரது முடிபட்ட வடுக்களுண்டு, உன்கையிலே-உன்கையில், முத்தமிழோர்க்கு ஈயும்-முத்தமிழ்ப் புலவருக்கு அளந்து கொடுக்கின்ற, படித்தழும்பு - படிபட்ட தழும்பு உண்டு, பார் - நோக்கு, எ - று.

அரசன் தன்தம்பியாகிய குமுணனை வியந்து பாடியது.

4. வெம்புங்காலைவெதும்பிவிழுஞ்சிரம்
செம்பொன்கோடிவிலையெனச் சிந்தித்தான்
உம்பர்நாடுமுலகினுந்தேடினும்
எம்பிபோலெமக்கியாவருரியரே.

இ - ள். வெம்புங்காலை - பகைவர் வெட்டுங் காலத்தில், வெதும்பி விழும் சிரம் - கொதித்து விழுகின்ற தலையானது, கோடி செம்பொன் விலையெனச்

சிந்தித்தான் - கோடி செம்பொன் விலைபெறுமென்று கருதினான், (ஆதலால்) உம்பர்நாடும் - தேவலோகத்திலும், உலகினும் - இவ்வுலகத்திலும், தேடினும் - தேடினாலும், எம்பிபோல் - என் தம்பியைப்போல, எமக்கு உரியவர் யாவர் - எமக்குரியராவார் யாருளர், எ - று.

### புலவர் குமணராசன்மீது பாடியது.

5. ஆறுபெருக்கற்றருந்திடர்தான்பட்டாலும்
ஊறலமையாதோவுலகாற்றத் - தேற
வறிமையேயானாலுமென்கலியைமாற்றச்
சிறிமையோசீர்க்குமுணைப்ப.

இ - ள். சீர்க்குமுணை - சிறப்புள்ள குமுணனே, ஆறுபெருக்கு அற்று - ஆறானது நீர்ப்பெருக்குதலொழிந்து, அருந்திடர்தான் பட்டாலும் - மிக்க மணல் மேடுகளாய் விட்டாலும், உலகு ஆற்ற - உலகத்தாருடைய தாகந்தணித்தற்கு, ஊறல் அமையாதோ - அதன் கண்ணுள்ள ஊற்றுப்போதாதோ, (அதுபோன்ற நீயும்) தேற வறிமையே ஆனாலும் - விசாரிக்க வறியனே யாயினும், என்கலியை மாற்ற - என் வறுமையைத் தீர்க்க, சிறிமையோ - சிறிமை யாவையோ, எ-று.

### முருகர்மீது பாடியது.

மன்மதனை நோக்கித் தலைவி கூறியது.

6. வில்லைவளையாதே மீசைமுறுக்கிச்சினந்து
முல்லைமலரம்பையென்மேன்மோதாதே - நில்லடா
வந்தாரடாமுருகர்வந்துகடப்பந்தாரைத்
தந்தாரடாமன்மதா.

இ - ள். மன்மதா - மன்மதனே, முருகர் - முருகக் கடவுளானவர், வந்தார் அடா - வந்தாரேடா, வந்துகடப்பந் தாரைத்தந்தார் அடா - வந்து கடப்ப மலர் மாலையைத் தந்தாரேடா, (ஆதலால் இனி நீ) வில்லை வளையாதே - உன் கரும்புவில்லை வளைக்காதே, மீசை முறுக்காதே - உன்மீசையை முறுக்காதே, முல்லை மலர் அம்பை - முல்லைப்பூவாகிய பாணத்தை, என்மேல் மோதாதே - என்மேல் ஏவாதே, நில்லடா - நில்லேடா, எ - று.

முருகர் தமது மாலையைத் தந்தாராதலால் இனி உன் ஆண்மைபயன் படா தென்பதாம்.

### திருச்செந்தூர் முருகர்மீது பாடியது.

அன்னவிடுதூது.

7. செந்திற்குமாரன்றிருவழகைக்கண்டவுடன
வந்திக்குமாரன்வதைக்கிறான் - அந்திக்கு

முன்னமேசென்றெனதுமோகமெலாஞ்சொல்லிவந்தால்
அன்னமேகும்பிடுவேன்யான்.

இ - ள். அன்னமே - அன்னப்பறவையே, செந்திற்குமாரன் - திருச்செந்தூர்க் குமாரவேளின், திரு அழகை கண்டவுடன் - சிறந்த அழகைப் பார்த்தவுடனே, இக்குமாரன்-கரும்பு வில்லையுடைய மன்மதன், வந்துவதைக்கிறான்-வந்து வருத்துகின்றான், (ஆதலால்) அந்திக்கு முன்னமே சென்று - அந்திக்காலம் வருவதற்கு முன்பே போய், எனது மோகம் எல்லாம் சொல்லி வந்தால்-என் விருப்பத்தை யெல்லாம் அவருக்குச் சொல்லி மீண்டு வருவையாயின், யான் கும்பிடுவேன் - நானுன்னை நமஸ்கரிப்பேன், எ - று.

தூதுவறேநீ தலைவி கூறியதாகப் பாடியது.

௮. தங்கடனமிருக்கத்தார்வேந்தரெல்லோரும்
எங்கடனத்துக்கேயிச்சிப்பார் - எங்கடனம்
கச்சிருக்கும்பாலிருக்குங்காமபாணங்கள்பட்டுப்
பிச்சிருக்கும்வேண்டாம்பிள்ளாய்.

இ - ள். பிள்ளாய் - குழந்தாய், தார்வேந்தர் எல்லோரும் - மாலையை யணிந்த அரசரெல்லாம், தங்கள் தனம் இருக்க - தங்கள் பொருளிருக்க, எங்கள தனத்துக்கே இச்சிப்பார் - எங்கள் பொருளையே விரும்புவார்கள், எங்கள் தனம் - எங்கள்பொருள், கச்சு இருக்கும் - வெறுக்கப்பட்டிருக்கும், பால் இருக்கும் - பாகங்களுக் குரியதாயிருக்கும், காமபாணங்கள் பட்டு பிச்சு இருக்கும்-மன்மதபாணங்கள் படுதலால் பிதிர்ந்திருக்கும், (ஆதலால்) வேண்டாம் - (எங்கள்பொருள் உம்மரசருக்கு) வேண்டாம்.

எங்கள்தனம் - எங்கள் முலையென வேறொரு பொருள், இப்பொருட்கு, கச்சு - ரவிக்கை, பால்-அமுதம், பிச்சு - பிக்கப்பட்டு என்றுரைகூறுக.

கூவத்து நாரணன் என்னும் பிரபு இறந்ததற்கிரங்கி
யமனைக்குறித்து நிந்தித்துப் பாடியது.

9. இடுவோர்சிறிதிங்கிரப்போர்பெரிது
கெடுவாய்நமனேகெடுவாய் - படுபாவி
கூவத்துநாரணனைக்கொன்றாயேகற்பகப்பூங்
காவெட்டலாமோகரிக்கு.

இ-ள். கெடுவாய் நமனே - கெடுவோயாகிய யமனே, இங்கு - இவ்வுலகத்தில், இடுவோர் சிறிது - கொடுப்போர் சிலர், இரப்போர் பெரிது - யாசிப்போர் பலர், (அப்படியிருக்க) படுபாவி - மிகுபாவியே, கூவத்து நாரணனைக் கொன்றாயே—, கரிக்கு - கரியின்பொருட்டு, கற்பகப்பூகாவெட்டல் ஆமோ-கற்பகப்பூஞ் சோலையைவெட்டுதல் தகுமோ. எ - று.

## செய்யூர் நயினான்மீது பாடியது.

தலைவிகூற்று.

10. மையூருங்கண்ணார்மயங்கப்பொருகரும்பு
கையூருங்காமாவுன்கண்ணிணை - செய்யூர்
வளவனயினான்பிரிந்தவாறுனக்குச்சொன்ன
உளவனையின்றென்றுரை.

இ - ள். மையூரும் கண்ணார் மயங்க - அஞ்சனம் எழுதியகண்களையுடைய மாதர் மயங்கும்படி, பொரு - போர்செய்கிற, கரும்பு - கரும்பு வில்லை, கையூரும் - கைக்கொண்ட, காமா - மன்மதனே, செய்யூர் வளவன் நயினான் - செய்யூரில் வாழ்கின்ற சோழனை யொத்த நயினான் என்பவன், பிரிந்த ஆறு - என்னைப்பிரிந்த விதத்தை, உனக்குச்சொன்ன உளவனை - உனக்குச்சொல்லிய உளவாளனை, இன்றென்று - இன்னவனென்று, உரை - எனக்குச் சொல்வாயாக, எ - று.

துறை - இராநீடத் தலைவியிரங்கல்.

11. ஆழிவாய்ச்சத்தமடங்காதோநான்வளர்த்த
கோழிவாய்மண்கூறுகொண்டதோ - ஊழி
திரண்டதோகங்குலினகரனுந்தேரும்
உருண்டதோபாதாளத்துள்.

இ - ள். ஆழிவாய்ச் சத்தம் அடங்காதோ - கடலினிடத் துண்டாகின்ற ஓசையானது அடங்கமாட்டாதோ, நான்வளர்த்த கோழிவாய் மண்கூறு கொண்டதோ - நான்வளர்த்த சேவலின் வாயில் மண் திணிக்கப்பட்டதோ, கங்குல் - இந்த இராத்திரியானது, ஊழிதிரண்டதோ - அநேக கற்பங்கள் திரண்டொரு வடிவமாயிற்றோ, தினகரனும் தேரும் பாதாளத்துள் உருண்டவோ - சூரியனும் அவனது தேரும் பாதாளத்தில் உருண்டு போயினவோ, எ - று.

இராக்காலம் நீட்டித்ததனால் வருந்தி இவ்வாறுகூறினள்.

இதுவுமது.

12. அரவங்கரந்ததோவச்சுமரமிற்றுப்
புரவிகயிறுருவிப்போச்சோ - இரவிதான்
செத்தானோவில்லையோதீவினையோபாங்கியெனக்
கெத்தால்விடியுமிரா.

இ - ள். அரவம் கரந்ததோ - பாம்பு மறைத்ததோ, அச்சுமரம் இற்று - அச்சுமரம் முறிந்து, புரவி - தேர்க் குதிரைகள், கயிறு உருவிப்போச்சோ - கயிறுருவிப்போயிற்றோ, இரவிதான் - சூரியன்தான், செத்தானோ இல்லையோ -

இறந்தானோ இல்லையோ, தீவினையோ - என் தீவினைப்பயன்தானோ, பாங்கி - தோழீ, எனக்கு எத்தால் - எனக்கு எவ்வகையால், இராவிடியும் - இரவுவிடியும், எ - று.

துறை - நற்றாயிரங்கல்.

13. முலையுங்குழலுமுளைப்பதற்குமுன்னே
கலையும்வளையுங்கழன்றாள் - மலையிற்
சிராப்பளியானேறிவருஞ்சேவின்மணியோசைக்
கிராப்பளியுங்கொள்ளாளிவள்.

**இ - ள்.** முலையும் குழலும் முளைப்பதற்கு முன்னே - தனங்களும் கூந்தலும் அரும்புதற்கு முன்பே, கலையும் வளையும் கழன்றாள் - ஆடையும் வளையலும் கழலப்பெற்றாள், மலையில் சிராப்பள்ளியான் ஏறிவரும் - மலைபோல்நின்ற சிராப்பள்ளியான் ஏறிவருகிற, சேவின் மணி ஓசைக்கு - இடபத்தின் மணியொலிக்கு, இவள் இராப்பள்ளியும் கொள்ளாள் - இவள் இரவிலும் தூங்காள், எ - று.

துறை - தலைவி தலைவனொடு புலத்தல்.

14. பாண்டியன்றாரானேன்பசலைமுலையானேன்
ஆண்டிகையிலேந்தியதொன்றானேனே - வேண்டியபோ
துள்ளங்கைத்தேனானேனோர்மதலைபூத்தபின்
உள்ளங்கைத்தேனானுனக்கு.

**இ - ள்.** உனக்கு - உனக்கு, நான் - யான், பாண்டியன்தார் ஆனேன் - பாண்டியன் மாலையானேன், பசலை முலையாய் ஆனேன் - பசலை நிறம் போர்த்த தனங்கள் பாலாகப்பெற்றேன், ஆண்டிகையில் ஏந்தியது ஒன்று ஆனேன் - ஆண்டிகையி லேந்தியதோர் பொருளானேன், வேண்டியபோது - நீ விரும்பினபோது, உள்ளங் கைத்தேன் ஆனேன் - உள்ளங் கைத்தேன் போன்றேன், ஓர்மதலை பூத்தபின்பு - ஒரு புதல்வனைப் பெற்ற பிறகு, உள்ளம் கைத்தேன் - மனங்கசந்து போனேன், எ - று.

பாண்டியன் தார் - வேம்பு, ஆண்டிகையி லேந்தியதொன்று - ஓடு.

**திருமுட்டத்து ஸ்ரீவராஹப் பெருமான்மீது பாடியது.**

15. முட்டத்துப்பன்றிமுளரித்திருப்பதத்தைக்
கிட்டத்துப்பன்றிக்கிடந்தேனே - தொட்டு
மருங்கிலேசங்கெடுத்தமாலேயெனக்கு
வருங்கிலேசங்கெடுக்கவா.

**இ - ள்.** முட்டத்துப்பன்றி - திருமுட்டத்தி லெழுந்தருளிய வராஹப் பெருமானே, முளரி திருப்பதத்தை-உன் தாமரைபோலும் திருவடியை, கிட்ட - சேர, துப்பு அன்றி கிடந்தேன் - திறமையின்றிக் கிடந்தேன், தொட்டு மருங்

இலேசங்கு எடுத்தமாலே - நீண்டி இடப்பாகத்தில் சங்கத்தை யேந்திய திருமாலே, எனக்குவரும் - எனக்குண்டாகின்ற, இலேசம் - துன்பத்தை, கெடுக்க - அழிக்க, வா - நீ யெழுந்தருளாய், எ - று.

### அறிவுடையோர் செய்யும் ஆண்மைகள்
### இவையெனப் பாடியது.

16. பாதர்க்கிதங்கவிவாணர்க்குச்சாலவணக்கங்குரு
நாதர்க்குநீதியொடாசாரநண்பினயந்தவர்க்குக்
கோதற்றவாசகம்பொய்க்குப்பொய்கோளுக்குக்கோளறிவி
லாதர்க்கிரட்டிப்பறிவுடையோர்செய்யுமாண்மைகளே.

இ - ள். அறிவுடையோர் செய்யும் ஆண்மைகள் - விவேகிகள் செய்கின்ற ஆண்மைகளாவன, பாதர்க்கு இதம் - பாதகருக்கு இன்சொற் சொல்லுதலும், கவிவாணர்க்கு சாலவணக்கம் - வித்வான்களுக்குப் பணிவுடைமையும், குருநாதர்க்கு நீதியொடு ஆசாரம் - குருக்களுக்கு நீதியுடன் ஆசாரமாயிருத்தலும், நண்பினயந்தவர்க்கு கோதற்ற வாசகம் - சிநேகத்தோடு விரும்பினவருக்குக் குற்றமற்ற சொல்வார்த்தையும், பொய்க்கு பொய் - பொய்க்குப் பொய்யும், கோளுக்கு கோள் - கோளுக்குக் கோளும், அறிவு இல் ஆதர்க்கு இரட்டிப்பு - விவேகமில்லாத மூடருக்கு அவர்களுக்கு இரட்டிப்பாயிருத்தலுமே யாம், எ - று.

அறிவுடையோர் மாற்றார் முதலியோரை இம்முதலிய வற்றால் வசப்படுத்திக் கொள்ளுவர் என்பது கருத்து.

### பாண்டியன்மீது நிந்தாஸ்துதியாகப் பாடியது.

17. குழற்காலரவிந்தங்கூம்பக்குமுதமுகையவிழ
நிழற்கான்மதியமன்றோநின்றிருக்குலநீயவன்றன்
அழற்காலவிர்சடைமீதேயிருந்துமந்திவண்ணன்
கழற்கால்வணங்குதியோவணங்காமுடிக்கைதவனே.

இ - ள். வணங்காமுடி கைதவனே - வணங்கா முடியையுடைய பாண்டியனே, நின், திருக்குலம் - உன் திருக்குலமானது, குழல்கால் அரவிந்தம் கூம்ப - தொளையோடு கூடிய நாளத்தையுடைய தாமரை மலர்கள் குவியவும், குமுத முகை அவிழ - அல்லிமொட்டுகள் விரியவும், நிழல் கால் மதியம் அன்றோ - ஒளியைக் கக்குகின்ற சந்திரனல்லவா, நீ அவன் தன் - நீ அவனது, அழல்கால் - நெருப்பினொளியை வீசுகின்ற, அவிர்சடை மீதே இருந்தும் - விளங்குகின்ற சடைமீதிருந்தும், அந்திவண்ணன் - அந்தப்பரமசிவனது, கழல் கால் வணங்குதியோ - வீரக்கழலை யணிந்த திருவடியை வணங்குகின்றாயோ, எ - று.

சண்பகவல்லி யம்மையை வணங்கின செருக்காற் பாடியது.

18. பாட்டானதைவண்டுபாடுங்குழற்சண்பகவல்லிதன்
தாட்டாமரையைத்தொழுதேனினியென்றலையில்விதி
தீட்டான்கருமுகில்போலேவருமந்தச்சேட்டெருமை
மாட்டானினிவரமாட்டான்வந்தாலும்வணங்குவனே.

இ - ள். வண்டுபாட்டானதைப்பாடுங் குழல் - வண்டுகள் இசையைப் பாடுகின்ற கூந்தலையுடைய, சண்பகவல்லி தன் - சண்பகவல்லி யம்மையின், தாள் தாமரையை தொழுதேன் - பாததாமரையை வணங்கினேன், இனி - இனி, விதி - பிரமன், என்றலையில் தீட்டான் - என்சிரசில் எழுதமாட்டான், கருமுகில்போலேவரும் - கருமேகம்போல் வருகிற, அந்தசேட்டு எருமை மாட்டான் - அந்தப்பெரிய எருமைமாட்டை யுடையவனாகிய யமன், இனி வரமாட்டான் - இனியென்னிடம் வரமாட்டான், வந்தாலும் வணங்குவன் - வந்தாலும் என்னைப்பணிவான், எ - று.

ரத்நசபாபதியின் திருவடியில் பாமாலைசமர்ப்பித்த
களிப்பால் பாடியது.

19. சீமானுநாமகன்கோமானுமேத்தித்தினம்பணிந்து
பூமாலைசாத்தியரத்நசபாபதிபொன்னடிக்குப்
பாமாலைசாத்திநின்றேனவனால்மிகப்பாடுபட்ட
ஏமாவுன்னாலினியாமோவென்பாற்சினந்தெய்துதற்கே.

இ - ள். சீமானும் - திருமாலும், நாமகன் கோமானும் - பிரமனும், ஏத்தி - துதித்து, தினம் பணிந்து - நாள்தோறும் வணங்கி, பூமாலை சாத்திய - புஷ்பமாலை சமர்ப்பிக்கப்பெற்ற, ரத்நசபாபதி பொன்னடிக்கு - ரத்நசபாபதியின் திருவடியின்மீது, பாமாலை சாத்தி நின்றேன் - கவிமாலையைச் சமர்ப்பித்து நின்றேன், அவனால் மிகப்பாடுபட்ட - அவனால் மிகவும் துன்பமடைந்த, ஏமா - யமனே, என்பால் சினந்து எய்துதற்கு - என்னிடத்தில் கோவித்து வருகைக்கு, இனி - இனி, உன்னால் ஆமோ - உன்னாலாகுமா.

திருவொற்றியூர்த் தியாகராயர்மீது பாடியது.

20. தடங்கொண்டகல்வின்பொல்லெனப்பூட்டித்தமதுரத்தில்
வடங்கொண்டுசாத்திவிடங்கொண்டுபார்த்தாமணிகளாரும்
படங்கொண்டபாம்பிற்பழகியபின்மலைப்பாவைதன்னை
இடங்கொண்டவொற்றித்தியாகேசர்புற்றினிடங்கொண்டதே.

இ - ள். மலைப்பாவை தன்னை - மலையரையன்பெண்ணாகிய உமாதேவியை, இடங்கொண்ட - இடப்பாகத்திற்கொண்ட, ஒற்றி தியாகேசர் - திருவொற்றியூர்த் தியாகேசர், புற்றினிடம் கொண்டது - புற்றை யிடமாகக்கொண்டது,

தடம்கொண்ட கல்வில் வில் மெல்லெனப்பூட்டி - பெருமைகொண்ட மேருமலையாகிய வில்லில் (நாணியாக) மெல்லெனப்பூட்டி, தமது உரத்தில்வடம்கொண்டு சாத்தி - தமது திருமார்பில் ஆரமாகக் கொண்டணிந்து, விடம்கொண்டு பார்த்து-நஞ்சையுட்கொண்டு பார்த்து, மணிகிளரும் படம்கொண்ட - மாணிக்கம் விளங்குகின்ற படத்தைக்கொண்ட, பாம்பின் பழகியபின்-பாம்போடு பழகினபின்பேயாம், எ - று.

கல் வில்லிற்பூட்டினது திரிபுர சங்காரகாலத்தில், உரத்தில் வடமாகச் சாத்தினது தாருகாவனத் திருடியர்செய்த யாகத்தில்தோன்றின காலத்தில், விடங்கொண்டுபார்த்தது பாற்கடல் கடையப்பட்ட காலத்தில்.

### திருவாரூர்த் தியாகராயர்மீது பாடியது.

21. விடங்காட்டிக்கண்டத்திற்றோலுரிகாட்டித்தன்மெய்யினைப்புற்
றிடங்காட்டிவாலையொருபுறங்காட்டிவண்டேறுமலர்த்
தடங்காட்டியபொழிலாரூர்த்தியாகர்தமதுபொற்றாட்
படங்காட்டியாடிநின்றாருலகேழும்பணியென்னவே.

(இ - ள்.) வண்டு ஏறும் மலர்த் தடம் காட்டிய பொழில் - வண்டுகளேறப் பெற்ற பூம்பொய்கைகளையுடைய சோலை சூழ்ந்த, ஆரூர்த் தியாகர் - திருவாரூர்த் தியாகராயர், கண்டத்தில் விடம் காட்டி - கழுத்திலுள்ள நஞ்சத்தைக்காட்டி, தோல் உரி காட்டி - யானைத்தோலைக்காட்டி, தன் மெய்யினை புற்றிடம் காட்டி - தம் திருமேனியைப் புற்றிடமாகக்காட்டி, வாலை ஒருபுறம் காட்டி - உமாதேவியை ஒரு பக்கத்திற்காட்டி, தமது பொன்தாள் படம்காட்டி - தமது திருவடியாகிய எழுது படத்தைக்காட்டி, உலகு ஏழும் பணி என்ன - ஏழுலகமும் பணிகவென்று, ஆடி நின்றார் - நடித்து நின்றார், எ - று.

பணியென்ன என்பதற்குப் பாம்புபோலெனக்கொண்டு சிலேடித்துரைக்க. தோலுரி - தோலுரித்தல். வாலை - வாலினை.

### திருவொற்றியூர்த் தியாகராயர்மீது பாடியது.

22. புரந்தனைமாலைச்சதுராநநத்தனைப்போகியைமுப்
புரந்தனைச்சாதித்திமையாநாட்டப்புலோமசைவாழ்
புரந்தனைமானுந்திருவொற்றியூரநின்பொன்மணிக்கோ
புரந்தனைக்கண்டனன்காணேனுதிக்கும்புரந்தனையே.

(இ - ள்.) இமையாத நாட்டம் - இமையாத கண்களையுடைய, புலோமசை வாழ் - இந்திராணிவாழ்கின்ற, புரம் தனை மானும் - அமராவதி நகரத்தை நிகர்க்கின்ற, திருவொற்றியூர - திருவொற்றியூரை யுடையவனே, முப்புரம் தனை சாதித்து - முப்புரத்தைவென்று, மாலை - திருமாலையும், சதுராநநத்தனை-நான்

முகனாகிய பிரமனையும், போகியை - இந்திரனையும், புரந்தனை - ரக்ஷித்தாய், நின் பொன்மணி கோபுரம் தனை கண்டனன் - பொன்னினாலும் மணிகளாலும் அலங்கரித்துச் செய்யப்பட்ட உனது கோபுரத்தைத் தரிசித்தேன், (இனி) உதிக்கும் புரம் தனை காணேன் - (நான் சென்று) பிறத்தற்குரிய சரீரத்தைக் காணமாட்டேன், எ - று.

திருவொற்றியூர்த் தியாகராயரே, உமது கோபுரத்தைத் தரிசித்த எனக்கு இனிப் பிறவியில்லை யென்பது கருத்து.

நாணிக்கண்புதைத்தல். (இடையூறுகிளத்தல்.)

23. நல்லம்புலியணிந்தோனாதனுக்கெட்டாநாள்
வில்லம்புடன்கூடிவிட்டாலும் - வல்லி
இடையாளேமுன்னுலகுமேழளந்தோன்மைந்தன்
குடையானதன்றோகொடிது.

இ - ள். வல்லி இடையாளே - கொடிபோலும் இடையையுடையவளே, நல் அம்புலி அணிந்தோன் - அழகாகிய சந்திரனை யணிந்தோனாகிய சிவபெருமானது, நாளதனுக்கு - திருநக்ஷத்ரத்துக்கு, எட்டாம் நாள் - எட்டாவதாகிய நக்ஷத்திரம், வில் அம்புடன்கூடி விட்டாலும் - வில்லம்புகளோடு சேர்ந்து விட்டாலும், முன் உலகம் ஏழ் அளந்தோன் மைந்தன் - முற்காலத்தில் ஏழுலகத்தையும் திருவடியா லளந்தோனாகிய திருமாலின் புதல்வனாகிய மன்மதனது குடையானது அன்றோ கொடிது - குடையல்லவா கொடியதாயிருக்கின்றது.

அம்புலியணிந்தோனாள் - திருவாதிரை, இதற்கு எட்டாநாள் அஸ்தம் (கை) வில் - புருவம், அம்பு - கண், மன்மதனது குடை - பூர்ண சந்திரன், கையால் புருவம் கண் இவைகளை மூடினாலும் சந்திரன் செய்யும் உபத்திரவம் கொடிதாயிருக்கின்றது என்பதாம். சந்திரன் முகமெனினும் பொருந்தும்.

தென்புன்னைவனத்தான்மீது பாடியது.

24. வாழ்நிலைசேர்பொன்னுலகம்வண்களந்தைக்கோபுரத்தின்
ஏழ்நிலைமேலேறிடினுமேறலாம் - பாழ்மனமே
அன்புன்னைக்காட்டவரனறிவதேயருமை
தென்புன்னைக்காட்டனடிசேர்.

இ - ள். வாழ்நிலைசேர் பொன்னுலகம்-வாழ்தற்குரிய பொன்னுடுபோன்ற, வள் - வளம்பொருந்திய, களந்தை - களந்தைப்பதியிலுள்ள, கோபுரத்தின் - கோபுரத்தினது, ஏழ் நிலைமேல் ஏறிடினும் ஏறலாம் - ஏழு நிலைகளின் மீதும் ஏறவிரும்பினாலும் ஏறலாம், பாழ் மனமே - பாழ் நெஞ்சமே, உன்னை அன்பு காட்ட - உன்னை அன்புருவமாகக்காட்ட, அரன் அறிவதே அருமை - சிவபெருமானை அறிவதே அருமை, (ஆதலால்) தென்புன்னைக்காட்டன் அடி - தென் புன்னைக்காட்டானது திருவடியை, சேர் - நீ அடைவாயாக, எ - று.

**திருக்கச்சிக் காமாக்ஷியம்மையின்மீது பாடியது.**

25. கஞ்சிகுடியாளேகம்பன்சோறுண்ணுளே
வெஞ்சினங்களென்றும்விரும்பாளே - நெஞ்சதனில்
அஞ்சுதலையாவாருக்காறுதலையாவாளே
கஞ்சமுககாமாட்சிகாண்.

இ - ள். கஞ்சி குடியாள்-கஞ்சிகுடியாதவளும், கம்பன் சோறு உண்ணுள்-கம்பஞ்சோற்றை யுண்ணுதவளும், வெஞ்சினங்கள் என்றும் விரும்பாள் - பதார்த்தங்களை யென்றும் விரும்பாதவளும், நெஞ்சதனில் அஞ்சு தலை ஆவாருக்கு-மனத்தில் அச்சமுள்ளவர்க்கு, ஆறுதலை ஆவாள் - அந்த அச்சத்தைத் தணிப்பவளும், கஞ்சமுகம் - தாமரைமலர்போன்ற முகத்தினையுடைய, காமாட்சிகாண்-காமாட்சியம்மையேயாம், எ - று.

காஞ்சிநகரத்திற் குடிகொண்டிருப்பவள், திருவேகம்பனது சோற்றை யுண்ணுதவள், கொடிதாகிய கோபத்தை விரும்பாதவள், ஐந்து சிரங்களையுடைய சிவபெருமானுக்கு மனோஹரமா யிருப்பவள் என வேறுமொருபொருள் தோன்றுதல் காண்க.

துறை - வெறிவிலக்கல்.

26. சீதாரவிந்தைபுயன்றென்னவன்றன்றிண்சிலம்பிற்
போதாலுங்கண்ணுலும்போர்செய்வோர்க் - கோதும்
கொடியிடையார்தம்மாற்குணமாமோவிந்தத்
துடியிடையார்கொண்டதுயர்.

இ - ள். இந்த துடி இடையார் கொண்ட துயர் - இந்த உடுக்கைபோலும் இடையையுடைய மாது கொண்ட துன்பம், சீதம் - குளிர்ச்சிபொருந்திய, அரவிந்தை - தாமரைமலரை யாசனமாகக்கொண்ட விஜயலக்ஷ்மியை, புயன்-தோளிலுடையவனுகிய, தென்னவன் தன் திண்சிலம்பில் - பாண்டியனது வலிமையாகிய மலையின்கண், போதாலும் கண்ணுலும் போர் செய்வோர்க்கு - பூவைக்கொண்டும் கண்ணைக் கொண்டும் போர் செய்வோராகிய மன்மதன் பரமசிவன் என்னும் இருவருக்கும், ஓதும் - (உரியனவென்று) சொல்லப்பட்ட, கொடி - கொடிகளா யிருக்கிற மீனத்துக்கும் இடபத்துக்கும், இடையார் தம்மால் - இடையிலுள்ளவரால், குணம் ஆமோ - நிவர்த்தி யாகுமோ, எ - று.

மீனத்துக்கும் இடபத்துக்கும் இடையிலுள்ளது மேஷம் (ஆடு) ஆட்டைக்கொல்வதனுல் இந்த மாதினது விரகத்துன்பம் நீங்காதென்பது கருத்து.

**தோவத்தி ஆற்றிலடித்துக்கொண்டு போனபோது பாடியது.**

27. அப்பிலேதோய்த்திட்டடுத்தடுத்துநாமதனைத்
தப்பினுமம்மையதுதப்பாதோ - இப்புவியில்

இக்கலிங்கம்போனாலென்னேகலிங்கமாமதுரைச்
சொக்கலிங்கந்தானிருக்கச்சொல்.

**இ - ள்.** அப்பிலே தோய்த்திட்டு-நீரிலே தோய்த்து, அடுத்து அடுத்து-அடிக்கடி, நாம் அதனைத் தப்பினால் - நாம் அதைத் தப்பினால், அது நம்மைத் தப்பாதோ - அது நம்மைத்தப்பாதோ, இப்புவியில் - இவ்வுலகத்தில், சொல் - சொல்வாயாக, இ கலிங்கம் போனால் என் - இந்த ஆடை போனாலென்ன, ஏக லிங்கம் ஆம் - ஒப்பற்ற லிங்கமாகிய, மதுரைச் சொக்கலிங்கந்தான் இருக்க - மதுரைச் சொக்கலிங்கப்பெருமானிருக்கும்போது.

தப்புதலிரண்டில் முன்னது வெளுத்தலென்றும் பின்னது கைவிட்டுப் போதலென்றும் பொருள்கொள்க. எ - று.

---

## காளிமுத்துப்புலவர் பாடல்.



### இதுமுதலிய அறுசெய்யுளும் மயிலைக் குழந்தைவேலு முதலியார் மீது பாடியதுறைகள்

தோழிகூற்று.

1. நெல்லைச்சொன்னாபரணத்தைக்கைம்மாவைநிதநிதமும்
வெல்லச்சொன்னாவலர்க்கீயுங்குழந்தைவிசயநின்பால்
செல்லச்சொன்னாளென்னையிப்போதென்மையலைத்தீர்த்திடென்று
சொல்லச்சொன்னாளந்தமின்னாள்பன்னாண்மலர்ச்சோலையிலே.

**இ - ள்.** நெல்லை - நெல்லினையும், சொன்னாபரணத்தை - பொன்னாபரணங்களையும், கைம்மாவை - யானைகளையும், வெல்லச்சொல் - மேம்படப் புகழ்கின்ற, நாவலர்க்கு - புலவருக்கு, நித நிதமும் - நாள்தோறும், ஈயும் - பரிசிலாகத் தருகிற, குழந்தை விசய - குழந்தை வேல் என்னும் வெற்றியை யுடையவனே, அந்த மின்னாள் - அந்தப்பெண்ணானவள், பல் நாள் - பலநாளும், மலர்ச்சோலையிலே - பூஞ்சோலையின் கண்ணேநின்று, என்னை - என்னைநோக்கி, நின்பால் செல்லச்சொன்னாள் - உன்னிடத்திற்குப் போகச்சொன்னாள், இப்போது - இப்பொழுதே, என்மையலை தீர்த்திடு என்று - என்காம மயக்கத்தை நீக்குவாயென்று, சொல்லச் சொன்னாள் - உனக்குச் சொல்லச் சொன்னாள், (ஆதலால் அவளை யாதரிக்கவேண்டும்) எ - று.

தலைவிகூற்று.

2. பழுத்தான்மரத்திற்பறவையைப்போலுநற்பாவலர்க்குக்
கொழுத்தான்வழங்குங்குழந்தையென்கொங்கையைக்கூருகிரால்

அழுத்தாதவேளையில்வெந்நீர்பன்னீர்மதியும்மழல்சேர்
கொழுத்தான்மதனுங்கொழுத்தான்பருவக்குறிப்பறிந்தே.

இ - ள். பழுத்த ஆல்மரத்தில் பறவைகள்போலும் - பழுத்த ஆலமரத்திற்கூடிய பறவைகளை நிகர்க்கிற, நல்பாவலர்க்கு - நல்ல வித்வான்களுக்கு, கொழுத்த ஆன்வழங்கும் - வளமாகிய பசுக்களைத் தானம்பண்ணுகிற, குழந்தை-குழந்தைவேலன், என் கொங்கையை - என் தனங்களை, கூர் உகிரால் - கூர்மையாகிய நகங்களால், அழுத்தாத வேளையில் - பதியாத காலத்தில், பன்னீர் வெந்நீர் - பனிநீரும் வெந்நீர்போலச் சுடாநின்றது, மதியும் - சந்திரனும், அழல்சேர் கொழுதான் - நெருப்பைச்சேர்ந்து காய்ந்திருக்கிற கொழுவேயாகும், பருவக்குறிப்பு அறிந்து - சமயக்குறிப்பை யுணர்ந்து, மதனும் கொழுத்தான் - மன்மதனும் கொழுத்துப் போனான், எ - று.

பழுத்தால் கொழுத்தான் என்பவைகளின் நிலைமொழிகளாகிய பழுத்த கொழுத்த என்னும் பெயரெச்சங்களின் அகரவிகுதி தொகுத்தல்.

தாய்க்கூற்று.

3. பொன்னார்மருமத்தன்பூம்பாவைவேலப்பபூபனருள்
மன்னாகுழந்தைக்குருநாதநீதவரோதயனே
பன்னாண்மலர்க்குழற்பின்னாளெந்நாளும்பரிந்தணைய
நன்னாளிந்நாள்வரச்சொன்னாண்மின்னாண்மணநாளென்னவே.

இ - ள். பொன் ஆர் மருமத்தன் - திருமகள் வாழ்கின்ற மார்பையுடையவனாகிய, பூம்பாவை வேலப்ப பூபன் - பூம்பாவை வேலப்பன் என்னும் பூபதி, அருள் - பெற்ற, மன்னா - அரசனே, குழந்தைக் குருநாத - குழந்தைவேலன் என்கிற முருகவேளே, நீத-நீதியானே, வரோதயனே-வரத்தினால் அவதரித்தவனே, பல் - பலவாகிய, நாள் மலர் - புதியமலர்களைத் தரித்த, குழல்பின்னாள்-கூந்தற்பின்னலை யுடையவளாகிய, மின்னாள் - என் பெண்ணானவள், மணநாள் என்னவே - மணம்புரிந்த நாளிற்போலவே, எந்நாளும் பரிந்து அணைய - எந்நாளும் விரும்பித் தழுவுதற்குரிய, நல்நாள் இந்நாள் - சுபதினமாகிய இந்ததினத்தில், வரச்சொன்னாள் - (உன்னை) வரச்சொன்னாள், எ - று.

துறை - புறங்காட்டல். (முதுதுகாட்டல்.)

4. மாகமழைக்கரன்பூம்பாவைவேலப்பன்மைந்தன்மின்னார்
மோகன்குழந்தைக்குருநாதன்வெற்பினின்மோடிவைத்துப்
பாகமொழிக்குழன்மாதேவிரித்துப்படமெடுக்கும்
நாகமறைத்துக்குழனமக்கீதனலமல்லவே.

இ - ள். பாகு அம் - சர்க்கரைப்பாகின் சுவையும், மொழிக்கு உழல்-உன் மொழிச் சுவையைப் பெறும்பொருட்டு உழலாநின்ற, மாதே - பெண்ணே, மாகம் மழைகரன் - ஆகாயத்திலுள்ள மேகத்தை நிகர்த்த கொடைக்கையினை

யுடையவன், பூம்பாவை வேலப்பன் மைந்தன் - பூம்பாவை வேலப்பனுக்குப் புதல்வன், மின்னார் மோகன் - மாதர்களுக்கு ஆசையை யுண்டாக்குவோன், குழந்தைக் குருநாதன் வெற்பினில் - குழந்தைக் குருநாதனது மலையில், மோடி வைத்து - மோடிவைத்து, விரித்து படம் எடுக்கும் - படம் விரித்தெடுத் தாடுகின்ற, நாகம்மறைத்து - பாம்பை மறைத்து, குழல்-வேய்ங்குழலை, நமக்கு ஈதல்- எமக்குக் கொடுத்தல், நலம் அல்ல - நன்மையல்ல, எ - று.

நாகம் - மலை. இது தனத்தை யுணர்த்தும், குழல் - கூந்தல். மோடிவைத்தல் - பிணங்கல், தலைவனுக்கு நாணிப்புறங்காட்டி நின்ற தலைவியின் முதுகு முதலியவற்றைக்கண்ட தலைமகன் அல்குலின்பம் பெறவந்த எனக்கு அதனை மறைத்துக் கூந்தலைத்தருதல் நன்மையன்று எனக் கூறியது.

துறை - கிள்ளைவிடுதூது.

5. போதத்தைமேவுமயிலைக்குழந்தைக்குப்போர்மதன்செய்
கேதத்தையுங்குயினாதத்தையுந்தனக்கிண்ணத்தினா
மோதத்தையுந்துயிலாதத்தையும்மயன்மூட்டுதென்றல்
வாதத்தையுந்தரியாதத்தையுஞ்சொல்லிவாதத்தையே.

இ - ள். போதத்தை மேவும் - ஞானத்தைப் பெற்றிருக்கிற, மயிலைக் குழந்தைக்கு - மயிலைக்குழந்தை முதலியாருக்கு, போர்மதன் செய் கேதத்தையும்- காமப்போர் விளைக்கின்ற மன்மதன்செய்கிற துன்பத்தையும், குயில் நாதத்தையும் - குயிலோசையால் வருந்துன்பத்தையும், தனக்கிண்ணத்தின் ஆமோதத்தையும் - கிண்ணம்போன்ற தனங்களின் மிகுமணத்தால் வரும் துன்பத்தையும், துயிலாதத்தையும் - தூங்காமையால் வருந் துன்பத்தையும், மயல்மூட்டு தென்றல் வாதத்தையும் - காமமயக்கமாகிய நெருப்பை மூள்விக்கிற தென்றற்காற்றினால் வருந்துன்பத்தையும், தரியாதத்தையும் - (இத்துன்பங்களால் நான்) சகித்திருக்க வொண்ணாமையையும், சொல்லி வா-சொல்லிமீண்டு வருவாயாக,எ-று.

துறை - வெறிவிலக்கல்.

6. வண்டாங்கிசைபயின்மாலையன்வேலப்பன்மைந்தனிதி
கொண்டான்கிளையைவளர்த்தான்குழந்தைக்குவட்டின்மின்னே
பண்டாங்கிசையினண்மால்கொண்டுபாம்பன்குளத்தினடுக்
கண்டாங்கியைக்கிழித்தாலென்னபாவங்கருதுவதே.

இ - ள். வண்டு ஆங்கு இசைபயில் மாலையன் - வண்டுகள் அவ்விடத்து இராகம்பாடுதற் கிடமாகிய பூமாலையை யணிந்தவனாகிய, வேலப்பன் மைந்தன்- வேலப்ப முதலியாருக்குப் புதல்வனும், நிதிகொண்டான் - எல்லா நிதிகளையுந் தன்னிடத்துக் கொண்டவனும், கிளையை வளர்த்தான் - உறவினரை வளர்த்தவனும் ஆகிய, குழந்தை - குழந்தைவேலனது, குவட்டில் மின்னே-மலையிலுள்ள மாதே, பண்தாங்கு இசையினள் - பண்ணின் தன்மையைக்கொண்ட சொல்லை

யுடையவளாகிய தலைவி, மால்கொண்டு-காமமயக்கத்தைக் கொள்ள, பாம்பன் - பாம்பை யணிந்தவனாகிய சிவபெருமானது, குளத்தின் - நெற்றியிலுள்ள, நடுக்கண் - நடுக்கண்ணாகிய அக்கினிதேவனை, தாங்கியை - சுமக்கின்ற வாகனமாகிய ஆட்டை, கிழித்தால் - கொன்றால், என்ன - என்னபயன், பாவம் - உண்டாவது பாவமே யாகும், கருதுவதே - (இந்தப்பாவம்) மனத்தினாலும் நினைக்கத் தகுவதோ, எ - று.

கண்டாங்கி - உத்தரீயம் எனச்சொன்னயம்.

பூஞ்சோலைத் தஞ்சியென்னுந் தாசியின் தனங்களைப் புகழ்ந்து பாடியது.

7. வனக்குந்தள வஞ்சிபூஞ்சோலைத்தஞ்சிவளருமிரு
தனக்குன்றுசெய்யுந்தொழில்சொல்லவோதமியேனைக்கண்டால்
கனக்கும் புளகிக்கும்பாரிக்கும் பூரிக்குங்கண்கறுக்கும்
சினக்குந்தமக்குமெனக்குமுண்டாக்குந்தினஞ்சண்டையே.

இ - ள். வனம்-அழகாகிய, குந்தளம்-கூந்தலையுடைய, வஞ்சி-கொடிபோன்ற, பூஞ்சோலைதஞ்சி-பூஞ்சோலைத் தஞ்சி யென்பவளுடைய, வளரும் இருதனக்குன்று-வளராநின்ற இரண்டு தனங்களாகிய மலைகள், செய்யுந் தொழில் - செய்யும்செய்கைகளை, சொல்லவோ-சொல்லட்டுமோ, தமியேனைக்கண்டால் - என்னைக்கண்டால், கனக்கும்-பருக்கும், புளகிக்கும்-புளகங்கொள்ளும், பாரிக்கும் - பளுவாகும், பூரிக்கும் - விம்மும், கண்கறுக்கும் - கண்கள் கறுக்கப்பெறும், சினக்கும் - கோவிக்கும், தமக்கும் எனக்கும் தினம் சண்டை உண்டாக்கும் - அத்தனங்களுக்கும் எனக்கும் நாடோறும் சண்டை யுண்டாக்கும், எ-று.

---

## பாண்டியன்மீதுபாடிய பாடல்.

1. சரராஜசம்புவயிரியென்மாதுசரீரமெல்லாம்
பொரராசரத்துக்கிவள்பொருளோபசும்பொற்கிரண
சுரராசதிவ்யகிரீடவிபாடத்துடித்தடக்கைப்
பரராஜராவணராமாபராக்கிரமபாண்டியனே.

இ - ள். சரராசன் - அஸ்த்ர ராஜனென்று சொல்லப் படுகிற, சம்புவயிரி-சிவசத்துருவாகிய காமதேவர், என்மாது சரீரம் எல்லாம் - என் பெண்ணின் உடம்பு முழுவதும், பொர - (புதையும்படி அம்பெய்து) போர்செய்ய, ராசர் - சிறந்தவரா யிருக்கிறார், அத்துக்கு - அந்தப்போருக்கு, இவள்பொருளோ - இவள் ஒருபொருளாவளோ, பசும்பொன்கிரணம்-பசும்பொன்னினொளி வீசுகின்ற, சுரராஜ திவ்யகிரீடவிபாட - தேவேந்திரனது அற்புதமான முடியின்மீது

வளைவீசினவனே, தொடி - வாகுவலயமணிந்த, தடம்கை-பெரிய கையினையுடைய, பரராஜரா வணராமா-வேற்றரசராகிய ராவணர்க்கு ஸ்ரீராமனை நிகர்த்தவனே, பராக்கிரம பாண்டியனே, எ - று.

பாண்டியனே, இவள் மன்மதன் கணைக்கு எதிர்நிற்க மாட்டுவளோ என்பது கருத்து.

இதுவுமது.

2. காளமுகிற்குலமெல்லாம் விலங்குகடிந்திட்டநீ
வேளையுமப்படிச்செய்திலையேவிளைநெல்வயலில்
வாளைகுதித்துவளர்பூங்கமுகின்மடலொடியப்
பாளைமுறிக்குந்துறைவாபராக்கிரமபாண்டியனே.

இ - ள். விளை நெல்வயலில் - விளைகின்ற நெற்கழனிகளில், வாளை குதித்து - வாளைமீன்கள்தாவி, வளர் - வளர்ந்த, பூ - பொலிவாகிய, கமுகின்-கமுகமரங்களின், மடல் ஒடிய - மடல்கள் ஒடிய, பாளைமுறிக்கும் - பாளைகளை முறிக்கின்ற, துறைவா - துறையை யுடையவனே, பராக்கிரம பாண்டியனே-பராக்கிரமபாண்டியனே, காளமுகில் குலம் எல்லாம் - கருமையாகிய மேகத்தொகுதியை யெல்லாம், கடிந்து விலங்கு இட்ட நீ - கோவித்து விலங்குபூட்டின நீ, வேளையும் அப்படி செய்திலையே - மன்மதனையும் அவ்வாறு செய்தாயில்லையே, எ - று.

முகிற்குலத்தை தளைசெய்தது இவன் முன்னோர் தொழிலாயினும் மரபு பற்றி இவன்மேல் ஏற்றிக்கூறப்பட்டது.

துறை - நற்றயிரங்கல்.

3. ஆர்க்குங்குளிருநிலவுயர்கோனின்னலங்கல்பெறா
வார்க்குங்குமமுலையாட்கனலாகும்வடக்குந்தெற்கும்
மேற்குங்கிழக்குமொருவெளுப்பாய்நின்றுவிண்ணையெட்டிப்
பார்க்கும்புகழுக்கிறைவாபராக்கிரமபாண்டியனே.

இ - ள். வடக்கும் தெற்கும் மேற்கும் கிழக்கும்-வடக்கு முதலிய நான்கு திசைகளிலும், ஒருவெளுப்பாய் நின்று - ஒரேவெளுப்பாய் வெளுத்து நின்று, விண்ணை எட்டிப்பார்க்கும் புகழுக்கு - சுவர்க்க லோகத்தை யெட்டிப்பார்க்கிற புகழுக்கு, இறைவா-தலைவனே, பராக்கிரம பாண்டியனே—, உயர்கோல்-உயர்ந்த செங்கோலைத்தாங்கிய, நின் - உனது, அலங்கல்பெறா - மாலையைப்பெறாத, வார் - கச்சணிந்த, குங்குமம் - குங்குமக் குழம்பு பூசப்பட்ட, முலையாட்கு-தனங்களையுடையவளாகிய என் பெண்ணுக்கு, ஆர்க்கும் குளிரும் நிலவு - யாவருக்கும் குளிர்ந்திருக்கிற நிலவானது, அனல் ஆகும்-நெருப்பாயிராநின்றது, எ-று

கீர்த்திக்கு நிறம் வெண்மையாதலால் "ஒருவெளுப்பாய்நின்று" என்றார்.

இதுவுமது.

கூரம்பொறுத்தவிழியாள்கதலிக்குருத்திலிட்ட
ஈரம்பொறுக்கவறிந்திலளேயிந்த்ரனிட்டசெம்பொன்
ஆரம்பொறுத்தபுயமீதிலாயிரநாவுரக
பாரம்பொறுத்தபுயலேபராக்கிரமபாண்டியனே.

இ - ள். இந்தரன் இட்ட-இந்திரன் தந்த, செம் பொன் - செம்பொன்னினாற்செய்த, ஆரம் பொறுத்த - ஆரத்தைத்தாங்கிய, புயமீதில் - தோளின்மீது, ஆயிரம் நா உரகம் பாரம் பொறுத்த - ஆயிரம் நாக்களையுடைய பாம்பாகிய ஆதிசேடன் தாங்குகின்ற பாரத்தைத் தாங்கிய, புயலே - மேகமே, பராக்கிரம பாண்டியனே—, கூர் அம்பு பொறுத்த-கூர்மையாகிய அம்புகளைவருத்திய, விழியாள் - கண்களையுடையவளாகிய என்பெண்ணானவள், கதலிக்குருத்தில் இட்ட-வாழைக்குருத்திலுள்ள, ஈரம் பொறுக்க அறிந்திலளே - ஈரத்தைச் சகிக்கவும் தெரிந்திலளே, எ - று.

நெருப்பினால் வெந்தவர்களை வாழைக்குருத்தில் கிடத்துவதுமரபு ஆதலால் விரகாக்கினியால் வெந்த இவளுக்கும் "கதலிக்குருத்திலிட்ட" எனக்கற்பித்துக் கூறப்பட்டது. கூரம்பொறுத்த என்பதனை கூர் அம் பொறுத்த எனப்பிரித்து கூர்மையையும் அழகையும் தாங்கிய எனினும் அமையும்.

இதுவுமது.

5. வெறிக்குங்குமக்கொங்கைமீதேயிளம்பிறைவெள்ளைநிலா
எறிக்கும்பொழுதுவந்தாயில்லையேயிலங்காபுரியைக்
குறிக்கின்றராவணன்பொன்முடிபத்துங்குரங்கைவிட்டுப்
பறிக்கின்றசண்பகமாறபராக்கிரமபாண்டியனே.

இ - ள். இலங்காபுரியை - இலங்கைநகரத்தை, குறிக்கின்ற - (தன்னதென்று) நினைத்திருந்த, ராவணன் - இராவணனுடைய, பொன்முடி பத்தும்-பொற்கிரீடம்பத்தினையும், குரங்கைவிட்டு பறிக்கின்ற - வாநரத்தை யனுப்பிப்பறித்த, சண்பகமாற-சண்பகமாறனே, பராக்கிரம பாண்டியனே—, வெறிகுங்குமக் கொங்கைமீதே - மணம்பொருந்திய குங்குமக் குழம்பணிந்த தனங்களின்மேலே, இளம் பிறை - இளம்பிறையானது, வெள்ளைநிலா எறிக்கும் பொழுது - வெண்மையாகிய நிலவை வீசும்போது, வந்தாயில்லையே - வந்தனையில்லையே, எ - று.

இதுவுமது.

6. சுரும்பேய்க்குழல்வாட்கண்ணிபங்காளர்கண்கொண்டுசுட்டுவிட்ட
பெரும்பேய்க்குவேப்பிலைக்காப்புதவாய்பிணர்சேர்பசுங்கோங்

கரும்பேய்க்குமென்முலையாரமுதூட்டியடர்ந்துகொல்ல
வரும்பேய்க்குவானுதவுங்குலசேகரமன்னவனே.

இ - ள். பிணர்சேர் - சருச்சரை பொருந்திய, பசுங்கோங்கு அரும்பு எய்க்கும் - பசியகோங்கினது அரும்பையிளைக்கச்செய்யும், மென் முலை - மெல்லிய தனங்களின், ஆர் அமுது ஊட்டி - அரிய அமிர்தத்தையுண்பித்து, அடர்ந்து கொல்ல வரும் - நெருங்கிக் கொல்லும்பொருட்டுவந்த, பேய்க்கு - பூதனையென்னும் அரக்கிக்கு, வான் உதவும்-மேலுலகங்கொடுத்த, குலசேகரமன்னவனே- -, சுரும்பு எய்க்கும் - வண்டுகளை இளைக்கின்ற, வாள் கண்ணி - வாள்போலுங் கண்களையுடையவளாகிய உமாதேவியை, பங்காளர் - பாகத்தில் வைத்தாள்பவராகிய சிவபெருமானுனவர், கண்கொண்டு சுட்டுவிட்ட - நெற்றிக்கண்ணினுல் எரித்துவிட்ட, பெரும்பேய்க்கு - பெரியபேய்க்கு, வேப்பிலைக்காப்பு உதவாய்-வேப்பிலைமாலையாகிய காவலைத் தருவாயாக, எ - று.

பெரும்பேய் என்றது - மன்மதனை.

பாண்டியனது கல்வித்திறத்தைப் புகழ்ந்து பாடியது.

7. பூணித்திலத்துப்புயல்வீரமாறன்புகல்கவிக்கு
நாணிப்புலவர்செல்லாரென்செய்வாரிந்தநானிலத்தில்
ஆணிக்கனகமணந்தரிற்பூமணம்யார்கொள்ளுவார்
மாணிக்கந்தித்திக்கினென்னுமற்றமதுரங்களே.

இ - ள். இந்த நானிலத்தில்-இந்த வுலகத்தில், பூண் நித்திலத்து புயல்-முத்துமாலையையணிந்த மேகம்போன்ற, வீரமாறன் புகல் கவிக்கு - வீரபாண்டியன் சொல்லுங் கவிக்கு, புலவர் நாணிச்செல்லாரு - புலவர்கள் நாணிப்போகாமல், என் செய்வார் - யாது செய்வார், ஆணிக்கனகம் மணம்தரின் - ஆணிப்பொன்னுனது வாசனையை வீசுமாயின், பூமணம் யார் கொள்ளுவார் - புஷ்பவாசனையை யார் ஏற்பார், மாணிக்கம் தித்திக்கின் - மாணிக்கம் இனிக்குமாயின், மற்ற மதுரங்கள் - மற்ற இனிமைகள், என் ஆகும் - யாதாகும், எ - று.

பாண்டியன் செல்வத்தாலன்றிக் கல்வியாலும் சிறந்தவன் என்பதுகருத்து.

இதுவுமது.

8. எண்ணீர்மைநூலுக்ககத்தியனும்இவனென்பதெல்லாம்
வெண்ணீர்மையன்றிவிரகல்லவேயிவ்வியனுலகில்
பண்ணீர்மைதேரும்பராக்கிரமமாறன்பதங்கழுவுந்
தண்ணீர்குடித்தல்லவோகும்பயோனிதமிழ்கற்றதே.

இ - ள். எண் நீர்மை நூலுக்கு - மதித்தற்குரிய குணமுள்ள நூலாராய்ச்சியில், இவன் அகத்தியன் ஆம் என்பது எல்லாம் - இவன் அகத்தியனே யாவனென்று சொல்லுவதெல்லாம், வெள் நீர்மை அன்றிவிரகு அல்ல-அறியாமைக்

தணமேயன்றி நியாயமன்று, (என்னெனின்) இ வியன் உலகில் - இந்த விசாலமாகிய பூமியில், பண் நீர்மை தேரும் - பண்களின் குணங்களை யாராய்ந்த, பராக்கிரமமாறன் - பராக்கிரம பாண்டியனது, பதம் கழுவும் - பாதங்களைக் கழுவின, தண்ணீர் குடித்தல்லவோ-தண்ணீரைக் குடித்தல்லவோ, கும்பயோனி-அகத்தியர், தமிழ்கற்றது - தமிழ்ப்பாஷையைக் கற்றது, எ - று.

துறை - நற்றயிரங்கல்.

9. காம்புவனம்புக்கதோளாட் குநின்றன்கழுத்திலிட்ட
வேம்புதனக் குவிதியில்லையோவெகுண்டாய்ச்சியர்கள்
தாம்பினடிக்கவுரலோடுகட்டத்தளைப்பட்டுச்சிப்
பாம்பினடிக்கின்றமாலேபராக்கிரமபாண்டியனே.

இ - ள். காம்பு - மூங்கில், வனம்புக்க - வனத்திற்புகுதற் கேதுவாகிய, தோளாட்கும் - தோள்களையுடைய என் பெண்ணுக்கும், நின்றன் கழுத்தில் இட்ட - உன்கழுத்திலணிந்த, வேம்பு தனக்கும் - வேப்பமாலைக்கும், விதியில்லையோ - பொருந்த முறையில்லையோ, ஆய்ச்சியர்கள் வெகுண்டு - இடைச்சியர் கோவித்து, தாம்பின் அடிக்க - தாம்பினால் அடிக்கவும், உரலோடுகட்ட - உரலோடு கட்டவும், தளைபட்டு - தளைபட்டு நின்று, உச்சி-உச்சிக் கொண்டையையுடைய, பாம்பில் நடிக்கின்ற - காளிங்கனென்னும் பாம்பின்மீது நடனம் பண்ணின, மாலே - திருமாலே, பராக்கிரம பாண்டியனே—, எ - று.

பாண்டியனே, என்பெண்ணுக்கு உன் வேப்பம் பூமாலையைத் தருதல் தகாதோ என்பது கருத்து.

இதுவுமது.

10. கடந்தூங்குவேழப்பிடர்க்கேவரக்கண்டுகண்கண்முத்து
வடந்தூங்கவாடுங்கிளிக்கென்செய்வேன்மணிவாய்திறக்க
விடந்தூங்குபாம்பின்படத்தின்மிசைதிமிதித்தியெனப்
படந்தூங்கவாடும்புயலேபராக்கிரமபாண்டியனே.

இ - ள். கடந்தூங்கு வேழப்பிடர்க்கு - மதமொழுகாநின்ற யானையின் பிடரில், வரக்கண்டு - நீவரப்பார்த்து, கண்கள் - கண்கள், முத்துவடம் தூங்க - முத்துமாலைகள்தொங்க, வாடும் - வாடுகின்ற, கிளிக்கு - கிளிபோல்வாளாகிய என்பெண்ணுக்கு, என்செய்வேன் - யாதுசெய்வேன், மணிவாய்திறக்க - மாணிக்கமுள்ள வாயைப் பிளக்கவும், படம்தூங்க - படம்தொங்கவும், விடம்தூங்கு பாம்பின் படத்தின்மிசை-விஷம்பொருந்திய காளிங்கனென்னும் பாம்பின் படத்தின்மீது, திமிதித்தி எனஆடும் - திமிதித்தியென்று நடனம்பண்ணின, புயலே - மேகமே, பராக்கிரம பாண்டியனே—, எ - று.

பாண்டியனே, நீ யானைமீது பவனிவரக்கண்டு என்பெண் கண்ணீர் சிந்தி வாடுகிறாள் இதற்குயான் என்செய்வேன் என்பதுகருத்து.

தலைவிகூற்று - நாரைவிடுதூது.

11. சடம்பழுக்குங்கிழட்டுக்குருகீர்தலைசாய்த்தாநின்று
முடம்பழுக்குங்கைதைநற்றுறையிற்றெங்குமுப்புடைக்காய்
குடம்பழுக்குங்கொற்கையான் குலசேகரன்கூடலிலென்
னுடம்பழுக்குஞ்சிறையும்பழிகாரருணர்ந்திலரே.

இ - ள். சடம்பழுக்கும் - உடம்புமுதிர்ந்த, கிழட்டுக் குருகீர் - கிழநாரைகளே, கைதை - தாழைகள், தலைசாய்த்து நின்று - தலைவணங்கி நின்று, முடம்பழுக்கும் - வளைவாகப் பழுத்துத் தூங்குகிற, துறையில் - துறைகளில், தெங்கு - தென்னமரங்கள், முப்புடைக்காய் - முப்புடைப்புள்ள காய்களை, குடம்பழுக்கும் - குடம்போலப் பழுக்கின்ற, கொற்கையான் - கொற்கை நகரத்தையுடையவன், குலசேகரன் - குலசேகரபாண்டியனது, கூடலில் - மதுரையில் இருக்கின்ற, என்னுடம்பு அழுங்கும் - என் உடம்பின் அழுங்கையும், சிறையும் - சிறையாயிருந்தலையும், பழிகாரர் உணர்ந்திலர் - பழிகாரராகிய தலைவர் அறிந்திலர், எ - று.

தலைவனைப் பிரிந்தமையால் அழுங்கும் சிறையும் அடைந்தனவென்பது கருத்து.

உனக்கடங்காதவை யிரண்டுளவெனப் பாடியது.

12. மற்றொப்பிலாக்கொடைச்சண்பகமாறவரோதயநின்
வெற்றிக்கிரண்டுண்டடங்காதகாரியமேருகிரி
சுற்றிலுங்கீர்த்தியடங்காதுநின்னுடைத்தோடழுவாக்
கற்றைக்குழலிக்குமாலடங்காதிது கைகண்டதே.

இ - ள். மற்றொப்பு இலாகொடை - வேறொரு உவமையில்லாத கொடையையுடைய, சண்பகமாற - சண்பக பாண்டியனே, வரோதய - வரத்தினாலவதரித்தவனே, நின்வெற்றிக்கு - உன்வெற்றிக்கு, அடங்காத காரியம் இரண்டு உண்டு-அடங்காத காரியங்கள் இரண்டுள்ளன, (அவையாவையெனின்) கீர்த்தி - உன்புகழானது, மேருகிரி சுற்றிலும் அடங்காது - மேரு மலையின் சுற்றுப் புறத்தினும் அடங்கமாட்டாது, நின்னுடை தோள் தழுவா-உன்னுடைய புயங்களைத் தழுவாத, கற்றைக்குழலிக்கு - கூந்தற் கற்றையையுடைய என் பெண்ணுக்கு, மால் அடங்காது - காமமயக்கம் அடங்கமாட்டாது, இது கைகண்டது- இவ்விஷயங் கைகண்டது. எ - று.

உன்கீர்த்தியும், இவள் விரகநோயும் உன் ஆணையில் அடங்குகின்றனவில்லை என்பதுகருதது.

விருத்தம்.

துறை - நற்றயிரங்கல்.

13. ஒருவானுதல்பண்டுளங்களிக்கவுயர்வான்முகடுகிழித்தெழுந்து
மருவார்தருவின்மரங்கொணர்ந்தமதுமரவடிவேலதிதீர

அரவார்வேம்பின்பசுங்கண்ணியந்தியிறைவிக்கருளென்று
இரவாதிருக்கநீயளித்தற்கிரங்காதிருந்தாயிதுநாளே.

இ - ள். ஒருவாணுதல் - ஒருபெண்ணானவள், பண்டு-முற்காலத்தில், உள்ளம் களிக்க - மனமகிழும்படி, உயர்வான் முகடுகிழித்து எழுந்து - உயர்ந்த அண்டமுகட்டைக் கிழித்தெழுந்து, மருஆர் தருவின்மரம் கொணர்ந்த - மணம் நிறைந்த கற்பகச் சோலையிலுள்ள பாரிசாத மரத்தைக் கொண்டுவந்த, மதுரை வடிவேல் அதிதீரா - மதுரையில் வாழ்கின்ற வடித்த வேற்படையை யுடைய மிக்கதீரனே, அரவு ஆர்வேம்பின் பசுங்கண்ணி - ஒலிக்கின்ற வேம்பின் பசிய மாலையை, அந்தி - அந்திக்காலத்தில், இறைவிக்கு-எமது தலைமகளுக்கு, அருள் என்று - அருள் செய்கவென்று, இரவாதிருக்க - யாம்பிரார்த்தியாம லிருக்கும்படி, நீ அளித்தற்கு இரங்காது இருந்தாய் - நீ யருள்செய்தற் பொருட்டு இரக்கஞ் செய்யாமலிருந்தாய், எ - று.

யாம் நாள்தோறும் அந்திக்காலத்தில் உன் வேப்பமாலையை இரவாமல் இருக்கும்படி நீ இவளுக்குக் கொடுக்கும்பொருட்டு இரங்கி யருளவேண்டும். அவ்வாறு நீ செய்யாமைக்குக் காரணம் என்னோ என்பது கருத்து.

## கடிகைமுத்துப்புலவர் பாடல்.

### வெங்கடேசுரெட்டன்மீதுபாடியது.

துறை - நற்றாயிரங்கல்.

1. கராமடியச்சக்கரந்தொட்டெய்தவெங்கடேசுரெட்டன்கமலப்பூநி
கராமடிதொட்டாலும்வரவழைப்பார்காணேனங்கனைமார்சேவ
கராமடிபட்டிடுபேரிவாரிதியாமிவளையெவர்காப்பாரோசங்
கராமடிவிட்டிறங்காதபேதையின்மேற் கணைதொடுத்தான்காமவேளே.

இ - ள். கராமடிய - (மடுவில் கஜேந்திராழ்வானைப் பற்றின) முதலையிறக்கும்படி, சக்கரம் தொட்டு எய்த - சக்கராயுதத்தை யெடுத்துப் பிரயோகித்த, வெங்கடேசு ரெட்டன் - வெங்கடேசு ரெட்டனது, கமலப்பூநிகர் ஆம் - தாமரைப்பூவுக்கு நிகராகிய, அடி - பாதத்தை, தொட்டு ஆனாலும் - தீண்டிவணங்கியாயினும், வர அழைப்பார் - வரவழைப்பவரை, காணேன் - கண்டிலேன், அங்கனைமார் சேவகராம் - மாதர் சேவகர்களாம், வாரிதி - கடலானது, அடிபட்டிடு பேரி ஆம் - அடிபடுகின்ற முரசாம், இவளை எவர் காப்பாரோ - இவளை யாவர் காப்பாற்றுவரோ, சங்கரா - சிவனே, மடிவிட்டு இறங்காத - என்மடியை விட்டுக் கீழிறங்காத, பேதையின்மேல் - பேதைப் பெண்மீது, காமவேள் - மன்மதன், கணைதொடுத்தான் - அம்புகளைப் பிரயோகித்தான், எ - று.

துறை - தலைவியிரங்கல்.

2. கன்றுதொட்டுக்கனியுகுத்த கீர்த்திவெங்கடேசுரெட்டாகமல க்கண்ணு, கன்றுதொட்டதத்தனையுங்கைநெகிழ்ந்த தறியாயோகலையுஞ் சோர்ந்த, கன்றுதொட்டரவிக்கையெல்லாங் காமனம்பு கிழித்ததுபா ர்கருத்துந்தானே, கன்றுதொட்டுப்பட்டசிட்டுப்போன்மெலிந்துவாடு வதுங்கண்டிலாயே.

இ - ள். கன்றுதொட்டு - கன்றைக் கல்லாகக் கொண்டெறிந்து, கனி உகுத்த - (விளாங்) கனியை உதிர்த்த, கீர்த்தி - புகழையுடைய, வெங்கடேசு ரெட்டா - வெங்கடேசு ரெட்டனே, கமலக்கண்ணு - தாமரை மலர்போலுங் கண்களையுடையவனே, தொட்டது கன்று அத்தனையும் - அணிந்த வளையல் முழுதும், கைநெகிழ்ந்தது அறியாயோ - கைகழன்றதை யறிந்திலையோ, கலை யும் சோர்ந்து அகன்று - ஆடையும் தளர்ந்து நீங்க, தொட்ட ரவிக்கை எல் லாம் - தரித்த ரவிக்கை முழுதும், காமன் அம்பு கிழித்ததுபார்-மன்மத பாண ங்கள் கிழித்ததைப் பாராய், கருத்தும் தானே கன்றுது - என் மனமும்தானே புழுங்குகின்றது, ஒட்டுப்பட்ட - ஒட்டில் அகப்பட்ட, சிட்டுப்போல் - சிட்டுக் குருவிபோல, மெலிந்து வாடுவதும் - நான் இளைத்து வாடுவதையும், கண்டிலா யே - பார்த்திலையோ, எ - று.

விளாங்கனியை யுதிர்த்தது கிருஷ்ணவதாரத்தில். அரசர் முதலியோ ரைத் திருமாலாக்கியுரைத்தல் வழக்காதலால், 'கன்றுதொட்டுக் கனியுகுத்த கீர் த்திவெங்கடேசு ரெட்டா' என்றார்.

துறை - தோழ்வண்டுகளை நோக்கிக் கூறியது.

3. வளவனைநேராக விசைவளர்த்த வெங்கடேசுரெட்டன்மருவா நாளில், வளவன்னை மாரையும் வெறுத்தாண் மாரனும்பூங் கணையேவ வருந்தியேய, வளவனையே நினைத்திருந்தாண் மடலெழுத வறியாளாய் மருங்கிலேதுவ, வளவனையாடை யுமிழந்தாள் வண்டினங்காள் கண்ட செய்திவழுத்துவீரே.

இ - ள். வளவனை நேர் ஆக - சோழனையொக்க, இசைவளர்த்த - கீர்த்தி யை வளர்த்த, வெங்கடேசு ரெட்டன் - வெங்கடேசு ரெட்டனானவன், மருவா நாளில் - பொருந்தாநாளில், வளவு - வீட்டிலுள்ள, அன்னைமாரையும் வெறுத் தாள் - தாய்மாரையும் வெறுத்தாள், மாரனும்-மன்மதனும், பூகணை ஏவ - புஷ்ப பாணங்களை பிரயோகிக்க, வருந்தி-வருத்தமடைந்து, அவள் அவனையே நினை ந்து இருந்தாள் - அவள் அவனையே நினைத்துக்கொண்டிருந்தாள், மடல் எழுத அறியாளாய் - மடல் எழுதவும் அறியாதவளாகி, மருங்கிலே துவள - இடை யிலே துவளும்படி, வளை - உடுத்த, ஆடையும் இழந்தாள் - வஸ்திரத்தையும் நழுவவிட்டாள், வண்டு இனங்காள்-வண்டின் கூட்டங்களே, கண்டசெய்தி - கண்டசெய்தியை, வழுத்துவீர் - (அவனுக்கு) சொல்லுவீராக, எ - று.

துறை - நற்றயிரங்கல்.

4. பாகப்பாவருமையறியிளசைவெங்கடேசரெட்டா பகரக்கேண் மோ, பாகப்பாமொழிவிழியாணீயேறிவருங்களிற்றைப்பார்த்தாளாங் கொம், பாகப்பாமதிக்கவராவென்றாளம்மதியுதிக்கப்பசந்தேயீசன், பா கப்பாவையிருகமானாள்யானீன்றெடுத்தபாவைதானே.

இ - ள். பாகம்பா அருமை அறி - செம்பாகமமைந்த பாடல்களின் அரு மையை உணர்ந்த, இளசை-இளசைநகரில் வாழ்கின்ற, வெங்கடேச ரெட்டா- வெங்கடேச ரெட்டனே, பகரக்கேள் - சொல்லக்கேள், பாகு - சர்க்கரைப்பா கும், அம்பு - கடலும், ஆம் - போல்கின்ற, மொழிவிழியாள்-சொல்லையும் கண் ணையும் உடையவள், நீ ஏறிவரும் களிற்றை - நீயேறிவரும் யானையை, பார்த் தாளாம் - நோக்கினாளாம், கொம்பா கப்பா - தந்த மாமரக்கப்பா, மதிக்கவரா என்றாள் - மதிக்கவொண்ணா வென்றாள், அ மதி உதிக்க - அந்தச்சந்திரன் உதிக்க, பசந்து - பசலை நிறமடைந்து, ஈசன்பாகம் - சிவபெருமானது இடப் பாகத்திலுள்ள, பாவையின் - பாவைபோலும் உருவமுடைய உமாதேவியின், ஆகம் ஆனாள் - உடம்புபோலாயினாள், (யாரெனின்) யான் ஈன்றெடுத்த பா வை - நான் பெற்றெடுத்த பெண், எ - று.

மதிக்கவரா என்பதற்குச் சந்திரகண்டமா எனினுமாம், ஈசன் பாகப்பா வையிருகமானாள் என்பதற்கு அரையுடம்பானாள் என்பது கருத்து.

துறை - தலைவி தோழியோடு கூறல்.

5. கருக்கோட்டையாளும்வெங்கடேசரெட்டமேந்திரனென்னைக் கலந்தபோகக், கருக்கோட்டைகாணுமடிசகியேமுன்போலின்னுங்கா மனுந்த, கருக்கோட்டைநிகர்வீசைமுறுக்கிவரக்காணிலவன் கங்குன் மாவைக், கருக்கோட்டையம்பினையும்பறிவெருட்டுதலைவாசல்கடக்கத் தானே.

இ - ள். அடிசகியே-அடிதோழியே, கருக்கோட்டை ஆளும்-கருக்கோட் டையை யாளுகின்ற, வெங்கடேச ரெட்டமேந்திரன் - வெங்கேச ரெட்டமன் என்னும் இந்திரன், என்னைக்கலந்த - என்னைச்சேர்ந்த, போகக்கருக்கு - போ கத்தின் கூர்மையானது, ஓட்டைகாணும் - கெடும், (ஆதலால்) முன்போல் இ ன்னும் - முன்போலவே யின்னமும், காமனும் - மன்மதனும், தகருகோட்டை நிகர்வீசை - ஆட்டுக்கடாவின் கொம்பை நிகர்த்த வீசையை, முறுக்கிவரக்கா ணில் - முறுக்கி வரப்பார்த்தால், அவன்கங்குல்மாவை கருக்கு - அவனது இ ருளாகிய யானையைக் கருக்கிவிடு, ஓட்டு - துரத்து, ஐ அம்பினையும்பறி - பஞ்ச பாணங்களையும் பறித்துக்கொள், தலைவாசல் கடக்க வெருட்டு - தலைவாசலைக் கடக்கும்படி வெருட்டிவிடு, எ - று.

துறை - தலைவி தோழியோடுகூறல்.

6. சந்தானமேநிகர்குமாரமுத்துசாமிசகோதரவான்பொன்னே
சந்தானமேருவெனநிறைந்தகுமாரெட்டனெனைத்தழுவாவாயா
சந்தானமேதரிக்கக்கூடுதில்லையவன்மருங்கிற்சகியேநீபோம்
சந்தானமேலேறியுபரிசெய்தாற்றிருமடிதனக்குத்தானே.

இ - ள். சந்தானம் நிகர் - சந்தானமரத்தை நிகர்த்த, குமாரன்முத்துசாமி சகோதரன்-குமாரமுத்து சாமிக்கு சகோதரன், வான்பொன்-மேன்மையாகிய பொன்னை யொப்பவன், நேசந்தான் அ மேரு என நிறைந்த - அன்புஅந்தமேரு மலைபோல் நிரம்பிய, குமாரெட்டன் - குமார எட்டன், (அவன்) என்னைத்தழுவா - என்னை யணையாமையா லுண்டாகிய, ஆயாசந்தான் - வருத்தந்தான், தரிக்கக்கூடுதில்லை - சகிக்கமுடியவில்லை, (அது) சகியே-தோழீ, அவன்மருங்கில்-அவனிடத்தில், நீபோம் சந்தால் - நீ போகின்ற சந்திறேல், நம்மேல்ஏறி - நம் மீதேறி, உபரிசெய்தால் - உபரிலீலைகள் செய்தால், தனக்குத்தானே திருமடி - தனக்குத்தானே நீங்குமடி, எ - று.

துறை - தலைவி தோழியோடுகூறல்.

7. திருமாலையம்புதொட்டசிலைமாரனைப்புவிக்குட்டிடவான்முல்லைத்
திருமாலையம்புயஞ்சூழ்குமாரவெட்டமனைச்சேரச்செய்தாலுள்ள
திருமாலையந்தெளிந்துசுபசோபனம்பொருந்திச்சிவனைநேசித்
திருமாலையந்தோறும்போயுனைநினைத்துத்தெரிசிப்பேன்றிருமின்னே.

இ - ள். திருமால் - (காத்தற் றொழிலால்) திருமாலை நிகர்த்தவனும், (அழகினால்) ஐ அம்புதொட்ட - பஞ்சபாணங்களைப் பிரயோகித்த, சிலை - வில்லையுடைய, மாரன் - மன்மதனை நிகர்த்தவனும், அம்புவிக்குள் திடவான் - உலகத்தில் வலியிற் சிறந்தவனும் ஆகிய, முல்லை - முல்லைமலரால் தொடுத்த, திருமாலை - அழகிய மாலையை, அம்புயம்சூழ் - அழகியதோள்களில் அணிந்த, குமார எட்டமனை - குமாரஎட்ட மேந்திரனை, சேரச்செய்தால்-அணையச்செய்தால், உள் அதிரும் - மனம் நடுங்குவதற் கேதுவாகிய, மால் ஐயம்தெளிந்து, மயக்கம் சந்தேகம் என்பவை தீர்ந்து, சுபசோபநம் பொருந்தி - சுபசோபநத்தை யடைந்து, சிவனை நேசித்து - சிவனை அன்பு செய்து, இரும் - பெரிய, ஆலயந்தொறும் போய் - கோயில்கள் தோறும் போய், உன்னை நினைத்து தெரிசிப்பேன்-உன்னை நினைத்துக்கொண்டே தரிசநம் பண்ணுவேன், திருமின்னே - திருமகளை நிகர்த்த தோழியே, எ - று.

முதலடியில் திருமாலை என்பதை திரும் ஆலை எனப்பிரித்து, திருமுகின்ற கரும்பை என்றும், அம்புதொட்ட சிலை என்பதற்கு அம்பு தொடுக்கும் வில்லாக்கொண்ட என்றும் பொருள் கூறினுமமையும்.

துறை - நற்றயிரங்கல்.

8. மாதங்கங்கோடிநிலவறைக்குளொளித்தாலுமந்தவழியேகம்பு
மாதங்கங்கோடிவிடச்சென்றடிக்குமுயிர்தரிக்குமாசிவாரா
மாதங்கங்கோடிகலுங்கடலொலிக்கென்செய்வளினிவந்துசேர்வாய்
மாதங்கங்கோடிதமிழ்க்குதவும்வசுவப்பமதிமந்திரிநீயே.

இ - ள். மாது-என்பெண்ணானவள், அங்கு அங்குஓடி - அங்கங்கே ஓடி, நிலஅறைக்குள் ஒளித்தாலும் - நிலவறையில் ஒளித்துக் கொண்டாலும், அந்த வழி - அவ்வழியாக, ஏகு - போகின்ற, அம்பு - பாணங்கள், அ - அந்த, மாது-பெண்ணினது, அங்கம் - உடம்பு, கோடிவிட - குறையும்படி, சென்று அடிக்கும் - போய்ப்படும், உயிர் தரிக்குமா - பிராணம் தரித்திருக்குமோ, சிவா - சிவனே, ராமா - ராமனே, தங்கு - பொருந்திய, அம்கோடு - அழகிய கரையை, இகலும் - அழிக்கின்ற, கடல் - கடலினது, ஒலிக்கு - ஓசைக்கு, என்செய்வள்-யாதுசெய்வாள், இனி - இனியாயினும், வந்துசேர்வாய் - வந்துகூடுவாய், தமிழ்க்கு - தமிழ்ப்பாடலுக்கு, கோடி மாதங்கம் - கோடியானைகளை, உதவும்-கொடுக்கிற, வசுவப்ப - வசுவப்பனென்னும், மதிமந்திரி நீ - அறிவையுடைய மந்திரியாகிய நீ, எ - று.

துறை - நற்றயிரங்கல்.

9. தமிட்டராணுவம்பெருக்கிவந்தெதிர்த்தவேண்முரசசத்தங்காது
தமிட்டராவெனப்புலம்புஞ்சிறுபேதைவிரகமதுதணியவேமுத்
தமிட்டராமதிமுகத்தின்முகமழுந்தவேபுணரச்சமயம்வாணர்
தமிட்டராதரந்தெரியுமெங்களெட்டேந்திரமகிபாதமிழரேறே.

இ - ள். வாணர் - கவிவாணரது, தமிழ் - தமிழ்ப்பாடல்களின், தராதரம் தெரியும் - தராதரத்தை அறிந்து கொள்ளுகின்ற, எங்கள் - எங்களுடைய, எட்டேந்திர மகிபா - எட்டேந்திர பூபதியே, தமிழர் ஏறே - தமிழ் நாட்டாருள் சிறந்தவனே, தமிட்டம் - பறையறைகின்ற, ராணுவம் பெருக்கி - சேனைகளைப் பெருக்கி, வந்து எதிர்த்த - வந்தெதிர்ந்த, வேள்-மன்மதனுடைய, முரசசத்தம் - பேரிகை யொலி, காதுதம் இட்டு - காதுகளில் கேட்டு, அரா என - பாம்புபோல, புலம்பும் - வருந்துகின்ற, சிறுபேதை - எனது சிறுபெண்ணின், விரகமது தணிய - விரகமடங்க, முத்தமிட்டு - முத்தமிட்டு, அ ராமதி முகத்தில் - அந்த இரவில்தோன்றுகின்ற சந்திரன்போன்ற முகத்தில், முகம் அழுந்த - முகம்பொருந்த, புணர-தழுவுதற்கு, சமயம் - (இது) தருணம், எ-று.

துறை - நற்றயிரங்கல்.

10. பரத்துவசத்துருத்தாயர்பாயன்மிசைப்பூவைமுலைப்பணைப்பி
லேமம், தரத்துவசப்பாவிமலர் தூற்றுவர்நாணுற்றுவளே காட்டிலேழு,

மரத்துவசத் தொருகணையாலெய்த வெங்கடேசுரெட்டன் மருவாநா ளிற், சரத்துவசக் குரங்கெனவே தனித்திருந்து முடியாது சாற்றி னேனே.

இ - ள். பரத்துவசத்துரு - அன்னிய சத்துருவை யொத்த, தாயர் - தாய் மார், பூவை - இப்பெண்ணினது, பாயல்மிசை - பாயலின் மீதும், மகரத்துவச ப்பாவி - மீனக்கொடியையுடைய மன்மதன், மூலைப்பணைப்பிலே - பருத்தஸ்ந தடங்களிலும், மலர் - புஷ்பங்களை, தூற்றுவர் - இறைப்பார்கள், நான் ஆற்று வனோ - (அதைக்கண்டு) நான் சகிப்பேனோ, காட்டில் - காட்டிலுள்ள, ஏழும ரத்துவசத்து - ஏழுமரா மரங்களின்மீது, ஒரு கணையால் எய்த - ஒரு பாணத் தால் எய்த, வெங்கடேசுரெட்டன் - வெங்கடேசுர எட்டன், மருவாநாளில் - சேராத காலத்தில், சரத்துவசக் குரங்கு என - சரத்காலத்தில் அகப்பட்ட குர ங்குபோல, தனித்து இருந்து - தனியாகி இருந்து, முடியாது-முடிவுபெறாது, சாற்றினேன் - சொன்னேன், எ - று.

பூவை - பூவைபோல்வாள், இது உவமையாகுபெயர் - பூவை, நாகணவா ய்ப்புள் (மைநா).

துறை - நற்றாயிரங்கல்.

11\. நிலமாதுதிலகனெங்களிளசைவெங்கடேசுரெட்டனின்னைப் பார்த்த, பலமாதுவதனமும்பொற்பசலைகொண்டாய்மகளே பெண்ப டையாமேகம், குலமாதுரங்கமென்ற கிள்ளையின்மேன்மாரன்வருங்கு றியைப்பார்த்துச், சொலமாதுகிலுங்கையிலேதொடுவளையுந்தோற்று நின்றதுணிவுதானே.

இ - ள். மகளே - மகளே, பெண்படை ஆம் - பெண்கள் சைனியமாம், கங்குல் - இருளானது, அம் - அழகிய, மா - யானையாம், துரங்கம் என்ற-குதி ரை என்றுகொண்ட, கிளியின்மேல் - கிளியின்மீது, மாரன்வரும் - மன்ம தன் வருகின்ற, குறியை - அடையாளத்தை, பார்த்துச் சொல்ல - பார்த்துச் சொன்ன அளவில், மா - அழகிய, துகிலும் - ஆடையையும், கையிலே தொடு வளையும் - கையிலே அணிந்த வளையலையும், தோற்றுநின்ற - இழந்துநின்ற, துணிவு - நிச்சயம், நிலமாது திலகன் - பூமிதேவிக்குத் திலகம் போன்றவனு கிய, எங்கள் இளசை - எங்கள் இளசை நகரில் வாழ்கின்ற, வெங்கடேசுரெட் டன்—, நின்னைப்பார்த்த - உன்னைநோக்கின, பலமா-பயனு, துவதனமும்-இரு தனங்களிலும், பொன் - தேமலையும், பசலை-பசலை நிறத்தையும், கொண்டாய்- அடைந்தாய், எ - று.

தலைவிகூற்று - மன்மதனை யச்சுறுத்தல்.

12\. கலக்கடமானத்தொனியை முழக்கமனமலைந்தடையார்கால் சாய்த்தோடப், பெலக்கடமாநகக்களிற்றைநடத்தும்வெங்கடேசுரெட்

டன்பிணையலீந்தான், சிலக்கடமாமரக்குயிலையொடுக்குகடற்றொனியட க்குதென்றற்றேனை, விலக்கடமாமதப்பயலைதலைக்கடைவாசலைக்கடக் கவெருட்டுவேனே.

இ - ள். கலக்க-(பகைவர்சேனையை) கலக்கும் பொருட்டு, டமானத்தொனியைமுழக்க - பேரி ஒலியை முழக்க, அடையார்-பகைவர், மனம் அலைந்து- மனம்கலங்கி, கால்சாய்ந்து ஓட - அடியற்று ஓட, பெலம் - பலமாகிய, கடம் - மதம்பொழிகின்ற, மா - பெரிய, நகம் - மலைபோன்ற, களிற்றை - யானையை, நடத்து - செலுத்துகின்ற, வெங்கடேசுரெட்டன் - வெங்கடேசுரெட்டனென வன், பிணையல் - தன்மாலையை, ஈந்தான் - கொடுத்தான், (ஆதலால்) மா-அழகாகிய, மதப்பயலே - மன்மதனுகிய பையலே, சில - சிலவாகிய, கடம் - சோலையிலுள்ள, மாமரம் - மாமரங்களில் தங்கிய, குயிலை-குயில்களை, ஒடுக்கு-வாயடக்கு, கடல்தொனி அடக்கு - கடலோசையை அடக்கு, தென்றல் தேனைவிலக்கு - தென்றலாகிய ரதத்தைநீக்கு, அட - அடே, தலைக்கடை வாசலைக்கடக்க-தலைக்கடைவாசலை கடக்கும்படி, வெருட்டுவேன்-துரத்திவிடுவேன், எ-று.

தாயிரங்கல்.

13. திருக்கரங்கம்வருக்கவயில்செலுத்துமடையான்கமலச்சேக் கையாமா, தருக்கரங்கம் பயிற்றுதுரைபிள்ளைசவெங்கடேசுரெட்டன் றழுவாநாளில், அருக்கரங்கள்புரந்திடவும்பிரும்வெம்புலிபோலாச் சேகண்டாய், உருக்கரங்கம்பரந்துகடக்கவுருக்காமம்பிதந்தானென் றுருகுவாளே.

இதன்பொருள் நன்கு புலப்படவில்லை.

தாயிரங்கல்-வண்டுவிடுதூது.

14. பொரக்கலக்க முற்றவருக் கிரங்கும்வெங்க டேசுரெட்டன் புயங்கண்டாண்மேல், உரக்கலக்கமற்றகணை மதன்விடுத்தா லென்ன செய்வாளோகோகிண்ணச், சரக்கலக்கம்மியன்கடைந்த செப்பலத்தா னே திரண்டதனத்தினூடே, வரக்கலக்கண்ணீருகுத்தாள் வண்டினங் காள் கண்டசெய்தி வழுத்துவீரே.

இ - ள். பொர - போர்செய்ய, கலக்கம் உற்றவருக்கு - கலங்கினவர்களுக்கு, இரங்கும் - இரக்கஞ்செய்கின்ற, வெங்கடேசுரெட்டன் - வெங்கடேசுரெட்டனது, புயம் - தோள்களை, கண்டாள்மேல் - பார்த்தவள்மீது, உரக்க- உறுதியாக, லக்கம் அற்றகணை - கணக்கிலாத அம்புகளை, மதன்விடுத்தால்-மன்மதன் ஏவினல், என்னசெய்வாள் - யாதுசெய்வாள், ஓகோ - ஓகோ, கிண்ணச் சரக்குஅல்ல - கிண்ணமாகிய பொருளல்ல, கம்மியன் கடைந்தசெப்பு அல்ல- கம்மாளன் கடைச்சலிட்ட செப்பு அல்ல, தானே-தனக்குத்தானே, திரண்ட - திரட்சியாகிய, தனத்தினூடேவர - தனத்தின்மீதேஒழுக, கலக்கண்ணீர்-கல

க்கண்ணீரை, உகுத்தாள் - சிந்தினாள், வண்டு இனங்காள் - வண்டின் கூட்டங்களே, கண்டசெய்தி - நீங்கள் கண்ட சமாசாரத்தை, வழுத்துவீர் - (அவருக்கு) சொல்லுங்கள், எ - று.

தலைவிகூற்று-சந்திரோபாலம்பநம், (சந்திரனை நிந்தித்தல்).

15. இத்தரமேசத் துணிவா ரென்சகிமார்வஞ்சகிமா ரென்றால் வேளம்பு, புத்தரமேவத்தனமே புண்படுமேயென்புகல்வேன் புலவோர்க்கேபோ, தத்தரமேகத்திணையாய்த் தழைத்தவெங்கடேசுரெட்டன் றழுவினாலே, துத்தரமேதித்தனையு முன்னாலே விளைந்ததன்றோ வொருநிலாவே.

இ - ள். என் சகிமார் - என்தோழிமார், இத்தரம் - இந்தத் தன்மையாக, ஏசத்துணிவார் - வையத்துணிவார்கள், வஞ்சகிமாரென்றால் - (இவர்கள்) வஞ்சனைக்காரிகளென்றால், உத்தரம் - பின்னே, வேள் - மன்மதன், அம்புஏவ - அம்பை பிரயோகிக்க, தனம்புண்படும் - தனங்கள் புண்பட்டுப்போம், என்புகல்வேன் - யாதுசொல்வேன், புலவோர்க்கே-வித்துவான்களுக்கே, போததர - மிகுதியாய்க்கொடுக்க, மேகத்து இணையாய் - மேகத்துக்குச்சமானமாய், தழைத்த-செழித்த, வெங்கடேசுரெட்டன் - வெங்கடேசுரெட்டன், தழுவினால் - என்னைசேர்ந்தால், உத்தரம்ஏதுஏது - மறுமொழியாதுயாது, இத்தனையும்-இவ்வளவும், உன்னாலே விளைந்ததுஅன்றோ - உன்னால் விளைந்ததல்லவா, ஒருநிலாவே - ஒப்பற்றநிலாவே, எ - று.

தலைவிகூற்று.

சந்திரோபாலம்பநம்.

16. கொட்டமிடு மருவலர்க ளிட்டகற்கோட் டைகளனைத்துங் கொழிதுளாக, வட்டமிடும்பரிநகுல னெட்டமரா சேந்த்ரனென்னை மருவாநாளில், துட்டமதன் கணைதுளைத்த துளைவழியே தென்றல்வந்து சுவைத்துத்தள்ளி, விட்டவெறுங் கூட்டையினிச் சுட்டதனாலென்னபயன் வெண்ணிலாவே.

இ - ள். கொட்டமிடும் - கொட்டமிடுகின்ற, மருவலர்கள் - பகைவர்கள், இட்ட - அமைத்த, கல்கோட்டைகள் அனைத்தும் - கற்கோட்டைகளெல்லாம், கொழிதூள் ஆக - கொழிக்கப்படுகிறதூளிஆக, வட்டமிடும் - சாரிவருகின்ற, பரி-குதிரைகளுக்கு, நகுலன் - நகுலன்போன்றவன், எட்டமராசேந்திரன் - எட்டமராஜேந்திரன், என்னைமருவாநாளில் - என்னைச் சேராத காலத்தில், துட்டமதன் - துஷ்டனாகிய மன்மதன்விட்ட, கணைதுளைத்த - அம்புகள்துளைத்த, துளைவழியே - துவாரத்தின்வழியே, தென்றல்வந்து - தென்றற்காற்றுவந்து, சுவைத்து - ருசிபார்த்து, தள்ளிவிட்ட - தள்ளிவிட்டுப்போன, வெறுங்கூட்டை - வெறுமையாகியசரீரத்தை, இனிசுட்டதனால் - இனிச்சுடுவதனால்,

என்னபயன்-என்னபிரயோஜனம், வெள்ளிலாவே - வெண்மையாகிய சந்திரனே, எ - று.

வட்டமிடுதல் வையாளிவருதல் (சாரிவருதல்.)

செவிலிகூற்று.

17. புவிக்காதிபதியிளசை புரந்தவெங்கடேசுரெட்டன் புலவோர்சொல்லும், கவிக்காதிவள்ளலைக்கண் டாசைகொண்டாளுக்கமுதைக் கரைத்துப்பால்வார்த், துவிக்காதிவ்வளவேனும் புகட்டுசகியேமுகத்தைத் துடைதண்ணீரூ, தவிக்காதி லேசுக்காஞலும் வைத்துதிவள் காமத்தைக்குத்தாதே.

இ - ள். சகியே - தோழியே, புவிக்கு-பூமிக்கு, ஆதிபதி - அதிபதி, இளசைபுரந்த - இளசைநகரத்தைக்காத்த, வெங்கடேசுரெட்டன் - வெங்கடேசுர எட்டன், புலவோர் சொல்லுங்கவிக்கு - வித்வான்கள் சொல்லுகின்ற பாடல்களுக்கு, ஆதிவள்ளலை - முதல்வள்ளலா யிருப்பவனுமானவனை, கண்டு-பார்த்து, ஆசைகொண்டாளுக்கு - ஆசைகொண்ட இவளுக்கு, அமுதைக்கரைத்து - சோற்றைக்கரைத்து, பால்வார்த்து - பால்விட்டு, விக்காது - விக்காமல், இவ்வளவேனும் - இவ்வளவாயினும், புகட்டு - குடிப்பி, முகத்தைத்துடை - முகத்தைத்துடை, இவள் காமத்தைக்கு - இவளுடைய காமவிடாய்க்கு, தண்ணீர்ஊதவி - தண்ணீர்கொடுத்து, காதிலே சுக்குஆனாலும் வைத்துஊது - காதில் சுக்குவைத்தாயினும் ஊது, எ - று.

விடாய்ப்பட்டார் காதில் சுக்குநறுக்கிவைத்தூதல் வழக்கமாதலால் காதிலே சுக்காஞலும்வைத்தூது என்றார்.

தாயிரங்கல்.

18. பொருவாசிக்கொருநகுலனிளசை வெங்கடேசுரெட்டன்புயங்கண்டாயோ, இருவாசிக் கெனக்கலையை யுடுத்துபணி திருத்துவளை யெங்கேதேடு, மருவாசிக்குங்குழலை முடியுனக்குத்தரிப்பிடந்தான் மகளேசிச்சீ, தெருவாசிச்சினதுமவன் கைம்மருந்தான் மெய்மறந்து திரிகின்றயே.

இ - ள். பொரு - போர்செய்கின்ற, வாசிக்கு - குதிரைகளுக்கு, ஒரு நகுலன் - ஒப்பற்ற நகுலன்போன்றவன், இளசை வெங்கடேசுரெட்டன் - இளசைவெங்கடேசுர எட்டனது, புயம் - தோள்களை, கண்டாயோ-பார்த்தாயோ, இரு - இரு, வா - வா, சிக்கெனக்கலையையுடுத்து - உறுதியாக ஆடையை யுடுத்திக்கொள், பணிதிருத்து - ஆபரணங்களை திருத்திக்கொள், வளை எங்கே தேடு - வளையலை எங்கேசிந்திஞய் தேடு, மருவாசிக்கும் குழலைமுடி - பரிமளம் வீசுகின்ற கூந்தலை முடி, மகளே - மகளே, உனக்கு - உனக்கு, தரிப்பு இடம்

சிக்கினதும் தெருவா - தக்குமிடமாகக் கிடைத்ததும் வீதிதானு, அவன் கை மருந்தால் - அவனது கைமருந்தினல், மெய்மறந்து திரிகின்றாயே-உடம்பு மறந்து திரிகின்றனையே, எ - று.

குதிரை நடத்துவதில் நகுலன் சிறந்தவனாதலால், பொருவாசிக் கொரு நகுலன் என்றார். நகுலன் - பாண்டவர்ஐவருள் ஒருவன்

தலைவி குயிலோடுகூறியிரங்கல்.

19. பொரவிசையஞ்செலுத்து வெங்கடேசரெட்டமேந்திரன்மேற் புதுமால்கொண்டேன், கரவிசையங்கசமாரன் கருப்புவில்லைவளைத்து வலக்கையாலெய்யும், சரவிசையங்கத்தில் வந்துதைத்துருவியப் புறம் போஞ்சகிக்கமாட்டேன், இரவிசையம்புகுந்தொளித்தா ளிளங்குயில் காணீருமெனக்கிரங்குவீரே.

இ - ள். பொர-(பகைவர்வந்து) போர்செய்ய-விசயம்செலுத்து, தன்வெற்றியைச் செலுத்துகின்ற, வெங்கடேசரெட்ட மேந்திரன் மேல்-வெங்கடேசரெட்டேந்திரன்மீது, புதுமால் கொண்டேன்-புதிய ஆசைகொண்டேன், கரவிசை-கைவேகத்தையுடைய, அங்கசமாரன்-அங்கசனென்னும் மன்மதன், கருப்புவில்லை வளைத்து-கரும்புவில்லைவளைத்து, வலக்கையால் - வலதுகையினல், எய்யும்-பிரயோகிக்கிற, விசைசரம்-வேகத்தையுடைய அம்பானது, அங்கத்தில் வந்துதைத்து-உடம்பில் வந்துதைத்து, உருவி-உருவிக்கொண்டு, அப்புறம்போம்-அப்பால்செல்லும், சகிக்கமாட்டேன்-பொறுக்கமாட்டேன், இரவி-சூரியன், சையம்புகுந்து ஒளித்தான்-சையமலையின்கண் போய்மறைந்தான், இளங்குயில்காள்-இளங்குயில்களே, நீரும்-நீங்களாயினும், எனக்கு இரங்குவீர்-எனக்கு இரங்குவீர்களாக, எ - று.

தலைவி மன்மதனைநோக்கிக் கூறல்.

20. புடவிகடகடெனவுடை படவடவைசிதறவரு பொருநார்ச்சீறும், தடவிகடகளிற்றுதயனிளசைவெங்க டேசரெட்டன்றருவான்வில்லை, அடவிகட வுனதுகுடை யகலமதகயமேகவனிலத்தேரை, நடவிகடனிமிர்முகடுதொடுபரிதியுதயமிதோநான்கண்டேனே.

இ - ள். புடவி-பூமியானது, கடகடென உடைபட-கடகடென்று வெடிக்கவும், வடவைசிதற-வடவைத்தீயானது சிதறவும், வரு-வருகின்ற, பொருநார்-பகைவரை, சீறும்-கோபிக்கின்ற, தடம்-பெரிதாகிய, விகடம் - மாறுபாடுள்ள, களிற்று-யானைமீதேறி வருகின்ற, உதயன்-சூரியன், இளசை வெங்கடேசரெட்டன்-இளசை வெங்கடேசர எட்டன், (அவன்) முல்லை தருவான்-னது முல்லைமாலையைக் கொடுப்பான், அட - அடா, விகட-அனங்கனே, உனது குடை அகல-உன்குடை நீங்குக, மதகயம் ஏக - மதயானை செல்லுக, அனிலத்தேரைநடவு-தென்றற்காற்றாகிய தேரைநடத்து, இ - இந்த, கடல் -

கடலினது, திமிர் முகடு-உயர்ந்த முகட்டை, தொடு-தொடுகின்ற, பரிதி உதயம்-சூரிய உதயத்தை, இதோ நான் கண்டேன்-இதோ நான் பார்த்தேன்.

கடகட-ஒலிக்குறிப்பு. வடவை-கடலின்நடுவேயிருப்பதோர் நெருப்பு. இது பெண் குதிரைவடிவா யிருக்கும்படி, படைப்புக்காலத்தில் வைக்கப்பட்டது.

தலைவிநெஞ்சொடு கூறியுவத்தல்.

21. கற்றனமின்னுவதென் சொன்முனியென்றான்றநய னம்பாற் கலங்கித்தாபம், உற்றனமின்னாரமுதங் கசந்தணையாராத நெஞ்சேயுணர்ந்தோர்க்கங்கை, யிற்றனமிந்நாளுதவு மிளசைவெங்கடேசுரெட்ட னினியநோக்கம், உற்றனமின்னைமையின்றே யொழிந்தயன் மாதரலர் பேசார்தாமே.

இ - ள். கல்-கல்லானது, தனம்-தனங்களையுடைய, மின் ஆனது-பெண்ணானதற்கு, என்-காரணம்யாது, முனி-(விசுவாமித்திர) முனிவனே, சொல் என்றான்-சொல்லென்றவனாகிய திருமாலினது, தநயன்-புத்திரனாகிய மன்மதனது, அம்பான்-அம்பினால், கலங்கி-கலக்கமடைந்து, தாபம் உற்றனம்-வெப்பமடைந்தோம், இன்-இனிய, ஆர் அமுதம் கசந்து-அரிய அமிர்தமும் கசந்து, அணை ஆராதநெஞ்சே-படுக்கையிற் பொருந்தாத மனமே, உணர்ந்தோர்க்கு-அறிஞருக்கு, அங்கையில்-அகங்கையில், தனம்-தனத்தை, இந்நாள் உதவும்-இக்காலத்தில் தருகின்ற, இளசை வெங்கடேசுரெட்டன்—, (அவனது) இனியநோக்கம் பெற்றனம்-இனிதாகிய கருணை நோக்கத்தைப் பெற்றோம், இன்னைமை-(நமது) துன்பமானது, இன்றோடு ஒழிந்தது-இன்றோடு நீங்கினது, (இனி) அயல்மாதர்-பிறபெண்கள், அலர்பேசார்-பழிமொழியைப் பேசமாட்டார்கள், எ-று.

தாயிரங்கல்.

22. ஆளுக்கேயழகனெங்க ளிளசைவெங்கடேசுரெட்ட னன்பையீசன், தாளுக்கேவிருந்திட்டானொன்னலர்கள்செங்குருதித் தசையைச்செங்கை, வாளுக்கேவிருந்திட்டான் மாதராராவியெல்லாமலர்க்கைவாளி, வேளுக்கேவிருந்திட்டான் வெண்மதிக்கென்பெண்மதியைவிருந்திட்டானே.

இ - ள். ஆளுக்கு அழகன் - புருஷர்களுள் அழகன், எங்கள்இளசை வெங்கடேசுரெட்டன்—, அன்பை-தனதுவிசுவாசத்தை, ஈசன்தாளுக்கு விருந்திட்டான் - சிவபெருமானது திருவடிக்குவிருந்துசெய்தான், ஒன்னலர்கள் - பகைவருடைய, செங்குருதிதசையை - செவந்த உதிரத்தையுடைய மாமிசத்தை, செங்கைவாளுக்கு-தன்செவந்த கையிலுள்ளவாளுக்கு, விருந்திட்டான் - விருந்துசெய்தான், மாதரார் ஆவியெல்லாம்-மாதருயிரையெல்லாம், கைமலர்வாளி-கையில் புஷ்பபாணங்களைக்கொண்ட, வேளுக்கு - மன்மதனுக்கு, விருந்திட்

டான் - விருந்துசெய்தான், என்பெண்மதியை - என்பெண்ணறிவை, வெண்மதிக்கு-வெண்மையாகியசந்திரனுக்கு, விருந்திட்டான்-விருந்துசெய்தான்.

இதனைத்தலைவி கூற்றாக்கினும் பொருந்தும். ஈசன்தாளுக்கே விருந்திட்டான் என்றதொடரில் விருந்திட்டான்என்றது சமர்ப்பித்தான் என்றபடி.

செவிலியிரங்கல்.

23. அனங்கலக்கணந்தெரியாள் சிறுபேதைவிரகமிவட்கதிகமையோ, மனங்கலக்கப்பக்கமில்லையுன்னையன்றியாதலினால் வாராதாலே தினங்கலக்கணீருகுத்துத் தேடுகிறாள் வாடுகிறாடிரண்டகும்பத்,தனங்கலக்க வருள்புரிவா யிளசைவெங்க டேசரெட்ட தமிழ்க்கோமானே.

இ - ள். இளசை வெங்கடேசுரஎட்டனே - இளசை வெங்கடேசுரஎட்டனே, தமிழ்க்கோமானே - தமிழ்வேந்தனே, அனங்கலக்கணந்தெரியாள்-மன்மதலக்ஷணந் தெரியாதவளும், சிறுபேதை - சிறுபேதைப் பெண்ணுமாகிய, இவட்கு - இவளுக்கு, விரகம் அதிகம் - மோகம்அதிகம், ஐயோ - அந்தோ, உன்னையன்றி - உன்னையல்லது, மனம்கலக்க-மனங் கலந்துசொல்ல, பக்கம் இல்லை - பக்கத்துணையில்லை, ஆதலினால்-ஆதலால், வாராதாலே - நீவராமையால், தினம் - நாள்தோறும், கலக்கணீர்உகுத்து - கலக்கண்ணீரைச்சிந்தி, தேடுகிறாள்-தேடாநின்றாள், வாடுகிறாள்-வாடாநின்றாள், திரண்ட - திரட்சியாகிய, கும்பத்தனம் - குடம்போலுந்தனங்களை, கலக்க - சேர, அருள்புரிவாய்-கிருபைசெய்வாயாக, எ - று.

தலைவி தோழியோடு கூறியிரங்கல்.

24. எனக்குடந்தையானவெங்கடேசரெட்டனருகிலழைத்திருத்திவைத்துத், தனக்குடங்கை யாரவென்னைத்தழுவாதமனக்குறையைச் சகியேசொன்னேன், உனக்குடம்பெலாம்பசக்கும் பாலன்னமுங்கசக்குமழகுற்றகொங்கை, கனக்குடங்காதத்தானிகேட்குமதன்படையும்வந்தினிக்கைகலக்குந்தானே.

இ-ள். எனக்கு உடந்தைஆன-எனக்குஅநுகூலமாகிய, வெங்கடேசரெட்டன் - வெங்கடேசுவரஎட்டன், அருகில் அழைத்து - சமீபத்தில் அழைத்து, இருத்திவைத்து-இருக்கச்செய்து, தன்-தனது, அ-அந்த, குடங்கை ஆர-குடங்கைநிறைய, என்னை தழுவாத-என்னைச்சேராத, மனக்குறையை - மனவருத்தத்தை, சகியே - தோழீ, உனக்குசொன்னேன்-உனக்குச் சொல்லினேன், உடம்பெல்லாம்பசக்கும் - உடல்முழுவதும் பசலைநிறமுண்டாகின்றது, பால்அன்னமும்கசக்கும் - பாற்சோறும் கசக்குகின்றது, அழகுஉற்ற - அழகுபொருந்திய, கொங்கை கனக்குடம் காதொனிகேட்கும் - தனமாகிய பெரியகுடத்தில் சோலையோசை கேளாநிற்கும், இனி-இனி, மதன்படையும்வந்து - மன்மதனுடைய சேனையும்வந்து, கைகலக்கும் - கைகலந்து போர்செய்யும், எ - று.

தாயிரங்கல்.

25. மாலைமணிமுடிதரித்தமருவலர்கள் சேனைதனைமடியத்தாக்கு ங், கோலமதகளிற்றுதய னிளசைவெங்கடேசுரெட்டன் கூடாநாளில், பாலன்னந்திவலையருந்தாள் சிறியாட்குமதிக்குமென்னபகையோமேனி, வேலைநடுக்கலத்தைவிட்டே யெழுந்தலைந்தகாகமெனமெலிகின்றாளே.

இ - ள். மாலை-பூமாலையணிந்த, மணிமுடிதரித்த - ரத்நகிரீடத்தைத்தரி த்த, மருவலர் - பகைவருடைய, சேனைதனை-படையை, மடியதாக்கும் - இறக் கும்படிதாக்குகிற, கோலம் - அலங்காரத்தையுடைய, மதகளிறு-மதயானைகளை யுடைய, உதயன்-சூரியன், இளசை வெங்கடேசுரெட்டன் - இளசை வெங்க டேசுர எட்டன், கூடாநாளில்-சேராதநாளில், பால்அன்னம் - பாற்சோற்றை யும், திவலை-நீர்த்துளியையும், அருந்தாள் - உண்ணாள், சிறியாட்கும் - இந்தச் சிறுபெண்ணுக்கும், மதிக்கும்-சந்திரனுக்கும், என்னபகையோ-என்னவிரோ தமோ, வேலைநடு - கடலின்நடுவில், கலத்தைவிட்டு எழுந்துஅலைந்த - கப்பலை விட்டெழுந்தலைந்த, காகம்என - காகம்போல, மேனிமெலிகின்றாள் - உடம் பிளைக்கின்றாள், எ - று.

கலம் - மரக்கலம்

தாயிரங்கல்.

26. ஓங்கியராமாமதியாதவன்போலவரவுமிடையுடையுந்தன்னால் நீங்கியராமாரசரத்தால்வருந்துவதற்கிரங்கநேமியாத பாங்கியராமாவெனக்கண் பார்த்துமருவாய்கவந்தன் படக்கையால் வாங்கியராமாபூமாவிளசைவெங்கடேசுரெட்டமன்னரேறே. [வாள்

இ - ள். ஓங்கிய - நீண்ட, ரா - இரவில், மாமதி - பூர்ணசந்திரன், ஆத வன்போல வரவும் - சூரியன்போல வருதலும், இடை உடையும் - இடையிலு டுத்த ஆடையும், தன்னால் நீங்கி - தனக்குத்தானே அவிழ்ந்து, அரா-சிவனே, மாரசரத்தால் - மன்மதபாணத்தால், வருந்துவதற்கு - துன்பப்படுவதற்கு, இர ங்க - இரக்கஞ்செய்ய, நேமியாத பாங்கியர்-நியமிக்காத தோழியர், ஆமா என- ஆகுமாவென்று, கண்பார்த்து - கண்ணினால் கடாக்ஷித்து, மருவாய்-(இவளைச்) சேர்வாய், கவந்தன்பட - கவந்தன்மடிய, கையால் வாள்வாங்கிய-கையில் வாளை யெடுத்த, ராமா - ஸ்ரீராமனே, பூமா - பூபதியே, இளசை வெங்கடேசுரெட்ட- இளசை வெங்கடேசுரெட்டனே, மன்னர் ஏறே - ராஜாதிராஜனே, எ - று.

மன்னர் ஏறு - அரசரிற் சிறந்தவன்.

தாயிரங்கல்.

27. கனத்துவரைபோற்புடைத்தகொங்கைமங்கை கொண்டமை யல்கண்டுநேர்ந்தா, வனத்துவரைச் சென்றுமலர் கொய்திவளை யெய்ய

வந்தான் வந்தானெப்போ, துனத்துவரைப் புரந்திதவு சொல்லாரைத் தாக்கியவர்த்துருவனேட்டிற், சனத்துவரையாக்கும்வெங்கடேசுரெட்டமேந்திரனே தளசிங்கேறே

**இ - ள்.** எப்போது - எப்பொழுதும், உன் - உன்னை, நத்துவரை - விரும்புவோரை, புரந்து - காத்து, இதவு சொல்லாரை - இதவசனம் சொல்லாதவர்களை, தாக்கி - அடித்து, அவர் - அவர்களை, துருவன் எட்டில் - பிரமனது எட்டில், சனத்துவரை ஆக்கும் - க்ஷணிககாலத்தில் சேர்க்கின்ற, வெங்கடேசு ரெட்டமேந்திரனே - வெங்கடேசரெட்டம இந்திரனே, தளசிங்கேறே - தளவாயாகிய ஆண்சிங்கமே, கனத்து - பருத்து, வரைபோல் புடைத்த - மலைபோல் புடைகொண்ட, கொங்கை - தனங்களையுடைய, மங்கை - என் பெண்ணானவள், கொண்ட - அடைந்த, மையல் கண்டு - மோகத்தைப்பார்த்து, நந்தாவனத்துவரை சென்று - நந்தனவத்தினளவும் போய், மலர் கொய்து - புஷ்பங்களைப்பறித்து, இவளை எய்யவந்தான் - இவள்மீது பிரயோகிக்கவந்தான், (யாவனெனில்) வந்தான் - தென்றற்காற்றைத் தேராகவுடைய மன்மதன், எ - று.

நத்துதல் - விரும்புதல்.

### தலைவியைச் செவிலிதேற்றல்.

௨௮. தரும்பலிக்குமருவலரைத் தாக்கும்வெங்கடேசரெட்டசாமி மாலை, வரும்பலிக்குநினைத்தபடிக் கிப்போது தப்பாது வலத்திருந்த, திரும்பலிக்குரலைப்பார்க்கிற்செயமடிபெண்ணேமதனன் செங்கையாலெய், அரும்பலிக்குமென்னபயஞ் சுகமாகவாழ்வாயுன்னதிட்டந்தானே.

**இ - ள்.** தரும்பலிக்கு - பலிகொடுத்தற்கு, மருவலரை - சத்துருக்களை, தாக்கும் - மோதுகின்ற, வெங்கடேசுரெட்டசாமி - வெங்கடேசுரெட்டசாமியின், மாலை - மாலையானது, வரும் - கிடைக்கும், இப்போது - இப்பொழுது, நினைத்தபடிக்கு - எண்ணினபடியே, தப்பாது பலிக்கும் - தப்பாமல் சித்திக்கும், வலத்து இருந்து - வலப்பக்கத்தில் இருந்து, அதிரும் ஒலிக்கின்ற, பல்லிக்குரலைப் பார்க்கின் - கெவுளிக்குரலைப் பார்க்குமிடத்தில், ஜெயமடி - ஜெயமடி, பெண்ணே - மகளே, மதனன் செங்கையால் - மன்மதன் தன் செவந்தகையினால், எய் - பிரயோகிக்கிற, அரும்பு அல்லிக்கும்-குவளை அரும்புக்கும், என்ன பயம் - என்ன அச்சம், சுகமாகவாழ்வாய் - சுகமாய் வாழக்கடவை, உன் அதிட்டம் தான் - இது உனது அதிர்ஷ்டபலமேயாகும், எ - று.

மருவலர் - சத்துருக்கள், பல்லி அல்லி என்பன பலி அலியெனத் தொகுத்தல் பெற்றன.

### தாயிரங்கல்.

௨௯. மின்னமருங்கொடியனைய சின்னமருங்கொடியமுலை விம்மமானாள், முன்னமரும்பெடுத்துமதன் றன்னமருந்தொடுக்கவெகு மோ

கமாகி, அன்னமருந்தென்னினுமீதென்னமருந்தென்னவுண்ணா தயர்கின்றாளே, சொன்னமருந்தமிழ்ப்புலவர்க் குதவும்வெங்கடேசுரெட்ட சுகுணமாலே.

இ - ள். மின் அமரும் - மின்னலும் விரும்புகின்ற, கொடி அனைய-கொடி போன்ற, சின்னமருங்கு ஒடிய - சிறிய இடையானது ஒடியவும், முலை விம்ம - தனங்கள் பூரிக்கவும், மாதுள் - என்பெண்ணானவள், முன்னம் - முன்னமே, அரும்பு எடுத்து - புவரும்புகளை பறித்து, மதன் - மன்மதன், தன் அமரும் தொடுக்க - தனது யுத்தத்தையும் ஆரம்பிக்கவும், வெகு மோகமாகி - மிகுந்த மோகம்கொண்டு, அன்னம் அருந்து என்னினும் - அன்னத்தை உண்ணென்று சொன்னாலும், ஈது - இது, என்ன மருந்து என்ன - என்ன மருந்தோ என்று, உண்ணாது - உண்ணாமல், அயர்கின்றாள் - சோர்கின்றாள், அரு - அருமையாகிய, தமிழ் புலவர்க்கு - தமிழ் வித்வான்களுக்கு, சொன்னம்-சொர்ணத்தை, உதவும் - கொடுக்கின்ற, வெங்கடேசுரெட்ட-வெங்கடேசுரெட்டனே, சுகுணமாலே - நற்குணத்தாற் சிறந்தவனே, எ - று.

## தாயிரங்கல்.

30. சடங்கலாமகட்கிளமாந் தளிரேமுத்தம்பொரியச் சகிக்குமாவன், மடங்கலானையைப்பாயு மாறுபோற் சீறுதென்றல் வருமாசொர்ணக், குடங்கலாமதிதன மானனமாகு சேர்வாய் மருவார்கூடியுத்தம், தொடங்கலாற்பவுரிகொண்டதருமவெங்கடேசுரெட்டசுகுணமாலே.

இ - ள். மருவார் - பகைவர், கூடி-சேர்ந்து, யுத்தம் தொடங்கலால்-போரைத் தொடங்குதலால், பவுரிகொண்ட - அவர்களோடு சுழன்று யுத்தம்பண்ணுகிற, தரும - தர்மசிந்தையுள்ள, வெங்கடேசுரெட்ட - வெங்கடேசுரெட்டனே, சுகுணமாலே - நற்குணத்தாற் சிறந்தவனே, மகட்கு - என்பெண்ணுக்கு, சடம் - உடம்பு, கல்லா - கல்லாகுமா, இள - இளமையாகிய, மாந்தளிரே-மாந்தளிரேஆகும், முத்தம்பொரிய - முத்துமாலைகள் பொரிந்துபோக, சகிக்குமா-சகிப்பாளா, வல் - வலிமையாகிய, மடங்கல் - சிங்கம், ஆனையை பாயும் ஆறுபோல் - ஆனையைப்பாய்கின்ற தன்மைபோல், சீறு - சீறுகின்ற, தென்றல்வரும் - தென்றற்காற்றுவரும், ஆ - ஐயோ, தனம்ஆனனம் - தனமும் முகமும், சொர்ணக்குடம் கலாமதிஆம் - பொற்குடத்தையும் பூர்ணசந்திரனையும் நிகர்க்கும், (ஆதலால்) சேர்வாய் - இவளைத் தழுவுவாய், எ - று.

முதலடியில்கல்லா என்பது கலாஎனத் தொகுத்தலாயிற்று.

## தலைவியிரங்கல்.

31. திருவிருக்குமணிமார்ப னிளசைவெங்கடேசுரெட்டதீரனென்னை, மருவிருக்குமணிகணவ னெனச்சேராநாண்மோக மயக்கத்தான்மேல், விருவிருக்குமணிவளையுமேகலையுஞ்சோர்ந்திடுமேன் மேலுந்

தேன்பால், அருவிருக்கு மணியலுங்காந் தூந்தரள மெனவருங்கண் ணருவிதானே.

இ - ள். திருஇருக்கும் - திருமகள் வாழ்கின்ற, மணி - கௌஸ்துபமணியைத்தரித்த, மார்பன் - மார்பையுடையவன், இளசை வெங்கடேசுரெட்டநீரன் - இளசை வெங்கடேசுரெட்டன்என்கிற தைரியவான், என்னைமருவி - என்னைக்கூடி, ருக்குமணி கணவன்என - ருக்குமணிநாயகனாகிய கிருஷ்ணன் போல, சேராநாள் - தழுவாதநாளில், மோகமயக்கத்தால் - காமமயக்கத்தால், மேல் - உடம்பானது, விருவிருக்கும் - விருவிருக்கின்றது, அணிவளையும் மேகலையும் சோர்ந்திடும் - அணிந்தவளையலும் மேகலையும் கழன்றுபோம், மேல்மேலும் - மேலு மேலும், தேன்பால் - தேனும்பாலும், அருவிருக்கும் - தெவிட்டிடும், அணியலும் காந்தும் - ஆபரணங்களும்சுடும், கண் அருவி - கண்ணீரருவியானது, தரளம் எனவரும் - முத்துப்போலச்சிந்தும், எ - று.

அருவருக்கும் என்பது எதுகையின்பம்நோக்கி அருவிருக்கும் எனவந்தது.

செவிலி தலைவியைநோக்கிக்கூறல்.

32. குருவடியை வணங்கும்வெங்கடேசுரெட்ட மேந்திரன்முன் கூசாமற்போய், இருவடிவெல்லாம்பாரு வீணையைமீட்டனுராக மிசைத்தனேகந், தருவடிதெள்ளமுதநவரசமொழுகும்படிபடிசவ்வாதுபூசி, மருவடிபெண்ணேயினிமேன் மகராசியாய்ச்சுகித்துவாழ்குவாயே.

இ - ள். குரு அடியைவணங்கும் - குருபாதத்தைத் தொழுகின்ற, வெங்கடேசுரெட்ட மேந்திரன்முன் - வெங்கடேசுரெட்ட மேந்திரனுக்கெதிரே, கூசாமல்போய் - நாணமல்போய், இரு - உட்காரு, வடிவுஎல்லாம்பாரு - (அவனது) உருவமுழுதும்பார், வீணையைமீட்டு - வீணையைவருடு, அனுராகம்இசைத்து - இச்சையையுண்டாக்கி, அனேகம்தரு - அனேகம்தருக்களை, வடி - வடித்த, தெள் - தெளிவாகிய, அமுதம் - அமிர்தம்போல, நவரசம் ஒழுகும்படி - நவரசம்வழியும்படி,படி - பாடு, சவ்வாதுபூசி - சவ்வாதணிந்து, மருவு - அவனைச்சேர், அடிபெண்ணே, அடிமகளே, இனிமேல் மகராஜியாய் சுகித்து வாழ்குவாய்-இனிமேல் மகராஜியாய்ச் சுகமடைந்து வாழக்கடவை, எ-று.

தாயிரங்கல்.

33. கன்னியுன்றன்மேற்பிரியமையாமற்றோரையிவள் கண்டான்றன்று, மன்னர்தமிலேயொருவன் பெயரையடிக்கடி வழுத்துவாளனைத்தைத், தென்னவன்றன்மாலையென்பாண் மதியையதிற் கடைபெழுத்தாய்த்தீர்த்தாளையா, நன்னயகுணகரகுமாரவெட்ட ராசேந்த்ர நளினமாலே.

இ - ள். ஐ ஆம் - அழகாகிய, நல்நயகுணகர - நல்லஇனிய குணங்களுக்கு ஆகரமாயிருப்பவனே, குமார எட்டராசேந்த்ர-குமாரஎட்ட ராஜேந்திர

னே, நளினமாலே - நயகுணத்தாற்பெரியோனே, கன்னி உன்றன்மேல் பிரி
யம்ஐயா - என்கன்னிக்கு உன்மீதுபிரியமையா, மற்றோரை இவள்கண்டால் -
மற்றவரை இவள்பார்த்தால், மூன்றுமன்னர்தம்மிலே - மூவேந்தர்களுள், ஒரு
வன்பெயரை - ஒருவேந்தனதுபெயரை, அடிக்கடி - கணந்தோறும், வழுத்து
வாள் - சொல்லுவாள், அன்னத்தை - சோற்றை, தென்னவன் தன்மாலை என்
பாள் - பாண்டியனது மாலையென்றுசொல்வாள், மதியை - சந்திரனை, அதில்
கடை எழுத்தாய்நிர்த்தாள் - அதிலுள்ள கடையெழுத்தாய் நிச்சயித்தாள், எ-று.

மூன்றுமன்னர் - சேரன்சோழன் பாண்டியன் என்பவர். இவருள்ஒருவன்
பெயர்சேரன். (சேரேன்) தென்னவன்மாலை - வேம்பு. (கசப்பு) மதி என்பதில்
கடையெழுத்துதி - இது தீயென்பதன்குறுக்கம் (நெருப்பு.)

### நாயகிகூற்று.

34. பொன்னில்லங்கைராவணனைவென்றவிடை யாட்களகம்புளக
க்கொங்கை, தென்னைநேராயிருக்குஞ்சொல்வார்த்தைதகண்டுபயந்தே
ன்மகாவிற், பன்னிவடிவூர்கணிதம்பம்மரம்பையயாகுமிவட் பரிந்துசேர்
வாய், சொன்னமொழிதவறாதகுமாரவெட்டராசேந்த்ரசுகுணமாலே.

இ - ள். சொன்னமொழி தவறாத - சொன்னசொல்தவறாத, குமார எட்ட
ராசேந்த்ர சுகுணமாலே - குமரா எட்ட ராஜேந்திர சுகுணமாலே, நைவென்ற
இடையாட்கு - நையுமென்று சொல்லுதற்குரிய இடையையுடையவளுக்கு, கை -
கையானது, பொன் இல்லம் - திருமகள் வீடாகிய தாமரைமலருக்கும், அள
கம் - கூந்தலானது, ராவணன் - ராத்திரியின்நிறத்துக்கும், புளகக்கொங்கை -
பூரிப்பையுடைய தனங்கள், தென் னனை - தென்னங் குரும்பைக்கும், நேராய்
இருக்கும் - சமானமாயிருக்கும், சொல் வார்த்தை - சொல்லுகின்ற சொல்லான
து, கண்டு பயம் தேன் - கற்கண்டையும் பாலையும் தேனையும் நிகர்க்கும், மகா
விற்பன்னி - பெரியகல்வியுடையவள், வடிவு ஊரு கண் நிதம்பம் - உருவும்
தொடையும், கண்ணும் அல்குலும், அரம்பை ஆகும் - அரம்பையை நிகர்க்கும்,
இவள் - இவளை, பரிந்து சேர்வாய் - விரும்பியணைவாய், எ - று.

சுகுணம் - நற்குணம், மால் - பெரியோன், அரம்பை - தெய்வப்பெண்,
இதுவடிவுக்கும், அரம்பை - வாழை இது தொடைக்கும், அரம் - இரும்பராவு
ங்கருவி. இது கண்ணுக்கும், பை - பாம்பின்படம், இது அல்குலுக்கும் உவ
மையாகக்கொள்க.

### தலைவிகூற்று.

35. மெலக்கணக்காப்பொருந்துவோமெனவேளை மனங்குறிக்கு
ம்வேளைபார்த்து, நிலக்கணக்கா மனம்புகுந்துகுர் தாகப்பாயவென்
மேனிரைத்தா னெண்ணிச், சொலக்கணக்கா வழக்காநானறிந்தவளா
தெரிந்தவளாதுயரமெல்லாம், இலக்கணக்காரிகைதேர்ந்தகுமாரவெட்
டபூபதிபாலியம்புவாயே.

**இ - ள்.** மெல்ல - மெதுவாக, கணக்கா - அளவாக, பொருந்துவோம் என - கூடுவோமென்று, வேளை மனங்குறிக்கும் வேளைபார்த்து - விருப்பத்தை மனத்தில்கொள்ளுகின்ற சமயம்பார்த்து, நில் - நில்லு, அ - அந்த, கணம் - கூட்டமாகிய, காமன் அம்பு - மன்மதபாணங்கள், குந்துகுந்து ஆகபாய - நேர்நேராய்ப் பாயும்படி, என்மேல் நிரைத்தான் - என்மீது நிரப்பினான், எண்ணிச்சொல்ல - (அந்த அம்புகள் இத்தனையென்று) எண்ணிச்சொல்வதற்கு, கணக்கா வழக்கா - கணக்குவழக்குண்டா, நான் அறிந்தவளா தெரிந்தவளா - நான் அறிவுள்ளவளா விவரம் தெரிந்தவளா, துயரம் எல்லாம் - என் துன்பம் முழுதும், இலக்கணக் காரிகை தேர்ந்த - இலக்கண நூலாகிய காரிகை படித்துத் தெளிந்த, குமார எட்ட பூபதிபால் - குமாரவெட்ட பூபதியினிடத்தில், இயம்புவாய் - சொல்வாய், எ - று.

வேள் - விருப்பம்.

செவிலிகூற்று.

36. அரைத்தசந்தனம்பொருந்தாளமளியின்மேற்கண்டுயிலாளரக்கன்மௌலி,நிரைத்தசந்தனம்பாலேதுடைத்தமருதப்பன்வரநினையாளன்னை, இரைத்தசந்தனம்பசலைக் காற்றுமென்றாளோபரவை யிடத்திலேசென், றுரைத்தசந்தனம்பாருக்குள்ளிலையோதிவாகரனாரொளிக்கின்றாரே.

**இ - ள்.** அரைத்த சந்தனம் பொருந்தாள் - தேய்த்த சந்தனத்தை யேற்கமாட்டாள், அமளியின்மேல் - சயனத்தின்மீது, கண் துயிலாள் - கண்ணுறங்கமாட்டாள், அரக்கன் மௌலி - அரக்கனாகிய ராவணனுடைய கிரீடங்களை, நிரைத்த - வரிசையாகிய, சம் - வெற்றியையுடைய, தன் அம்பாலே - தனது பாணத்தினால், துடைத்த - அழித்த, மருதப்பன் - மருதப்பதுரை, வர - வரும்படி, அன்னை நினையாள் - தாய் நினைக்கமாட்டாள், இரைத்த - ஆரவாரிக்கிற, சந்தன் - அழகனாகிய மன்மதனது, அம்பு அசலைக்கு - அம்புமலைக்கு, ஆற்றும் என்றாளோ - பொறுப்பாளென்றாளோ, பரவையிடத்திலே சென்று உரைத்த - கடற்கரையிற் போய்ச்சொன்ன, சந்து அன்னம் - தூதுக்குரிய அன்னமானது, பாருக்குள் இல்லையோ - பூமிக்குள்ளேயில்லையோ, திவாகரனார் ஒளிக்கின்றாரே. சூரியன்மறைகின்றாரே. எ - று.

சந்திரன் வந்தால் துன்பம் அதிகரிக்குமே யென்றதற்கு "திவாகரனாரொளிக்கின்றாரே" என்றிரங்கினாள். சந்தம் - அழகு.

தோழிகூற்று.

37. அரமியஞ்சேர்த்திளவாழைக் குருத்தைவிரித்ததிற்கிடத்தவ[illegible]வுஞ்சூடா, கரமியங்கொள்ளாதெழுந்து தரையில்விழுந்தாளதனைக்கண்டுதாய்மார்,சரமியங்குதோவில்லையோவென மூக்கிற்கையைவைத்தார்

சத்யவாய்மைத், திரமியங்குங்கிளுவைமருதப்பனுக்கிச்செய்திசொல்லித்தெளிவிப்பீரே.

இ - ள். அரமியம் சேர்த்து - நிலாமுற்றத்தில் சேர்த்து, இளவாழைக்குருத்தை விரித்து - இளமையாகிய வாழைக்குருத்தைப்பரப்பி, அதில் கிடத்த - அதில் படுக்கவைக்க, அதுவுஞ்சூடாக - அதுவும் உஷ்ணமாக, ரமியங்கொள்ளாது - களிப்புக்கொள்ளாமல், எழுந்து தரையில் விழுந்தாள - எழுந்து பூமியின்மீது விழுந்தாள், அதனைக்கண்டு - அதைப்பார்த்து, தாய்மார் - தாய்மார்கள், சரம் இயங்குதோ இல்லையோ என - மூச்சுநடக்கிறதோ இல்லையோ வென்று, மூக்கில் - இவளது நாசியில், கையைவைத்தார் - கையைவைத்தார்கள், சத்தியவாய்மை திரம் இயங்கும்-உண்மை மொழிகள் திடமாய் விளங்குகின்ற, கிளுவை மருதப்பனுக்கு - கிளுவை மருதப்பதுரைக்கு, இச்செய்திசொல்லி - இந்தச்செய்தியைச் சொல்லி, தெளிவிப்பீர் - தேற்றக்கடவீர், எ - று.

தலைமகள்கூற்று.

38. திருந்தலரிகலையடக்குங்கிளுவைமருதப்பசெயசிங்கமென்னைப்
பொருந்தலரிதாயிருந்தாற்பூத்தானஞ்செய்யானோபோர்வேளையோ
வருந்தலரிகுலையலரிமாவலரிபூவலரிமாதர்கீழ்பால்
இருந்தலரிவாராமுன்னிரவிதனின்மதியம்வந்தாலென்செய்வேனே.

இ - ள். திருந்தலர் - பகைவரது, இகலை அடக்கும் - வலியையடக்குகின்ற, கிளுவை மருதப்ப செயசிங்கம் - கிளுவை மருதப்ப ஜெயசிங்கம், என்னைப் பொருந்தல் - என்னைச்சேர்தல், அரிதாய் இருந்தால் - அருமையாயிருந்தால், போர்வேள் - போர்த்தொழிலையுடைய மன்மதன், பூ அஞ்சு எய்யானோ- புஷ்பபாணங்கள் ஐந்தையும் பிரயோகியானோ, ஐயோ - அந்தோ, இகுலை வருந்தலர் - தோழியர் வருந்தார், அலர் - பழிதூற்றுதலாகிய, இ மாவலர் - இந்தப் பெரிய தொழிலில் வல்லவர், ரிபுவலர்-பகைத்தன்மையில் வல்லவர், இ - இந்த, மாதர் - அழகிய, கீழ்பால் இருந்து - கீழ்த்திசையிலிருந்து, அலரிவாராமுன் - சூரியன் வருமுன்னே, இரவு இதனில் - இரவாகிய இதில், மதியம்வந்தால் - சந்திரன்வந்தால், என்செய்வேன் - என்னசெய்வேன், எ - று.

பூத்தானஞ் செய்யானோ என்பதில்தான் சாரியை. ரிபு என்பது ரிபூ என நீட்டல் பெற்றது.

தலைவியிரங்கல்.

39. வரைத்தூற்று நெடுங்காட்டு வழிப்புலவோரலையாமல்வளர்த்ததாய்போல், உரைத்தூற்று மலைபுரந்த துங்கமருதப்பனொருநாளுஞ்சேரான், கரைத்தூற்று நறும்பனுன்னமும்வேண்டேனதனைக்கண்டலோமா, தரைத்தூற்றுமெனவிடுத்துத் தாய்க்கிழவிகூடநின்றுசலஞ்செய்தாளே.

இ - ள். வரைஊறு - மலையும்பற்றைக் காடுமோயிருக்கிற, நெடுகாட்டுவழி - நெடியகாட்டு வழியில், புலவோர் அலையாமல் - வித்வான்கள் அலையாமலிருக்கும்படி, வளர்த்த தாய்போல் உரைத்து - வளர்த்த தாயைப்போல இதஞ்சொல்லி, ஊற்றுமலை - ஊற்றுமலையை, புரந்த காத்த, துங்கம் - பரிசுத்தனான, மருதப்பன் - மருதப்பனானவன், ஒருநாளும் - ஒருநாளாயினும், சேரான்-கூடான், கரைத்து ஊற்றும்-கரைத்து வார்க்கிற, நறும்பாலும் அன்னமும் வேண்டேன்-நல்லபாலையும் அன்னத்தையும் விரும்பேன், தாய்க்கிழவி-தாய்க்கிழவியானவள், அதனைக்கண்டு அல்லோ - அதைப் பார்த்தல்லவோ, தூற்றும் என - பழிதூற்றுங்களென்று, மாதரைவிடுத்து - மாதரையேவி, கூடாின்று - தானும் கூடாின்று, சலம்செய்தாள் - கோபஞ்செய்தாள், எ - று.

சலம் - கலக்கம் எனினுமமையும்.

தாயிரங்கல்.

40. செருத்தாக்குமதப்புலியே திருமலைவேலப்பாநின்செவ்வாயூறல், அருத்தாக்குமரிக்கமுதங்கசப்பாகுமணைவேண்டாளேயோவாழைக், குருத்தாக்குமதைவிரித்தாக் கிடத்திலுஞ்சூடெனவெழுந்து கொள்வாள்காமக், கருத்தாக்குமுதநாதன் கங்குல்வரக்கண்டுமுனைக் கண்டிலாளே.

இ - ள். செரு - போரில், தாக்கும் - (பகைவரைத்) தாக்குகின்ற, மதப்புலியே-மதப்புலிபோன்றவனே, திருமலை வேலப்பா - திருமலைவேலப்பனே, நின்செவ்வாய்ஊறல்-உன்செவந்தவாயமுதத்தை, அருத்து-ஊட்டு, ஆ - ஐயோ, குமரிக்கு - இந்தப்பெண்ணுக்கு, அமுதம் கசப்பு ஆகும் - அமுதம் கசப்பாகின்றது, அணைவேண்டாள் - படுக்கையை விரும்பாள், ஐயோ - அந்தோ, வாழைக்குருத்து ஆக்கும் அதை விரித்து - வாழைக்குருத்தாகிய அதனை விரித்து, இடத்திலும் - அதில் படுக்கை வைத்தாலும், சூடு என எழுந்துகொள்வாள்-அதுவுஞ்சூடென்று எழுந்துகொள்ளுவாள், காமக்கருத்து ஆ - காம எண்ணம் உண்டாக, குமுதநாதன் - சந்திரன், கங்குல்வரக்கண்டும் - இரவில் வரப்பார்த்தும், உன்னை கண்டிலாள் - உன்னைப்பார்த்திலள், எ - று.

குமுதநாதன் - அல்லிமலர்களுக்குத் தலைவன் (சந்திரன்).

தாயிரங்கல்.

41. எடுத்துவரிமுறத்தினிலிட்டிழைத்தகுறிபலித்ததெனவெண்ணித்தந்த, வடுத்துவரிதழுக்கேறு மெனக்கனிவாய் மடுத்துநிஞ்சு மாதைப்பாடு, படுத்துவரிமாதரென்றுற்சொல்பவரார் வளத்திலங்கைப் பதிமேற்சென்ற, கடுத்துவரிதனைப்பொருததிருமலைவேலப்பனிதைக் கண்டிலானே.

கடலிலுள்ள சேல்மீன்களை அள்ளிக்கொண்டு, குருகு - நாரைகள், அலகுவளை ஒதுக்கும் - மூக்கினால் வளைகளில் ஒதுக்குகின்ற, கூடலின்வாழ் - மதுரையில் வாழ்கின்ற, திருமலைவேல் - திருமலைவேலப்பனது, கொலுவில் - கொலுமண்டபத்தில், நீபோய் இரு - நீபோய் உட்காரு, கல-கலந்துகொள், குதலை மொழியாள்-மழலைச்சொல்லையுடையவள், இத்தனைமால் ஆனாள் என்று இசைத்து - இவ்வளவு ஆசைகொண்டாளென்றுசொல்லி, அன்னம் பருகு - அன்னத்தை உண்ணு, அல்ல - அல்லவென்றால், குவளைத்தாரையாகிலும் கேட்டாள் என - குவளைமாலையையாயினும் கேட்டாளென்று, சோபனம் சொல் - சுபவார்த்தையைச் சொல்லு, எ - று.

திருகுதல் - சுழலுதல்.

தாயிரங்கல்.

44. சருக்கரையமுதுகனிதேன்கலந்ததமிழ்முனிநிகர்வான்றரியார்பெண்டீர், கருக்கரையமுனிவிசயகிரிவேலைச் சின்னேனைபகனவானாசைப்,பெருக்கரையவளவலவென்றலக்கேறிமயக்கினதுபித்தமூர்ச்சைத், திருக்கரையவுடதமெடுகரைத்துமெல்லப் புகட்டமுதுசெலுத்தென்றளே.

இ - ள். சருக்கரை அமுது கனி தேன் - சர்க்கரை அமிர்தம் முப்பழம் தேன் (ஆகிய இவற்றின்சுவை,) கலந்த-சேர்ந்த, தமிழ் - தமிழ்க்கு முதல்வனாகிய, முனி - அகத்தியமுனிவனை, நிகர்வான் - நிகர்ப்பவன், தரியார் - பகைவரது, பெண்டீர் - மனைவியராது, கரு கரைய - கருப்பம் கரையும்படி, முனி - கோவித்த, விசயகிரி - விசயகிரியில் வாழ்கின்ற, வேலைசின்னேனை கனவான் - வேலைசின்னேனை கனவான், (அவன்மீதுள்ள) ஆசைப்பெருக்கு - ஆசைப்பெருக்கை, அரைய - சொல்ல, அளவு அல்ல - அளவுபடுவதல்ல, பித்தமூர்ச்சைதிருக்கு - பித்தமூர்ச்சையாகிய மாறுபாடு, என்தலைக்கு ஏறி மயக்கினது - என் சிரசுக்கேறி மயக்கியது, (ஆதலால்) அரை - அரைக்கப்பட்ட, அவுடதம் எடு - மருந்தையெடு, கரைத்து மெல்லப்புகட்டு - நீரில்கரைத்துப் பையப்புகட்டு, அமுது செலுத்து - சோற்றைச் செலுத்து, என்றாள் - என்று சொன்னாள், எ - று.

அறைய என்பது எதுகையின்பொருட்டு அரைய என வந்தது. கனி-முக்கனி, அவை - வாழை மா பலா என்பன.

தலைவிகூற்று - வண்டுவிடுதூது.

45.பொருவதற்குச்சிலைக்காமன் வருமுனமேமதுரையிற்போய்ப் பொறிவண்டீர்காள், செருவதற்குப் புகழ்விசயன் திருமங்கநரேந்த்ரன் வரச்செய்வீரிங்கு, வருவதற்குத்தாமதித்தான்மாலையொன்றுகேளுமந் தமாலைதானுந், தருவதற்குமதியானேன் மையலையாயினுந்திரும்பத்தரச்செய்வீரே.

இ - ள். பொறி வண்டர்காள் - புள்ளிகளையுடைய வண்டுகளே, சிலைகாமன் - (கரும்பு)வில்லையுடைய மன்மதன், பொருவதற்கு - போர்செய்வதற்கு, வருமுன்னமே - வருமுன்னே, மதுரையில் போய் - மதுரையிற்சென்று, செருவதற்கு - போர்க்கு, புகழ்விசயன்-கீர்த்தியையுடைய அருச்சுனனாகிய, திருமலைநரேந்திரன் - திருமலைராயன், வரச்செய்வீர்-இவ்விடம் வரப்பண்ணுவீர், இங்குவருவதற்கு தாமதித்தால்-இவ்விடம் வருவதற்குத்தாமதமானால், மாலை ஒன்று சேனும்-(அவனது) மாலையொன்றையாயினும் கேளுங்கள், அந்த மாலை தானும்-அந்த மாலையையும், தருவதற்கு மறியானேல் - தருவதற்கு நினையானாயின், மையலை ஆயினும் - என் காமமயக்கத்தையாயினும், திரும்பத்தரச் செய்வீர் - மீளப்பண்ணுங்கள், எ - று.

நரேந்திரன் - அரசன். மதித்தல் - நினைத்தல்.

தலைமகள் தோழியரோடு கூறியிரங்கல்.

46. தெந்தனம்பேசுங்கொழுநர்மயல்கொள்ளுஞ்சேல்விழியீர்திரண்டமேரு, பந்தனம்போற்றனமுடையீரின்சொலுரையானுரைக்கும்படிநீர்கேண்மின், எந்தனஞ்சேராதவெங்கடேசுரெட்டன்றனையழைக்கவெழுந்துபோன, சந்தனஞ்சும்மாவந்தாற்பூசலாமெனக்குமதன்றனக்குந்தானே.

இ - ள். தெந்தனம் பேசும் கொழுநர் - தெந்தனம் பேசுகின்ற கணவர், மயல் கொள்ளும் - மையல் கொள்ளுதற்குரிய, சேல் விழியீர் - சேல்மீன்போலும் கண்களையுடையவரே, திரண்ட - திரட்சியாகிய, மேருபந்தனம்போல் - மேருமலையைக் கட்டிவைத்தாற்போன்ற, தனம் உடையீர் - தனங்களை உடையவரே, இன் சொல் உரை - இனிய மொழிகளை, யான் உரைக்கும்படி - நான் சொல்லும் விதத்தை, நீர் கேண்மின்-நீங்கள் கேளுங்கள், எம் தனம் சேராத-எமது தனங்களைத் தழுவாத, வெங்கடேசுரெட்டன் தனை அழைக்க - வெங்கடேசுரெட்டனை அழைக்கும்பொருட்டு, எழுந்துபோன - பறந்துசென்ற, சந்து அன்னம் - தூதாகிய அன்னம், சும்மாவந்தால் - சும்மா திரும்பினால், எனக்கும் - எனக்கும், மதன் தனக்கும் - மன்மதனுக்கும், பூசல் ஆம்-போர்விளையும், எ-று.

சந்தனம் சும்மாவந்தால் - சந்தம் சும்மாகிடைத்தால், பூசலாம் - பூசிக்கொள்ளலாம், எனச் சொன்னயந் தோன்றுமாறு காண்க. பந்தனம் - கட்டு.

தாயிரங்கல்.

47. விருத்தப்பாகலித்துறையும் வெண்பாவுங்கொச்சகமும்விரிவாய்ச்சொல்லக், கருத்தப்பாவெனதுமகள்காமனரவிந்தமலர்க்கணையானெஞ்சில், இருத்தப்பாலனம்வெறுத்தாளணையுமவள் சகிதனையுமேசுறுணீ, வருத்தப்பாத்திரமல வேயணைந்திடுவாய்திருமலைவேல்வரிசைமாலே.

**இ - ள்.** திருமலைவேல் வரிசைமாலே - திருமலைவேலப்பன் என்கிற சிறப்பையுடைய பெரியோனே, விருத்தப்பா - விருத்தப்பாவையும், கலித்துறையும் வெண்பாவும் கொச்சகமும் - கலித்துறையையும் வெண்பாவையும் கொச்சகத்தையும், விரிவாய் சொல்ல - விஸ்தாரமாய்ச்சொல்ல, கருத்து - எண்ணமாம், அப்பா - அப்பா, எனது மகள் - என் பெண்ணானவள், காமன் - மன்மதன், அரவிந்தமலர் - தாமரைமலராகிய, கணையால்-அம்பினால், நெஞ்சில் இருத்த - மார்பில் அழுத்த, பால் அன்னம் வெறுத்தாள் - பாற்சோற்றை வெறுத்தாள், என்னையும் அவள் சகிதையையும் ஏசுறாள் - என்னையும் அவள் தோழியையும் வைகிறாள், நீ வருத்த பாத்திரம் அல்லவே - நீயும் இவளைவருத்துதற்கு உரியனல்லவே, (ஆதலால்) அணைந்திடுவாய் - இவளைத் தழுவுவாய், எ - று.

வரிசை - சிறப்பு.

தலைவிதோழியையிரத்தல்.

48. வீறுதரமேவலரைவென்றவெங்கடேசரெட்டன் மேவவேண்டி, நாறுதரமாகவண்டைத்தூதுவிட்டாளன்னைநொந்தாள்கண்ணீர், ஆறுதரமேற்பாயவனங்கன் பூவாளிமுலையானையுடே, ஏறுதரமாச்செவியைத்தொளைக்குதென்றேயோலமிட்டாளெனச்சொல்மாதே.

**இ - ள்.** மாதே - பெண்ணே, வீறுதர மேவலரை வென்ற - மிகுதியாகப் பகைவரைவென்ற, வெங்கடேசரெட்டன் - வெங்கடேசுரரெட்டன், மேவவேண்டி - உன்னைத் தழுவவிரும்பி, நாறுதரமாக - நூறுதரமாய், வண்டைத்தூது விட்டாள் - வண்டைத்தூதனுப்பினாள், அன்னை - பெற்றவள், நொந்தாள் - மனம்வருந்தினாள், கண்ணீர் - கண்ணீரானது, ஆறுதரம் மேல் பாய - நதியின்தரத்திலும் அதிகமாய்ப்பாயவும், அனங்கன் - மன்மதனது, பூவாளி - புஷ்பபாணங்கள், முலையானைமீதே - தனமாகிய யானையின்மீது, ஏறுதர-தைக்கவும், மா - வண்டுகள், செவியைத் தொளைக்குது என்று - காதுகளைத்தொளையாநின்றன என்று, ஓலம் இட்டாள் - முறையிட்டாள், எனச்சொல் - என்று சொல்வாய், எ - று.

அனங்கன் - சரீரமில்லாதவன், (மன்மதன்).

தாயிரங்கல்.

49. இக்கோடிவளைப்பவனெனவிருகோடியிளம்பிறைக்கீற்றெழுந்துவானில், முக்கோடிவளைப்பமதனுற் கோடிகணைதொடுத்தான் முன்னிற்பாளோ, கொக்கோடியிரையெடுக்குமிளசைநகர்செழிக்கவருங்குமுணவெட்டுத், திக்கோடிப்புகழ்படர்ந்தவடமலையாகடமலைமுன்சென்றமாலே.

**இ - ள்.** கொக்கு ஓடி இரை எடுக்கும்-கொக்குகள் விரைந்துசென்று இரையெடுக்கின்ற, இளசைநகர் செழிக்கவரும் - இளசை நகரமானது செழிக்கும்

படிதோன்றிய, குமுண - குமுணனே, புகழ் எட்டுதிக்கு ஓடிபடர்ந்த - கீர்த்தியானது எட்டுத்திக்கிலும் ஓடிப்பரவின, வடமலையா - வடமலையானே, கடமலை முன்சென்ற - மதமலைக்கு (யானைக்கு) முன்னேபிரத்தியக்ஷமான, மாலே - திருமாலே, மதன் இக்கு ஓடிவளைப்பன் என - மன்மதன் கரும்புவில்லை விரைந்து வளைப்பானென்று, வானில் - ஆகாயத்தில், இளம்பிறைக் கீற்று - இளம்பிறைக்கொழுந்து, எழுந்து - தோன்றி, இருகோடி - இருமுனைகளையும், முக்கோடி வளைப்ப - மிகவுங் கோணிவளைக்க, மதன் நாற்கோடிகளை தொடுத்தால் - மன்மதன் நாலுகோடி பாணங்களைப் பிரயோகித்தால், முன் - அவற்றின் முன், ஙிற்பாளோ - (இவள்) நிற்பாளோ, எ - று.

குமுணன் - வள்ளல்களில் ஒருவன்.

தாயிரங்கல்.

50. கெஞ்சுமாதங்கமுகம்பார்த்திரங்குந்திருமால்வெற்கிரியினிி
ரஞ்சமாதஞ்சுமந்தென்பெற்றபலனென்கிடைத்ததெனக்காறுமாதங்
கஞ்சுமாதந்தகளைப்பெற்றிழந்தோர்போற்றிரிந்துகலங்குதேழை
நெஞ்சமாதம்பலுக்குநேர்ந்தொருவன்பின்றொடர்ந்துநேர்கின்றாளே

இ - ள். கெஞ்சு - (இரவலர்) கெஞ்சுகின்ற, ஆதங்கம் முகம்பார்த்து - வருத்தத்தோடு கூடிய முகத்தைப்பார்த்து, இரங்கும் - இரங்குகின்ற, திருமலை வெள்கிரியில் - திருமலைவேலப்பனது மலையில், நான் மாதஞ்சுமாதம் சுமந்து - நான் பத்துமாதம் சுமந்து, பெற்ற - ஈன்ற, பலன் - பயன், எனக்கு கிடைத்தது - எனக்கு வாய்த்தது, ஆறுமா - (இந்தத்துன்பம்) எனக்கு ஆறுமா, தங்கம் சும்மா கந்தகளை - சும்மாதரப்பட்ட பொன்னை, பெற்று இழந்தோர்போல் - பெற்றிழந்தவர்போல, ஏழை நெஞ்சு - ஏழையேனது மனம், திரிந்து கலங்குது - சுழன்று கலங்காநின்றது, மாது - (இந்தப்) பெண், அம்பலுக்கு நேர்ந்து - பழிமொழிக்கு இலக்காகி, ஒருவன் பின் தொடர்ந்து நேர்கின்றாள் - ஒருவன்பின்னே தொடர்ந்து செலுகின்றாள், எ - று.

அம்பல் - பழிச்சொல், (சிந்தனை.)

தோழிமன்மதனை நோக்கிக்கூறல்.

51. திடக்குவடக்கடக்களிற்றன்கம்பளவல்லக்கர்குலன்றெற்குப்
பூர்வ, குடக்குவடக்கடற்கரசன் பலியாண்டிராஜன்முல்லைகொடுவந்து
ன்னை, மடக்குவடக்கன செய்மண்மதப்பயலேயுனக்கினியொவ்வாது
போரி, அடக்குவடக்கயமீனின்சடக்குநடக்காதினிமேலறிந்துபாரே.

இ - ள். உவன் - இவள், திடம் - உறுதியாகிய, குவடு - மலைபோன்ற, அ - அந்த, கடம் களிற்றன் - மதயானையையுடையவன், கம்பள வல்லக்கர்குலன் - கம்பளவல்லக்கர் குலத்தில் அவதரித்தவன், தெற்கு பூர்வம் குடக்கு வடக்கு

கடற்கு அரசன் - தெற்கு கிழக்கு மேற்கு வடக்கு என்னும் நாற்றிசைக் கடற்கும் அரசன், மலையாண்டிராஜன்-மலையாண்டிராஜன், (அவனது) முல்லைகொடுவந்து - முல்லைமாலையைப் பெற்றுவந்து, உன்னை மடக்குவள் - உன்னை மடங்கப்பண்ணுவள், தக்கனசெய்வள்-தகுந்தவற்றைச் செய்வள், மதப்பயலே-மன்மதப்பயலே, உனக்கு இனிபேரி ஒவ்வாது - உனக்கு இனிபேரிகை தகாது, அடக்கு - அடக்கிக்கொள், டக்கயம் - உன் கொடியிலுள்ள, மீனின் - மீனினது; சடக்கும் - செருக்கும், இனிமேல் நடக்காது - இனிமேல் செல்லாது, அறிந்துபார் - உணர்ந்து நோக்கு, எ-று.

தலைவி கூற்று.

52. இலக்காரமணியாள் கண்ணிமைபொருந்தாண்மன்மதனெய்தபுண்ணில், கலக்காரம்பெய்த தெனக்கதிர்மதியுஞ்சுழன்றெறிப்பக்கனன்றுளென்றே, சொலக்காரம்மியமாகவிலக்கணநாற்கவிப்புலமைத்தொன்னூலோர்க்குப், பலக்காரமருள்விசயகிரிவேலாஞ்சின்னேபதிச்செவ்வேட்கே.

இ - ள். இலக்கணம் - இலக்கணமமைந்த, நாற்கவிப்புலமை - நாற்கவிப்புலமையையுடைய, தொல் நூலோர்க்கு - பழைய நூலாராய்ச்சியுள்ள வித்துவான்களுக்கு, பலக்காரம் அருள் - பலபொருள்களையும் கொடுக்கின்ற, விசயகிரிவேல் ஆம் - விஜயகிரி வேலப்பனுகிய, சின்னேபதி-சின்னேபதியென்கிற, செவ்வேட்கு - குமரன்பொருட்டு, இலக்கு - விளங்குகின்ற, ஆரம் அணியாள் - முத்துவட மணியாள், கண் இமைபொருந்தாள் - கண்ணிமை மூடாள், மன்மதனுர் எய்த புண்ணில்-மன்மதன் அம்பு எய்தலாலுண்டாகிய புண்ணில், கலக்காரம் பெய்தது என - கலக்காரத்தை வைத்தாற்போல, கதிர் மதியும் சுழன்று எறிப்ப - கிரணங்களை யுடைய சந்திரனும் சுழன்று எறிக்க, கனன்றுள் என்று - வெதும்பினுளென்று, அக்கா - தமக்காய், ரம்மியமாகச்சொல் - (அவனுக்கு) மனரம்மிய முண்டாகும்படி சொல்வாய், எ-று.

நாற்கவி - ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் என்பன.

தலைமகள் கூற்று.

53. இப்பளப்பாறையிற்படுக்கச்சொல்லுகிறீர்செடிமறைவோவில்லைச்சூழ, உப்பளப்பாறையுமாச்சுக்கணவனேவெகுகோபியும்மைக்கண்டால், கொப்பளப்பார்க்கினும்பார்ப்பன் பேனைப்பார்க்கினும்பார்ப்பன்குணமில்லாத, தப்பளப்பாவிருக்குதையாகிளுவைமருதப்பமன்னுதமிழ்க்கோமானே.

இ - ள். ஐயா - ஐயனே, கிளுவை மருதப்ப மன்னு - கிளுவை மருதப்ப மன்னனே, தமிழ்க்கோமானே - தமிழரசனே, இ - இந்த, பள்ளப்பாறையில் - பள்ளமாகிய பாறையின்மீது, படுக்கச்சொல்லுகிறீர் - படுக்கச்சொல்லுகின்றீர்,

செடிமறைவோ இல்லை - செடிமறைவும் இல்லை, சூழ - சுற்றிலும், உப்பளப் பாறையும் ஆச்சு - உப்பளத் திண்ணைகளுமாயின, கணவனோ வெகு கோபி - என்கணவனோ மிகுந்த கோவக்காரன், உம்மைக் கண்டால் - உம்மைப் பார்த் தால், கொப்பு அள்ளபார்க்கினும் பார்ப்பன் - கொண்டையறுத்தாலும் அறுப் பன், பேனைப் பார்க்கினும் பார்ப்பன்-பேன் பார்த்தாலும்பார்ப்பன், (ஆதலால் இது) குணம் இல்லாத - நன்மையில்லாத, தப்பு அளப்பா இருக்குது-தப்பளப் பாயிருக்கின்றது, எ-று.

தப்பளப்பு-பிழையாகிய காரியத்தைச்செய்தல், உப்பளம்-உப்புவிளைநிலம்.

## தாயிரங்கல்.

54. ஆரசந்திரணத்து மட்டுண்டிலாளருவருத்து விருவிருப்பாகி யே,ஊரசந்திரவிற்பாதிசென்றுமுறங்கிலாண் மகட்கென்செய்குவே னையா, தீரசந்திரகாவிபிடக்கயா சிங்கவுத்தண்டதூர்த்தண்டனேரண, வீரசந்திரகிரிநகராதிபாவெங்கடேசரவெட்டமராஜனே.

இ - ள். ஐயா-ஐயனே, தீரசந்திர - தைரிய சந்திரனே, காவி இடக்கயா- காவிக்கொடியை யுடையவனே, சிங்க ஊர்த்தண்ட தூர்த்தண்டனே—, ரணவீ ர-ரணவீரனே, சந்திரகிரிநகர்க்கு ஆதிபா-சந்திரகிரிநகர்க்கதிபனே, வெங்க டேசுர எட்டமராஜனே - வெங்கடேசுர எட்டமராஜனே, ஆ - அந்தோ, ரசம்- நீர், திரணத்துமட்டு உண்டிலாள் - திரணந்தளவாயினும் உண்ணாள், அரு வருத்து விருவிருப்பு ஆகி - வெறுத்து விருவிருப்பையடைந்து, ஊர் அசந்து- ஊரார் அயர்ந்து, இரவில் பாதி சென்றும் - இரவில் பாதிகழிந்தும், உறங்கி லாள் - கண்ணுறங்காள், மகட்கு - (இந்த என்) பெண்ணுக்கு, என்செய்கு வேன் - என்ன பரிகாரஞ்செய்வேன், எ-று.

## செவிலி வெறிவிலக்கல்.

55. தடக்கயத்தலரெல்லாமெடுத்துவேள்சமரச்சோலையில்வந்தா னெனவஞ்சத, அடக்கயத்தையுந்தாயர்கொன்றுல்வெறியாட்டுத்தானிவ ளாசையைத்தீர்க்குமா, கடக்கயத்தடையார்புவிகைக்கொண்டுகட்டுஞ் சந்திரகாவியிடாலெனும், இடக்கயத்தந்திலைநாட்டுமாமண்ட லேசுரா வெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். கடக்கயத்து - மதயானைகளையுடைய, அடையார் புவி - பகை வர் பூமியை, கைக்கொண்டு - கைப்பற்றி, கட்டும் - கட்டின, சந்திரகாவி இடால் என்னும் இடக்கயத்து - சந்திரகாவிடால் என்னுங்கொடியை, அம் நிலை நாட்டும் - அழகாக நிலைபெறச்செய்த, மாமண்டலேசுரா - பெரிய மண்ட லாதிபனே, வெங்கடேசுரெட்டேந்திரனே - வெங்கடேசுர எட்டேந்திரனே, வேள் - மன்மதன், தடம் - பெரிய, கயத்து அலர் எல்லாம் எடுத்து - தடாகத்

இன் மலர்களையெல்லாம் எடுத்து, சமரச்சோலையில்வந்தான் என - யுத்தஞ் செய்யும் சோலையில் வந்தானென்று, அதை அடக்க-அதை யடக்கும்பொருட்டு தாயார் - தாய்மார், அயத்தையும்கொன்றால் - ஆட்டையும் கொன்றால், வெறியாட்டெடுத்தான் - (அந்த ஆட்டைக்கொன்று செய்கிற) வெறியாடல்தான், இவள் ஆசையை தீர்க்குமா - இவள் காமத்தைத் தணிக்குமா, எ - று.

நீ இவளைத் தழுவினால் இவளது ஆசைதீரும் என்பது கருத்து.

### செவிலியிரங்கல்.

56. கலக்கைவாளியைய யார்தடுப்பார் தென்றற்காற்றுக் காற்றுவ
ளோமடவார்வசை, சொலக்கைவாய்பொத்தி மெய்சோர்ந் திருக்கவுந்
தோகைமோகந்தொலையாதுபாரைய, உலக்கைவாரியடிக்குங்கடா சல
த்துதயனேகணையொன்றின்மராமரத், திலக்கைவாலியைப்பார்த்தெய்
தமாமண்டலேசுராவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். ஐயா - ஐயனே, உலக்கைவாரி அடிக்கும் - உலக்கையை யெடுத்தடிக்கின்ற, கட அசலத்து - உதயமலையையுடைய, உதயனே - சூரியனே, கணை ஒன்றின் - ஒருபாணத்தால், மராமரத்து இலக்கை - மராமரத்துக் குறியையும், வாலியை - வாலியையும், பார்த்து எய்த - பார்த்துப் பிரயோகித்த, மாமண்டலேசுவரா - பெரியமண்டலாதிபனே, வெங்கடேசு ரெட்டேந்திரனே-வெங்கடேசுர எட்டேந்திரனே, கலக் - கலத்தலாகிய, கைவாளியை - (மன்மதன்) கையம்புகளை, யார் தடுப்பார்-யார் தடுப்பவர், தென்றற் காற்றுக்கு ஆற்றுவளோ- (அதுவுமன்றி) தென்றற்காற்றையும் சகிப்பாளோ, மடவார் - மாதர், வசை சொல்ல - பழிசொல்ல, கைவாய்பொத்தி - கையையும் வாயையும் மூடி, மெய் சோர்ந்து இருக்கவும் - உடம்புவாடியிருக்கவும், தோகை-(இந்தப்) பெண்ணின், மோகம் தொலையாது - மோகம் நீங்காது, பார் - நோக்கு, எ - று.

### நற்றாயிரங்கல்.

57. குரங்கிக்காய்ந்திளந்தென்றலுமன்றிலுங்கோபங்கொண்டத
னான்மாதரேதுசெய், வரங்கிக்காபொரவாவென்றழைப்பர்கள்மறுத்து
ப்பேசவும்வாயிலைமாங்குயில், அரங்கிக்காவென்றிருந்திசைபாடவுமாற்
றுமோமயலாற்றதபேதைக்கே, இரங்கிக்காவிக்ரமார்க்காசெகமண்ட
லேசுராவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். விக்ரமார்க்கா - விக்ரமாதித்தனே, ஜெகமண்டலேசுரா - பூமண்டலேசுவரனே, வெங்கடேசு ரெட்டேந்த்ரனே - வெங்கடேசுர எட்டேந்த்ரனே, குரங்கி - சந்திரனால், காய்ந்து - சுடப்பட்டு, இளந் தென்றலும் - இளமையாகிய தென்றற்காற்றும், அன்றிலும் - அன்றிற்பறவையும், கோபம் கொண்டதனால் - கோவங்கொண்டிருத்தலால், மாதர் ஏதுசெய்வர் - மாதர்

என்னசெய்வார்கள், அங்கு - அவ்விடத்து, இக்கா - கரும்புவில்லையுடைய மன்மதனே, பொரவா என்று அழைப்பார்கள் - போர்செய்யவா வென்றழைப்பார்கள், மறுத்துப்பேசவும் வாய் இல்லை - தடுத்துப்பேசவும் வாயில்லை, மாங்குயில் - மாமரத்திலுள்ள குயில்கள், இக்கா - இந்தச்சோலையே, அரங்கு என்று இருந்து - தமதிருப்பிடமென்றிருந்து, இசை பாடவும் - இராகத்தைப் பாடவும், மயல் ஆற்றுமோ - காமமயக்கத்தைச் சகிப்பளோ, ஆற்றாத பேதைக்கு இரங்கி - சகிக்காத என்பேதைப்பெண்ணுக்கிரங்கி, கா - காப்பாய், எ - று.

குரங்கம் - மான், அதனைத் தன்னிடத்துள்ளவனாதலால் சந்திரன் குரங்கியெனப்பட்டான்.

நாயிரங்கல்.

58. தானவாரணமாமுலையாளுக்குத்தானவா வெண்டளப்பத்திலேமையல், ஆனவாறுமறியாளிவள்கண்ணீரானவாறுமறியார்மின்னாரந்தோ, வானவாகண்டலாமண்டலாதிபாவானவாவளவாமதுராபுரி, மீனவாவிசயாமீனகேதனாவெங்கடேசுரவெட்டமராஜனே.

இ - ள். வானம் - சுவர்க்கலோகத்தையுடைய, ஆகண்டலா - இந்திரனே, மண்டலாதிபா - பூபதியே, வானவா - சேரனே, வளவா - சோழனே, மதுராபுரிமீனவா - மதுராபுரி பாண்டியனே, விசயா - அருச்சுநனே, மீனகேதனா - மீனக்கொடியையுடைய மன்மதனே, வெங்கடேசுர எட்டமராஜனே - வெங்கடேசுர எட்டமராஜனே, தானவாரணம் - மதயானைபோன்ற, மா - பெரிய, முலையாளுக்கு - தனங்களையுடையாளுக்கு, அவா - ஆசை, வெண்தளப்பத்திலே - வெள்ளிய முல்லைமாலையிலேதான், மையல் ஆன ஆறும் அறியாள் - காமமயக்கமுண்டான விதத்தையும் அறியாள், இவள் கண்ணீர் ஆன ஆறும் - இவள் கண்ணீர் ஆனதையும், மின்னார் அறியார் - மாதர் அறியார், அந்தோ - ஐயோ, எ - று.

தலைமகனுக்குத் செவிலிகூறல்.

59. துரையத்தந்திதலை முடிமேல்வைத்துத் தோயுநாளொந்தநாளோவிரகத்தை, விரையத்தந்திவளவுஞ்செய்தாலிந்த மெல்லியற்கென்னசொல்லியான்தேற்றுவேன், தரையத்தந்திவரையேந்துமேகம்போற்றணிந்தகொம்புபடத்தன்னிழலைப்பாய்ந், திரையத்தந்திநடாத்தியமாமண்டலேசுராவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். தரையத்து - பூமியில், அந்திவரை ஏந்தும் மேகம்போல் - அஸ்தமனகிரியினால் தாங்கப்பட்ட மேகத்தைப்போல, தணிந்த கொம்புபட - தாழ்ந்த கொம்புபடும்படி, தன்னிழலைபாய்ந்து - தனது நிழலைப்பாய்ந்து, இரைய - ஆரவாரிக்க, தந்தி நடாத்திய - யானையை நடத்திய, மாமண்டலேசுரா - பெ

ரியமண்டலேசுவரனே, வெங்கடேசுரெட்டேந்த்ரனே - வெங்கடேசுர எட்டேந்த்ரனே, துணை அத்தம் - துணையாகிய உனது கையை, திதலை முலைமேல் வைத்து - தேமல்படர்ந்த தனங்களின்மீதுவைத்து, தோயுநாள் - தழுவும் நாள், எந்தநாளோ - எந்நாளோ, விரகத்தை - மோகத்தை, விரையத்தந்து - விரைவாகக்கொடுத்து, இவ்வளவும் செய்தால் - இத்தனையும்செய்தால், அந்த மெல்லியற்கு - அந்தப் பெண்ணுக்கு, என்னசொல்லியான் தேற்றுவேன் - என்னசொல்லி நான்தெளிவிப்பேன், எ - று.

தனையத்துஎன்பதில் அத்துச்சாரியை.

செவிலிகூறல்.

60. அந்திராமனமுன்மேலென்றாற்பகலடங்குமோமையலானாலு மையநீ, வந்திராமனம்பேதைக்குவேளம்பு வச்சிராயுதம் போல்வந்து தைக்குமே, முந்திராமனம்பாலுண்டவாரிதிமுழக்கமேசகியாளேயிளை சைவாழ், இந்திராமனுவேந்தா செகமண்டலேசுரா வெங்கடேசு ரெட்டேந்த்ரனே.

இ - ள். இளைசைவாழ் - இளைசைநகரில் வாழ்கின்ற, இந்திரா - இந்திரனே, மனுவேந்தா - மநுவேந்தனே, செகமண்டலேசுரா - பூமண்டலேசுவரனே, வெங்கடேசுரெட்டேந்த்ரனே - வெங்கடேசுர எட்டேந்திரனே, அந்தி - அந்திக்காலந்தொடங்கி, ரா - இராமுழுதும், நம்பேதைக்கு - நமதுபெண்ணுக்கு, உன்மேல் மனம் என்றால் - உன்மீது மனமென்றால், மையல் - மையலானது, பகல் அடங்குமோ - பகற்காலத்திலும் அடங்குமோ, ஆனாலும் - ஆயினும், ஐய - ஐயா, நீவந்து இராமல்-நீவந்து சேர்ந்திராமல், வேள் அம்பு-மன்மதபாணம், வச்சிராயுதம்போல் - வயிரப்படைபோல, வந்துதைக்கும் - வந்துதைக்கின்றது, முந்து - முற்காலத்தில், இராமன் அம்பால் உண்ட - இராமபாணத்தால் குடிக்கப்பட்ட, வாரிதி - கடலின், முழக்கமே சகியாளே - ஓசையையே சகிக்கமாட்டாளே, எ - று.

தாயிரங்கல்.

61. கொடிக்கத்தந்தும்மலையுமடக்கி நெற்குறியும்பார்த்துக்குணம்பார்த்துப்பார்த்திந்தப், படிக்கத்தத்துவளேசோரச்சோருமென்பாலனத்துக்குன்பாலனம்வேண்டுங்காண், அடிக்கத்தத்துகளையும்பரப்பி மூதண்டகூடமுகடும்படீரென, வெடிக்கத்தத்தும்பரியா திருமலைவேலுராஜவிவேகருலேசனே.

இ - ள். அடிக்கு - பாதங்களால், அத்தம்துகளையும் பரப்பி - வழிமுழுதும் தூளியையும் பரவச்செய்து, மூதுஅண்ட கூடமுகடும் - பழமையாகிய அண்டகடாகத்தின் உச்சியும், படீரென வெடிக்க - படீரென்று வெடிக்கும்படி, தத்தும் - தாவிச்செல்லுகின்ற, பரியா - குதிரையையுடையவனே - திரு

மலைவேலுராஜ - திருமலைவேலப்ப பூபதியே, விவேககுலேசனே - விவேககுலாதிபனே, கொடிகத்த - காக்கைகத்த, தும்மலையும் அடக்கி - தும்மலையும் அடக்கி, நெல்குறியும் பார்த்து - நெற்குறியையும் பார்த்து, குணம்பார்த்து பார்த்து - குணத்தையும் பார்த்துப் பார்த்து, இந்தப்படிக்கு - இந்தவண்ணம், அத்தத் துவளைசோர - கையிலுள்ள வளைகழலும்படி, சோரும் - மெலிகின்ற, என்பால் அன்னத்துக்கு - என்னிடத்துள்ள பெண்ணுக்கு, உன்பாலனம் வேண்டும்-உன்காத்தற் றொழில்வேண்டும், எ - று

என்பால் அன்னத்துக்கு - என்னிடத்துள்ள அன்னப்பறவைக்கு, உன்பால் அன்னம்வேண்டும் - உன்னிடத்துள்ள பாற்சோறு வேண்டும் - என்பது சொன்னயம். பால்அன்னம் வெள்ளிய அன்னமுமாம், தத்துதல் - தாவுதல்.

தாயிரங்கல்.

62. பூசத்தந்திமுலையும்புண்ணாக்கினீர்போதும்போதும்புழுகும் சவ்வாதுமா,காசத்தந்திமதியுஞ் சுடுமென்றகாமப்பேய்கொண்டகள்ளிக்கென்சொல்லுவேன், மாசத்தந்திசையெல்லாமதிரவே மந்தரத்தைமருப்பிட்டிடித்தள்ளி, வீசத்தந்தி நடாத்துந்திருமலை வேலுராஜவிவேககுலேசனே.

இ - ள். மாசத்தம் - பேரொலியால், திசையெல்லாம் அதிர - திக்குகளெல்லாம் அதிரும்படி, மந்தரத்தை - மந்தரமலையை, மருப்பு இட்டு இடித்து - கொம்பைக்கொண்டு இடித்து, அள்ளிவீசு - வாறியெறிகிற, அ - அந்த, தந்தி - யானையை, நடாத்தும் - செலுத்துகின்ற, திருமலைவேலுராஜ - திருமலைவேலப்ப பூபதியே, விவேககுலேசனே - விவேககுலாதிபனே, பூசத்தந்து - பூசங்கொடுக்க, இ முலையும் புண்ஆக்கினீர் - இந்தத் தனங்களையும் புண்ணாக்கி விட்டீர், புழுகும் சவ்வாதும்போதும் போதும் - புழுகும் சவ்வாதும் போதும் போதும், ஆகாசத்து - ஆகாயத்தில் தோன்றின, அந்திமதியும் - அந்திக்காலத்துப் பிறைச்சந்திரனும், சுடும்என்ற-சுடுகின்ற தென்கிற, காமப்பேய் கொண்ட கள்ளிக்கு - காமப்பேய்பிடித்த திருடிக்கு, என்சொல்லுவேன் - யாதுசொல்வேன், எ - று.

தந்தி - கொம்புள்ளது (யானை), தந்தம் - கொம்பு

தாயிரங்கல்.

63. ஓராராவுண்டமிழுமதிப்பிள்ளை யூராராவுறங்காத பெண்பிள்ளைமால்,கூராராவுகணைகடொட்டான்மதன்கும்பராசிகொழிப்பதுமுத்தமாம், சூரராவிதுடிப்பத்துடிப்பத்திண்டுணைக்கராசலந்துண்டிக்கக்கண்டிக்கும், வீரராகவராமாதிருமலைவேலுராஜவிவேககுலேசனே.

இ - ள். சூரர் ஆவி துடிப்ப துடிப்ப - சூரரதுஉயிர் பதைக்கப் பதைக்கவும், திண் - திடமான, துணைக்கரம் - இருதோள்களாகிய, அசலம் - மலைகள்,

துண்டிக்க - அறுபடவும், கண்டிக்கும் - அறுக்கின்ற, வீரராகவராமா - வீரராகவ ராமனே, திருமலைவேலுராஜ விவேகருலேசனே - திருமலைவேலுராஜ விவேகருலாதிபனே, ஓர் அரா - ஒப்பற்ற பாம்பினால், உண்டு உமிழும் - விழுங்கியுமிழப்பட்ட, மதிப்பிள்ளை ஊர - இளம்பிறை தவழ, ராவுறங்காத - இராமுழுதும் தூங்காத, பெண்பிள்ளைமேல் - என் பெண்ணின்மீது, கூர் அராவுகணைகள் - கூர்மையாக அராவிய பாணங்களை, மதன் தொட்டான் - மன்மதன் பிரயோகித்தான், கும்பராசி - இருகுடங்களின் மீதும், கொழிப்பது - கொழிக்கப்படுவது, முத்தம்ஆம் - முத்துக்களேயாகும்.

கும்பம் ராசி - குடங்களின் கூட்டம் ( இருதனங்கள்), முத்தம் - முத்தமாலை, அன்றி முத்துப்போலும் கண்ணீர்த்துளி. அசலம் - அசையாதிருப்பது (மலை.) ஓர்அரா என்றது இராகுவை

## தாயிரங்கல்.

64. சங்கராவையகமும்பழிக்குமாந்தாயர்தூற்றிலெனும் பேதை நெய்முடை, அங்கராவையழைக்குங்கழைக்குரலனங்கவேளையழைக்குமென்றேங்குமால், கங்கராவையடர்வதுபோலொருகைக்கடாசலங்கால்சாயத்தாக்கிய,வெங்கராவையிடறுந் திருமலைவேலுராஜவிவேகருலேசனே.

இ - ள். கங்கு - செம்பருந்தானது (கருடன்), அராவை அடர்வதுபோல் - பாம்பைக் கொல்வதுபோல, ஒருகை கடாசலம் - ஒருதுதிக்கையை யுடைய யானையானது, கால்சாய - அடிசாய, தாக்கிய - வந்து மோதின, வெங்கராவை - கொடிய முதலையை, இடறும் - (சக்கராயுதத்தால்) இடறின, திருமலைவேலுராஜ விவேகருலேசனே - திருமலைவேலுராஜ விவேகருலாதிபனே, சங்கரா - சிவனே, தாயர்தூற்றில் - தாய்மார் தூற்றினால், வையகமும்பழிக்கும் - உலகமும்பழிக்கும், என்னும் - என்கிற, பேதை - என்பேதைப் பெண்ணானவள், நெய்முடை அங்கர் - நெய்யினது முடைநாற்றம்பொருந்திய உடம்பையுடைய இடையர், ஆவை அழைக்கும் - பசுக்களை யழைக்கிற, கழைக்குரல் - மூங்கிலினோசை, அனங்கவேளை அழைக்கும என்று - மன்மதனை யழைக்குமென்று, ஏங்கும் - இரங்குவாள், எ - று.

முடை - தூர்க்கந்தம்.

## தாயிரங்கல்.

65. சந்தனத்தைவிடுக்குமுன்னேவில்வசந்தனத்தையலைப்பகைத்தெய்வன, சந்தனத்தைத்துளைக்குதுபாலுங்கசந்தனத்தையுமப்படிச்செய்ததே, சந்தனத்தையணிதிண்புயாசலத்தாருவேதண்டமிழ்க்கவினோர்தமவ, சந்தனத்தைத்துசங்கட்டியீந்தருடந்த்ரனேமுத்துமந்த்ரிநரேந்த்ரனே.

இ - ள். சந்தனத்தை அணி - சந்தநத்தைப் பூசின, திண் - வலிய, புய அசலம் - மலைபோலுந் தோள்களையுடைய, தாருவே - கற்பகத்தருவே, தண் தமிழ் கவிஞோர்தம்வசம் - குளிர்ந்த தமிழ்ப்புலவர் வசமாக, தனத்தை - திரவியத்தை, துசம் கட்டிஈந்தருள் - கொடி கட்டித் தந்தருள்கின்ற, தந்திரனே - தந்திரனே, முத்து மந்த்ரி நரேந்த்ரனே - முத்து மந்த்ரியென்னும்நரேந்திரனே, அன்னத்தை சந்து விடுக்குமுன்னே - அன்னத்தைத் தூதுவிடு முன்னமே, வில்வசந்தன் - கரும்பு வில்லையுடைய மன்மதன், அதையலை பகைத்துஎய் - அந்தப்பெண்ணைப் பகைத்து எய் கின்ற, வனசம் - தாமரைக்கணை, தனத்தைதுளைக்குது - தனத்தைத் தொளைக்கின்றது, பாலும்கசந்து - பாலும் கசப்பாக, அன்னத்தையும் - சோற்றையும், அப்படி செய்தது - அவ்வாறு கசக்கப் பண்ணினது. எ - று.

வசந்தன் - வசந்தகாலத்திற்குரியவன், (மன்மதன்,)

## தாயிரங்கல்.

66, பூரிக்குஞ்சரமாவாரமார்கொங்கைபூவைதாங்கப் பொறாதத்தொனிக்கடல், பேரிக்குஞ்சரபம்போலுந்தென்றற்கும்பெருமயக்குற்றுருகக்கண்டாங்குவேள், நேரிக்குஞ்சரமுங்கொண்டு வந்துபோர்நிறைத்திட்டானினிநீவந்துசேர்மத, பாரிக்குஞ்சரமீதாகுமிந்திராவன்யராயவசுவப்பதூயனே.

இ - ள். மதமாரி - மதமழையையுடைய, குஞ்சரம்மீதுஆகும் - யானைமேலேறிவருகிற, இந்திரா - இந்திரனே, வன்யராய - வன்னியராஜனே, வசுவப்பதூயனே - வசுவப்பனென்னும் பரிசுத்தனே, பூரிக்கும் - பருக்கின்ற, சரம் ஆ ஆரம்ஆர்கொங்கை - சரங்களாக முத்துவடம் பொருந்திய தனங்களையுடைய, பூவை (இந்தப்)பெண்ணானவள், தாங்கப்பொறாது - தாங்கப் பொறுக்காமல், அ - அந்த, தொனிக்கடல் பேரிக்கும் - ஓசையையுடைய கடலாகிய பேரிகைக்கும், சரபம்போலும் தென்றற்கும் - சரபத்தை நிகர்த்த தென்றலுக்கும் - பெருமயக்குஉற்று - பெரியமயக்கத்தை யடைந்து, உருகக்கண்டு - உருகப்பார்த்து, ஆங்கு - அவ்விடத்தில், வேள் - மன்மதன், நேர் இக்கும் - நேர்மையாகிய கரும்பு வில்லையும், சரமும் - (புஷ்ப) பாணங்களையும், கொண்டுவந்து - எடுத்துவந்து, போர்நிறைத்திட்டான் - போரில் நிறைத்து விட்டான், இனி நீவந்துசேர் - இனிநீ வந்துகூடுவாயாக, எ - று.

சரபம், எட்டுக்காலுள்ள ஓர்பறவை.

## தாயிரங்கல்.

67. நகத்துவாரயிலாங்கண்ணிகொங்கைக ணையவாரறத்தைத்தவழித்தென்றல், புகத்துவாரஞ்செய்தாலந்தவேளம்பைப்பொறுக்க வாரம்புயக்கண்ணி தந்துசேர், சகத்துவாரஞ்செயுந்தென்னிளசைராசத்து

வாரத்துக்கோர்மந்த்ரியாய்வந்த, மகத்துவாரஞ்சிதவசனநரவாகனநம் வசுவப்பதிரனே.

இ - ள். சகத்து - உலகத்தின்மீது, வாரம்செய்யும் - அன்புசெய்கிற, தென் இளசை-தென் இளசைநகரத்திலுள்ள, ராசத்துவாரத்துக்கு - அரண்மனைவாயிலுக்கு, ஓர்மந்த்ரியாய் வந்த - ஒருமந்திரியாக வந்த, மகத்துவா - பெருமையுடையோனே, ரஞ்சிதவசன, இனிய வசனங்களை யுடையவனே, நரவாகன - நரவாகனத்தை யுடையவனே, நம் வசுவப்பதிரனே - நமது வசுவப்பதிரனே, அயில் ஆம் கண்ணி-வேல்போலுங்கண்களை யுடையாளது, நகத்து ஆர் - மலையினுருவத்தைப்பொருந்திய, கொங்கைகள் - தனங்கள், நைய - வருந்தவும், வார் அற - கச்சு அறுபடவும், தைத்த வழி-தைத்த வழியில், தென்றல்புக-தென்றல் நுழையவும், துவாரம் செய்தால் - தொளைபண்ணினல், அந்தவேள் அம்பை - அந்த மன்மதனுடைய பாணத்தை, பொறுக்க ஆர் - தாங்க யாவர் வல்லவர், அம்புயம் - அழகிய (உன்) தோளிலணிந்த,கண்ணிதந்து சேர் - பூமாலையைக் கொடுத்து (இவளைக்) கூடுவாயாக. எ - று.

நரவாகனம் - பல்லக்கு, நகம் - மலை.

தாயிரங்கல்.

68. கருத்தவாவில்லையாள் கரனய்வருங் காமனலுடல்வாடாதின்றின்பத்தை,அருத்தவாவில்லையாயினிப்பேதையோவாவிதாங்கரிதா குமையாகண்பார், திருத்தவாவில்லையாத்தன்னைநல்கியசெந்தமிழ்க்குத்தியாகாகிணப்புலால், மருத்தவாவில்லையாரயில்வேற்கராவன்யராயவசுவப்பதிரனே.

இ - ள். திரு - அழகாகிய, தவாவிலை - பெருவிலையுள்ள, ஆதன்னை - பசுக்களை, செந்தமிழ்க்கு - செந்தமிழ்ப் பாடலுக்கு, நல்கிய - பரிசிலாகக்கொடுத்த, தியாகா - கொடையாளனே, கிணப்புலால் மருதவா - கொழுப்போடுகூடிய மாமிச மணம் நீங்காத, இலைஆர் - இலையுருவமைந்த, அயில் வேல் - கூர்மையுள்ள வேற்படையை யேந்திய, கரா - கையையுடையானே, வன்யராய - வன்னியராஜனே, வசுவப்பதிரனே - வசுவப்பதிரனே, கருத்த - கர்த்தனே, வா -வருவாயாக, வில்லைஆள்கரன் ஆய்வரும் - (கரும்பு) வில்லையாள்கின்ற கையையுடையவனய்வருகின்ற, காமனல், மன்மதனல்,உடல்வாடாது - உடம்புமெலியாமல், இன்று-இப்பொழுது, இன்பத்தை அருத்து - சுகத்தையூட்டு, அவா இல்லையாயின். (உனக்கு இவளிடத்தில்) ஆசையில்லையானல், இப்பேதையோ - இந்தப்பேதைப் பெண்ணே, ஆவிதாங்கு அரிது ஆகும் - உயிர்தாங்கி யிருத்தல் அருமையாகும்,ஐயா - ஐயனே, கண்பார் - கிருபைக்கண்ணல் நோக்கு, எ - று.

காமன் - காமத்தையுண்டாக்குவோன்.

### தலைவி யிரங்கல்.

69. நேற்றிருந்தநிலவுமந்நேரமென்னினைவிருந்த நினைப்புமிளந் தென்றற், காற்றிருந்தசுகமுமுன்றுணையென் கருத்திருந்ததும்யாதெ ன்றுசொல்லுவேன், சேற்றிருந்தசெந்தாமரைப்பூவின்மேற்றிருவிருந் ததுபோலச்சிங்காசனம், வீற்றிருந்ததுரையே திருமலைவேலுராஜவி வேககுலேசனே.

இ - ள். சேற்று இருந்த - சேற்றின்கண்ணிருந்த, செந்தாமரைப்பூவின் மேல் - செந்தாமரை மலரின்மீது, திரு இருந்ததுபோல - அழகுவீற்றிருந் தாற்போல, சிங்காசனம் வீற்றிருந்த - சிங்காதனத்தில் வீற்றிருந்த, துரையே- பிரபுவே, திருமலைவேலு ராஜவிவேக குலேசனே - திருமலைவேலு ராஜவிவே கருலாதிபனே, நேற்று இருந்த நிலவும் - நேற்றிருந்த நிலாவும், அந்நேரம் - அப்பொழுது, என் நினைவு இருந்த - என்மனத்திலிருந்த, நினைப்பும் - எண்ணமும், இளந்தென்றற்காற்று இருந்த சுகமும் - இளமையாகிய தென்றற்காற்றிருந்த சௌக்கியமும், உன்றுணை - உன்றுணையாக, என்கருத்து இருந்ததும் - என் எண்ணமிருந்த நிலையும், யாது என்று சொல்வேன் - என்னவென்று சொல்வேன், எ - று.

சிங்காசநம் - சிங்கங்களால் தாங்கப்பட்ட ஆசநம்.

### தாயிரங்கல்.

70. விருதராகவனந்தந்தகங்குலிந்நேரத்தேமதனேறியவூர்திமேல், வருதராகவனந்தந்தமங்கையை மருவுவாய்மலர்மஞ்சத்தின்மீதிலே,வி ருதராகவனந்தந்தளஞ்செறி வேந்தன்ராவணன்சென்னிபத்தீர்ந்திடப், பொருதராகவனந்தந்தருஞ்செயபூபனேவெங்கடேசரெட்டேந்த்ரனே.

இ - ள். விருதர் ஆக - விருதுடையவர்களாக, அனந்தம் தளஞ்செறி - முடிவற்ற சேனைகள் நெருங்கின, வேந்தன் ராவணன் - அரசனாகியராவணனது, சென்னிபத்து-பத்துத்தலைகளையும், ஈர்ந்திட - (கணையானது) அறுத்திடும்படி, பொருத - போர்செய்த, ராகவன் - ஸ்ரீராமனே, அந்தம் தரும் - அழகுபொருந்திய, செயபூபனே - விஜயபூபதியே, வெங்கடேசரெட்டேந்த்ரனே - வெங்கடேசர எட்டேந்திரனே, விருதர் - அரக்கரது, ஆகம் - உடம்பின், வன்னம் தந்த - நிறத்தைக்கொடுக்கிற, கங்குல் - இரவில்,இந் நேரத்தே - இந்த நேரத்திலே, மதன் ஏறிய ஊர்தி - மன்மதனேறிய தேராகியதென்றல்,மேல்வருதராக- மேலிட்டுவாராதாக, வனம் தந்த மங்கையை-பாற்கடல்தந்த பெண்ணை, மலர்மஞ்சத்தின் மீதிலே - புஷ்பக்கட்டிலின்மேல், மருவுவாய்-தழுவுவாயாக, எ - று.

வனம் - நீர். அது இவ்விடத்தில் பாற்கடலையுணர்த்திற்று. வனம்தந்தமங்கை - இலக்குமி.

தாயிரங்கல்.

71. தடக்கடக்கயலோவிடமோவிழிதாமரைக்குமிழோசிமிழோ திரண், டிடக்கடக்குடமாமுலைமாமத னெய்யவாடியுருகுதல்பாரையா, உடக்கடக்குக்ரமாங்கும்பகன்னனையுசிதவிந்திரசித்தைச்செயங் கொண்ட,திடக்கடக்கயங்காத்தமனோகராசீதராவெங்கடேச ரெட்டேந்த்ரனே.

இ - ள். உடக்கு அடக்கு - (பகைவர்) கூட்டத்தைவென் றடக்குகின்ற, உக்ரம் ஆம் கும்பகன்னனை - உக்கிரமாகிய கும்பகர்ணனையும், உசிதம் இந்திர சித்தை - தகுதியாகிய இந்திர சித்தையும், செயம்கொண்ட - வெற்றிகொண்ட, திடம் கடம் - திடத்தையும் மதத்தையுமுடைய,கயம் - யானையை (கஜேந்திரனை), காத்த - காத்தருளிய, மனோகரா - மனோஹரனே, சீதரா-ஸ்ரீதரனே, வெங்கடேச ரெட்டேந்த்ரனே - வெங்கடேசரெட்டேந்திரனே, விழி - கண்கள், தடம் - தடாகத்திலுள்ள, கடா - பெரிய, கயலோ - சேல்மீன்களோ, விடமோ - நஞ்சோ, திரண்டு - திரட்சியாகி, இடக்கடம் - இடத்தினிற் பெருமைகொண்ட, குடம்ஆம்முலை - குடம்போலும் தனங்கள், தாமரைக்குமிழோ- தாமரை யரும்புகளோ, சிமிழோ - சிமிழ்களோ, (இத்தன்மையவாகிய அவயவங்களையுடைய இப்பெண்) மாமதன் எய்ய - அழகிய மன்மதனெய்ய, வாடி உருகுதல் - வாடியுருகுவதை, பார் - நோக்கு, ஐயா - ஐயனே, எ - று.

உடக்கு - கூட்டம், கும்பகர்ணன் - குடம்போன்ற காதையுடையவன்.

தாயிரங்கல்.

72. உரைக்கதத்துவத் துட்பொருளாகிய வொருவன்கைவில் லுக்கொப்பாமிவள்கொங்கை,வரைக்கதத்துவசக்கரன்போரிதுமட்டு ண்டோவந்துமுட்டுதல்பார்க்கிலாய், தரைக்கதத்தாவனையுமெழுப்பி ப்பூச்சக்ரவாளத்தைத்தாக்கிக்கடல்கடந், திரைக்கதத்துவயப்பரியா மண்டலேசுராவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். தரைகத்த - பூமிவெடித்தொலிக்க, துகளையும் எழுப்பி - தூளியையும் எழுப்பி, பூசக்ரவாளத்தை தாக்கி - அழகிய சக்ரவாளகிரியை மோதி, கடல் கடந்து இரைக்க - பெரும்புறக் கடல் எல்லைகடந்தொலிக்கும்படி, தத்து - தாவுகின்ற, வயம்பரியா - வெற்றிக்குதிரையையுடையவனே, மண்டலேசுரா - மண்டலாதிபனே, உரைக்க - சொல்ல, தத்துவத்து உட்பொருள் ஆகிய - உண்மை நூல்களின் உட்பொருளாகிய, ஒருவன் - ஒப்பற்றவனாகிய சிவ பெருமானது, கைவில்லுக்கு - கைவில்லாகிய (மேருமலைக்கு,) இவள் கொங்கை வரை ஒப்பு ஆம் - இவள் தனமலைகள் நிகராகும், கத்தத்துவசம் - மீனத் துவசத்தைப்பிடித்த, கரன் - கையையுடையவனாகிய மன்மதனது, போர் இது மட்டு உண்டோ-சண்டையாகிய இதற்கு ஒரு அளவுண்டோ, வந்து-தென் றற்காற்றானது, முட்டுதல்-மோதுவதையும், பார்க்கிலாய்-நோக்கிலாய், எ - று.

73. விகடத்தந்திமதிகாயமாரவேள்விடுத்தவத்திரங்கைதத்தாடுருவி யென், மகடத்தந்திவலையாகுங் கட்புனல்வடித்துத் தந்தியிசைவெறுப் பாவனோ, சகடத்தந்தி பரித்திரள்கூட்டிய சத்துருத்திரட்டைக்குத் திடத்திரும், புகடத்தந்திக் குதயா செயதர பூதராவெங்கடேசுரெட் டேந்த்ரனே.

இதன்பொருள் நன்கு புலப்படவில்லை.

74. பருதியாகமகமாகமூர்மதிபணையெக்காளம்வெடியாமலரம்பு, விருதியாகமகன் மச்ரமாமினைவரின் பொருத்திடுமோசேர் திருவருட் கொருதியாகமகவாசகங்கற்றோர்க்குறுபண வெங்கள் குப்பணவேண் மைந்தா, வருதியாகமகமேருநேர்செல்வவன்யராயவசுவப்பதாயனே.

இதன்பொருள் நன்கு புலப்படவில்லை.

செவிலியிரங்கல்.

75. பண்ணப்பம்பரமன்னமுணுமலேபாற்றுப்பம்பரஞ்சோர்ந்து மயல்கொடு, வண்ணப்பம்பரமாங்குயமீறிமேவவிரும்பம்பரக்கண்ணி னட்சேரையா, தண்ணப்பம்பரவைசூழ்பதியரசருங்கப்பம்பரந்தேகொ டுவந்தடி, விண்ணப்பம்பரமென்றே தொழுஞ்செக வீரராமகுமாரவெ ட்டேந்தரனே.

இ - ள். தண் அப்பு - குளிர்ந்த நீரையுடைய, அம்-அழகிய, பரவை சூழ்-கடல்சூழ்ந்த, பதி - உலகிலுள்ள, அரசரும் - எல்லா அரசரும், கப்பம் - திறை யை, பரந்து கொடுவந்து - விரைந்து கொண்டுவந்து, அடி-அடிகளுக்கு, விண் ணப்பம் - விண்ணப்பம், பரம் என்று-(எம்மைக் காப்பது) உமது பாரமென்று, தொழும் - வணங்குகின்ற, செகவீரராமகுமார எட்டேந்த்ரனே - செகவீரராம குமார எட்டேந்திரனே, பண் - செய்த, அப்பம் - அப்பத்தையும், பரமன்னம்-பரமான்னங்களையும், பால்துப்பு - பால்சோற்றையும், உண்ணமல் - அருந்தா மல், அம்பரம்சோர்ந்து - ஆடையவிழ்ந்து, மயல் கொடு - மையல் கொண்டு, வண்ணம் - சிறமுள்ள, பம்பரம் ஆம் - பம்பரத்தை நிகர்த்த, குயம் மீறி-தனம் பூரித்து, மேவ - உன்னைத்தழுவ, விரும்பு - விரும்புகின்ற, அம்பு அரம் கண் - அம்மையும் அரத்தையும் நிகர்த்த கண்களையுடைய, இவள் - இவளை, சேர்-சேர் வாய், ஐயா - ஐயனே, எ - று.

தோழியிரங்கல்.

76. உன்னக்காவடிப்பூப்பறியாணதியும்புகாள்வடிபாலையருந்தெ ன, என்னக்காவடிவேண்டாமென்றேதிறு லேதுக்காவடியங்காமற்சே

ருவாய், அன்னக்காவடியாற்கழுகாசலத்தாதிக்காவடிமைத்திறம்பூண்டுக, வின்னக்காவடிவேலாவென்றுன்செகவீரராமகுமாரவெட்டேந்த்ரனே.

இ - ள். அன்னக் காவடியால்-அன்னக்காவடியோடு, கழுகாசலத்து ஆதிக்கா - திருக்கழுக்குன்றத்து முதல்வனுக்கு, அடிமைத்திறம்பூண்டு - தொண்டு பூண்டு, கவின - அழகாக, கா - காப்பாற்று, வடிவேலா என்று - வடிவேலனே யென்று, உன் - நினைக்கின்ற, செகவீரராமகுமார எட்டேந்த்ரனே - செகவீர ராமகுமார எட்டேந்திரனே, உன் - யாவரும் மதித்தற்குரிய, அ - அந்த, கா அடி - சோலையினடியில் சென்று, பூபறியாள் - மலர்களைப்பறியாள், நதியும்பு காள் - நதிக்கும் போகாள், வடி பாலை அருந்து எனு-வடித்த பாலைக்குடியென, என் அக்கா - என்தமக்காய், அடி - அடி, வேண்டாம் என்று ஓதினல் - வேண்டாமென்று சொன்னல், எதுக்கு ஆவள் - எதுக்காவாள், தியங்காமல் - இவள் மயங்காமல், சேருவாய் - (இவளைத்) தழுவுவாயாக, எ - று.

தாயிரங்கல்.

77. ஆரிச்சந்தநயம்படிப்பார்மத னலைச்சந்தனக்குண்டாகியேபி னும், தேரிச்சந்தநமேசொலுவாயெனச்செப்பிச்சந்தநங்கைதனைச்சேருவாய், பூரிச்சந்தனம்விம்மியமாதரைப்புலப்பச்சந்தனதாகவுளத்தில் வை, வேரிச்சந்தநமார்பகத்தாய்செகவீரராமகுமாரவெட்டேந்த்ரனே.

இ - ள். அம்தநம் - அழகிய தனங்கள், பூரிச்சு-பூரித்து, விம்மியமாதரை- அழுதமாதரை, புலப்பு அச்சம் தனது ஆக-பிணக்கத்துக்கு காரணமாகிய அச்சம் தனதாக, உளத்தில் வை - மனத்திற்கொண்ட, வேரி - வாசனையுள்ள, சந்தனம் - சந்தனமணிந்த, மார்பகத்தாய் - மார்பிடத்தையுடையவனே, செகவீர ராமகுமார எட்டேந்த்ரனே - செகவீரராமகுமார எட்டேந்திரனே, இ - இந்த, சந்தம் - சந்தத்தை, நயம் படிப்பார் - இனிமையாகப் படிப்பவர், ஆர் - யார், மதனல் - மன்மதனல், தனக்கு அச்சம் உண்டாகி - தனக்கு அச்சமுண்டாகியும், பின்னும் தேரி - பின்னும் ஆராய்ந்து, அன்னமே - அன்னமே, சந்து சொல்லுவாய் என - தூது சொல்வாயென்று, செப்பு - சொல்லுகின்ற, இ - இந்த, சந்தம் - அழகாகிய, நங்கைதனை-என் பெண்ணை, சேருவாய்-அணைவாய், எ-று.

தாயிரங்கல்.

78. சம்புதைக்குங்கருங்காலன்போற்கங்குல்சாரவேலையொலிக்குப்பயந்துநோக், கம்புதைக்குமென்பெண்பிள்ளைமேலினிக்காமராஜனெடுத்துத்தொடுத்திடும், அம்புதைக்கு முன்னேயணைந்தா லிவளாவிதக்குமிப்பூவிலிருக்குமம், பும்புதைக்குணிதியெனவாய்த்தவெம்புண்ணியாவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். நம்பும் - நம்புதற்குரிய, புதைக்குள் - புதையலுக்குள்ளிருக்கிற, நிதி என - திரவியம்போல, வாய்த்த - கிடைத்த, எம் புண்ணியா-எமது புண்ணியவானே, வெங்கடேசுரெட்டேந்த்ரனே—, கருகாலன்போல் - கரிய யமன் போல, கங்குல்சார - இரவுவர, வேலை ஒலிக்கு பயந்து - கடலோசைக்கஞ்சி, நோக்கம் புதைக்கும்-கண்களை மூடிக்கொள்ளுகின்ற, என் பெண்பிள்ளைமேல்-என்மகள்மீது, இனி - இனி, காமராஜன் - மன்மதன், எடுத்து தொடுத்திடும் அம்பு - எடுத்து எய்கின்ற பாணங்கள், தைக்குமுன்னே - தைக்குமுன்பே, அணைந்தால் - தழுவினால், இவள் ஆவி - இவளுயிர், தக்கும் - நிலைக்கும், இப்பூவில் இருக்கும் - (இவளும்) இந்தப்பூமியி லிருப்பாள்.

தாயிரங்கல்.

79\. மாதானைவேந்தர்க்குமேலோன்பெரியசுவாமியையென்
மாதானைமேல்வரக்கண்டனள்கண்டுமயங்கியுஞ்சும்
மாதானைபோவரக்காணேனெனதுவளவுக்குள்ளம்
மாதானைபோச்சென்றுவந்தாளினிச்சொல்லவாயில்லையே.

இ - ள். மாதானை - பெரும்படைகளையுடைய, வேந்தர்க்கு மேலோன் - அரசரில்சிறந்தவன் ஆகிய, பெரியசுவாமியை - பெரியசாமியை, என்மாது-என் பெண், ஆனைமேல்வரக் கண்டனள் - யானைமீதேறிவரப் பார்த்தாள், கண்டு மயங்கியும் - பார்த்து மயங்கியும், ஐயோ சும்மாவரக்காணேன் - அந்தோ சும்மா வரக்கண்டிலேன், எனது வளவுக்குள் - என் வீட்டுக்குள், அம்மா - தாயே, தானைபோச்சு என்று - ஆடைபறிபோயிற்று என்று, வந்தாள் - வந்தனள், இனிச்சொல்ல - இனிச்சொல்லுதற்கு, வாய் இல்லை - எனக்கு வாயில்லை, எ - று.

தலைமகள் இரங்கல்.

80\. அச்சங்கபாணிபதம்போற்றிச்செந்தமிழ்க்கன்பியற்றி
அச்சங்கமேவுந்திருமலைராயனணைந்திலனான்
அச்சங்கலாமதிக்கென்றிருந்தேனென்றனாகத்தைநூல்
அச்சங்கமாகத்துளைத்தான்மதப்பயலம்புகொண்டே.

இ - ள். அ - அந்த, * சங்கபாணி - திருமாலின், பதம்போற்றி - திருவடியை வணங்கி, செந்தமிழ்க்கு அன்பு இயற்றி - செந்தமிழ்க்கு அன்புசெய்து, அ - அந்த, சங்கம் மேவும் - சங்கத்தைப்பொருந்திய, திருமலைராயன் - திருமலைராஜன், அணைந்திலன் - என்னைத்தழுவிலன், நான் - யான், கலாமதிக்கு - கலைகளையுடைய சந்திரனுக்கு, அச்சம் என்று இருந்தேன் - பயமென்றிருந்தேன், என்றன் ஆகத்தை - என்னுடம்பை, நூல் அச்சு அங்கம் ஆக - நூலச்சுருவமாக, மதப்பயல் - மன்மதப்பயல், அம்புகொண்டு துளைத்தான் - பாணங்களால் துளைத்துவிட்டான், எ - று.

### தலைவியிரங்கல்.

81. அத்திக்குதையன்றிருமலைவேலப்பனன்புசொல்லத்
தித்திக்குதையன்கருத்தென்னவோமதிசென்றுகுணக்
குத்திக்குதையன்கதிர்காட்டுமோவிருகொங்கையின்மேல்
தத்திக்குதையமட்டேறுதுகாமன்சரங்கள்வந்தே.

**இ - ள்.** அத்திக்கு உதையன் - கஜேந்திரனுக்குப் பிரத்தியக்ஷமானவன், திருமலைவேலப்பன்—, (அவனது) அன்புசொல்ல - அன்பைச் சொல்லுதலும், தித்திக்குது - இனிக்குது, ஐயன்கருத்து என்னவோ - ஐயன் கருத்து யாதோ, மதிசென்று - சந்திரன் அஸ்தமித்து, குணக்குதிக்கு - கீழ்த்திசையில், உதையன் - சூரியன், கதிர்காட்டுமோ - ஒளியைக் காட்டுவனோ, காமன் சரங்கள்வந்து-மன்மதபாணங்கள்வந்து, இருகொங்கையின்மேல் தத்தி - இருதனங்கள்மீது தாவி, குதையம்மட்டு ஏறுது - குதையினளவும் பதியாநின்றன, எ - று.

### செவிலியிரங்கல்.

82. கலவளைக்குண்டிவள்கைவளைபோனதுங்காரிகையார்
சொலவளைக்குந்தத்தரம்போலத்தைப்பதுஞ்சொல்பவரார்
நலவளைக்குஞ்சரியாஞ்செவிச்சானகிநாண்புனைய
மெலவளைக்குஞ்சிலையானேதிருமலைவேலப்பனே.

**இ - ள்.** இவள் கைவளைபோனதும்-இவள் கைவளையல் கழன்றதும், கலவளைக்கு உண்டு - கலவளையலுக்குண்டு, காரிகையார் சொல் - மாதர்சொல், அவளை - அவளை, குந்தத்து அரம்போல - ஈட்டிபோலவும் அரம்போலவும், தைப்பதும் - தைப்பதையும், சொல்பவர் ஆர் - சொல்லுவோர் யாவர், நல்லவள்ளைக்கும் சரிஆம் செவி - நல்லவள்ளைத் தண்டுக்கு நிகராகிய காதுகளையுடைய, சாநகி - சீதை, நாண்புனைய - மங்கலநாண் அணியும்படி, மெலவளைக்கும் - மெதுவாக வளைத்த, சிலையானே - வில்லையுடையவனே, திருமலைவேலப்பனே—, எ - று.

கலம் ஒருமுகத்த வளைவைக்கருவி. சிலைஎன்றதுமிதிலையில் விசுவாமித்திரரோடு போனபோது வளைத்தவில்லை.

### செவிலியிரங்கல்.

83. முடிக்குமருப்புக்கிசையாப்பைங்கூந்தலம்மூரிமதன்
பிடிக்குமருப்புக்கிலக்கல்லவேயெதிர்பேசுமொன்னார்
குடிக்குமருப்புக்கடலேற்றுவித்துக்கொடிமதில்பாய்ந்
திடிக்குமருப்புக்களிற்றுனிளைசையிலெட்டமனே.

**இ - ள்.** எதிர்பேசும் ஒன்னார் - எதிர்பேசுகின்ற பகைவரது, குடி - குடிகளை, குமர் - ஒலிக்கின்ற, உப்புக்கடல் ஏற்றுவித்து - உப்புக்கடலிலேறச்செய்

து, கொடிமதில் - கொடிகட்டிய மதிலின்மீது, பாய்ந்து இடிக்கும் - பாய்ந்து குத்துகின்ற, மருப்புக்களிற்றான் - கொம்புகளை யுடைய யானையையுடையவனாகிய, இளசையில் எட்டமனே - இளசை எட்டமேந்திரனே, முடிக்கும் - முடிக்கின்ற, மரு - மருக்கொழுந்து, புக்கு இசையா - புகுந்து இசைந்திராத, பைகூந்தல் - பசுமையாகிய கூந்தலை யுடையவள், அ - அந்த, மூரிமதன் - வலிவுள்ளமன்மதன், பிடிக்கும் - கைக்கொண்டிருக்கிற, அரும்புக்கு - பூவரும்புகளுக்கு, இலக்கு அல்லவே - லக்ஷியமல்லவே, எ - று.

கடலேற்றுவித்து என்றது தீபாந்தரங்களிற்செலுத்தி என்றபடி.

செவிலிகூற்று.

84. கடத்தத்தளிச்சிறுநாண் பூட்டிமாரசரந்தனமூ
கடத்தத்தளித்தலைதோற்றாட்குத்தோற்றுகடாசலத்தை
நடத்தத்தளிக்குட்பதைத்துக்கிடக்குமொன்னார்கண்முறை
இடத்தத்தளிக்கப்பொரும்வெங்கடேசுரெட்டேந்திரனே.

இ - ள். கடாசலத்தை - யானையை, நடத்த - நடத்தவே, தளிக்குள் - வீட்டுக்குள்ளே, பதைத்து கிடக்கும் - பதைத்துக் கிடக்கிற, ஒன்னார்கள் - பகைவர்கள், முறையிட - முறையிடவும், தத்தளிக்க - திடுக்கிடவும், பொரும் - போர்செய்கிற, வெங்கடேசுரெட்டேந்திரனே—, கடத்தத்து-அருகாயிருக்கிற, அளி - வண்டுகளாகிய, சிறுநாண்பூட்டி - சிறியநாணையேற்றி, மாரன் - மன்மதன், சரம் - புஷ்பபாணங்களை, அத்தத்து அள்ளி - கையினால்வாரி, தனமுகடு - தனமுகட்டின்மேல் எய்ய, தலைதோற்றாட்கு - தன்பெருமையை யிழந்த என்பெண்ணுக்கு, தோற்று - பிரத்தியக்ஷமாக வேண்டும், எ - று.

செவிலிகூற்று.

85. செல்லுக்குமல்லுக்குநேரோதிமங்கலச்சித்தசவேள்
வல்லிக்கிணையில்லைவல்லிக்கிணைகந்தமாதனஞ்சொன்
முல்லைக்குமானுக்குமாந்தளிருக்குமிமூன்றினுக்கும்
பல்லக்குமேல்வருமன்னவெட்டேந்திரபாண்டியனே.

இ - ள். பல்லக்கு மேல்வரும் மன்ன - பல்லக்கின்மீ தேறிவருகிற அரசனே, எட்டேந்திரபாண்டியனே - எட்டமேந்திர பாண்டியனே, செல்லுக்கும் அல்லுக்கும் நேர் - மேகத்துக்கும் இரவுக்கும் சமமான, ஓதி - கூந்தலையுடைய, மங்கலம் - சுபகரமான, சித்தசவேள் - மன்மதனது, வல்லிக்கு - மனைவியாகிய ரதிதேவியை வீகர்ப்பவளாகிய என்பெண்ணுக்கு, இணை இல்லை - சமானமில்லை, இணை - இரண்டாகிய, கந்தம்-சந்தனக்குழம்பணிந்த, மாதனம் - பெரியதனங்களும், சொல் - சொல்லும், வல் இக்கு - (முறையே) சூதாடுகருவியையும் கரும்பினிரதத்தையும் வீகர்க்கும், முல்லைக்கும் - முல்லையரும்புக்கும், மானுக்கும் -

மானுக்கும், மாந்தளிருக்கும் - மாந்தளிருக்கும், இம்மூன்றினுக்கும் - இந்த மூன்றுக்கும், பல்லக்குமேல் - பல்லக்குமேல் சிகராவன, எ - று.

பல்லக்குமேல் என்பதை, பல் அக்கு மேல் எனப்பிரித்து, பல்முல்லைக்கும், அக்குமானுக்கும், மேல்மாந்தளிருக்கும் உவமையாம் எனவுரைக்க, அக்கு - கண், மேல் - உடம்பு.

சேவிலி வண்டோடு கூறியிரங்கல்.

86. கவளவளைக்குக்களவுசெய்தோன்வஞ்சகப்பிணைமேல்
துவளவளைக்குஞ்சிலையான்மருதப்பதுங்கன்வரான்
தவளவளைக்குத்தடையிடுவாரில்லைசந்துசொல்ல
அவளவளைக்கும்பிடப்படுமோதண்ணளிக்குலமே.

இ - ள். தண் அளிகுலமே - குளிர்ச்சியாகிய வண்டுக்கூட்டமே, கவளம் அளைக்கு - வாயளவினதாகிய தயிரின்பொருட்டு, களவு செய்தோன் - களவு செய்தவனாகிய கண்ணன், வஞ்சகம் பிணைமேல் - வஞ்சவுருக்கொண்டுவந்த மானின்மீது, துவள வளைக்கும் சிலையான் - துவளும்படி வளைத்தவில்லையுடையவனாகிய ஸ்ரீராமன், மருதப்பதுங்கன் - மருதப்பனென்னும் மேலோன், வரான் - வராதிருக்கிறான், தவளம் வளைக்கு - வெண்மையாகிய சங்கவளையலுக்கு, தடையிடுவார் இல்லை - தடைசெய்பவர் இல்லை, சந்துசொல்ல - தூதுசொல்ல, அவள் அவளை கும்பிடப்படுமோ - அவளவளைக்கும்பிடத்தகுமோ, எ - று.

வஞ்சகப்பிணையென்றது மாரீசனை.

சேவிலிகூற்று.

87. இந்திரச்செல்வன்றுரைபூலிக்காத்தப்பனிங்கிவள்பால்
வந்திலனின்னமும்வேள்கணையால்கண்வளர்சசிமு
கந்திரள்சானுவில்வைத்ததுமகரகர்க்கடக
சந்திரயோகங்களாமடவீர்கணிதந்திடமே.

இ - ள். இந்திரச்செல்வன் - இந்திரச்செல்வத்தையுடையவன், துரை - பிரபுவாகிய, பூலிக்காத்தப்பன் - பூலிக்காத்தப்பன், இங்கு இவள்பால் - இங்கு இவளிடத்தில், இன்னமும் வந்திலன் - இன்னமும் வந்தானில்லை, வேள்கணையால் - மன்மதபாணத்தால், கண்வளர் - கண்வளர்கின்ற, சசிமுகம் - சந்திரன் போலுமுகத்தை, சானுவில்வைத்தது - முழங்காலில்வைத்தது, மகரகர்க்கடக சந்திரயோகங்கள் ஆம் - மகரகர்க்கடக சந்திரயோகங்களேயாகும், மடவீர் - பெண்களே, கணிதம் திடமே - கணித சாத்திரம் உறுதியேயாகும், எ - று.

மன்மதபாணத்துக்கு அஞ்சி முழங்காலில் முகத்தைவைத்த தலைவியை வியந்து இதுவுமொரு மகரகர்க்கடக சந்திரயோகங்களாம் எனச்சொன்னயந்தோ

ன்றுமாறு கூறியது. மகரம் - காதணி, சந்திரன் - முகம், கர்க்கடகம் - முழங்கால், யோகம் - கூட்டம்.

தலைவிகடலோடு கூறல்.

88. வெஞ்சத்தமரந்துளைக்குந்திருமலைவேலுவந்தால்
வஞ்சத்தமரம்பலுக்குமஞ்சேனன்னைவாய்க்குமஞ்சேன்
நெஞ்சத்தமரங்கசப்போரைவெல்லுவனீயுமென்னை
அஞ்சத்தமரஞ்செய்வாயோவலைசெறியம்பரமே.

இ - ள். அலைசெறி அம்பரமே - அலைகள் நெருங்கிய கடலே, வெம்சத்தமரம் துளைக்கும் - விரும்புதற்குரிய ஏழுமராமரங்களைத் தொளைத்த, திருமலை வேலு வந்தால் - திருமலைவேலப்பன் வந்தால், வஞ்சம் தமர் - வஞ்சனையுள்ள உறவினரது, அம்பலுக்கும் அஞ்சேன்-பழிமொழிக்கும் அஞ்சமாட்டேன், அன்னைவாய்க்கும் அஞ்சேன் - தாயின்வாய்க்கும் அஞ்சேன், நெஞ்சத்து அமர்-மனத்திலமர்ந்திருக்கிற, அங்கசப்போரை - மன்மதன் சண்டையை, வெல்லுவன்-ஜெயிப்பேன், நீயும் - நீயும், என்னை அஞ்ச-என்னை அஞ்சுவிக்கும்பொருட்டு, தமரம்செய்வாயோ - ஒலிப்பாயோ, எ - று.

செவிலியிரங்கல்.

89. புத்தியின்பேர்க்குள்ளாய்வேள்பொற்றொடிக்குமுன்புவந்து
சத்தியப்பேர்மீதுசரந்தொடுத்தான் - நித்தப்
குருபதம்பராவுமநுகூலபொன்மாது
மருவும்வெங்கடேசுரெட்டமா.

இ - ள். நித்தம் - நாள்தோறும், குருபதம் பராவும் - குருபாதத்தை வழிபடுகின்ற, அநுகூல - அநுகூலனே, பொன்மாது மருவும் - திருமகள் பொருந்துகின்ற, வெங்கடேசு ரெட்டமா - வெஙகடேசு ரெட்டமனே, வேள் - மன்மதன், புத்தியின்பேர்க்கு உள் ஆய் - புத்தியின்பேருக் குள்ளாகி, பொன்தொடிக்கு முன்புவந்து - பொன்வளையலை யணிந்தவளுக் கெதிரில்வந்து, சத்தியப்பேர்மீது சரம்தொடுத்தான் - சத்தியத்தின் பேர்மீது பாணமெய்தான், எ-று.

புத்தி - மதி, (சந்திரன்.) சத்தியம் - மெய், (உடம்பு), மன்மதன் சந்திரனுகிய குடைநிழலில் வந்து உடம்பின்மீது அம்புதொடுத்தா னென்பது கருத்து.

தலைவியிரங்கல்.

90. அத்திதனையூர்ப்பசுப்பேராக்கிச்சினந்தடித்துச்
சித்தசனென்மேற்சமரஞ்செய்தானே - முத்தமிழ்க்கெந்

நாளும்பசுங்கனகநல்கிமுதல்வள்ளலென
வாழும்வெங்கடேசரெட்டமா.

இ - ள். முத்தமிழ்க்கு - முத்தமிழ்ப் பாடலுக்கு, எந்நாளும் - எக்காலமும், பசுகனகம் நல்கி - பசும்பொன்னைக் கொடுத்து, முதல்வள்ளல் எனவாழும் - முதல் வள்ளல்கள்போல வாழ்கின்ற, வெங்கடேச ரெட்டமா - வெங்கடேச ரெட்டமனே, அத்திதனை - கடலை, ஊர்ப்பசு பேர் ஆக்கி-ஊர்ப்பசுவின் பெயராகச்செய்து, சினந்து அடித்து - கோபித்து அடித்து, சித்தசன் - மன்மதன், என்மேல் - என்மீது, சமரம்செய்தான் - போர் செய்தான், எ - று.

அத்தி - கடல், ஊர்ப்பசு - நகரா. (முரசு).

தலைவிகூற்று.

91\. மன்னன்வெங்கடேசரெட்டமாநிதிபாற்றூதுரைத்துக்
கன்னிதார்வாங்கிவரக்காண்கிலனே - மின்னுபசும்
சொன்னவடிவாயிலங்குந்தோகைரதிகணவன்
கன்னல்வளைத்தெய்யுங்கணை.

இ - ள். மின்னு - மின்னுகின்ற, பசும்பொன்ன வடிவு ஆய் - பசும்பொன்னுருவாகி, இலங்கும் - விளங்குகின்ற, தோகை - மயிற்சாயலையுடைய, ரதி கணவன் - இரதிதேவி நாயகனாகிய மன்மதன், கன்னல் வளைத்து - கரும்பை வில்லாக வளைத்து, கணை எய்யும் - அம்புகளை யேவுகிறான், (இன்னமும்) மன்னன் வெங்கடேச ரெட்டமாநிதிபால் - இறைவனாகிய வேங்கடேச ரெட்டன் என்னும் பெருஞ் செல்வனிடத்தில், தூது உரைத்து - தூதுசொல்லி, கன்னி - கன்னியானவள், தார் - மாலையை, வாங்கிவரக் காண்கிலன் - வாங்கிவரக்காணேன், எ - று.

கன்னிதார் வாங்கிவர, ரதிகணவன் கன்னல் வளைத்தெய்யுங் கணை காண்கிலன் என்றியைத் துரைப்பினு மமையும்.

செவிலியிரங்கல்.

92\. தண்ணமுதபாஷிதவிஸ்தாரன்வெங்கடேசரெட்ட
புண்ணியவான்வந்துபுணராநாள் - உண்ணமுது
மாமனத்தைதயேகுமட்டவம்புவிட்டாள்பால்கொடுக்க
வீமனத்தைபேரெடுத்தாள்மின்.

இ - ள். தண் - குளிர்ந்த, அமுதம் - அமிர்தம்போன்ற, பாஷிதம் - சம்பாஷணைத்தால், விஸ்தாரன் - விசாலன், வெங்கடேசரெட்ட புண்ணியவான்-வெங்கடேசரெட்டனென்னும் தருமசீலன், வந்து புணராநாள் - வந்து சேராதநாளில், மின் - என் பெண்ணானவள் உண் - உண்ணுதற்குரிய, அமுதம் - அமு

...ழும் (சோறும்), மாமனத்தை குமட்ட - பெரிய மனத்தைக் குமட்டுதலால், வம்புவிட்டாள் - (கச்சு) கசந்துவிட்டாள், பால்கொடுக்க - பாலைக்கொடுக்க, வீமன் அத்தை பேர் எடுத்தாள் - வாந்தி யெடுத்தாள், எ - று.

வம்பு - கச்சு, இது கைத்து என்பதன் சிதைவு, வெறுத்து என்பது பொருள். வீ - புஷ்பம் (தாமரை), மன் - இறைவன் (நிலையாக வுடையவன்) பிரமன், அத்தை - இவனுக்கு அத்தைபார்வதி, (சக்தி) (வாந்தி).

### தாயிரங்கல்.

93. தண்டமிழ்தேருத்தமதயாளுவெங்கடேசுரெட்ட
மண்டலிகன்கூடிமருவாநாள் - செண்டு
முலைமாதுட்கின்னமுதுகொடுக்கவாட்டுத்
தலையாளுண்மான்மயக்கத்தால்.

இ - ள். தண் தமிழ்தேர் - குட்பமாகிய தமிழையாராய்ந்து தெளிந்த, உத்தமதயாளு - சிறந்த தயாவாளனாகிய, வெங்கடேசுரெட்ட மண்டலிகன் - வெங்கடேசுரெட்ட பூபதி, கூடி மருவாநாள் - சேர்ந்தணையாதநாளில், செண்டு - பந்துபோன்ற, முலை - தனங்களையுடைய, மாதுட்கு - என் பெண்ணுக்கு, இன் அமுது கொடுக்க - இனிய அமிர்தத்தைக்கொடுக்க, (அவள்) மால்மயக்கத்தால் - காமமயக்கத்தால், ஆட்டுத்தலை ஆளுள் - ஆட்டுத்தலையையுடையவளானாள், எ-று.

ஆட்டுத்தலை - ஆடுந்தலையுடைய தலை. ஆட்டுத்தலையாளுள் என்பதற்கு - வேண்டாமென்று தலையசைத்தாள் என்பது கருத்து.

### தாயிரங்கல்.

94. தெள்ளுதமிழுக்கருடியாகிவெங்கடேசுரெட்ட
வள்ளன்மேலாசைகொண்டமாதுன்மேல் - துள்ளும்
கயவாளிவேட்குவரிகைமுரசானாற்பங்
கயவாளியேவானோகாண்.

இ - ள். தெள்ளுதமிழுக்கு - தெளிந்த தமிழ்ப்பாடலுக்கு, அருள் - அருள்செய்கிற, தியாகி - கொடையாளனாகிய, வெங்கடேசுரெட்ட வள்ளல்மேல் - வெங்கடேசுரெட்ட வள்ளலின்மீது, ஆசைகொண்ட - விருப்பங்கொண்ட, மாதுன்மேல் - என் பெண்ணின்மீது, துள்ளும் - குதிக்கின்ற, கயவாளி - கீழ்மகனாகிய, வேட்கு - மன்மதனுக்கு, உவரி - கடலானது, கைமுரசு ஆனால் - கைப்பேரிகையானால், பங்கயவாளி - தாமரைமலராகிய பாணத்தை, ஏவானோ - எய்யானோ, எ - று.

இழிந்தவனுக்கு உயர்ந்தபொருள் கிடைத்தால் அவன் செருக்கடைந்து பிறரை வருத்தமாட்டானோ என்பது கருத்து.

### தாய்க்கூற்று.

95. கொங்கைகும்பகோணமாகூந்தலுமோகூடலா
தங்குவிழியம்பாசமுத்திரமா - பைங்கனக

மேருவெங்கடேசுரெட்டமேந்த்ராவிவள்சசிபுற்
றாருடையானூரிடையதாம்.

இ - ள். பைகனகம் - பசும்பொன் மயமாகிய, மேரு - மேருமலையை நிகர்த்த, வெங்கடேசுரெட்ட மேந்த்ரா - வெங்கடேசுரெட்ட மேந்திரனே, இவள் சசி - இவள் இந்திராணிக்கு நிகராவாள், (இவளுடைய) கொங்கை-தனங்கள், கும்பகோணமா - கும்பகோணமா, கூந்தலோ கூடலா - கூந்தலானது மதுரையா, தங்கும் விழி - பொருந்திய கண்கள், அம்பா சமுத்திரமா - அம்பா சமுத்திரமா, இடை - இடையானது, புல்தார் உடையான் ஊரா - பனைமாலையணிந்தவனாகிய சேரனது ஊராகிய கருவூரா, எ - று.

கும்பகோணம் - கும்பவட்டம், (கும்பம் - குடம்,) கூடல் - (கூடு அல்) திரண்ட இருள், அம்பா சமுத்திரமா - அம்பா கடலா, கருவூர் - வஞ்சி - (கொடி). கும்பகோணம் முதலியன சொன்னயந்தோன்ற வந்தன.

### தலைவியைத் தாய்வியத்தல்.

96. மெய்யன்வெங்கடேசுரெட்டவேந்தன்பாற்சந்துரைத்துத்
தையல்கண்ணிவாங்கித்தரவில்லை - கையதிறற்
றுண்டித்தாண்மென்றுமென்றுதுப்பினாண்மாரனையுங்
கண்டித்தாளச்சமற்றாள்காண்.

இ - ள். மெய்யன்-சத்தியசந்தனாகிய, வெங்கடேசுரெட்ட வேந்தன்பால்-வெங்கடேசுரெட்ட ராஜேந்திரனிடத்தில், தையல்-தோழிப்பெண்ணானவள், தூது உரைத்து - தூதுசொல்லி, கண்ணிவாங்கித்தர - (அவனது) மாலையை வாங்கிக்கொடுக்க, (என்பெண்ணானவள்) வில்லை - (மன்மதனது) வில்லாகிய கரும்பை, துண்டித்தாள் - துண்டுசெய்தாள், மென்றுமென்று துப்பினாள்-மென்றுமென்று உமிழ்ந்தாள், மாரனையும் - மன்மதனையும், கண்டித்தாள் - வெறுத்துப்பேசினாள், அச்சம் அற்றாள் - பயமொழிந்தாள், எ - று.

தலைவனதுமாலை கிடைத்தமையால் மன்மதனது ஆண்மை இவளிடத்தில் செல்லவில்லையென்பதாம்.

### தாயிரங்கல்.

97. பூத்தூக்கியுண்டவனைப்போந்தேறிக்கொண்டவனே
மாத்தூக்கியைத்தூக்கிவந்தானே - நேர்த்திதரும்
பொன்னாபரணபுயசயிலாதென்னிளசை
மன்னாகுமாரவெட்டமா.

இ - ள். நேர்த்தி தரும் - அழகைத்தந்த, பொன் ஆபரணா - பொன்னாபரணத்தையுடையவனே, புயசயிலா - தோள்களாகிய மலைகளையுடையவனே, தென் இளசை மன்னா - தென்னிளசை நகர்க்கரசனே, குமார எட்டமா-குமார எட்டமனே, பூ - பூமியை, தூக்கி-சுமந்தவனாகிய ஆதிசேடனால், உண்டவனை-

உண்ணப்பட்டவனாகிய (தென்றல்) காற்றை, போந்து ஏறிக்கொண்டவன் - (வாகநமாகக்) கொண்டு ஏறிக்கொண்டவனாகிய மன்மதன், மா - இலக்குமியை, தாக்கியை-சுமப்பதாகிய தாமரைமலரை, தூக்கி வந்தான்-எடுத்துவந்தான், எ-று.

மன்மதன் தாமரைமலரை யெடுத்துவந்தான் இனி தாமதியாமல் இவளைத் சீழுவவேண்டுமென்பது கருத்து.

வெறிவிலக்கல்.

98. நற்றமிழ்வாணர்க்குநிதிநல்கும்வெங்கடேசுரெட்ட
கொற்றவன்றாரன்றியரன்கோயிலின்முன் - உற்றகொடிக்
காலைவிட்டப்பாலேநீங்காததுமுன் றுண்டுபட
வேலையிட்டதேதுவிடு.

இ - ள். நல் - சிறந்த, தமிழ்வாணர்க்கு-தமிழ்ப்புலவருக்கு, நிதி நல்கும்-திரவியத்தைக் கொடுக்கின்ற, வெங்கடேசுரெட்ட கொற்றவன் - வெங்கடேசுரெட்டேந்திரனது, தார் அன்றி-மாலையல்லது, அரன் கோயிலின் முன் உற்ற-சிவன் கோயிலின் முன்பொருந்திய, கொடிக்காலை விட்டு அப்பாலே நீங்காதது - துஜஸ்தம்பத்தைவிட்டு அப்பால் விலகாதிருப்பதாகிய ருஷபத்துக்கு, முன் - முன்னிருப்பதாகிய மேஷம், துண்டு பட - அறுபட, வேலையிட்டது ஏது - வேலையிட்டதற்குக் காரணம்யாது, விடு - (இதனை) ஒழிவாய், எ - று.

இவளது மையல் வெங்கடேசுரெட்டனது மாலையாலன்றி இந்த ஆட்டின் கொலையால் நீங்காதென்பதாம்.

வெறிவிலக்கல்.

99. கன்னன்வெங்கடேசுரெட்டகாண்டிபன்மேன்மாமோக
சன்னதங்கொண்டாட்குமுல்லைத்தாரல்லா - தென்னசெய்
தையன்முன்பூமுன்னட்சரமுற்றதைத்தெரியச் [தீர்
செய்யும்பேரென்னசெயும்.

இ - ள். கன்னன் - கர்ணனை நிகர்த்த, வெங்கடேசுரெட்டன் - வெங்கடேசுரெட்டன் என்கிற, காண்டிபன்மேல் - விசயன்மீது, மா - பெரிய, மோக சன்னதம் கொண்டாட்கு - மோகவெறி கொண்டவளுக்கு, முல்லைத்தார் அல்லாது - (அவனது) முல்லைமலர் மாலையை அன்றி, என்ன செய்தீர் - என்னகாரியம் செய்தீர், தையல்முன்-தையல் என்னுஞ் சொல்லுக்குமுன்னே, பூ முன் அக்ஷரம் - பூ என்னும் எழுத்துக்கு முன்னெழுத்தாகிய பு என்னும் எழுத்து, உற்றதை - சேர்ந்ததாகிய புதையலை, தெரியச்செய்யும் பேர் - தெரியும்படிச்செய்யும் பேராகியமை (ஆடு), என்ன செய்யும்-என்னகாரியத்தைச் செய்யும், எ-று.

வெறிவிலக்கல்.

100. தாண்டுபரிதூண்டுதிடசாலிவெங்கடேசுரெட்ட
பாண்டியன்மேலாசைகொண்டபைந்தொடியை - வேண்டியே

ஒன்றிரண்டாப்போகவொருத்தனையிங்கேன்கொணர்ந்தீர்
மின்றுயர்க்கென்செய்யும்விடும்.

இ - ள். தாண்டுபரி - தாவுகின்ற குதிரையை, தூண்டு - செலுத்துகிற, திட்சாலி - பராக்கிரமசாலியாகிய, வெங்கடேசுரெட்ட பாண்டியன்மேல்-வெங்கடேசுரெட்ட பாண்டியன்மீது, ஆசைகொண்ட - விருப்பங்கொண்ட, பைந்தொடியை - பசும்பொன்வளையலை யணிந்த பெண்ணை, வேண்டி - விரும்பி, ஒன்று - ஓருருவம், இரண்டு ஆ போக - இரண்டு பாகமாயொழிய, ஒருத்தனை - ஆட்டை, இங்கு ஏன் கொணர்ந்தீர் - இவ்விடத்தில் ஏன் கொண்டுவந்தீர் - மின்துயர்க்கு - (இது) என்மின் கொடிபோல் வாளாகிய பெண்ணினது துன்பத்துக்கு, என் செய்யும் - என்ன பயனைத்தரும், விடும் - (இதனை) விடுங்கள், எ - று.

ஒரு - ஆடு.

அலரீக்துறி.

101. கல்விகரைகண்டகும்பன்கம்பன்வெங்கடேசுரெட்ட
வில்விசயன்றென்னிளசைவெற்பிடத்திற் - சொல்லுவதென்
கட்செவியுமம்புலியுங்கங்கையுமோர்வெம்புலியிற்
பட்சமுறவைத்தார்பதி.

இ - ள். கல்வி கரைகண்ட - கல்விக்கடலைக் கரைகண்ட, கும்பன் - அகத்தியன் போன்றவன், கம்பன் - கம்பனை நிகர்த்தவன், வெங்கடேசுரெட்டவில்விசயன்—, (அவனது) தென் இளசைவெற்பிடத்தில் - தென்னிளசைநகரத்திலுள்ள மலையின்கண், சொல்லுவது என்-(கண்ட அதிசயத்தை) சொல்லுவதெப்படி, கட்செவியும் - பாம்பையும், அம்புலியும் - சந்திரனையும், கங்கையும் - கங்கையையும், ஓர் வெம்புலியில் - ஒரு கொடியபுலியின்மீது, பட்சம் உற - அன்பு மிகும்படி, பதி - தலைவர், வைத்தார் - வைத்தனர், எ - று.
பாம்பு - சந்திரன் - கங்கை (நீர்) | இம்மூன்றையும் சேர்த்தால் அரவிந்தப்
அரவு - இந்து - அம் | ஆகும். அரவிந்தம்-தாமரை.

புலி - வேங்கை. இது ஓர்மரம். வேங்கைமரத்தின்மீது தாமரைமலர் இருந்தது என்பது கருத்து.

அலரீக்துறி.

102. சங்கநிதியென்னத்தழைத்தவெங்கடேசுரெட்ட
சிங்கமிளசைச்செழுங்கிரியில் - அங்குகண்டேன்
மானிலத்தைமுற்றுமொருவன்அளந்துவாதியந்தந்
தானிருப்பதேந்திநிற்கத்தான்.

இ - ள். சங்கநிதி என்ன - சங்கநிதிபோல, தழைத்த - செழித்த, வெங்கடேசுரெட்டசிங்கம்—, (அவனது) இளசைசெழுங்கிரியில் - இளசைநகரிலுள்ள

செழிய மலையின்மீது, ஒரு வள்ளல் நடு ஆதி அந்தம் தான் இருப்பது மாநிலத்தைமுற்றும் எந்தி நிற்க - ஒருவள்ளலானவன் நடு ஆதி அந்தங்களிலும் தானே யிருப்பதாக உலகமுழுதும் தாங்கி நிற்க, அங்கு கண்டேன் - அவ்விடத்துப்பார்த்தேன், எ - று.

மாநிலம் - மால்நிலம், இது முல்லை, வள்ளல்-பாரி, நடு - இதின் நடுவில், ஆதி - ஆதியென்னுஞ்சொல்லின், அந்தம் - கடையெழுத்தாகியதி, இருப்பது - இருப்பதாகிய பாதிரி, பாதிரி மரத்தின்மேல் முல்லைமலர் இருந்தது என்பதுகருத்து.

அலர்க்குறி.

103. காலமுற்றும் வாழ்த்துமிந்த்ரதாருவெங்கடேசரெட்ட
வாலகிருஷ்ணவிம்பன்மணிவரையின் - மேலு
மருக்கமழுநன்மாமனையொருசந்தி
இருக்கவதிற்கண்டுகொண்டேனின்று.

இ - ள். காலமுற்றும் வாழ்த்தும் - உலகமுழுதும் வாழ்த்துகின்ற, இந்த்ரதாரு - கற்பகத்தருவையொத்த, வெங்கடேசரெட்ட வால கிருஷ்ணவிம்பன் - ,(அவனது) மணிவரையின்மேலும் - அழகிய மலையின்மீதும், மருக்கமழும்-வாசனை பரிமளிக்கின்ற, நல் - அழகிய, மா - இலக்குமியின், மனையும்-வீடாகியதாமரையும், ஒருசந்தியிருக்க - ஒருமூங்கிலின்மீதிருக்க, அதில் - அதினிடத்து, இன்று கண்டுகொண்டேன் - இன்று பார்த்தேன், எ - று.

மூங்கிலின்மீது தாமரைமலர் இருந்தது என்பது கருத்து.

அலர்க்குறி.

104. தங்கள் குலதீபமெனத்தாரணியோர்கொண்டாடும்
எங்கள்வெங்கடேசரெட்டமேந்த்ரன்வெற்பில் - செங்கணரி
உண்டதுடனவனின் றூதினதுஞ்சேர்ந்தவன்பேர்
கொண்டதின்மேற்கண்டேன்குறி.

இ - ள். தாரணியோர் - உலகத்தார், தங்கள் குலதீபம் என - தங்கள் குலவிளக்கென்று, கொண்டாடும் - கொண்டாடுகிற, எங்கள் வெங்கடேசரெட்டமேந்த்ரன்—,(அவனது)வெற்பில்-மலையில், செங்கண் அரி உண்டதுடன்-செந்தாமரை மலர்போலுங் கண்களையுடைய திருமால் உண்டதோடு, அவன்நின்று ஊதினதும்சேர்ந்து—, அவன் பேர்கொண்டதின்மேல்-அவன் பேர்கொண்டதின்மீது, குறி-(தலைவனது) அடையாளமாயிருக்க, கண்டேன்-பார்த்தேன்,எ-று.

திருமால் உண்டது - பூமி - கு. ஊதினது சங்கு, வளை. இவ்விரண்டுஞ்சேர்ந்தது குவளை. அவன்பேர் விண்டு - மூங்கில், மூங்கிலின்மீது குவளைமலர் இருந்தது என்பது கருத்து.

### செவிலிகூறல்.

105. அழகிசக்கேவிக்கனந்தம்பணியால்
விழையுங்குமாரவெட்டவேந்தே - பழகுமொழி
கூந்தல்களாலல்குலகடுசொன்னேன்கனகா
ஏந்துதனமாங்கனிமெய்யாம்.

இ - ள். விழையும்-யாவரும் விரும்புகின்ற, குமார எட்டவேந்தே—, அழகி - அழகியாகிய இந்தப்பெண்ணினது. சக்கு - கண், ஏவு - அம்பை நிகர்க்கும், பழகுமொழி - பழகியசொல், இக்கு - கரும்பினிரதத்தை நிகர்க்கும், கூந்தல் - கூந்தலானது, அல் - இரவை நிகர்க்கும், களம் - கண்டம், நந்தம் - சங்கைநிகர்க்கும், அல்குல் - நிதம்பம், பணி - பாம்பின் படத்தை நிகர்க்கும், அகடு - வயிறு, ஆல் - ஆலிலையை நிகர்க்கும், ஏந்துதனம் - ஏந்துதனங்கள், கனகம் - பொன்மலையை நிகர்க்கும், மெய் - உடம்பு, மாங்கனி ஆம் - மாங்கனியை நிகர்க்கும், சொன்னேன் - சொல்லினேன், (ஆதலால் இவளைவந்து சேர்வாய்) எ - று.

ஆம் என்பதனை ஏவு முதலியவற்றோடுங் கூட்டுக.

### வறுமையை யறிவித்தல்.

106. ஏகாம்பரரிடப்பேரில்லாததாழ்வுசொல்லப்
போகாதுவேறுபுகலில்லையே - பாகார்ந்த
சந்தமதுரத்தமிழுக்ககத்யனென
வந்தவெங்கடேசுரெட்டமா.

இ - ள். பாகு ஆர்ந்த - பாகின் சுவைநிரம்பிய, சந்தம் - பலசந்தங்களையுடைய, மதுரத் தமிழுக்கு - இனிய தமிழுக்கு, அகத்யன் எனவந்த - அகத்தியனென்னும்படி தோன்றின, வெங்கடேசுரெட்டமா. ஏகாம்பரர் - ஏகாம்பரநாதரது, இடப்பேர் - இடத்தின்பேர், இல்லாத தாழ்வு - இல்லாத குறையை, சொல்லப்போகாது - சொல்லொண்ணாது, வேறுபுகல் இல்லை - வேறுபுகலிடமில்லை, எ - று.

ஏகாம்பரர் இடப்பேர் - கஞ்சி. கஞ்சியில்லாத குறையைச்சொல்லவொண்ணாதென்பது கருத்து.

### இதுவுமது.

107 திராக்ஷைக்குத்தையனென்பதேயிருபத்தேழென்
னராக்கலைக்குத்தையனேகம் - உராக்கவொண்ணு
தந்தம்ப்ரசண்டாவரசர்சிரோரத்னமென
வந்தவெங்கடேசுரெட்டமா.

இ - ள். ப்ரசண்டா - பிரசண்டனே, அரசர் - அரசர்களுக்கு, சிரோரத்நமென-சிரோமணியென்னும்படி, வந்த - அவதரித்த, வெங்கடேசுரெட்டமா—

திரைக்கலைக்கு - கடலிற்றோன்றிய கலைக்கு, தையல் என்பது - தையலென்பது, இருபத்தேழு - இருபத்தேழாகும், என் அரை கலைக்கு - என் அரையிலுள்ள கலைக்கு, தையல் அனேகம் - தையல் அனேகமாகும், அந்தம் உரைக்கவொண்ணாது - முடிவுசொல்லவொண்ணாது, எ - று.

திரைக்கலை - கடலிற்றோன்றிய சந்திரன், (இவனுக்கு) தையல் இருபத்தேழு - மனைவியர் இருபத்தேழுபேர் (நக்ஷத்திரங்கள்), அரைக்கலை - அரையிலுடுத்த ஆடை, தையல் அனேகம் - தைத்தல் அனேகம் (மிகவும் கிழிந்து பலவிடங்களில் தைக்கப்பட்டது.)

செவிலி தலைவியைத்தேற்றல்.

108. சென்றலைந்தார்சேர்முத்திருளப்பபூபதிபால்
மன்றலந்தார்வாங்கிவருமளவும் - குன்றமுலை
ஏழாயிரம்பண்ணையில் உடம்புவாடாதே
ஏழாயிரம்பண்ணையில்.

இ - ள். குன்றம் முலைமடவாய் - மலைபோலுந் தனங்களையுடைய பெண்ணே, அலந்தார் - (வறுமையால்) வருந்தினவர், சேர் - அடைகின்ற, முத்திருளப்ப பூபதிபால் - முத்திருளப்ப பூபதியினிடத்தில், சென்று - போய், மன்றல் - பரிமளமுள்ள, அம் - அழகிய, தார் - மாலையை, வாங்கிவரும் அளவும்-வாங்கிவரும் வரையும், அம்பு அண்ணையில் - (மன்மதனது) அம்புகள் படுதலால், உடம்பு வாடாமே - உடல்மெலியாமல், ஏழாயிரம்பண்ணையில் - ஏழாயிரம் பண்ணையென்னும் ஊரில், (இரு - இருப்பாயாக.)

தாயிரங்கல்.

109. கூன்கலைநிலாவின்குளிர்ச்சிபொறுக்காதுகல்வி
மான்கலையில்லாமன்மருளுமா - தேன்கலையச்
சந்தநறுங்காவின்மந்திதாவுமிளைசைநகர்
வந்தவெங்கடேசுரெட்டமா.

இ - ள். மந்தி - குரங்குகள், மா தேன் கலைய - பெரிய தேன்கூண்டுகள் கலையும்படி, சந்தம் - அழகிய, நறு - வாசனையுள்ள, காவில் - சோலையில், தாவும் - குதிக்கின்ற, இளைசைநகர் - இளைசைநகரில், வந்த - அவதரித்த, வெங்கடேசுரெட்டமா—, கல்விமான்-கல்விமிகுந்த என்பெண்ணானவள், கூன்கலை நிலாவின் - வளைவாகிய பிறைச்சந்திரன் பொழிகின்ற நிலவினது, குளிர்ச்சிபொறுக்காது - குளிர்ச்சியைத்தாங்காமல், கலை இல்லாமல் மருளும் - ஆடையில்லமல் மயங்குகின்றாள், (இவளை நீவந்து தழுவவேண்டும்) எ - று.

செவிலிகூறல்.

110. நீகாவிதூராநெருப்பாமிவட்குவிலங்
காகாவிதூராகதம்புரிவார்கன்னியர்கள்

வாகாவிதுராமராமரதிமாரவச்ர
தேகாவிதுராதிருமலைவேலேந்திரனே.

இ - ள். ரதிமார - ரதிதேவியையுடைய மன்மதனை ஜெகர்த்தவனே, வச்ர தேகா - வஜ்ரசரீரத்தையுடையவனே, விதுரா - விதுரனுக்கு ஜெகரானவனே, திருமலை வேலேந்திரனே- , ரா - இரவில், விது - சந்திரன், இவட்கு-இவளு க்கு, நெருப்பு ஆம் - நெருப்பை ஜெகர்க்கும், விலக்கு - இதனை விலக்கு, கன்னி யர்கள் - பெண்கள், ஆகாவி - ஆகாதமரணத்துக் கேதுவாகிய, துராகதம் புரி வார் - துராக்ருதத்தைச் செய்வார்கள் (துன்பம்செய்வார்கள்,) நீ கா - நீ காக்க வேண்டும், எ - று.

111. அங்காவித்தாராவணைவதுகண்டின்பமொரு
பங்காவித்தாராபதியேயென்றேங்குவளோ
துங்காவித்தாராதுணைமுலையாராசைகொள்ளும்
செங்காவித்தாராதிருமலைவேலேந்திரனே.

இதன்பொருள் நன்குபுலப்படவில்லை.

## நாகூர்முத்துப்புலவர் பாடல்.



1. தனதனுகநடாத்தியடார்ந்தபூச்சரத்தை வாங்கித்தனத்தில்தொ டுக்கம, தனதனுகதனில்லால்மின்போன்மெய்பசந்தசந்துசந்தேசொ லென்றாண்மினாள், தனதனுகணத்தொம்மெனப்பையினிர்த்தம்புரிந்தச ரணசரோருகா, தனதனுகவளரும்பரதாபவித்தாரனேவெங்கடேசுரெ ட்டேந்த்ரனே.

இ - ள். தனது - தன்னுடைய, அல் - இருளாகிய, நாகம் - யானையை, நடாத்தி - நடத்திவந்து, அடர்ந்த - நெருங்கிய, பூ - மலராகிய, சரத்தை வாங் கி - பாணத்தை யெடுத்து, தனத்தில் தொடுக்க - தனத்தின்மேல் பிரயோகிக் க - மதனது - மன்மதனுடைய, அனுகதம் - வரப்போவதாகிய, வில்லால் - கரு ம்புவில்லினால், மின்போல் மெய் - மின்னற்கொடிபோன்ற சரீரமானது, பசந் து - பசலைநிறமாகி; அசந்து - அயர்ந்து, மினாள் - என் பெண்ணானவள், சந்து சொல் என்றாள் - என்னைத் தூதுசொல் என்றாள், தன தனு - தன தனு, கண- கண, தொம் என - தொம்மென்று, பையில் - (காளிங்கன் என்னும் பாம்பின்) படத்தின்மீது, ஙிர்த்தம் புரிந்த - நடனம்செய்த, சரண சரோருகா - பாததாம ரையை யுடையவனே, தனதன் ஆக - குபேரனுக்கு ஜெகராக, வளரும் - விருத் தியடையாநின்ற, பிரதாப வித்தாரனே - விஸ்தாரமான செல்வத்தையுடைய வனே, வெங்கடேசுரெட்டேந்த்ரனே, எ - று.

பாம்பின் படத்தின்மீது ஙிர்த்தம்செய்தது கிருஷ்ணவதாரத்தில்.

### தாயிரங்கல்.

2. கனகனங்கம்பிளந்தளிர்கொந்தளகங்களந்திருக்காய மின்மேன்மற்ற, கனகனங்கம்பிளந்தலைகண்டுகொங்கைக்குளேவினன்சேராததென்கொலோ, கனகனங்கம்பளகோத்திராவருட்காதலன்றனைக்காத்தடிமைகொண்டு, கனகனங்கம்பிளந்தநரசிங்ககாகுத்தாவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். கனம் கனம் - செறிவாகிய மேகமும், கம்பு - சங்கும், இளந்தளி - இளந்தளிரும் போன்ற, கொந்து அளகம் - பூங்கொத்துக்களையணிந்தகூந்தலையும், களம் - கழுத்தையும், காயம் - சரீரத்தையும் உடைய, மின்மேல் - மின்கொடிபோல் வாளாகிய என்பெண்ணினிடத்து, அகன் அகன்-நெஞ்சத்தைப்பிறப்பிடமாக வுடையவனாகிய மன்மதன், அங்கு - அவ்விடத்தில், அம்பு-தன்பாணத்தை, இளந்தலைகண்டு - (இவளது) இளங்காரத்தைப்பார்த்து, கொங்கைக்குள் - தனத்தினிடத்து, ஏவினன் - பிரயோகித்தான், சேராதது - நீவந்து இவளைக்கூடாதிருக்கிறதற்கு காரணம், என் கொல் - யாதோ, கனம் கனம - விஸ்தாரமான பெருமையையுடைய, கம்பள கோத்திரா - கம்பளகோத்திரத்தில் அவதரித்தவனே, அருள் - கிருபையுள்ள, காதலன் தன்னை - பாலகனாகியபிரகலாதனை காத்து அடிமைகொண்டு - ரக்ஷித்து ஆட்கொண்டு, கனகன் - இரணியனுடைய, அங்கம் - சரீரத்தை, பிளந்த - கிழித்த, நரசிங்க - நரசிங்கனே, காகுத்தா - காகுத்தனே, வெங்கடேச ரெட்டேந்திரனே, எ - று.

### வெறிவிலக்கல்.

3. கடகரிக்குமதனுனவர்செயுங்காயந்தேர்ந்தனரோ வளவன்னைமார், கடகரிக்குமரிவாழவேலன்முன்கட்டினாரதிலென்னுமொன்னார்க்குவி, கடகரிக்குருவிக்கன்றுகண்ணருள்கர்த்தர்தாளிணையைத்துதிநேமகா, கடகரிக்குதிருபாவிலாசைவாழ்கருணைமால்வெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். கடகர் - கைவளையை யணிந்தமாதர், இக்கு - கரும்பு வில்லையுடைய, மதன் ஆனவர் - மன்மதனானவன், செய்யும் - செய்கின்ற, காயம் - காயத்தை, தேர்ந்தனரோ - தெளிந்தார்களோ, வளவு- வீட்டிலுள்ள, அன்னைமார்கள் - தாய்மார்கள், தகர் - ஆட்டை, இ - இந்த, குமரிவாழ - பெண் உயிர்வாழும் பொருட்டு, வேலன்முன் - பூசாரிக்கு எதிரில், கட்டினார் - கட்டிவைத்தார்கள், அதில் - அதனால், என் ஆம் - என்னபயனுண்டாகும், ஒன்னார்க்குவிகட - பகைவர்க்கு மாறுபட்டவனே, கரிக்குருவிக்கு - கரிக்குருவிக்கு, அன்று - அந்நாளில், கண் அருள் - கண்ணருள் செய்த, கர்த்தர் - கர்த்தராகிய சிவபெருமானது, தாள் இணையை - இரண்டு திருவடிகளையும், துதி - துதிக்கிற, நேம - நியமத்தை யுடையவனே, கா - நீகாத்தருளவேண்டும், கடம் கரிக்கு - மதத்தையு

டைய யானைப்படைக்கு, அதிரூபா - தலைவனே, இளசைவாழ் - இளசைநகரில் வாழ்கின்ற, கருணை - கிருபையும், மால் - பெருமையு முடைய, வெங்கடேச ரெட்டேந்த்ரனே. எ - று.

கரிக்குருவிக்கு அருள்செய்த சரித்திரத்தை திருவிளையாடற்புராணத்திற் காண்க.

## செவிலியிரங்கல்.

4. தந்தப்பாதுகடீர்மருங்கப்பிந்தாமரையாமிந்தமாதைமின்னார்ச
ந்தம், தந்தப்பாதுகனற்றவரம்புவேடானொளிக்கச்சரமுல்லைதாசர, த
ந்தப்பாதுகவிப்பட்டம்வாலியைத் தாக்கியவன்றம்பிக்குத்தந்துதந்,
தந்தப்பாதுகைதம்பிக்குநல்கியதாருவேவெங்கடேசரெட்டேந்த்ரனே.

இ - ள். அப்பா - அப்பா, துகள்தீர் - குற்றமற்ற, மருங்கு - இடையானது, தந்து - நூலிழையாகும், இருகரை - இருகண்களும், அம்புஆம் - அம்பாகும், இந்தமாதை - இந்தப்பெண்ணை, மின்னார் - மாதர்கள், சந்தம்தந்து அப்பாது - சந்தனத்தைக் கொடுத்துப்பூசாமல், கனற்றுவர் - வெதும்பச்செய்கிறார்கள், அம்புவேள் தானொளிக்க - புஷ்பபாணத்தையுடைய மன்மதன் ஒளித்துக் கொள்ளும்படி, சரமுல்லை - முல்லைமாலையை, தா - கொடுத்தருள், சரதம்தப்பாது - சத்தியந்தவறாமல், வாலியைதாக்கி - வாலியைப் போரிட்டுவென்று, அவன்தம்பிக்கு - அவன் தம்பியாகிய சுக்கிரீவனுக்கு, கவிபட்டம்-வானரராஜபட்டத்தை, தந்து - கொடுத்து, தம் - தமது, தந்தப்பாதுகை - தந்தப்பாதுகையை, தம்பிக்குநல்கிய - தம்பியாகிய பரதனுக்குக்கொடுத்த, தாருவே - கற்பகத்தருவை நிகர்த்தவனே, வெங்கடேச ரெட்டேந்த்ரனே, எ - று.

பாதுகை - திருவடிநிலை, இதனைத் தம்பிக்குக் கொடுத்தது ஸ்ரீராமாவதாரத்தில்.

## தாயிரங்கல்.

5. கனதனந்தனதாவலினலந்தக்கனிக்குமாமலையாமிடைமின்னி
னும், சினதனந்தனமாற்கூறரிதரிதென்னுமல்குற்றிருவையணைகுவாய்
மனதனந்தனமாடைதமிழ்பகர்வாணர்க்கீந்துமகிழும்ப்ரதாபனே, தன
தனந்தனவென்றுடுவோருடங்கிவாழ் வெங்கடேசரெட்டேந்த்ரனே.

இ - ள். அந்தக் கன்னிக்கு - அந்தப்பெண்ணுக்கு, தனது ஆவலினால் - தன் விருப்பத்தால், கன தனம் - பாரமாகிய தனங்கள், மாமலை ஆம் - பெரிய மலைபோலும், இடை - இடையானது, மின்னினும் - மின்னற்கொடியினும், சின்னது - சிறியதாகும், அனந்தன் - ஆதிசேஷனும், நம்மால்கூறு - நம்மால் சொல்லப்படுதல், அரிதுஎன்னும் - அரிதென்று சொல்லும்படியான, அல்குல்-நிதம்பத்தையுடைய, திருவை அணைகுவாய் - திருமகள்போன்ற என்பெண்ணைத் தழுவுவாயாக, மனதுஅல்நந்து - மனோதுக்கம் கெடுதற்கேதுவாகிய,

அன்னம் - சோற்றையும், ஆடை - வஸ்திரத்தையும், தமிழ்பகர் - தமிழ்ப்பாடல்களைப்பாடுகிற, வாணர்க்கு - கவிவாணருக்கு, ஈந்து - கொடுத்து, மகிழும் - சந்தோஷிக்கிற, ப்ரதாபனே-கீர்த்தியையுடையவனே, தன தனந் தனஎன்று-தனதனந் தனஎன்று, ஆடுவோர் - நடனஞ்செய்வோராகிய சிவபெருமானது, அருள் தங்கிவாழ் - கிருபை குடியிருந்துவாழ்கின்ற, வெங்கடேசுரெட்டேந்த்ரனே, எ - று.

தலைவி யிரங்கல்.

6. இந்தக்காவனங்கற்கோர்கவிகையாயிருந்துகாந்துதியானென்னசெய்குவேன், பந்தக்காவலையம்மைகண்டப்பியெப்படியங்கேகுவன் பாங்கியென்றன்கலி, சிந்தக்காவனசந்திரசோமதியாகசற்குணபாகமனோகரா, சந்தக்காவனஞ்சூழிளசைப்பதித்தானமால்வெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். அந்தா - சமர்த்தையே, இந்து - சந்திரன், அநங்கற்கு - மன்மதனுக்கு, ஓர் - ஒப்பற்ற, கவிகையாயிருந்து - குடையாயிருந்து, காந்துது - எரிக்கின்றது, யான் என்னசெய்குவன் - நான் என்னசெய்வேன், பந்தம் காவல் - கட்டுக்காவலாகிய, எம் அம்மை கண் தப்பி - நம்தாயினது கண்ணுக்குத் தப்பி, அங்கு - அவ்விடத்துக்கு, எப்படி ஏகுவன் - எப்படிபோவேன், பாங்கி- தோழீ, என்றாள் - என்றுசொன்னாள், கலிசிந்த - இவளது வறுமை கெடும்படி, கா - காத்தருள், அன்னசந்திர சோம - அன்னசத்திர மமைத்துவைத்த சந்திரனே, தியாக - கொடையாளனே, சற்குணபாக - நற்குணத்தால் பரிபாகமடைந்தவனே, மனோகரா - மனக்களிப்பைத் தருபவனே, சந்தம் காவனம் சூழ் - சந்தனச்சோலைசூழ்ந்த, இளசைப்பதி - இளசை நகரத்தை, தானம் - இருப்பிடமாகவுடைய, மால் - பெருமையமைந்த, வெங்கடேசு ரெட்டேந்த்ரனே, எ - று.

செவிலிகூறல்.

7. இருபந்தந்தமென்னும் பொற்பயோதரமென்னசொல்ரதிக்கெண்மடங்கிவள், சொருபந்தந்தச்சிவிகையில்வந்தனள்சொந்தமாகவுவந்தணைவாய்சுடர், குருபந்தந்தமணியமெவற்புப்பெற்றித்தாய்த்துலங்கித்தணைநம்புவோர்க்கெலாம், நிருபந்தந்தமனதின்படிக்கருணேசனேவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். அந்தம் என்னும் - அழகாயிருக்கின்றன என்று சொல்லப்படுகிற, பொன்பயோதரம் - தேமல்படர்ந்த தனங்கள், இருபந்து - இரண்டு பந்துகளேயாம், என்னசொல்ல - (அவற்றின் ஏற்றத்தை) என்னென்று சொல்லட்டும், இவள்சொரூபம் - இந்தப்பெண்ணினது உருவம், ரதிக்கு - ரதிதேவிக்கு, எண்மடங்கு - (அழகால்) எட்டுப்பங்கு கொண்டிருப்பது, தந்தச்சிவிகை

யில்வந்தனள் - தந்தப்பல்லக்கி லேறிவந்தாள், சொந்தம்ஆக - உமது சொந்தக் காரியாக, உவந்து - சந்தோஷித்து, அணைவாய் - தழுவுவாய், சுடர்தருபந்தம்- ஒளியைத்தருகிறபந்தம், தமனியவெற்பு - பொன்மலை (இவற்றின்), பெற்றித் தாய் - தன்மையை யுடைத்தாய், தனை நம்புவோர்க்குஎல்லாம் - தன்னை நம்பு வோர்களுக்கெல்லாம், தம்தம் - தங்கள் தங்களுடைய, மனதின்படிக்கு - மன விருப்பத்தின்படி, கிருபம்அருள் - கிருபங்கொடுத்தருளின, நேசனே - அன் புடையானே, வெங்கடேச ரெட்டேந்திரனே, எ - று.

பந்தம் - தீவட்டி.

சேவிலிகூறல்

8. தருகலாதனங்கன்சமர்க்கோலஞ்சமைந்துபாணமெய்தான்பூவ லவர, கரகலாதனகும்பம்பொறுக்குமா கன்னியேயெனைக்கண்பாரென் றாள்புல, வரகலாதனன்மார்க்கசிலாக்கியமாவசந்ததியாக வீரா தயா, பிரகலாதனன்புள்ளத்திருந்தருள் பெருக்குமால்வெங்கடேசரெட்டே ந்த்ரனே.

இ - ள். தரு அகலாது - தருக்கள்நெருங்கிய மலர்ச்சோலையை நீங்காதி ருந்து, அனங்கன் - மன்மதன், சமர்க்கோலம்சமைந்து - யுத்தவேஷமமையப் பெற்று, பாணம்எய்தான் - பாணம்பிரயோகித்தான், பூஅல்ல - (அந்தப்பாண ங்கள்) மலர்களல்ல, அரகர - ஹரஹர, கல்லா - கற்களா, தனகும்பம்பொறு க்குமா - தனங்களாகிய குடங்கள் தாங்குமா, கன்னியே - பெண்ணே, என் னைக்கண்பார் என்றாள் - என்னைக் கண்பார்த்தருள வேண்டுமென்றாள், புல்ல வர கல்லாத - அணைக்க வரக்கல்லாத, நல்மார்க்க - நன்னெறியை யுடையவ னே, சிலாக்கிய - மேன்மையுடையவனே, மாவசந்த - அழகிய மன்மதனே, தியாக - கொடையாளனே, வீராதயா - வரத்திலுதவதரித்தவனே, பிரக லாதன் - பிரகலாதனுடைய, அன்பு உள்ளத்துஇருந்து - அன்புள்ளமனத் திலிருந்து, அருள்பெருக்கும் - கிருபையைப் பெருகச்செய்த, மால் - பெரிய, வெங்கடேச ரெட்டேந்திரனே, எ - று.

சேவிலிகூறல்.

9. மாதமந்திரணம்போலிருந்ததை மலைக்கொப்பாகவளர்த் தது மாரன்கைச், சூதமந்திரவோருகமாமதி சோர்ந்துதாளிந்தவேந்திழை வாடுமோ, போதமந்திரசக்கனியைக்கவ்விப் பொழிலிற்றுவும்புகழ்க்க பூகாசல, வேதமந்திரமெய்க்குகனைத்தொழும் வெங்கடேசரவெட்டம திரனே.

இ - ள். மாதமம் - பெரியஇருள், திரணம்போல் இருந்ததை - துரும்பு போலிருந்ததை, மாரன்கைசூதம் - மன்மதன் கையிலுள்ள மாமலர், அந்த இரவு - அந்த இரவானது, ஓர்உகம்ஆம்-ஒருயுகமாகச்செய்யும், (அதனால்) இந்த

எந்திழை - இந்தப்பெண்ணானவள், மதிசோர்ந்து - அறிவுமயங்கி, வாடுமோ - வாடுவாளோ, போத - மிகுதியாக, மந்தி - குரங்குகள், ரசம் கனியைகவ்வி- சுவையுள்ள பழங்களைக்கவ்விக்கொண்டு, பொழிலில் - சோலைகளில், தாவும்- தாண்டுகின்ற, புகழ் - கீர்த்தியையுடைய, கழுகாசலம் - கழுகாசலத்தி லெழுந்தருளியிருக்கிற, வேதமந்திரம்மெய் - வேதமந்திரப் பொருளாகிய, குகனை - முருகக்கடவுளை, தொழும் - வணங்குகின்ற, வேங்கடேசுரஎட்டம - வேங்கடேசுர எட்டமனாகிய, சீரனே - தைரியசாலியே, எ - று.

தலைவிகூற்று.

10. வருதுகட்டுமுட்டெல்லாங்கடந்துபூவாளிவேள்சயவாழிமுரசார, திருதுகட்டுவசனமல்லாமலைத்தென்றலாங்கொடுந்தேரைநடாத்தியே பொருதுகட்கிலதனத்திற்சாடவே பூங்கோதாடுத்தனன்சந்திரகாவிடால், விருதுகட்டுமதியாவிளைசைவாழ்வெங்கடேசுரெட்டேந்த்ரவசீரனே.

இ - ள். பூவாளி - புஷ்பபாணம், கட்டுமுட்டெல்லாம்கடந்து-கட்டுமுட்டெல்லாந்தாண்டி, வருது - வருகின்றது, சயம்ஆழி-ஆழமாகிய கடலென்கிற, வேள்முரசம் - மன்மதனதுபேரிகை, அதிருது - அதிராநின்றது, கட்டுவசனம்அல்ல - கட்டுவார்த்தையல்ல, மலை - பொதியமலையிற்பிறந்த, தென்றல்ஆம் தென்றற்காற்றாகிய, கொடும்தேர்நடாத்தி - கொடியரதத்தைநடாத்தி, பொருது - போர்செய்து, கண் துவசனத்தில்சாட - கண்களையுடைய இரண்டுதனங்களில் தாக்கும்படி, பூங்கோதுத்தனன் - புஷ்பபாணங்களைப் பிரயோகித்தான், சந்திரகாவி - சந்திரகாவிச் சாயம்தோய்ந்த, டால் - டாலென்கிற, விருதுகட்டும்-விருதுகட்டிக்கொண்ட, மதிபா - நிலவையனை, இளைசைவாழ் - இளைசைநகரத்தில் வாழ்கின்ற, வெங்கடேசுரெட்டேந்த்ர - வெங்கடேசுரெட்டேந்திரனென்னும், வசீரனே - மந்திரியே, எ - று.

செவிலியிரங்கல்.

11. தந்துகந்துகந்தாகந்தணிக்குநீர்த்தடமருங்குதனமல்குற்றையலே, முந்துகந்துகந்தாகணப்போழ்திலுன்மோகத்துத்துமொழிவனென்றேவந்தேன், வந்துகந்துகந்தாகழுகாசலவாசகாவெனவாழ்த்துமுன்பாகட்டுங், கந்துகந்துகந்தாகப்புரட்டுங்கடாசலாவெங்கடேசு ரெட்டேந்த்ரனே.

இ - ள். தந்து - நூலிழையும், கந்துகம் - பந்தும், தாகம் தணிக்கும்நீர்தடம் - தாகத்தை யடக்குகின்ற நீரையுடைய தடாகமும், ஆகிய இவை போன்ற, மருங்கு - இடையையும், தனம் - ஸ்தனங்களையும், அல்குல்-நிதம்பத்தையுமுடைய, தையல் - என்பெண்ணானவள், முந்து கந்து - முற்பட்டுசந்தோஷிக்க, கந்து ஆ - ஆதாரமாக, கணப்போழ்தில் - க்ஷணகாலத்தில், உன்மோகம் - உன்

விரகத்தைப்பற்றி, ஆதுமொழிவன் என்று - ஆதுசொல்வே னென்று, வந்தேன் - வந்தேன், வந்து - வந்து, கந்து - எங்களுக்குப் பற்றுக் கோடாகிய, கந்தாகந்தனே, கழுகாசலவாசா - கழுகாசலத்தில் வசிப்பவனே, கா என - காத்தருளென்று, வாழ்த்தும் - வாழ்த்துகின்ற, முன்பா - முதல்வனே, கட்டும் - கட்டப்படுகிற, கந்து - கட்டுத்தறியானது, கந்து கந்தாக - துணிக்கையாக, புரட்டும் - புரட்டுகின்ற, கடாசலா - யானைகளை யுடையவனே, வேங்கடேசுரெட்டேந்த்ரனே, எ-று

## தலைவியிரங்கல்.

12. நம்பரக்கரையானனாகிய நாதர்முன்புநமைவேண்டிச்செல்கவென், றும்பரக்கரையாயனுப்பத் தனதுருவிலாமதன்யுத்தத்துக்கென்செய்வேன், அம்பரக்கரையானதிற்பாளையமன்றிறங்கியடர்ந்திலங்காபுரி, வம்பரக்கரையாசுகத்தால் வென்றமாதவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். நம்பர் - நம்பரும், அக்கர் - அக்குமாலையை யுடையவரும், ஐ ஆனனர் ஆகிய - ஐந்து முகங்களை யுடையவருமாகிய, நாதர்முன்பு - சிவபெருமானுக் கெதிரில், நமைவேண்டி - எங்கள்பொருட்டு, செல்கவென்று - போகக்கடவையென்று, உம்பர் - தேவர்கள், அக்கரையாய் அனுப்ப - அக்கரையா யனுப்பப்போய், தனது உருவில்லா - தனதுவடிவமில்லாது திரும்பிவந்த, மதன்- மன்மதனது, யுத்தத்துக்கு - போருக்கு, என்செய்வேன் - யாது செய்யக்கடவேன், அம்பரம் - கடலின், கரை ஆனதில் - கரையில், பாளையம் - சேனை, அன்று இறங்கி - அந்நாளில் தங்கி, இலங்காபுரி - இலங்கைப்பட்டணத்தி லுள்ள, வம்பு - வம்புசெய்கிற, அரக்கரை - ராக்ஷஸரை, ஆசுகத்தால் - பாணத்தால், வென்ற - ஜயித்த, மாதவா-மாதவனே, வெங்கடேசுரெட்டேந்த்ரனே, -று.

## தலைவிகூற்று.

13 அத்தன்கண்ணுக்குத்தோற்றான் றன்மாதலாலரிபிரமாதிக்குந்தோற்றானவன்மகா, எத்தன்மாமனை யென்றுந்தமையனென்றே சொல்வோன்கணை யெய்யாமலெய்கின்றான், கத்தன்பூவுலகேழைபுமே பொருகலிகைகீழலிற்காத்தருளும்பரி, சுத்தமன்னுங்குமாரவெட்டேந்திரன்சோதராவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். அத்தன் - சிவபெருமானது, கண்ணுக்கு - நெருப்புக்கண்ணுக்கு, தோற்றான் - தோற்றவனாகிய மன்மதன், தன் மாது அல்லால் - தன்மனைவியாகிய ரதிதேவிக்கல்லாமல், அரிபிரமாதிக்கும்-விஷ்ணுபிரமாமுதலானவர்களுக்கும், தோற்றான் - காணப்படான், அவன் - அவன், மகாஎத்தன் - பெரியதந்திரக்காரன், மாமனை - லக்ஷ்மீநாதனாகிய விஷ்ணுவை, என்றும் - எப்பொழுதும், தம்ஐயன்என்றே சொல்வோன் - தம்தந்தையென்றே சொல்வோன், (அவன்) கணை - பாணங்களை, எய்யாமல் - இளைக்காமல், எய்கிறான் - என்மீதுஎ

ய்யாகின்றான், கர்த்தன் - கர்த்தனும், பூவலகு ஏழையும் - ஏழுலகங்களையும், ஒருகவிகை நீழலில் - ஒருகுடைநீழலில்வைத்து, காத்தருளும் - ரக்ஷித்தருளுகின்ற, பரிசுத்தன் - பரிசுத்தன், மன்னும் - நிலைபெற்ற, குமார எட்டேந்திரன் - குமார எட்டேந்திரன், (அவனுக்கு) சோதரா - சகோதரனே, வெங்கடேசுரெட்டேந்திரனே. எ - று.

தோழிகூறல்.

14. உமையபாகியைப்புநும் பிரான் வளரோங்கலேனரும் தனத்தாளுனைமகிழ்ந், தமையபாகியமாய்க் கூட்டிவாவென்று சொல்லி யென்னையுன்பால்விடுத்தாள் பொன்னவை, யமையபாரிற் சொரூபாவென்றீசனைத் தன்கையாற்றொழுதுங்கன் கைவிடனாற், கமையபாகி யருள்வல்லவா புகழாகராவெங்கடேசுரெட்டேந்திரனே.

இ - ள். உமைய பாங்கியை - இடபம் ராசியாகிய இடபத்தை, ஊரும் - ஏறிநடத்துகின்ற, பிரான் - சிவபெருமான், வளர் - வாழ்கின்ற, ஓங்கல் - மலையை, நேரும் - நிகர்க்கின்ற, தனத்தாள் - தனங்களையுடையவள், உன்னை - உன்னை, மகிழ்ந்து - மனமகிழ்ந்து, மைய - மெல்லென, ராசியமாய் - ரகசியமாய், கூட்டிவா என்று சொல்லி - அழைத்துவாவென்றுசொல்லி-என்னை - என்னை, உன்பால் விடுத்தாள் - உன்னிடத்தில் அனுப்பினாள், பொன் ஆர் சபை பொற்சபையையுடைய, பரா - பரனே, சொரூபா - ஞானசொரூபனே, என்று - என்று, ஈசனை - சிவபெருமானை, தன்கையால் தொழும் - தன்கையினால் அஞ்சலிக்கின்ற, துங்கன் - மேம்பாடுடைய, கை - கையினால், வீடணற்கு - விபீஷணனுக்கு, அமையபாகி - அபயமளித்து, அருள் - கிருபைசெய்த, வல்லவா - வல்லவனே, புகழ் ஆகரா - கீர்த்திக்குப் பிறப்பிடமாயுள்ளவனே, வெங்கடேசுரெட்டேந்திரனே. எ - று.

செவிலிகூறல்.

15. சங்கதாதரளங்கால் கமுகதாதன் கழுத்திணையென்றாட்குன்றாரின்று, துங்கதாதரத்தாமதஞ் செய்யிலத்தோகை தேகத்தைமாரன்வருத்துவான், அங்கதாதரநீதூது செல்லென்ற வாரியாரணவீர்யப்ரதாபனே, வெங்கதாதரவீரசெயதரா வெங்கடேசுர வெட்டமபூபனே.

இ - ள். தன்கழுத்து - தன்கழுத்துக்கு, இணை - சமானம், சங்கதா - சங்கா, தரளம்கால் - முத்துக்களையீனுகின்ற, கமுகதா - கமுகா, என்றாட்கு - என்று சொல்லப்பட்டவளுக்கு, உன்தார் - உன்மாலையை, இன்று - இப்பொழுது, துங்க - உயர்ந்தோனே, தா - கொடு, தர - கொடுத்தற்கு, தாமதம்செய்யில் - தாமதம்செய்தால், அத்தோகை - அந்தப்பெண்ணின், தேகத்தை - சரீரத்தை, மாரன் - மன்மதன், வருத்துவான் - உபத்திரவஞ்செய்வான், அங்கு - அவ்விடத்து, அது ஆதரம் - அதுஅவளுக்கு உன்மீதுள்ள விருப்பம், நீ தூது

செல்என்ற - நீ தூதுபோவென்று பாண்டவர்சொன்ன, ஆரியா - ஆரியனே, ரணவீரிய பிரதாபனே - ரணகளத்தில் வீரத்தன்மையைச் செலுத்துகின்ற பராக்கிரமத்தையுடையவனே, வெம் - கொடிய, கதாதர - கதையைத் தரித்த வனாகிய, வீம - வீமனே, ஜெயதரா - ஜெயங்கொண்டவனே, வெங்கடேசர எட்டம - வெங்கடேசர எட்டமன்என்கிற, பூபனே-பூபாலகனே, எ - று.

சேவிலிகூறல்.

16. பூவலாரைமுதலான கற்பங்கள்புரிந்திட்டை வசித்திருந் தாலுமென், ஆவலாரையும்விட்டுவிடா தந்தவரிப்பிர்மமாதிகளானலு ந்தானென்ன, மாவலாரைமலரதினலெய்யின் மங்கையுள்ளமயங்காதிருக் குமா, மேவலாரையடக்கிச்செயம்பெற்றவிசயனே வெங்கடேசரெட் டேந்த்ரனே.

இ - ள். பூ - உலகத்தில், வல்லாரைமுதலான கற்பங்கள் - வல்லாரை முதலான கற்பங்களை, புரிந்து - விரும்பியுண்டு, இட்டை - இஷ்டையில், வசி த்திருந்தாலும் - வீற்றிருந்தாலும், என் - என்னபயன், ஆவல் - ஆசையானது, ஆரையும் - எவரையும், விட்டுவிடாது - விட்டுநீங்காது, அந்தஅரிபிர்மாதிகளா னலும் தான் என்ன-அந்தவிஷ்ணுபிரமன் முதலியோரா யிருந்தாலுமென்ன, மாவல்லாரை - மிகவும் வல்லவராகிய சிவபெருமானை, மலரதினல் - புஷ்ப த்தினல், எய்யின் - மன்மதன் எய்துமயங்கச் செய்வானானல், மங்கை உள்ளம் இந்தப்பெண்ணின் மனம், மயங்காது இருக்குமா - மயக்கமடையாமலிருக்குமா மேவலாரைஅடக்கி-பகைவரை யடக்கி,ஜயம்பெற்ற - ஜயமடைந்த, விசயனே- வெற்றியாளனே, வெங்கடேசரெட்டேந்த்ரனே, எ - று.

தாயிரங்கல்.

17. அஞ்சக்கஞ்சனங்கைபாலகனந்தசோகமேவவடரவிடுகுமு, தஞ்சக்கஞ்சன மெல்லாங்கரைத்திருதனத்தைநீலத்தடவரையாக்கமா ன், மிஞ்சக்கஞ்சனந்தாழக்குலுக்குமெய்ம்மின்னைமேவிவிரகந்தணித் திடாய், வஞ்சக்கஞ்சனகத்தைத் தணித்தவாவாசவா வெங்கடேசரெ ட்டேந்த்ரனே.

இ - ள். அஞ்ச - பயப்படும்படி, கஞ்சநங்கை - பூமகளாகிய லக்ஷ்மிக்கு, பாலகன் - புதல்வனாகிய மன்மதன், அந்தசோகம்மேவ - அந்தவிரகதுக்கம்உண் டாம்படி, அடரவிடு - நெருங்க விடுகின்ற, குமுதம் - குமுதமலரானது, சக்கு- கண்ணிலுள்ள, அஞ்சநம் எல்லாம்கரைத்து - அஞ்சனமுழுதையுங் கரையப்ப ண்ணி, இருதனத்தை - இரண்டுஸ்தனங்களையும், தடம்-பெரிய, நீலவரை ஆக் க - நீலமலைகளாகச் செய்ய, மால்மிஞ்ச - ஆசைஅதிகரிக்க,கஞ்சனம்தாழ,கண் ணடியும்(ஒளிக்குத்தோற்று) வணங்கும்படி, குலுங்கும் - குலுக்குகின்ற, மெய் - சரீரத்தையுடைய,மின்னை - மின்போல்வாளாகிய என்பெண்ணை,மேவி-தழுவி,

### செவிலிகூறல்

24. அரிசிராவணத்தாலடைத்துந்தொனியமருதில்லையதை முனி யுண்ணவும், கரிசிராவகலப்பகலோன்வருங்காலமானதெக்காலமென்று டரும்,பரிசிராமுழுவோபகுடாரிநீபாரவில்வளைத்துக்கரதூஷண,திரிசி ராவிழவோர்பாணந்தொட்டவாசிதராவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். அரி - கடலாகிய, அதை - அதனை, முனிஉண்ணவும் - அகத்தி யமுனிவன் ஆசமநம்பண்ணவும், சிராவணத்தால் அடைத்தும் - கற்களால் அ டைத்தும், தொனி அமருதில்லை - ஓசையடங்கவில்லை, கரிசு - துன்பத்தைச் செய்கிற, இரா அகல - இரவானது நீங்கும்படி, பகலோன் - சூரியன், வருங்கா லம் ஆனது - வருகிறகாலமானது, எக்காலம் என்றாள் - எக்காலமென்றாள். தரும்பரிசு இரா - கொடுக்குந் தன்மையில்லாத, முழுலோபர் - முழுலோபிக ளுக்கு, குடாரிநீ - கோடரி நீ, பாரவில்வளைத்து - பெரியவில்லை வளைத்து, க ரதூஷணதிரிசிரா - கரதூஷண திரிசிரசுக்கள், விழ - மடிந்து விழும்படி, ஓர் பாணம் தொட்டவா - ஒப்பற்ற பாணங்களைப் பிரயோகித்தவனே, சிதரா - ஸ்ரீ தரனே, வெங்கடேசுரனே, எ - று.

### செவிலிகூறல்.

25. தொடுக்கவத்திரம்வேளதுதானிந்தத்தேகமெய்யைத்துளை த்துருவவே, கடுக்கவத்திரன்மேல்விழுமீயெனக்கலங்குவாட்குன்ன லங்கலின்றீகுவாய், இடுக்கவத்திரங்காவென்றழைக்கவந்திடங்கரைத் திகிரிக்கிரையிட்டவா, உடுக்கவத்திரமில்லாதவர்க்கருளுத்தமா வெங் கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். வேள் - மன்மதனானவன், அத்திரம்தொடுக்க - பாணத்தைப் பிர யோகிக்க, அதுதான் - அந்தபாணந்தான், இந்தத்தேகமெய்யை - இந்தப்பெ ண்ணினது சரீரத்தை, துளைத்து - தொளைத்து, ஊடுருவ - உள்ளே யுருவி ப்போக, கடு - கடுமையாகிய, கவத்திரன்மேல் விழும் - கபத்திரன்மீது விழுகி ன்ற, ஈ என - ஈயைப்போல, கலங்குவாட்கு - கலங்குபவளுக்கு, உன் அலங்க ல் - உன்மாலையை, இன்றுஈகுவாய் - இன்று தருவாயாக, இடுக்கவத்திரம் - சி றியமுகத்தை யுடையயானை, கா என்று அழைக்க - காக்கவேண்டுமென்றழைக் க, வந்து - அதற்கெதிரேவந்து, இடங்கரை - (அதைக்கவ்விப்பற்றின) முதலை யை, திகிரிக்கு - சக்ராயுதத்துக்கு, இரையிட்டவா - உணவாக்கினவனே, உடு க்க - உடுத்துக்கொள்ள, வத்திரம் இல்லாதவர்க்கு - ஆடையில்லாதவர்களுக்கு, அருள் - அருள் செய்த, உத்தமா - உத்தமனே, வெங்கடேசுரனே, எ - று.

### தலைவியிரங்கல்.

26. சீதமாரம்பனங்கன்றொட்டான்றனத்தினைத்துளைத்துத்தடா ரிக்குதந்தம்பு, சூதமாரம்பம்ராமராமாவெனசொல்லுமேலன்சந்துசொ ல்லவிம்மாதர்க்குள், நீதமாரம்பலாதி செய்வாரென்றன்னே மக்காமந்

தணிமூலமென்னவே, போதமாரம்பஞ்செய்யமுன்வந்தவாபோதனே வெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். சீதம்ஆர் - குளிர்ச்சிபொருந்திய, அம்பு - புஷ்பபாணங்களை, அநங்கன் தொட்டான் - மன்மதன் எவினான், அந்த அம்பு - அந்தபாணம், தனத்தினை தொளைத்து - தனத்தைத்துளைத்து, நடாவிக்குது - உருவிப்போகின்றது, குதமா - இதுமாமலர்ப் பாணமா, ரம்பம் - வாளேயாம், ராமராமா - ராமராமா, என்னசொல்லுவேன் - யாதுசொல்லுவேன், ஈதுசொல்ல - ஆதுசொல்ல, இமாதர்க்குள் - இந்தப் பெண்களுக்குள்ளே, சீசம்து - வியதமாக ஏற்படுத்துதற் குரியவர்யாவர், அம்பல் ஆதிசெய்வார் - அலர்தூற்றுதல் முதலானவற்றைச் செய்வார்கள், என்றன் - என்னுடைய, நியமகாமம் - நியமமாகிய காமத்தை, தணி - தணிவிப்பாயாக, மூலம் என்ன - ஆதிமூலமேயென்று, போதம் - யானையானது, ஆரம்பஞ்செய்ய - கூவிட்டக, முன்வந்தவா - முற்காலத்தில் அதற்கெதிராக வந்தவனே, போதனே - போதகனே, வெங்கடேசுரனே, எ - று.

செவிலிகூறல்.

27. பூசுசந்தந்தனத்திற்பொரிந்ததுபொருக்கெழப்பிப்பூவைதன்பாலுக்கே, நீசுகந்தந்தடங்கலின்றித்தரமேமெய்செய்திவள்காமந்தணித்திடாய், தேசுகந்தந்தராவணன்சேய்தலைசிக்கெனக்கொண்டுவாவென்றிலக்குவற், காசுகந்தந்தராமபெரும்புகழாகரா வெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். தனத்தில் - தனங்களில், பூசு - பூசப்பட்ட, சந்தம் - சந்தனமானது, பொருக்கெழுந்து - பொருக்குகளாயெழும்பி, பொரிந்தது - பொரிந்துபோயிற்று, இப்பூவை தன்பாலுக்கு - இந்தப்பெண்ணின் ஆசைக்கு, நீசுகந்தந்து - நீயின்பத்தைக் கொடுத்து, அடங்கலின்று - அடங்குதலில்லை, இத்தரம் - இந்தத்தடவை, மெய்செய்து - மெய்யாகவினி, இவள் காமம் - இவளுடைய காமத்தை, தணித்திடாய் - தணியப்பண்ணுவாயாக, தேசுகந்து - புகழைவிரும்பி, அந்தராவணன் சேய் - அந்தராவணன் மகனாகிய இந்திரசித்துடைய, தலை - தலையை, சிக்கென - விரைவாக, கொண்டுவா என்று - கொண்டுவரக் கடவையென்று, இலக்குவற்கு - லக்ஷ்மணனுக்கு, ஆசுகந்தந்த - பாணத்தைக் கொடுத்த, ராமா - ஸ்ரீராமனே, பெரும்புகழ் - பெருமகிமைக்கு, ஆகரா - பிறப்பிடமாயிருப்பவனே, வெங்கடேசுரனே, எ - று.

தாயிரங்கல்.

28. பொருப்புக்குஞ்சரியாகப்புடைத்தெழும்பூண் முலைக்கன்னி மீதேசமர்செய்யத், திருப்புக்குஞ்சரியேறிமெய்யெங்கணுந்துளைக்கமாரன்வளைக்கவன்செங்கைக், கருப்புக்குஞ்சரிசாமகிழுந்திங்கட்குடைக்குங்கலங்குவளோமன, விருப்புக்குஞ்சரிகாந்தற்குவைத்தவாவீரனேவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

நீக்குவதாகும், அகு அடையாதவா - குற்றஞ் சேராதவனே, இன்னம் - இன்னமும், துராகதம் சொல்லும் - வசவுகளைச் சொல்லுகின்ற. அன்னை வாயை - தாயின்வாயை, அடக்குவது -அடக்கப்பண்ணுவது. ஆர் - யார், மலர் - மலர்களையுடைய, சீதம் - குளிர்ச்சிபொருந்திய, வாவி - தடாகத்திலுள்ள,நந்து - சங்கமே, அம் கந்தரம் - அழகிய கழுத்தாம், எனும் - என்று சொல்லுதற்குரிய, செல்விக்கு - என்பெண்ணுக்கு, ஓர் மொழிசொல்லி - ஒரு உறுதிவார்த்தைசொல்லி, அணைந்திடாய் - தழுவுவாயாக, பேர் - மிகுதியாக, ஆ இனம் - பசுக்கூட்டத்தை, காத்தருள் - காத்துரக்ஷித்த. மாதவா - மாதவனே, போஜனே-போஜராஜனே, வெங்கடேசுர எட்டேந்த்ரனே. எ - று.

தாயிரங்கல்.

33. இருதனங்கனிக்குச்சிலைபோற்புடைத்தெழுந்துவிம்மியிறுபாந்திடக்கயல், விருதனங்கனிக்குச்சிலைவாங்கிமாவிசைகொண்டுருவிப்பாயவாளியாற், பொருதனங்கனிவர்க்கமுண்ணாமன்மால் பூண்டிருக்கச்செய்தான்றமிழ்வாணர்க்கு, வருதனங்கனிவாய்த்தருமன்னவாவாசவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். இருதனம் - இரண்டு ஸ்தனங்களும், கன்னிக்கு - என்பெண்ணுக்கு, சிலை போல் - மலைபோல், புடைத்து எழுந்து - புடைகொண்டெழுந்து, விம்மி - பருத்து, இறுபாந்திட - நெருக்க, கயல் விருது - சேற்கொடியாகிய விருதையுடைய, அனங்கன் - மன்மதன், கருப்பு சிலை - கரும்புவில்லை, வாங்கி-வளைத்து,மாவிசைகொண்டு - மிகுதியாகிய வேகங்கொண்டு,உருவிப்பாய-உள்ளே உருவிப்பாயும்படி, வாளியால் - புஷ்பபாணத்தால், பொருது - போர்செய்து, அனம்-அன்னத்தையும், கனி வர்க்கம்-பழவர்க்கங்களையும், உண்ணாமல்-உண்ணவொட்டாமல்,மால்பூண்டிருக்க-காமமயக்கத்தைக் கொண்டிருக்கும்படிசெய்தான் - பண்ணினான், தமிழ் வாணர்க்கு-தமிழ்ப்புலவருக்கு, வரு - விர்த்தியடைவதற்குரிய, தனம் - செல்வத்தை, கனிவாய் - மனவிரக்கத்தோடு, தரும் - கொடுக்கின்ற, மன்னவா - வேந்தனே, வாசவா - இந்திரனே, வெங்கடேசுரெட்டேந்த்ரனே, எ - று.

தாயிரங்கல்.

34. என்னிலங்குச்சலராசராசருக்கேற்றதாமவரிங்கேவரநீபோய், முன்னிலங்குநங்காரியம்யாவதுமொழியென்றாள்பைங்கிளிதான்மருவுவாய், நன்னிலங்குவலயத்திலீதெனநாட்டுங்தென்கருக்கோட்டைக்கதிபனே, பொன்னிலங்குமணிமார்பனேதிடபோசனேவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். பைங்கிளிதான் - பச்சைக்கிளிபோன்ற என் பெண்தான், என் இல்லம் - என்வீடு, குச்சு அல்ல-குச்சுவீடல்ல, ராசராசருக்கு - அரசர்க்கர

இ - ள். மெல் நடை - மிருதுவாகிய நடையானது, கஞ்சர் - பிரமதேவரது, அஞ்சப் பெடைபோலும் - அன்னப்பெடையை நிகர்த்திருக்கின்றது, கமலம் தாள் - தாமரைமலர்போன்ற பாதங்கள், பஞ்சு - செம்பஞ்சுபோன்றது, இரு கண் இணை ஆனது - பெரிதாகிய இரண்டு கண்கள், அரம் - அரத்தை நிகர்க்கின்றன, உரை - சொல்லானது, சர்க்கரை - சர்க்கரையையும், அட்டு - வெல்லப்பாகையும் நிகர்க்கின்றது: (இப்படிப்பட்ட இவளுடைய) முலைப்பருப்பதத்தில் - மலைபோன்ற ஸ்தனங்களின்மீது, அறுபதத்தான் - வண்டுநாணையுடைய மன்மதன், வெம்சரம் - கொடிதாகிய பாணங்களை, தொட்டான் - பிரயோகித்தான், (ஆதலால்) சப்ரமஞ்சகோளைமீது இருந்து - சப்ரமஞ்சகோளைமேலிருந்து, இந்தமின்றனை - இந்தமின் கொடிபோல்வாளை, மேவுவாய் - தழுவுவாயாக, வஞ்சர் - வஞ்சகர், அஞ்ச - அஞ்சும்படி, பொருப - போர்செய்கின்ற, செயம் - வெற்றியையுடைய, தோர்த்தண்டா - புயங்களையுடையவனே, வாசவா - வாசவனே, வெங்கடேசுரனே, எ - று.

சப்ரமஞ்சகோளை - வட்டக்கட்டில்.

செவிலிகூறல்.

37. மாமனுக்குமகனாகவந்த காமனுக்கும்பெற்றுவளர்த்தவட்குங்கலைச், சோமனுக்குநினைத்தார்க்குமஞ்சிமெய்சோர்ந்து வாடினள்சேர்ந்தணைவாயினி, தாமனுக்குமினியகுமாரெட்டதருமனுக்குங்குமாரமுத்தேந்திர, பூமனுக்குஞ்சகோதரனே திடபோசனே வெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். மா - திருமகளுக்கு, மன்னுக்கு - நாயகனாகிய விஷ்ணுவுக்கு, மகன் ஆகவந்த - புதல்வனாகத் தோன்றின, காமனுக்கும் - மன்மதனுக்கும், பெற்றுவளர்த்தவட்கும் - பெற்றுவளர்த்த தாய்க்கும், கலைச்சோமனுக்கும் - கலைகளையுடைய சந்திரனுக்கும், நினைத்தார்க்கும் - உறவினர்க்கும், அஞ்சி - பயந்து, மெய்சோர்ந்து வாடினள் - உடலயர்ந்து வாடுகிறாள், (ஆதலால் இவளை) இனி சேர்ந்து அணைவாய் - இனிக்கூடித் தழுவுவாய், தாமனுக்கும் - தாமனென்பவனுக்கும், இனிய - இனிதாகிய, குமாரெட்ட தருமனுக்கும் - குமாரெட்ட தருமனென்பவனுக்கும், குமார முத்தேந்திரன் - குமார முத்தேந்திரனென்கிற, பூமனுக்கும் - பூபாலனுக்கும், சகோதரனே - சகோதரனே, திடபோசனே - திடத்தையுடைய போஜராஜனே, வெங்கடேசுரனே, எ - று.

தாயிரங்கல்.

38. என்னவாவிதுராசியமா நடையேலுமாமகள் காலொடுகொன் மிகப், பின்னவாவிதுரானவறாவலா பிரயணிப்படிச் செய்தானென்று ர்கள்வாய், கொன்னவாவிதுராகத்தென்றிசை குடிபுகக்கையிற் கோதண்டம்வாங்கிய, மன்னவாவிதுராபுகழாகராவாசவா வெங்கடேசுரெட்டேந்த்ரனே.

**இ - ள்.** மதன் - மன்மதனானவன், தராதரம் கண்டா - தராதரம்பார்த்தா, சரம்விடுத்தான் - பாணமேவினான், எனது குழந்தை - என்குழந்தையானவள், தனியே - தனியாகவே, மால்பரந்து - ஆசை அதிகரித்து, அரா-அரனே, தரளக்கச்சு - முத்துக்கச்சினால், இறுக்கும் - இறுக்கிக்கட்டுகிற, பொற்புஊர் - அழகுபொருந்திய, பயோதரபாரத்தை - ஸ்தனபாரத்தை, தாங்க - சுமக்க, உரம்தராது - பலந்தராது, அரவம்போல் - சர்ப்பம்போல், துவள் - துவளாநின்ற, மருங்கு - இடையானது, ஒசியும் - ஒடியும், (ஆதலால்) உள்ளம்வசியாய் - (இவளது) மனத்தை வசீகரிப்பாய், அணைந்திடாய் - தழுவுவாய், புரந்தரா - புரந்தரனே, தரணிக்கு அதிபா - பூமிக்குஅதிபனே, ஜெயபூதரா - ஜயமலையையுடையவனே, வெங்கடேச ரெட்டேந்திரனே, எ - று.

முத்துக்கச்சு - முத்துவேலையமைந்த கச்சு.

செவிலிகூறல்.

41. பீலிக்குஞ்சரவங்களைக் கொத்திப்பிடிக்குந்ததாக்கப் பெரும்பகையின்றிக்காலிக்குஞ்சரபஞ்சிங்கமீதுசென்றடிப்பபோல்வந்தடிக்குதுதாயென்ற, கீலிக்குஞ்சரசமேபோலாச் சிலையினையுங்காணுங்கனவுமிங்கேயொரு, வாலிக்குஞ்சரமேவியராகவா வாசவாவெங்கடேசரெட்டேந்திரனே.

**இ - ள்.** பெரும்பகை இன்றி - பெரும்பகையில்லாமலே, பீலிக்குஞ்சு - மயிற்குஞ்சுகள், கால் - காலினால், அரவங்களை - பாம்புகளை, கொத்தி - மூக்கினால்கொத்தி, பிடித்து - பற்றி, தின்றும் அடக்கும், (அதுபோலவும்) ஆலிக்கும் - ஆரவாரிக்கின்ற, சரபம் - சரபமானது, சிங்கமீது - சிங்கத்தின்மேல், சென்று அடிப்பபோல் - சென்றடிப்பதுபோல, கால் - தென்றற்காற்றானது, வந்து அடிக்குது - என்மீதுவந்து மோதுகின்றது, தாயென்றகீலிக்கும் - தாயென்று சொல்லப்பட்ட கீலிக்கும், சரசமேபோலாக்கும் - சரசவார்த்தைகளுமுண்டாயின, இவள்சிலையும் - இவள்நிலையும், காணுங்கனவும் - காண்கின்ற சொப்பனமும், இங்கே - இப்படியே, ஒருவாலிக்கும் - ஒப்பற்ற வாலியின் மீதும், சரம்ஏவிய - பாணம்பிரயோகித்த, ராகவா - ராகவனே, வாசவா - இந்திரனே, வெங்கடேசரனே, எ - று.

செவிலிகூறல்.

42. அராவுக்கேகண்ணையே செவியென்பரதல்ல பெற்றவனைக்கே மின்னுருப்வம், பராவுக்கேகண்ணையே குழலாக்கியபண்ணுக்கேநொந்த பெண்ணுக்கிரங்கியின், றிராவுக்கே கண்ணேறிசென்றிருந்து நல்லின்ப லீலைசெய்தன்பாய்மருவுவாய், மராவுக்கே கணையேவியராகவா வாசவா வெங்கடேசரெட்டேந்திரனே.

**இ - ள்.** அராவுக்கே - பாம்புக்கே, கண்ணையே செவி என்பர் - கண்ணையே செவியாகக் கொண்டிருப்பதென்பர், அது அல்ல - அதுசரியல்ல, பெற்ற

அத்தருடன் கலந்து, அணியவில்லை - பூசவில்லை, அதற்குமுன் - அதற்குமுன்னே, மாரன் - மன்மதன், போர்முடிக்க - போரை முடிக்க, இல்லைவளைத்தால்- வீட்டைவளைத்தானுனல், குழந்தைதான் - என்பெண்தான், மோகம் தாங்க- மோகத்தைப்பொறுக்க, முடியாது - முடியாது, ஒன்னார்-பகைவர், துடிதுடிக்க- மிகவும் துடிக்கும்படி, வில்லை வளைக்கும்-வில்லைவளைக்கிற, அகோர - உக்கிரனே, உத்துங்கனே - உயர்ந்தோனே, வெங்கடேசரெட்டேந்த்ரனே, எ - று.

செவிலிகூறல்.

45. மஞ்சலக்கணங்கள் உறவேகட்டிமருவுதற்குளவாவைத்திருக்குநாள், அஞ்சலக்கணமாதர்க்கேதெரியுநின் னுவேவைவடங்காதிரங்காதவன், னெஞ்சலக்கணம்பெற்றிடின் வெண்ணெயாநிலைவிலைவந்து கலவிசெய்வாயையா, பஞ்சலக்கண முத்தமிழாகரபாலிதா வெங்கடேசரெட்டேந்த்ரனே.

இ - ள். மஞ்சு அலங்கு - அழகு விளங்குகின்ற, அணங்கு - தெய்வப்பெண்போல்பவள், அன்பு உற - அன்புமருகும்படி, கட்டிமருவுதற்கு - கட்டித் தழுவுதற்கு, உள் அவா வைத்து இருக்கும் நாள் - மனவிருப்பம் வைத்திருக்கும் நாள், அஞ்சு - ஐந்து, அலக்கண் - அவளுடைய துன்பம், நல்லார்க்கே தெரியும் - மாதருக்கேதெரியும், நின் ஆவல்லா அடங்காது - உன் ஆசையோ தணியாது, இரங்கா - இரக்கமுண்டாகாது, வல்நெஞ்சு அல்ல - கடினமனமல்ல, கணப்பெற்றிடின் - கணநேரத்தில், வெண்ணெய் ஆம் - வெண்ணெய்போலுருகிவிடும், நிலைவில்வந்து-நிலைவில்வந்து, கலவிசெய்வாய்-புணர்ச்சி செய்வாய், ஐயனே—, பஞ்சலக்கணம்-பஞ்சலக்கணங்களோடு கூடிய, முத்தமிழ் - முத்தமிழுக்கும், ஆகரபாலிதா-பிறப்பிடமாய் வசனிக்கிறவனே, வெங்கடேசுரனே, எ-று.

தாயிரங்கல்.

46. சத்திக்கும்பணிலக்கையினன் பெற்றதநயன்போர்க்கு விநயமின்னைச்சு, மத்திக்கும்பணியாய்நிரைத்துச்சரமாரி பெய்யவென்மானுரைத்தானுரைக்,கத்திக்கும்பணிசோர்ந்ததுங்காண்கிலாள்காதல்தீரவிப்போதணைவாயையா, எத்திக்கும் பணிவேந்தமகாமண்டலேசுராவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். சத்திக்கும் - ஒலிக்கின்ற, பணிலம் - சங்கையேந்திய, கையினன் - கையை யுடையவனுகிய திருமால், பெற்ற - ஈன்ற, தநயன் - புதல்வனுகிய மன்மதன், போர்க்கு - யுத்தத்துக்கு, விநயமின்னைசுமத்தி - வஞ்சகத்தையுடைய மாதரைச் சுமப்பித்து, கும்பு அணியாய்நிரைத்து - கும்பாகவும் வரிசையாகவும்சோடித்து, சரமாரிபெய்ய-பாண மழையைப்பொழிய, என் மான், என்பெண்ணுனவள், உரைக்க - பேச, திக்கும் - குழறுவாள், பணி சோர்ந்ததும் காண்கிலாள் - ஆபரணம் கழன்றதையும் நோக்கிலள், காதல்தீர- இவளுடைய ஆசையடங்கும்படி, இப்போது அணைவாய் - இப்பொழுது தழுவ

வாய், ஐயா - ஐயனே, எத்திக்கும் - எந்தத் திசையிலுள்ளாரும், பணி - வணங்குகிற, வேந்த - அரசனே, மகாமண்டலேசுவரா - மகாமண்டலேசுரனே, வெங்கடேசுரனே, எ - று.

சேவிலிகூறல்.

47. தனதுமெய்க்குமரனையானதுழலிறைக்குந் தனச்சுமையாலிடை, மினதுமெய்க்குந் துவளும்மானந்தமோகனைக்கும்வெகுமிச்சநானுண்மை. சொனதுமெய்க்குமரன் பொற்பதாம் புயந்தொழுந்தொழும்பன்குமாரெட்டபாண்டியன், மனதுமெய்க்குமுயிர்த்துணைவா புகழ்வாசவாவெங்கடேசுரெட்டேந்திரனே.

இ - ள். மலர் அனையானது - புஷ்பசமானமானது, தனது மெய்க்கு - தன்னுடம்பின்மேல், சுழல் இறைக்கும் - சிந்துகின்றவியர்வை, தனச்சுமையால் - தனங்களின் பளுவினால் - மின்னது இடையும் - மின்போல்வானது இடையும், எய்க்கும் - இளைக்கும், துவளும் - துவளாநிற்கும், இம்மான்-இந்தப்பெண், அந்த மோகனைக்கும் - அந்த மோகனையையாரேனிலும், வெகு மிச்சம் - மிகவும் அதிகம், நான் சொன்னது உண்மை - நான் சொன்னதும் மெய், குமரன் - முருகக்கடவுளுடைய, பொன் - அழகாகிய, பதாம் புயம் - பாததாமரையை, தொழும் - வணங்குகிற, தொழும்பன் - அடியனாகிய, குமாரெட்ட பாண்டியன் - குமாரெட்டபாண்டியனுடைய, மனது மெய்க்கும் - மனம் மெச்சுகின்ற, உயிர்த்துணைவா - உயிர்த்துணைவனே, புகழ் வாசவா - கீர்த்தியையுடைய இந்திரனே, வெங்கடேசுரெட்டேந்திரனே, எ - று.

சேவிலிகூறல்.

48. இட்டங்கட்டியவாறேயல்லாதுவேறில்லை சிந்தையிதெல்லாஞ்சுவாமியதிட்டங்கட்டியபரஞ்சியாற்செய்தசித்ரமஞ்சத்திற் சேர்வாய்தினஞ்சட்டவட்டங்கட்டியங்கக் குடிக்கின்றராவணனைவென்றன் புவைத்தவன் றம்பிக்கும், பட்டங்கட்டிய ராமநவரச பாஷிதாவெங்கடேசுரெட்டேந்த்ரனே.

இ - ள். இட்டம் கட்டியவாறே அல்லாது - இஷ்டமான வழியேயல்லது-வேறு சிந்தை இல்லை - வேறுமனக்கவலையில்லை, இது எல்லாம் - இதுமுழுதும், சுவாமி அதிட்டம் - சுவாமி அதிஷ்டமேயாம், கட்டி அபரஞ்சியால் செய்த - தங்கக்கட்டியாற் செய்யப்பட்ட, சித்ரமஞ்சத்தில் - ஆச்சரியகரமான கட்டிலில், சேர்வாய் - (இவளைக்) கூடுவாய், தினம் - நாள்தோறும், சட்ட வட்டம் - சட்டவட்டமாக, கள் - கள்ளை, தியங்க - மயங்கும்படி, குடிக்கின்ற - குடிக்கிற, ராவணனைவென்று - ராவணனைஜெயித்து, அவன் தம்பிக்கு - அவன் தம்பியாகிய விபீஷணன்மேல், அன்புவைத்து - தயைவைத்து, பட்டங்கட்டிய-பட்டங்கட்டின, ராமா - ஸ்ரீராமனே, நவரச பாஷிதா - நவரசமொழுகப் பேசுவோனே, வெங்கடேசுரெட்டேந்த்ரனே, எ - று.

ராக்ஷஸர்கட்குடியிற் சிறந்தோராதலால், "கட்டியங்கக் குடிக்கின்ற ராவணனை என்றார்."

# பலபட்டடைச் சொக்கநாதப்புலவர் பாடல்.

---

## திருக்குடந்தை ஈச்சுரர்மேற் பாடியது.

1. நின்றுபடியளக்குநீலக்கொடிகளிரண்
டென்றுமுளவாங்குடந்தையீச்சுரற்குக் - கொன்றுக்
குரைக்குமரையீந்தாரொன்றதனுக்கென்னோ
அரைக்குமரையீயாரவர்.

இ - ள். குடந்தை ஈச்சுரற்கு - திருக்குடந்தையி லெழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்கு, நின்று படியளக்கும் - நிலைத்திருந்து படியளக்கின்ற, நீலக்கொடிகள் இரண்டு - இரண்டு நீலக்கொடிகள், என்றும் உள ஆம் - எக்காலத்தும் உள்ளனவாம், அவர் - அந்தச் சிவபெருமானவர், ஒன்றுக்கு - ஒரு கொடிக்கு, உரைக்கும் அரை ஈந்தார் - சொல்லப்பட்ட அரைப்பங்கைக் கொடுத்தார், ஒன்றதனுக்கு - ஒருகொடிக்கு, என்னோ - யாதுகாரணத்தாலோ, அரைக்கும் அரை ஈயார் - அரைக்கரையையுங்கொடார், எ - று.

நீலக்கொடிகள் இரண்டாவன - நீலநிறமுள்ள கொடிபோல் வாளாகிய உமாதேவியும் நீலநிறமுள்ள கொடியாகிய திருமாலும். படியளத்தலாவது - முறையே இருநாழிநெல்லைக்கொண்டு முப்பத்திரண்டு அறங்களையும் வழுவாமல் செய்து உயிர்களைக்காத்தலும், பூமியை யளத்தலும். குடந்தையீச்சுரர் - கும்பேச்சுரர். அரையீந்தார் என்பதற்கு தமது திருமேனியில் அரைப்பாகத்தை யீந்தாரென்றும், அரைக்கு அரையீயார் என்பதற்கு காற்பங்கையும் கொடார் என்றும் காலையும் ஈயார் என்றும் பொருள் கொள்க. கால் - திருவடி. இதனை ஈயாதிருந்தது வராகவுருக்கொண்டு நிலத்தைக் கிழித்துச் சென்றபோது.

## சிதம்பரேச்சுரர்மீது பாடியது.

2. எடுத்தசனனங்கடோறுமீன்றெடுத்ததாய்மார்
கொடுத்தமுலைப்பாலனைத்துங்கூட்டில் - அடுத்தமணிப்
பைந்நாகணைத் துயின்மால்பாலாழியுஞ்சிறிதாம்
மன்னுசிதம்பரதேவா.

இ - ள். மன்னு - இறைவனே, சிதம்பரதேவா - சிதம்பரதேவனே, எடுத்த சனனங்கள் தொறும் - நானெடுத்த பிறவிகள்தோறும், ஈன்றெடுத்த தாய்மார் - என்னைப் பெற்றெடுத்த தாய்மார், கொடுத்த முலைப்பால் அனைத்தும் கூட்டில் - எனக்குக்கொடுத்த முலைப்பால் முழுதும் ஒன்றாகச்சேர்த்தால், அடுத்த மணி பைநாகணை துயில்மால் - ஏற்ற மாணிக்கமுள்ள படத்தையுடைய சர்ப்பசயனத்தில் நித்திரைசெய்கின்ற திருமாலின், பால் ஆழியும் சிறிது ஆம் - பாற்கடலும் அளவில் குறைவாகும், எ - று.

நான் உண்டதாய் முலைப்பால் பாற்கடலினும் அதிகமாகும் என்பதற்கு நானெடுத்த பிறவிகளுக்கு ஓரெல்லையில்லை யென்பது கருத்து.

திருமறைக்காட்டுச் சிவபெருமான்மீது பாடியது.

தாய் கூறல்.

3. பாணியிலே புள்ளிமான் பாகத்தே பச்சைமான்
வேணிதனிலேயோர் வெள்ளைமான் - காணுமலர்ச்
செய்யாளுலவுந் திருமறைக்காட்டீசரே
எம்மானுக் கெங்கேயிடம்.

இ - ள். காணும் - காணப்படுகிற, மலர் - தாமரைமலரில் வசிக்கிற, செய்யாள் - திருமகள், உலவும் - உலாவுகிற, திருமறைக்காட்டீசரே - வேதாரணியேச்சுரரே, (உமக்கு) பாணியிலே புள்ளிமான் - இடக்கையிலே புள்ளிமானிருக்கின்றது, பாகத்தே பச்சைமான் - பாகத்தில் பச்சைமானிருக்கின்றது, வேணிதனிலே ஓர் வெள்ளைமான் - சடையிலே ஒரு வெள்ளைமானிருக்கின்றது, (இப்படியிருக்கிறபோது) எம்மானுக்கு இடம் எங்கே - எமது பெண்ணுக்கு இடம் எங்கேயமைப்பீர், எ - று.

புள்ளிமான் - யாகத்திலுண்டானமான். பச்சைமான் - உமாதேவி. வெள்ளைமான் - கங்கை. நீருக்கு நிறம் வெண்மையாதலால் வெள்ளைமான் என்றார். வெள்ளமான் என்றும் பாடம், பொருள் கங்கையாகிய பெண்.

சொக்கநாதர்மீது பாடியது.

4. வான்பணிந்தா லவனென்பே யுரைக்கு மலரயன்
தான்பணிந்தா லவன்றன் றலையே சொல்லுந் தாரணியுண்
டான்பணிந்தா லவன்கண்ணே பரிந்து பரிந்துரைக்கும்
நான்பணிந்தா லெனக்கார் சொல்லுவார் சொக்கநாயகர்க்கே.

இ - ள். சொக்கநாயகர்க்கு - சொக்கநாயகரை, வான் பணிந்தால் - விண்ணுலகத்தார் வணங்கினால், (அதற்கு) அவன் என்பே உரைக்கும் - அவனணிந்திருக்கும் எலும்புமாலையே சாட்சி சொல்லும், மலரில் அயன் தான் பணிந்தால் - தாமரைமலரில் வசிக்கிற பிரமன் வணங்கினால், அவன் தன் தலையே சொல்லும் - அவனது தலையாகிய கபாலமே சாட்சிசொல்லும், தாரணி உண்டான் பணிந்தால் - உலகத்தை யுண்டவனாகிய திருமால் வணங்கினால், அவன் கண்ணே பரிந்து பரிந்து உரைக்கும் - அவனது கண்ணே விரும்பி விரும்பிச் சாட்சிசொல்லும், நான் பணிந்தால் - யான் வணங்கினால், எனக்கு ஆர் சொல்லுவார் - எனக்கு யார் சாட்சிசொல்லுவார், எ - று.

சொக்கநாயகர் அணிந்திருக்கிற எலும்புமாலையால் தேவர்களால் வணங்கப்படுதற் குரியனென்பதும், கையிலுள்ள பிரமகபாலத்தால் பிரமனால் வணங்

சப்படுதற்குரியனென்பதும், திருவடியிலுள்ள கண்மலரால் திருமாலினால் க்கப்படுதற்குரியனென்பதும் விளங்குகின்றன. நான் வணங்குதலை விளக்குவோர் யார் என்பது கருத்து.

### இறைவனணிந்திருக்கும் பாம்புமுதலியவற்றை யிரத்தல்.

5. மெய்க்கேயணியும் பணியேயென்பேமுடிமேற்கிடந்த
கொக்கேவெண்கூன்பிறையேமைசேர்க்கொடும்புலியே
அக்கேயுமக்குக்கிடைத்தவுபாயங்களாமெனக்குஞ்
சொக்கேசர்பாதத்தைக்கிட்டுமுபாயத்தைச்சொல்லுங்களே.

இ - ள். மெய்க்கே அணியும் பணியே - திருமேனியிலணியும் பாம்பே, என்பே - கழுத்திலணிந்த எலும்புமாலையே, முடிமேல் கிடந்த கொக்கே - சிரசின்மேல் தங்கிய கொக்கிறகே, வெண் கூன் பிறையே - வெள்ளியவளைவாகிய பிறையே, மை சேர்ந்த கொடும்புலியே - கருமைசேர்ந்த கொடிய புலித்தோலே, அக்கே - அக்குமாலையே, உமக்குக் கிடைத்த உபாயங்கள் ஆம் - உமக்குக்கிடைத்த உபாயங்கள் வியக்கத்தக்கன, சொக்கேசர் பாதத்தை - சொக்கநாதரது திருவடியை, கிட்டும் உபாயத்தை - சேருமுபாயத்தை, எனக்கும் சொல்லுங்கள் - எனக்குஞ் சொல்லுங்கள், எ - று.

### சொக்கநாதர்மீது நிந்தாஸ்துதியாகப் பாடியது.

6. தாண்டித்திரியும்விடையேறியொன்றுதாங்கிப்பிச்சை
வேண்டிக்கலியுககாலந்தள்ளாமல்விருப்பிற்சொக்கர்
ஆண்டித்தொழில்விட்டையோமதுரைக்கரசிருந்து
பாண்டித்துரைத்தனஞ்செய்தேபிரம்படிபட்டனரே.

இ - ள். தாண்டித்திரியும் விடையேறி - துள்ளித்திரிகின்ற இடபத்தின் மீதேறி, ஒன்று ஒன்று தாங்கி - ஒரு ஓட்டையேந்தி, பிச்சைவேண்டி - பிச்சை யேற்றுண்டு, கலியுக காலந்தள்ளாமல் - கலியுககாலத்தைக் கழிக்காமல், சொக்கர் - சொக்கநாதர், ஆண்டித்தொழிலை விட்டு - ஆண்டிவேலையைவிட்டு, ஐயோ - அந்தோ, மதுரைக்கு அரசு இருந்து - மதுரைக்கரசனாயிருந்து, பாண்டி துரைத்தனம் செய்து - பாண்டிதேசத்து துரைத்தனம் பண்ணி, பிரம்படி பட்டனர் - பிரம்படியும் பட்டார், எ - இஃதென்னபரிதாபம், எ - று.

### திருக்காநத்தைச் சிவபெருமான்மீது பாடியது.

7. ஆகத்திலேயொருபாதியெனம்மைக்களித்தவடன்
பாகத்திலேயொன்றுகொண்டாயவண்மற்றைப்பாதியுமுன்
தேகத்திற்பாதியுஞ்சேர்ந்தாலிருவருண்டேசிவனே
ஏகத்திராமலிருப்பாய்களந்தையுமென்னெஞ்சமே.

இ - ள். சிவனே - சிவபெருமானே, ஆகத்திலே ஒருபாதி - திருமேனியில் ஒருபாதியை, என் அம்மைக்கு அளித்து - என்னம்மையாகிய உமாதேவிக்குக்கொடுத்து, அவள் தன்பாகத்திலே - அவளுடைய பாகத்திலே, ஒன்று கொண்டாய் - ஒருபாகத்தை வாங்கிக்கொண்டனை, அவள் மற்றைப்பாதியும் - அவளது மற்றைப்பாதியும், உன் தேகத்தில் பாதியும் - உன் திருமேனியிற் பாதியும், சேர்ந்தால் - கூடினால், இருவர் உண்டே - இருவர் உளரே - (ஆதலால்) ஏகத்து இராமல் - ஒன்றாயிராமல், களந்தையும் என் நெஞ்சும் - களந்தைப்பதியிலும் என்மனத்திலும், இருப்பாய் - வீற்றிருப்பாயாக, எ - று.

இதுவுமது.

8. துணையானநாரிபுவியையெல்லாம்பெறுந்தொல்லைவடிக்
கணையானதுபுவியெல்லாமெடுத்துண்ணுங்கைச்சிலைகல்
அணையாகநின்றுபுவியினைத்தாங்குமென்றாலினியான்
பணையார்களந்தைப்பதியார் செயலையென்பன்னுவதே.

இ - ள். துணை ஆன நாரி - மனைவியாகிய உமாதேவி, புவியையெல்லாம் பெறும் - பூமிமுழுதையும் பெறுவாள், தொல்லை வடிக்கணை ஆனது புவியெல்லாம் எடுத்து உண்ணும் - பழமையாகிய வடித்தலமைந்த அம்பானது பூமிமுழுதையும் எடுத்துவிழுங்கும், கைச்சிலை - கைவில்லானது, கல் அணையாக நின்று - கல்லணையாயிருந்து, புவியினைத் தாங்கும் என்றால் - பூமியைத்தாங்குமாயின், இனி - இனி, யான் - நான், பணை ஆர் - கழனிகள் நிறைந்த, களந்தைப்பதியார் செயலை - திருக்களந்தைப்பதிச் சிவபெருமானரது செயலை, என்பன்னுவது - என்னென்றெடுத்துச்சொல்லுவது, எ - று.

துணையானநாரி - மனைவியாகிய உமாதேவி. கணை - திருமால், கைச்சிலை - மேருமலை.

சோக்கநாதர் யானைவாகன மீதேறி யுலாவரத் தரிசித்துப்பாடியது.

9. முன்னானைகூப்பிடவோடிவந்தானைமுளரிமலர்ப்
பொன்னானையேறியிருப்பானைப்பூழியன்கைக்கரும்பைத்
தின்னானையென்றுகல்லானைக்கிட்டானைத்திருமதுரை
மன்னானைவீதியிலேறிவந்தானைவணங்குதுமே.

இ - ள். முன் ஆனை கூப்பிட ஓடிவந்தானை - முற்காலத்தில் (கஜேந்திரனென்னும்) யானையழைக்க ஓடிவந்தவனும், முளரிமலர் பொன்னானை - தாமரைமலரில் வாழ்கின்ற திருமகளை யுடையவனுமாகிய திருமாலாகிய வாகனத்தின்மீது, ஏறியிருப்பானை - ஏறியிருப்பவனை, பூழியன் கைக்கரும்பை - பாண்டியன் கைக்கரும்பை, ஆனை தின் என்று - ஆனையே தின்பாயென்று, கல்லானைக்

கு இட்டானை - கல்லானைக்கு உண்பித்தவனை, திருமதுரா - திருமதுரையின், வீதியில் - தெருவில், மன் ஆனை ஏறிவந்தானை - நிலைபெற்ற யானைமீதேறி உலாவந்தவனை, வணங்குதும் - (கண்டு) வணங்குவோம், எ - று.

### திருச்சீகாழிச் சிவபெருமானை நற்றுயிரத்தல்.

10. நமக்கின்றொருவரந் தரவேண்டுநலந்திகழ்குங்
குமக்கொங்கைபாகத்துக் கொச்சையுள்ளீர்கொடுங்கோளரவிற்
கிமைக்கும்பிறையையளித்தாலதற்கும்பசிபோம்
உமக்குந்தலைச்சுமைபோமெங்கண்மாதுமுயிர்பெறுமே.

இ - ள். நலந் திகழ் - அழகு விளங்குகின்ற, குங்குமக் கொங்கைபாகத்து - குங்குமக் குழம்பணிந்த தனங்களையுடைய உமாதேவியை ஒருபாகத்துக் கொண்டு, கொச்சை உள்ளீர் - திருச்சீகாழியில் எழுந்தருளியிருப்பவரே, இன்று - இப்பொழுது, நமக்கு நீர் ஒருவரம் தரவேண்டும் - எமக்குநீர் ஒருவரங் கொடுக்கவேண்டும், (என்னவெனின்) கொடுங்கோள் அரவிற்கு - (உமது சிரத்திற் கட்டப்பட்டிருக்கிற) கொடுமையை வலிமையுள்ள பாம்புக்கு, இமைக்கும் பிறையை அளித்தால் - பிரகாசிக்கிற பிறையைக் கொடுத்தால், அதற்கும் இரும்பசிபோம் - அந்தப் பாம்புக்கும் மிகுந்த பசி தீரும், உமக்கும் தலைச்சுமைபோம் - உமக்கும் தலைப்பாரம் நீங்கும், எங்கள் மாதும் உயிர்பெறும் - எங்கள் பெண்ணும் உயிர்பெறுவாள், எ - று.

உமது சிரத்திலிருக்கிற பிறைச்சந்திரனைப் பாம்புக்கு ஊட்டிவிடும் என்பதற்கு, "அழல்மேவிய மதியைத் தழலாடுவனை முடிகுமெம்மாது தருக்குறக்கே" என்றார் பிறரும்.

### சொக்கநாதருக்குள்ள பாக்கியமெல்லாம் சொக்கநாயகியாரால் வந்ததேயாமென்று பாடியது.

11. ஆனையுரித்துமதட்டனைப்போர்த்திட்டடியும்பட்டு
மானமழிந்தங்கிரந்தேதிரிந்தமதுரைச்சொக்கர்
ஞானமிகப்பெற்றுவாழ்வதெல்லாஞ்சொக்கநாயகியாள்
பாணிபிடித்தமுகூர்த்தத்தினால்வந்தபாக்கியமே.

இ - ள். ஆனை உரித்தும் - யானையை யுரித்தும், அதன் தனை போர்த்திட்டு - அதின்தோலைப் போர்த்தும், அடியும்பட்டு - அடியுமுண்டு, மானம் அழிந்து - மானங்கெட்டு, அங்கு இரந்தே திரிந்த மதுரைச்சொக்கர் - அவ்வாறே இரந்து திரிந்த மதுரைச் சொக்கநாதர், ஞானம் மிகப்பெற்று வாழ்வதெல்லாம் - ஞானத்தை மிகுதியாகப் பெற்று வாழ்வதெல்லாம், சொக்கநாயகியாள் பாணிபிடித்த முகூர்த்தத்தினால் வந்த பாக்கியமே—, எ - று.

அடிபட்டு என்றது வையையாற்றங்கரையில் மண்சுமக்க வந்தபோது பிரம்படி பட்டதைக் குறித்தது, சாக்கியர் கல்லாலெறிந்ததையும் குறிக்கும்.

### திருநெல்வேலி வடிவாம்பிகையின்மீது பாடியது.

12. ஆய்முத்துப்பந்தரின்மெல்லணைமீதுன்னருகிருந்து
நீமுத்தந்தாவென்றவர்கொஞ்சும்வேளையினித்தநித்தம் [ல்
வேய்முத்தரோடென்குறைகளெல்லாமெல்லமெல்லச் சொன்ன
வாய்முத்தஞ்சிந்திவிடுமோநெல்வேலிவடிவன்னையே.

இ - ள். நெல்வேலி வடிவன்னையே - திருநெல்வேலியி லெழுந்தருளிய வடிவாம்பிகையே, ஆய்முத்துப் பந்தரில் - ஆராய்ந்தெடுத்த முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட பந்தலில், மெல் அணைமீது - மென்மையாகிய சயனத்தின் மீது, உன் அருகு இருந்து - உன்னருகே யிருந்து, நீ முத்தம் தா என்று - நீ முத்தந் தருகவென்று, அவர்கொஞ்சும் வேளையில், அவர் கொஞ்சுகிற சமயத்தில், நித்தம்நித்தம் - நாள்தோறும், வேய்முத்தரோடு - வி[illegible]முத்தரோடு, என் குறைகள் எல்லாம் - என்குறைகள் யாவும், மெல்லமெல்லச் சொன்னால் - பையப் பையச்சொன்னால் - வாய்முத்தச் சிந்திவிடுமோ - உன்வாய்முத்த முதிர்ந்து விடுமோ, எ - று.

உயர்ந்தமாதர் கண்டத்தில் முத்துண்டா யிருக்குமென்பது நூற்றுணிபாதலால், "வாய்முத்தஞ் சிந்திவிடுமோ" என்றார், "சுரதமுடையர் பணிவாய் திறக்கிற் சலக்கென்பவே" "சந்திவராக மருப்பிப்பி நந்தணிக்கதலி, நந்துசலஞ்சல மீன்றலைநாக்கு நளினமின்னார், கந்தரஞ்சாலிகழை கன்னலாவின்பல் கட்செவிகார், இந்துவுடும்புகரா முத்தமீனு மிருபதுமே" என்றார் மேலோரும்.

### சொக்கநாதர்க்கு இரக்கமில்லையெனப் பாடியது.

13. குதியானமனையுதைத்துள்ளங்காலினிற்கூனிமிர
மதியாகந்தேய்த்தவ்விலங்கேசன்மாமுடிபத்துநக
நுதியான்மிதித்துமுயலகன்மேனிநெறுங்கவின்னும்
மிதியாவின்றாலருளெங்கேசொக்கேசர்தம்மெல்லடிக்கே.

இ - ள். குதியால் நமனை உதைத்து - குதிக்காலினால் யமனை யுதைத்து, உள்ளங்காலினில் - உள்ளங்காலினால், கூன் நிமிர - வளைவு நிமிரும்படி, மதி ஆகம் தேய்த்து - சந்திரனது உடம்பைத்தேய்த்து, அ இலங்கேசன் மா முடி பத்தும் - அந்தராவணனுடைய பெரிய மகுடங்கள் பத்தையும், நக நுதியால் மிதித்து - நக நுனியால் மிதித்து அழுத்தி, முயலகன் மேனி நெறுங்க - முயலகனுடம்பு நெரியும்படி, இன்னும் மிதியாவின்றால் - இன்னமும் மிதியாவிற்பின், சொக்கேசர் தம் மெல் அடிக்கு - சொக்கநாதரது மெல்லிய திருவடிக்கு, அருள் எங்கே - கிருபை யெவ்விடத்தது.

யமனை யுதைத்தது மார்க்கண்டன் பொருட்டு, சந்திரனைத்தேய்த்தது தக்கன் யாகத்தில், ராவணனை யழுத்தினது கைலாயத்தை யெடுத்தபோது.

சொக்கநாதர் பிரம்படிபட்டதற் கிரங்கிப்பாடியது.

14. மண்ணென்றமண்டலமெல்லாம்புரக்கும்வழுதிசற்றும்
தண்ணென்றநெஞ்சந்தரித்திலனே தனுவேடனெச்சில்
உண்ணென்றபோதுண்டவர்சொக்கர்பாதியுடலம்பச்சைப்
பெண்ணென்றறிந்துமடித்தானெவ்வாறுபிரம்புகொண்டே.

இ - ள். மண் என்ற - மண்ணுலகமென்று சொல்லப்பட்ட, மண்டலம் எல்லாம் - உலகமுழுதும், புரக்கும் - காக்கின்ற, வழுதி - பாண்டியன், சற்றும் - சிறிதும், தண் என்ற நெஞ்சம் தரித்திலனே - சாந்தமாகிய மனத்தைப் படைத்திலனே, தனுவேடன் - வில்வேடனாகிய கண்ணப்பன், எச்சில் உண் என்றபோது உண்டவர் - எச்சிலை உண்ணென்றபொழுது உண்டவராகிய, சொக்கர் - சொக்கநாதரது, பாதி உடலம் - பாதியுடம்பு, பச்சை பெண் என்று அறிந்தும் - பச்சைப் பெண்ணாகிய உமாதேவியது என்றுணர்ந்திருந்தும், பிரம்பு கொண்டு எவ்வாறு அடித்தான் - பிரம்பால் எப்படி அடித்தான், எ - று.

தென்களந்தைப் பதியானை யடைதற்கு இருவினையொப்பு என்றுண்டாகுமோவெனப் பாடியது.

15. இன்றொக்கவேண்டினெவ்வாறொக்குமோவெழில்சேர்களந்தைக்
குன்றொக்குங்கோபுரங்கோபுரமொக்குமக்குன்றதுபோல்
அன்றொக்கவேண்டுமென்னல்வினைதீவினையாமிரண்டும்
என்றொக்குமோவினித்தென்களக்காடனையான்பெறவே.

இ - ள். இன்று ஒக்கவேண்டில் எவ்வாறு ஒக்குமோ - இன்றொத்திருக்க வேண்டினால் எப்படியொவ்வுமோ, எழில் சேர் - அழகுபொருந்திய, களந்தை - களந்தைப்பதியில், குன்று கோபுரம் ஒக்கும் - மலையானது கோபுரத்தை நிகர்க்கும், கோபுரம் அக்குன்று ஒக்கும் - கோபுரமானது அக்குன்றை நிகர்க்கும், அதுபோல் - அதுபோல, என் நல்வினை தீவினை ஆம் இரண்டும் - எனது நல்வினை தீவினைகளாகிய இரண்டும், அன்று ஒக்கவேண்டும் - அந்நாளில் சமமாக வேண்டும், இனி தென்களக் காடனையான் பெற என்று ஒக்குமோ - இனி தென்களந்தைப்பதியானை நான் அடையும்படி என்று நேரிடுமோ, எ - று.

சிவந்தான்மல்லைப் பல்லவன்மீது பாடியது.

16. மாதாம்படியுண்டுமெய்சிவந்தான்குழல்வைத்திசைத்துச்
சேதாம்பலங்கனிவாய்சிவந்தான்செம்மலர்த்திருவின்
சூதாந்தனந்தைத்துமார்சிவந்தானவர்துதிசென்று
பாதாம்புயஞ்சிவந்தான்சிவந்தான்மல்லைப்பல்லவனே.

இ - ள். சிவந்தான் மல்லைப்பல்லவன் - சிவந்தான் என்னும் இயற்பெயர் பெற்ற மல்லைப் பல்லவனென்பவன், மாதாம்பு அடியுண்டு மெய்சிவந்தான்-பெ

ரிய கயிற்றினடியுண்டு உடல்செவந்தான், குழல்வைத்து இசைத்து சேதாம்பல் அம்கனிவாய் சிவந்தான் - வேய்ங்குழலை வைத்தூதி செவ்வல்லி மலர்போலும் அழகு கனிந்தவாய் செவந்தான், செம்மலர் திருவின் சூது ஆம் தனம் தைத்து உரம் சிவந்தான் - செந்தாமரை மலரில் வாழ்கின்ற திருமகளது சூதாடு கருவி போன்ற தனங்கள் பதிந்து மார்புசெவந்தான், ஐவர் தூதுசென்று பாத அம்புயம் சிவந்தான் - பஞ்சபாண்டவர்க்குத் தூதாகநடந்து பாததாமரை சிவக்கப் பெற்றான், எ - று.

சிவந்தான் மல்லைப் பல்லவன் இரட்டைக்கடுக்கன் செய்து போட்டதைக் குறித்துப் பாடியது.

17. பாடுந்தமிழ்க்குச் சிவந்தெழுந்தான் மல்லைப் பல்லவர்கோன்
காடுஞ்செடியுந் திரியா திரட்டைக்கடுக்கன் செய்து
போடும்பொழுதென்ன பூட்டகமோ அற்பப் புல்லரைக்கொண்
டாடும்பொழுதிரு கன்னத்திலே நின்றடிக்கின்றதே.

இ - ள். சிவந்தெழுந்தான் மல்லைப்பல்லவர்க்கோன் - ,

பாடும் தமிழ்க்கு - யான்பாடிய தமிழ்ப்பாடலுக்குப் பரிசிலாக, காடும் செடியும் திரியாது - காட்டிலும் செடிகளிலும் திரியாமல், இரட்டைக்கடுக்கன் செய்து போடும்பொழுது - இரட்டைக்கடுக்கன் செய்து போடும்போது, என்ன பூட்டகமோ-என்ன பூத்தானமோ, அற்பப்புல்லரைக் கொண்டாடும்பொழுது- அற்பராகிய கீழ்மக்களைக் கொண்டாடும்போது, இரு கன்னத்திலே நின்று அடிக்கின்றது - இரண்டு தாடைகளிலும் நின்று அசைகின்றது, எ - று.

மீனாட்சியம்மையைத் தரிசித்த சொக்கநாதர் பாடியது.

18. கான்றெண்டனிட்ட கனங்குழலாளையென் கண்மணியைத்
தேன்றொண்டைவாய்ச்சியைத் தென்கூடல்வாழ் சிறுபெண்பிள்ளையை
யான்றெண்டனிட்டபொழுதே யியமனெனக்குமடி
யேன்றெண்டனிட்டவிண்ணப்பமென் றோலையெழுதுவனே.

இ - ள். கான் தெண்டனிட்ட கனங்குழலாளை - காடானது கும்பிடுதற்குரிய அளக பாரத்தை யுடையவளை, என் கண்மணியை - என் கண்மணி போன்றவளை, தேன்தொண்டை வாய்ச்சியை - தேன்பொருந்திய கோவைக் கனிபோலும் வாயினை யுடையாளை, தென் கூடல் வாழ்சிறு பெண்பிள்ளையை - தென் மதுரையில் வாழ்கின்ற சிறுபெண்ணை, யான் தெண்டனிட்ட பொழுதே-நான் கும்பிட்டபோதே, இயமன் - யமன், எனக்கும் - எனக்கும், அடியேன் தெண்டனிட்ட விண்ணப்பம் என்று ஓலையெழுதுவன்—, எ - று.

மீனாக்ஷி யம்மையைத் தரிசித்த எனக்கு யமன் அஞ்சுவா னென்பது கருத்து.

மீனாக்ஷியம்மையின் மணக்கோலத்தைக் குறித்துப் பாடியது.

19. அண்டத்தமரருமாயனும்வேதனுமந்தணரும்
பண்டெத்தனைதவஞ்செய்தனரோமணப்பந்தலிலே
துண்டப்பிறையணிசொக்கர்கைத்தாலிக்குநீதுணிந்து
கண்டத்தைநீட்டினையேகூடல்வாழங்கயற்கண்ணியே.

இ - ள். அண்டத்து அமரரும் - விண்ணுலகத்திலுள்ள தேவரும், மாயனும் - திருமாலும், வேதனும் - பிரமனும், அந்தணரும் - வேதியரும், பண்டு - முற்காலத்தில், எத்தனை தவம் செய்தனரோ - எவ்வளவு தவம்செய்திருந்தாரோ, மணப்பந்தலிலே - மணப்பந்தலின்கண், துண்டப்பிறைஅணி - சந்திர கண்டத்தைச் சூடின, சொக்கர் - சொக்கநாதரது, கைத்தாலிக்கு - கையிலுள்ள மங்கல சூத்திரத்தின் பொருட்டு, நீ துணிந்து - நீ மனவுறுதி கொண்டு, கண்டத்தை நீட்டினையே - கழுத்தை நீட்டினையே, கூடல்வாழும் - மதுரையில் வாழ்கின்ற, கயல்கண்ணியே - மீனாக்ஷியம்மையே, எ - று.

மீனாக்ஷியம்மைக்குக் கன்னெஞ்சுண்டா யிருத்தற்குக்
காரணம் தோன்றப் பாடியது.

20. அற்பீன்றதாயென்றுனைப்பணிந்தாலென்னவதியெல்லாம்
பொற்பீன்றபூஷணம்போற்குறித்தாய்புகழ்க்கூடலில்வாழ்
கற்பீன்றகட்டிக்கரும்பேயுனக்குக்கன்னெஞ்சதுதான்
வெற்பீன்றவாசனையோவுள்ளவாறுவிளம்பெனக்கே.

இ - ள். அற்பு ஈன்றதாய் என்று - அன்புற்றுப் பெற்ற தாயென்றுகருதி, உன்னைப்பணிந்தால் - உன்னை வணங்கினால், என் அவதியெல்லாம் - என் துயரமெல்லாம், பொற்பு ஈன்ற பூஷணம்போல் குறித்தாய்-அழகு பொருந்திய கர்ணபூஷணமாக எண்ணினாய், புகழ் கூடலில்வாழ் - புகழையுடைய மதுரையில் வாழ்கின்ற, கற்பு ஈன்ற கட்டிக்கரும்பே-கற்பமைந்த கருப்புக்கட்டியே, உனக்கு-உனக்கு, கல்நெஞ்சதுதான்-கல்நெஞ்சாயிருப்பது, வெற்பீன்ற வாசனையோ - மலைபெற்ற வாசனையாமோ, உள்ள ஆறு - உள்ளபடி, எனக்கு விளம்பு - எனக்குச் சொல்வாய், எ - று.

உன்மனம் கல்லாயிருக்கின்றதேயென்று மீனாக்ஷியம்மையைநோக்கிக் கூறியது.

21. பேயல்லவோவொருவேளைவரந்தந்துபேசிடுங்கல்
லாயல்லவோநின்மனங்கெட்டியானதுமற்புதந்தான்
நீயல்லவோமதுரேசர்பங்குற்றவணீயெனக்குத்
தாயல்லவோபிள்ளைநானல்லவோசிவசாம்பவியே.

இ - ள். பேய் அல்லவோ - பேயமல்லவோ, ஒருவேளை வரம்தந்து பேசி டும்-ஒருவேளை வரங்கொடுத்துப் பேசும், கல்லாய் அல்லவோநின் மனம்கெட்டி ஆனதும் - கல்லைப்போலல்லவோ உன்மனம் வன்மையாய் விட்டதும், அற்புதம் தான் - ஆச்சரியமே, மதுரேசர் பங்கு உற்றவள் - மதுரைச் சொக்கநாதர் பாகத்திற் பொருந்தியிருப்பவள், நீயல்லவோ-நீயல்லையோ, நீ எனக்கு தாயல்லவோ - நீ யெனக்கு மாதா அல்லையோ, நான் பிள்ளை அல்லவோ - நான்புதல்வனல்லவோ, சிவசாம்பவியே, எ - று.

### மீநாக்ஷியம்மையைத் தரிசித்த செருக்கால் பாடியது.

22. பண்டோதரியமறைபாடுங்கூடற்பசுங்கிளியைக்
கண்டோதினேனென்கவலையெல்லாமினிக்காலன்றிண்டு
முண்டோதிவந்திடும்போதம்மைகோயின்முன்னேதிரியும் [னே.
குண்டோதரன் கண்டுகொண்டாற்றொடைதட்டிக் கொள்ளுவ

இ - ள். பண்டு ஓது அரிய மறைபாடும் கூடல் - பழமையாகிய சொல்லுதற்கரிய வேதங்கள் புகழ்ந்துபாடுகின்ற கூடலிலுள்ள, பசுங்கிளியை - பச்சைக்கிளிபோல் வாளாகிய உமாதேவியை, கண்டு-தரிசித்து, என்கவலை எல்லாம் - என் துயரமுழுதும், ஓதினேன் - விண்ணப்பம் பண்ணினேன், இனி - இனி, காலன் - யமன், திண்டு முண்டு ஓதிவந்திடும்போது - திண்டு முண்டுகள் பேசி வருங்காலத்தில், அம்மை கோயில் முன்னே திரியும் குண்டோதரன் - அம்மைகோயிலுக் கெதிரில் திரியும் குண்டோதரன், கண்டு கொண்டால் - கண்டு கொண்டானாயின், தொடை தட்டிக் கொள்ளுவன் - அந்த யமனோடு போர்செய்யத் தொடைதட்டிக்கொள்வான், எ - று.

### மீநாக்ஷியம்மையின் மூக்குத்தியைக்குறித்துப் பாடியது.

23. செகத்தாயெனவந்ததெள்ளமுதேதென்கயிலையென்று
நகத்தார்பணியுங்கயற்கண்ணம்மேநின்னயனத்தினால்
மிகத்தான்கருநிறங்கொண்டமையாலவ்விளங்குதிரு
முகத்தாமரைக்கொருவண்டானதுமுத்துமூக்குத்தியே.

இ - ள். செகத்தாய் என வந்த தெள்ளமுதே - லோகமாதா என்று சொல்லவந்த தெளிவாகிய அமிர்தமே, தென் கயிலை யென்னும் நகத்தார் பணியும் - தக்ஷிணகைலாசமாகிய மலையிலுள்ளார் வணங்குகின்ற, கயல் கண் அம்மே - மீநாக்ஷியம்மையே, முத்து மூக்குத்தி - முத்து மூக்குத்தியானது, நின் நயனத்தினால் - உன் கண்ணொளியால், மிகத்தான் கருநிறம் கொண்டமையால் - மிகவும் கருநிறத்தைத் தன்னிடத்திற் கொண்டிருத்தலால், அவ்விளங்கு திருமுகத்தாமரைக்கு - அந்த விளங்குகின்ற திருமுகமாகிய தாமரைமலருக்கு, ஒரு வண்டு ஆனது - ஒருவண்டாயிற்று, எ - று.

இதுவுமது.

24. செகமதின்மிக்கமதுரையின்மாணிக்கஞ்செட்டியதாய்
மிகமதிரத்தினம்விற்றசொக்கேசனைமேவியன்பாற்
சுகமதிதந்தெனையாள்கயற்கண்ணிநின்சுந்தரமா
முகமதியென்றகதிர்மணியோமுத்துமூக்குத்தியே.

இ - ள். செகமதில் மிக்க மதுரையில் - உலகத்திற் சிறந்த மதுரைப்பட்டணத்தில், மாணிக்கஞ் செட்டியதாய் - மாணிக்கம் விற்குஞ் செட்டியாகி, மிக மதி - மிகவும் விலைமதிக்கத்தகுந்த, ரத்தினம் விற்ற-மணிவிற்ற, சொக்கேசனை அன்பால் மேவி - சொக்கநாதனை அன்பாகப் பொருந்தி, சுகமதி தந்து - நல்ல புத்தியைக்கொடுத்து, என்னை ஆள் கயல் கண்ணி - என்னையாளுகின்ற மீனாக்ஷியம்மையே, முத்து மூக்குத்தி - முத்து மூக்குத்தியானது, நின் - உனது, சுந்தரம் - அழகாகிய, முகம் - முகமென்கிற, மாமதி என்ற - பூர்ண சந்திரன் பெற்ற, கதிர் மணியோ - ஒளியுள்ள முத்தோ, எ - று.

இதுவுமது.

25. பொன்னேமலயத்துவசனாகியபூபனீன்றெடுத்த
மின்னேயுனதுவதனத்தையேவெண்மதியமெனத்
தன்னேயத்தாலொருதாரகையானதுதான்விரும்பி
முன்னேகிடந்தினம்பார்க்கின்றதோமுத்துமூக்குத்தியே.

இ - ள். பொன்னே - பொன்னையே, மலயத்துவசன் ஆகிய - மலயத்வஜனாகிய, பூபன் - அரசனானவன், ஈன்றெடுத்த - பெற்றெடுத்த, மின்னே - மின்கொடியே, முத்து மூக்குத்தி - முத்து மூக்குத்தியானது, உனது வதனத்தையே - உன் திருமுகத்தையே, வெள் மதியம் என-வெள்ளிய சந்திரனென்று கருதி, தன் நேயத்தால் - தன்விருப்பத்தால், ஒரு தாரகையானது - ஒரு நக்ஷத்ரமானது, தான் விரும்பி - தான் இச்சித்து, முன்னேகிடந்து இன்னம் பார்க்கின்றதோ - எதிரேகிடந்து இன்னம் பார்க்கின்றதோ, எ - று.

சொக்கநாதர் திருவடியை அடியார்கண்ட காலமிதுவெனப் பாடியது.

26. வடிகொண்டசெந்தமிழ்க்கூடலில்வாழ்சொக்கர்வந்திதரும்
பிடிகொண்டபிட்டுக்குமண்சுமந்துபெருமகரக் [பால்
கொடிகொண்ட வெற்றித்துரைப்பாண்டியன் கைக்கொடும்பிரம்
அடிகொண்டபோதிலடியாரவர்பொன்னடிகண்டதே.

இ - ள். வடிகொண்ட செந்தமிழ் - வடித்தலைக்கொண்ட செந்தமிழ்க்கிருப்பிடமாகிய, கூடலில் வாழ் சொக்கர் - மதுரையில் வாழ்கின்ற சொக்கநாதர், வந்திதரும்-(செம்மனச்செல்வியென்கிற) வந்திதந்த, பிடிகொண்ட பிட்டுக்கு-

ஒருபிடியளவாகிய பிட்டின்பொருட்டு, மண்ணேசுமந்து - மண்ணைச்சுமந்து, பெருமகரக்கொடி கொண்ட - பெரிய மீனக்கொடியைக் கொண்ட, வெற்றித்துணை - வெற்றி வேந்தனுகிய, பாண்டியன்கை - பாண்டியன்கையிலுள்ள, கொடுபிரம்பால் - கொடிதாகிய பிரம்பினுல், அடிகொண்ட போதில் - அடிபட்ட பொழுதில், அடியார் - அன்பர், அவர் பொன் அடிகண்டது - அவரது பொன்னடியைக் காணப்பெற்றது, எ - று.

சொக்கநாதனைக் கண்டாலன்றி என்மனத்துன்பந்தீராதெனப் பாடியது.

27. அக்குவடம்புனையானந்தவெள்ளத்தையங்கயற்கண்
பக்கத்திருந்தபவளாசலத்தைப்பழம்பொருளை
முக்கட்கனியைக்கடம்பாடவிக்கண்முளைத்தெழுந்த
சொக்கைக்கண்டாலன்றித்தீராவென்னெஞ்சிற்றுயரங்களே.

இ - ள். அக்கு வடம் புனை - அக்குமாலையைத்தரித்த, ஆனந்த வெள்ளத்தை - இன்பக்கடலை, அம்கயல்கண் - அழகிய மீனாக்ஷியம்மையானவள், பக்கத்து இருந்த - தன்பாகத்தி லிருக்கப்பெற்ற, பவள அசலத்தை - பவளமலையை, பழம் பொருளை - ஆதி வஸ்துவை, முக்கண் கனியை - மூன்றுகண்களையுடைய பழத்தை, கடம்ப அடவிக்கண் முளைத்து எழுந்த - கடம்பவனத்தில் முளைத்தெழுந்த, சொக்கை - சொக்கேசனை, கண்டால் அன்றி - தரிசித்தாலல்லது, என் நெஞ்சில் துயரங்கள் - என் மனத்திலுள்ள துன்பங்கள், தீரா - ஒழியா, எ - று.

மீனாக்ஷியம்மை தம்மீதுவைத்த அன்பின் மிகுதியைக்குறித்துப் பாடியது.

28. பொன்போலுங்கூடற்பிராட்டியைச்சேவிக்கப்போம்பொழுதில்
என்பால்வரவுமெதிர்நின்றுபேசவுமென்றலைமேல்
தன்பாதஞ்சூட்டவுங்கேட்டதெல்லாந்தந்தருளவுமே
அன்பாகவந்திடுவாள்கலிகாலமென்றஞ்சுவளே.

இ - ள். பொன் போலும் - பொன்போன்ற, கூடல் பிராட்டியை - மதுரை மீனாக்ஷியம்மையை, சேவிக்கப்போம் பொழுதில் - சேவிக்கப்போகும்போது, என் பால் வரவும் - என்னிடத்தில் வருதற்கும், எதிர் நின்று பேசவும் - எதிரேநின்று பேசுதற்கும், என் தலைமேல் - என் சிரசின்மீது, தன்பாதம் சூட்டவும் - தன்திருவடியைச் சூட்டுதற்கும், கேட்டது எல்லாம் - நான் கேட்ட பொருள்களையெல்லாம், தந்தருளவும் - கொடுத்தருளுதற்கும், அன்பாக வந்திடுவாள் - அன்போடு வருவாள், கலிகாலம் என்று அஞ்சுவள் - கலிகாலமென்று அஞ்சாநின்றாள், எ - று.

யான் வினைக்கடலை யெப்படிகடப்பேன் எனப்பாடியது.

29. உரையேனுன்பேரையுணரேனின்சீரையுனைக்கருதிக்
கரையேனெவ்வாறுகடப்பேன்வினையைக்கடந்தகுண

வரையேயருட்பெருவாரிதியேமதுராபுரிக்குத்
துரையேயழகியசொக்கேதமிழ்தந்தசுந்தரமே.

**இ - ள்.** கடந்த குணவரையே-இயல்பாகவே பாசத்தை நீங்கினின்ற குண மலையே, பெரு அருள்வாரிதியே - பெரிய அருட்கடலே, மதுராபுரிக்கு துரையே - மதுரைப் பட்டணத்துக்கு அரசே, அழகிய சொக்கே - அழகிய சொக்கேசரே, தமிழ் தந்த சுந்தரமே - தமிழைக்கொடுத்த சோமசுந்தரக் கடவுளே, உன் பேரை உரையேன் - உன் திருநாமத்தைச் சொல்லேன், நின்னை உணரேன் - உன் மேன்மையை யறியேன், உன்னைக் கருதி கரையேன் - உன்னை நினைத்து நகேன், எவ்வாறு வினையைக் கடப்பேன் - எப்படி வினைகளைக் கடந்துய்யப் போகிறேன், எ - று.

**மீநாக்ஷியம்மையை தரிசித்தவர் சொர்க்கலோகத்தையடைவர் எனப்பாடியது.**

30. முக்கட்பராபரனைச்சொக்கப்பிரானெனுமுன்னவனொ
டொக்கச்சிறந்தகயற்கண்ணைச்சந்நிதியுற்றுமிகச்
செக்கச்சிவந்தபொற்றாமரைப்பாதத்தின்சேவைக்கே
பக்கத்தடுத்தவர்சொர்க்கத்தினையெட்டிப்பார்ப்பவரே.

**இ - ள்.** முக்கண் பராபரனை - மூன்று கண்களையுடைய பராபரனை, சொக்கப்பிரான் என்னும் முன்னவனொடு ஒக்க - சொக்கநாதனென்கிற முதல்வனோடு சமமாக, சிறந்த - மேன்மை யடைந்திருக்கிற, கயல் கண்ணி - மீனாக்ஷியம்மை, (அவளது) சந்நிதி உற்று-சந்நிதியை யடைந்து, மிக செக்கச் சிவந்த - மிகுதியாகச் செவந்த, பொன் தாமரை - பொற்றாமரை மலர்போன்ற, பாதம் - திருவடிகளின், சேவைக்கு - சேவையின்பொருட்டு, பக்கத்து அடுத்தவர் - பக்கத்தில் அடுத்திருப்பவர், சொர்க்கத்தினை எட்டிப்பார்ப்பவர் - சொர்க்கலோகத்தை யெட்டிப்பார்ப்பவராவர், எ - று.

**நட்டாற்றிற் கைவிடாதேயெனப் பாடியது.**

31. மட்டார்குழலங்கயற்கண்ணம்மேயிம்மட்டென்றுதொகைக்
கெட்டாதெனதுதுயரநின்பாற்சொல்லிடச்சலிக்க
ஒட்டாரநீசெய்யலாகாது பாருன்னடிமைதன்னை
நட்டாற்றிற்கைவிட்டிடாதேபழிவெகுநாணிற்குமே.

**இ - ள்.** மட்டு ஆர் குழல் - தேன் பொருந்திய கூந்தலையுடைய, அங்கயற்கண்ணம்மே - மீநாக்ஷியம்மையே, எனது துயரம் - என் துன்பங்கள், இம்மட்டு என்று தொகைக்கு எட்டாது - இவ்வளவென்று தொகைப்படுத்துதற்கு எட்டாது, நின் பால் சொல்லி சலிக்க - உன்னிடத்துச் சொல்லிச் சலித்துக் கொள்ள, நீ ஒட்டாரம் செய்யலாகாது - நீ ஒட்டாரம்பண்ணத்தகாது, பார் - காண், உன் அடிமை தன்னை-உன்னடிமையாகிய என்னை, நடு ஆற்றில் கைவிட்

டடாதே - ஆற்றினடுவில் கைவிட்டு விடாதே, (விடுவையாயின்) பழி வெகு நாள் நிற்கும் - பழியானது உன்னிடத்தில் வெகுநாள் நிலைபெற்றிருக்கும்.

### சவுந்தரபாண்டியன் விஷயம்.

32. விரித்தான்சிகையைமகாமேருவாசுகிவில்லைவிட்டுச்
சிரித்தான்புரத்தையெரித்தான்பரகுருதேசிகன்முன்
உரித்தான்கரியையுடுத்தான்பகிரண்டத்துள்ளுலகும்
பரித்தான்மதுரைதரித்தான்சவுந்தரபாண்டியனே.

இ - ள். சவுந்தர பாண்டியன் - சவுந்தர பாண்டியனானவன், விரித்தான் சடையை - சடையை விரித்தான், மகாமேரு வாசுகி வில்லைவிட்டு - மகாமேருவாகிய வில்லையும் வாசுகியாகிய நாணையும் செலுத்தி, சிரித்தான் - சிரித்து, புரத்தை எரித்தான் - முப்புரங்களையும் நீறு ஆக்கினான், பரகுரு தேசிகன் - மேலாகிய குருநாதன், முன் கரியை உரித்தான் உடுத்தான் - முற்காலத்தில் யானையையுரித்து அதின் தோலையுடுத்தான், பகிரண்டத்துள் உலகும் - பகிரண்டத்துள்ள உலகங்களையும், பரித்தான் - தாங்கினான், மதுரை தரித்தான் - மதுரையில் தங்கினான், எ - று.

### மீனாட்சியம்மையின் சேவையால் சொர்க்கம் அடையலாம் எனப் பாடியது.

33. மைக்கார்குழற்பெண்வடிவாளைத்தென்னவன்மாமகளை
அக்காளையோன்பங்கிலார்த்தாளைமாறங்கையானவளைத்
திக்கார்தொழுங்கயற்கண்ணாளையோர்தினஞ்சேவைசெய்தால்
எக்காலமுமவர்சொர்க்காதிபோகத்திருப்பவரே.

இ - ள். மை - மேகம்போன்ற, கார் - கருநிறமுள்ள, குழல் - கூந்தலையுடைய, பெண் வடிவாளை - பெண்ணுருக் கொண்டவளை, தென்னவன் மாமகளை - பாண்டியனது சிறந்த மகளை, அக்காளையோன் பங்கில் ஆர்த்தாளை - அந்த இடபவாகநனாகிய சிவபெருமான் பாகத்திலுள்ள உலகமாதாவை, மால் தங்கை ஆனவளை - திருமாலுக்குத் தங்கையானவளை, திக்கார் தொழும் கயல் கண்ணாளை - திக்கிலுள்ளோர் வணங்குகின்ற மீனாக்ஷியம்மையை, ஓர் தினம் சேவை செய்தால் - ஒருதினம் சேவித்தால், எக்காலமும் - எந்தக்காலத்திலும், அவர் - அவர், சொர்க்காதி போகத்து இருப்பவர் - சொர்க்கமுதலாகிய போகபூமிகளில் இருப்பவராவர், எ - று.

### மீனாக்ஷியம்மையை வணங்கின சேநக்காற்பாடியது.

34. வண்டிட்டகூந்தலும்வாரிட்டகொங்கைவரைகளுங்கற்
கண்டிட்டசொல்லுங்கயற்கண்ணிபாதத்தைக்கை தொழுதேன்
தண்டிட்டடிக்குமறலிவந்தாற்சன்னையிட்டுநகைத்
துண்டிட்டுவாசிறுபிள்ளாயென்றாருக்கனுப்புவனே.

இ - ள். வண்டு இட்ட கூந்தலும் - வண்டுகள் மொய்த்த கூந்தலையும், வார் இட்ட கொங்கைவரைகளும் - கச்சணிந்த தனங்களாகிய மலைகளையும், கற்கண்டு இட்ட சொல்லும் - கற்கண்டுபோன்ற சொல்லையுமுடைய, கயற்கண்ணி பாதத்தை - மீனாக்ஷியம்மையின் திருவடியை, கைதொழுதேன் - கை கூப்பி வணங்கினேன், தண்டு இட்டு அடிக்கும் மறலிவந்தால் - தண்டாயுதத்தைக்கொண்டு அடிக்கின்ற யமன்வந்தால், கண்ணையிட்டு நகைத்து - சாடை செய்து சிரித்து, சிறுபிள்ளாய் - சிறுபிள்ளையே, உண்டிட்டுவா என்று - உண்டு வாவென்று, ஊருக்கு அனுப்புவன் - ஊருக்கு அனுப்புவேன், எ - று.

மீனாக்ஷியம்மையை துதித்து பாடியது.

35. பொன்னே பொருந்தற்புதமே பொலிந்தமென் பூந்திருவே
தென்னே சிறந்தசெந்தேனே திருந்தருட் சின்மயமே
அன்னே யமுதே யருளே யரர்க்கரும் பொருளே
மின்னே விரிசுடரே மதுராபுரி மீனாக்ஷியம்மையே.

இ - ள். பொன்னே - பொன்னானவளே, பொருந்து அற்புதமே - பொருந்திய ஆச்சரிய ரூபமே, பொலிந்த மென் பூந்திருவே - பொலிவுபெற்ற மெல்லிய தாமரையாகிய பூவில் வீற்றிருக்கின்ற திருமகளே, தென்னே சிறந்த செந்தேனே - அழகு மேன் சிறந்த செந்தேனே, திருந்து அருள் சின்மயமே - திருந்தமாகிய அருளையுடைய ஞானமயமே, அன்னே - தாயே, அமுதே - அமிர்தமே, அருளே - அருளுருவமே, அரர்க்கு அரும்பொருளே - தேவர்களுக்கும் அருமையாகிய பொருளே, மின்னே - மின்னலைப்போன்றவளே, விரிசுடரே - பெருஞ்சுடரே, மதுராபுரி - மதுரையம்பதியில் எழுந்தருளிய, மீனாக்ஷியம்மையே - மீனாக்ஷியம்மையே, எ - று.

மீனாக்ஷியம்மை விருத்தம்.

36. தேட்டேதுமில்லைகொடுப்பாருமில்லைதிரத்தவுழவில்
பூட்டேருமில்லையிதெல்லாமெம்பாலில்லைபூர்ணவரங்
கேட்டேனதற்குப்பிறிதில்லையேயினிக்கேட்கவுநான்
மாட்டேனுன்மேற்பழிபோட்டேன்மதுரைமன்னோன்மணியே.

இ - ள். தேட்டு ஏதும் இல்லை - தேடினபொருள் சிறிதுமில்லை, கொடுப்பாரும் இல்லை - கொடுப்பவரும் இல்லை, திரத்த உழவில் பூட்டு ஏரும் இல்லை - உறுதியாகிய உழுதொழிலில் பூட்டுதற்குரிய ஏரும் இல்லை, இது எல்லாம் எம்பால் இல்லை - இவைகளெல்லாம் எம்மிடத்தில் இல்லை, பூர்ண வரம்கேட்டேன் - முழுவரம்கேட்டேன், அதற்கு பிறிது இல்லையே - அதற்கும் மறுமொழியில்லையே, நான் இனி கேட்கவும் மாட்டேன் - நான் இனி கேட்கவுமாட்டேன் உன்மேல் பழிபோட்டேன் - உன்மேல் சிந்தையைச் சுமத்தினேன், மதுரை மன்னோன்மணியே, எ - று.

இதுவுமது.

37. உள்ளக்கவலையெலாம்விள்ளும்போதுமுனதுமனம்
எள்ளத்தனையிரங்காதிருந்தாயெளியேனினிமேல்
தள்ளப்புறத்தினிலென்றாலும்போவதுதானில்லைப்பொன்
வள்ளத்தமுதுண்ணுங்கிள்ளாய்கடம்பவனவல்லியே.

இ-ள். பொன் வள்ளத்து - பொற்கிண்ணத்திலுள்ள, அமுது உண்ணும் - அமிர்தத்தை யுண்ணுகின்ற, கிள்ளாய் - கிளியே, கடம்பவனவல்லியே - கடம்பவனத்திலுள்ள கொடிபோல்வாளே, உள்ளக்கவலையெல்லாம் விள்ளும்போதும் - மனத்துன்பத்தையெல்லாம் சொல்லும்போதும், உனது மனம்-உன் மனமானது, எள் அத்தனை இரங்காது இருந்தாய் - எள்ளளவாயினும் இரங்காதிருந்தனை, எளியேன் - எளியேன், அப்புறத்தினில் தள் என்றாலும் - அப்புறத்தில் தள்ளென்று நிராகரித்தாலும், இனிமேல் போவதுதான் இல்லை-இனிப்போவதோ இல்லை, எ-று.

இதுவுமது.

38. எப்படியெப்படிச்சொன்னாலுநானிரங்கேனெனவே
அப்படியப்படிநீயிருக்கின்றவதிசயத்தை
இப்படியிப்படியென்றாகிலுமெனக்கேதெரியச்
செப்படிசெப்படியம்மாமதுரைச்சிவாநந்தியே.

இ-ள். மதுரைச்சிவாநந்தியே - மதுரையிலெழுந்தருளிய சிவாநந்தியே, எப்படியெப்படி சொன்னாலும் - எவ்வெவ்விதமாய்ச் சொல்லினும், நான் இரங்கேன் என - நானிரங்கமாட்டேனென்று, அப்படியப்படி நீ யிருக்கின்ற அதிசயத்தை-பராமுகமாய் நீயிருக்கிற அதிசயத்தை, இப்படி யிப்படியென்று ஆகிலும் - இப்படியிப்படியென்று விவரித்தாயினும், எனக்குத் தெரியச் செப்படி செப்படி அம்மா - எனக்குத் தெரியும்படி சொல்லடி சொல்லடி அம்மா.

இதுவுமது.

39. செப்பத்திலுன்னைத் தொழவாயிரங்கண்ணுஞ் செல்லும்பொல்
தப்பத்தவறத்தொழுதாலுஞ்சொக்கர்தடம்புயத்துக் [லேன்
கொப்பத்திரண்டகொங்காயன்னவயவெயொன்றுக்கொன்று
முப்பத்திரண்டுகண்வேண்டுங்கண்டாயென்முகத்தினுக்கே.

இ-ள். சொக்கர் தடம்புயத்துக்கு ஒப்ப - சொக்கநாதரது பெரியதோள்களுக்கேற்க, திரண்ட கொங்காய் - திரண்டிருக்கிற தனங்களையுடையவளே, செப்பத்தில் உன்னைத்தொழ - செப்பமாக உன்னைச் சேவிக்க, ஆயிரம் கண்ணும் செல்லும் - ஆயிரங்கண்ணிருந்தாலும் செல்லும், பொல்லேன் - தீயே

ன், தப்பத்தவறத் தொழுதாலும் - தப்பத்தவறவணங்கினாலும், உன் அவயவம் ஒன்றுக்கு ஒன்று ஆ-உன் அவயவம் ஒன்றுக்கு ஒருகண்விழுங்காடு, என் முகத்தினுக்கு—, முப்பத்திரண்டு கண்வேண்டும்-முப்பத்திரண்டு கண்கள் அமைந்திருக்கவேண்டும், எ - று.

சொக்கநாதர்துதி.

40. துடியார்கரத்துமதுரேசரேயும்மைத்துள்ளியசேற்
கொடியானடித்ததுங்குற்றமன்றேகிழக்கோதையிவள்
அடியாளென்றேசுட்டபிட்டையெல்லாமள்ளியள்ளித்தின்று
வடியாநதியிற்கரைத்துவிட்டீரவள்வல்வினையே.

இ - ள். துடி ஆர் கரத்து மதுரேசரே - உடுக்கைபொருந்திய கையையுடைய மதுரேசரே, உம்மை - உம்மை, துள்ளிய சேல் கொடியான் அடித்ததும் - துள்ளிய மீனக்கொடியை யுடையவனாகிய பாண்டியன் அடித்ததும், குற்றம் அன்றே - குற்றமல்லவா, கிழக்கோதை இவள் அடியாள் என்றே - கிழப்பெண்ணாகிய இவள் நமது அடியவளென்று நினைத்தே, சுட்ட பிட்டையெல்லாம் அள்ளி யள்ளித்தின்று - அவள்சுட்ட பிட்டையெல்லாம் வாரிவாரியுண்டு, அவள்வல்வினை - அவளதுவலியவினைகளை, வடியாநதியில் கரைத்து விட்டீர் - வடியாத வையைநதியில் கரைத்துவிட்டீர், எ - று.

சிவகாமசவுந்தரி துதி.

41. கரஞ்சொன்னங்கண்டதெந்நாளோதொடுத்தகலிக்கெவர்கள்
உரஞ்சொன்னதோவந்திறுத்ததிவ்வேளையுதவுனக்கே
பரஞ்சொன்னேனின்னம்பராமுகமேதிதுபத்துலட்சம்
தரஞ்சொன்னதாயெண்ணுவாய்சிவகாமசவுந்தரியே.

இ - ள். சிவகாமசவுந்தரியே - சிவகாமசுந்தரியம்மையே, கரம் சொன்னம் கண்டது எந்நாளோ - கையானது பொன்னைக்கண்டது எந்தநாளிலோ, தொடுத்த கலிக்கு - பற்றிய வறுமைக்கு, எவர்கள் உரம் சொன்னதோ - யாவர் உறுதி சொன்னதோ, இவ்வேளைவந்து இறுத்தது - இவ்வேளையில்வந்து தங்கிற்று, உதவு - உதவிசெய்யவேண்டும், உனக்கே பரம் - உனக்கே பாரம், சொன்னேன் - சொல்லிவிட்டேன், இன்னம் பராமுகம் ஏது - இன்னம் பராமுகமென்ன, இது - இதையே, பத்துலக்ஷம் தரம் சொன்னதாய் எண்ணுவாய் - பத்துலக்ஷம்தரம் சொன்னதாகத் திருவுளம் பற்றுவாயாக, எ - று.

போஜனைநோக்கிக் கூறியது.

42. ஒருபாதிமால்கொளமற்றொருபாதியுமையவள்கொண்
டொருபாதியாநுமிறந்தான்புராரியிருநதியோ

பெருவாரிதியிற்பிறைவானிற்சர்ப்பம்பிலத்திற்கற்ப
தருவானபோஜகொடையுன்கையோடென்கைதந்தனனே.

இ - ள். ஒருபாதி மால்கொள - ஒருபாதியைத் திருமால் கொள்ள, மற்றொருபாதி உமையவள்கொண்டு - மற்றொருபாதியை உமாதேவியானவள் கொள்ள, இருபாதியாலும் - இரண்டு பாதியையும் தந்ததனால், புராரி இறந்தான் - சிவபெருமான் இறந்துபோயினான், (ஆயினும்) இருநதியோ - பெரிய கங்காநதியையோ, பெருவாரிதியில் தந்தனன் - பெரிய கடலில் விட்டான், பிறை வானில் தந்தனன் - பிறையை ஆகாயத்தில் விடுத்தான், சர்ப்பம் பிலத்தில் தந்தனன் - பாம்புகளை புற்றில் விடுத்தான், கற்பதரு ஆன போஜ கொடை உன் கை தந்தனன் - கற்பகமரம்போன்ற போஜராஜனே ஈகைத்தன்மையை உன் கையிற்கொடுத்தான், ஓடு என்கை தந்தனன் - ஓட்டை என்கையிற் கொடுத்தான், எ - று.

பிலம் - பாதாளம் எனினுமாம்

தலைவிகூற்று - பாலனைப்பழித்தல்

43. அரும்பாலகாமுனம்பூமணஞ்சொற்பொருளாகமுயிர்
கரும்பாஞ்சுவையெள்ளுமெண்ணெயும் போலொத்தகாதலரைப்
பெரும்பாலினல்லன்னங்கங்காசலத்தைப்பிரிப்பதுபோல்
சுரும்பாம்புலவர்யமனாலைசெக்கெனத்தோன்றினையே.

இ - ள். அருபாலகா - அருமையாகிய பாலகனே, முன்னம் - முன்னே, பூமணம்போல் - பூவும் மணமும்போலவும், சொல்பொருள்போல் - சொல்லும் பொருளும்போலவும், ஆகம் உயிர் - உடலும் உயிரும்போலவும், கரும்பு சுவை போல் - கரும்பும் சுவையும்போலவும், எள்ளும் எண்ணெயும்போல் - எள்ளு மெண்ணெயும்போலவும், ஒத்த - என்னோடு ஒற்றுமைப்பட்டிருந்த, காதலரை - பிராணநாயகரை, நல் அன்னம் - அழகிய அன்னப்பறவையானது, பெரும்பாலில் - மிகுதியாகிய பாலினின்றும், கங்காசலத்தை - கங்கைநீரை, பிரிப்பது போல் - பிரித்தல்போல, சுரும்பு என - வண்டுபோலவும், ஆம்புலவர் என-நல்ல புலவர்போலவும், யமன் என - யமன் போலவும், ஆலை என - ஆலைபோலவும், செக்கு என - செக்குப்போலவும், தோன்றினை - பிறந்தாய், எ - று.

இதுவுமது

44. அரும்பாக்கியகொங்கைபாலாக்கியுமுங்களப்பனெஞ்சை
இரும்பாக்கியென்னெஞ்சைப்பித்தளையாக்கியவ்வேந்திழையைக்
கரும்பாக்கியென்னையும்வேம்பாக்கிவ்வண்ணங்கண்டனையே
பெரும்பாக்கியமல்லவோமகனேயுனைப்பெற்றதுவே.

இ - ள். அரும்பு ஆக்கிய கொங்கைபால் ஆக்கியும் - தாமரை யரும்புபோன்ற தனங்களைப் பாலாக்கியும், உங்கள் அப்பன் நெஞ்சை - உங்கள் தகப்பன் மனத்தை, இரும்பு ஆக்கி—, என்னெஞ்சை—, பித்தளை ஆக்கி, அ வந்திழையை கரும்பு ஆக்கி-அந்தமாதைக் கரும்பாக்கி, என்னையும் வேம்பு ஆக்கி—, இவ்வண்ணம் கண்டனையே-இந்தப் பிரகாரமாகப் பார்த்தாயே, மகனே—, உன்னைப்பெற்றது பெரும்பாக்கியம் அல்லவோ—, எ - று.

கல்விமேற்பிரிதல்.

45. விண்ணாக் குமாமதிகாயவெங்காமவெரிகொளுந்தப்
பண்ணாக் குமாமொழிமாதங்கமாம்பஞ்சபூதியம்போம்
கண்ணாக் குமூக்குச்செவியாக்கையற்றகடத்திலங்கம்
பெண்ணாக் குவார்தமைப்போலோதிவாரும்பிரிபவரே.

இ - ள். விண் ஆக்கும் மாமதிகாய - ஆகாயத்திலுள்ள பெரிய சந்திரன் சுடுதலாலும், வெங்காம எரிகொளுந்த - வெப்பமாகிய காமத்தீயானது சுடுதலாலும், பண் ஆக்கும் மாமொழிமாது - பண்போலும் மொழியையுடைய என்பெண்ணானவள், அங்கம் ஆம் - எலும்பானவள், பஞ்ச பூதியம்போம் - பஞ்சபூதிகமாகிய உடம்பழியும், கண் காது மூக்கு செவி யாக்கை அற்ற - கண்முதலியவையில்லாத, கடத்தில் - குடத்தில் உள்ள, அங்கம் - எலும்பை, பெண் ஆக்குவார் தமைப்போல் - பெண்ணாக்குவாராகிய திருஞானசம்பந்தரைப்போல், ஓதிவாரும் - படித்துவாரும், பிரிபவரே - பிரிகின்றவரே, எ - று.

ஒருவிடன் ஒருநாயகியை நோக்கிக்கூறியது.

46. உனக்கின்றியான்செய்தகுற்றமொன்றில்லையுனைப்பிரிந்தால்
வனக்குன்றிலேறிவிழவறியேன்வண்மைசேர்மயிலே
எனக்கென்றுவட்டமிட்டண்ணாந்துவிம்மியிருக்குமுன்றன்
தனக்குன்றிலேறிவிழுவேனின்னல்குற்றடாகத்திலே.

இ - ள். வண்மைசேர் மயிலே - வளம்பொருந்திய மயில்போல்வாளே, உனக்கு இன்றுயான்செய்த குற்றம் ஒன்று இல்லை—, உன்னைப் பிரிந்தால்—, வனக்குன்றில் ஏறிவிழ அறியேன்-காட்டிலுள்ள மலைமீதேறி விழுதற்கு அறியமாட்டேன், எனக்கென்று வட்டமிட்டு - எனக்கென்றே வட்டமிட்டு, அண்ணாந்து - நிமிர்ந்து, விம்மி இருக்கும் - பூரித்திருக்கிற, உன்றன் தனக்குன்றில் ஏறி - உன் கொங்கைகளாகிய மலைகளின் மேலேறி, நின் அல்குல் தடாகத்திலே விழுவேன் - உன் அல்குலாகிய தடாகத்தில் வீழ்வேன், எ - று.

முநகர் விஷயம்.

47. கண்ணும்புதிட்டநல்லாள்காட்டமோதிரஞ்சூட்டமலர்க்
கண்ணைரக்கூட்டவிராணுங்கிருக்கக்கதிர்க்கம்பிபோல்

எண்ணாநடுவிரற்கேதாமுலோபருக்கேதுகண்டாய்
கண்ணார்நுதலண்ணல்சேய்வணிகாசெந்திற்காத்தவனே.

இ - ள். கண் ஆர் நுதல் அண்ணல்சேய் - நெற்றிக்கண்ணையுடைய பெரியோனாகிய சிவபெருமானுக்குப் புதல்வனே, வணிகா - செட்டியே, செந்தில் காத்தவனே - திருச்செந்தூரைக் காத்தவனே, சுண்ணாம்புதீற்ற - சுண்ணாம்பு தடவவும், நல் ஆள் காட்ட - நல்ல ஆளைக்காட்டவும், மோதிரம்சூட்ட - மோதிரந் தரிக்கவும், மலர்கண்ணாைக் கூட்ட - தாமரை மலர்போன்ற கண்களையுடைய மாதரைச் சேர்க்கவும், விரல்நான்கு இருக்க - நான்குவிரல்களிருக்க, கதிர்க்கம்பிபோல் எண்ணாநடுவிரற்கு - கதிர்க்கம்பிபோல்நின்ற மதிக்கப்படாத நடுவிரலால், ஏது ஆம் - யாது பிரயோஜனமாகும், (அதுபோல) உலோபருக்கு ஏது - லோபிகளால் என்ன பிரயோஜனமுண்டாகும், எ - று.

தென்மாவைக்கறுப்பன்மீது பாடியது.

48. திணம்போதத்தள்ளிப்பெரும்பூதம்போலப்பின்னேற்றுச்செத்த
பிணம்போற்கிடந்துபுரளுவர்காண்பிறர்க்கீட்டிவைத்த
பணம்போனபின்புவிவேகமுண்டாகுமப்பஞ்சைகள்வங்
கணம்போதும்போதுங்கறுப்பாதென்மாவையிற்காவலனே.

இ - ள். கறுப்பா - கறுப்பனே, தென்மாவையில் காவலனே - தென்மாவையிலுள்ள வேந்தனே, திணம்போதத் தள்ளி - கொழுப்புமிகத்தள்ளி, பெரும்பூதம்போல - பெரிய பேய்போல, பின் - பின்னே, நேற்றுசெத்த, பிணம்போல் கிடந்து புரளுவர் - சவத்தைப்போலக் கிடந்து புரள்வார், பிறர்க்கு ஈட்டிவைத்த - பிறர்பொருட்டுச் சேர்த்துவைத்த, பணம்போனபின்பு - திரவியம் போனபின்பு, விவேகம் உண்டாகும் - அறிவுண்டாகும், அ பஞ்சைகள் - அந்த அற்பருடைய, வங்கணம் - சிநேகம், போதும் போதும் - அமையும் அமையும்.

இதுவுமது.

49. ஏவைக்குங்கூன்சிலைதொட்டானனங்கனிருவிசும்பின்
தீவைக்குந்திங்கட்குடையெடுத்தான்றென்றற்றேருகைத்தான்
காவைக்குங்கண்மணிகஸ்தூரியின்றகறுப்பன்வரை
மாவைக்கும்பாவைக்கும்பூவைக்கும்போதுவடுவைக்குமே.

இ - ள். அநங்கன் - மன்மதன், ஏவைக்கும் - அம்புதொடுத்தற்குரிய, கூன்சிலை தொட்டான் - வளைவாகிய வில்லைத் தொட்டனன், இருவிசும்பின் - பெரிய ஆகாயத்திலுள்ள, தீவைக்கும் - நெருப்பின் குணத்தைக்கொண்டிருக்கிற, திங்கள்குடை எடுத்தான் - சந்திரனாகிய குடையைத் தாங்கினான், தென்றல்தேர் உகைத்தான் - தென்றலாகிய தேரைச்செலுத்தினான், காவைக்கும் கண்மணி - கற்பகத் தருவின்குணம் அமைந்த எமது கண்மணிபோன்ற, கஸ்

தூரி ஈன்ற கறுப்பன்வரை - கஸ்தூரி யானவன் பெற்றெடுத்த கறுப்பனது மலையில், மாவைக்கும் பாவைக்கும் - பெருமையமைந்த என் பெண்ணுக்கும், பூவைக்கும் - மலர்களையேவுவன், போது வடுவைக்கும் - மலர்களின் வடுவை யுண்டாக்குவன், எ - று.

துறை - ஒருநாயகன் ஒருநாயகியின் முகமுதலியவற்றைப் புகழ்ந்துபாடியது.

50. பொன்னுகத்தார்பணிமாயோன்கரந்தைப்பொருப்பில்வரும்
மின்னுண்முகங்கண்டனஞ்சாயல்போற்பெறவேண்டியன்றோ
வந்நாட்கமலமலர்கடன்மேருவணிமயிலும்
தன்னாலயனரிசங்கரன்வேலைனைத்தாங்கியதே.

இ - ள். பொன் நாகத்தார் பணி மாயோன் - பொன்னுலகத்தார் வணங்குகின்ற மாயவனது, கரந்தைப் பொருப்பில் வரும் - திருக்கரந்தை மலையில் தோன்றிய, மின்னுள் - இந்த மாதினது, முகம் கண் தனம் சாயல்போல் பெற வேண்டி அன்றோ - முகம் கண் கொங்கை சாயல் என்னுமிவைகளைத் தாமும் பெறவிரும்பியல்லவா, அந்நாள் - அந்தக்காலத்தில், கமல மலர் - தாமரை மலரும், கடல் - திருப்பாற்கடலும், மேரு - மேருமலையும், அணி மயிலும் - அழகிய மயிலும், அயன் அரி சங்கரன் வேலனை தாங்கியது - (முறையே) பிரமனையும் திருமாலையும் சிவனையும் முருகனையும் சுமந்தது, எ - று.

சிவபிரானை நிந்தாஸ்துதியாகப் பாடியது.

51. குண்டைக்கொருத்தனைக்கூத்தாடும்பித்தனைக்குண்டுணியைக்
கண்டக்கறுப்பனைப்பிள்ளையைத்தின்னியைக்காணவயன்
மண்டைக்கரத்தனைக்கண்ணப்பனெச்சிலைவாரியுண்ட
பண்டைப்பறையனையோதேவனென்றுபகருவதே.

இ - ள். குண்டைக்கு ஒருத்தனை - இடபத்தையுடைய ஒருத்தனும், கூத்து ஆடும் பித்தனை - நடனம்பண்ணுகிற பித்தனும், குண்டுணியை - கோட்சொல்வோனும், கண்டக் கறுப்பனை - கண்டத்தில் கருப்பையுடையவனும், பிள்ளையைத் தின்னியை - பிள்ளையைத் தின்பவனும், காண - யாவருங்காண, அயன் மண்டைகரத்தனை - பிரமனுடைய தலையோட்டைக் கையிலேந்தினவனும், கண்ணப்பன் எச்சிலை வாரி உண்ட - கண்ணப்பனென்னும் வேடனது எச்சிலைவாரியுண்ட, பண்டை பறையனையோ - பண்டையாகிய பறையனும் ஆகிய இவனையோ, தேவன் என்று பகருவது-தேவனென்று சொல்லுவது, எ-று

பறையன் - சத்தியையுடையவன் என வேறொருபொருள்.

நிந்தாஸ்துதி.

52. அந்தக்கரும்பள்ளியாசாங்குசத்திகண்ணம்படைச்சி
நைந்தவிடைச்சிகுறத்திக்குமாரிகவில்வலைச்சி

## ௪௧௪ பலபட்டடைச் சொக்கநாதப்புலவர் பாடல்.

சந்தம்புழுக்கச்சிபாம்பணையோனுக்குத்தங்கச்சியாம்
இந்தப்பரைச்சியையோசிவகாமியென்றேத்துவதே.

இ - ள். அந்தம் கரும் பள்ளி-முடிவில் கரும் பள்ளியும், பாசாங்குசத்தி - பசுமையாகிய குசத்தியும், கண் அம்படைச்சி - பெருமையுள்ள அம்பட்டத்தியும், நைந்த இடைச்சி - மெலிந்த இடைச்சியும், குறத்திக்கு மாமி-குறத்திக்கு மாமியும், நவில் வலைச்சி - சொல்லப்பட்ட வலைச்சியும், சந்தம் புழுக்கச்சி-அழகிய புழுக்கைச்சியும், பாம்பணையோனுக்கு தங்கச்சி - பரவிய பண்ணைக்காரனுக்குத் தங்கைச்சியும், ஆம் - ஆகிய, இந்தப் பரைச்சியையோ - இந்தப்பறைச்சியையோ, சிவகாமியென்று ஏத்துவது-சிவகாமியம்மையென்று யாவரும் துதிப்பது, எ - று.

அந்தம் கரும்பு அள்ளி - அழகாகிய கரும்புவில்லைத் தாங்கினவள், பாசாங்குசத்தி - பாசம் அங்குசம் என்பவற்றை யுடையவள், கண் அம்படைச்சி-கண் அழகிய வேற்படைபோல்பவள், நைந்த இடைச்சி - தளர்ந்த இடையையுடையவள், குறத்திக்கு மாமி - வள்ளிக்கு மாமி, சந்தம் புழுக்கச்சி - சந்தநம் புனுகுகளையணிந்தவள், பாம்பணையோனுக்குத் தங்கைச்சி - சர்ப்பசயநனாகிய திருமாலுக்குத் தங்கை, பரைச்சி - பராசத்தி, என வேறுமொருபொருள் தோன்றுதல் காண்க. வலைவீசின சிவபிரான் தேவியாதலால் வலைச்சி யென்றார்

### கழிக்கரைப்புலம்பல்.

53. நிலமேழளந்தநெடுமால்பணியுநிமலர்பொன்னம்
பலமேவுதில்லைப்பதிநடராயர்பனிவரையிற்
கலமேதிமிங்கலமேசங்கமேநற்கயிலனமே
சலமேசலஞ்சலமேயென்றுதீருமென்சஞ்சலமே.

இ - ள். நிலம் ஏழ் அளந்த நெடுமால் - ஏழுலகங்களையும் அளந்த நெடுமால், பணியும் - வணங்குகின்ற, நிமலர் - நின்மலர், பொன்னம்பலம் மேவு-பொற்சபை பொருந்திய, தில்லைப்பதி - தில்லைநகரத்தில், நடராயர் - நடநம் பண்ணுவதில் சிறந்தவர், (அவரது) பனிவரைமேல் - குளிர்ந்த மலையின்மீது, கலமே - மரக்கலமே, திமிங்கலமே - திமிங்கலமீனே, சங்கமே - சங்கே, நல்கயில் அனமே - அழகிய பிடரையுடைய அன்னமே, சலமே - நீரே, சலஞ் சலமே - சலஞ்சலமென்னுஞ் சங்கே, என் சஞ்சலம் என்று தீரும் - என் மனோதுக்கம் என்று நீங்கும், எ - று.

### காளத்தியென்னும் சீமான்மீது பாடியது.

54. பொரடக்கயம்பிடியென்றூன்மதனுமிப்பூவையுமா
தரடக்கமுஞ்சற்றறிந்திலளேமலர்த்தாள்வணங்கா

முரடக்கவுடக்கொடிமன்னர்வெற்றிமுடிபிடுங்குங்
கரடக்களிற்றண்ணலேவல்லைமாநகர்க்காளத்தியே.

இ - ள். மலர் தாள் வணங்கா - தாமரை மலர்போன்ற திருவடியை வணங்காத, முரடக் கவுடக்கொடி மன்னர் - முரடராகிய கவுடதேயத்துக் கீர்த்தி பெற்ற அரசருடைய, முடி பிடுங்கும் - முடிகளைப் பறிக்கின்ற, கரடக்களிற்று அண்ணலே - மதயானைகளையுடைய பெரியோனே, வல்லைமாநகர் காளத்தியே - வல்லைமாநகரினுள்ள காளத்தியென்னும் சீமானே, மதனும் - மன்மதனும், பொர - போர்செய்வதற்கு, டக்கயம் பிடி என்றான் - கொடியைப்பிடி யென்றான், இப் பூவையும் - இந்தப் பெண்ணும், மாதர் அடக்கமும் சற்று அறிந்திலளே - மாதர்க்குரிய அடக்கத்தையும் சிறிதும் உணர்ந்திலளே, எ - று.

புலவன் முதலியோரில்லையாயின் சரசுவதிக்கு
ஒருபயனுமில்லையெனப் பாடியது.

55. கவியாகுமாதினைப்பெற்றோன் புலவன்கற்றோனன்னையாம்
செவியாரக்கேட்டுணர்வான்சகோதரன்செந்தமிழ்க்கு
தவியாவருமையறிவான்பதியவன்றானில்லையேல்
புவியாகுமண்ணுக்கென்பலமாமந்தப்பூங்கொடிக்கே.

இ - ள். புலவன் கவி ஆகும் மாதினைப் பெற்றோன் - புலவனே கவியாகிய பெண்ணைப்பெற்றவனாவான், கற்றோன் அன்னை ஆம் - அந்தக்கவியைக் கற்றவனே தாயாவான், செவி ஆர கேட்டு உணர்வான் சகோதரன் - காதாரக் கேட்டறிவோனே சகோதரனாவான், செந்தமிழ்க்கு உதவியாய் அருமை அறிவான்பதி - செந்தமிழ்க்கவிகளுக்கு உதவிசெய்து அவற்றின் அருமையையறிபவனே நாயகனாவான், அவன் தான் இல்லையேல் - அவனும் இல்லையாயின், அந்தப் பூங்கொடிக்கு - அந்தப் பூங்கொடிபோல் வாளுக்கு, புவி ஆகும் மண்ணுக்குள் என் பலம் ஆம் - புவியாகிய மண்ணுலகில் என்ன பயன் உண்டாகும், எ - று.

நிந்தாஸ்துதி.

56. சேராதவேடன்செருப்பாலுதைக்கவுந்தீண்டவுந்தண்
ணீர்வாயுமிழவுமுச்சிட்டம்போடவுநீண்டசிலைத்
தாராலடிக்கவுங்கண்ணீர்ததும்பவும்தாய்தமர்கள்
ஆராகிலுமில்லையோதிருக்காளத்தியப்பனுக்கே.

இ - ள். சேராத வேடன் - பொருத்தமில்லாத வேடனானவன், செருப்பால் உதைக்கவும் - செருப்பாலுதைக்கவும், தீண்டவும் - தொடவும், தண்ணீர் வாய் உமிழவும் - தண்ணீரை வாயினால் உமிழவும், உச்சிட்டம் போடவும் - எ

சிலைப்போடவும், நீண்ட சிலை தாரால் அடிக்கவும் - நீண்ட வில்லினது தண்டாலடிக்கவும், கண்ணீர் ததும்பவும் - கண்ணீர் துளும்பவும், திருக்காளத்தியப்பனுக்கு - திருக்காளத்தி நாதனுக்கு, தாய் தமர்கள் ஆராகிலும் இல்லையோ- தாய் சுற்றத்தார் என்னும் ஒருவரும் இல்லையோ, எ - று.

வேடன் என்றது கண்ணப்ப நாயனாரை. நீண்ட சிலைத்தாராலடித்தது அருச்சுனன். தாய் தமரிருந்தால் இப்படிசெய்யார் என்பது கருத்து.

தட்டானைக்குறித்துப் பாடியது.

57. ஒட்டாகவொட்டியுங்காற்பொன்னின் மாப்பொன்னுலோபமதாய்த்
தெட்டாதிரான்பணிசெய்யாதிரான்செம்பொன்மேருவினைக்
கட்டாகக்கட்டிக்கடுகளவாய்நிறைகாட்டவல்ல
தட்டானுக்கஞ்சியல்லோவணிந்தான்சிவன்சர்ப்பத்தையே.

இ - ள். ஒட்டாக ஒட்டியும் - பற்று உண்டாக ஒட்டியும், கால் பொன்னில் - கால் வராகனெடைப் பொன்னில், மா பொன் - ஒரு மாவராகனெடைப் பொன்னை, உலோபமதாய் தெட்டாது இரான்-லோபமாக ஏமாத்தாமல் இரான், பணி செய்யாது இரான் - ஆபரணங்களைச் செய்யாமலிரான், செம்பொன் மேருவினை - செம்பொன் மலையாகிய மேருவை, கட்டாகக்கட்டி - கட்டாகக்கட்டி, கடுகு அளவாய் - கடுகளவாக, நிறை காட்டவல்ல - எடை காட்டவல்ல, தட்டானுக்கு அஞ்சி அல்லோ - கம்மாளனுக்கு பயந்தல்லவா, சிவன் சர்ப்பத்தை அணிந்தான் - சிவன் பாம்பையணிந்தான், எ - று.

வெள்ளிமலை பொன்மலை முதலியவற்றை யுடையவனாயிருக்கிற சிவபெருமான் பாம்பையணிந்தது கம்மாளன் ஏமாத்துவனென்னும் அச்சத்தாலே யாமென்பது கருத்து.

தலைவிகூற்று.

58. ஏராட்டும்பூந்தொங்கன்மோகனக்காரற்கினியசுகப்
பாராட்டநானினியாளல்லவேபசும்பொற்குழவி
தாராட்டவுஞ்சங்கிற்பால்பிள்ளைக்கூட்டித்தடவிமஞ்சள்
நீராட்டமையிடப்போமேயெனக்குள்ளநேரமுமே.

இ - ள். பசும்பொன்குழவி தாராட்டவும் - பசும்பொன் மயமாகிய குழந்தையைத் தாலாட்டவும், சங்கில் பால் பிள்ளைக்கு ஊட்டி - சங்கிலுள்ளபாலைப் பிள்ளைக்கு உண்பித்து, மஞ்சள் தடவி - மஞ்சளைப்பூசி, நீராட்ட - நீராட்டவும், மையிட - மையிடவும், எனக்கு உள்ள நேரமும்போமே - எனக்குள்ள காலம் முழுதும் கழியுமே, (ஆதலால்) ஏர் ஆட்டும் பூதொங்கல்-அழகாக அசை

க்கப்படுகிற பூமாலையைத்தரித்த, மோகனக்காரற்கு - என்பிராணநாயகனுக்கு, இனியசுகம்பாராட்ட - இனிதாகிய இன்பத்தை யுதவுதற்கு, நான் இனி ஆள் அல்ல - நான் இனி உரியவளல்ல, எ - று.

படிக்காசுப்புலவர்பாடலைப் புகழ்ந்துபாடியது.

59. மட்டாருந்தென்களந்தைப் படிக்காசனுரைத்ததமிழ்வரைந்தவேட்டைப், பட்டாலேசூழ்ந்தாலுமூவுலகும்பரிமளிக்கும்பரிந்தவேட்டைத், தொட்டாலுங்கைமணக்குஞ் சொன்னாலும் வாய்மணக்குந்துய்யசேற்றில், நட்டாலுந்தமிழ்ப்பயிராய் விளைந்திடுமேபாட்டினறுநளினந்தானே.

இ - ள். மட்டு ஆரும் - தேன்பொருந்திய பூஞ்சோலைகள் சூழ்ந்த, தென்களந்தை - தென்களந்தையிலுள்ள, படிக்காசன் - படிக்காசுப் புலவன், உரைத்த - சொன்ன, தமிழ்வரைந்த ஏட்டை - தமிழ்ப்பாடலெழுதிய ஏட்டை, பட்டாலே சூழ்ந்தாலும் - பட்டினல் சுற்றினுலும், மூவுலகும் பரிமளிக்கும் - மூன்றுலகங்களிலும் மணக்கும், பரிந்து அவ்வேட்டைத்தொட்டாலும் - விரும்பி அந்த ஏட்டைத் தீண்டினுலும், கைமணக்கும் - தொட்டகைமணக்கும், சொன்னாலும் வாய்மணக்கும் - சொன்னாலும் சொன்னவாய் மணக்கும், துய்ய - பரிசுத்தமாகிய, சேற்றில் நட்டாலும் - சேற்றில் நட்டுவைத்தாலும், தமிழ்ப்பயிராய் விளைந்திடும் - தமிழ்ப்பயிராகி விளையும், பாட்டினறு நளினந்தான் - (இப்படியாவதற்குக் காரணம்) பாட்டினது மிக்க நயந்தான், எ - று.

செங்குன்றையூரனைப் புகழ்ந்துபாடியது.

60. ஆலெங்கேயங்கேயரும்பறவையாற்றுயிலும்
மாலெங்கேயங்கேமலர்மடந்தை - கோலஞ்சேர்
செங்கேதகைமணக்குஞ்செங்குன்றையூரனெங்கே
அங்கேயிரவலரெல்லாம்.

இ - ள். ஆல் எங்கே - (பழுத்த) ஆலமரம் எங்குண்டோ, அங்கே - அவ்விடத்தே, அரும்பறவை - அருமையாகிய பறவைகள் யாவுமுண்டு, ஆல் துயிலும் மால் எங்கே - ஆலிலைமீது தூங்குகின்ற திருமால் எவ்விடத்துளனோ, அங்கே - அவ்விடத்தே, மலர்மடந்தை - திருமகளிருப்பாள், கோலம்சேர் - அழகுபொருந்திய, செம்கேதகைமணக்கும் - செந்தாழை பரிமளிக்கின்ற, செங்குன்றையூரன் எங்கே - செங்குன்றையூரன் எவ்விடத்துளனோ, அங்கே - அவ்விடத்தே, இரவலர் எல்லாம் - யாசகரெல்லாரும் இருப்பார், எ - று.

## சகஅ பல்பட்டடைச் சொக்கநாதப்புலவர் பாடல்.

### சந்திரோபாலம்பநம்-தலைவிகூற்று.

61. ஊரைச்சுடுமோவுலகந்தனைச்சுடுமோ
ஆரைச்சுடுமோவறியேனே - நேரே
பொருப்புவட்டமானமுலைப்பூவையரேயிந்த
நெருப்புவட்டமானநிலா.

**இ - ள்.** நேரே - நேராக, பொருப்பு - மலைபோன்ற, வட்டம்ஆன - வட்டவடிவாகிய, முலை - தனங்களையுடைய, பூவையரே - மாதரே, இந்த - இந்த, நெருப்புவட்டம் ஆனநிலா - நெருப்பினாற்செய்த வட்டவடிவாகியநிலவு, ஊரைச்சுடுமோ - ஊரையெரிக்குமோ, உலகந்தனைச்சுடுமோ - உலகத்தை யெரிக்குமோ, ஆரைச்சுடுமோ-வேறுயாரை யெரிக்குமோ, அறியேன்-அறிகிலேன்,எ-று.

### வல்லைக்காளத்தியின் கையைப்புகழ்ந்துபாடியது.

62. நற்றோரணவீதிநண்ணும்வல்லைக்காளத்தி
கற்றோர்க்களிக்குங்கையேகை - மற்றோர்கை
வேங்கையலகைமுகைவெட்கைபலகைநகை
காங்கையழுகைவிழுகை.

**இ - ள்.** நல்தோரணவீதி நண்ணும் - அழகாகிய தோரணவீதிகள் பொருந்திய, வல்லைக்காளத்தி - வல்லைநகர்க் காளத்திராயனென்பவன், கற்றோர் தமக்கு அளிக்கும் கையேகை - கற்றோர்க்குக் கொடுக்கின்ற கையேகையாகும், மற்றோர்கை - மற்றையோருடையகை, வேங்கை, அலகை, முகை, வெட்கை, பலகை, நகை, காங்கை, அழுகை, விழுகை, இவற்றினீற்றிலுள்ள கையே யாம், எ - று.

வேங்கைமுதலியவற்றிற்கு ஏற்ற பொருள்யாய் வேகுங்கை முதலியவாக இழிபொருள் கூறுக.

### தன் வறுமைதோன்றப் பாடியது.

63. போசநீயோர்புயலாய்ப்பூமுழுதும்பொன்மாரி
வீசுவாயங்கதிலோர்வித்தேனும் - பேசுமென்மேல்
பட்டதில்லையென்வறுமைபாரக்குடையாகி
முட்டக்கவித்திடுதலால்.

**இ - ள்.** போச - போஜனே, நீ ஓர் புயல் ஆ - நீ ஒரு மேகமாக, பூமுழுதும் - பூமிமுழுதும், பொன்மாரிவீசுவாய் - பொன் மழையைச் சொரிவாய்,

அங்கு அதில் ஓர் விந்துவேனும் - அதில் ஒரு துளியாயினும், பேசும் என்மேல் பட்டதுஇல்லை - சொல்லப்பட்ட என்மீது பட்டதில்லை, (ஏனெனின்) என்வறுமை - என் தரித்திரமானது, பாரக்குடை ஆகி - பெரியகுடையாகி, முட்டக்கவித்திடுதலால் - முழுதும் மறைத்துவிடுதலானேயாம், எ - று.

## நாணிக்கண்புதைத்தல்.

64. காலையரவிந்தங் கழுநீருடன் கலந்தால்
மாலையரவிந்த மயக்காதோ - பாலைப்
பழிக்கின்ற மென்மொழியீர் பாண்டியனாரூரை
அழிக்கின்றதென்னே யவது.

இ - ள். காலையரவிந்தம் - உதயகாலத்துத் தாமரை, கழுநீருடன் கலந்தால் - குவளைமலரோடு கூடினால், மாலையரவிந்தம் - மாலைக்காலத்துத்தாமரை, மயக்காதோ - என்னை மயங்கப்பண்ணாதோ, பாலைப்பழிக்கின்ற - பாலின்சுவையைப் பரிகசிக்கின்ற, மென்மொழியீர் - மெல்லிய வசனத்தையுடைய மாதரே, பாண்டியனாரூரை - பாண்டியனாருடைய ஊராகிய மதுரையை, அது அழிக்கின்றது - அது கெடுக்கின்றது, என்னே-இது என்ன அநியாயமோ, எ-று.

மதுரை - கூடல், இது புணர்ச்சியென்னும் பொருள்தரும். வேலைப்பழிக்கின்ற மென்மொழியீர் என்றும்பாடம்.

காலையரவிந்தம் கையையும், மாலையரவிந்தம் தனத்தையும், கழுநீர்கண்ணையுங்குறித்தன, இந்தத் துறையை இடையூறுகிளத்தல் எனவுங்கூறுவர்.

முற்றிற்று.